# தெய்வத் தமிழ்



(இரண்டாம் பொதுநிலைப் பத்து நாள்
கருத்தாய்வரங்கக் கட்டுரைகள்)

பொதுப் பதிப்பாசிரியர் :
பேராசிரியர் டாக்டர் ந. சஞ்சீவி,
எம்.ஏ., எம்.லிட்., பிஎச்.டி.,
டிப். மானிடவியல், டிப். அரசியல் & ஆட்சியியல்,
தமிழ்த்துறைத் தலைவர்,
சென்னைப் பல்கலைக் கழகம்.

உதவி :
தமிழ்த்துறை ஆசிரியர்களும் மாணவர்களும்




சென்னைப் பல்கலைக் கழக வெளியீடு
1975

## துணைவேந்தரின் அணிந்துரை

சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ்த் துறையினர் முதன் முதலாகப் பத்து நாள் பொதுநிலைக் கருத்தரங்கை 1972ஆம் ஆண்டு தொடங்கினார்கள். இக் கருத்தரங்கில் சமயம், பொருளாதாரம், சமூக வரலாறு, அரசியல், நீதி, பொறியியல், மருத்துவம், மொழிநூல், கவிதை, ஆராய்ச்சி ஆகிய பத்துத் தலைப்புகளில் அவ்வத்துறை அறிஞர்கள் கட்டுரைகள் வழங்கினார்கள். வந்திருந்தோர் வினா எழுப்பி விடைகள் பெற்றனர்; விளக்கம் கண்டனர். அக் கருத்தரங்கில் அறிஞர்களும், ஆசிரியர்களும், மாணவர்களும் தந்த ஊக்கமும் ஒத்துழைப்பும் தமிழ்த்துறையினரை மேலும் மேலும் இத்தகைய 'பத்து நாள் பொது நிலைக் கருத்தரங்கை' ஆண்டுதோறும் நடத்த ஊக்கின. அந்த முறையில் 1973ஆம் ஆண்டில் இரண்டாவது பத்துநாள் பொதுநிலைக் கருத்தரங்கு 'தெய்வத் தமிழ்' பற்றி ஏற்பாடு செய்யப்பட்டது.

சமணம், பௌத்தம், சைவம், வைணவம் முதலான பல சமயங்களும் தமிழகத்தில் இயங்கி வந்திருக்கின்றன. அந்தந்த நெறியினரும் சமய ஒழுக்கம் பற்றி வேறுபட்டிருந்தாலும் இலக்கியம், இலக்கணம், சமயம் முதலான பல்வேறு துறைகளில் நூல்கள் பலவற்றைப் படைத்துத் தமிழன்னைக்கு அணி புனைந்து அகமகிழ்ந்திருக்கிறார்கள்.

இத் தொகுப்பு நூலில் மேற்சொன்ன சமய இலக்கியங்கள் பற்றி அவ்வத்துறையில் திறம் மிக்க அறிஞர்கள் பரிமாறிய கருத்துகள் மட்டுமன்றி, அக் கருத்துகளின்மீது எழுப்பப்பட்ட வினாக்களும் தரப் பட்ட விடைகளும் விளக்கங்களும் இடம்பெற்றுள்ளன. இவை அனைத்தும் படிப்போரின் சிந்தனையைத் தூண்டி மேலும் ஆராய்ச்சி செய்ய இடமளிக்கிறது. இத்தகைய கருத்தரங்குகளில் கல்வித் துறைக்கு வெளியே உள்ள அறிஞர்களும் (பொதுமக்களும்) பங்கு பெறுவது பல்கலைக் கழகத்தின் புதிய திருப்பத்திற்கு ஓர் எடுத்துக் காட்டு.

கருத்தரங்குகளை நடத்துவதோடு நில்லாமல் கருத்தரங்கு நிகழ்ச்சிகள் அனைத்தையும் நூல் வடிவில் கொணர்ந்து பலருக்கும் பயன்படுமாறு செய்வதில் பல்கலைக் கழகம் தொடக்கம் முதலே முடிவெடுத்துச் செயலாற்றி வருகிறது. அவ்வகையில் இரண்டாவது கருத்தரங்கில் முகிழ்த்த கருத்துகள் அனைத்தும் இந் நூலில் இடம் பெறுகின்றன. அறிஞர்களும் ஆய்வாளர்களும் மட்டுமன்றிப் பொது மக்களும் நூலகங்கள் போன்ற பொது நிறுவனங்களைச் சேர்ந்தவர் களும் இந் நூலை வரவேற்பார்களென நம்புகிறேன்.

இந்நூலை உருவாக்குவதில் அரும்பணியாற்றிய தமிழ்த்துறை ஆசிரியர்கள் மாணவர்கள் அனைவரையும் பாராட்டுகிறேன்.

சென்னைப் பல்கலைக் கழகம்
20—1—'75

(ஒ-ம்.) நெ. து. சுந்தரவடிவேலு,
துணைவேந்தர்.

## பொருளடக்கம்

GOVERNMENT OF TAMILNADU
TRUTH ALONE TRIUMPHS

RAJ BHAVAN
Madras-22,

*20th January 1973.*

## MESSAGE

I am glad to know that a Seminar on 'Medieval Tamil Literature' is proposed to be held under the auspices of the Uuiversity of Madras. I wish the Seminar success.

(Sd.)
K. K. Shah
*Governor of Tamil Nadu.*

## GREETINGS

Dr. Sanjeevi.

WISHING THE FUNCTION
EVERY SUCCESS.

Karunanidhi
*Chief Minister, Tamilnadu.*

மு. கண்ணப்பன் தமிழ்நாடு அரசு

அறநிலைய அமைச்சர் தலைமைச் செயலகம்

சென்னை-9

23—1—1973

பேரன்புடையீர்,

தாங்கள் அன்புடன் அனுப்பிய "சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ்த்துறையினர் நடத்தும் இரண்டாவது பொதுநிலைப் பத்து நாள் கருத்தரங்கு" அழைப்பிதழ் கிடைக்கப் பெற்றேன். மிக்க நன்றி.

அறிஞர்கள் பலரும் பங்கு பெறும் இக்கருத்தரங்கு எல்லா வகையானும் சிறப்புற்று விளங்கிடும் என்பதில் ஐயமில்லை. கருத்தரங்கு இனிதே நடந்தேற நான் என் நல்வாழ்த்துகளைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

அன்புள்ள,

(ஒ-ம்) மு. கண்ணப்பன்

பெறுநர் :

தலைவர்

சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ்த்துறை,

சென்னை-5.

தெ. பொ. மீனாட்சிசுந்தரன் 22—1—73

அன்புள்ள டாக்டர் சஞ்சீவி அவர்களுக்கு,

வணக்கம்

கருத்தரங்கு அழைப்பிதழ் கிடைத்தது. செவ்வனே நடைபெறும் என்பதில் என்ன ஐயம்.

என் அன்பு நிறைந்த வாழ்த்துகள்.

அன்பன்,

(ஒ-ம்) (தெ. பொ. மீனாட்சிசுந்தரன்)

டாக்டர் ந. சஞ்சீவி

தமிழ்த்துறைத் தலைவர்,

சென்னைப் பல்கலைக்கழகம்,

சென்னை—600005.

# 1

# முதல் மூன்று திருமுறைகள்

## திருஞான சம்பந்தர் தேவாரம்

### டாக்டர் ச. வே. சுப்பிரமணியம்

காத லாகிக் கசிந்துகண் ணீர்மல்கி
ஓது வார்தமை நன்னெறிக் குய்ப்பது
வேத நான்கினும் மெய்ப்பொரு ளாவது
நாதன் நாமம் நமச்சி வாயவே.

— திருஞானசம்பந்தர்

வெந்தழல் நீராமால் வெள்ளெலும்பு பெண்ணுமால்
வந்த மதவேழம் வணங்கிடுமால்—சந்தமெழப்
பாடுவார் உள்ளுருகிப் பாடுந் தமிழிசைக்கு
நீடுலகில் உண்டோ நிகர்.

தமிழிசையின் சிறப்பினை இங்ஙனம் கவிமணி பாடுகின்றார். இவ்வாறு நெருப்பை நீராக்கியதும், எலும்பைப் பெண்ணாக்கியதும், யானையைப் பணியச் செய்ததும் தமிழ்ப் பாடல்களே. அதுவும் திருமுறைப் பாடல்களே.

உலகம், உயிர், இறைவன் என்ற முப்பொருள்களையும் முறையாகத் தருவன திருமுறைப் பாடல்கள்.

**திரு** என்ற சொல் செல்வம், இறை, அழகு, ஒளி, பொலிவு, தெய்வத்தன்மை, நல்வினை[1] போன்ற பல பொருள்களைக் கொண்டுள்ளது. உடலுக்கு, இவ்வுலக வாழ்விற்குச் செல்வமாக அமைபவை சில. ஆயின் உயிருக்குச் செல்வத்தையும், அழகையும், ஒளியையும், பொலிவையும், தெய்வத்தன்மையையும், நல்வினையையும் தர உதவியாயிருப்பன திருமுறைகள்.

---

1. Tamil Lexicon --Vol. III, page, 1896.

முறை என்ற சொல், ஒழுங்கு, ஒழுக்கம், உறவு, கூட்டு, நன்மை, நூல்[2] போன்ற பொருள்களைக் கொண்டுள்ளது. உயிருக்கு ஒழுங்கையும் அதனுல் வருகின்ற ஒழுக்கத் தையும், உயிருக்கு இறைவனேடுள்ள உறவையும் உயிர் இறைவனேடு கலக்கின்ற கூட்டையும், அதனுல் உயிருக்கு ஏற்படுகின்ற நன்மைகளையும் நூலிலே கூறுவது திரு முறைகளாகும்.

திருமுறைகள் பன்னிரண்டு. இவ்வாறு பன்னிரண் டாக ஏன் வகுத்தார்கள் என்பதே கேள்விக் குறியாக அமைகின்றது. தமிழர்கள் தம் இலக்கியங்களை ஒரு குறிக் கோளோடு வகுத்தார்கள். சங்க நூற்கள் எட்டுத்தொகை, பத்துப்பாட்டென வகைப்படுத்தப்பட்டு, ஒவ்வொரு தொகையையும் நானூறு பாடல்களாகவும் வரையறுத்துக் கொண்டார்கள். எட்டு-பத்து-நானூறு இவற்றின் நோக்கம் தெரிந்தோ தெரியாமலோ பின்வந்த நூல்களைப் 'பதினெண்கீழ்க் கணக்கு நூல்கள்' எனக் கூறினுர்கள் — இதன் வாயிலாக எட்டுத்தொகை, பத்துப்பாட்டு மேற் கணக்காகின்றன. அடுத்தாற் போன்று வகைப்படுத்தும் போது பதினெட்டு, பன்னிரண்டாயிற்று.[3]

இத் திருமுறைகளில் முதல் ஏழு திருமுறைகள் திருநாரையூர் நம்பியாண்டார் நம்பியின் துணைகொண்டு முதல் ஆதித்தசோழன் காலம் அல்லது அவன் புதல்வன் முதற் பராந்தக சோழன் காலத்தில் (கி.பி. 9ஆம் நூற்ருண் டின் இறுதி அல்லது 10ஆம் நூற்ருண்டின் தொடக்கம்) தில்லைக்கோயிலிலிருந்த ஏடுகளை எடுத்துத் தொகுத்து வகைப்படுத்தப்பட்டிருத்தல் வேண்டும்.[4] எட்டாந் திரு முறை முதல் பதினேராம் திருமுறை வரை சேக்கிழாருக்கு முன் வாழ்ந்தவர்களால் வகைப்படுத்தப்பட்டிருத்தல் வேண்டும்.[5] பின்பு பெரிய புராணம் பன்னிரண்டாம் திருமுறையாக அமைக்கப்பட்டது.

---

2. Tamil Lexicon - Vol. VI, page. 3299.
3. பன்னிரு படலம், பன்னிரு பாட்டியல்.
4. பன்னிரு திருமுறை வரலாறு - பக்கம் 20.
5. ,, ,, 25.

முதன் முதலில் திருமுறை என்ற பெயர் மூவர்தேவாரங் களுக்கு மட்டுமே வழங்கியதாகத் தெரிகிறது.[6] பின்பு தான் ஏனைய சைவ அடியார்கள் எழுதிய நூற்களுக்கும் விரிந்தது.

முதல் மூன்று திருமுறைகளாகத் திருஞானசம்பந்தர் பாடிய திருப்பதிகங்களைத் தொகுத்தார்கள். காலத்தால் இவை முந்தியன எனக் கூற இயலாது. இவர் காலத் திற்குமுன் தோன்றிய காரைக்காலம்மையார் (கி.பி. 5ஆம் நூற்றாண்டு) பாடல்களும், திருமந்திரமும் பதினோராந் திருமுறையாக அமைக்கப்பட்டுள்ளன.[7] அதுமட்டுமன்றிச் சம்பந்தரும், திருநாவுக்கரசரும் ஒரே காலத்தவர்கள். இருவருள் இறைவனைப்பற்றிய இன்னிசைப் பாடல்களை முதலில் பாடியுள்ளதாலும் இறைவன் திருவடி நீழலை அல்லது இறைவன் சோதியில் முதலில் சம்பந்தர் கலந்த காரணத்தாலும், சம்பந்தர் பாடல்கள் முதல் மூன்று திரு முறைகளாகத் தொகுக்கப்பட்டன.[8]

முதல் மூன்று திருமுறையாக வகுக்கப்பட்ட சம்பந்தர் தேவாரப் பதிகங்கள் 385. ஆயின், அவர் பாடிய பாடல்கள் பதினாறாயிரம் எனவும்,[9] அவற்றுள், நமக்கு இன்று கிடைப்பன இத்துணையே என்றும் கூறுகின்றார்கள். தமிழர்கள் வாழ்வில் கடல்கோள்களாலும், அறியாமை யாலும், அலட்சியத்தாலும் சிதைந்த நூல்கள் பல. அவற்றுள், இவற்றையும் சேர்த்துக்கொள்ளலாம்.

---

6. பன்னிரு திருமுறை வரலாறு - பக்கம் 28.
7. ,, ,, 25.
8. ,, ,, 27.
9. சேடர்மலி காழிநகர் வேந்தர் தாமும்
    தேவர்புகழ் திருத்தோணிச் சிவனார் பங்கில்
பீடுடைய உமைமுலைப் பால்அருளா லுண்டு
    பிஞ்ஞகனைச் சினவிடைமேற் பெருகக் கண்டு
தோடுடைய செவியன்முதல் கல்லூ ரென்னும்
    தொடைமுடிவாப் பரசமயத் தொகைகள் மாளப்
பாடினார் பதிகங்கள்; பாவி லொன்றும்
    பதினாறுயிர முளதாப் பகரு மன்றே.

(திருமுறை கண்ட புராணம் : பன்னிரு திருமுறை வரலாறு, பக். 38)

மூவர் தேவாரங்களில் இன்று மிகுதியாகக் கிடைக்கின்ற பதிகங்கள் சம்பந்தர் பதிகங்களே. மிகுதி காரணமாகவும் முதல் மூன்று திருமுறைகளாகச் சம்பந்தர் தேவாரங்கள் அமைக்கப்பட்டிருக்கலாம்.

பண்புற்ற திருஞான சம்பந்தர் பதிக முந்நூற்
றெண்பத்து நான்கினுல் இலங்குதிரு முறை மூன்று;
நண்புற்ற நாவரசர் முந்நூற்றேழ் மூன்றினுல்
வண்பெற்ற முறையொன்று நூற்றினுல் வின்ளுெண்டர்.[10]

தேவாரத் திருப்பதிகங்களைப்பற்றிய செய்தி, திருமுறை என வகுக்கப்படு முன்பே கூறப்பட்டது. அதோடு தேவாரப் பதிகங்களைக் கோயிலிற் பாடுவதற்குப் பொருள் கொடுக்கப்பட்ட செய்தி கி.பி. 750ஆம் ஆண்டுக் கல்வெட்டு ஒன்ருல் தெளிவுபடுத்தப்படுகின்றது.[11]

தே, ஓரெழுத்தொரு மொழியாகத் தெய்வம் என்னும் பொருளைச் சுட்டும். வாரம் என்பது இசைக்கூற்றுளொன்று.[12] அதனுடன் தெய்வப் பாடலையே வாரம் என அழைப்பதும் உண்டு.[13] (தே - ஆரம், தே - வாரம்)

---

10. பன்னிருதிருமுறை வரலாறு பக். 39

11. "விஜயநந்தி விக்கிரமனுகிய நந்திவர்ம பல்லவ மல்லனது 17-ஆம் ஆட்சியாண்டில் (கி.பி. 750) திருவல்லம் திருக்கோயிலிற் பொறிக்கப்பட்ட கல்வெட்டொன்றில் "திருப்பள்ளித் தாமம் பறிப்பார்க்கும் திருப்பதிகம் பாடுவாருள்ளிட்ட பல பணி செய்வார்க்கும் நெல்லு நானூற்றுக்காடியும்" எனக் குறிக்கப்படுவதால் கி.பி. எட்டாம் நூற்ருண்டின் முற்பகுதியிலேயே தேவாரப்பதிகங்கள் திருக்கோயில்களிற் பாடப் பெற்று வந்த செய்தி நன்கு புலனுகின்றது."

—பன்னிருதிருமுறை வரலாறு, பக். 23.

12. "முதனடைவாரம் கூடைதிரளென்று சொல்லப்படும் இயக்கம் நான்கினும் முதனடை மிகவும் தாழ்ந்த செலவினை உடைத்தாகலானும், திரள் மிகமுடுகிய நடையினை உடைத்தாகலானும், இவை தவிர்ந்து இடைப்பட்ட வாரப்பாடல் சொல்லொழுக்கம், இசையொழுக்கம் உடைத்தாகலானும், கூடைப்பாடல் சொற்செறிவும் உடைத்தாகலானும் சிறப்பு நோக்கி அவ்விரண்டனுள் வாரப்பாடலை அளவு நிரம்ப நிறுத்த வல்லனுயென்க".

—அடியார்க்கு நல்லார் உரை—சிலம்பு 3-67.

13. சிலம்பு 3-137 அடியார்க்கு நல்லார் உரை.

'தேவாரம்' என்ற சொல்லாட்சி இறை வழிபாடு என்ற பொருளில் இன்றும் மலையாளத்தில் வழங்குகிறது. இறை வழிபாட்டில் (தேவாரத்தில்) பாடப்பட்டபடியால் மூவர் பாடல்களும் தேவாரம் என வழங்கப்பட்டன.[13]

முதல் மூன்று திருமுறைகளும் 385 பதிகங்களாலாயின. முதல் திருமுறை 136 பதிகங்கள். இரண்டாம் திருமுறை 122 பதிகங்கள். மூன்றும் திருமுறை 125+2 பதிகங்கள். தேவாரங்கள் இரு நிலைகளில் தொகுக்கப்பட்டுள்ளன. ஒன்று பண்முறை. மற்றொன்று தலமுறை. திருமுறைகள் வகுக்கப்பட்டுள்ளது, பண் முறையின் அடிப்படையிலே. இப் பண்ணடைவுகள் நம்பியாண்டார்நம்பி காலத்திலேயே, திருநீலகண்ட யாழ்ப்பாணர் மரபில் வந்த பெண் ஒருத்தியால், இறையருளால் அமைக்கப்பட்டன.[14] அவையே பின்பற்றப்படுகின்றன.

முதல் திருமுறை எட்டுப் பண்களிலும், இரண்டாம் திருமுறை ஆறு பண்களிலும் மூன்றும் திருமுறை ஒன்பது பண்களிலுமாக இருபத்துமூன்று பண்களில் முதல் மூன்று திருமுறைகளும் பாடப்பட்டுள்ளன. அவற்றுள், 'இந்தளம்' என்ற பண்ணில்தான் 39 பதிகங்கள் பாடப்பட்டுள்ளன.[15]

---

13. முதல் முதலில் தமிழ் நூல்களில் 'தேவாரம்' என அப்பாட்டுக்களை வழங்கியவர் இரட்டையர்கள்

''மூவாத பேரன்பின் மூவர் முதலிகளும்
தேவாரம் செய்த திருப்பாட்டு...' என.

'முற்காலத்தில் தேவாரம் என்பது வழிபாடு என்ற பொருளில் வழங்கியது என்பதும் வழிபாட்டில் பாடப்பெற்று வந்தவை பற்றி கி.பி. பதினான்காம் நூற்றாண்டு முதல் மூவர் பாடல்கள் தேவாரம் என வழங்கப்பட்டு வருகின்றது என்பதும் அதற்கு முன்னர் அப்பாடல்கள் அப்பெயரால் வழங்கப் பெற்றமைக்குக் கல்வெட்டுச் சான்றுகளாதல் இலக்கியச் சான்றுகளாதல் கிடைக்கவில்லை என்பதும் நன்கு புலப்படுதல் காண்க.'

—இலக்கிய ஆராய்ச்சியும் கல்வெட்டுக்களும்—தி. வை. சதாசிவப் பண்டாரத்தார் (1961)—பக். 73.

14. பன்னிரு திருமுறை வரலாறு—பக். 13.

15. முதல் திருமுறைப்பண்கள் குறிஞ்சி, தக்கராகம், தக்கேசி, நட்டபாடை, பழந்தக்கராகம், மேகராகக்குறிஞ்சி யாழ்மூரி, வியாழக்குறிஞ்சி.

பல்லவ நாட்டில் சைவ சமய மறுமலர்ச்சிக்கு அப்பரடிகள் வித்திட்டபின், பாண்டிநாட்டில் சமய மறு மலர்ச்சி சம்பந்தரால் செய்யப்பட்டது. எனவே, முத் திருமுறைகளுக்கு ஆசிரியரான திருஞான சம்பந்தர் தமிழ கத்தில் இரண்டாம் சமய மறுமலர்ச்சிக்கு வித்திட்டார். தமிழகம், சங்க காலத்தில் இவ்வுலக வாழ்க்கைபற்றி

---

இரண்டாம் திருமுறைப் பண்கள்—இந்தளம், காந்தாரம், சீகாமரம், செவ்வழி, நட்டராகம், பியந்தைக்காந்தாரம்.

மூன்ருங் திருமுறைப்பண்கள்—அந்தாளிக்குறிஞ்சி, காந்தார பஞ்சமம், கொல்லி, கொல்லிக்கௌவாணம், கௌசிகம், சாதாரி, பஞ்சமம், பழம்பஞ்சுரம், புறநீர்மை.

| பண் | திருமுறை | பதிக எண் | மொத்தம் | காலம் | பண்ணுக் குரிய ராகம் |
|---|---|---|---|---|---|
| 1. அந்தாளிக் குறிஞ்சி | 3 | 382-383 | 2 | இரா | சாமா |
| 2. இந்தளம் | 2 | 137-175 | 39 | பகல் | நாதநாமக் கிரியை |
| 3. காந்தார பஞ்சமம் | 3 | 259-281 | 23 | பகல் | கேதாரகௌளம் |
| 4. காந்தாரம் | 2 | 190-218 | 29 | பகல் | நவரோசு |
| 5. குறிஞ்சி | 1 | 75-103 | 29 | இரா | குறிஞ்சி, சுருட்டி, ஆரபி |
| 6. கொல்லி | 3 | 282-299 | 18 | இரா | கேதாரம், நவ ரோசு |
| 7. கொல்லி கௌவாணம் | 3 | 300 | 1 | இரா | நவரோசு |
| 8. கௌசிகம் | 3 | 301-313, 375 | 14 | பகல் | பைரவி |
| 9. சாதாரி | 3 | 325-357 | 33 | பகல் | பந்துவராளி |
| 10. சீகாமரம் | 2 | 176-189 | 14 | இரா | நாதநாமக் கிரியை |
| 11. செவ்வழி | 2 | 249-258 | 10 | பொது | யதுகுல காம் போதி |
| 12. தக்கராகம் | 1 | 23-46 | 24 | இரா | காம்போதி |
| 13. தக்கேசி | 1 | 63-74 | 12 | பகல் | காம்போதி |
| 14. நட்டபாடை | 1 | 1-22 | 22 | பகல் | நாட்டை |
| 15. நட்ட ராகம் | 2 | 233-248 | 16 | பகல் | பந்துவராளி |
| 16. பஞ்சமம் | 3 | 314-324 | 11 | பகல் | ஆகிரி |
| 17. பழந்தக்க ராகம் | 1 | 47-62 | 16 | பகல் | ஆரபி |
| 18. பழம் பஞ்சுரம் | 3 | 358-374 | 17 | பகல் | சங்கராபரணம் |
| 19. பியந்தைக் காந்தாரம் | 2 | 219-232 | 14 | பகல் | நவரோசு |
| 20. புற நீர்மை | 3 | 376-381 | 6 | பகல் | பூபாளம் |
| 21. மேகராகக் குறிஞ்சி | 1 | 129-135 | 7 | இரா | நீலாம்புரி |
| 22. யாழ்மூரி | 1 | 136 | 1 | | (அடாணு) |
| 23. வியாழக் குறிஞ்சி | 1 | 104-128 | 25 | இரா | சௌராஷ்டிரம் |

மிகுதியாக எண்ணமிட்டதைச் சங்க இலக்கியங்கள் எதிரொலி செய்கின்றன. வாழ்க்கையை வீட்டு வாழ்க்கை, நாட்டு வாழ்க்கை எனப் பகுத்து அகம், புறம், எனக் கூறினர். உயர்ந்த பண்புகளைச் சங்ககாலச் சான்றோர்கள் கூறியுள்ளார்கள். ஆயின், இவ்வுடல் வாழ்க்கைக்கு இன்றியமையாத உயிரின்நிலை பற்றியும் அதற்கென அமைந்த நிலையைப்பற்றியும் மிகுதியாக நினைத்ததாகக் கூற இயலவில்லை. சமயங்கள் அவைபற்றி நினைத்தன. இவ்வுயிர் பலபிறவிகள் எடுக்கின்றது. அப் பல பிறவிகளிலும் வினைகள் அவ்வுயிரோடு கலந்துவருகின்றன. அவ்வினைகளை நீக்கி, உயிரைத் தூய்மைப் படுத்துவதற்கு என்ன செய்யலாம் என்பன போன்ற எண்ணங்கள் எழுந்தன. தமிழகத்தில் சாக்கிய சமணக் கொள்கைகள் வளர்ந்தன. ஊழ் நம்பிக்கை மிகுதியாயிற்று. வினைகளைப் போக்க முடியாது, அனுபவித்தே ஆதல் வேண்டும் என்ற எண்ணங்கள் வேரூன்றத் தலைப்பட்டன. இறைவனை வழிபட்டால் வினைகளை நீக்கமுடியும் அல்லது குறைக்க முடியும் என்ற கருத்துக்களைச் சைவசமயம் கூறிற்று. அதனை முதன் முதலாக ஞானசம்பந்தர் வலியுறுத்தினார். அதற்கு அடிப்படை இறை மீதுள்ள நம்பிக்கை என்பதை அவர் பாடல் வற்புறுத்துகின்றது.

நம்பு வாரவர் நாவி னவிற்றினல்
வம்பு நாண்மலர் வார்மது வொப்பது
செம்பொ னார்தில கம்முல குக்கெலாம்
நம்ப னாமம் நமச்சி வாயவே.

இந்தச் சூழலில், பல்லவர் ஆட்சிக்காலத்தில் சமணர்களுக்கு அரசனிடம் மிகுந்த செல்வாக்கிருந்தது. அரசன் எச்சமயத்தைச் சார்ந்தவனாக இருக்கின்றானோ அச்சமயம் சமுதாயத்தில் செல்வாக்குப் பெற்றிருப்பதையும் அச்சமயத்தை எதிர்ப்போர் படும் அல்லல்களையும் நாவுக்கரசர் வாழ்க்கை நமக்குத் தெளிவுபடுத்துகின்றது. பாண்டி நாட்டிலும் இந்த நிலை இருந்தது. இந்நிலையில் திருஞானசம்பந்தராகிய முதல் முத்திருமுறை ஆசிரியர் தோன்றினார். அவர் தோற்றத்தைச் சேக்கிழார்

வேதநெறி தழைத்தோங்க மிகுசைவத் துறைவிளங்கப்
பூதபரம் பரைபொலியப் புனிதவாய் மலர்ந்தழுத

சீதவள வயற்புகலித் திருஞான சம்பந்தர்
பாதமலர் தலைக்கொண்டு திருத்தொண்டு பரவுவாம்

எனப் பாடுகின்றார்.

திருஞானசம்பந்தர் சீகாழியில் சிவபாத இருதயருக்கும் பகவதியம்மையருக்கும், சித்திரைத் திருவாதிரைத் திருநாளில் தோன்றினார். மூன்று வயதில் பாடத் தொடங்கினார். முதலிற் பாடிய பதிகம் 'தோடுடையசெவியன்' என்ற பதிகம். இந்நிகழ்ச்சியைத் தாமே ஒரு பாடலில் தருகின்றார்:

போதையார் பொற்கிண்ணத் தடிசில் பொல்லாதெனத்
தாதையார் முனிவுறத் தானெனை யாண்டவன்
காதையார் குழையினன் கழுமல வளநகர்ப்
பேதையா ளவளொடும் பெருந்தகை யிருந்ததே—282 - 2.

'ஒருமைக்கண் தான்கற்ற கல்வி ஒருவற்கு எழுமையும் ஏமாப்புடைத்து'—என்ற வள்ளுவர் குறட்கேற்ப ஞானசம்பந்தர் உயிரோடும், உணர்வோடும் கலந்த சிவ எண்ணம், சிவ உணர்வு அவர் மூன்று வயதில் வெளிப்பட்டிருக்கலாம்.

அவர் பதினாறு வயதில்[16] திருநல்லூர்ப் பெருமணத்தில் இறைச் சோதியோடு, திருமணக் கோலத்தில் கலந்ததாகக் கூறுவர். பிறப்பு இருப்பின் இறப்புத்தோன்றும், இறந்தால் பிறத்தல் வேண்டும். இறுதிப் பிறவியாக ஞானசம்பந்தர் உயிர் சீகாழியில் தோன்றி எல்லா வினைகளையும் முழு நிலையில் நீக்கி இறைவனடியை அடைந்தது, அல்லது முழு நிலைபெற்றது. இதனையும் குறிப்பால் காட்டுகின்றார்.

'துஞ்சுமா றறியார் பிறவாரித் தொன்னிலத்தே'—188-6.

இறக்கும் வழி அறியார், அதாவது இறக்கும் வகையில் செல்லார், பிறவார் எனப் பேசுகின்றார்.

இளங்கோவடிகள் கோவலன், கண்ணகியைத் தம் கூட்டோடு வானுலகம் சென்றதாகக் கூறுவதும் இங்கு

---

16. அப்பருக்குஎண் பத்தொன் றருள்வாத வூரருக்குச்
செப்பிய நாலெட்டில் தெய்வீகம்—இப்புவியிற்
சுந்தரர்க்கு மூவாறு தொன்ஞான சம்பந்தர்க்கு
அந்தம் பதினாறு அறி. — சைவ இலக்கிய வரலாறு, பக். 59.

எண்ணத்தக்கது.[17] பிற்காலத்தில் இராமலிங்க வள்ளலாரும் சோதியில் கலந்ததும் நினைக்கத்தக்கது.[18]

இப் பதின்மூன்று ஆண்டுகளில் திருஞானசம்பந்தர் ஆறு முறைகள் தம் ஊரிலிருந்து புறப்பட்டு ஏறத்தாழ இருநூற்றுஇருபது[19] திருப்பதிகளுக்குச் சென்று பதிகங்கள் பாடி வந்துள்ளதாக அம் முத்திருமுறைகளிலிருந்தும் அறியுமுடிகிறது. இவ்வாறு ஊர் ஊராகச் சென்று சமயத்தைப் பரப்பும் நிலை தமிழகத்தில் சம்பந்தர் காலத்தில் ஏற்பட்டது. அடியார்களும் உடன்சென்று வழிபடுவதும் மரபாக இருந்தது, தொடக்ககாலத்தில் சிவபாத இருதயர் தம் தோளில் ஆளுடைய பிள்ளையாரைச் சுமந்து சென்றார். *(220-11)* பின் இறைவன் முத்துப்பல்லக்கு (முத்துப் பத்தர்) போன்றவற்றைக் கொடுத்த பின்பு, பல்லக்கிலேயே பல இடங்களுக்கும் சென்றதாக அறிகின்றோம்.

மூன்று திருமுறைப் பாடல்களிலும் பாடற் பொருள் முதல் . நிலையில், (அ) சிவபிரானையும், (ஆ) பின்பு தான் சென்ற இடத்தில் இயற்கை வருணனையையும்

---

17. தொழுதகைய திருவடியைத் துணைவளைக்கையாற்பற்றப்
பழுதொழிந்து எழுந்திருந்தான் பல்லமரர் குழாத்துளான்
மாயங்கொல் மற்றென்கொல் மருட்டியதோர் தெய்வங்கொல்
போயெங்கு நாடுகேன் பொருளுரையோ இது வன்று.

— சிலம்பு, 19 : 65-68.

அமரர்க் கரசன் தமர்வந் தேத்த
கோநகர் பிழைத்த கோவலன் தன்னொடு
வான வூர்தி ஏறினள் மாதோ
கானமர் புரிந்த கண்ணகி தானென்.

— சிலம்பு 23 : 197-200.

(இளங்கோவடிகள் மாதரியும், கோவலன்—கண்ணகி தாயரும் மறுபடியும் பிறந்ததை வரந்தரு காதையில் கூறுவது நினைவுகூரத் தக்கது — கோவலன் கண்ணகி பிறவி அறுகின்றன.)

18. திருவருட்பா, ஊரன் அடிகள் பதிப்பு 1972, இராமலிங்க அடிகள் வரலாற்றுச் சுருக்கம், பக். 31.

19. சைவ இலக்கிய வரலாறு, ப. 64.

(இ) மூன்றுவதாகத் தொழுதலின் இன்றியமையாமையை யும் அதன் பயனையும் சுட்டுவதாக அமைகின்றது. பெரும் பான்மையும் எல்லாப் பதிகங்களும் பத்துப் பாடல் களும் அப் பாடல்களின் சிறப்பினை உணர்த்தும் திருக் கடைக் காப்புப் பாடலாக பதினோராவது பாடலும் அமை கின்றன. பதினோராம் பாட்டில் ஞானசம்பந்தரின் அப் பதிகச் சிறப்போடு படிப்பார் பெறும் பயனும் உணர்த்தப் படுகின்றது. முதல் பத்துப் பாடல்களில் பெரும்பான்மை யும் ஏழு பாடல்கள் பொது நிலையிலும் எட்டாவது பாடல் இலங்கையர்கோன் பற்றிய குறிப்பையும், ஒன்பதாம் பாடல் அரி, அயன் இவர் அடிமுடி தேடிய செய்தியையும் பத்தாம் பாடல் பிற சமயம் பற்றியும் பேசுகின்றன.

அவர் சிவபிரானைப்பற்றி உரைத்தவற்றை இரு நிலை களில் காணலாம்.ஒன்று சிவபிரான் வருணனை; மற்றென்று சிவபிரானின் செயல்கள். சிவபெருமானின் செயல்கள் பல அவருடைய வருணனைக்கு அடிப்படையாக அமைவ தால் அவர் செயல்களையும் வருணனைகளையும் இணைத்துப் பார்ப்போம்.

**சடை**

1. **சடையில் கங்கையை அடக்கி அருளியமை.**
   கடுத்துவருங் கங்கைதனைக் கமழ்சடையொன் ருடாமே
   தடுத்தவர் 179 : 10
2. **பிறையைச் சூடியமை**
   தாழ்ந்தகு முற் சடைமுடியதன்மேல்
   தோய்ந்த விளம்பிறை துலங்குசென்னி 115 : 5
3. **சடையில் அரவைக் கொண்டமை**
   மருவமர் குழலுமை பங்கர் வார்சடை
   அரவமர் கொள்கையெம் அடிகள் கோயிலாம் 275 : 1
4. **மேகத்தைச் சூடல்**
   மழைவள ரிளமதி மலரொடு
   தலைபுல்கு வார்சடைமேல் 348 : 3
5. **கொக்கிற்கு அணிந்தமை**
   அக்கணிந் தரைமிசை யாறணிந்த சென்னிமேல்
   கொக்கிற கணிந்தவன் கோடிகாவு சேர்மினே 235 : 3

இவை போக மலர் தளிர் வகைகளைச் சடையில் அணிவதுண்டு.

நொச்சியே வன்னிகொன்றை மதிகூவிளம்

உச்சியே புனைதல்வேடம் விடையூர்தியான் 148 : 2

......மதமத்தம்......உள்ளார்ந்த சடை 179 : 1

சடை வருணனைவருகின்ற பாடல்கள் 60 விழுக்காட்டிற்கு மேல் அமைகின்றன. இங்கு அவருடைய செயலையும் அதன் நோக்கத்தையும் காணுதல் இன்றியமையாதது. பிறருக்குத் தீமைதந்து உலகையே அழிக்க இருந்த கங்கையைச் சடையில் தாங்கினுர்[20]. அருளுக்குப் பிறைசூடல், மேகத்தைச் சூடல், வான்சிறப்பு, கைம்மாறு வேண்டாத கடப்பாடு. மனிதர்கள் சூடாத ஊமத்தை, எருக்கு, போன்றவற்றைத் தான் சூடுதல். சிவபிரானைப்பற்றிய கதைகள் அனைத்தும் உள்பொருளுடையன. சிலவற்றிற்குப் பழம் புராணங்கள் விளக்கந்தருகின்றன. சிலவற்றிற்குத் தர இயலவில்லை. நம் அறியாமையே தவிர வேறில்லை. கதைகளின் நோக்கங்கள் அனைத்தும் உயிர்களுக்கு நன்மையைத் தருவதென்பதே. தீமை தருவதைத் தான் ஏற்றுக் கொள்ளல் என்பது உண்டு.

**நெற்றி :-**

திருநெற்றி, திலதஞ்சேர் நெற்றி,
சுறவக்கொடி கொண்டவ னீறதுவாய்
உறநெற்றி விழித்தவெம் உத்தமனே.........159 : 4

கல்லானிழல் மேயவ னேகரும்பின்
வில்லானெழில் வேவ விழித்தவனே.........160 : 3

**கண் :-**

'முக்கண்ணன்; என்று சிவபிரானை அழைப்பதுண்டு.

'கண்ணு மாயிர முடையார்' 230 : 2;

கண்ணின் அயலே கண்ணென் றுடையார் 196 : 7;

என்றும் பேசுகின்றுர்.

---

20. திருவாசகம் — நீ. கந்தசாமிப் பிள்ளை, பதிப்பு : அண்ணுமலைப் பல்கலைக் கழகம், பக். 8.

**காது :-**

முதற்பாட்டே "தோடுடைய செவியன்" எனத் தான் தொடங்குகின்றது. குழையும் தோடும் அணிந்துள்ளார் உமையொருபாகன். குழையாக அரவத்தையும் அணிந்துள்ளான்.

'படந்தாங்கிய அரவக்குழைப் பரமேட்டிதன் பழவூர் 9 : 3

**மிடறு :-**

தேவர்களுக்காகவும், உலக உயிர்களைக் காக்கவும் பாற்கடலில் எழுந்த, வாசுகி என்னும் பாம்பு கக்கிய நஞ்சையும் உலகினர்க்காக உண்டு மிடற்றில் நிறுத்தியவன் நீல மணி மிடற்றன்.

'விடங்கொள் மாமிட றுடையவன்' 244-8

துணிநீல வண் ணமுகில் தோன்றியன்ன
மணிநீல கண்டம் முடை யாய் மருகல் — 154 : 5

எனப் பலபடப் பாடுகின்றார். இக்கதையையும் ஒரு பாடலில் தருகின்றார்.

நாகந் தான்கயி றாக நளிர்வரை அதற்குமத் தாகப்
பாகந் தேவரோடு அசுரர் படுகடல்அள று எழக் கடைய
வேக நஞ்சு எழ ஆங்கே வெருவொடும் இரிந்து எங்கும் ஓட
ஆகம் தன்னில் வைத்து அமிர்தம் ஆக்குவித் தான்மறைக்
காடே 227 : 7.

தேவ அசுரயுத்தம் என்று கூறுபவையின் உள்ளுறை, நன்மைக்கும், தீமைக்கும், அறத்திற்கும் மறத்திற்கும், புண்ணியத்திற்கும் பாவத்திற்கும் ஏற்பட்ட போரே. (சில போது) "தருமத்தின் வாழ்வதனைச் சூது கவ்வும் மறுபடியும் தருமம் வெல்லும்" என்று பாரதியார் கூறுவதுபோன்று, தீயோர் அல்லது அசுரர் வெல்வது போன்று தோன்றும். இறுதியில் நல்லோர் அல்லது அறமே வெல்வதைக் காண்கின்றோம். இன்றைய சமுதாயத்திலும் பார்க்கின்ற ஒன்று தானே இது. இருவர்க்கு நன்மையாக, அதனின்று எழுந்த தீமையான நஞ்சைத் தானுண்டு நன்மையாகிய அமுதத்தைப் பிறருக்குக் கொடுத்தான் என்பதே கதையின் உள்ளுறை — நோக்கமும் அதுவே. இதற்காகப் பாற்

கடலையோ, தேவ, அசுரர்களையோ தேடி அலைய வேண்டிய தேவையில்லை.

**மார்பு :**

அகன்று மார்பு அமையும். ஆகையால் அகலமென்றும் மார்பைக் கூறினர்கள். பரந்துவிரிந்த மார்பிலே பல வகை மாலைகளை அணிந்துள்ளான். உருத்திராக்கம், எலும்புமாலை, பாம்பு, ஆமை, ஏனத்தெயிறு, (ஏன மருப்பு) இவற்றை மார்பிலும் மலர்மாலைகளாகக் கொன்றை, வன்னி, (இண்டை) மத்தம், வெள்ளெருக்குப் போன்றவற்றைச் சடையிலும் அணிந்துள்ளான்.

அக்கிருந்த வாரமு மாடரவு மாமையும்
தொக்கிருந்த மார்பினன் தோலுடையான் வெண்ணீற்றன்
178 : 1

விண்டவெள் ளெருக்கலர்ந்த வன்னிகொன்றை மத்தமும்
இண்டை கொண்ட செஞ்சடை முடிச்சிவ னிருந்தவூர் 237 : 2.

**கைகள் :**

இறைவன் கையில் சுத்தி, சூலம், பரசு, மழு, வேல் போன்ற படைகளை ஏந்தியுள்ளார். இவை தம் அடியார் பகைவரை அழிக்கப் பயன்படுவன. எறிபத்தநாயனர் கதையையும் இங்கு நினைவுகூரலாம். இன்னும் அனல், தண்டு, பாசம், பாம்பு போன்றவற்றையும் கொண்டுள்ளார்.

இனியவர்களுக்கு இசையெழுப்ப யாழையும் வீணையையும் கொண்டுள்ளான். இவற்றேடு கங்கணம், கல்லவடம், கொடுகொட்டி, தமருகம், பறை, பேரி போன்றவற்றையும் ஒலியெழுப்ப வைத்துள்ளார்.

கையில் கபாலத்தை ஏந்தித் திரிகின்றார். மான்மறியும், ஊன்தலையும், பிரமன்தலையும், போன்றவற்றையும் கொண்டுள்ளார். தம்மை அழிக்க வந்தனவற்றை அழித்து, அளித்த அருட்காட்சியே இது.

'திகழ்சுத்திக் கையர்' 66 : 4;
இலையின் மலி வேனுனைய சூலம்வல னேந்தி 330 : 2;

அங்கையினிற் பரசுவெனும் படையாள்வீர் 217 : 2
கனல் வாயதோர் போருறு வெண்மழு ஏந்தினன் 269 : 6;
கனல்எரி அனல்புல்கு கையவனே 262 : 3;
தண்டொடு சூலம் தழையஏந்தி 364 : 6;
பாசந் தடக்கையி லேந்துவர் 117 : 6;
இன்குரல் இசைகெழும் யாழ்முரலத்
தன்கர மருவிய சதுரன் 112 : 1;
பண்ணுலாம் பாடல்வீணை பயில் வான் 316 : 8
கங்கண முன்கையிற் 117 : 2;
இசைவர விட்டியல் கேட்பித்துக் கல்ல வடமிட்டுத்
திசைதொழு தாடியும் பாடுவார் சிந்தையுட் சேர்வரே 267 : 6
கொடுகொட்டி கொண்டொருகை 361 : 2;
முறைமுறைஒலிதம ருகம் 22 : 6;
பறையுங் கரத்திலர் போலும் 201 : 1;
கையது பேரி 117 : 3;
கள்ள மதித்த கபாலங் கைதனி லேமிக வேந்தித்
துள்ள மிதித்துநின் றுடுந் தொழிலர் எழில்மிகு செல்வர் 203 : 3
கானமர் மான்மறிக்கைக் கடவுள் 106 : 3;

*அரை :*

இறைவன் அரையில் கோவணமும், சீருடையும், அணிந்து அதன்மேல் பாம்பைக் கச்சாக அணிந்து கல்லாடை, யானை, புலி, சிங்கம், மான், இவற்றின் தோலாடையும் அணிந்துள்ளான். ‘இழையார்த்த கோவணமும் கீளும் எழிலார் உடையாக’ *194-5;*

உரவன்புலியி னுரிதோலாடை யுடைமேற்படநாகம்
விரவிவிரிபூங் கச்சாவசைத்த விகிர்தனுகிர்தன்னாற்
பொருவெங்களிறு பிளிறவுரித்துப் புறவம்பதியாக
இரவும் பகலு மிமையோரேத்த வுமை யோடிருந்தானே 74 : 2.

தாருக வனத்து முனிவர்கள் கூட்டம் தெய்வசிந்தனை சிறிதும் இன்றி, இம்மை மறுமைப்பேறுகள் அனைத்தையும் கன்மத்தினால் பெறலாம் என்ற துணிவுடன், உடல் வருந்த அளவற்ற தவங்களைச்செய்து கொண்டும், வேள்விகளைச் செய்துகொண்டும் தெய்வத்தின் அருள் இன்றியே எல்லாம் கைகூடும் என்னும் எண்ணங்களை வலியுறுத்திக் கொண்டும் வந்தது. இதனால் உலகுக்குப் பல தீமைகள்

விளைந்தன. இத்தீமைகளைத் தடுக்க இறைவன் முயன்ற போது அம்முனிவர்கள் பிறர்க்குத் தீங்கிழைக்கும் வேள்வியாகிய அபிசாரஹோமம் ஒன்றைச் செய்தார்கள். வேள்விக்குண்டத்திலிருந்து கொடுமையும் ஆற்றலும் மிக்க புலி தோன்ற, அதனைச் சிவனைக் கொல்ல ஏவினர். சிவபிரான் புலியைக் கொன்று அதன் தோலை உரித்து ஆடையாகக் கொண்டார். பின் முத்தலைச்சூலம் தோன்றிற்று. அதையும் இறைவன் கைப்படையாகக் கொண்டார். மான் தோன்றிற்று. அதையும் கையில் கொண்டார். பின்பும் அவ்வேள்வித் தீயினின்றும் பாம்பு, பூதப்படை, வெண்தலை, உடுக்கை இவை தோன்றின. இவை அவருக்கு அணியாய், ஆளாய், கருவியாய் அடைக்கலம் புகுந்தன.

இதனைப் போன்று கயாசுரன் என்னும் யானை வடிவம் கொண்ட அசுரன் நான்முகனை நோக்கித் தவம் செய்து அழியாத வலிமை, வாழ்நாள் செல்வம் முதலியன பெற்று உலகிலுள்ள உயிர்களுக்குத் தீமை செய்துவந்தான். அத்தகைய வடிவம் கொண்ட கயாசுரனை அழித்து அதன் தோலையும் போர்த்துக் கொண்டார். அவ்வியானையை அழிக்க எடுத்த இறைவன் உக்கர வடிவத்தை உலகமக்கள் கண்ணால் கண்டு தாங்க இயலாததால் அதன் கரிய உரிவையையும் போர்த்தினர் என்று கூறுவர்.[21] இதனைப் பற்றிக் கதைகளையும் ஞானசம்பந்தர் தம் பாடல்களில் கூறுகின்றார்.[22] (ஏறத்தாழ 340க்கு மேற்பட்ட இடங்களில் யானைத்தோல் போர்த்த செய்தியைக் கூறுகின்றார்)

அடி :-

உமையொருபாகனாக விருக்கின்றமையால் கால்களில் வீரக் கழலும் சிலம்பும் அணிந்துள்ளான். 'அடிநிரை

21. திருவாசகம்—நீ. கந்தசாமிப் பிள்ளை, பதிப்பு : அண்ணாமலைப் பல்கலைக் கழகம், 1964.

22. எண்டிசையோரஞ் சிடுவகை கார்சேர் வரையென்னக்
கொண்டெழுகோல முகில் போற்பெரிய கரிதன்னைப்
பண்டுரி செய்தோன் பாவனை செய்யும் பதியென்பர்
புண்டரிகத்தோன் போன்மறையோர்சேர் புறவம்மே. 97-7.

ஆர ணங்குறு முமையை யஞ்சுவித் தருளுதல் பொருட்டால்
வார ணத்துரி போர்த்தார் வர்த்தமா னீச்சரத் தாரே—228—9.

கழலும் சிலம்பார்க்க மாநடம் வல்லவனே' 187 : 3. இறைவன் உமையொருபாகன் என்பதனை மட்டும் 380 இடங்களுக்குமேல் காட்டியுள்ளார்—அவருடைய பாடல்களில் 70% விழுக்காட்டிற்குமேல் சிவபெருமானின் செயல்களுக்கும், வருணனைக்கும் பயன்படுத்தப்பட்டுள்ளன.

இன்னும் சிவபிரான் செயல்களாகக் காலனை உதைத்து, மார்க்கண்டேயரைக் காத்தது; அந்தகாசுரன், சலந்தரன் போன்றோரை அழித்தது; தக்கன் வேள்வியைத் தகர்த்தது; திரிபுரத்தை எரித்தது (தூங்கெயில் எறிந்த தொடித்தோட் செம்பியன்; தூங்கெயில் மூன்றெறிந்த சோழன்காண் அம்மானை); பிரம்மன் சிரங்கொய்தது போன்றவை கூறப்பட்டுள்ளன.

இக் கதைகள் அனைத்திற்கும் உட்பொருள் அல்லது உள்ளுறைப் பொருள் உள. கருத்தின் நிலையே இன்றியமையாதது. கதையின் புறநிலை இன்றியமையாதது அன்று. காட்டாக ஒரு சான்று கூறலாம். 'சிலம்பை' எடுத்துவா என்று ஒரு தமிழ் மாணவனிடம் கூறினால் அவன் சிலப்பதிகாரம் என்ற நூலை எடுத்து வருகிறான்; அது சிலப்பதிகாரமாகிய இலக்கியத்தை 10·9 தாளில் 12 பாயின்ட் அச்சால் கோக்கப்பட்ட தாள் கட்டே தவிர அது சிலப்பதிகார இலக்கியமாகாது. இலக்கியம் நம் நெஞ்சில்தான் இருக்கிறது. தாளையும் அச்சையும் சிலப்பதிகார இலக்கியமாகக் கூறுவதில்லை. அதனைப் போன்ற புறநிலைகளே கதைகள் — கருத்து நெஞ்சையள்ளும் சிலம்பிலக்கியத்தைப் போன்று, உலக உயிர்களின் நன்மைக்காக, எல்லாவற்றையும் கடந்த ஆற்றலுடைய சக்தி, தீமைகளைத் தான் பெற்றுக்கொண்டு, நன்மைகளை உலகுக்குத் தரவேண்டிச் செய்த திருவிளையாடல்களே இறைவன் செயல்கள் அனைத்தும். அவற்றையே கதைகளாக உரைத்தார்கள்.

இத்தகைய இறைவன் ஒன்றாய் உடல் வேறாய் இருக்கின்றான் என்பதை அவர் பாடல்கள் உணர்த்துகின்றன. 'ஒருவனாய் நின்ற பெம்மான் உறையும் மிடமொற்றி யூரே' 315 : 9.

உலகத் தோற்றத்திற்கு முதலும் அவனுகவே அமை கின்ருன். இறுதியும் அவனே (இங்கே மரம் முந்தியா? விதை முந்தியா? என்ற விஞவை நினைவில் கொள்ளலாம்). ஒன்ருய், ஒப்பற்றவனுய் இருக்கின்ருன்; உலகப் பொருள் களில் ஆண், பெண்ணுய் அங்கு ஒன்று இரண்டாகிறது. அதினின்று முக்குண நிலைகளில் மூன்ருகின்றது. அவனைப் பற்றிப் பேசுகின்ற வேதங்கள் நான்கிலும் உறைகின்ருன். பூதங்கள் ஐந்திலும் அமைகின்ருன். 'சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றமென் றைந்தின் வகைதெரிவான் கட்டே உலகு' என்ற குறளையும் அதன் உரையையும் காணலாம். அறுசுவையாயும், ஏழிசையாயும், எட்டுத்திசையாயும் எல்லாவற்றிலும் கலந்து கலந்து நிற்கின்ருன் எனச் சுட்டு கின்ருர்.

ஈருய்முத லொன்ருய்இரு பெண்ஆண்குணமூன்ருய்
மாருமறை நான்காய்வரு பூதம்அவைஐந்தாய்
ஆருய்சுவை ஏழோசையொடு எட்டுத்திசைதானுய்
வேருயுட னுன்இடம் வீழிம் மிழலையே 11 : 2

இறைவனுடைய தன்மைகளைச் சிவஞானபோதம் போன்று ஆழ விளக்கி அதே நிலையில் ஒன்று முதல் எட்டு எண்களையும் சுவையுடன் அமைத்து விளக்குந் திறம் எண்ணி இன்புறத் தக்கது.

அதனுடன் மூவருள் முதல் சிவபிரானே என்பதை நிலைநாட்டும் நோக்கில் தான் திருமாலும் பிரமனும் அடி யையும் முடியையும் தேடிச்சென்றதாகப் பெரும்பான்மை யும் எல்லாப் பதிகங்களிலும் ஒன்பதாம் பாடலில் அமைக் கின்ருர்.

'முந்திஞன் மூவருள் முதல்வன் ஆயிஞன்' 281 : 5

'முன்பிஞர்மூவர் தாந்தொழு முக்கண்மூர்த்தி' 213 : 3

தோற்றலார்மாலும் நான்முகமுடைய
தோன்றலு மடியொடு முடியுறத்தங்கள்
ஆற்றலாற்காணு ரர்யவெம்மடிகள்
அச்சிறுபாக்கம தாட்சிகொண்டாரே... 77 : 9.

ஏன் வழிபடுதல் வேண்டும் :-

இத்தகைய இறைவனை ஏன் வணங்குதல் வேண்டும்? இறைவனை வணங்காவிடில் என்ன நிகழ்ந்துவிடும் போன்ற கேள்விகள் கேட்கப்படலாம், கேட்கப்படுகின்றன.

மனிதனுடைய வாழ்க்கையில் துன்பங்களாகிய வெள்ளங்கள் வந்து கொண்டிருக்கின்றன. அவ்வெள்ளங்களுக்கு அவ்வப்போது சூழ்நிலைக்குத் தக அணைபோட்டுக் கொள்கிறோம். நிரந்தரமாக இன்பமில்லை. நாம் வாழ்வதற்கு அடிப்படையாக அமைவது உயிர்தான். ஆயின் நாம் வாழ்வதனையும் உடல், அல்லது மனம் மகிழ்வு பெறுகின்ற நிலைக்கு மட்டும் எண்ணி வாழ்கின்றோம். இந்த உயிர், மும்மலங்களிலிருந்தும் வினைகளிலிருந்தும் விடுதலைபெற்று வாழ்வதற்கு அடிப்படை பிறவியறுத்தல்; பிறவி அறுத்தலுக்காகவே இறைவனை வணங்கல் வேண்டும் என்கிறார். இது உயிர் நிலை.

ஊனுடைப் பிறவியை அறுக்க உன்னுவீர்
கானிடை யாடலான் பயில்க ருக்குடிக்
கோனுயர் கோயிலை வணங்கி வைகலும்...... 279.4

கருவார்இடும்பைப் பிறப்பறுத்துக் கவலை கழிவாரே 72 : 11

பிணிபடுகடல்பல பிற விகளறல் எளிது 19 : 2.

இவ்வுலக வாழ்க்கையில் அமைந்த துன்பங்களைப் போக்கவும், இன்பங்களை ஆக்கவும், பாவங்களை நீக்கவும், நாவுக்கரசர் கூறியது போன்று "இன்பமே எந்நாளும் துன்பமில்லை" என்ற நிலையில் வாழவும் சிவபிரானை வழிபடல் வேண்டுமெனக் கூறுகின்றார்.

'உம தடிதொழும் இயலுளார் மறுபிறப் பிலரே' 353 : 9

'உமை அன்புசெய் திருக்கவல் லார் இட ரிலரே' 354 : 8

'உமை ஏத்துவார் அருவினை யொடு துய ரிலரே' 355 : 9

'உம திணையடி உளங்கொள உறுபிணி இலரே' 352 : 3

'உமைப் பேணுதல் கற்றறி வோர்கள் தங் கடனே' 354 : 6

(கற்றதனு லாய பயனென்கொல் வாலறிவன் நற்றாள் தொழாஅர் எனின்-குறள்)

அச்சம்மிலர் பாவம்மிலர் கேடும்மில ரடியார்
நிச்சம்முறு நோயும்மிலர் தாமுந்நின் றியூரில்
நச்சமிடறுடையார் நறுங்கொன்றை நயந்தாளும்
பச்சம்முடை யடிகள் திருப் பாதம் பணிவாரே 18 : 2

அத்தனை அடைய வல்லார்க்கில்லை யல்லலே 150 : 1

பெருக்கும் இன்பதுன்பமான பிணிபோமே' 195 : 8

அறியா வினைகள் அருநோய்பாவம் அடையாவே 102 : 6

தீமைகள் விலகி நன்மைகள் நெருங்க இறைவனை வழிபடுதல் நன்றெனப் பேசுகின்றார் சம்பந்தர்.

இறைவனை வணங்காப் பொறிகளைக் 'கோளில் பொறிகள்' என வள்ளுவர் குறிப்பிடுவது போன்று 'இறைவனைக் காணாத கண் என்ன கண்ணே, ஏத்தாத நாவென்ன நாவே! கேளாத செவியென்ன செவியே' என இளங்கோவடிகள்[23] கேட்பதுபோன்று சம்பந்தரும் கேட்கின்றார்.

'ஆணாகங் காதல்செய் ஆமாத்தூர் அம்மானைக்
காணாத கண்ணெல்லாங் காணாத கண்களே

ஆளானார் சென்றேத்தும் ஆமாத்தூர் அம்மானைக்
கேளாச் செவியெல்லாம் கேளாச் செவிகளே

ஆறாத தீயாடி ஆமாத்தூர் அம்மானைக்
கூறாத நாவெல்லாங் கூறாத நாக்களே 180 : 4, 8, 7

இதனுடன் அமையாது கவுந்தியடிகள் கூறியது போன்று[24] சிவபிரானைத் தவிர, பிற தெய்வங்களை என் நா போற்றாது, பாடாது, பாராட்டாது என்ற முறையிலும் பேசுகின்றார் ஞானசம்பந்தர்.

தும்மலொ டருந்துயர் தோன்றிடினும்
அம்மல ரடி யலா லரற்றாதென்நா

23. 'திருமால்சீர் கேளாத செவியென்ன சேவியே'
'கண்ணிமைத்துக் காண்பார்தம் கண்ணென்ன கண்ணே'
'நாராயணாவென்னா நாவென்ன நாவே' — சிலம்பு 17 : 35, 36, 37

24. 'நாமமல்லது நவிலாது என்நா'
'கைவரைக் காணினுங் காணா வென்கண்' சிலம்பு 10 : 197, — 199.

உண்ணினும் பசிப்பினும் உறங்கினும்நின்
ஒண்மல ரடியலால் உரையாதென்நா. 262:4, 9

இளங்கோவடிகளுக்கிருந்த பிற சமயப் பொறுமை பொது நிலேயில் நாயன்மார்களுக்கு இல்லே. காரணம் அடிகள் பிற சமயத்தினரால் துன்புற்றிருக்கமாட்டார். சிவனடியார்கள் பிற சமயத்தினரால் துன்புற்றுள்ளனர். நாவுக்கரசர் வரலாறே அதற்குச் சான்று பகரும்.

**சம்பந்தரும் பிற சமயத்தினரும்**

முதல் முத்திரு முறைகள், சமணர் (சாக்கியர், தேரர்) புத்தர் போன்ற பிற சமயத்தினரைக் குறிப்பிடுகின்றன. பெரும்பான்மையும் எல்லாப் பதிகங்களிலும் பத்தாம் பாட்டில் இவர்களேப் பற்றிக் குறிப்பிடுகின்ருர்.[25]

உடைதுறந் தவர்களு முடைதுவ ருடையரும்
படுபழி யுடையவர் பகர்வன விடுமினீர் 289 : 10

குண்டர் சாக்கியர் கூறியதாங்குறி யின்மையே 197 : 10

காணுர் அமணர் நல்லதறியார் நாளுங்குரத்திகள்
பேணுர் தூய்மை மாசுகழியார் பேசேலவரோடும் 72.10

புத்தர்தத் துவமிலாச் சமணுரைத்த பொய்தனே
உத்தம மெனக்கொளாது உகந்தெழுந்து வண்டினம்
துத்தநின்று பண்செயும் சூழ்பொழிற் றுருத்தியெம்
பித்தர்பித்த னேத்தொழப் பிறப்பறுத்தல் பெற்றியே 234.10

சமயப் போராட்டக் காலமாக இடைக்காலம் அமைந்திருத்தல்வேண்டும். இக் காலத்தின் வளர்ச்சியே சிந்தாமணி தோன்றினல் பெரியபுராணம் தோன்றும் நிலேயை ஏற்படுத்திற்று. (தற்காலத்தில் கட்சிகள் அரசாட்சியைப் பற்ற முயல்வது போன்று முடியரசுக் காலத்தில் சமயவாதி அரசனேப் பற்ற முயன்ருர்கள்.)

---

25. எடுத்த பாட்டினில் வடிவுபெற் றிருநான்கு திருப்பாட்
டடுத்த வம்முறை பன்னிரண் டாண்டள வணேந்து,
தொடுத்த வெஞ்சமண் பாட்டினிற் ருேன்டிடக் கண்டு
விடுத்த வேட்கையர் திருக்கடைக் காப்புமேல் விரித்தார்.
— பெரியபுராணம். 2989

மதுரையில் சமணர்கள் கைப்பாவையாக வாழ்ந்த பாண்டியனைச் சைவத்திற்குத் திருப்ப முயன்றார்கள், பாண்டியன் மனைவி மங்கையர்க்கு அரசியாரும் அமைச்சர் குலச்சிறையாரும். திருஞானசம்பந்தர் மதுரைக்கு வந்தார். திருஞானசம்பந்தர் தங்கியிருந்த மடத்திற்கு நெருப்பிட்டனர் சமணர். புறநெருப்பு அணைக்கப்பட்டு அக நெருப்பு, பாண்டியன் வயிற்று நோயாயிற்று (309-ம் பதிகம்). அந்நோயைத் தீர்க்கப் போட்டியெழுந்தது. சமணர் தோற்றனர். 'மந்திரமாவது நீறு' (202) என்ற பதிகம் பாடி ஞானசம்பந்தர் பாண்டியன் நோயைப் போக்கி அருளினர். போட்டி வலுத்தது. அனல்வாதம் எழுந்தது. இருசமயிகள் எழுதிய பாடல்களும் நெருப்பி லிடப்பட்டன.

தமிழின் இனிமையும் நேர்மையும் சுவையும் ஆழமும் பொருந்திய பாடல்களை நெருப்பாலும் எரிக்க இயல வில்லை.[26] சமணர் பாடல்கள் எரிந்தன. எதனையும் மூன்று முறை செய்தல் வேண்டுமென அமணர் கூற, பாட்டை ஏட்டில் எழுதி வையையாற்றில் இடின் எவ்வேடு எதிர்த்து வருமோ அவ்வேடுடையார் வென்றார் என முடிவு செய்ய லாமெனக் கூறினர்கள். தமிழுக்கு ஐம்பூதங்களுள் ஒன்றாகிய நெருப்பை வெல்லுகின்ற ஆற்றல் இருந்தது போன்று நீரைக் கடக்கின்ற ஆற்றலும் இருந்தது. ஞானசம்பந்தர், 'வாழ்க அந்தணர் வானவர் ஆனினம்' (312ம் பதிகம்) என்ற பதிகத்தை எழுதி வைகையில் இட, ஏடு எதிர்ந்து வந்தது. 'வேந்தனும் ஓங்குக' என்ற சொற்றொடர் பாடலில் இருந்தமையால் கூன் பாண்டியன்,[27] நின்ற சீர் நெடு

---

26. நெருப்பிலிட்ட பதிகமாகப் ('போகமார்த்த பூண்முலையாள் தன்னேடும்' என்ற திருநள்ளாற்றுப்பதிகத்தைக் (49) கூறுகின்றார்கள். — நெருப்பிலிடும் போது பாடிய பதிகமாக 345 வது பதிகம் கொள்ளப்படுகின்றது. ஒவ்வொரு பாடலிலும் 'மிளிரிள வளர்எரி யிடில்இவை பழுதிலை மெய்ம்மையே'. 'இட்டுறு மெரியினி லிடிலிவை பழுதிலை மெய்ம்மையே' போன்றஇறுதி வரிகள் அவ்வுண்மையை நிலை நாட்டுகின்றன.

27. திருஞானசம்பந்த சுவாமிகள் அருளிச்செய்த தேவாரப் பதிகங்கள் — கயப்பாக்கம் சதாசிவச்செட்டியார் — 1927 — பக் 659

மாறனுன் என்று கூறுவதும் உண்டு. இம்மூன்றும் போட்டியிலும் சமணர்கள் முதலிலேயே தோற்றுவிட்ட தால், அச்சமணர் சொற்கிணங்கக் கழுவேற்றப்பட்டனர் என்பது வரலாறு[28].

**சம்பந்தரும் தமிழும் :**

இவ்வாறு பிற சமயவாதிகளை வென்றமைக்குக் காரணங்கள் பலவற்றுள் சம்பந்தர் தமிழ் மீது கொண்டிருந்த அளப்பரிய பற்றும் ஒன்று. அவர் தமிழுக்கு அடை கூறும் முறைகளிலேயே அவர் தமிழ்ப் பற்று வெளிப்படுகின்றது. அருந்தமிழ் (234-11); ஆரா அருந்தமிழ் 89-11; இசைமலி தமிழ் 22-11, இன் தமிழ் 56-11; இன்புறுந்தமிழ் 214-11; உருவாரும் ஒண்டமிழ் 150-11; உரைசெய் தமிழ் 341-11; எழுதுமொழிதமிழ் 325-12; ஏரினர் தமிழ் 288-11; ஏறுபல்பொருள் முத்தமிழ் 373-11; ஒண்டமிழ் 224-11; ஒளிர்பூந்தமிழ் 194-11; கலைமலி தமிழ் 120-11; கலை முத்தமிழ் 253-10; குலமார் தமிழ் 153-11: குலவேந்தர் செந்தமிழ் 193-11; குற்றமில் செந்தமிழ் 113-11; குன்றுத்தமிழ் 18-11; சங்கமலி தமிழ் 332-11; சந்தநிறை தண்டமிழ் 335-11; சீர் இன்புறுந் தமிழ் 214-11; செந்தமிழ் 43-11; செப்பரிய தண்டமிழ் 190-11; செறிவண்டமிழ் 199-11; சொல்லார் தமிழ் 31-11; ஞாலமல்குந் தமிழ் 212-11; ஞானத்தமிழ் 117-12; தண்டமிழ் 81-11; தலமார்தரு செந்தமிழ் 160-11; தவமல்கு தமிழ் 112-11; திருநெறிய தமிழ் 1-11; துளங்கில் தமிழ் 13-11; நலங்கொள் தமிழ் 14-11; நற்றமிழ் 40-11; நாடவல்ல தமிழ் 281-11; மாடமலி தமிழ் 121-11; பண்ணுருந் தமிழ் 323-11; பண்ணியல் தமிழ் 309-5; பண்ணுலாம் அருந் தமிழ் 348-11; பண்பொலி செந்தமிழ் 184-11; பரவிய தமிழ் 287-11; பல்பொருள் முத்தமிழ் 383-11; பல ஓசைத் தமிழ் 11-4; பாரின் மலிகின்ற புகழ்கின்ற தமிழ் 333-11; புகழ் வண்டமிழ் 240-11; பூந்தமிழ் 194-21; பேரியல் இன்தமிழ் 64-11; மறைவளருந் தமிழ் 203-11: முடிவில் இன்தமிழ் 94-11; விலையுடை அருந்தமிழ் 262-11; இத்துணை நோக்கங்களில் தமிழைப் புகழ்ந்த புலவர்கள் ஒரு சிலரே என எண்ணுகிறேன்.

---

28. பன்னிருதிருமுறை வரலாறு — பக். 116.

பல அடியார்களுடன் இன்னிசையில் தமிழைப் பாடிய காரணத்தால் மகிழ்ந்த திருக்கோலக்கா இறைவன் பொற்ருளம் கொடுத்தார் (23-ஆம் பதிகம்). முத்திருமுறைகளிலும் எதுகை மோனை இல்லாத பாடல்களே இல்லையெனலாம். ஓசை இனிமையையும் சொல்லினிமையையும் அவர் பாடல்கள் எல்லாவற்றிலும் காண்கிருேம்.

மடையில் வாளை பாய மாதரார்
குடையும் பொய்கைக் கோலக் காவுளான்
சடையும் பிறையும் சாம்பற் பூச்சுங்கீழ்
உடையும் கொண்ட உருவ மென்கொலோ......23 : 1.

திழிவீழி மிழலையில் நாவுக்கரசரும் ஞானசம்பந்தரும் சார்ந்திருந்த காலத்து நாட்டில் வருமையும், பசிப்பிணியும் ஏற்பட்டதால் இருவரும்பாடி 'படிக்காசு பெற்று' (92) மக்களின் பசிப்பிணியைப் போக்கினர்.

வாசி தீரவே காசு நல்குவீர்
மாசின் மிழலையீர் ஏச லில்லையே .....92 : 1.

தன் தந்தை சிவபாதவிருதயருக்கு வேதவேள்வி செய்வதற்குத் திருவாவடுதுறை இறைவனைப் பொற்கிழி நல்குமாறு குறிப்பால் பாட, இறைவன் கொடுத்தான் என்பதை 262-ஆம் பதிகம் உணர்த்தும். பொருள்களைப் பெறுவதற்காகவோ, நன்மைகளை யடையவோ அடியார்கள் இறைவனை வணங்கவில்லை. உண்மையை உணர்ந்து, கற்றதன் பயன் இறைவனைப் பணிதல் எனப் பணிந்தார்கள். இறைவன், அடியார்கள் நிலையை உணர்ந்து ஆவன செய்கின்ருன். தற்காலத்தில்கூடப் பெருந்தன்மையும் சீர்பண்பும் உடையவர்கள், 'இலனென்னும் எவ்வம் உரையாமை ஈதல் குலனுடையான் கண்ணே யுள' என்ற குறட் கருத்திற்கேற்ப, கேளாதே கொடுக்கின்ற திறத்தினைப் பார்க்கின்ருேம். மக்களே தம்மைச் சார்ந்தார் விருப்பத்தை நிறைவேற்றமாட்டார்? அல்லது இக் கதைகளை ஐயுற்ருல் இறைவன் பேரருளாளர் வாயிலாக இவற்றை நிறைவேற்றியிருக்கலாம் என நினைத்தால், தாம் உளநிறைவடையலாமே.

வேனிற்காலத்தில் பலதலங்களுக்கும் செல்லும்போது ஏற்படும் கடுமையையுணர்ந்து முத்துப் பந்தர் பெற்றமையை 331-ஆம் பதிகம் கூறும்.

திருமறைக்காட்டில் அப்பரும் சம்பந்தரும் கோயிற் கதவம் திறந்து அடைத்த காட்சியினை 173-ஆம் பதிகம் செப்பும். திருப்பாச்சிலாச்சிராமத்தில் கொல்லிமழவன் மகளின் முயலகன் நோயைப் போக்கியமையும் (44-ஆம் பதிகம்),

திருமருகலில் வணிகப் பெண்ணுக்காக, நாகம்தீண்டி இறந்த அவள் கணவன் மீளப்பாடினதையும் (154-ஆம் பதிகம்),

திருமயிலாப்பூரில் எலும்பைப் பெண்ணுக்கிய காட்சியும் (183-ஆம் பதிகம்) இவை போன்ற இயற்கை இறந்த ஆற்றலுடைய செயல்கள் அனைத்தும், நிறைமொழி மாந்தர் ஆணையிற்கிளந்த மறை மொழிச் சொற்களே; தேவாரத் திருப்பதிகங்களே, பண்ணோடு இசைபாடிய தமிழ்ச் சொற்களின் ஆற்றலையே உணர்த்துகின்றன என்று கூறின் மிகையாகாது. இன்றும் 'கோளறு பதிகத்தினைப்' பாடிப் பயன் பெறுபவர்கள் பலருண்டு. எழுத்துக்களை எம்முறையில் அமைத்துப் பாடினால் அவை பயன்தரும் என்பதனைக் கற்றவர்களாக இந்நிறைமொழி மாந்தர்கள் இருந்திருத்தல் வேண்டுமெனத் தோன்றுகிறது. (இங்கு நந்திக்கலம்பகம் உன்னத்தக்கது).

அவருடைய இலக்கிய நயத்திற்கும் இயற்கை வருணனைக்கும் சில பாடல்களைப் பார்க்கலாம். தான் செல்லுகின்ற ஊரின் இயற்கை வருணனையை இரண்டு வரிகளிலும், இறைவனை இரண்டு வரிகளிலுமாகவே பெரும் பான்மையும் பாடுகின்றார்.

'கடற்கரை அருகே ஒரு சிறு நீர்த்தேக்கம். அங்குத் தாழை மடல் விரிந்து அதன் நிழல், நீரில் குருகு போன்று காட்சியளிக்கின்றது. அங்கு வாழும் கெண்டை மீன் தாழை மடலின் நிழலைக் குருகென அஞ்சி அங்குள்ள தாமரைப் பூவினடியில் தன்னை மறைத்துக் கொள்கின்ற

தாம். இதைக் கண்ணுற்ற கடல் முத்துக்கள் நகைக்கின்றன' எனப் பாடுகின்ருர். அத்தனையும் இயற்கை; இயற்கையைக் கண்டு இயற்கையே அஞ்சும் காட்சி. அதைக் கண்டு இயற்கையே சிரிக்குங் காட்சி. நிகழ்ச்சி உண்மை. கவிஞன் தன் எண்ணத்தை அங்கு ஏற்றும்போது தற்குறிப்பேற்றம் ஆகின்றது. இதோ கேளுங்கள் பாடலை :

'விடமுண்ட மிடற்றண்ணல் வெண்காட்டின் றண் புறவின்
மடல்விண்ட முடத்தாழை மலர் நிழலைக் குருகென்று
தடமண்டு துறைக்கெண்டை தாமரையின் பூமறையக்
கடல்விண்ட கதிர்முத்த நகைகாட்டுங் காட்சியதே. 184:4.

மற்றெரு காட்சி மருதநிலக் காட்சி. ஒரு பொய்கை, அதன் அருகே வயல். நெற்கதிர்கள் முற்றி வளைந்து காற்றில் அசைந்து கொண்டிருக்கின்றன. பொய்கையில் நீர்ப்பெருக்கு மிகுதி. வெள்ளத்தனைய மலர் நீட்டம். தாமரை மலரொன்றில் அன்னம் ஏறி மென்மை பொருந்திய பட்டுத் தவிசில் அமர்ந்திருப்பது போன்று வீற்றிருக்கின்றது. அம் மலருக்கு மேலே ஒரு தாமரை இலை - குடை போன்று. குடைக்கீழ் அன்ன அரசன் வீற்றிருக்கின்ருன். அருகிருக்கின்ற வயலிலுள்ள நெற்கதிர்கள் காற்றில் அசைந்து சாமரையாகிக் காற்று வீசுகின்றன. இன்பக் காட்சி. என்றும் இதயத்தில் நிலைபெறுங் காட்சி,

பொறியரவ மதுசுற்றிப் பொருப்பேமத்
தாகப்புத் தேளிர்கூடி
மறிகடலைக் கடைந்திட்ட விடமுண்ட
கண்டத்தோன் மன்னுங்கோயில்
செறியிதழ்த் தாமரைத் தவிசிற்றிகழ்ந்தோங்கும்
இலைக்குடைக்கீழ்ச் செய்யார் செந்நெல்
வெறிகதிர்ச் சாமரையிரட்ட இள அன்னம்
வீற்றிருக்கு மிழலையாமே' 132:2.

உள்ளக் கருத்தைத் தெள்ளத்தெளியப் படிப்பவர், கேட்பவர் மனத்தில் பசுமரத்தாணிபோற் பதியும் வண்ணம் பல திற உவமைகளைக் கையாள்கின்ருர். கமுகைப் பார்க்கின்ருர் - கமுகம் பூ முத்தாகவும் காய் மரகதமாகவும் கனி பவளமாகவும் காட்சியளிக்கின்றன.

எண்ணார்முத்த மீன்றுமரகதம் போற்காய்த்துக்
கண்ணார்கமுகுகு பவளம்பழுக்குங் கலிக்காழி 102:4.

மனிதன் நினைப்பாகிய நெடுங் கிணற்றினுள்ளே ஆழ்ந்து துன்பங்களில் மூழ்கி அவலத்தை அடைந்து கொண்டிருக்கிறன். 'மனத்தினை உறுதியாகக் கயிருக்கி, எண்ணம் கீழே போகாது மேலிருந்தால் துன்பமுறு திருக்கலாம் எனப் பேசுகின்றார்.

நினைப்பெனு நெடுங்கிணற்றை நின்றுநின் றயராதே
மனத்தினை வலித்தொழிந்தே னவலம்வந் தடையாமைக்
கனைத்தெழு திரள்கங்கை கமழ்சடைக் கரந்தான்தன்
பனைத்திரள் பாயருவிப் பருப்பதம் பரவுதுமே 118-8

நினைப்பெனும் நெடுங்கிணறென்பது நெஞ்சினிக்கும் ஒரு தொடராக அமைந்துள்ளது.

"தொடுக்குங்கடவுட் பழம்பாடல் தொடையின் பயனே" எனப் பாடினர் குமரகுருபர அடிகள். சம்பந்தர் 'பண்காட்டும் இசையான்' எனப் பாடுகின்றார். பாடலின் ஓசையிலும் பொருண்மையிலும் எத்தனை முறை படிக்கின்றேமோ அத்தனை முறை மூழ்குகின்றேம்.

கண்காட்டு நுதலானுங் கனல்காட்டுங் கையானும்
பெண்காட்டு முருவானுங் பிறைகாட்டுஞ் சடையானும்
பண்காட்டு மிசையானும் பயிர்காட்டும் புயலானும்
வெண்காட்டி லுறைவானும் விடைகாட்டுங் கொடியானே184-1.

முதல் முத் திருமுறைகள், தமிழ் யாப்பு வரலாற்றில் சில புதுமைகளைத் தந்தன. இத் திருமுறைகளின் இலக்கியச் சிறப்பிற்கு அவற்றின் யாப்பமைப்பும் ஒரு காரணம். மொத்த பதிகங்கள் 385 (383+2); பாடல்கள் (4140+22) 4162; வரிகள் 16679 (16591+88); அவற்றில் காணப்படும் மிகுதியான பதிகங்கள் கலி விருத்தம் 106 பதிகங்கள்; ஆசிரிய விருத்தம் 88; கலித்துறை 79; கொச்சகங்கள் 54; ஆசிரியத்துறை 27; வஞ்சி விருத்தம் 13; வஞ்சித்துறை 9; குறட்டாழிசை 3; நாலடி மேல்வைப்பு 3; ஈரடி மேல் வைப்பு; 2; இணைக்குறள் ஆசிரியம் 1. இவை போகச் சித்திரக் கவிதைகள் சிலவற்றையும் தந்துள்ளார். திருவியமகம் 4; திருச்சக்கரமாற்று 2; ஏகபாதம் 1; எழு

கூற்றிருக்கை 1; திருகோமுத்திரி 1; திருமாலை மாற்று 2; இவை போக மொழிமாற்றுப் பொருள்கோளிலும் ஒரு பாடல் அமைத்துள்ளார்.[29]

இவற்றில் மேல்வைப்பும், சித்திரக் கவிகளும் தமிழ் யாப்பு வரலாற்றில் முதல் முதலாக இவர் அமைத்தவை.

இடரினுந் தளரினு மெனதுறுநோய்
தொடரினு முனகழ றொழுதெழுவேன்
மிடறினி லடக்கிய வேதியனே
கடறனி லமுதொடு கலந்த நஞ்சை
இதுவோவெமை யாளுமா றீவதொன்றெமக் கில்லையேல்
அதுவோ வுனதின் னருளாவடுதுறை யரனே...... 262-1.

மாலைமாற்று வகைக்கு ஒரு சான்று காணலாம்.

தாவாமூவா தாசாகாழீ நாத நீயாமாமா
மாமாயாநீ தாநாழீ காசாவா மூவாதா

---

29. ஞானசம்பந்தர் தேவாரம்

பதிகம் 385 (383+2)
பாடல் 4162 (4140+22)
அடிகள் 16679 (16591+88)

முழுமையாகக் கிடைக்காத பாடல்கள்

| பதிகம் | பாடல் | கிடைக்கும் அடி |
|---|---|---|
| 53 | 11 | 2 |
| 115 | 11 | (2 அடிகளின் பகுதி) |
| 145 | 11 | 2 |
| 175 | 5 | 2 |
| 175 | 7 | 3 |
| 175 | 8 | 2 (½) |
| 232 | 11 | 1 |
| 332 | 10 | 2 (½) |

பதிகங்களில் பாடல் எண்ணிக்கை

1 பாடலாலமைந்த பதிகம் — 128 ...... 1
6 பாடலாலமைந்த பதிகம் — 382 ...... 1
7 ,, ,, — 81, 358 ...... 2.
8. ,, ,, — 175, 308, 357 ...... 3
9. ,, ,, — 53, 106, 291, 294, ...... 4.

தவா - அழியாத, மூவா - மூப்பில்லா, தாசா - தச காரியத்தில் அடையும் பொருளாக உள்ளவன் (தசகாரியம்-தத்துவ ரூபம், ஆன்ம தரிசனம், ஆன்ம நீக்கம், சிவ ரூபம், சிவதரிசனம், சிவயோகம், சிவபோகம் என்பன) காழீ நாத - சீகாழிக்குத் தலைவன், நீ - யாம் ஆ நள்ளிரவில் நட்ட மாடும் ஆண்டவன், மா-பெரியவன், பெருமை வாய்ந்தவன்;

---

10. பாடலாலமைந்த பதிகம் : 5, 6, 9, 18, 55, 66, 68, 89, 102, 103, 105, 113-116, 133, 137, 145, 137, 145, 147, 153, 159, 172, 181, 194, 200, 217, 219, 225, 231-233, 244, 258, 268. 281, 290, 295, 304, 313, 321, 332, 334, 349, 352, 379-381, 47,

12. பாடலாலமைந்த பதிகம் : 45, 63, 90, 117, 127, 142, 206, 209, 210, 312, 325, 368, 369, 371.........14.

13. பாடலாலமைந்த பதிகம் : பெரும்பான்மை. பதிகங்கள் ...... 313.

பயன்பட்ட செய்யுட்கள் :

பா வகைகள் :

1. இணைக்குறள் ஆசிரியப்பா - 128ஆம் பதிகம் ......1.
   ‘இடைபால குன்றின் இணைக்குறள்’ - காரிகை, 34.
   128இல் இருசீரடிகள் - 3; முச்சீரடி - 1. மொத்தம் அடி 47.

2. கொச்சகக் கலிப்பா - 9-18, 45-53, 60-62, 176-184, 211, 213, 214, 217, 217, 233, 235. 249-252, 313-324 ...... 54.
   தரவு தனித்து வந்தது - எனவே தரவு கொச்சகக் கலிப்பா (யாப்பருங்கலம், — 86).
   ஒரு பாடலில் 4 அடி.
   நாற்சீரடி நான்காகப் பாடல்கள் அமைகின்றன.

1. பாவினங்கள் ஆசிரிய விருத்தம் :
   ‘கழிநெடிலடி நான் கொத்திறின் விருத்தம்’
   (யாப்பருங்கலம், 77).

(1) அறுசீராசிரிய விருத்தம்
4-8, 19-22, 43, 59, 67-74, 130-132, 201-210, 215, 216, 225-232, 236, 238-247, 295-297, 300, 358, 360, 317-375, 385...65.

(2) எழுசீராசிரிய விருத்தம்
41, 42, 44, 219-224, 376-381...15.

மா, மாயா - சிறந்த மாயங்களை உயிரினங்களுக்காகச் செய்பவன் - நீ தாநாழீ - தான ஆழி - கொடையில் கடலை யொத்தவன், கா - காப்பாற்று, சா - சாவு, சாவினின்றும் காப்பாற்று. அதாவது பிறவியறுக்கச் செய், காசா - இரத்தினம் போன்ற ஒளியுடையவனே - தா எங்களுக்கு அருள்புரியவா, மூ - எல்லாவற்றிலும் முந்தியவனே - முந்தைப் பழம் பொருட்கும் முந்தைப் பழம் பொருளே. வாகா - எல்லாப் பூதவடிவாய் உள்ளவனே - மூவாதா - எனப் பிரித்து மூப்பில்லாதவனே எனவும் பொருள்

---

(3) எண்சீராசிரிய விருத்தம்
75-79, 126, 136, 175...8.
மொத்தம் ஆ. வி. 88.

**2. ஆசிரியத்துறை**

'.................................. நான்கடியாய்
எருத்தடி நைந்தும் இடைமடக்காயும் இடையிடையே
சுருக்கடி யாயுந் துறையாம் ...........' (காரிகை—36).

39-40, 54-58, 104-108, 135, 185-189, 248, 259-260, 352...357—27.

**3. கலிவிருத்தம்**

'நேரடி யீரிரண்டாய்விடி னதுவாகும் விருத்தம்'
—காரிகை, 44.

23-33, 80-89, 118-125, 127, 134, 147-174, 212, 234, 253-258, 271—294, 310-312, 382-384...106.

**4. கலித்துறை :**

'நெடிலடி நான்காய் நிகழ்வது கலித்துறையே' — யாப்பருங் கலம்—88

1-3, 65-66, 97-103, 116, 129, 133, 137-146, 190-200, 218, 265-270, 325-351, 359, 361-365...76.

**கட்டளைக் கலித்துறை :-**

'அடியடி தோறு மைஞ்சீ ராகி
முதற்சீர் நான்கும் வெண்டளை பிழையாக்
கடையொரு சீரும் விளங்காய் ஆகி
நேர்பதி னாறே நிரைபதி னேழென்
றோ தினர் கலித்துறை யோரடிக் கெழுத்தே',
— காரிகை — உரை — பிற்சேர்க்கை.

63, 64, 117 ...... 3.

கூறலாம். தோண்டத் தோண்டச் சுரங்கம் போன்று பொருள்கள் தோன்றிக் கொண்டேயிருக்கின்றன - கவிதைச் சுரங்கம் என்றும் கூறலாம். தற்காலத்தில் அமைகின்ற ஓவியக் கலையில் சில கோடுகளை வரைந்து விளக்கங்கள் கூறுவது போன்று இவ்வாறு தொடக்கத்திலிருந்து

---

5. *குறட்டாழிசை :-*
அந்தடி குறைநவும் நெந்துறைச் சிதைவும்
சந்தழி குறளும் தாழிசைக் குறளே — யாப்பருங்கலம் 64. 368-370.........3.

6. *வஞ்சிவிருத்தம் :-*
34-38, 109-115, 367 ...... 13.
சிந்தடி நான்காய் வருவது வஞ்சியது
எஞ்சா விருத்தம் என்மனர் புலவர் — யாப்பருங்கலம் 92

7 *வஞ்சித்துறை :-*
இருசீரடி நான்காய் வருவது — ". 91.
"திருவிருக்குறள்" எனப்படுவது இதுவாகவே இருக்க வேண்டும் — "ஓரடி இருசீராக நாலடியான் வருஞ் செய்யுள் — திருவிருக்குறள்"—தமிழ்ப் பேரகராதி — 90-96, 298-299 ...... 9.

*புதுமரபுகள்*

1. நாடி மேல்வைப்பு — 261, 262, 366 — 3.
2. ஈரடி மேல்வைப்பு — 263, 264 — 2.

*பொருள்கோள்*

1. மொழி மாற்று — 117 (கட்டளைக்கலி)

*சித்திரக்கவி*

1. *ஏகபாதம்* — 127 (கலிவிருத்தம்)
ஓரடியே நான்குமுறை வருவது. உச்சரித்தால், பாட்டுப் பொருள் வேறுபட்டு முடிவது (யாப்பருங்கல விருத்தி பக். 410).

2. *எழுகூற்றிருக்கை :-* — 128 (இணைக்குறள் ஆசிரியம்)
ஒன்று முதல் ஏழுவரையுள்ள எண்களமையப் பாடுவது (யாப்பருங்கலவிருத்தி பக். 410)

3. *கோமூத்திரி* — 210 (அறுசீர் ஆ. வி) இரண்டிரண்டுவரியாக ஒரு செய்யுளை யெழுத, மேலுங்கீழும் ஒன்றிடையிட்டு வாசித்தாலும் அச் செய்யுளே யாவது.

(தண்டி — உரை. 98)

பாடினாலும், இறுதியிலிருந்து பாடினாலும் பொருள் தரக் கூடிய, பொருட் சிறப்புடைய மாலைமாற்றுப் போன்ற சித்திரக் கவிதைகளைத் தமிழுக்கு முதலில் தந்தவை முத் திருமுறைகளே—இவ்வாறு ஒரு பதிகம்.

இலக்கிய மரபையும், தமிழ் மரபையும் கற்றவர்கள் மொழிமாற்றுப் பொருள் கோளில் அமைந்துள்ள பாக்களை விளங்கிக்கொள்ள முடியும். அவ்வாறு எழுதுவதும் ஒரு இனிமையாகக் கருதப்பட்டது.

உரித்தது பாம்பையுடன் மிசையிட்டதோ ரொண்களிற்றை
எரித்தொ ராமையை யின்புறப் பூண்டது முப்புரத்தைச்
செருத்தது சூலத்தை யேந்திற்று தக்கனை வேள்விபன்னால்
விரித்தவர் வாழ்தரு வெங்குரு வில்வீற் றிருந்தவரே 117-4.

முதல் முத் திருமுறைகளில் (ஏறத்தாழ) பதினான்கு நாயன்மார் சுட்டப்படுகின்றனர்.

வாய்கலசமாக வழிபாடுசெயும் வேடன் மலராகுநயனம்
காய்கணையினாலிடந் தீசனடிகூடு காளத்திமலையே

—கண்ணப்பநாயனார் :—327-4

கொற்றவன் றனக்கு மந்திரியாய குலச்சிறை குலாவிநின்றேத்தும்

—குலச்சிறை நாயனார்—378.2.

கோடடைந்த மால்களிற்றுக்கோச் செங்கணற்கருள்செய்
சேடடைந்த செல்வர்வாழுஞ் சேய்ஞலூர் மேயவனே

—கோச்செங்கட் சோழநாயனார்—48-6

---

4. திருச்சக்கரமாற்று — சீகாழியின் பன்னிரு பெயர்களையும் செய்யுள் தோறும் அமைத்து, ஒரு பாடலின் இறுதியில் கூறிய பெயரை அடுத்த பாடலின் முதலிற் கொண்டு கூறும் சம்பந்தர் தேவாரப் பதிகம் — தமிழ்ப்பேரகராதி. பதி கங்கள் 206, 209 (அறுசீர் ஆ.வி).

5. மாலைமாற்று: 375ஆம் பதிகம் (அறுசீர் ஆ. வி.)
ஒரு செய்யுளை, ஈறுமுதலாக வாசித்தாலும் அச்செய்யுளே ஆவது (தண்டி 98 உரை).

6. திருவியமகம்: 371-374 (அறுசீர் ஆ. வி.)
எழுத்து, சீர் அல்லது அடி மீண்டும் வந்து பொருள் வேறு பாடு செய்யும் மடக்கணி (தண்டி 90 உரை).

சென்றதாதை யுகுத்தனன் பாலையே
சிறியன்பு செகுத்தனன் பாலையே
வென்றிசோர்மழுக் கொண்டுமுன் காலையே
வீடவெட்டிடக் கண்டு முன்காலையே
நின்றமாமணியை யோடினன் கங்கையால்
நிலவமல்கி யுதித்தன கங்கையால்
அன்றுநின்னுரு வாகத் தடவியே
யாலவாயர னுகத் தடவியே

—சண்டேசுர நாயனர்—373-5

பொன்னம்பூஞ் கழிக்கானற்புணர்து ணையோடுடன் வாழும்
அன்னங்காள் அன்றில்காள் அகன்றும் போய் வருவீர்கள்
கன்னவில்தோட்சிறுத் தொண்டன் கணபதீச் சரமேய
இன்னமுதன் இணையடிக்கீழெனதல்லல் உரையீரே

—சிறுத்தொண்ட நாயனர்—321-2

சிறுத்தொண்டநாயனர்—இப் பாடலில் அமையும் தன்னை நாயகியாகவும் இறைவனை நாயகனுகவும் கூறும் திறனும், இயற்கை வருணனையும் எண்ணத் தக்கன.

‘பாணன்இசை பத்திமையாற் பாடுதலும் பரிந்தளித்துன்’ 62-9

—திரு நீலகண்ட யாழ்ப்பாண நாயனர்

கடிமண மல்கி நாளும்கம ழும் பொழிற் சாத்தமங்கை
அடிகள் நக் கன்பரவவய வந்தி யமர்ந்தவனே

—திரு நீல நக்க நாயனர்—316-2.

தாவியவ னுடைனிருந்துங் காணுத தற்பரனை
ஆவிதனி லஞ்சொடுக்கி யங்கணென் றுதரிக்கும்
நாவியல்சீர் நமிநந்தியடிகளுக்கு நல்குமவன்
கோவியலும் பூவெழுகோற் கோளிலியெம் பெருமானே

—நமிநந்தியடிகள் நாயனர்—62-6

நின்றசீர் நெடுமாறபாண்டியன்—309 ஆம் பதிகம்

மங்கையர்க் கரசி வளவர்கோன் பாவை வரிவளைக் கைம்மட மானி
பங்கயச் செல்வி பாண்டிமா தேவி பணிசெய்து நாடொறும் பரவப்
பொங்கழ லுருவன் பூதநா யகன்நால் வேதமும் பொருள்களும்

—அருளி

அங்கயற்கண்ணி தன்னெடு மமர்ந்த ஆலவா யாவது மிதுவே

—378.1

—மங்கையர்க்கரசி நாயனர்

தொண்டர் தண்கய மூழ்கித்
துணையலுஞ் சாந்தமும் புகையும்
கொண்டு கொண்டடி பரவிக்
குறிப்பறி முருகன்செய் கோலம்
கண்டு கண்டுகண் குளிரக்
களிபரந் தொளிமல்கு கள்ளார்
வண்டு பண்செயும் புகலூர்
வர்த்தமா னீச்சரத் தாரே. — (முருகநாயனார்)—228-3.

இந்நாயன்மாருள் சிலர் சம்பந்தர் காலத்தில் வாழ்ந்தவர். திருச்செங்காட்டங்குடிப் பரஞ்சோதியார் என்ற சிறுத்தொண்டநாயனுர் வாழ்ந்த காலத்தில் ஞானசம்பந்தர் வாழ்ந்தார் என்பது வெள்ளிடைமலை. சிறுத்தொண்டர் பரஞ்சோதியாய் இருந்த காலத்து நரசிம்மவர்ம பல்லவனிடம் தானைத் தலைவராயிருந்து வாதாபியை அழித்தமையை வரலாறு கூறும். அதனுல் இலக்கிய வரலாற்றிலும் தமிழக வரலாற்றிலும் தெளிவாக வரையறுக்கப்பட்ட காலம் *(கி. பி. 609-642)*

அவர் காலத்திற்குப் பின்பு வாழ்ந்த சுந்தரர் ஞானசம்பந்தரைப் பற்றிக் கூறும் பாடலோடு இக்கட்டுரையை நிறைவு செய்வோம்.

நாளும் இன்னிசை யால்தமிழ் பரப்பும்
ஞான சம்பந்த னுக்குஉல கவர்முன்
தாளம் ஈந்துஅவன் பாடலுக் கிரங்குந்
தன்மை யாளனை என்மனக் கருத்தை
ஆளும் பூதங்கள் பாடநின் றாடும்
அங்க ணன்றனை என்கண மிறைஞ்சுங்
கோளி லிப்பெருங் கோயிலு ளாளனைக்
கோலக் காவினிற் கண்டுகொண் டேனே. —சுந்தரர்

முதல் மூன்று திருமுறைகள் பற்றிய நூல்களும்
கட்டுரைகளும்—பயன்பட்டவை

**நூல்கள் :**

1. திருஞான சம்பந்த சுவாமிகள் அருளிச்செய்த தேவாரத் திருப்பதிகங்கள்—முதல் திருமுறை—தருமபுர ஆதீனம், 1953
2. திருஞானசம்பந்த சுவாமிகள் அருளிச்செய்த தேவாரத் திருப்பதிகங்கள்—இரண்டாவது திருமுறை ...... 1955.

3. திருஞானசம்பந்த சுவாமிகள் அருளிச்செய்த தேவா்ரத் திருப்பதிகங்கள்—மூன்ருவது திருமுறை ...... 1954.

4. திருஞானசம்பந்த சுவாமிகள் தேவாரம் — தலமுறை — திருப்பனந்தாள் வெளியீடு, 1961.

5. திருஞானசம்பந்த சுவாமிகள் அருளிச்செய்த தேவாரப் பதிகங்கள் — திருமுறை — க. உ ங. சதாசிவ செட்டியார், சைவசித்தாந்தக் கழகம், 1927.

6. பன்னிரு திருமுறை வரலாறு — முதற் பகுதி, வித்துவான் க. வெள்ளைவாரணன் — அண்ணமலைப் பல்கலைக் கழகம், 1962.

7. பன்னிரு திருமுறைப் பெருந்திரட்டு — சைவசித்தாந்தக் கழகம், 1961.

8. தேவார ஒளிநெறி—சம்பந்தர்—முதல் தொகுதி, 1946, 1963, மறுபதிப்பு.

9. தேவார ஒளிநெறி—சம்பந்தர்—இரண்டாம் தொகுதி, 1950, 1963 மறுபதிப்பு.

10. தேவார ஒளிநெறி—சம்பந்தர்—மூன்ரும் தொகுதி, 1954. —வ. சு. செங்கல்வராயப் பிள்ளை—சைவசித்தாந்தக் கழகம்.

11. சைவ இலக்கிய வரலாறு — ஒளவை. சு. துரைசாமிப் பிள்ளை—அண்ணமலைப் பல்கலைக் கழகம், 1958.

12. சம்பந்தரும் சமணரும் — தெ. பொ. மீனுட்சிசுந்தரனர் —ருத்திரா பதிப்பகம், 1958.

13. உள்ளங் கவர் கள்வன்—கி. வா. ஜகந்நாதன் - 1953.

14. பின்னு செஞ்சடை — ,, - 1953.

15. சிற்றம்பலம் — ,, - 1953.

16. தேவாரத் திருப்பதிகத் திரட்டு—ப. இராமநாத பிள்ளை —கழக வெளியீடு, 1964.

17. தேவாரம் — அடங்கன் முறை — முதல்பாகம் — மயிலை இளமுருகனர் பதிப்பு 1953.

18. மூவர்தமிழ் — சொ. சிங்காரவேலன் — மணிவாசகர் நூலகம் 1966.

19. திருத்தொண்டர் புராணம் என்னும் பெரியபுராணம் — நான்காம் பகுதி — சி. கே. சுப்பிரமணிய முதலியார் உரை 1949.

20. ,, ,, ,,

21. பெரியபுரண ஆராய்ச்சி—டாக்டர் மா. இராசமாணிக்கனர்— 1960.

22. இலக்கிய ஆராய்ச்சியும் கல்வெட்டுக்களும் — தி.வை. சதாசிவப் பண்டாரத்தார்—1961.

23. சைவசமயச் சொற்பொழிவுகள் — சைவசித்தாந்த மகா சமாசம், சென்னை—1959.

24. சைவ நன்னெறி—அ. திருமலைமுத்துசாமி—1961.

25. இயேசு ஞானசம்பந்தர்....கா. வேலாயுதம்—1962.

26. திருவாசகம்—பதிப்பு- நீ. கந்தசாமிப்பிள்ளை—அண்ணமலைப் பல்கலைக்கழகம்—1964

27. மூவர் தேவாரம் — தலமுறை — ஸ்ரீ குமரகுருபரன் சங்கம் ...ஸ்ரீவைகுண்டம்—1968.

28. திருஞானசம்பந்த சுவாமிகள் வரலாறு—தருமையாதீனம்—1960

29. சைவ சமய வளர்ச்சி — டாக்டர் மா. இராசமாணிக்கனர், ஔவை நூலகம், சென்னை.

செந்தமிழ்ச் செல்வி :

சிலம்பு — 2.

திருஞானசம்பந்தர் தேவாரம்—இயற்கைப் பொருளழகு — கா.சு. பிள்ளை, பக்கம் 146, 189, 233, 291, 321, 371.

சிலம்பு 4 :

ஆளுடைய பிள்ளையார் — ந. மு. வேங்கடசாமி நாட்டார், பக்கம் 433, 483, 529,

சிலம்பு 5 :

ஆளுடைய பிள்ளையார் அற்புதத் திருநாட்கள் — முத்துத் தாண்டவராய பிள்ளை — பக்கம் 134.

சிலம்பு 6 :

1. சம்பந்தரும் சமணரும் — இளவழகனர் — பக்கம் 419.
2. திருஞானசம்பந்த அடிகள் திருமுலைப்பாலுண்ட உண்மை —நெல்லையப்ப பிள்ளையவர்கள் — பக்கம் 355.
3. திருஞானசம்பந்த அடிகள் மண்ணுலகில் பிறந்த உண்மை — நெல்லையப்ப பிள்ளையவர்கள்—பக்கம் 402

சிலம்பு :- 23 :

சம்பந்தர் தேவாரம் — செங்கல்வராய பிள்ளை — பக்கம் 141.

# 2

# நான்கு, ஐந்து, ஆறும் திருமுறைகள்

## திருநாவுக்கரசர் தேவாரம்

செஞ்சொற்கொண்டல், வித்துவான்
**சொ. சிங்கார வேலன், எம்.ஏ.,**
பெருஞ்சான்றிதழ் — மொழியியல்.

### *1. பாடல் எண்ணிக்கை :*

திருநாவுக்கரசர் தேவாரம் மூன்று திருமுறைகளாகப் பிரிக்கப்பட்டிருக்கின்றது; திருமுறை வரிசையில் அவை நான்கு, ஐந்து, ஆறும் திருமுறைகளாக அமைந்துள்ளன. மொத்தப் பாடல் எண்ணிக்கை 3066 ஆகும்; 312 பதிகங்களாக இவை அமைந்துள்ளன. நான்காம் திருமுறையில் 113 பதிகங்களும், ஐந்தாம் திருமுறையில் 100 பதிகங்களும், ஆறும் திருமுறையில் 99 பதிகங்களும் என இவை தொகுக்கப் பெற்றுள்ளன.[1] திருமுறை கண்ட புராணம், 'ஒரு நாற்பத் தொன்பதிஞயிரமதாகப் பெருநாமப் புகலூரிற் பதிகங்கூறி' என்கின்றது;[2] பதிகம் என்பது பாடலேயா, பத்துப்பாடல் தொகுப்பையா, எதனைக் குறித்துப் பண்டு வழங்கியது என்று தெளிவு ஆகுமானல் இதனை இனிது விளங்கிக் கொள்ளலாம். 'இணைகொள் ஏழெழு நூறிரும் பனுவல், ஈன்றவன் திருநாவினுக் கரையன்' என்பது சுந்தரர் திருப்பாட்டு.[3] 'பனுவல்'

---

1. திருநாவுக்கரசர் தேவாரப் பதிகங்கள் — சைவ சித்தாந்த மகா சமாசப் பதிப்பு — 1941 (மூன்றும் பதிப்பு); இக்கட்டுரையிற் காட்டப்பெறும் அப்பர் தேவாரப் பாடல் எண்கள் முழுமையும் இப்பதிப்பை ஒட்டியனவே.
2. திருமுறை கண்ட புராணம் — பா 15
3. சுந்தரர் தேவாரப்பதிகங்கள் — தருமையாதினப் பதிப்பு —

முற்குறிப்பிடப்பட்ட 'பதிகத்'துடன் ஒப்பிடத்தக்கது. 'பதியம் ஏழெழு நூறும் அன்று சிறப்பித்து அஞ் சொற்றிருப் பதிகம் அருள் செய்தார்' என்பர் சேக்கிழார்;[4] 4900 பதிகங்கள்-49000 பாடல்கள் என்ற தொகை மிகப் பெரிதாகத் தோன்றுகின்றது; அடிகளார் அத்துணைப் பாட்டுக்களைப் பாடியிருக்கக் கூடும் என்று கொண்டால், தில்லைப் பொன்னம்பலத்தும் புறத்துள்ள அறையில் கரையானுக்கு இரையானது போக எஞ்சியனவே இன்று கிடைத்துள்ளவை என்று கொள்ளலாம். நம்பியாண்டார் நம்பிகளும் "பதிகம் ஏழெழு நூறு பகருமா கவியோகி" என்று பாராட்டுவர்.[5] சேக்கிழார்க்கு முன்பே பல்வேறு பதிகங்கள் மறைந்திருக்கக் கூடும்; ஆதலின் இது பற்றி அப்பெருந்தகையார் கருத்துத் தெரிவித்திலர். கயப் பாக்கம் சதாசிவச்செட்டியார் நான்காம் திருமுறை 92ம் பதிகத்தை இரண்டாகக் கொண்டு, பதிக எண்ணிக் கையை 313 எனக் கணக்கிட்டுள்ளனர்; பிற பதிப்புக்கள் 312 என்றே கொண்டன.

அடிகளார் திருவாக்கில், பதிகத்திற்குப் பதிகம் பாடல் தொகை எண்ணிக்கையில் வேறுபாடுகள் பல காணப் பெறுகின்றன.

**2. தேவாரம்-சொற்பொருள் :**

'தேவாரம்' என்ற சொல்லின் பொருளைக் கொள்ளு வதில் சில கருத்து வேறுபாடுகள் உள்ளன. இதனைத் தேவாரம் என்று பிரித்துக் கொள்ளுவாரும், தே ஆரம் என்று பிரித்துக் கொள்வாரும் ஆக இருசாரார் உள்ளனர். தே வாரம் என்று பிரிப்போர் கூறும் பொருள்களாவன: (அ) தேவினிடத்து வாரத்தை (அன்பை) விளைவிப்பது. (அஃதாவது சிவபிரானிடத்து அதனை ஓதுவோர்க்கும் கேட் போர்க்கும் அன்பை உண்டுபண்ணுவது).

(ஆ) தெய்வத்தன்மை பொருந்திய வாரமாயுள்ளது. (வாரம் இசையின் இயக்கம் நான்கினுள் ஒன்று; 'வாரம்

---

4. திருத்தொண்டர் புராணம் — ஏயர்கோன் — 150
5. பதினோராம் திருமுறை — திருநாவுக்கரசர் திருவேகா தசமாலை — .

பாடும் தோரிய மடந்தை' என்ற இளங்கோவடிகள் திரு வாக்கும், அதற்கமைந்த அடியார்க்கு நல்லார் உரைக் குறிப்புக்களும் ஒப்பிடத்தக்கன).

(இ) சிவபிரானிடத்தும் தன்னிடத்தும் தன்னை ஓது வோரிடத்தும் இன்பை விளைவிப்பது. (அதனிடத்தும் அதனையோதும் அன்பர்களிடத்தும் சிவபிரான் 'வாரம்' உடையராவர் என்பது). தே ஆரம் என்று பிரிப்போர் 'சிவபிரானுக்கு ஆரம்போல அழகு செய்வது' என்று பொருள் கொள்வர். யாழ்ப்பாணத்து வண்ணைநகர்ச் சுவாமிநாத பண்டிதருடைய அடங்கன் முறைப் பதிப்பில் இக்குறிப்புக்கள் காணப்பெறுகின்றன.[6]

### 2. 1 தேவாரம் சொல்லாட்சி

தேவாரம் என்ற சொல்லால் மூவர் திருவாக்கினையும் குறிக்கும் முறை பல நூற்றாண்டுகள் இருந்து வந்தது; அதன்பிறகு, திருநாவுக்கரசருடைய திருவாக்கினை மட்டும் 'தேவாரம்' என்ற சொல்லாலும், சுந்தரரது திருவாக் கினைத் 'திருப்பாட்டு' என்ற சொல்லாலும் குறிக்கும் வழக்கு வந்தது; சிவப்பிரகாசப் பெருந்திரட்டில் வரும் இவ்வழக்கினை எடுத்துக்கூறி, இவ்வழக்கினை வெளிப் படுத்திய திறம், டாக்டர் மொ. அ. துரையரங்கனாரவர் கட்குரியதாகும். வழிபாடு செய்யும் இடத்திற்குத் 'தே வாரம்' என்ற சொல்லை ஆளும் நிலையும் உள்ளது என்பது, 'தேவாரத்துச் சுற்றுக் கல்லூரி' என்ற கல்வெட்டுத் தொடரால் விளங்குவதனையும் அப்பேரறிஞர் சுட்டியுள் ளனர்.[7]

### 2. 2 உள்ளம் உருக்கும் உயர்திறன்

அப்பரடிகளார் திருவாக்கிற்கு மட்டுமே 'தேவாரம்' என்ற வழக்கு இருந்தமையை எண்ணுமிடத்து ஓர் உண்மை புலனாகின்றது. உள்ளத்தை உருக்கி இறைவன்

---

6. தேவார அடங்கன்முறை — யாழ்ப்பாணத்து வண்ணை நகர்ச் சுவாமிநாத பண்டிதர் பதிப்பு (1911) முகவுரை.
7. The Religion and Philosophy of Tevaram — Dr. M. A. Doraiarangaswany — University of Madras.

திருவடிகட்கு வாரத்தை (அன்பை) விளைவிப்பதில் அடிகளார் பாடல்கட்கிருந்த தனித்திறம் அக்கால மாந்தரால் அநுபவித்து உணரப்பட்டது என்பதே அது. ஆம்; தெளிந்த, தேர்ந்த, இனிய, பொருளாழமிக்க, ஒலிநய சான்ற சொற்களால் எளிய பாடலமைப்புக்களைக் கையாண்டு, ஓதுவோர் கேட்போர் உள்ளங்களை உருக்கிடும் தனிமாண்பு அடிகளார் திருப்பாட்டுகட்கு இயல்பாக அமைந்த ஒன்றாகும்.

'குலம்பொல்லேன் குணம்பொல்லேன் குறியும் பொல்லேன்
குற்றமே பெரிதுடையேன் கோல மாய
நலம்பொல்லேன் நான்பொல்லேன் ஞானி யல்லேன்
நல்லாரோ டிசைந்திலேன் நடுவே நின்ற
விலங்கல்லேன் விலங்கல்லா தொழிந்தே னல்லேன்
வெறுப்பனவும் மிகப்பெரிதும் பேச வல்லேன்
இலம்பொல்லேன் இரப்பதே ஈய மாட்டேன்
என்செய்வோன் தோன்றினேன் ஏழை யேனே!'

"அத்தாவுன் அடியேனை அன்பால் ஆர்த்தாய்
அருள்நோக்கில் தீர்த்தநீராட்டிக் கொண்டாய்
எத்தனையும் அரியைநீ எளியை யானாய்
எனையாண்டு கொண்டிரங்கி யேன்று கொண்டாய்
பித்தனேன் பேதையேன் பேயேன் நாயேன்
பிழைத்தனகள் எத்தனையும் பொறுத்தா யன்றே
இத்தனையும் எம்பரமோ ஐய, ஐயோ!
எம்பெருமான் திருக்கருணை இருந்த வாறே"

என்பன[8] முதலிய அடிகளார் திருப்பாட்டுக்கள் கல் மனத்தையும் கனிவிக்கும் உருக்கச் சிறப்புடையன. ஓதுவோர் உள்ளத்தே, தம்முடைய உயிரின் சிறுமையையும், பேரருளாளனாக விளங்கும் இறைவன் திருக்கருணையையும் ஒப்பிட்டு உணரும் உணர்வை நல்கி, கனியவைக்கும் திறம் உடையன. இத்தகைய உருக்குகின்ற திறமே 'தேவாரம்' என்ற தனிச் சிறப்பிற்குரியவையாய் அடிகளார் திருவாக்குக்களை மட்டுமே எண்ணுதற்குத் துணை நின்றது என்று எண்ணுவது தவறாகாது.

### 2. 3 இடைக்கால இயல்பினை அறிய இனிய துணை :

அடிகளாருடைய திருப்பாட்டுக்களில் காணப்பெறும் இலக்கண மாண்புகள் பல. பெயர்ச் சொற்கள், வினைச்

8. திருநாவுக்கரசர் தேவாரம் — 6—95 — 8 ; 7

சொற்கள், பெயரெச்ச அமைப்பு, வினைச்சொல் அமைப்பு, துணைவினை அமைப்பு, வேற்றுமை உருபுகள் ஆக்கம், சாரியைகள் ஆக்கம், முதலிய அனைத்து இலக்கணக் கூறு களிலும் தமக்கென ஒரு தனிப்போக்கை அடிகளார் பாடல்கள் பெற்று நிற்கின்றன. இவற்றைத் தனியே ஆய்ந்து வெளிப்படுத்த வேண்டும் என்னும் விழைவு தமிழ் அறிஞர் உள்ளத்தே எழுந்ததில் வியப்பு இல்லை. இவற்றை ஆய்வது, இடைக்காலத் தமிழின் (கி. பி. 6, 7ஆம் நூற்றாண்டுகள்) மாற்றங்களைக் கூர்ந்து நோக்கிடத் துணை புரிவதுடன், சங்க இலக்கியங்களுக்குப் பிற்காலத்தே செந்தமிழின்கண் விளைந்த மாற்றங்களை நன்கறிந்திட வாய்ப்பாகும் என்பது தெளிவு.

### 3. இலக்கியத் திறன்:

### 3. 1 சொல்லாட்சிச் சிறப்பு:

அடிகளாரின் சொல்லாட்சிச் சிறப்பு முதற்கண் நோக் கத்தக்கது ஆகும். பெயர் தெரியாப் புலவர் ஒருவர் பாடிய பழம்பாடல் ஒன்று, அருணகிரி 'வாக்கிற்' சிறந் தவர் என்றும்' வாதவூரர் 'கனிவிற்' சிறந்தவர் என்றும், திருஞானசம்பந்தர் 'தாக்கிற்' (தாளக்கட்டோடு கூடிய பாவகையில்) சிறந்தவர் என்றும். சுந்தரர் 'நயத்திற்' சிறந்தவர் என்றும், அப்பரடிகளார் 'சொற்குறுதி'யிற் சிறந்தவர் என்றும் தெரிவிக்கின்றது. இப்பாடலை இயற்றி யவர் திறனாய்வுப் பண்புகள் மிக்கவர் என்பதிற் சிறிதும் ஐயம் இல்லை; ஏனெனில், தாம் இன்புற்ற தமிழ்க் கவிதைகளில், காணப்பெறும் தனிச்சிறப்புக்களை எளிதில் இனம் பிரித்துக்காட்டக்கூடிய விழுமிய போக்கு இப்ப பாடலாசிரியர்க்கு இருந்தமை தெளிவு.

திறனாய்வாளனுக்குக் கைவிளக்கும், செங்கோலும் சின்னங்களாகக் கொள்ளத்தக்கன என்பர்.[9] ஏனெனில், திறனாய்வாளன் இருளகற்றும் கைவிளக்குப்போல், மூல

---

9. "The torch rather than the sceptre would be my symbol for the critic, Elucidation or illumination, is the critic's primary task I conceive it" — Helen Gardner — "The Business of Criticism"—Oxford (1962) — p. 14.

ஆசிரியனின் கருத்துக்களுக்கு விளக்கம் தந்து வெளிப் படுத்துகின்ருன். தான் செங்கோல் ஏந்தும் அரசன் போல் நடுநிலேமை தவருது தன் கருத்தைக் கூறுகின்ருன். ஓரிடத்தில் சான்சன் குறிப்பிட்டது போல், உழைப்பிற்கும் உண்மைக்கும் பிறக்கும் முதல்மகள் திறனுய்வு என்பாள்; அறிவு மனேயில், நீதி என்னும் செவிலித்தாயால் வளர்க்கப் பெறுபவள் ஆவள்.[10]

திறனுய்வாளன் தான் காணும் நல்லியல்புகளே எடுத் துரைத்து, தான்பெற்ற இன்பத்தைப் பிறர்க்கும் எடுத்து வழங்கும் பெருங்கருணே வள்ளலாகப் பிறங்குகின்ருன். அடிகளார் கவிதைகளில், தலேசிறந்து விளங்குவதாகிய 'தேர்ந்த சொல்லாட்சி' (Poetic Diction) யை இனம் பிரித் துணர்த்திய இப்பழம் பாடலாசிரியர் இவ்வகையில் ஒரு தலேசிறந்த திறனுய்வாளராவர். அவர் கூறுவது முற்றிலும் உண்மை என்பதனே அடிகளார் திருப்பாட்டிற் காணப் பெறும் சொற்களின் உறுதிப்பாட்டைக் கூர்ந்து நோக்கு வோர் இனிது உணர்வர்.

### 3. 2 அருஞ்சொற்கள் :

அருஞ்சொற்கள் எண்ணற்றவை அடிகளார் திருவாக் கிற் காணப்பெறுகின்றன. அகம்படி, அரட்டு, அருக்கம், அல்லகண்டம், ஆமனம், இடைக்கலம், இரண்டாட்டம், இறுவாய், எழுவாய், என்னன், ஏமாப்பு, ஏழி, ஓரோதம், ஓலக்கச் சூளேகள், கரோடி, களேபரம், காறை, கும்மலி, குமண்டை, கொண்டி, கொய், கொன்னே, சங்காத்தி, சூட்சியம், தங்கன், தடுகுட்டம், தமிழன், துச்சு, தொட்டிமை (தோட்டிமை), நிதனம், நோதங்கம், பப்பு, பரமாணு, பரமா காசம், பாவன், பாழிமை, புரோதாயம், மருக்கம், மன்றி, மாத்தன், முனகு, மூவன், மேகாசம், மோழைமை, வட்டணேகள், வசி, வரிமுரி, வெள்ளடை, வேளி முதலிய சொற்களே அடிகளார் திருவாக்கிற் கண்டு இன்புறலாம். அடிகளாருடைய சொற்கோவை ஆழ்ந்த நோக்கற்குரியது. தேர்ந்த தமிழ்ச்சொற்களே அடிகளாரால் கையாளப் பெற் றுள்ளன.

---

10. Ibid. p.12

'தமிழ்மொழித் தலைவர்', 'கோதில் மொழிக் கொற்றவனார்', 'தமிழாளியார்', முதலிய இனிய தொடர்கள் சேக்கிழாரால் அப்பரடிகளைக் குறிக்கக் கையாளப் பெற்றுள்ளன. பழுத்த தமிழ்ப்புலமை வாய்ந்த பெரும்புலவர் அடிகளார்; அதனுடன் சமண சமயம் தலைப்பட்டு அச்சமய நூல்கள்—வடமொழி, பாலி நூல்கள் அனைத்தையும் நன்றாக ஆராய்ந்த அயல்மொழி அறிவும் வாய்ந்தவர். வேதாகமங்களில் ஆழ்ந்த புலமையும் அடிகளார்க்கு இருந்தது. அடிகளாரின் திருப்பாட்டுக்கள் அனைத்திலும் உள்ள சொற்களை வேறு பிரித்து ஆராய்ந்து நோக்கி, ஒரு பேரகராதி ஆக்கிய அநுபவமே இவ்வாறு முடிவுக்கு வரச் செய்தது.

**3. 3 வடசொற்கள் அமைப்பு :**

அடிகளாருடைய 3066 பாடல்களிலும் காணப்பெறும் வடசொற்களின் எண்ணிக்கை 893 மட்டுமே ஆகும். மொத்த எண்ணிக்கையின் அளவினை நோக்குங்கால் 29. 5% என்ற அளவிலேயே இது உள்ளமை தெளிவு. 20 சொற்கள் வடசொல் மூலம் உடையவையா அல்லவா என்ற ஐயத்திற்குரியவையாய் உள்ளன. 24 வினைப் பகுதிகள் வடசொல் அடியாக உள்ளவை.[11] இவ்வட சொற்களைக் கையாளும்போதும் தமிழாக்க விதி மரபின் படியே அடிகளார் பாடியுள்ளார் என்பது அறிந்து மகிழ்தற்குரியதாகும்.

"வடசொற் கிளவி வடவெழுத் தொரீஇ
எழுத்தொடு புணர்ந்த சொல்லா கும்மே"

என்றும்,

"சிதைந்தன வரினும் இயைந்தன வரையார்"

என்றும் தொல்காப்பியர் வகுத்த மரபிற்கு மாறுபட்டு அடிகளார் ஓரிடத்தேனும் உரைத்தாரல்லர்.[12] இந்நெறி,

11. See for more details — Chapter VII — Part II — "A Linguistic and critical study of Appar Tevaram (Hymns) — C. Singaravelan (Ph.D. Thesis submitted to Annamalai University) 1972.

12. தொல்காப்பியம் — மூலம் (கழகப்பதிப்பு—1943) — 884, 885 நூற்பாக்கள்.

இக்காலத் தமிழ் உலகிற் சிலரால் மேற்கொள்ளப்பட வேண்டிய ஒன்றாகும். அயல்மொழிச் சொற்களை அப்படியே எடுத்து வழங்குதல் வேண்டும்; அவற்றின் ஒலிகளை மாற்றலாகாது என்பார் அடிகளாருடைய வழியைப் பின் பற்றுதல் வேண்டத்தக்கது. 'மொழித்தூய்மை' அடிகளார் விழைந்த ஒன்று என்பதனையும், தேவைப்பட்டபோது கடன் வாங்கிடல் தவறாகாது என்பதனையும் இவ்விடத்துக் குறிப்பிடல் வேண்டும்.

### 3.4 வடநூற் கருத்துக்கள் அமைப்பு:

யசுர் வேதத்தின் இடையே உள்ள திருவுருத்திரத்தின் (ஸ்ரீருத்ரம்) கருத்துக்களை அடிகளாரின் நின்ற திருத் தாண்டகத்திற் காணலாம். பதினோரனுவாகங்களையும், நூற்றறுபத்தொன்பது மந்திரங்களையும் கொண்ட திருவு ருத்திரத்தில் கூறப்பட்டபடியே சிவபிரானுடைய எண் வகை நிலைகளை (அஷ்ட மூர்த்தம்) அடிகளார் இப்பதி கத்தில் எடுத்து ஓதியுள்ளார். அடிகளார் திருவாக்கில் சிறப்பாகக் குறிக்கத்தக்கது இச்செய்தி ஆதலின், இதன் இன்றியமையாமையைப் பேரறிஞர்கள் புலப்படுத்தி யுள்ளனர். சிவஞான போத மாபாடியத்தில், மாதவச் சிவஞான முனிவர், திருவுருத்திரம் — நின்ற திருத் தாண்டகக் கருத்தொப்புமையைக் குறித்துள்ளனர். இலிங்கபுராணம், தசபுராணங்கள் — கருத்துக்களும் அடி களார் பாடிய திருக்குறுந்தொகைப் பதிகங்களிற் காணப் பெறுகின்றன.

### 3.5 முன்னிலைப் பரவல் முறை அமைப்பு:

முன்னிலைப்பரவல், படர்க்கைப் பரவல் என்னும் இரு வேறு வழிபாட்டு முறைகளிலும் அடிகளார் திருப் பாட்டுக்கள் அமைந்திருக்கின்றன. எனினும் முன்னிலைப் பரவல் முறை அடிகளார் திருவாக்கில் மிகக் குறைந்து காணப்பெறுவது குறிப்பிடத்தக்கது. தொண்டு நெறி மேற்கொண்டவர் அடிகளார்; தொண்டர்கள் தம் தலைவர் களிடம் நேரே பலபடப் பேசுதற்குக் கூசுதல் உலகியலிற் காணப்பெறும். தம் தலைவர்களுடைய பொருள்சேர் புகழ்களைப் படர்க்கை முறையிற் பேசிப் புகழவே பெரிதும்

விரும்புவர். இதனுலேயே இங்கும் இந்நிலை உள்ளதோ என்று கருதலாம். முன்னிலைப் பரவல் முறை காணப்படும் மொத்தப் பாடல் எண்ணிக்கை 421 மட்டுமே. ஏறத்தாழ மொத்த எண்ணிக்கையை நோக்க நூற்றுக்குப் பதினன்கு (14%) விழுக்காடு என்ற மிகக்குறைந்த அளவிலேயே இஃது அமைந்துள்ளமையைக் கூர்ந்து நோக்கி உணர முடிகின்றது.[13]

### 3. 6 உவமையும் உருவகமும் — இலக்கிய அழகுகள் :

அடிகளார் திருவாக்கில் அழகுகள் பலவும் உள்ளன. அணிநலம் நிரம்பிய பகுதிகள் காணப்பெறுகின்றன. உவமை, உருவகம் ஆகிய இரண்டு அணிகளே அடிகளார் திருவாக்கிற் பயின்று வருகின்றன.

274 உவமைகள் அடிகளார் வாக்கிற் காணப் பெற்ருலும், நான்காம் திருமுறையில் மிகுதியாகவும், ஐந்தாம் திருமுறையில் அதனினும் குறைவாகவும், ஆறும் திருமுறையில் அதனினும் மிகக் குறைவாகவும் உள்ளன. பின்வரும் அட்டவணை இக்கருத்தைத் தெளிவுற விளக்கும்:

| திருமுறை | பாடல்களின் எண்ணிக்கை | மொத்த உவமைகள் | நூற்றுக்கு (விழுக்காடு) |
|---|---|---|---|
| 4 | 1070 | 111 | 10.3% |
| 5 | 1015 | 85 | 8·3% |
| 6 | 981 | 78 | 8% |
| | 3066 | 274 | |

13. திருநாவுக்கரசர் தேவாரத் திருப்பதிகங்களில் முன்னிலைப் பரவல் முறை காணப்பெறும் முழுப்பதிகங்கள் 31 மட்டுமே. ஏனைய பதிகங்களில் சிற்சில பாடல்களே முன்னிலைப் படர்க்கைப் பரவலாக அமைவதும் உண்டு ; 4—37 (364ம் பாடல், 4—41 (404ம் பாடல்) 5—134 (1284ம் பாடல்) 6—258 (2541ம் பாடல்) ஆகியவற்றை நோக்குக.

## முன்னிலைப் பரவல் — அமைப்பு

| திருமுறை | பதிக எண் | பாடல்கள் முதல்—வரை | எண்ணிக்கை |
|---|---|---|---|
| 4 | 1 | 1— 10 | 10 |
| | 20 | 198—207 | 10 |
| | 23 | 229—238 | 10 |
| | 26 | 259—268 | 10 |
| | 28 | 278—280 | 3 |
| | 37 | 364 | 1 |
| | 39 | 384—393 | 10 |
| | 41 | 404 | 1 |
| | 44 | 435 | 1 |
| | 51 | 488 497 | 10 |
| | 52 | 498—507 | 10 |
| | 54 | 518—526 | 9 |
| | 55 | 533 | 1 |
| | 57 | 548—557 | 10 |
| | 62 | 599—608 | 10 |
| | 63 | 609—618 | 10 |
| | 67 | 649--658 | 10 |
| | 69 | 669—677 | 9 |
| | 75 | 727, 728, 732, 733 | 4 |
| | 76 | 740—745 | 5 |
| | 77 | 746, 751 | 2 |
| | 81 | 787 | 1 |
| | 86 | 823, 824, 829 | 3 |
| | 87 | 833—842 | 10 |
| | 89 | 853—862 | 10 |
| | 94 | 918—920, 922 | 4 |
| | 95 | 923—932 | 10 |
| | 96 | 933--942 | 10 |
| | 97 | 943, 944 | 2 |
| | 99 | 956—965 | 10 |
| | 102 | 990 | 1 |
| | 103 | 993—996, 998—1001 | 8 |
| | 105 | 1010, 1011 | 2 |
| | 106 | 1013 | 1 |
| | 109 | 1028, 1029, 1030 | 3 |
| | 110 | 1031—1038 | 10 |

| திருமுறை | பதிக எண் | பாடல்கள் முதல்—வரை | எண்ணிக்கை |
|---|---|---|---|
| | 111 | 1039—1049 | 11 |
| | 112 | 1052, 1053, 1059 | 3 |
| | 113 | 1061, 1066 | 2 |
| 5 | 122 | 1155, 1158, 1160, 1162 | 5 |
| | 123 | 1163—1173 | 11 |
| | 126 | 1195—1204 | 10 |
| | 134 | 1284 | 1 |
| | 170 | 1642 | 1 |
| | 209 | 2016—2024 | 9 |
| 6 | 218 | 2129—2138 | 10 |
| | 238 | 2337, 2344, 2345 | 3 |
| | 245 | 2405—2414 | 10 |
| | 247 | 2425—2434 | 10 |
| | 251 | 2465—2475 | 11 |
| | 254 | 2493—2502 | 10 |
| | 257 | 2523—2532 | 10 |
| | 258 | 2541 | 1 |
| | 260 | 2554—2563 | 10 |
| | 268 | 2636—2646 | 11 |
| | 269 | 2647—2656 | 10 |
| | 270 | 2657—2665 | 9 |
| | 275 | 2705—2714 | 10 |
| | 308 | 3015, 3018, 3021, 3022 | 4 |
| | 310 | 3036—3040 | 5 |
| | 312 | 3057—3066 | 10 |
| | | | 421 |

உவமைச் சொற்கள் பலவற்றை அடிகளார் எடுத்தாள்வர். சிவபிரான் திருவுருவத்தின் பேரெழிலைத் தம்முடைய திருவுள்ளத்தில் கண்டு களிகூரும் அடிகள் அதனை ஒவ்வொரு நிலையிலும் கூறி மகிழ்வர்.

“ உயிராவண மிருந்துறு நோக்கி
உள்ளக் கிழியின் உருவெழுதி ”

என்பர் அடிகள்.[14] தம் உள்ளக்கிழியின் எழுதிய தெய்வ இருவினைப் பல்வேறு உவமைகளாலும் இலக்கிய அழகு ததும்ப எடுத்துரைப்பர் :

"கருமணிபோற் கண்டம்" என்று திருநீலகண்டத்தின் திறம்புகழ்வார் ; "அஞ்சனம் போலும் மிடற்றான்" என்றும் உரைப்பார்; "மை உலாவிய கண்டன்", "கார் ஒத்த மிடற்றர்", "மஞ்சடுத்த மணிநீலகண்டர்" என்றெல்லாம் நலம் ததும்ப நவில்வர்.[15] கரிய பொருள்களைக் காணும்போதெல்லாம் இராமபிரானின் நினைவு கொண்ட சீதையின் நிலையைக் கம்பர் தம் இராமகாதையில் அழகுற இசைப்பர்:[16]

"அரிய மஞ்சினோடு அஞ்சனம் முதலிவை யதிகம்
கரிய காண்டலும் கண்ணினீர் கடல்புகக் கலுழ்வாள்"

கரிய பொருள்கள் அடிகளார்க்குச் சிவபிரானின் திருக் கழுத்தையே நினைவூட்டும் திறம் இங்குக் காண்கின்றோம்.

"ஊழித்தீ யன்ன ஒளி"

"எரிகின்ற இளஞாயிறன்ன மேனி"

"தூக்கமலத்தன்ன வடிவின் இணையடியே"

"முளை ஞாயிறன்ன மலர்க்கண்கள்"

"ஏரி நிறைந்தனைய செல்வன்"

"கங்குலிற் கறுத்த கண்டன்"

"கட்டித் தேன் கலந்தன்ன கெடில வீரட்டனார்"

"அரவிந்தம் ஒக்கும் ஐயாறன் அடித்தலமே"

என்பன போன்ற உவமைகள் அருள்நலம் காட்டுவன.[17]

"கொப்புளே போலத் தோன்றி"

"உலையை ஏற்றித் தழலெரி மடுத்த நீரில்
திளைத்துநின் றாடுகின்ற ஆமைபோல் தெளிவிலாதேன்"

---

14. திருநாவுக்கரசர் தேவாரம் — 6-25-1.
15. Ibid — 6-286-1, 6-216-6, 5-192-7 ; 5-120-9, 6-266-7.
16. கம்பராமாயணம் —.காட்சிப்படலம் — பா. 8.
17. திருநாவுக்கரசர் தேவாரம் — 6-310-4, 6-310-2, 4-100-1, 6-288-6, 6-236-5, 4-64-2, 5-167-1, 4-92-18.

"மத்தார் தயிர்போல் மறுகுமென் சிந்தை"

"மோத்தையைக் கண்ட காக்கை போல
வல்வினைகள் மொய்த்து"

என்பன போன்ற உவமைகளால் தம்முடைய சிறுமை, வினைத்துன்பம், அவலம் முதலியவற்றை இனிது விளக்குவர்.[18]

கிணற்ருமை கடலாமை ஒன்றைக் கண்டு, 'இந்தக் கிணற்றைப் போன்றதோ கடல் என்று கேட்டல் போல் தேவதேவனுகிய சிவன் பெருந்தன்மையைப் பாவகாரிகள் ஐயுறுவர் என்ற உவமையும், கோடி தீர்த்தங்களிற் கலந்து குளித்து ஆடினுலும் அரனடிக்கு அன்பு இல்லாதவர் செயல், ஓட்டைக்குடம் ஒன்றில் நீரை ஊற்றி மூடிவைத்தவர் செயல் போன்றது என்ற உவமையும், கருதி இன்புறும் கற்பனை நலம் பொதிந்தவை. இங்ஙனமே, இறைவன் இணையடி நீழலிற்கு மாசில்லாத வீணை, மாலை மதியம், வீசு தென்றல், இளவேனில், மூசு வண்டின் பொய்கையை இணைத்துக் கூறிய கவியழகு பொதிந்த உவமைகளைக் கருத்துலகம் மறந்திடவியலாது.[19]

அடிகளாரின் உருவகங்கள் தனிச்சிறப்புடையவை. ஐம்புலன் தொல்லைகளுக்குட்பட்ட தம் நிலைக்கு அடிகளார் நெஞ்சுருகித் தரும் உருவக அமைப்புக்கள் படிப்போர் நெஞ்சங்களையும் உருக்குவன.

'அழிவுடைத்தாய வாழ்க்கை ஐவரால் அலைக்கப்பட்ட உப்பங்கழியிடத்துத் தோணி'யாகத் தம்மைக் கூறி உருகுவார்;[20] 'உறுகயிறூசல் பற்றி ஒன்றுவிட்டு ஒன்று பற்றி, மறுகயிறூசல் போல வந்துலவும் நெஞ்சம், பெறுகயிறூசல் போலப் பிறை புல்கு சடையான் பாதத்து அறுகயிறூசல் ஆனேன்' என்று கூறுவார்.[21] 'உடலெனும் இடிஞ்சில் (அகல்) தன்னுள் நெய்யமர் திரியும் ஆகி

18. Ibid, 4-79-2, 4-79-6, 4-96-3, 4-75-7.
19. Ibid 5-100-5, 6-99-9, 6-90-1.
20. Ibid 4-31-6.
21. Ibid. 4-26-6

நெஞ்சத்துள் விளக்கும் ஆவர்' என்று பெருமான் புகழ் பேசிக் கனிவார்.[22] உடம்பினை அழகுபட உருவகம் செய்யும் பின்வரும் அழகிய பாடலை இலக்கிய உலகு மறக்கவியலாது.[23]

"கால்கொடுத்து இருகை யேற்றிக்
கழிநிரைத்து இறைச்சி மேய்ந்து
தோல்படுத்து உதிர நீராற்
சுவரெடுத்து, இரண்டு வாசல்
ஏல்வுடைத் தா அமைத்தங்கு
ஏழு சாலேகம் பண்ணி
மால் கொடுத் தாவி வைத்தார்
மாமறைக் காடனாரே."

உடம்பினை ஒரு வீடாக உருவகம் செய்து பாடும் அழகிய பாடல் இது. இறைவன் தந்த வீடுதான் இது. "இருகாற் குரம்பை இது நான் உடையது; இது பிரிந்தால் தருவாய் நின் திருவடிக் கீழ் ஓர் தலைமறைவு", "ஒண்ணுளே ஒன்பது வாசல் வைத்தாய், ஒக்க அடைக்கும் போதுணர மாட்டேன்" எனவும் பாடுவர் அடிகளார்.[24]

இறைவன் உறையும் திருக்கோயில் அடியவர் பண்பட்ட உள்ளமே என்பதை உரைத்து அறுதியிடும் இடங்கள் எண்ணற்றவை.[25]

"சகமலா தடிமை யில்லை
தாளலால் துணையும் இல்லை
நகமெலாம் தேயக் கையால்
நாண்மலர் தொழுது தூவி
முகமெலாம் கண்ணீர் மல்க
முன்பணிந் தேத்தும் தொண்டர்
அகமலாற் கோயில் இல்லை
ஐயன் ஐயாற னார்க்கே"

அடியவர் உள்ளத்தே இறைவன் கோயில் கொள்வான் எனினும் தம்முடைய உடலில் உள்ள ஐம்பொறித் துன்ப

---

22. Ibid. 4-29-2.
23. Ibid. 4-33-2
24. Ibid. 4-113-2; 6-99-1.
25. Ibid. 4-40-8.

அமைப்புக்கள் இறைவனை எண்ணி வழிபடற்குத் தடை யாவன என்று கூறிப் புலம்பும் இடங்களும் மிகப் பலவாகும்.[26]

"ஒரு முழம் உள்ள குட்டம்;
ஒன்பது துறை உடைத்தாய்
அரைமுழம் அதன் அகலம்;
அதனில் வாழ் முதலை ஐந்து;
பெருமுழை வாய்தல்"

"கறும்பி ஊர்வன ஐந்துள காயத்தில்
திறம்பி ஊர்வன மற்றும் பலவுள
குறும்பி ஊர்வதோர் கூட்டகத் திட்டெனை
எறும்பி யூரரன் செய்த இயற்கையே"

"துருத்தியாம் குரம்பை தன்னில்
தொண்ணூற்றுங் கறுவர் நின்று
விருத்திதான் தருக என்று
வேதனை பலவும் செய்ய"

"புழுப் பெய்த பண்டந் தன்னைப்
புறமொரு தோலால் மூடி
ஒழுக்கரு ஒன்பதுவாய்
ஒற்றுமை ஒன்றும் இல்லை"

"பொய்ம் மறித் தியற்றி வைத்துப்
புலால் கமழ் பண்டம் செய்து
பைம்மறித் தியற்றியன்ன
பாங்கிலாக் குரம்பை"

என்பன முதலாக வரும் எண்ணற்ற பாடல் வரிகள் இங்கு நோக்கத் தக்கன.

"கருவாகிக் குழம்பிருந்து, கலித்து, மூளை,
கருநரம்பும், வெள்ளெலும்பும் சேர்ந்தொன்றாகி
உருவாகிப் புறப்பட்டு இங்கு ஒருத்தி தன்னால்
வளர்க்கப்பட்டு, உயிராரும் கடைபோகாரால்"

என்ற திருப்பாடல், உயிரின் தோற்றத்தை உருவகப் படுத்தி அடிகளாரது அடிமன அவலத்தை உணர்த்து கிறது.[27]

26. Ibid. 4-44-2; 5-187-6, 4-25-4, 4-52-2, 4-67-8.
27. Ibid. 6-25-6.

“ கடலின் நஞ்சமுதுண்டவர் கைவிட்டால்
உடலினுர் கிடந்து ஊர் முனி பண்டமே ”

என்று உடலார் பெருமையை உணர்த்துவதும் உண்டு.[28]

உலகவாழ்வையும் இறை உணர்வின் இன்றியமை யாமையையும் பற்றி அழகிய திருப் பாட்டுக்கள் இரண்டை அடுத்து நோக்கலாம்; இவற்றை ‘உருவகப் பாட்டுக்கள்’ என்றே உரைத்துவிடலாம். முற்றும் அந்த அமைப்பு. ‘மனம் தோணி; மதி ஓடக்கோல்; சினம்தான் சரக்கு; கடலிலே மிதக்கிறது; காமம் என்ற பாறை மீது பட்டு அழியும் காலம் அறிய ஒண்ணுது; அப்போது, இறைவா! உன் நினைவு வேண்டும், என்பது ஒரு பாட்டு. ‘உண்மை யென்ற உழவு செய்; பக்தி விதையைத் தூவு; பொய்ம்மை யென்ற களையை நீக்கு; பொறை என்ற நீரைப் பாய்ச்சு; பயிர்வளர்ச்சியை நோக்கு; நற்பண்புகள் என்ற வேலி யைச் சுற்றிக்கட்டு; சிவகதி விளையுளைக் காணலாம்’ என்பது அடுத்த பாட்டு. இவை காலத்தை வென்றுநிற்கும் கவியழகுப் பெட்டகங்கள்; [29]

“மனமெனும் தோணி பற்றி
மதியெனும் கோலை யூன்றிச்
சினமெனும் சரக்கை ஏற்றிச்
செறிகடல் ஓடும் போது
மதனெனும் பாறை தாக்கி
மறியும் போதறிய வொண்ணுது;
உனை உனும் உணர்வை நல்காய்
ஒற்றியூ ருடைய கோவே ”

“மெய்ம்மையாம் உழவைச் செய்து
விருப்பெனும் வித்தை வித்திப்
பொய்ம்மையாம் களையை வாங்கிப்
பொறையெனும் நீரைப் பாய்ச்சித்
தம்மையும் நோக்கிக் கண்டு
தகவெனும் வேலி யிட்டுச்
செம்மையுள் நிற்ப ராகில்
சிவகதி விளையு மன்றே ”.

---

28. Ibid. 6-203-4.

29. Ibid. 4-46-2 ; 4-76-2.

இங்ஙனமே, உள்ளத்துக்குள் ஒரு விளக்கை ஏற்றி வைக்க வேண்டும் என்று உலகத்தார்க்கு அறிவுறுத்தும் திருப்பாட்டு ஒன்றும் அடிகளார் திருவாக்காக உள்ளது.[30] உடம்பு வீடு; உள்ளம் அகல்; உணர்வு நெய்; உயிரே திரி; ஞானமே பற்ற வைக்கும் தீ; அந்தப் பேரொளியில் இறைவன் திருவடி தரிசனம் கிடைக்கும் என்பார் அடிகளார்:

"உடம்பெனும் மனையகத்துள்
உள்ளமே தகளியாக
மடம்படும் உணர்நெய் யட்டி
உயிரெனுந் திரிமயக்கி
இடம்படும் ஞானத் தீயால்
எரிகொள இருந்து நோக்கில்,
கடம்பமர் காளை தாதை
கழலடி காணலாமே"

பாடல்களின் எளிய அமைப்பும், இனிய ஒலிநயமும், சொற் கோவைத் தூய்மையும், பக்திக்கனிவும் அடிகளாரது அழியாத்தன்மையைப் போன்றே நிலைபேறு உடையவை.

அம்மையப்பர் திருவுருவம் அடிகளார் திருவுள்ளத்தில் தோன்றுகின்றது. அப்பனது உடலிற் கிடந்த பாம்பைக் கண்டு அம்மையார் அஞ்சுகின்றாராம்; அம்மையாரை அழகான மயில் என்று அரவம் அஞ்சுகின்றதாம். சடை மீது கிடந்த பிறையோ ஏக்கமுற்றுள்ளதாம்; கெடிலவாணர் பூண்டுள்ள பிரம கபாலமோ பற்களைக் காட்டியபடி நகைக் கின்றதாம். இவ்வாறு அச்சம், ஏக்கம், நகைப்பு ஆகிய மூன்று உணர்வுகளைக் கொண்ட ஓர் அழகிய கற்பனையை அடிகளார் திருவாக்கிற் கண்டின்புறலாம் :

"கிடந்த பாம்பருகுகண் டரிவை பேதுறக்
கிடந்த பாம்பவளையோர் மயிலென் றையுறக்
கிடந்த நீர்ச் சடைமிசைப் பிறையும் ஏங்கவே
கிடந்துதான் நகுதலைக் கெடில வாணரே"[31]

30. Ibid. 4-75-4.

31. Ibid. 4-10. 8.

### 3.7. கவியழகும் நடை நலமும் :

இனி, கவிதை என்பது இத்தகைய அணிநலங்களைப் பெறுவதுடன் நின்றுவிடாது அன்றோ? 'நவில்தொறும் நூல்நயம் போலும்' என்று குறள் ஆசிரியர் கூறியபடி எண்ணி எண்ணி இன்புறத்தக்க கருத்தமைதியையும், வெளியீட்டையும் உடையதாக கவிதை இருக்கவேண்டும். அதனை ஓதுங்கால் அதில் ஈடுபட்டு உலகை மறக்கச் செய்திடும் திறம் அதில் அடங்கியிருத்தலும் வேண்டும். அதனை நடையழகு என்று ஒருவகையிற் கூறலாம்.

'கவிதை எந்தப் பொருளையும் இன்பமூட்டுவதாக மாற்றும் திறன் வாய்ந்தது; அழகை மிக அழகாக்கும் மாயம் உடையது அது', என்றும், 'கவிதை புதிய படைப் புக்களை உலகிற்கு வழங்குகின்றது; உலகிற் காணப் பெறும் பொருள்களையே மீளவும் படைக்கின்றது; தன்னைச் சுவைப்போனுக்கு மெய்ப்பாடுகளையும், விழுமிய உணர்வு களையும் கிளர்ந்தெழச் செய்கின்றது' என்றும் கவிஞர் பெருந்தகை செல்லி (Shelley) கூறும் கருத்துரைகள் இங்கு நினைவில் எழுகின்றன.[32] 'அடிகளார் இறைவனுடைய திருவருளநுபவத்தில் திளைத்தவர் மட்டும் அல்லர்; உலக மாந்தர்மாட்டுக் கருணைகொண்டு, வாழ்வை நெறிப்படுத்தி இறையருள் இன்னெறி காட்டும் பெருங்கருணையாளரும் ஆவர். ஆதலின் சுவை கெழுமிய கவிதைப் போக்கினைக் கையாண்டு அவ்வகையிலும் சுவைகாட்டி மனித மனத்தை யீர்க்கும் திறப்பாடுடையவராகத் திகழ்கின்றார். இந்த அடிப்படையே கவியழகு — நடைநயம் ததும்பும் இவரது அருட்பாட்டுக்களை நோக்கற்குத் துணை புரிகின்றது.

### 3.7.1. 'ஒன்றரைக் கண்ணன் :

இவ்வுலகில் அரைக்கண் உடையவரைக் காணுதல் அரிதாகும். இமயப் பாவையாகிய உமா தேவியார்க்குத் தம்முடைய உடலிற் செம்பாதியை வழங்கி அர்த்த நாரீசு வரராக — அம்மையப்பராக விளங்குபவர் இறைவர். அவரோ முக்கண்ணர்; செம்பாதியாகிய அம்மைக்குப்

32. Shelley — "A Defence of Poetry" — p.15 — Quoted by S.H. Burton " The Criticism of Poetry p.97.

பாதி உடலைத் தந்த பான்மையை வைத்து நோக்கினல் ஒன்றரைக்கண்தான் அவர்க்கு உரியது.[33]

"ஒன்றரைக் கண்ணன் கண்டீர் ஒற்றியூர்உறை உத்தமனே"

என்று பாடுகின்ருர் அடிகள். சிறந்த அழகனுகிய சிவ பிரானை 'ஒன்றரைக் கண்ணன்' என்று நயம்படக் கூறும் திருவாக்கை யாரே மறுக்க வியலும்!

### 3.7.2. 'வைத்தகால் வருந்துமே!'

இராவணன் திருக்கயிலையைப் பெயர்க்க முற்பட்ட நாளில், இறைவன் திருவடி சுமந்தான். அந்தத் திருவடியைப் பெருமான் என் உச்சி மீது வைத்து அருளிப்பாடு செய்தான். அவ்வாறு வைத்த பெருமானின் மலர் அனைய தாள்கள் என் தலையின் வன்மையால் வருந்துமே என்று வாடுகின்றேன் ; ஒடுங்குகின்றேன் என்பர் ஓரிடத்து'.[34]

'மொய்த்தகால் முகிழ்வெண் திங்கள்
மூர்த்தி, என் உச்சி தன்மேல்
வைத்த கால் வருந்தும் என்று
வாடி நான் ஒடுங்கினேனே"

### 3.7.3. 'விலாவிறச் சிரித்தேன்'

"நான் வஞ்சனைகட்கு இடமாயவன்; கள்ளத் தொண்டுகள் பல புரிந்து காலத்தைக் கழித்துப் போக்கி விட்டேன்; பின்னர் தெள்ளியேன் ஆனேன்; பின்னர்ப் பெருமானே! நின்னைத் தேடினேன்; நாடிக் கண்டும் விட்டேன். இப்படி நான் எண்ணுகின்ற போது எனக்கு வேருேர் நினைப்பும் வந்தது. 'இவற்றை யெல்லாம் உன்னிடமே சொல்லுகின்றேனே நான் ! என்னே என் பேதைமை! நீயோ, நினைப்பவர் நினைப்பதையெல்லாம் உடன் இருந்து அறிபவன் ; அத்தகைய நின்னிடம் இவற்றைக் கூறலும் வேண்டுமோ? என்று நாணினேன். என் அறியாமையை நினைத்தவுடன் எனக்கே சிரிப்பு வந்து விட்டது; விலா எலும்புகள் இற்றுவிழச் சிரிக்கலானேன்" -என்பர் ஓரிடத்தில். இறைவனுடன் இவ்வாறு கலந்துரை

33. திருநாவுக்கரசர் தேவாரம் — 4-86-7.

34. Ibid. 4-77-10.

யாடும் பாங்கில் அக்கவியழகு நிரம்பிய திருப்பாடல் உள்ளது:[35]

"உள்குவார் உள்கிற்றெல்லாம் உடனிருந் தறிதிஎன்று
வெள்கினேன்; வெள்கி நானும் விலாவிறச் சிரித்திட்டேனே"

### 3.7.4 'காலன் அறிந்த கழலடி'

திருமாலோ, அன்னமாகப் பறந்து மேலே மேலே சென்று அறியமுடியாத பிரமனே, அறியமுடியாத சிவபிரான் திருவடிகளைக் காலன் அறிந்துவிட்டான் என்று, மார்க்கண்டற்காக இறைவனால் திருவடி தீண்டப்பெற்ற நிலையை உள்ளடக்கிப் பாடிய திறம் மறக்கவியலாதது,[36]

"காலன் அறிந்தான் அறிதற் கரியான் கழலடியே"

### 3.7.5 'இதழியும் இனியவனும்'

சிவபிரானை விரும்பி அவனை அடைய முடியாத பெண் ஒருத்தி; அவளது காதல் உணர்வை அறிந்த பாங்கி ஒருத்தி பேசுவதாகக் கற்பனை. இந்தப் பெண் உடம் பெல்லாம் கொன்றை. (பசலை நிறம் பொன்னிறம்; அதனைக் கொன்றை என்றே குறித்தாள்) இந்தக் கொன்றையைச் சிவபிரான் எப்படி இவளுக்குக் கொடுத் தார்? தாம் மெய்யில் அணிந்த மாலையை உடலிடம் பிரியாத மங்கையார் இருக்கும்போது கொடுத்திருக்க இயலாது. முடியில் கங்கையார் இருப்பதனால் முடிக் கொன்றையை அத் தேவியார் அறியாமல் கொடுக்க இய லாது. ஆதலால், வேறு எங்காவது வாங்கித்தான் கொடுத் திருக்கவேண்டும். ஆம்; அதுதான் உண்மை. அப்படி யாயின் எங்கிருந்து வாங்கிக் கொடுத்தார் இறைவன்? இப்படி முடிகின்றது அந்தப் பெண்ணின் பேச்சு. வித்தகம் நிறைந்த கற்பனை.[37]

"மங்கைகாணக் கொடார்மண மாலையைக்
கங்கை காணக் கொடார்முடிக் கண்ணியை
நங்கை மீரிடை மருதரிந் நங்கைக்கே
எங்கு வாங்கிக் கொடுத்தார் இதழியே"

35. Ibid. 4-75-3.
36. Ibid. 4-113-11.
37. Ibid. 5-128-6.

திருவிடை மருதூர்ப் பிரான் திறம் பாடும் தெய்வக் குறுந்தொகைப் பாட்டுச் செய்தி இது. இறைவனை நினைத்த கனவிலே உலகியலை மறந்து அருளியல் தலைப்பட்ட ஓர் உயிரின் இன்ப அநுபவம் இப்படி அகப்பாட்டு நெறியில் வெளிப்பட்டு விடுகிறது.

### 3.7.6. 'கங்கையும் உமை நங்கையும்'.

தொண்டு நெறி தலைப்பட்டவர் அடிகள் என்கிறது சைவ மரபு. தோழமை உணர்விலே பெருமானோடு பிணங்கியும், கலந்தும் பாடும் பாடல்களும் இல்லாமல் இல்லை இங்கு. ஆனால் அவ்வாறு வருவன சிற்சிலவே. "திருநாகைக் காரோணத்துக் கடவுளே! ஒரு விண்ணப்பம்; கேட்டருள்: கங்கை என்ற பெண்ணைச் சடையுள் ஒளித்து வைத்துள்ளாய். அந்தக் கள்ளத்தை மெள்ள உமை நங்கை அறிந்தால் என்ன ஆகுமோ? நீ இவ்வாறு செய்தல் பொல்லாது" என்று நகையாடுகின்றார் அடிகள்:[38]

"கங்கை சடையுட் கரந்தாய் அக் கள்ளத்தை மெள்ள உமை
நங்கை அறியிற் பொல்லாது கண்டாய் எங்கள் நாயகனே"

கங்கையை முடியிலே சூடிய செய்தியை உமாதேவி அறிந்து கொண்டு விட்டதாக இன்னோர் திருப்பாட்டிலே கற்பனை அமைகின்றது. உமையம்மை ஊடல் கொண்டு விட்டார்; அந்த ஊடலை நீக்குவதற்கு ஓர் உபாயத்தைச் சிவபிரான் கைக்கொண்டதாக அடிகளார் பாடுகின்றார். இனிய இசையமைப்பிலே சாமவேதத்தைப் பாடினார்; அத்துடன் கூத்தும் ஆடினார். இந்த ஆடல் பாடலைக் கண்டு கேட்ட பிறகும் ஊடல் நிற்குமா? அதிகை வீரட்டத்திலே இந்த அழகுக் கற்பனை.[39]

"சூடினார் கங்கை யாளைச் சூடிய துழனி துழனி கேட்டங்கு
ஊடினாள் நங்கை யாளும் ஊடலை ஒழிக்க வேண்டிப்
பாடினார் சாமவேதம் பாடிய பாணியாலே
ஆடினார் கெடிலவேலி அதிகை வீரட்டனாரே."

தம்முடைய உள்ளத்திற் புகுந்து நின்ற இறைவனைப் பார்த்துக் 'கள்ளரோ! புகுந்தீர்' என்று கேட்க, சிரித்தபடி

38. Ibid. 4-103-8.
39. Ibid. 4-27-2.

"வெள்ளரோம்" என்று கூறினர் என்று ஓரிடத்துப் பாடுகின்றனர். இதனைக் கனவு அநுபவமாகக் கூறியுள்ளனர்.

### 3.8 பாடல் அமைப்பு : சில வேறுபாடுகள் :

அடிகளாருடைய திருப்பதிகங்கள் பெரும்பாலும் பத்துப் பத்துப் பாடல் கொண்டவை ; பதினொரு பாடல் கொண்ட பதிகங்களும், பன்னிருபாடல் கொண்டனவும், இருபது பாடல் கொண்டனவும் உண்டு. பதிகப் பாட்டுக்கள் ஈற்றடி ஒரே வகையில் அமைந்தவை. மாறுபாடுகள் சிற்சில இடங்களில் மட்டுமே உண்டு. இம்மாறுபாடுகள் ஈற்றடி மகுடத்தினின்று வேறுபட்டவை அளவிற்குறைவே. நான்காம் திருமுறையில் 32 பதிகங்களும், ஐந்தாம் திருமுறையில் 69 பதிகங்களும், ஆறும் திருமுறையில் 9 பதிகங்களுமே ஆகும். பின்வரும் அட்டவணை இவ்வமைப்பினை இனிது உணர்தற்குத் துணைபுரியும்; கூறி மகிழும் இசைப் பாடல்கள்—ஒரு பொருள்மேற் பன்முறை அடுக்கி மகிழும் அமைப்புடையவை ஆதலின் இந்த ஈற்றடி அமைப்பு ஒரு சிறப்புடைய அமைப்பு என்று கருதலாம். ஏடு எழுதுவோரால் நிகழ்ந்த இடப்பெயர்ச்சி காரணமாகவும், அடிகளார் திருவுள்ளத்தில் தடைப்பட்ட சில நிலைகள் காரணமாகவும் இந்த வேறுபாடுகள் எழுந்திருக்கக் கூடும்.

ஏடெழுதுவோரால் நிகழ்ந்த இடப்பெயர்ச்சிக்கு ஓர் எடுத்துக்காட்டுக் காட்டலாம். "வேற்றாகி" எனத் தொடங்கும் பதிகத்தில், உள்ள "மூவாய் பிறவாய்" எனத் தொடங்கும் பாடல், "பாட்டான" எனத் தொடங்கும் பதிகத்தில் 9ம் பாடலாக இருக்க வேண்டும். சிந்தை என்ற சொல்லாட்சியைக் கொண்டு இவ்வாறு துணிவர் பேரறிஞர் திரு. ப. இராமநாதப் பிள்ளை அவர்கள். ["திருநாவுக்கரசர் தேவாரத்தில் காணப்பெறும் இடப்பெயர்ச்சி" செந்தமிழ்ச் செல்வி, 36ஆம் சிலம்பு (1961—1962) பக். 323—324]. இவ்வாறே எழுத்து வகுக்க மோனையமைந்த சித்தத் திருக்குறுந்தொகையில், எழுத்துவரிசையிலமைந்த இறுதிப் பாட்டுக்களில் இடப்பெயர்ச்சி நேர்ந்துள்ளது.

| திருமுறை | மொத்தப் பதிகங்கள் | ஈற்றடி வேறுபாடு மாறியவை | அமைப்பு மாறாதவை | மாற்றம் நூற்றுக்கு (விழுக்காடு) |
|---|---|---|---|---|
| 4 | 113 | 32 | 81 | 28% |
| 5 | 100 | 69 | 31 | 69% |
| 6 | 99 | 9 | 90 | 9% |
| | 312 | 110 | 202 | |

**3.9 யாப்புறுப்புக்கள்—விளக்கம்: 3.9.1 பொருள்கோள்**

அடிகளாரின் திருப்பாட்டுக்களில் காணப்பெறும் யாப்புறுப்புக்கள் தனிச்சிந்தனைக்குரியனவாகத் திகழ்கின்றன. ஆற்றுநீர்ப் பொருள்கோளில் அமைந்தனவே அனைத்துப் பாக்களும்; ஆயினும்,

"அடியார்க்கும் அண்டத்தார்க்கும்
அணியவன்காண் சேயவன்காண்"

என்பது போன்ற நிரனிறை அமைப்புக்களும் இல்லாமல் இல்லை;[40] அடியார்க்கு — அணியவன் என்றும், அண்டத்தார்க்கு (தேவர்கள்) — சேயவன் என்றும் பிரித்துப் பொருள் கொள்ள வேண்டிய பொருள்நோக்கு இங்கு உள்ளது.

"சித்தம் தேறும் செறிவளை சிக்கெனும்
பச்சை திருமென் பைங்கொடி பான்மதி
வைத்த மாமயி லாடு துறையரன்
கொத்தினிற் பொலி கொன்றை கொடுக்கிலே"

என்பதில், 'கொடுக்கில் — சித்தம் தேறும்' என்று இணைத்துப் பூட்டுவிற் பொருள்கோள் முறையாக அமைந்துள்ளது.[41] இத்தகைய அமைப்புடையன சில இடங்களில் நீங்கலாகப் பிற அனைத்தும், ஆற்று நீரோட்டம்போல் இயல்பாக — எளிதாக — உள்ளத்துப் பொருந்தும்

40. Ibid. 6-261-3.
41. Ibid. 5-152-2.

பொருள்நோக்குடன் காணப்பெறுதல் எண்ணி மகிழ்தற் குரியது.

### 3.9.2 முரண் :

முரண் என்ற தொடை விகற்பம் அமையப் பாடுதலும் அடிகளார்க்கு இயல்பே :[42]

" இளம் பிறையும் முதிர்சடை மேல் வைத்தான் "

" கரும்பு பிடித்தவர் காயப்பட்டார்
இரும்பு பிடித்தவர் இன்புறப்பட்டார் "

" செஞ்சடைமேல் வெண் திங்கள் "

" வெண்கோட்டுக் கருங்களிறு "

" மதியாதார் வேள்விதனை மதித்திட்ட "

என்பன சில எடுத்துக்காட்டுக்கள்.

### 3.9.3 மோனை :

மோனை இல்லாமற் பாடுதல் அடிகளார்க்கு இயல் பில்லை. மோனை தவறாது பாடுதல் அடிகளார் தனிச் சிறப்பு.

" இரக்கமா அருள் செய்த பாலைத்துறை
கரத்தினால் தொழுவார் வினை ஓயுமே "

என்று வருவதுபோல், மோனை இன்றிவரும் பாடற் பகுதிகள் அடிகளார் திருவாக்கில் அருகியே காணப் பெறும்.[43]

### 3.9.4 எதுகை :

அடிகளாருடைய எதுகை அமைப்பு ஆழ்ந்த சிந்தனைக் குரியது. " தமிழ்ப்பாட்டுக்களில் இந்த எதுகை அமைப்பு இணையற்ற ஒன்றாக உள்ளது ; பழந்தமிழ் இலக்கி யங்களில் இவ்வமைப்புப் பெரிதும் பின்பற்றப்படவில்லை. சங்ககாலத்தின் இறுதியில் எதுகை அமைப்பு இன்றிய மையாத ஒன்றாக யாப்புறுப்புக்களிற் காணப்படலாயிற்று.

---

42. Ibid. 6-286-9, 4-102-5, 4-242-9, 6-244-4, 4-12-4.

43. Ibid. 5-164. 11.

வடமொழி சார்ந்த மொழிகளில் இவ்வாறு தொடர்ந்த எதுகை யமைப்பு காணல் அரிது. ஏனைய மொழிகளிலும் அவ்வாறே பாடல்களின் தொடக்கத்திற் காணப்பெறும் இத்தமிழ்மொழி ஒலிநய மாண்பு, ஐரோப்பியக் கவிதைகளில் வரிகளின் ஈற்றிற் பின்பற்றப்பட்டுவருதோடு ஒப்பிட்டுணர்தற்குரியது" என்ற பேரறிஞர் ஏ. எல். பாசம் கருத்துக்கள் தமிழ் எதுகைத் தனிச்சிறப்பை எடுத்துக் காட்டுவன.[44]

அடிகளார் எதுகை யமைப்பில் ஒரு முறையான அமைப்பைக் கையாண்டுள்ளனர். ஆயினும் சிற்சில இடங்களில், இரண்டாம் எழுத்து ஒன்றிவரும் இவ்வமைப்பிற்கு மாறுபட்டும் பாடியுள்ளனர். முன்னர் மொழிந்தபடி இறைவன் திருவருள் வெள்ளத்தில் திளைத்துப்பாடிய திருப்பாட்டுக்களாதலின் இயல்பாக வருங்கால், அவற்றை விட்டு நீங்கவும் அடிகளார் விழைந்திலர்; ஆதலின் இவ்வகை வேறுபாடுகளும் இங்குக் காணப்பெறலாகின்றன என்று கருதுவது தவருகாது. 616 இடங்களுக்குக் குறையாத வேறுபாடுகள், கூர்ந்து நோக்குங்கால் இவரது திருப்பாட்டுக்களில் விளங்குகின்றன.[45]

உயிரெதுகை, ஆசெதுகை, வல்லினவெதுகை, மெல்லினவெதுகை, இடையினவெதுகை என்ற சிறப்பில்லாத எதுகை வகைகளில் இவ்வேறுபட்ட இடங்களில் பெரும்பாலானவை அடங்கி விடுகின்றன. பொருள் அமைப்பிற்குத் தக இவ்வேறுபாடுகள் விளைந்துள்ளன என்று கருதுதலும் தவருகாது. ஆயினும் இவ்வேறுபாடுகள் நூற்றுக்கு இருபது (20 %) என்ற அளவிலேயே நிகழ்ந்துள்ளன. இவற்றிற்கெல்லாம் அடங்காத,

புலன்—சினங்கள், (ல,ன)
கமழ்—தவழ் (ம,வ)

---

44. A. L. Basham — "The wonder that was India" — London (1956)-P. 463.

45. C. Singaravelan, "Special Features of Rhyme scheme of Appar Hymns", Paper presented to IV Conference — Seminar of Indian University Tamil Teachers — 1972.

இடைவி—அழி (ட,ழ)
பகழி—உமிழும் (க,ம)

என்பன போன்று வெவ்வேறு மெய்யெழுத்துக்களை எதுகைப்படுத்தும் போக்கும் இவர் பாடல்களிற் காணப் படுகின்றது. இவ்வாறு வரும் இடங்கள் ஒன்பதிற்குக் குறைவே.

கீதர் — மாதை, ஒரு — அரை, மீளா — நாளோ என்பன உயிரெதுகை அமைப்பிற்கும், புத்தூர் — பொய்த்தார், கூத்தா — மூர்த்தி என்பன ய,ர ஆசாக வந்த ஆசெதுகை அமைப்பிற்கும், மாப்பனை — ஏத்துவார், வெந்த — திங்கள், செவி — எரி என்பன மூவின வெதுகை கட்கும் சில எடுத்துக்காட்டுக்கள்.

### 3.9.4.1 எதுகையும் வகையுளியும்:

ஒரு சொல்லை இரண்டாக — வகையுளி — அமைப்பிற் பிரித்து எதுகைப்படுத்தும் மிகச் செயற்கையான போக்கும் அடிகளார் திருப்பாட்டுக்களிற் காணப்பெறுதல் வியப்பாக உள்ளது; இது முற்றிலும் செயற்கைத் தன்மை வாய்ந்ததாய் அடிகளார் பாட்டினியல்பிற்கு முற்றிலும் மாறுபட்டது எனல் அறியத்தக்கது.

போர்த்—தேயிவராடுமாறும்,
வீ—ரட்டனார்
கா—ரோணத்தான்
கொண்டன—ரோ, சொலாய்
போக்க—கிற்பானை
தீர்க்க—கில்லானை
செய்ய—கிற்பார் தமக்கு

என்பன இவ்வகைக்கு எடுத்துக்காட்டுக்கள்.

**அப்பர் தேவாரப் பண் அமைப்பு**

| திருமுறை | பதிக எண் | பண்கள் | திருமுறை கண்ட புராணம் கட்டளை |
|---|---|---|---|
| 4 | 1 | கொல்லி | 1 |
| | 2—7 | காந்தாரம் | 1 |

| திருமுறை | பதிக எண் | பண்கள் | திருமுறை கண்ட புராணம் கட்டளை |
|---|---|---|---|
| | 8 | பியந்தைக் காந்தாரம் | 1 |
| | 9 | சாதாரி | 1 |
| | 10, 11 | காந்தார பஞ்சமம் | 1 |
| | 12, 13 | பழந்தக்கராகம் | 1 |
| | 14, 15 | பழம்பஞ்சுரம் | 1 |
| | 16–18 | இந்தளம் | 1 |
| | 19, 20 | சீகாமரம் | 1 |
| | 21 | குறிஞ்சி | 1 |
| | 22–79 | திருநேரிசை | 1 |
| | 80-113 | திருவிருத்தம் | 1 |
| 5 | 1–100 | திருக்குறுந்தொகை | 1 |
| 6 | 1—99 | திருத்தாண்டகம் | 1 |

### 3.10. ஒலிநயம்—பண் அமைப்பு :

கவிதை என்பது கேட்கத் தகுந்த ஒலிநயம் உடையதாக இருத்தல் வேண்டும். ‘செவிநுகர் கனிகள்’ என்று காப்பியக் கவிஞன் கம்பன் கவிதைகளைக் குறிப்பது கருதத்தக்கது. தமிழ்ப் பெருமக்களும் ஒவ்வொரு பாவகையும் ஒவ்வோர் ஓசை உடையதென வரையறுத்துள்ளமை நினைக்கத் தக்கது. ‘கவிதையை மதிப்பிடும்போது செவிகட்கே இன்றியமையாமை தருதல் வேண்டும். அவ்வாறு நோக்கினுல் கவிதையை உரத்துப் படித்தல் வேண்டும். அவ்வாறு ஓதுங்கால் நெஞ்சில் இனிய உணர்வினை விளைப்பதே உயர்கவிதை’ என்பர் பி. எச். பி. இலயான் (P. H. B. Lyon) என்னும் திறனுய்வாளர்.[46]

ஆளுடைய அரசராகிய அடிகளார் பாடல்கள் ஒலிநயம் பொருந்தியவை; பண்ணமைப்புச் சான்றவை. கீழ்க்கண்ட பண்கள் அடிகளார் திருப்பாட்டுக்களுக்கு அமைந்துள்ளன. *(1)* இந்தளம் *(2)* காந்தார பஞ்சமம் *(3)* காந்தாரம் *(4)* காமரம் அல்லது சீகாமரம் *(5)* குறிஞ்சி *(6)* கொல்லி *(7)* சாதாரி *(8)* செவ்வழி *(9)* பஞ்சமம் *(10)* தக்கராகம் *(11)*

46. P.H.B. Lyon — “ The Discovery of Poetry ” pp. 20-21.

பழம் பஞ்சுரம் (12) பாலையாழ் (13) பியந்தைக் காந்தாரம். பண் கலந்த தமிழசைப் பாடல்களிற் பெருவிருப்புடையவன் சிவபிரான் என்பர் அடிகளார். 'உகப்பர் ஏழில் ஓசை', 'எழுநரம்பின் இசைபாடல் இனிது கேட்டுப் புகழ்ந்தான்', 'ஏழின் இசையே உகப்பாய் போற்றி', 'கொல்லியாம் பண் உகந்தார்', என்றெல்லாம் பாடுவர். இது மட்டுமின்றிச் சிவபிரானே பண்ணின் பயனுகி நிற்கின்ருன் என்று பாடும் இடங்களும் பல.[47]

அடிகளார் பாடல்களை உரிய பண்களிற் பாடினுல் பாடுவோர் கேட்போர் தம் வயமிழந்து இறை நெறி சார்தல் கண்கூடு. இடைக்காலத்தே அடிகளாரும், ஆளுடைய பிள்ளையாரும் தோன்றி இவ்வாறு புரக்கவில்லையேல் இசைத்தமிழ் சீர்கேடடைந்திருக்கும். சமண பௌத்தங்களின் சார்பின்மையால் இழந்திருந்த இசைப்பெருமை மீண்டும் தழைக்கலாயிற்று.

அடிகளார் சமகாலத்தே வாழ்ந்த ஆளுடைய பிள்ளையார் திருவாக்கிலும் இளி, காந்தாரம், காமரம், செந்து, செவ்வழி, தாரம், துத்தம், நேரிசை, பஞ்சுரம், பாலையாழ், மருள், வாய்மூரி ஆகிய பண் பெயர்கள் காணப் பெறுகின்றன. இடைக் காலத்தே இசைத் தமிழின் வளர்ச்சி பற்றிய செய்திகளை அறிந்திட இக்குறிப்புக்கள் அனைத்தும் துணைசெய்கின்றன. திருமுறை கண்ட புராணத்தில், இவற்றின் கட்டளை வேறுபாடுகளைக் காணலாம். தனியே உள்ள அட்டவணை இக்கட்டளை வேறுபாடுகளைத் தெளிவாக்கும்.

### 3.10. இலக்கியத்தில் பேச்சுத்தமிழ் உறவு :

அடிகளார் எளிய சொற்களைத் தேர்ந்து கவிதை புனைவதிலே வல்லவராகத் தோற்றுகின்ருர். 'கவிதை சொற்களால் ஆயது; ஆதலின் கவிஞன் தக்க சொற்களைத் தேர்ந்து பெய்கின்ருன். ஒருவகையில் நோக்கினுல், கவிதைக் கலையின் சிறப்புக்களில் அது ஒன்ருகின்றமை

47. திருநாவுக்கரசர் தேவாரம் — 6-203-9, 6-281-10, 6-270-5, 4-49-6.

உணரலாம்' என்று ஆங்கிலக் கவிதைஇயல்பை ஆராய்ந்து எம். பௌல்டன் (M. Boulton) கூறிய மொழிகள் இங்கும் பொருந்துகின்றன.[48] அடிகளார் சொற்களைத் தேர்ந்து கையாளத் தம் புலமையைத் துணைக்கொண்டாரல்லர். இறைவன் கருணைக்கடலில் மூழ்கி யெழுந்து, அத்திரு வருள் நிலையிலிருந்து பாடுகின்றாராதலின், எல்லா இயல்பு களும் இயற்கையாக வந்து பொருந்துகின்றன.

சமுதாயத்திற்கு இனிய முறையில் அறிவுறுத்து கின்றாராதலின், பேச்சுத்தமிழின் கூறுகளைத் தழுவித் தம் திருப்பாட்டுக்களை யாத்துள்ளார். இடைக்காலத் தமிழின் இயல்புகள் பலவும் இங்கே புலப்படுகின்றன. சங்க காலத்திற்குப் பின்னே, தமிழில் ஏற்பட்ட மாற்றங்கள் பலவும் இங்கு மலர்கின்றன. சற்றேறக்குறையப் பல்ல வர்கால இலக்கியமாக மதிக்கத் தகுந்த தேவார காலத் தமிழை ஆராய்வது இதற்குத் தக்க முறையில் அருந்துணை புரிவது உறுதி.

### 3.11 ஒலிக்குறிப்புக் கையாளல்:

பேச்சுத் தமிழில் ஒலிக்குறிப்புச் சொற்கள் தனியிடம் பெறுகின்றன. எளிய மக்கள் பேச்சிலும் இவை இடம் பெற்று விளங்கும். எடுத்துக்காட்டாக இன்றும், 'தண்ணீர் சலசல என்று ஓடுகிறது', 'அவன் கணகண என்று இருமினான்' என்றெல்லாம் மக்கள் பேசுகின்றனர்; இங்கே ஒலிக்குறிப்புச்சொற்கள் இடம் பெறுதல் இயல் பாக உள்ளது. இருமுதலைக் 'கணகண இருமி' என்பர் அடிகளார். கூற்றுவன் தோன்றினான் என்பதனைக் "கூற்றுவன் துண்ணெனத் தோன்றி" என்பர்; திடீரென்று தாம் எழுந்தமையை, "துடியுங் கொட்டத் துண்ணென் றெழுந்திருந்தேன்" என்றும் பாடுவர். வண்டுகளின் ஒலியை, "தேத்தென என்றிசை வண்டுகள் பாடு சிற்றம்பலம்" என்று சிறப்பிப்பர்; இராவணனைச் சிவபிரான் மலைக்கீழ் நெரித்ததை, "அரக்கர்கோனை நெறு நெறென அடர்த்திட்ட நிலையும் தோன்றும்" என்று ஒலிநயம்பட உரைப்பர். இவ்விடங்கள் அனைத்தும் பேச்சுத்

48. M. Boulton — "The Anatomy of Poetry" — p. 152.

தமிழின் ஊடுருவல் அடிகளார் பாட்டுக்களில் உண்டு என்பதற்குத் தக்க சான்றுகளாக அமைவன.[49]

சிரித்து/சிரிச்சு, விரித்து/விரிச்சு, வைத்து/வைச்சு/வச்சு, பித்து/பிச்சு, நித்தல்/நிச்சல், பொய்த்தார் — ஆகிய சொல் வடிவங்கள் அடிகளார் திருப்பாட்டுக்களிற் காணப் பெறுகின்றன. இவ்வாறே உய்ந்து/உய்ஞ்சு, நைந்து/நைஞ்சு ஆகிய சொல் வடிவங்களும் காணப்பெறு கின்றன.[50] தகரம் சகரமாக மாறுதலும், நகரம் ஞகரமாக மாறுதலும் இங்குக் காணப்பெறும் ஒலி மாற்றங்கள் ஆம். இத்தகைய மாற்றங்கள் திருஞான சம்பந்தர் தேவாரத்தும் உள்ளன.[51] 'Palatalization' என்று மொழியியலார் குறிக்கும் இம்மாற்றம், பேச்சுத் தமிழில் உள்ளமை இன்றும் காணத்தக்கது. இதன் தொடக்கநிலை அடிகளார் காலத்திலேயே உள்ளது என்பது இங்குக் குறிக்கத்தக்கது. அடிகளார் திருப்பாட்டிற் காணப்பெறும் இம்மாற்றத்தை ஒரு புதிய சந்தி விதியாற் பின் வருமாறு விளக்கலாம்.

$$\begin{Bmatrix} t \,\&\, t \\ nt \end{Bmatrix} \qquad \begin{Bmatrix} c \,\&\, c \\ \tilde{n}c \end{Bmatrix} \qquad \begin{Bmatrix} i \\ ai \\ y \end{Bmatrix}$$

சங்க இலக்கியங்களிற் காணப்பெறாத இம்மாற்றம் இடைக்காலத் தமிழில் தொடங்கிற்று என்பதனை நோக்குங் கால், இங்குக் குறிப்பிடப் பெற்ற சொல்வடிவங்கள், வரலாற்று முறை மொழியியலிற்கு எத்துணை இன்றியமை யாமை உடையன என்று கூறத் தேவையில்லை.[52]

மக்கள் பேச்சில் சில அரிய சொல் வடிவங்கள் மருவி வழங்குதலும் உண்டு; இதனை அசைகெடல் (Haplology)

---

49. திருநாவுக்சரசர் தேவாரம் — 4-28-1, 5-190-5, 6-226-6, 4, 17-1, 6-231-11.

50. Ibid. 5-1-3, 6-264-10, 5-173-2, 4-205-8, 5-173-2.

51. சொ. சிங்காரவேலன் — "திருஞானசம்பந்தர் வரலாற்று ராய்ச்சியும் தேவாரத் திறனாய்வும்"—சைவ சித்தாந்த நூற் பதிப்புக் கழகம்—1969—p. 299–300; Dr. T. P. Meenakshi-sundaram, "A History of Tamil Language—p. 128.

52. திருநாவுக்கரசர் தேவாரம்—6, 296–7, 6-210-2, 6-312-1.

என்றும் கூறி விளக்கலாம். இது தொல்காப்பியர் கால முதலே காணக் கிடைப்பதே. 'மருவின் வந்த மயங்கியல் மொழி' என்றும் 'மருவின் பாத்தி' என்றும் தொல்காப் பியரால் கூறப்பட்ட இவற்றை, இலக்கண மரூஉ, இலக் கணமல்லா மரூஉ என்று பிற்காலத்தே பிரிப்பர். இடைக் காலத் தமிழிலும் இம் மரூஉ முடிவுகள் இலங்கின.

### 4. 3 விகுதிமேல் விகுதிகள் அமைத்தல் :

"அருமந்த நன்மை" என்று "அருமருந்தன்ன" என்பதன் மரூஉ வடிவத்தை அடிகளார் அமைப்பர்; "அருமந்தன்ன" என்றும் இதனை அடிகளார் ஆளுதல் உண்டு. அஞ்சு, நாலு என்பனவும் காணப்பெறுகின்றன. ஒன்று என்னும் எண்ணுப்பெயரை, "ஒண்ணு" என்றும் அடிகளார் ஆளுவர். "ஒண்ணுளே ஒன்பது வாசல் வைத் தாய்" என்பது அவர் திருவாக்கு. இந்த மாற்றம் குறிப் பிடத்தக்க ஒன்றே. ஆனால் இது ஓர் இடத்தில் மட்டுமே கையாளப் பட்டுள்ளது. எதுகைக்காக இம்மாற்றம் விளைந்துள்ளது என்றாலும், பேச்சுத் தமிழின் ஒரு நிலை இது என்பதை ஒப்பத்தான் வேண்டியுள்ளது.[53]

விகுதிமேல் விகுதி சேர்த்துப் பின்வரும் சொல் வடி வங்களையும் விளம்பியுள்ளார் அடிகளார்: "எழுமின்கள்", "தமர்கள்", "நடமின்கள்", "நினைமின்கள்", "பிதற்று மின்கள்". இதே பன்மை விகுதிகளை 'ஆர்' என்ற வினை வினைக் குறிப்புடன் சேர்த்து "ஆர்கள்" என்று ஆளுவதும் ஒரு சிறப்பே. "செய்வனகள்", "நீர்கள்", "பிழைத் தனகள்", "நீங்கள்" என்ற சொல்வடிவங்களும் அடிகளார் ஆளும் குறிப்பிடத்தக்க வடிவங்கள்.

முன்னிலையில், "நீங்கள், "உங்கள்" "நுங்கள்" என்ற பன்மைச் சொற்கள்; "உன்", "நுன்" — என்ற ஒருமைச் சொற்கள் இவரிடம் உண்டு. "நீர்கள்" என்பது "அவர்கள்", "இவர்கள்" போன்ற அமைப்பில், ஒப்புமை யாக்கத்தால் விளைந்த முதல் வடிவம் என்று கருதலாம்.[54]

---

53. Ibid, 5-205-3, 6-260-2, 4-59-7, 6-303-8.
54. "A Linguistic and critical study of Appar Hymns"—p. 190.

### 4. 4 உளப்பாட்டுத் தன்மைப் பன்மை :

தன்மைப் பன்மையில் "நாம்" என்பதும், "யாம்" என்பதும் முறையே எண்ணற்ற இடங்களில் ஆளப் பட்டிருக்கின்றன. இவையிரண்டும் முன்னின்றோரை உளப் படுத்தும் பொருளிலும், உளப்படுத்தாத பொருளிலும் (Inclusive, Exclusive) வருகின்றன. உரையாசிரியர்கள் இப்பொருள் வேறுபாட்டைப் புலப்படுத்த முனைந்திட வில்லை. ஆனால் கூர்ந்து நோக்குங்கால் உளப்பாட்டுத் தன்மைப் பொருளும் அடிகளார் பாடல்களில் இருத்தல் உணர்ந்து இன்புறத்தக்கது.

### 4. 5 நாம் — முன்னிலை அமைப்பு :

மற்றுமோர் குறிப்பிட்ட அமைப்பை இவ்விடத்துச் சுட்டவேண்டும். "நாம்" என்னும் தன்மைப் பன்மைச் சொல், முன்னிலைப் பொருளில் இரண்டு இடங்களிற் கையாளப்பட்டுள்ளன.[55]

"நாம் தொழுதுய் மட நெஞ்சமே"
"நாம் இருக்கும் ஊர் பணியீர்"

குறிப்பிடத்தக்க இப்பொருள் மாற்றம் வேறெங்கும் காணப்பெறவில்லை.

### 4. 6. எண்ணுப்பெயர்கள் : இரண்டு நுட்பங்கள் :

அடிகளார் ஒன்று முதல் கோடி வரை உள்ள எண்ணுப் பெயர்களைக் குறிப்பிட்டுள்ளார்; அவற்றுள் எட்டு, ஒன்பது பற்றிய அடிகளார் செய்திகள் அறிதற்குரியவை. எட்டு என்பதற்கு 'ஏழி' என்ற புதுப்பெயர் ஒன்று சூட்டு கின்றார். 'ஏழித்தொல்மலர்' என்பார் 'இதழி — கொன்றை; இதுவே ஏழி என்றாயிருக்கக்கூடும்' என்றும், 'ஏழை முன்னாக உடையது என்னும் பொருளில் (ஏழ் இ) ஏழி எனப்பட்டது' என்றும் இருவகையிற் பொருள் காண்பர். எனினும் 'ஏழி' என்பது புதிய எண்ணுப் பெயர் வடிவமாயிருத்தல் தெளிவு.[56]

---

55. திருநாவுக்கரசர் தேவாரம்—4-102-3, 6-258-7.
56. Ibid. 5-54-6.

இனி ஒன்பது என்ற எண் தன் மடங்குகள் அனைத்தும் தானாகவே விரிந்து நிற்கும் வியத்தகு திறம் உடையது; எடுத்துக்காட்டு:—9×2 : 18 — 9; 9×3: 27 — 9; 9×4: 36—9 ; 9×5 : 45 — 9 என்று மிகுத்துக் கொண்டே சென்றால் இதனை உணரலாம். இதனை, 'ஒன்பது ஒத்து நின்று என்னுள் ஒடுங்குமே' என்று சுருக்கமாகக் கூறுகின்றார் அடிகளார்.[57] இந்நுட்பத்தினை, ஆன்ம இயல்பை, பதி இயல்பை விளக்கிடப் பொருந்திய திறம் வியந்து போற்றற்குரியது.

### 4.7. புதிய உவமச்சொல்:

'ஒப்பாரி' என்ற சொல் 'போல' என்ற ஒப்புப் பொருளில் வந்துள்ளது, 'ஒப்பாரி இலாத' என்ற தொடரில் காணலாம்.[58] 'ஒப்பார் இலாத' என்பதே பிழைபட இவ்வாறு ஏடு எழுதுவோரால் எழுதப்பட்டிருக்கலாம் என்று விளக்கம் கூறக்கூடும். ஆயினும் இப்போதுள்ள பதிப்புக்கள் அனைத்திலும் இவ்வாறே இவ்வடிவம் உள்ளது என்பது குறிக்கத்தக்கது.

### 4.8 நாக்கு—நா:

'நாக்கு' என்ற சொல் வடிவம், 'நா' என்ற வடிவம்—இரண்டுமே இவர் திருவாக்கில் உள்ளன. 'நா' என்ற பழைய வடிவத்துடன், மக்கள் பேச்சில் மூக்கு என்பதன் ஒப்புமையாக்கத்தால் வந்திருக்கலாம் என்று கருதக்கூடிய நாக்கு என்ற புதிய வடிவத்தையும் எடுத்தாண்டுள்ளார் என்று எண்ணலாம்.[59]

### 4.9 புதிய நிகழ்கால இடைநிலை:

காலம் உணர்த்தும் இடைநிலைகளில், நிகழ்கால வினைகளில் 'கின்று' என்ற பழைய இடைநிலையுடன், 'ஆநின்று' என்ற புதிய இடைநிலையையும் இங்குக் காணலாகின்றது;[60] தொல்காப்பியர் 'கின்று' என்ற

---

57. Ibid. 5–89-9.
58. Ibid. 5
59. Ibid. 5-90-5
60. Ibid. 6-27-1.

புதிய ஒன்றை மட்டுமே கூறினர்; சங்காலத்துக்குப்பின் புகுந்தது 'ஆநின்று', அடிகளாரின் காலத்திற்குப் பின் 'கிறு' ஒன்றும் புகுந்து நிகழ்கால இடைநிலைகள் மூன்ரு யின. 'புலம்பாநின்ற', 'ஊரா நின்ற' என்பன முதலிய சொற்கள் இவர் திருப்பாட்டுக்களிற் காணப்படுகின்றன.

### 4.10. வேண்டா-வேண்டாம்:

'வேண்டா', 'வேண்டாம்' என்ற இருவடிவங்களும் ஆளப்பட்டுள்ளன; 'வேண்டா' என்பது 9 இடங்களிலும் 'வேண்டாம்' என்பது 1 இடத்திலும் வந்துள்ளன.[61] இவற்றுள் 'வேண்டா' என்ற பழையவடிவமே மிகுதியாக இருப்பவும், ஓரிடத்தே மட்டும் 'வேண்டாம்' என்றுள்ளது; சில பதிப்புக்களில் இதுவும் திருத்தப்பெற்றுள்ளது; 'வேண்டும்' என்ற வடிவத்தின் ஒப்புமையாக்கத்தால் விளைந்ததே 'வேண்டாம்' என்பது. ஏடு எழுதுவோர் விருப்பு வெறுப்புக்களால் நிகழும் மாற்றங்களில் ஒன்ருகவும் இஃது இருக்கக்கூடும்.

### 4.11 துணை வினை அமைப்பு:

இவர் திருப்பாட்டுக்களில் காணப்பெறும் துணை வினை அமைப்புக்கள் விரிவாகச் சிந்தித்தற்குரியன. சுருக்கமாகக் கூற வேண்டுவன இவை: (1) செயவென் வாய்ப்பாட்டு வினைச்சொற்கள் (Infinitives) பின் இணைக்கப் பெற்றுள்ள துணைவினைகள் சில; எடுத்துக்காட்டு; அடைய+பெற்ரேம் (பெறு), பாட+மாட்டேன் (மாட்டு), பேச+கடவோம் (கட), கட்ட+பட்டு (படு) (2) வினையெச்சங்களின் பின் இணைக்கப்பெற்றுள்ள துணை வினைகள் சில; எடுத்துக்காட்டு: நினைத்து+இருந்தேன் (இரு), விழுங்கி+இட்டேன் (இடு), அலந்து+போயினேன் (போ). (3) தொழிற் பெயர்களின் பின் இணைக்கப் பெற்றுள்ளன துணை வினைகள் சில; எடுத்துக்காட்டு: அடர்ப்பு+உண்டு (உண்), ஆட்டு உண்டு (உண்). (4) மற்ருெரு துணை வினையுடன் இணைக்கப்பெற்றுவருவன சில; எடுத்துக்காட்டு: எழுந்து அருளி+இரு (அருள்+இரு).

---

61. Ibid.

செயவென் வாய்பாட்டு வினைகளுடன் இணையும் துணை வினைகள், 'Modals' என்றும், ஏனைய வினையெச்சங்களுடன் இணையும் துணை வினைகள் 'Aspects' என்றும் அறிஞரான் விளக்கப் பெறும்.[62] அடிகளார் திருப்பாட்டில் காணப் பெறும் துணைவினைகளில் இவ்விருவகையும் அமைந் துள்ளமை கூர்ந்து உணர்தற்குரியது.

அருள்—, இரு—, ஒழி—, இடு—, போ—, செய்—, புரி—, வை—, விடு—, உண்—, கொள்—, மாட்டு—, கில்—, படு—, ஒண்—, நில்—, உறு—, என்பன முதலாக அடிகளார் திருவாக்கில் வரும் துணை வினைகள் சிலவேயாகும்; இவை முதல் வினைகளாகவும் வரும் இயல்பு உடையனவே; அவை யும் இங்குக் காணப்பெறுகின்றன.[63]

### 4.1.2 இடைநிலைச்சுட்டு—அரிய வழக்கு:

வழக்கிறந்த சுட்டு என்று கருதப்பெறும் இடைநிலைச் சுட்டு (Intermediate demonstrative) அடிகளார் திருவாக்கில் இடம் பெற்றுத் திகழ்கின்றமை வியப்பிற்குரியதாக உள்ளது. யாழ்ப்பாணத் தமிழில் இன்றும் பெருவரவிற் றாகப் பேச்சுவழக்கில் மலிந்திருத்தல் வேண்டும் என்று கருதலாம். வழக்கில் அரிதாக இருந்திருப்பின், அடிகளார் கையாண்டிருக்கமாட்டார் என்று உறுதியாகக் கூறலாம்; ஏனெனில் மக்கள் உணர்ந்தின்புறும் பாநடை, சொற் போக்குக் கொண்டவர் அடிகளார் என்பது முன்னுங் கூறப் பட்டது. இதனையொழிந்த ஏனைய இடைச்சொற்கள் Particles, Clities பலவும் மரபுப்படி வந்துள்ளன.

இடைநிலைச்சுட்டு ஏற்றுள்ள இவரது வடிவங்கள்.[64]

'உந்நின்றூர்' (உ+நின்றூர்)
'உங்ஙன்' (உ+ஙன்)
'உம்பர்' (உ+ம்பர்)

---

62. Caldwell, "A comparative Grammar of Dravidian Languages" (1961) p. 542
63. "A Linguistic and Critical study of Appar Hymns"— pp. 294-296.
64. திருநாவுக்கரசர் தேவாரம்—5, 50-8, 4-107-1.

**5. பாடவேறுபாடுகள்—ஏடு எழுதுவோரின் பிழைகள்:**

தேவார காலத்தே ஏடு எழுதுகின்றவர்களால் நிகழ்ந்துள்ள பாட வேறுபாடுகள் அல்லது பிரதி பேதங்கள் பலவாகும். அப்பர் தேவாரத்தைப் பொறுத்தவரை, சுவாமிநாத பண்டிதரது 1911-ம் ஆண்டுப் பதிப்பு எல்லோராலும் ஒப்புக் கொள்ளப்பெற்று அதன் பிறகு அப்பதிப்பிற் கண்டவாறே அச்சிற் பதிப்பிக்கத் தொடங்கினர்; சற்றேறத்தாழ முப்பது பிரதிகளைத் தாம் ஆராய்ந்ததாகப் பண்டிதர் தம் முன்னுரையில் மொழிந்து, அவ்விவரங்கள் அனைத்தும் தம்முடைய பன்னிரண்டாம் திருமுறைப்பதிப்பு முடிவில் வெளிப்படுத்தப் பெறும் என்று தெளிவுறுத்தியுள்ளார். ஆனல் அவ்வாய்ப்பினை இழந்தமையால் அவர்க்குப் பயன்பட்ட பிரதிகளைப் பற்றி முழுதும் அறியவியலாது போயிற்று. பண்டிதர் தம்முடைய பதிப்பிற் பல பாட வேறுபாடுகளைக் குறித்துள்ளார். அப்பாட வேறுபாடுகளின் மொத்த எண்ணிக்கை 1194 ஆகும்; 36.9|- என்ற அளவில் இவ்வேறுபாடுகள் விளைந்திருக்கின்றன. எழுத்து வகையில் எழுந்த வேறுபாடுகள் இவற்றுள் 654; சொல் வகையில் எழுந்தன 540. இடைக்காலத் தமிழ்ப்பாட்டுக்களில் நிகழ்ந்துள்ள பாடவேறுபாடுகள் ஏடெழுதுவோரால் குழப்பம், நீக்குதல், சேர்த்தல் — ஆகிய முப்பெருங் காரணங்களால் நிகழ்ந்துள்ளன என்று கருதலாம்.

‘ஏற்ருயடிக்கே’—‘ஏற்ருவடிக்கே’ என்னும் இவற்றுள் உடம்படுமெய் மாறியது காணலாம்.

‘கீழ முன்சென்று’ — ‘கீழ்முன் சென்று’ — ‘கீழ் முன் சென்று’ என்பனவற்றுள் (ழ—ழ்) புள்ளியெழுத்து மாறியது காணலாம். இவ்வாறே, ‘முத்திசெய் — முத்திரை’ முதலியன ஒலிப்புமுறை பற்றிய பிழை யடிப்படையானவை. ‘மெய்ந்நின்ற — வெய்ஞ்ஞின்ற’ போன்றவை. போலியால் விளைந்தவை. ‘சாம்பர்—சாம்பல்’ போன்றவையும் அவையே. ‘கண்டாரால்—கண்டார்’ போன்றவை நீக்குதலின் பாற்படும். ‘நாயினேன் — நாயினேற்கு’ போன்றவை சேர்த்தலின் பாற்படும். ‘காண்பான்-காண’, போன்றவை தெளிவிற்காக மாற்றலின் பாற்படும். ‘பொள்ளத்த காயமாயப் பொருளினை’ — ‘பொன்ஞெத்த காய

மாயப் பொருளினை'—'பொன்னத்த காயமாயம் பொருளினை' என்பன குழப்பத்தின் பாற்படும். இவ்வாறு பல்வேறு வகைகளில் இவரது திருப்பாட்டுக்களில் பாடவேறுபாடுகள் நிகழ்ந்துள்ளமை கூர்ந்து பகுத்துணர்வோர்க்கு இனிது விளங்குவதாகும். ஏடெழுதுவோரது அறியாமை, விருப்பு, வெறுப்புக்கள் இலக்கிய எழுத்து வழக்கினை எவ்வாறு தாக்கியுள்ளன என்ற இடைக்கால இயல்பினை ஓரளவு நோக்கிச் சிந்தித்தற்கு இவை பற்றிய விரிவான சிந்தனை துணை புரியும்.

### 6. புதிதாகக் கண்ட இலக்கிய மரபுகள் :

தமிழர் வழங்கிய எழுவகை யாப்பு இன்னவெனக் கூறவந்த தொல்காப்பியர் பாட்டு, உரை, நூல், மொழி, பிசி, அங்கதம், பழமொழி ஆகியவற்றைக் குறித்துள்ளார்.[65] இவற்றைப் பழந்தமிழ் இலக்கிய மரபுப் பாகுபாடுகள் என்று குறிக்கலாம். பாட்டு யாப்பு, பழமொழி யாப்பு ஆகிய இரண்டும் அப்பரடிகளாரால் மேற்கொள்ளப் பெற்றுள்ளன. பழமொழி யாப்பும் பாட்டு மரபுள் அடங்குமாதலின் பாட்டு யாப்பொன்றே அடிகளாருடையது எனலில் தவறில்லை; இலக்கிய மரபுகளுள் அப்பர் வகுத்தனவும் சில உண்டு. ஒரு மொழியில் இலக்கியம் படைப்போன் அம்மொழி மரபுகளில் தான் நின்று படைப்பனவும் உண்டு; தானே சில புதிய மரபுகளை வகுத்துப் படைப்பனவும் உண்டு. பழைய மரபில் நின்று படைத்தல் மட்டும் ஓர் ஆசிரியனுக்குப் புகழ் கூட்டுவதாக அமைந்திடாது. புதிய மரபின் நின்று அவன் வகுத்துக் காட்டுவனவே அவனது தனித் தன்மையைக் காட்டுவதுடன் மொழி வரலாற்றிலும் சில நிலைகளாக நின்று விளங்கும்.

### 6. 1 கொச்சக ஒருபோகு — புதியநிலை :

"தரவின்றாகித் தாழிசை பெற்றும்" என்ற தொல்காப்பியச் செய்யுளியல் நூற்பா உரையில், நச்சினார்க்கினியர், திருவாய்மொழிகளைக் கூறி இவை தாழிசைகள் என்றும், இவை நான்கடியில் மிகாது வந்தவை என்றும், ஒவ்வொரு பதிகப் பாக்களும் ஒரு பொருள்மேல் அடுக்கி

65. தொல்காப்பியம்—செய்யுளியல்—77—(கழகப்பதிப்பு 1943)

வந்தன என்றும் எழுதியுள்ளனர். எழுத்தெண்ணி வகுக்கும் கட்டளைக் கலித்துறையைத் தரவுகொச்சகம் என்றனர்; தொல்காப்பிய இலக்கணப்படி இவை தாழிசை என்றும், கொச்சக ஒருபோகு என்றும் கொள்ளப்படும். மேலும் நச்சினார்க்கினியர், "பதிகப்பாட்டிற்கு ஈண்டுக் கூறிய வேறுபாடுகளைத் திருவாய்மொழி, திருப்பாட்டு, திருவாசகம் என்கின்ற கொச்சக ஒருபோகுகளிற் காண்க; அவை உலக வழக்கின்மையிற் காட்டாமாயினும்" என்று எழுதுவர்.[66] அப்பரடிகள் பாடியுள்ள கலி விருத்தங்கள் இந்தக் கொச்சக ஒரு போகு என்ற பழைய வடிவத்தில் அடங்கக் காணலாம். அடிகளாரின் திருவிருத்தங்கள் அனைத்தும் கட்டளைக் கலித்துறைகளே. இடைக்காலத்தே, பல்லவர் காலத்தே இந்தப் புதிய மரபினை மிக அழகாக அடிகளார் கையாண்டுள்ளார். எழுத்தெண்ணி இலக்கணம் வகுக்கும் நிலை தொல்காப்பியர் காலத்து இல்லை; அடிவரையறை எழுத்தெண்ணி வகுக்கும் முறை மட்டும் தொல்காப்பியத்திற் கூறப்பட்டது.

## 6. 2 தாண்டகம் — புதிய படைப்பு:

தாண்டகம் என்ற புதிய மரபினை அப்பர் தோற்றுவித்துள்ளார். இடைக்காலத் தமிழுக்கு அப்பர் வழங்கிய இலக்கிய நன்கொடை இது. எண்சீர் விருத்தங்களை ஏறத்தாழ ஒத்துள்ள இத்தாண்டகங்கட்கும் வடமொழியாளரின் தாண்டகங்கட்கும் சிறிதும் தொடர்பு இல்லை. தமிழ்ச் செய்யுள்வகையாகிய இந்தத் தாண்டகங்கட்கு அடிகளாரே முதலாசிரியர் ஆதலின், "தாண்டக வேந்தர்", "தாண்டகச் சதுரர்" என்ற சிறப்புப் பெயர்களுக்கு உரியவராயினர்.

இந்த வகையில், அடிதோறும் நான்கு, எட்டாம் சீர்கள் தேமாவாகவும், மூன்று, ஏழாம் சீர்கள் பெரும்பான்மை தேமாவாகவும், சிறுபான்மை புளிமாவாகவும், ஏனையவை பெரும்பான்மை காய்ச்சீர்களாகவும், சிறுபான்மை மாச்சீர் விளச்சீர்களாகவும் அமைந்திருக்கும். எண்சீர் கொண்ட இத்தாண்டகத்தில், அடிதோறும் மூன்று, நான்கு, ஏழு,

66. பன்னிரு திருமுறை வரலாறு — முதற்பகுதி — ஆளுடைய அரசர் அருள் வரலாறு—நோக்குக.

எட்டாம் சீர்களை விலக்கிவிட்டு ஏனையவற்றை இணைத்து நோக்கினால், 'கொச்சகக் கலிப்பா' வாக எஞ்சியபகுதி விளங்கும். இத்தகைய நுட்பமான செய்யுள் வடிவம் ஒன்றை இடைக்காலத் தமிழிலக்கியவுலகிற்கு அடிகளார் படைத்து வழங்கியுள்ளமையைத் தமிழிலக்கிய வரலாறு என்றும் மறவாது போற்றும் கடப்பாடுடையது.

**6.3 எழுத்து வருக்க மோனை :**

எழுத்து வருக்க மோனை என்ற அமைப்பு ஒன்றை அடிகளார் வகுத்துள்ளார். தமிழ் நெடுங்கணக்கில் உள்ள உயிரெழுத்தும் மெய்யெழுத்தும் ஆகிய முப்பது எழுத்துக் களை ஒவ்வொரு பாட்டின் முதலெழுத்தாக அமைத்துப் பாடி மகிழ்கின்றார். சித்தத்தொகைக் குறுந்தொகை என்ற திருப்பதிகமாக இது உள்ளது. இது ஒரு புதிய இலக்கிய மரபே ஆகும்.

**6.4 பழமொழி யாப்பு :**

வாய்மொழிக்கு ஒரு மொழியில் மதிப்பு என்றும் உண்டு. பழமொழிகள் வாய் மொழி இலக்கியம் என்று போற்றப்பெறும் மதிப்புடையவை. அநுபவப் பிழம்பாக விளங்குவன அவை. அடிகளார் காலத்து மக்கள் பேச்சு வழக்கில் கண்ட பழமொழிகள் அவரைப் பெரிதும் கவர்ந்தன. சொற்சுருக்கமும், பொருட்பெருக்கமும் உடைய பழ மொழிகள் சிலவற்றைத் தாம் எடுத்தாண்டு மகிழ்ந்தார். மக்கள் பேச்சு வழக்கும், அவற்றது நுட்பமும் கற்றோரால் ஏத்தப்பெறுதல் வேண்டும் என்ற ஒரு மரபையும் இதனால் தோற்றுவித்துள்ளார். கனி இருப்பக் காய் கவர்தல், முயல்விட்டுக் காக்கைப்பின் செலல், ஏதன் போர்க்கு ஆதனாய் அகப்படல், இருட்டறையில் மலடு கறந்து எய்த்தல், விளக்கிருக்க மின்மினித் தீக் காய்தல், பாழூரிற் பயிக்கம் புக்கு எய்த்தல், கரும்பிருக்க இரும்பு கடித்து எய்த்தல் ஆகிய பழமொழிகள் அடிகளார் திரு வாக்கில் இடம் பெற்றுள்ளன. இவை அக்காலத் தமிழ் மாந்தரின் மனநிலை, அறிவுக் கூர்மை பற்றி இனிதுணர் வதற்குத் தக்க குறிப்புக்கள் என்று குறிப்பது மிகை யாகாது.

### 6. 5 குறுந்தொகை — கலிவிருத்தம் :

அடிகளார் ஒரு தலத்திலிருந்து மற்றொரு தலத்திற்குச் செல்லும்போதெல்லாம் பாடிய பாட்டுக்கள் குறுந்தொகை என்னும் புதிய வடிவம் பெற்றன. மிக எளிதான சந்த அமைப்புடன் கூடியனவாய், இறைவனை முன்னிலைப் படுத்தி வழிபடுவதற்கும், மக்களுக்கு அறிவுரை கூறுவதற்கும் ஏற்றனவாய் உள்ளன இப்பாக்கள். 'ஒருமா, கூவிளம், கூவிளம், கூவிளம்' என்ற கட்டளையை உடையன இப்பாட்டின் வரிகள். முதற்சீர் அடிதோறும் தேமா அல்லது புளிமாவாகவும், நான்காம் சீர் கருவிளம் அல்லது கூவிளமாகவும், இரண்டு மூன்றும் சீர்கள் பெரும்பாலும் விளச்சீர்களாகவும் அமைந்திருக்கும். பிற்கால இலக்கணத்தார், "கலிவிருத்தம்" என்ற பெயருடன் இப்புதிய இலக்கிய வடிவத்தைப் போற்றிப் பாடலாயினர். காப்பியக் கவிஞர்களும் இதனைக் கையாண்டு மகிழலாயினர். 'திருமந்திரம்' முழுதும் இந்த யாப்பிலேயே திகழ்கின்றது.

### 6. 6. திருவங்கமாலை :

உடலுறுப்புக்களை விளித்து, அவற்றை வழிபாட்டிற்கு நெறிப்படுத்தும் 'திருவங்கமாலை' இவரது புதிய படைப்பு. பிற்கால உலகு இதனை ஒரு முன்மாதிரியாக ஏற்றுப் போற்றலாயிற்று.[67]

67. (1) சொ. சிங்காரவேலன் — "அப்பர் வகுத்த இலக்கிய மரபுகள்" — சென்னைக் கல்வெட்டாராய்ச்சித்துறையினரின் பல்லவர் காலக் கருத்தரங்கிற்கு (1971) அனுப்பப் பெற்ற ஆய்வுக் கட்டுரை.

(2) "அப்பர் தேவாரத்திற்கெனத் தனி வியாகரணம் அவசியம்" என்று கலாநிலயம் Vol. 6. (No. 1—(.30) to No. 2 (p. 433) இதழில் ஈ. என். தணிகாசல முதலியார் எழுதிய "அப்பரும் அறுபத்து நான்கு கலைகளும்" என்ற கட்டுரைத் தொடரில் எழுதப்பெற்ற வரிகள், விரிவாகச் சிந்திக்கத் தூண்டின. (1933).

**7. நன்றி நவிலல்:**

சங்ககாலத்திற்குப் பின் பல்லவர் காலத்தே எழுந்த திருநாவுக்கரசர் தேவாரம் — அவ்விடைக்கால இலக்கண இலக்கிய இயல்புகளைக் கூர்ந்து நோக்கிட ஏற்ற துணை யாயுள்ளமை இங்குக் காட்டப்பெற்ற இக் கருத்துக்களால் இனிது தெளியப்பெறும். இறைவனுடைய அன்பில் ஈடு பட்ட அடிகளார் தம்மை மறந்து பாடிய தமிழ்ப்பாட்டுக் களேனும், வாழும் உலகிற்கு நெறிகாட்டும் வள்ளலார் பாட்டுக்களாதலின் இவற்றில் அக்கால நாட்டியல், பாட்டியல் பற்றிய உண்மைகள் ஒளிவிடுதல் இயல் பேயாகும். திருநாவுக்கரசர் பற்றிய இச் செய்திகளை ஆராய வாய்ப்பளித்த சென்னைப் பல்கலைக்கழகத்திற்கும், இதற்குத் துணை நின்ற பல்கலைக்கழகத் தமிழ்த்துறைத் தலைவர் டாக்டர் திரு. ந. சஞ்சீவி அவர்கட்கும் இக்கட்டுரை யாசிரியனின் நன்றிகள் உரியன. திருநாவுக்கரசர் தெய்வத் தமிழ் நீடு வாழ்க!

# 3

# ஏழாந் திருமுறை

## சுந்தரர் செந்தமிழ்

புலவர் மு. சண்முகம்பிள்ளை

### 1. தேவாரம்—இன்னிசைச் செந்தமிழ்

நால்வர் வளர்த்த சைவம் - திருத்தொண்டத் தொகை யருளிய திருவாளன் - தேவாரத் திருப்பாட்டு - சுந்தரர் திருப்பாட்டு - தேவாரம் இசைப்பா - சுந்தரர் இன்னிசைச் செந்தமிழ்.

### 2. சுந்தரர் பதிகப் பாமாலை

பதிகம் பாடும் மரபு - சுந்தரர் பாடிய பதிகத்தொகை —பண்முறையில் பதிகங்கள் - தேவாரப் பாவெல்லாம் கொச்சக ஒரு போகு - வண்ண வேறுபாடுகள் - இறைவன் விரும்பிய இசைப்பாட்டு - பலர் கூடிப்பாடும் இசைப் பாமாலை - பதிகப் பாடல்களின் போக்கு - சுந்தரர் வரலாறு மிளிரும் பதிகங்கள் - பொதுத் திருப்பதிகங்கள்; திருத் தொண்டத் தொகை - நாட்டுத் தொகை, ஊர்த்தொகை - நம்பி என்ற திருப்பதிகம் - விளித்திருப்பதிகம்.

### 3. ஐந்திணை வளமும் அகப்பொருள் நெறியும்

சங்கப் பாடல்களில் ஐந்திணைக் காட்சிகள் - சுந்தரர் தேவாரத்தில் மலைவளம் - மருதநிலக் காட்சிகள் - கானாட்டு முள்ளூர் வயல்வளமும் சோலை வளமும் - மருதநில மாந் தர் - நெய்தல் நிலக் காட்சிகள் - அகப்பாடல்கள் - தெய் வத் திருத்தொண்டரின் இறைமைக் காதல் - தூது பாடல்கள் - மங்கையர் காதல்.

### 4, பண்டைய மரபும் சுந்தரர் நெறியும்

தமிழ் மணம் - இயற்கையீடுபாடு - செருந்தி செம் பொன் மலரும் - பறவைகளைப் பாவையர் ஓட்டுதல் – திணைத்தாளன்ன செங்கால் நாரை - சிவன் திருமேனியும் செவ்வானமும் - கொடைவள்ளல் பாரி - பேயோடாடும் பெருமான் - சொல்லாட்சி - திருக்குறளும் சுந்தரர் வாக்கும் - நாலடியாரின் நன்மணம் - சம்பந்தர் நாவரசர் தமிழ் போற்றுதல்.

### 5. பாநலன்

நயத்துக்குச் சுந்தரனார் - உவமைச் சிறப்பு - பல பொருள் உவமை - பழிப்பது போலப் புகழ்தல் - சுவை நலம் நகையாடுதல் - பழமொழி போற்றுதல் - பத்திப் பனுவல்.

## இலக்கிய நயமும் இலக்கண நுட்பமும்

### தேவாரம்—1. இலக்கணச் செந்தமிழ்

‘சொற்கோவும் தோணிபுரத் தோன்றலும்என் சுந்தரனும்
சிற்கோல வாதவூர்த் தேசிகனும்—முற்கோலி
வந்திலரேல், நீறெங்கே? மாமறைநூல் தான்எங்கே?
எந்தைபிரான் ஐந்தெழுத்தெங் கே?’

(பெருந்தொகை, 1873)

சைவ சமயகுரவர் நால்வரும் தமிழகத்திற்குப் புரிந்த திருப்பணியை இவ்வெண்பா கூறுகின்றது. இது ‘சிவா னந்த மாலை’ என்னும் நூலில் உள்ளது. இதனை வெளி யிட்டவர் (1904), எஸ். அனவரத விநாயகம் பிள்ளையவர் களாவர். இச்செய்தி திருச் சிற்றம்பலம் மு. அருணசலம் அவர்கள் வாயிலாய்த் தெரியவந்தது. இவ்வெண்பா நினைவூட்டுவதோடு அவர் தம் மெய்ப்புகழையும் இம் மேதினியோருக்கு நன்கு எடுத்துக் காட்டுகிறது.

#### நால்வர் வளர்த்த சைவம்

சைவசமயம் தமிழகத்தில் தழைத்தோங்கத் திருத் தொண்டு புரிந்தவர்களுள் தலைநிற்பவர் அச் சமய குரவர்

நால்வருமே. எம்பெருமான் ஐந்தெழுத்து எத்திக்கிலும் பரவத் தலயாத்திரை செய்து, சமய நெறியையும் அந்நெறி சார் தமிழையும் தழைக்கச் செய்த பெருமை சிறப்பாக அந்நால்வரையுமே சாரும்.

### திருத்தொண்டத் தொகையருளிய திருவாளன்

நால்வருள்ளும் சிவனடியார்களின் திருத்தொண்டு களையும் பத்தித் திறங்களையும் உலகமறியச் செய்த பெருமை சுந்தரருக்கே உரியதாகும். முதன்முதலாகத் திருத் தொண்டத் தொகையைப் பாடித் தில்லை வாழ் அந் தணர் முதலாக நாயன்மார்களை உலகிற்கு அறிமுகம் செய்து வைத்தவர் இவரே. பின்னர், நம்பியாண்டார் நம்பி 'திருத்தொண்டத் தொகை' பாடவும் சேக்கிழார் பெருமான் 'திருத்தொண்டர் புராணம்' பாடவும் மூல முதற்பொரு ளாய் அமைந்தது சுந்தரரின் திருத்தொண்டத் தொகையே தான்.

'தம்பிரான் தோழரவர் தாம் மொழிந்த தமிழ் முறையே
எம்பிரான் தமர்கள்திருத் தொண்டேத்தல் உறுகின்றேன்'
(பெரிய. தடுத்தாட். 203)

என்று சேக்கிழார் பெருமான் தடுத்தாட்கொண்ட புராணத் தின் முடிவில் கூறித் 'தில்லை வாழ்ந்தணர் புராணம்' பாடத் தொடங்குகின்றார். மேலும், தடுத்தாட்கொண்ட புராணம் வரை அடியார் பெருமையை அனைவரும் அறியச் செய்யத் திருமலையிலிருந்து சிவனருளால் அவனிக்கு வந்த சுந்தரர் சரிதத்தின் முற்பகுதி, - திருத்தொண்டத் தொகையருளி யது வரை - பாயிரமாக அமைய, அதற்குச் சேக்கிழார், 'திருமலைச் சருக்கம்' எனப் பொருத்தமுறப் பெயர் சூட்டி யுள்ளார்.

'நேசம் நிறைந்த உள்ளத்தால்
நீலம் நிறைந்த மணிகண்டத்து
ஈசனடியார் பெருமையினை
எல்லா உயிரும் தொழளடுத்துத்
தேசம் உய்யத் திருத்தொண்டத்
தொகைமுன் பணித்த திருவாளன்
வாச மலர்மென் கழல்வணங்க
வந்த பிறப்பை வணங்குவாம்'
(பெரிய. சண்டேசு. 60)

என்று தெய்வச் சேக்கிழாரே, சுந்தரர் திருத்தொண்டத் தொகை அருளிய பெருஞ்சிறப்பினை எடுத்துக்கூறி, அவர் தம் திருவடிகளுக்கு வணக்கம் செலுத்துவதனால், அவர் தம் அளப்பரும் பெருமை புலப்படும்.

### தேவாரத் திருப்பாட்டு

சுந்தரரும் இவருக்கு முன் ஒரே காலத்தில் வாழ்ந்த சம்பந்தரும் அப்பரும் பாடிய துதிப்பாடல்கள் எல்லாம் 'தேவாரம்' என்னும் சிறப்புப் பெயரால் அழைக் கப்படுகின்றன. அவற்றைத் 'திருப்பாட்டு' எனவும் வழங் குவர்.

> ' மூவாத பேரன்பின் மூவர் முதலிகளும்
> தேவாரம் செய்த திருப்பாட்டும் '
>
> (ஏகாம்பர. உலா. 78)

என இரட்டையர் தாம் பாடிய ஏகாம்பரநாதர் உலாவில் ' திருப்பாட்டு ' என மூவர் வாக்குகளையும் குறிப்பிட் டுள்ளனர்.

இவ்வழக்கு நீண்ட நெடுங்காலமாக உள்ளது என் பதனைப் பழைய உரைகாரராகிய நச்சினார்க்கினியர் வாக் கினாலும் உணரலாகும். 'தரவின்றாகித் தாழிசை பெற்றும்' எனத் தொடங்கும் தொல்காப்பியச் செய்யுளியல் நூற் பாவின் (தொல். செய்யு. 149) உரையில் 'பதிகப்பாட்டு' பற்றிய ஒரு விளக்கம் தருகின்றார் உச்சிமேற் புலவர் கொள் நச்சினார்க் கினியர்:

> 'இனி பத்தும் பதினொன்றும் பன்னிரண்டுமாகி
> ஒரு பொருள்மேல் வரும் பதிகப்பாட்டு
> நான்கடியின் ஏறாது வருதலும், அங்ஙனம்
> வருங்கால் தாழ்ந்த ஓசை பெற்றும் பெறாதும்
> வருதலும், அவை யிருசீ ரெண்முதல் எண்
> சீரளவும் வருதலும் என்பது இன்னோரன்ன
> பல பகுதியெல்லாம் வரையறையின்றித் தழுவப்
> பட்டன. இவ்வேறுபாடெல்லாம் உளவேனும்
> தாழம்பட்ட ஓசை பெரும்பான்மையவாதலின்
> தாழிசை என்றார் ..................

'பதிகப்பாட்டிற்கு ஈண்டுக் கூறிய
வேறுபாடுகள் திருவாய்மொழி, திருப்பாட்டுத்
திருவாசகம் என்கின்ற கொச்சக வொரு
போகுகளிற் காண்க.'

இங்கே பதிகப்பாட்டுக் கொண்ட நூல்களாகத் திருவாய் மொழி, திருப்பாட்டு, திருவாசகம் என்பவை எடுத்துக் காட்டப்பட்டுள்ளன. தேவாரப் பதிகங்களையே 'திருப் பாட்டு' என நச்சினர்க்கினியர் இவ்விடத்துச் சுட்டி யுள்ளார் என்பது தெளிவு.

**சுந்தரர் திருப்பாட்டு**

தவிரவும் சம்பந்தர் தேவாரத்தைத் 'திருக்கடைக் காப்பு' என்றும், நாவுக்கரசர் தேவாரத்தைத் 'தேவாரம்' என்றும், சுந்தரர் தேவாரத்தைத் 'திருப்பாட்டு' என்றும் சிறப்பித்துக் கூறும் வழக்கின்படி 'திருப்பாட்டு' என்பது சுந்தரர் பாடல்களுக்குரிய சிறப்புப் பெயராகவும் திகழ்வது தெரியவரும்.

**தேவாரம் இசைப்பா**

தேவாரம் என்னும் பெயர் வழக்கிற்குப் பல்வேறு காரணங்கள் கட்டுரைக்கப் படுகின்றன.* எனினும், 'தெய்வத்தைக் குறித்து அன்புடன் இசைக்கப் பெற்ற இசைப்பா' என்று கொள்வதே சிறப்பாகும். தேவாரப் பாடல்கள் எல்லாம் இசைநலம் விரவிய நற்றமிழ்ப் பனுவல்களாம்.

தமக்கு முற்பட்ட காலத்தில் வாழ்ந்து திருப்பாடல்கள் பாடி, இறைவழிபாடு புரிந்த திருஞான சம்பந்தர், திருநாவுக்கரசர் என்னும் இருவருடைய பாடல் தொண் டினையும், சுந்தரர் போற்றியுரைக்கு மிடத்துப் பின்வரு மாறு குறிப்பிடுகின்றார்.

'நாளும்இன் னிசையால் தமிழ்பரப்பும் ஞானசம்பந்தன்'
(7; 62, 8)

---

*தெய்வத் தன்மை பொருந்திய பாமாலை (தே ஆரம்)
தேவனுக்கு உரிமையாயுள்ளது (தே — வாரம்)
பூசிக்கத் தகுந்தது ; போற்றத்தக்கது :

'இணைகொள் ஏழெழுநூ றிருபனுவல்
ஈந்தவன் திருநாவினுக் கரையன்' (7, 65, 2)

'நல்லிசை ஞானசம் பந்தனும் நாவினுக்
கரசரும் பாடிய நற்றமிழ் மாலை' (7, 67, 5)

திருஞானசம்பந்தரும் திருநாவுக்கரசரும் எந்நாளும் இசையுடன் பயின்ற பாடல்கள் பாடி நல்ல பல தமிழ்ப் பாமாலைகளை இறைவன் திருவடிகளில் சாத்தியமையை வரலாற்று முறைமையில் புகழ்ந்து போற்றியுள்ளார் சுந்தரர்.

**சுந்தரர் இன்னிசைச் செந்தமிழ்**

முன்னையிருவர் பாடல்களைப் போன்றே சுந்தரர் பாடல் களும் பண்ணார் இன்தமிழ்ப் பாடல்களே என்பதை அவர் தம் வாக்கினல் அறியலாகும். இறைவனையே இசைத் தமிழ் வடிவினனுகக் கொண்டு,

'பண்ணார் இன்தமிழாய் பரமாய பரஞ்சுடரே!' (7, 24, 5)

என்றும்

'பண்ணிடைத் தமிழ் ஒப்பாய்' (7, 29, 6)

என்றும் போற்றுகின்றார் சுந்தரர்.

தம்முடைய பாடல்களைக் குறித்துப் பேசுமிடத்து,

'அருந்தமிழ்' (7, 9, 11 ; 7, 55, 10 ; 7, 72, 11)
'இன்தமிழ்' (7, 85, 10 ; 7, 100, 10)
'ஒண்தமிழ்' (7, 40, 11 ; 7, 52, 10)
'செந்தமிழ்' (7, 67, 11)
'தண்டமிழ்' (7, 4, 10 ; 7, 70, 10 ; 7, 84, 10)
'நற்றமிழ்' (7, 3, 10 ; 7, 61, 11 ; 7, 88, 10)
'வண்டமிழ்' (7, 75, 10 ; 7, 83, 6)

என்று அவற்றின் அருமை, இனிமை, செழுமை, வளமை களை எடுத்து ஓதியதோடு மட்டுமன்றி, அவையெல்லாம்

'இன்னிசைப் பாமாலை' என்பதனையும் தெளிவுபடுத்தியுள்ளார் :

'ஒலி கொள் இன்னிசைச் செந்தமிழ்' (7, 67, 11)
'ஏழிசை இன்தமிழ்' (7, 100, 10)
'சந்தம் மிகு தண்தமிழ் மாலைகள்' (7, 4, 10)
'பாலாந் தமிழ் பத்து' (7, 64, 10)

எனவே, தேவாரப் பாடல்கள் எல்லாம் பண்ணார் பாடல்கள் என்பது வெள்ளிடைமலை.

## 2. சுந்தரர் பதிகப் பாமாலை

### பதிகம் பாடும் மரபு

தமிழில் பத்துப் பாடல்கள் கொண்ட பதிகம் என்னும் பாப்புனையும் வழக்குத் தொன்றுதொட்டு வருவதாகும். எட்டுத்தொகை நூல்களுள் ஒன்றாகிய பதிற்றுப்பத்து புறம்பற்றிய பப்பத்துப் பாடல்கள் கொண்ட பதிகப்பாமாலை என்பது யாவரும் அறிந்ததே. இது ஆசிரியப் பாவால் ஆகிய பதிகப்பாமாலை. ஒவ்வொரு பத்தின் இறுதியிலும், அவ்வப்பத்திற்குரியபாட்டுடைத் தலைவனின் குடிவழியும், படைச்சிறப்பும், கொடைச்சிறப்பும் முதலியவற்றைத் தொகுத்துத் தரும் பதிகம் என்னுந் தொகுப்புரைப்பகுதி அமைந்துள்ளது. இந்நூலின் நான்காம் பத்தில் அந்தாதி முறையைப் புகுத்திப் பதிக வகையில் ஒரு புதுமையைத் தருகிறார் காப்பியாற்றுக்காப்பியனார்.

ஐங்குறுநூறு என்னும் அகப்பொருள் நூலுள் ஒவ்வொரு நூறும் பத்துப்பத்துப் பாடல்கள் கொண்ட பத்துப் பகுதிகளாக உள்ளது. கீழ்க்கணக்கு நூல்களில் திருக்குறளும் நாலடியாரும் அதிகாரத்திற்குப் பத்துப்பாடல்களைக் கொண்டு திகழ்கின்றன. இந்த மரபைத் தொடர்ந்தே தேவார ஆசிரியர்களும் திருவாசகம் அருளிய மணிவாசகரும் சென்றுள்ளனர்.

### சுந்தரர் பாடிய பதிகத் தொகை

சுந்தரர் அருளிய திருப்பதிகம் முப்பத்தெண்ணாயிரமென்று 'திருமுறைகண்ட புராணம்' கூறுகின்றது.

இத்தொகை அக்காலத்து வழங்கிய செவிவழிச் செய்தி யினைக் கொண்டு கூறியது போலும். ஆனல், திருமுறை கண்ட புராணம் பாடிய உமாபதி சிவமே மேலும் அப்புராணத்தில்,

'நூற்றினல் வன்ரெண்டர்' என்று சுந்தரர் பதிகம் நூறே அவர் காலத்துக் கிடைத்தமையையும் புலப்படுத்தி யுள்ளார். தேவாரம் பாடிய மூவர் பதிகப்பாடல்களிலும் மிகக் குறைவான எண்ணிக்கையில் நமக்குக் கிடைத்திருப் பது சுந்தரர் தேவாரமே. ஏழாந்திருமுறையாக அடைவு செய்யப்பெற்ற இவரது தேவாரம், 'பித்தா பிறை சூடி' என்னுந் திருப்பதிகம் தொடங்கி, 'தா னெனை முன் படைத் தான்', என்னும் திருப்பதிகம் ஈருக 100 திருப்பதி கங்களைக் கொண்டுள்ளது.

இத்திருமுறைப் பதிகங்களுள் பெரும்பாலனவும் பத்துச் செய்யுட்கள் கொண்டனவாகவே இருக்கின்றன; சிற்சில பதிகங்களே பதினென்று அல்லது பன்னிரண்டு பாக்களும் கொண்டனவாகக் காணப்படுகின்றன.

'ஆரூரன் உரைத்தன நற்றமிழின்
மிகு மாலையொர் பத்திவை கற்றுவல்லார்' (7—3—10

என்றும்,

'அடிகேள் உமக்காட்செய அஞ்சுதும் என்
நமரர் பெருமானை ஆரூரன் அஞ்சி
முடியால் உலகாண்ட மூவேந்தர் முன்னே
மொழிந் தாறு மோர் நான்குமோ ரொன்றினையும்
(7—2—11)

என்றும் சுந்தரர் தமது வாக்கிலேயே அப்பதிகங்கள் பத்தும் பதினென்றுமாக உள்ளமையைத் தெரிவித் துள்ளார்.

இவர் பாடிய பாடற்ருெகை இப்போது உள்ளபடி 1026—தான்.

ஆனல், இவர் பாடிய பதிகங்கள் இவ்வெண்ணிக்கை யினும் மிக அதிகமாக இருக்கலாமென்று ஊகிக்க

இடமுண்டு. சேக்கிழார் பெருமான், நம்பி ஆரூரர் 114 தலங்களுக்குச் சென்று தேவாரப் பதிகம் அருளியதாகக் குறிப்பிட்டுள்ளார். அவற்றுள் 31 திருப்பதிகளுக்கு இவர் பாடிய பதிகங்கள் கிடைக்கவில்லை. அப்பதிகங்கள் சேக்கிழார் காலத்து இருந்தனவென்றும் பின்னர் அழிவுற்ற பதிகங்களில் இவையும் உள்ளடங்கியன என்றும் நாம் கொள்ள இடமுண்டு.

இப்பொழுது 83 தலங்களுக்குரிய பதிகங்கள் கிடைத்துள்ளன. திருவாரூருக்கு மிகுதியாக 6 பதிகமும் திருநின்றியூர், திரு ஒற்றியூர், திருவாவடுதுறை, திருமுதுகுன்று ஆகிய 4 திருப்பதிகட்கு 4 பதிகமும் ஆக 93 பதிகமாகும். இவற்றோடு பொதுப் பதிகங்களாகிய (1) திருத்தொண்டத் தொகை (2) ஊர்த்தொகை. (3) திருநாட்டுத்தொகை, (4) 'முடிப்பது கங்கை', (5) 'நம்பி' என்ற திருப்பதிகம் (6) 'நமக்கடிகளாகிய அடிகள்' என்னும் பதிகம் ஆகிய ஆறும் சேர 99 பதிகங்களாம். சேக்கிழார் பெருமான் சுந்தரர் தரிசிக்கச் சென்றதாகச் சொல்லாது விடுத்த 'திருவிடையாறு' என்னும் தலப் பதிகமும் இத்திருமுறையில் உள்ளது. ஆக 100 பதிகங்கள் இப்போது உள்ளன என்பது தெளிவு.

### பண்முறையில் பதிகங்கள்

இத்திருமுறைப் பதிகங்கள் 'இந்தளம்' முதல் 'பஞ்சமம்' ஈறாக 17 பண்களுக்குரியனவாகக் காணப்படுகின்றன. இந்தப்பண் அடைவிலேயே தேவாரப் பதிகங்கள் அச்சிட்டு வழங்குகின்றன.

இந்தப் பண்களுக்குத் தனித்தனிக் கட்டளைகளும் உளவெனத் திருமுறைகண்ட புராணம் விளக்கும். கட்டளை என்பதற்கு 'விருத்தபேதம்' என்றும், இக்காலத்து வழங்கும் 'வர்ணமெட்டு' அல்லது 'தாளபேதம்' என்றும் வேறுபட்ட கருத்துகள் வழங்கி வருகின்றன. பெரும் புலவர் முத்துத்தாண்டவராய பிள்ளை, 'சீரும், தூக்கும், பாணியும் பற்றிக் கட்டளை கொள்ளப் பட்டது' என்கிறார். எனவே, இக்கட்டளை என்பது இசைத்தமிழின் ஒரு கூறு என்று கொள்ளலாம்.

**தேவாரப் பாவெல்லாம் கொச்சக ஒருபோகு**

தொல்காப்பியனர் கலிப்பாட்டின் வகையாகத் 'தேவ பாணி' என்ற ஒன்றைக் குறித்துள்ளார். இதனை 'வண்ணகம்', 'ஒருபோகு' என இரண்டாக்கியும் அவற்றுள் 'ஒரு போகினை'க் 'கொச்சக ஒரு போகு' 'அம்போதரங்க ஒரு போகு' என மேலும் பகுத்துரைப்பர். இவற்றுள் கொச்சக ஒருபோகின் தன்மையைப் பின் வருமாறு விளக்குகிருர் :

'தரவின் ருகித் தாழிசை பெற்றும்
தாழிசை யின்றித் தரவுடைத் தாகியும்
எண்ணிடை யிட்டுச் சின்னங் குன்றியும்
அடக்கிய லின்றி யடி நிமிர்ந் தொழுகியும்
யாப்பினும் பொருளினும் வேற்றுமை யுடையது
கொச்சக ஒருபோ காகும் என்ப'

(செய்யுளியல் — 149)

இச்சூத்திர உரையில் பேராசிரியர், நச்சினர்க்கினியர், ஆகியோர் தேவாரப் பதிகங்களும். திவ்வியப் பிரபந்தப் பாசுரங்களும் தொல்காப்பியத்துள் காட்டிய விதியின்படி, கொச்சக ஒருபோகுவின் பாற்படும் என்று நன்கு விளக்கியுள்ளார்கள்.

தேவர்ப் பராவிய திருப்பதிகள் உலகியலின்பம் என்றளவில் நில்லாமல் பேரின்பமாகிய வீடுபேற்றினைக் குறிக்கோளாகக் கொண்டு பாடப்பெற்றவை எனக் கொள்ள வேண்டும். இவையெல்லாம் இயல், இசை, சந்தப்பாடல்களுக்குரிய மூல இலக்கியங்களாகக் கொண்டு போற்றத்தக்கன.

**வண்ண வேறுபாடுகள்**

இப்பாடல்களின் வண்ண வேறுபாடுகள் இவற்றைப் பல்வேறு இசையமைதி உடையனவாகச் செய்கின்றன. இயற்றமிழின் இயல்புப்படி சீர்வகை செய்து பார்ப்பின் நாற்சீர் முதல் எண்சீர் அளவும் கொண்ட பாடல்கள் இத் திருமுறையில் அமைந்துள்ளமை தெரியவரும். இசை யமைதிக்கேற்ப இவற்றைச் சீர் பிரிப்பதில் சிற்சில வேறு பாடுகளும் தோன்றும். ஒருசில பாடல்கள் கட்டளைக்

கலித்துறை வகையில் அமைந்துள்ளன. இயலும், இசையும் உடன்பொருந்த 'தான, தானன, தனன தனஞ' முதலிய சந்தக்குறிப்புக்களைக் கொண்டும் இப்பாடல்கள் அறுதியிட்டு வாசிக்கத் தக்கவையாம்.

இப்பதிகங்களுக்குரிய பண்களும் கட்டளைகளும் திருமுறைகண்ட புராணம் தோன்றுவதற்கு முன்னிருந்தே வழங்கி வருகின்றன என்பது தெளிவு. எனவே இப் பண்களின் பழமையும் புலனுகும்.

**இறைவன் விரும்பிய இசைப்பாட்டு**

இறைவன் இசைநலம் வாய்ந்த இத் திருப்பாட்டுகளில் பெருவிருப்புடையனுய் இருந்தான். இறைவனுல் ஆட்கொள்ளப்பெற்ற சுந்தரரைத் தமிழ்ப்பாட்டுப்பாடு என்றும் அதுவே தமக்கு விருப்புடைய அர்ச்சனை ஆகும் என்றும் இறைவன் தன் பெரு விருப்பத்தை அவரிடம் தெரிவித்தாகச் சேக்கிழார் பெருமான் அறிவிக்கின்றூர் :

'மற்று நீ வன்மை பேசி
வன்தொண்டன் என்னும் நாமம்
பெற்றனை நமக்கும் அன்பில்
பெருகிய சிறப்பில் மிக்க
அர்ச்சனை பாட்டே ஆகும்
ஆதலால் மண்மேல் நம்மைச்
சொற்றமிழ் பாடு கென்றூர்
தூ மறை பாடும் வாயார்'.

(பெரிய. தடுத்தாட்—510)

இதனுல் வழிபாட்டு நிகழ்ச்சிகளில் தமிழ்மொழி முதலிடம் பெற்று விளங்கியமை தெரியவரும். இது,

"செந்தமி ழோர்கள் பரவியேத்தும்
சீர்கொள் செங்காட்டங் குடியதனுள்
கந்தம் அகிற் புகையே கமழும் கணபதியீச்சரம்" (1—6—9)

எனவும்,

'தம்மல ரடியொன் றடியவர் பரவத்
தமிழ்ச் சொலும் வடசொலுந் தாள் நிழற்சேர

அம் மலர்க் கொன்றை யணிந்தஎம் அடிகள்
அச்சிறு பாக்கம தாட்சி கொண்டாரே' (1—77—4)

எனவும்,

"செந்தமிழர் தெய்வ மறை நாவர் செழு
நற்கலை தெரிந்த அவரோடு
அந்தமில் குணத்தவர்கள் அர்ச்சனைகள்
செய்ய அமர்கின்ற அரனூர்......வீழிநகரே" (3—80—4)

எனவும் வரும் சம்பந்தர் திருவாக்கால் நன்கு தெளிவுறும்.

**பலர் கூடிப்பாடும் இசைப்பாமாலை**

தேவாரத் திருப்பாட்டுகள் தனியே இறைவனைப் பாடிப் பரவுவதன்றிப் பத்தர் பலரும் சேர்ந்து பாடும் நிலையிலும் உள்ளன. சுந்தரர் தலங்கள் தோறும் சென்று இறைவனை வழிபட்ட காலத்தும் அடியார் பலர் அவருடன் சென்றமையை அவர் சரிதத்தால் உணர்கிறோம். எனவே, இசையுடன் பலரும் சேர்ந்து பாடும் நிலையில் இப்பதிகங்கள் உள்ளன. சுந்தரர் தமது பாடல்களைக் குறித்துத் திருக்கடைக்காப்புச் செய்யுளில் தரும் குறிப்புகளும் நமக்கு இவை இசைநலம் சான்றவை என்பதைப் புலப்படுத்தும்.

'நண்புடைய நன்சடையன் இசைஞானி சிறுவன்
நாவலர் கோன் ஆரூரன் நாவினயந் துரைசெய்
பண்பயிலும் பத்துமிவை பத்திசெய்து நித்தம்
பாடவல்லார் அல்லலொடு பாவமிலர் தாமே' (7—6—11)

'உளங் குளிர் தமிழ் மாலை' (7—29—10)

'ஒலிகொள் இன்னிசைச் செந்தமிழ்பத்தும்' (7—67—11)

'மந்த முழவம் இயம்பும் வளவயல் நாவலாரூரன்
சந்தம் இசையொடும் வல்லார்' (7—73—11)

'ஏழிசை யின்றமிழால் இசைந்தேத்திய பத்தினையும்
ஆழி கடலரையா அஞ்சையப்பர்க் கறிவிப்பதே' (7—100—10)

இவ்வாறாகச் சுந்தரரே தம்முடைய பாடல் ஏழிசை இன்தமிழால் இசைந்தேத்தியது என்பதனைப் புலப்படுத்தியுள்ளார்.

சேக்கிழார் பெருமானும், நம்பியாரூரர் பண்ணல் இன்னிசை பாடிப் பரமனை வழிபட்டார் என்று பெரியபுராணத்தும் எடுத்துக்காட்டியுள்ளார்.

'முறையால்வரு மதுரத்துடன் மொழியிந்தள முதலிற்
குறையாநிலை மும்மைப்படி கூடுங்கிழமையினல்
நிறைபாணியின் இசைகோள்புணர் நீடும்புகழ் வகையால்
இறையான்மகிழ் இசைபாடினன் எல்லாம் நிகரில்லான்.'

(பெரிய. தடுத்தாட். 75)

சேக்கிழார் பெருமான் வாக்கினுலும் சுந்தரர் திருப்பாடல்கள் செந்தமிழ்ச் சந்தப் பாடல்கள் என்பது விளங்கும்.

### பதிகப்பாடல்களின் போக்கு

பதிகப்பாடல்கள் ஒவ்வொன்றும் ஒரு முக்கியமான கருத்தை மையமாகக் கொண்டுள்ளன. ஒவ்வொரு பதிகத்தின் முதற்பாடலின் ஈற்றடியாக அமைகின்ற சொற்பொருட்கருத்தே அவ்வப்பதிகப் பாடல்கள் முடியும் வரையிலும் எல்லாப் பாடல்களிலும் அமைந்து விளங்குகின்றன. இது இசைப்பாடல்களில் அமையும் பல்லவி போன்ற மகுடமாகக் காணப்படுகின்றது. பொதுவாகப் பார்க்கும் போது பலரும் சேர்ந்து வழி நடக்கும்போது வழி நடை வருத்தம் தெரியா வண்ணம் பாடிச் செல்லும் வழிநடைப் பாடல்கள் போலவும் உள்ளன.

'புறம்பயந் தொழப் போதுமே' (7. 35. 1)
'பரிவுடையார் உறை பூவணம் ஈதோ' (7—11—1)
'எதிர் கொள்பாடி என்பதடை வோமே' (7—7—1)
'கையன் இடம்......கச்சி அனேகதங் காவதமே' (7—10—1)

இவ்வாறு வரும் தொடர்கள் வழிநடைப் பாடல்களாக அமைந்தவை திருப்பாட்டுகள் என்பதை நமக்குக் காட்டும்.

வேறு சில பாடல்கள் திருக்கோயிலைச் சிறப்பித்தும் பெருமான்புகழ் பாடியும் அமைகின்றன.

'நன்மையி னர்க்கிடம் ஆவது நாவலூரே' (7—17—2)
'நீல நஞ்சுண்டவர்க் கிடமாம் திருநின்றியூரே' (7—19—9)

‘காளைவண்டு பாடமயி லாலும் வளர்சோலைக்
கானாட்டு முள்ளூரிற் கண்டு தொழுதேனே’ (7—40 4)

‘காதில் வெண்குழையனைக் கடல்கொள மிதந்த
கழுமல வளநகர் கண்டு கொண்டேனே’ (7—58—1)

‘கொற்றவில் லங்கை யேந்திய கோனைக்
கோலக் காவினில் கண்டு கொண்டேனே!’ (7—62—1)

நெஞ்சை விளித்துப்பாடும் பதிகங்களும் சில உள; திருப் புறம்பியத்தைப் பற்றிய 35-ஆம் பதிகம் முழுவதும் ‘நெஞ்சமே!’ என விளித்து நெஞ்சை நோக்கி கூறுவதாகவே அமைந்துள்ளது.

‘அங்க மோதியோ ராறை மேற்றரை
நின்றும் போந்துவந் தின்னம்பர்த்
தங்கி னேமையு மின்னதென்றிலர்
ஈசனாரெழு நெஞ்சமெ!
கங்கு லேமங்கள் கொண்டு தேவர்கள்
ஏத்தி வானவர் தாந்தொழும்
பொங்கு மால்விடை யேறி செல்வப்
புறம்பயந்தொழப் போதுமே’ (7, 35, 1)

இது இப்பதிகத்தின் முதற்பாட்டு. திருத்தினை நகர்ப் பெருமானைத் துதிக்கும் பதிகம் முற்றும்,

‘சிவக் கொழுந்தினைச் சென்றடை மனனே!’ (7, 64, 1—9)

என்று மனத்திற்குக் கட்டளை இடுவதாக அமைந்துள்ளது.

நெஞ்சை விளித்து உரைத்ததுபோலவே மன்னரையும் புலவரையும் மற்றும் மக்களையும் விளித்து அவர்க்கு நல்லுரை கூறும் வகையில் அமைந்த பதிகப்பாடல்களும் நம் உள்ளத்தைக் கவர்வன :

‘மத்த யானை யேறி மன்னர் சூழ வருவீர்காள்
செத்தபோதி லாருமில்லை சிந்தையுள் வைம்மின்கள்
வைத்தவுள்ள மாற்ற வேண்டா வம்மின் மனத்தீரே
அத்தர் கோயி லெதிர்கொள்பாடி யென்ப தடைவோமே!’

வாழ்க்கைப் பொருட்டாக உலகில் வாழும் சில்வாழ் நாள் பல்பிணிச் சிற்றறிவுடைய மக்களுள் செல்வர் முதலியோரைப் புகழ்ந்து பாடிப் பொருள் பெற்றுவாழ நினைக்கும்

புலவர்களை நோக்கி அறிவுரை கூறுவதாக உள்ளது 34-ஆவது திருப்பதிகம்:

‘ தம்மை யேபுகழ்ந் திச்சை பேசினுஞ்
சார்வினுந் தொண்டர் தருகிலாப்
பொய்மை யாளரைப் பாடாதே யெந்தை
புகலூர் பாடுமின் புலவீர்காள் !
இம்மையே தருஞ் சோறுங் கூறையும்
ஏத்த லாமிடர் கெடலுமாம்
அம்மை யேசிவ லோக மாள்வதற்
கியாதும் ஐயுற வில்லையே’ (7—34—7)

திருப்புகலூரைக் குறித்த இப்பதிகம் முற்றுமே புலவர்களை விளித்து அவர்க்கு நல்லுபதேசம் செய்யும் வகையில் அமைந்துள்ளது.

இங்ஙனமாக உலகிற்கு நன்னெறி காட்டும் வகையில் அமைந்த அறிவுரைகளும், இறைவனுடைய திருக்கோலத்தையும், அவனுடைய திருவருட்செயல்களையும் நினைந்து பாடிய செய்திகளும் பாடல்கள் தோறும் விரவி வருகின்றன.

இனி, பெரும்பான்மைப் பதிகங்களும் நம்பியாரூரரின் வாழ்க்கை வரலாறாகவே அமைந்திருக்கின்றன என்னலாம். இறைவன் ஆட்கொண்டது முதல் கயிலைக்கு அழைத்துக் கொண்டதுவரை அவர்தம் வாழ்க்கையில் நிகழ்ந்த பல நிகழ்ச்சிகளும் தொடர்ந்து பதிகங்களில் காணப்படுகின்றன. நம்பியாரூரர் திருநாவலூரில் சடையனார், இசை ஞானியார் ஆகியோர்க்குத் திருக்குமரனாகப் பிறந்து, நரசிங்க முனையரையரால் வளர்க்கப் பெற்று, இறைவன் அருட்கு ஆளாகித் திருப்பதிகம் பாடத் தொடங்குகிறார். முன்னை, வினைவழி இறைவன் அருளாணைப்படி, திருவாரூரில் பரவையாரையும், திருவொற்றியூரில் சங்கிலியாரையும் திருமணம் செய்து கொள்கிறார். சேரமான் பெருமாள் நாயனாரோடு நட்புப் பூண்டு அவருடன் சேர்ந்தும் சில தலங்களுக்குச் சென்று வழிபடுகிறார். தாம் உரைத்த உறுதிமொழி தவறியதற்காகக் கண்ணிழந்து மீண்டும் கண்பெறுகிறார். இறைவன் அருளால் கண்பெற்றது மட்டுமன்றித் தமக்கு வேண்டும் போகபோக்கியங்களையும்

இறைவனிடமே வேண்டுகிருர். இறைவன் இவருக்காகப் பொன்னளிக்கிருர்; பொதிசோறு அளிக்கிருர்; இரந்து வந்தும் உணவு ஊட்டுகிருர். இறைவனிடம் தோழமை நெறியில் நின்று அசதியாடி வேடிக்கையாக விளையாடிப் பாடிப் பரவுகின்ருர். இறைவன் அருளால் செங்கல் பொன்னுக மாறுகிறது; காவிரி ஆறு விலகி வழி விடுகிறது. இறைவன் திருவருளால் முதலை விழுங்கிய பாலனைச் சுந்தரர் வரவழைத்தும், பிறவாறும் சில அற்புதங்களைச் செய்கிருர். இவை எல்லாவற்றையும் குறித்த குறிப்புகள் அவர்தம் திருப்பாடல்களில் உள்ளன.

'வெங்கரா வுண்ட பிள்ளையை நல்குமே
வெள்ளை யானையின் மீதேறிச் செல்லுமே
மங்கை பாகனைத் தூது நடத்துமே
மருவி யாறு வழிவிட நிற்குமே
செங்க லானது தங்கம தாக்குமே
திகழும் ஆற்றிட்டுச் செம்பொன் எடுக்குமே
துங்க வான்பரி சேரற்கு நல்குமே
துய்ய நாவலூர்ச் சுந்தரர் பாடலே' (பெருந். 1876)

எனவரும் தனிப்பாடல் சுந்தரர் பாடல்களால் நிகழ்ந்த அற்புதங்கள் முதலியவற்றைத் தொகுத்துத்தந்து, அவருடைய பாடல்களின் அற்புதத் தெய்வத் தன்மையையும் எடுத்துக் காட்டுகிறது:

ஒவ்வொரு பதிகத்திலும், திருக்கடைக்காப்பில் தம்மையும் தமது தமிழையும் அத்தமிழை ஓதுவார் பெறும் பயனையும் உரைக்கும் பகுதிகளும் சுந்தரரின் வாழ்க்கை வரலாற்றுக் குறிப்புகளைத் தருகின்றன. இவ்வாருக, இவர்தம் பதிகங்களில் இறைவன் திருப்புகழ்களும் சுந்தரரின் வாழ்க்கை நிகழ்ச்சிகளும் இணைந்தே வரக் காண்கிரேம்.

**பொதுத் திருப்பதிகங்கள்: திருத்தொண்டத்தொகை**

இவருடைய திருப்பதிகங்களில் தனிப்படச் சிறந்து விளங்கும் சில பொதுத் திருப்பதிகங்களும் உள. அவற்றுள் அறுபான் மும்மை நாயன்மார்களையும் அறிமுகப்படுத்தும் திருத்தொண்டத் தொகை ஒன்று.

‘தில்லைவா ழந்தணர் தம் மடியார்க்கு மடியேன்
திருநீல கண்டத்துக் குயவனார்க் கடியேன்’ (7—39—1)

என்று இவ்வாறு அடியார்க் கடியனாய்ச் சிவத்தொண்டர்களைப் பணிந்தேத்திய பதிகம் வரலாற்றுச் சிறப்புடைய பதிகம் என்பது அனைவரும் அறிந்தது:

**நாட்டுத்தொகை, ஊர்த்தொகை**

இதுபோன்றே சிவனுறையும் நாட்டுப்பெயர், ஊர்ப் பெயர்களைத் தொகுத்துக் கூறிய இரு பதிகங்கள் சில நூற்செய்திகளை நினைவூட்டுவன.

‘வீழக் காலனைக் கால்கொடு பாய்ந்த விலங்கலான்
கூழை யேறுகந் தானிடங் கொண்டதுங் கோவலூர்
தாழை யூர்தகடூர் தக்களூர் தருமபுரம்
வாழைக்காய்க் கும்வளர் மருக னாட்டு மருகலே’ (7—12—1)

‘காட்டூர்க் கடலே கடம்பூர் மலையே கானப் பேரூராய்
கோட்டூர்க் கொழுந்தே யழுந்தூ ரரசே கொழுநற் கொல்லேறே
பாட்டூர் பலரும் பரவப் படுவாய் பனங்காட் டூரானே
மாட்டூர் அறவா மறவா துன்னைப்பாடப் பணியாயே’ (7-47-1)

இவை முறையே நாட்டுத்தொகை, ஊர்த்தொகை பதிகங்களில் உள்ள தொடக்கப் பாடல்களாம்.

இவை முறையே நாட்டுத்தொகை, ஊர்த்தொகை பதிகங்களில் உள்ள தொடக்கப் பாடல்களாகும்.

நாட்டுத்தொகைப் பதிகத்தின் முதற்பாடலில் மருகல் நாட்டு மருகல் ஈருகக் கோவலூர், தாழையூர், தகடூர், தக்களூர், தருமபுரம் என்னும் ஊர்களைக் குறிப்பிடுவதோடு ‘மருகல் நாட்டு மருகல்’ என்பதையும் குறிப்பிடுகின்றார். ஆனால், மருகல் என்ற ஊருக்கு மட்டுமே மருகல்நாடு குறிக்கப்பட்டிருக்கிறது, இதுபோன்றே பின்வரும் பாடல்களிலும் ஊர்ப்பெயர்களோடு, ‘குறுக்கை நாட்டுக் குறுக்கை’ (2) ‘வெண்ணிக் கூற்றத்து வெண்ணி’ (3) ‘நாங்கூர் நாட்டு நாங்கூர்’ ‘நறையூர் நாட்டு நறையூர்’: (4) ‘மிழலை நாட்டு மிழலை’ (5) ‘பொன்னூர் நாட்டுப் பொன்னூர்’, ‘புரிசை நாட்டுப் புரிசை’ (6) ‘வேளா நாட்டு வேளூர்’,

'விளத்தூர் நாட்டு விளத்தூர்' (8) — என்று நாட்டுப் பெயருடன் சேர்த்து ஊர்ப் பெயரையும் அறிமுகப் படுத்து கிருர். முதல் ஆறு பாடல்களிலும், எட்டாவது பாட்டிலும் நான்காமடிகளில் இந்த நாட்டுக் குறிப்புடன் ஊர்ப்பெயர் கள் குறிக்கப்பட்டிருக்கின்றன. ஒன்பது, பத்தாம் பாடல் களில் நாட்டுப் பெயர்களே இல்லே. ஆனல்,

'ஈழநாட்டு மாதோட்டந் தென்னுட் டிராமேச்சரம்
சோழநாட் டுத்துருத்தி நெய்த்தானந் திருமலே
ஆழி யூரன நாட்டுக் கெல்லா மணியாகிய
கீழை யில்லர னூர்க்கிடங் கிள்ளி குடியதே! (7—12—7)

என்னும் ஏழாவது பாட்டின் முதல் மூன்றடிகளிலும் நாட்டுப் பெயரும் ஊர்ப் பெயரும் வருகின்றன.

ஊர்த்தொகைப் பதிகத்தில் ஊர்ப்பெயரோடு ஆங் காங்கு உறையும் இறைவனேயும் இணைத்துப் பாடு ன்ருர்.

### நமச்சிவாயத் திருப்பதிகம்

நாவுக்கரசர் நமச்சிவாயத் திருப்பதிகம் — அருளியது போலச் (4—11—1 முதல் 10) சுந்தரரும் திருப்பாண்டிக் கொடுமுடிப் பதிகத்தில் நமச்சிவாயத் திருமந்திரத்தின் மேல் தமக்குள்ள உறுதிப்பாட்டை வெளிப்படுத்தி யுள்ளார். இறைவனே விளித்து, 'நான் மறக்கினுங் சொல்லும் நா நமச்சிவாயவே' (7—48—1 முதல் 9) என்று அருளிச் செய்துள்ளார். இதனல் இறைவன் மேல் எவ் வளவு அழுத்தமான பத்தி உடையார் சுந்தரர் என்பதற்கு இப்பதிகமே பெருஞ் சான்ருகும்.

### நம்பி என்ற திருப்பதிகம்

இறைவனே நம்பியாரூரர்,

'மஞ்சுண்ட மாலே மதிசூடு சென்னி
மலேயான் மடந்தை மணவாள நம்பி!' (7—2—4)

என்றும்,

'நாட்டியத் தான் குடிநம்பி' (715—10)

என்றும்,

'நள்ளாற்று நம்பி' (7—38—4)

என்றும் தமது பாடல்களில் அங்கங்கே இறைவனை 'நம்பி' யென்று நம்பி ஆரூரர் குறித்ததோடன்றி ஒரு பதிகம் முற்றும் 'நம்பி! 'நம்பி!' என்றே இறைவனை விளித்துப் பேசும் அழகும் உன்னற்பாலது.

'மெய்யைமுற் றப்பொடிப் பூசியொர் நம்பி
வேதநான் கும்விரித் தோதியொர் நம்பி,
கையிலோர் வெண்மழு வேந்தியொர் நம்பி,
கண்ணு மூன்றுமுடை யாயொரு நம்பி,
செய்ய நம்பிசிறு செஞ்சடை நம்பி,
திரிபுரந் தீயெழச் செற்றதோர் வில்லால்,
எய்த நம்பி, என்னை யாளுடை நம்பி,
யெழுபிறப் பும் எங்கள் நம்பிகண் டாயே!' (7-63-1)

இவ்வாறு இப்பதிகம் முற்றும் அமைந்து இருப்பதால் இப்பதிகத்திற்கு ' நம்பியென்ற திருப்பதிகம்' என்றே பெயர் வைத்துள்ளனர் ஆன்றோர்.

**விளித்திருப்பதிகம்**

திருவாவடுதுறையைக் குறித்து இவர் பாடிய பாடல்கள் முற்றும் இறைவனை விளிக்கும் விளித் தொடராய் அமைந்து, அவனது திருப்புகழ்களை நெஞ்சுருக-மன முருகக் கசிந்துருகும் நிலையில் காணப்படுகின்றன.

"கங்கை வார்சடை யாய்கண நாதா
கால காலனே காமனுக் கனலே
பொங்கு மாகடல் விடமிடற் றானே
பூதநா தனே புண்ணியா புனிதா
செங்கண்மால் விடையாய் தெளிதேனே
தீர்த்தனே திருவாவடு துறையுள்
அங்கணா வெனை யஞ்ச லென்ற ருளாய்
ஆரெனக் குற வமரர்க ளேறே." (7-77-1)

"குறைவி லாநிறை வேகுணக் குன்றே
கூத்த னேகுழைக் காதுடை யானே
உறவி லேனுனை யன்றிமற் றடியேன்
ஒருபி ழைபொறுத் தாலிழ வுண்டோ?

சிறைவண் டார்பொழில் சூழ்திரு வாரூர்ச்
செம்பெ னேதிரு வாவடு துறையுள்
அறவ னேயெனை யஞ்சலென் றருளாய்
ஆரெ னக்குறவு அமரர்க ளேறே ! (7-70-6)

இறைவனை விளித்து அவன் தன் அளப்பரும் தன்மைகளை எடுத்துப் பேசும் இப் பதிகத் தொடர்களெல்லாம் அருச்சனை மாலைகளாய் அமைந்து விளங்குகின்றன. இவ்வுலகில் உலகியல் துன்பங்களிலிருந்து விடுபட இறைவனையே களைகணாகக் கொண்டு அவனையே கதி என்று சரணடையும் பாங்கினை உணர்த்தும்,

'ஆரெனக் குறவு அமரர்க ளேறே!'

என்னும் இப்பதிகப் பாடல்களின் முடிவுத் தொடர் அவர்தம் பற்றற்ற உளத்தினை விண்டு காட்டும்.

'மற்றுப் பற்றெனக் கின்றி நின்றிருப்
பாத மேமனம் பாவித்தேன்' (7-48-1)

என்னும் பாடலால் சுந்தரர் இறைவனை இறுகப் பற்றி இவ்வுலகப் பற்றினை ஒழித்த பெரியார் என்பது நன்கு விளங்கும். இங்கே,

'பற்றுக பற்றற்றான் பற்றினை அப்பற்றைப்
பற்றுக பற்று விடற்கு' (குறள் : 350)

என்னும் வள்ளுவரின் கோட்பாட்டிற்கு இலக்கியமாகச் சுந்தரர் வாழ்வும் வாக்கும் அமைந்து விளங்குதல் காணலாம்.

## 3. ஐந்திணை வளமும் அகப்பொருள் நெறியும்

### *சங்கப் பாடல்களில் ஐந்திணைக் காட்சிகள்*

பண்டைத் தமிழிலக்கியங்களில் ஐந்திணை வளங்களும் அழகுற அங்கங்கே காட்சிப் படுத்தப் பட்டிருப்பதைக் கண்டு மகிழ்கிறோம். அகப்பொருள் செய்திகளை ஐந்திணை நிலையில் முதற்பொருள் அடிப்படையில் அமைப்பது மரபாயிருந்த அந்நாளில் நிலம், மலை, கடல், நாடு ஆறு, அருவி, மற்றும் மரஞ்செடி கொடிகள், விலங்கு, பறவை முதலிய

உயிர்வர்க்கங்கள், அங்கங்கே வாழும் மக்களின் பழக்க வழக்கங்கள் முதலியவற்றை எல்லாம் சங்கப் பாடல் களில் மிக அதிகமாகக் காண்கிறோம்.

### தேவாரத் திருமுறைகளில் ஐந்திணை

தேவாரம் பிறந்த இடைக்காலத்திலும், மூவர் முதலி களும், தாம் செல்லும் வழியையும் சென்ற ஊரையும் ஆங்குள்ள திருக்கோயிலையும் அவற்றோடு சார்புடைய பொருள்களையும் அழகாக வருணித்துச் செல்கின்றார்கள். மூவர் தேவாரங்களிலும் ஞானசம்பந்தர் பாடல்களில் மிக அதிகமான இயற்கை வருணனைகளைக் காண்கிறோம். பெரும்பாலும் ஒவ்வொரு பாடலிலும் ஒரு பகுதி இறை வனையும் மற்றொரு பகுதி அவன் கோயில் கொண்டிருக்கும் இடத்தின் இயற்கையையும் இயைத்தே அவர் பாடிச் செல்கிறார். ஏனைய இருவர் பாடல்களிலும் அந்த அள வுக்கு இயற்கை வருணனை மிகுந்து காணப்படாவிடினும் ஓரளவிற்கு ஐந்திணை வளங்களை அங்கங்கே காண முடிகிறது.

### சுந்தரர் தேவாரத்தில் மலைவளம்

நம் சுந்தரர் திருக்காளத்திநாதரை வணங்கிப் புகழ் மாலை பாடியபோது அவர் அங்கிருந்த நாளில் வடதிசையி லுள்ள திருப்பருப்பதம், திருக்கேதாரம் என்னும் தலங் களைப் பாடிப் பரவுகிறார். இதுபோன்றே திரு. இராமேச் சுரத்தில் இருந்தபடியே இலங்கை மாதோட்டத்துத் திருக்கேதீச்சரத்தையும், கேதீச்சரத்துப் பெருமானையும் துதித்துப் பாடியிருக்கிறார். இத்தலங்களுக்கு நேரில் செல்லாமலே, அத்தலங்களின் புகழை நினைந்து அங்கங்கு கோயில் கொண்டுள்ள பெருமானை, திக்கு நோக்கித் தொழுது பாடும் இயல்பும் இவரிடம் காண்கிறோம்.

திருப்பருப்பதம் என்பது ஸ்ரீசைலம் என ஆந்திர நாட் டில் சிறப்புற விளிக்கும் திருத்தலமாகும். சுந்தரர் பாடிய இத்தலப் பதிகத்தில் மலைக்காட்சிகள் பல சித்திரிக்கப் பட்டுள்ளன.

"மானும்மரை யினமும்மயி லினமுங்கலந் தெங்கும்
தாமேமிக மேய்ந்துதடஞ் சுனைநீர்களைப் பருகி
பூமாமர முரிஞ்சிப்பொழி லூடே சென்று புக்குத்
தேமாம்பொழில் நீழற்றுயில் சீர்ப்பத மலையே.' (7-79-1)

'ஆனைக்குல மிரிந்தோடித்தன் பிடிசூழலிற் றிரியத்
தானப்பிடி செவிதாழ்த்திட வதற்குமிக இரங்கி
மானக்குற அடல் வேடர்க ளிலையாற்கலை கோலித்
தேனைப்பிழிந் தினிதூட் டிடுஞ் சீர்ப்பத மலையே.' (7-79-5)

இவ்வாறு, மான், மரையினம் யானை இவற்றின் செயல் களையும், வேடர்கள் தேனெடுக்கும் நிகழ்ச்சியையும் வருணித்துப் பாடுகின்றார். மற்றொரு பாடலில் மலைவாழ் பன்றிகள் குறிஞ்சி நிலத்தில் புதையுண்டிருக்கும் மணிகள் வெளிப்படுமாறு நிலத்தைக் கிளறுகின்ற செய்தியைக் கூறுகின்றார். பன்றி கிளைத்து வெளிப்படுத்திய மணிகள் நெருப்புப் போல் செவ்வொலி வீசுகின்றனவாம். இதைக் கண்ணுற்ற கரடியும் மானும் அவ்வொளியைத் தீயென எண்ணிப் பயந்து தப்பிப் பிழைப்பதற்காக, குளிர் நிறைந்த சோலையினூடு புக்குப் பதுங்குகின்றனவாம். இத்தகு கற்பனைச் சித்திரத்தை,

"ஏனத்திரள் கிளைக்கவெரி போலமணி சிதறத்
தீயென்றவை மலைச்சாரலிற் றிரியுங்கர டியும்
மானும்மரை யினமும் மயில் மற்றும் பலவெல்லாம்
தேனுண்பொழில் சோலைமிகு சீர்ப்பத மலையே." (7-79-9)

என்னும் பாட்டில் காணலாம்.

### திருக்கழுக்குன்றக் காட்சிகள்

திருக்கழுக்குன்றமலைப் பாடல்களிலும் மலைக் காட்சிகள் இடம் பெற்றிருக்கின்றன.

கன்றினோடு பிடிசூழ்தண் கழுக்குன்றமே (7-81-1)

நிறங்கள் செய்த மணிகள் நித்திலங் கொண்டிழி
கறங்கு வெள்ளை யருவித் தண்கழுக் குன்றமே (7-81-2)

பிளிறு தீரப் பெருங்கைப் பெய்ம்மத மூன்றுடைக்
களிறு னோடு பிடிசூழ் தண்கழுக் குன்றமே. (7-81-4)

'முலைகளுண்டு தழுவிக் குட்டி யொடுமுசுக்
கலைகள் பாயும் புறவிற் றண்கழுக் குன்றமே' (7-81-5)

'தேனும் வண்டும் மதுவுண் டின்னிசை பாடியே
கானமஞ்ஞை யுறையுந் தண்கழுக் குன்றமே' (7-81-7)

'மழைகள் சாலிக் கலித்து நீடுயர் வேயவை
இழைகொண் முத்தஞ் சொரியுந் தணிக்கழுக் குன்றமே'
(7-81-8)

## மருதநிலக் காட்சிகள்

மருதநிலக் காட்சிகளைத் திருக்கலயநல்லூர், திருக்கானாட்டு முள்ளூர்ப் பதிகங்களிலே சொல்லோவியமாகத் தீட்டிக் காட்டுகிறார் நம்பியாரூரர். இரண்டு பதிகங்களிலும் தொடக்கப்பாடலில் கருங்குவளைகள் பூத்துக் கழனிகளிலே தோன்றுகின்ற காட்சியை வருணிக்கிறார்.

'அரும்பருகே சுரும்பருவ அறுபதம் பண்பாட
அணிமயில்கள் நடமாடு மணிபொழில் சூழயலின்
கரும்பருகே கருங்குவளை கண்வளருங் கழனிக்
கமலங்கண் முகமலருங் கலயநல் லூர்காணே!' (7-16-1)

'முள்வாய மடறமுவி முடத்தாழை யீன்று
மொட்டலர்ந்து விரைநாறு முருகுவிரி பொழிசூழ்
கள்வாய கருங்குவளை கண்வளருங் கழனிக்
கானாட்டு முள்ளூரிற் கண்டுதொழு தேனே!' (7-40-1)

இப்பாடல்களிலே கருங்குவளை கழனியில் கண் வளருவதைப் பார்க்கிறோம். கண் வளர்தலாவது தூங்குதலாம்.

'பெருமேதை மறையொலியும் பேரிமுழவொலியும்
பிள்ளையினந் துள்ளிவிளை யாட்டொலியும் பெருகக்
கருமேதி புனன்மண்டக் கயன்மண்டக் கமலங்
களிவண்டின் கணமிரியுங் கலயநல்லூர் காணே!' (7-16-2)

'கற்றினநன் கரும்பின்முளை கறிகற்கக் கறவை
கமழ்கழுநீர் கவர்கழனிக் கலயநல்லூர் காணே!' (7-16-6)

'கரும்பு ஊனவெண் முத்தரும்பிப் பொன்மலர்ந்து பவளக்
கவின்காட்டுங் கடிபொழில் சூழ்கலயநல்லூர் காணே!'
(7-16-9)

மருதநிலச் சோலைவளமும் அங்குள்ள பசுந் தரைகளிலும், நீர் நிலைகளிலும் மேய்ந்தாடித் திரியும் எருமையினமும், பசுநிரையும், புன்னை மலரின் காட்சியும் இப்பகுதிகளிலே காண்கிறோம். புன்னை மரத்தை வருணிக்கும்

பொழுது கரிய அடி மரமுடைய புன்னை, வெண்மையான முத்துப் போல் பூவரும்புகளைக் காட்டி, அவை பொன் போல் மலர்ந்து பவளம்போல் சிவந்து காட்டும் என்று அம் மலரின் இயற்கைத் தோற்றத்தை விளக்குகிறார்.

இங்கே கருமை, வெண்மை, பொன்மை, செம்மை முதலிய நிறமுரண்களும் முத்து, பொன், பவளம் என்னும் வெவ்வேறு நிறமுடைய மணிகளும் காட்சி தருகின்றன.

'சீதப் புனலுண் டெரியைக் காலும்
சூதப் பொழில்சூழ் சோற்றுத் துறையே' (7-94-6)

என்னும் திருச்சோற்றுத் துறையின் பொழில் வருணனையில் மாஞ்சோலைகளின் காட்சியை அற்புதமாகச் சித்திரிக்கின்றார். சூதப் பொழில் அதாவது மாஞ்சோலையில் உள்ள மரங்கள் உண்பதோ குளிர்ந்த புனல்; ஆனால், அவை வெளிப்படுத்துவதோ நெருப்புப்போன்ற இளந் தளிர். மாமரம் தளிர்த்திருக்கும் காட்சியை நெருப்பின் தோற்றத்திற்கு ஒப்பிட்டதோடன்றி அவை நீரை உண்டு நெருப்பைக் கக்குகின்றனவே என்று வியப்பு மேலிடக் கற்பனைக்கண் கொண்டு நோக்குகிறார்.

### கானாட்டு முள்ளூர் வயல்வளமும் சோலைவளமும்

கானாட்டு முள்ளூர்ச் சோலை வளத்தையும் மிக நயம்பட நம்பியா ரூரர் புகழ்ந்து பேசுகிறார்.

'அரும்புயர்ந்த வரவிந்தத் தணிமலர்களேறி
அன்னங்கள் விளையாடு மகன்றுறை யினருகே
கரும்புயர்ந்து பெருஞ் செந்நெல் நெருங்கிவிளை கழனிக்
கானாட்டு முள்ளூரிற் கண்டு தொழுதேனே' (7-40-3)

'பாளைபடு பைங்கமுகின் சூழலிளந் தெங்கின்
படுமதஞ்செய் கொழுந்தேறல் வாய்மடுத்துப் பருகிக்
காளைவண்டு பாடமயி லாலும்வளர் சோலைக்
கானாட்டு முள்ளூரிற் கண்டு தொழுதேனே' (7-40-4)

'கருக்குவாய்ப் பெண்ணையொடு தெங்கமலி சோலைக்
கானாட்டு முள்ளூரிற்கண்டு தொழுதேனே' (7-40-5)

'கடைகள்விடு வார்குவளை களைவாருங் கழனிக்
கானாட்டு முள்ளூரிற் கண்டு தொழுதேனே' (7-40-6)

'கருமணிகள் போனீல மலர்கின்ற கழனிக்
காஞட்டு முள்ளூரிற் கண்டு தொழுதேனே' (7-40-7)

'கழைதழுவித் தேன் றெடுக்கும் கழனிசூழ் பழனக்
காஞட்டு முள்ளூரிற் கண்டுதொழுதேனே' (7-40-8)

'துனிவினிய தூயமொழித் தொண்டைவாய் நல்லார்
தூநீலங் கண்வளருங் சூழ்கிடங்கி னருகே
கனிவினிய கதலிவனந் தழுவுபொழிற் சோலைக்
காஞட்டு முள்ளூரிற் கண்டு தொழுதேனே' (7-40-9)

'தூவியவாய் நாரையொடு குருகுபாய்ந் தார்ப்பத்
துறைக் கெண்டை மிளிந்து கயல்துள்ளி விளையாடக்
காவிவாய் வண்டுபல பண்செய்யுங் கழனிக்
காஞட்டு முள்ளூரிற் கண்டு தொழுதேனே' (7-40-10)

இவை ஒவ்வொன்றும் தனித்தனியாக ஒவ்வோர் அழகிய இயற்கைத் தோற்றத்தை நம் கண்முன் கொண்டு வந்து நிறுத்துகின்றன.

### மருதநில மாந்தர்

மருதநிலம் நீர்வளம், நிலவளம் மிக்கதோடு அங்கு வாழும் மக்களும் கல்வி, கேள்வி உடையராய் இலங்கு வதையும், மருதநிலத்து ஊர்களில் விழாக்கொண்டாடு வதையும், மக்கள் கசிந்த உள்ளத்தராய் கடவுள் வழிபாடு இயற்றுதலையும் சுந்தரர் குறிப்பிட்டுப் பாடியுள்ளார்.

'மண்டபமுங் கோபுரமு மாளிகை குளிகையும்
மறையொலியும் விழவொலியு மறுகுநிறைவெய்திக்
கண்டவர்கள் மனங்கவரும் புண்டரிகப் பொய்கைக்
காரிகையர் குடைந்தாடுங் கலயநல்லூர் காணே'
(7-16-3)

'சொற்பால பொருட்பால சுருதியொரு நான்குந்
தோத்திரமும் பலசொல்லித் துதித்திறை தன்றிறத்தே
காற்பாருங் கேட்பாரு மாயெங்கு நன்கார்
கலைபயிலந் தணர் வாழுங் வாழுங் கலயநல்லூர் காணே'
(7-16-5)

'சோலைமலி குயில்கூவக் கோலமயி லாலச்
சுரும்பொடு வண்டிசை முரலப் பசுங்கிளி சொற்றுதிக்கக்
காலையிலு மாலையிலுங் கடவுளடி பணிந்து
கசிந்தமனத் தவர்பயிலுங் கலயநல்லூர் காணே'
(7-16-8)

கலய நல்லூர்வாழ் அந்தணர் முதலியோர் கற்றல் கேட்டல் உடையராய்ப் பண் பயிலும் பாடல்பாடிப் பரமனை வழி படுகின்றார்கள். அவ்வூரில் உள்ள சோலைகளிலே குயில்கள் கூவவும், மயில்கள் ஆடவும், வண்டுகள் இசை ஒலி எழுப்பவும், பசுங்கிளிகள் பரமன்புகழ் பாடு கின்றனவாம். இது போன்றதொரு காட்சி,

‘பாரிசையும் பண்டிதர்கள்
பன்னாளும் பயின்றோது மோசை கேட்டு
வேரிமலி பொழிற் கிள்ளை
வேதங்கள் பொருட்சொல்லும் மிழலையாமே’
(1-132-1)

என்னும் ஞானசம்பந்தர் திருவாக்கிலும் காண்கிறோம்.

‘கலயநல்லூரில் வாழ்வாரைப் போன்றே காணாட்டு முள்ளூர்வாழ் மக்களையும்,

‘திருமேவு செல்வத்தார் தீமூன்றும் வளர்த்த
திருத்தக்க வந்தணர்க ளோதுநகர்’ (7-40-2)

‘இருக்குவா யந்தணர்கள் எழுபிறப்பு ளெங்கும்
வேள்வியிருந் திருநிதியம் வழங்குநகர்’ (7-40-5)

என்று சிறப்பித்துப் பேசுகிறார்.

இவ்வாறாக, இவ்விரு பதிகங்களிலும், மருதநில வளமும், சோலைக் காட்சிகளும், மற்றும் அங்கு வாழ் உயிரினங்களும், நாகரிகம் படைத்த நன்மக்களும் நம் கண்ணெதிரே காட்சிதருவது காணலாம்.

### நெய்தல் நிலக்காட்சிகள்

கடற்கரை ஊர்களாகிய திருவஞ்சைக்களம், திரு மறைக் காட்டுப்பதிகங்களிலே நெய்தல் நில வளங்களைச் சித்திரித்துக் காட்டுகிறார், நம்பியாரூரர். மறைக்காட்டுத் தலத்திலே கடல்திரை கடலில் உள்ள பொருள்களைக் கொண்டுவந்து கரையில் ஒதுக்குகின்றன:

‘சிகரத்திடை இளவெண்பிறை வைத்தானிடந் தெரியில்
முகரித்திடை முத்தின்னொளி பவளத் திர ளோதத்
தகரத்திடை தாழத்திரண் ஞாழற்றிரள் நீழல்
மகரத்தொடு சுறவங் கொணர்ந் தெற்றும் மறைக்காடே!
(7-71-2)

'குரை விரவிய குலசேகரக் கொண்டல் தலைவிண்ட
வரைபுரைவன திரைபொரு திழிந்தெற்றும் மறைக்காடே'
(7-71-5)

சங்கு முத்து மணி இவற்றைத் திரைகள் கரையில் கொணர்ந்து ஒதுக்குவதோடு வணிகக் கப்பல்களும் வந்து கரை சேர்கின்றன.

'சங்கங்களு மிலங்கிப்பியும் வலம்புரிகளு மிடறி
வங்கங்களு முயர்கூம்பொடு வணங்கும் மறைக்காடே!'
(7-71-3)

கப்பலின் கூம்பு தாழ்ந்து எழுவதை மறைக்காட்டு இறைவனுக்கு வணக்கம் செலுத்துவதாகக் காண்கிறார் நம் சுந்தரர்.

திருவஞ்சைக் களத்தின் கடற்கரையில் அலைகள் மிக உயர்ந்து எழுந்து கரையைத் தாக்குகின்றன. அங்கும் கடல்திரை கடல்படுபொருள்களை ஒதுக்கும் நிகழ்ச்சியையும் கப்பல்கள் வந்து செல்லும் மாண்பையும் தமது பதிகத்தில் எடுத்துக்காட்டியுள்ளார்:

'மலைக்கும் நிகரொப் பனவன் திரைகள்
வலித்தெற்றி முழங்கி வலம்புரி கொண்
டலைக்குங் கடலங் கரைமேல் மகோதை
அணியார் பொழிலஞ் சைக்களத் தப்பனே! (7-71-1)

'மடித்தோட் டந்துவன் றிரையெற் றியிட
வளர்சங்கமங் காந்து முத்தஞ்சொரிய
அடித்தார் கடலங் கரைமேல் மகோதை
அணியார் பொழிலஞ் சைக்களத் தப்பனே! (7-71-2)

'மழைக்கு நிகரொப் பனவன் றிரைகள்
வலித்தெற்றி முழங்கி வலம்புரி கொண்டு
அழைக்குங் கடலங் கரைமேல் மகோதை
அணியார் பொழிலஞ் சைக்களத் தப்பனே! (7-71-4)

'உரவத் தொடுசங் கமோடிப்பி முத்தங்
கொணர்ந்த தெற்றி முழங்கி வலம்புரி கொண்டு
அரவக் கடலங் கரைமேல் மகோதை
அணியார் பொழிலஞ் சைக்களத் தப்பனே!' (7-71-6)

'நோக்குந் நிதியம் பலவெத் தனையுங்
கலத்திற் புகப்பெய்து கொண்டேற நுந்தி
ஆர்க்குங் கடலங் கரைமேல் மகோதை
அணியார் பொழிலஞ் சைக்களத் தப்பனே!' (7-71-7)

இப்பாடற் பகுதிகள் கடற்கரை நகரமான திரு வஞ்சைக் களத்தின் இயல்புகளை நன்கு படம் பிடித்துக் காட்டுவது காணலாம்.

### அகப்பாடல்கள்

தமிழ்ப்பாடல்களுள் சிறப்பாகக் குறிக்கத்தக்கவை அகப்பாடல்கள்.

'தள்ளாப் பொருளியல்பிற் தண்டமிழாய் வந்திலார்
கொள்ளாரிக் குன்று பயன்' (பரி. 25-26)

எனப் பரிபாடல் பொருளியல்போடுகூடிய அகப்பொருளைத் தமிழ் என்று குறிப்பிடுகிறது. இந்த அகப்பொருள் நெறியைத் தமிழ்நெறி என்று கொண்டு ஒரு புலவர் 'தமிழ் நெறி விளக்கம்' என்னும் ஒரு நூலை இயற்றி யுள்ளார். காதலன் காதலியரின் ஒரு மனப்பட்ட இன்ப வாழ்வு என்றும் போற்றத்தக்கது. இதுவே நிலையான பேரின்பத்திற்கு வழி நடத்தும் முதற் பொருளும் ஆகும்.

'காமஞ் சான்ற கடைக்கோட் காலை
ஏமஞ் சான்ற மக்களொடு துவன்றி
அறம்புரி சுற்றமொடு கிழவனும் கிழத்தியும்
சிறந்தது பயிற்றல் இறந்ததன் பயனே'

என வாழ்க்கைப் பொருளிலக்கணம் வகுத்த தொல் காப்பியர் தமிழர் நெறியினை வரைந்து காட்டியுள்ளார். 'இறந்தது பயிற்றல்' என்பது வீட்டு நெறியை நாடு வதாகும்.

### தெய்வத் திருத்தொண்டரின் இறைமைக்காதல்

வீட்டு நெறியை விரும்பிய தெய்வத்திருத் தொண்டர் களும் பண்டைத் தமிழின் அகப்பொருள் நெறியினின்று தம்மை நாயகியாகவும் இறைவனை நாயகனாகவும் பாவித் துக் காதல் மீக்கூரப் பேசும் பாடல்கள் பத்திப்பனுவல் களுள் பலப்பல உள்ளன. தமிழுக்கே சிறப்புடைய இந்த

அகப்பொருள் நெறியை—ஞானசம்பந்தரும் நாவுக்கரசரும் மேற்கொண்டு வழி காட்டிய நெறியை—சுந்தரரும் உடன் பட்டுச் சில பதிகங்கள் பாடியுள்ளார். காதலனைப் பிரிந்து வருந்தும் நிலையில் தலைவி நாயகன் மாட்டு அன்னம், குருகு முதலிய பறவைகளை அனுப்பித் தனது நிலையை எடுத் துரைக்குமாறு வேண்டும் தூதுப் பாடல்கள் சுந்தரர் வாக்கில் சிறப்பாகக் குறிக்கத்தக்கன.

### தூதுப்பாடல்கள்

திருவாரூர்ப் பதிகத்தில் அன்னப்பெடை, கிளி, குயில், குருகு, கொண்டல் (மேகம்), சக்கரவாளப்புள், சேவல், நாரை, பூவை, வண்டு என்னும் இவைகளை விளித்துத் தமது பிரிவுத் துயரையும் ஆற்றாமையையும் எடுத்துரைக்கின்றார் நம்பியாரூரர்.

*'பறக்குமங் கிள்ளைகாள் பாடுமெம் பூவைகாள்*
*அறக்க ணெனத்தகு மடிகளா ரூரரை*
*மறக்ககில் லாமையும் வளைகள்நில் லாமையும்*
*உறக்கமில் லாமையும் உணர்த்தவல் லீர்களே!'* (7-37-2)

*'கூடுமன் னப்பெடை காள்குயில் வண்டுகாள்*
*ஆடுமம் பொற்கழ லடிகளா ரூரரைப்*
*பாடுமா றும்பணிந் தேத்துமா றுங்கூடி*
*ஊடுமா றும்மிவை யுணர்த்தவல் லீர்களே!'* (7-37-10)

பிரிவு நிலையில் பெண்களின் உடல் மெலிந்து, உறக்க மில்லாமல் என்றும் தலைவன் நினைவாகவே இருத்தல் போன்ற மெய்ப்பாடுகள் வெளிப்படுதல் காணலாம்.

### மங்கையர் காதல்

திருப்பைஞ்ஞலி பதிகத்தில் இறைவன் பலி வேண்டி வரும் நிலையில் பெண்கள் அவரைப்பார்த்துக் காதல் கொண்டு மொழிந்த சொல்லை உட்கொண்டும் சுந்தரர் பாடுகிறார். இதில் மங்கையர் காதல் வெளிப்படுவதோடு இறைவனுடைய திருக்கோலத்தை வியந்து போற்றுவதும் மிக அழகாக அமைந்துள்ளது.

*'காருலாவிய நஞ்சை யுண்டிருள்*
*கண்ட வெண்டலை யோடுகொண்டு*

ஊரெலாந்திரிந் தென்செய் வீர்பலி
யோரிடத்திலே கொள்ளுநீர்
பாரெலாம் பணிந்தும்மையே பர
விப்பணியும் பைஞ்ஞீலியர்
ஆரமாவது நாகமோ சொலும்
ஆரணீய விடங்கரே!' (7-36-1)

'கையொர் பாம்பரை யார்த்தொர் பாம்பு
கழுத்தொர் பாம்பவை பின்புதாழ்
மெய்யெ லாம்பொடிக் கொண்டு பூசுதிர்
வேத மோதுதிர் கீதமும்
பைய வேவிடங்காக நின்றுபைஞ்
ஞீலியே னென்றீர் அடிகள் நீர்
ஐயமேற்குமி தென்கொலோ சொலும்
ஆரணீய விடங்கரே!' (7-36-10)

இவ்வாறு மங்கைமார் பலர் பேசிய காதல்மொழிகளைக் கட்டுரைப்பது இத்திருப்பைஞ்ஞீலிப் பதிகம்.

'திணைகொள்செந்தமிழ் பைங்கிளிதெரியும்
செல்வத் தென்திரு நின்றியூரானே!' (7-65-2)

எனச் சுந்தரர் தமிழை 'திணைகொள்செந்தமிழ்' என்று சிறப்பித்துள்ளார். இதனல், ஐந்திணைமரபினைக் கொண்ட அகப்பாடல்களையுடைய செந்தமிழ் சிறப்பிடம் பெறும் நிலையை அவர் எடுத்துக்காட்டியுள்ளார் என்பது புலப்படும்.

## 4. பண்டை மரபும் சுந்தரர் நெறியும்

### தமிழ்மணம்

சைவ வைணவ மறுமலர்ச்சியின் விளைவாகச் சைவ நாயன்மார்களும் ஆசாரியர்களும், அருட்செல்வர்களும், ஆழவாராதியர்களும், இறைவனின் அருட்பெரும்புகழைப் போற்றிச் செந்தமிழ் இசைப் பாமாலைகளைச் சூட்டியுள்ளனர். இவர்களுடைய வாக்கில் பிறந்த தெய்வச் செந்தமிழிலே பண்டைத்தமிழ் — சங்கத் தமிழ் — சங்கம் மருவியதமிழ் ஆகியவற்றின் நறுமணம் கமழ்கின்றது. சங்கத் தொகை நூல்களிலும், சங்கம் மருவிய கீழ்க்

கணக்கு நூல்களிலும் பயின்றுவரும் சொற்கள், தொடர்கள், மட்டுமன்றி உவமை மரபுகளும் பிறவும் இந்த இடைக்காலப் புலவர்களின் வாக்கிலும் பரிமளிக் கின்றன. இதிலும் நம் சுந்தரர் இடைக்காலத்தினும் இடைக்காலத்தில் வாழ்ந்தவராதலின், அவருக்கு முன் வாழ்ந்து தெய்வத் தீந்தமிழ்ப் பாக்களைப் பாடிய சம்பந்தர், அப்பர் திருவாக்குகளின் எதிரொலிப்பையும் இவரிடம் காணலாகும்.

'நல்லிசை ஞானசம் பந்தனும் நாவினுக் கரசரும் பாடிய
நற்றமமிழ் மாலை
சொல்லியவே சொல்லி ஏத்துகப் பானை' (7—67—5)

என்னும் சுந்தரர் திருவாக்கினால் அவர் முன்னையிருவர் பாடிய தமிழ் மாலைகளையும் சொல்லி இறைவனை ஏத்தும் பண்பினர் என்பதும் நமக்குப் புலனாம்.

## இயற்கையீடுபாடு

பொதுவாகச் சங்கப் புலவர்கள் இயற்கையில் பெரிதும் ஈடுபாடுடையவர்கள் என்பது அறிஞர் பலரின் கருத்து. ஆனால், தெய்வப் பாடல்கள் பாடிய திரு நெறித் தொண்டர்களும் அவ்வியற்கையை மறந்தவரல்லர். இயற்கையினூடே இறைவனைக் கண்டு இன்புற்றனர். இறைவன் திருக்கோயில்களைப் பாடும்போதும், திருத்தலங் களையும் தாம் செல்லும் வழியிலுள்ள பொருள்களையும் ஆங்காங்கு வாழும் மக்கள் முதலியோர் இயல்புகளையும் இயைபுபடுத்திப் பாடுகின்றனர். தெய்வக் காட்சியை இறைவனின் இன்னருளை இயற்கையில் கண்டு மகிழ்ந்து பாடும் இயற்கை நலம் போற்றும் பாடற்பகுதிகளும் இவர் களிடம் பலப்பலவாக உள்ளன. மலை, கடல், நாடு, வளநகர், ஐம்பெரும்பூதங்கள் அவற்றின் விளைவாகிய மரஞ்செடி கொடிகள், மாவும் புள்ளும் எல்லாம் இவர்தம் தெய்வவாக்கில் இடம்பெற்றுள்ளன.

## செருந்தி செம்பொன் மலரும்

செருந்தி என்னும் செடியின் பூ பொன்நிறம் போலப் பொலிவு பெற்றுக் காணப்படும். எனவே, அப்பூவினைக்

காண்பார் பொன்னே என மருண்டு நோக்கும் வண்ணம் அது அமைந்திருக்கும். சிறுபாணாற்றுப்படை பாடிய நத்தத்தனார் உளங்கவரும் பொன்னிறச் செருந்திப் பூவினைக் குறித்து,

'தலைநாட் செருந்தி தமனியம் மருட்டவும்' (சிறுபாண். 147)

என்று பேசுகிறார். இதற்கு நச்சினார்க்கினியர் விளக்கந் தரும்பொழுது 'இளவேனிற் காலந் தொடங்குகின்ற நாளிலே செருந்தி தன்னைக் கண்டாரைப் பொன்னென்று மருளப் பண்ணவும்' என்று எழுதுகின்றார். இதனால் இள வேனிற் காலத்து மலரும் பூக்களுள் இதுவும் ஒன்றென்பது தெரியவரும்.

சுந்தரர் திருவாக்கிலும் செருந்தி மலரை வருணிக்கும் போது,

'செருந்தி செம்பொன் மலரும் திருநாகேச்சரத்தானே!'
(7-99-22)

என்கிறார். இங்கே பழம்புலவரின் பாடற்பண்பு மேலிடு கிறது. இவருக்கு முன்வாழ்ந்த சிவநெறித்தொண்டர் சம்பந்தரும்,

செருந்திசெம்பொன் மலர் திருநெல்வேலியுறை
செல்வர் தாமே (3-91-1)

என்று பாடுகின்றார். எனவே, இத்தகு வருணனைகள் வழி வழித் தொடர்ந்து வரும் ஒரு மரபு என்பதனை நமக்கு அறிவிக்கும்.

### பறவைகளைப் பாவையர் ஓட்டுதல்

குறிஞ்சி நிலத்தில் வாழும் மலைவாழ் மக்கள் தினைப் புனங்களைப் பறவைகள் அழித்து விடாதபடி கண்காணிப் பதற்காகப் பரண் அமைத்திருப்பர். அப்பரணில் மகளிர் அமர்ந்து கிளி, குருவி முதலிய பறவைகளை ஓட்டுவர். இவ் வழக்கத்தை,

'வள்ளுயிர்த் தெள்விளி இடையிடை பயிற்றிக்
கிள்ளை ஒப்பியும்' (குறிஞ்சிப்பாட்டு —100-1)

என்று குறிஞ்சிப் பாட்டுக் குறிப்பிடுகின்றது. இவ்வடிகளில் குறிப்பிடும் நிகழ்ச்சியை விரித்துரைப்பது போல் உளது சுந்தரர் பாடல்களுள் ஒன்று :

‘ மையார்தடங் கண்ணுள் மடமொழியாள் புனங்காக்கக்
செவ்வேதிரிந் தாயோவெனப் போகாவிட விளிந்து
கைபாவிய கவணுன்மணி யெறிய விரிந்தோடிச்
செவ்வாயின கிளிபாடிடுஞ் சீபர்ப்பத மலையே’. (7-79-4)

இப்பாடலில் ‘ ஆயோ ’ என்பது குறிஞ்சி நிலமகளிர் பறவையோட்டுதலை வெளிப்படுத்தும் ஓசையாம். சம்பந்தர் திருவாக்கிலும்,

‘ வெஞ்சொற்பேசும் வேடர் மடவார் இதண மதுவேறி
அஞ்சொற்கிளிகள் ஆயோ வென்னும் அண்ணுமலையாரே ’
(சம்பந்தர்)

என ‘ஆயோ’ என்னும் பறவை ஒட்டும் ஓசை குறிக்கப் பட்டிருக்கிறது.

### தினைத்தாளன்ன செங்கால் நாரை

நாரையின் காலைத் தினைத்தாளுக்கு ஒப்பிட்டுச் சங்கமும் மணிகளுள் ஒருவராகிய கபிலர் குறுந்தொகைப் பாடலொன்றில் பேசுகிருர் :

‘ தினைத்தாளன்ன சிறு பசுங்கால
ஒழுகுநீர் ஆரல் பார்க்கும் குருகு ’ (குறுந். 25)

என்பது கபிலர் வருணனை.

பின்னுளிலே நாரையின் அலகைப் பிளந்த பனங்கிழங்கிற்குச் சத்திமுற்றத்துப் புலவர் ஒப்புக் கூறியது போன்று, அதன் காலைத் தினைத்தாளுக்கு ஒப்புக்கூறுதலும் மிகமிகப் பொருத்தமுற அமைந்த உவமையாம்.

இவ்வுவமை சுந்தரர் மனத்தையும் கவர்ந்துள்ளது.

‘ தினைத் தாளன்ன செங்கால் நாரை, சேருந் திருவாரூர் ’
(7-95-8)

என்பது அவர் திருவாக்கு.

### சிவன் திருமேனியும் செவ்வானமும்

சிவபெருமான் மேனியை அந்திவானுக்கு ஒப்பிடுவர். புலவர் பெருந்தேவனுர்,

'செவ்வானன்ன மேனி' (அகநா. கடவுள் வாழ்த்து)

என்று சிவன் திருமேனியைக் குறிப்பிடுகிருர்.

'காலையே போன்றிலங்கும் மேனி' (அற்புதத் திருவந்தாதி, 65)

என்று காரைக்காலம்மையார் தமது அற்புதத் திருவந்தாதியில் பேசுகிருர். காலைச் செவ்வானைச் சிவன் திருமேனிக்கு ஒப்பாக அம்மையார் இங்கே கருதுகின்ருர். எனவே, காலையிலும் மாலையிலும் கடவுளைத் தொழும் பக்தர்களுக்குச் செக்கர் வானம் சிவன் திருமேனியாகக் காட்சியளிப்பது இயல்பே. இம் மரபினை ஒட்டிச் சுந்தரரும்,

'அந்தி வானமும் மேனியோ சொலும்
ஆரணிய விடங்கரே!' (7-36-4)

என்று சிவபெருமானையே வினவுகிருர்.

### கொடைவள்ளல் பாரி

பண்டைத் தமிழகத்தில் கொடைவள்ளலாய்த் திகழ்ந்த பெருமன்னன் பாரி. இந்தப் பாரியை அந்நாளில் போற்றிப் புகழ்ந்து பரிசில் பெருத புலவர் அரியர்.

'பாரி பாரியென்று பலவேத்தி
ஒருவற் புகழ்வர் செந்நாப் புலவர்' (புறம்: 107)

என்று பாரியைப் போற்றினுர் கபிலர்.

இவனது கொடைச் சிறப்பால் கொடைக்குப் பாரி என்னும் பெருவழக்குத் தமிழகத்தில் ஒரு பழமொழியாய் விட்டது போலும்.

'கொடுக்கி லாதானைப் பாரியே என்று
கூறினுங் கொடுப்பார் இலை' (7-34-2)

என்று அவ் வள்ளலைச் சுந்தரர் சிறப்பித்துக் கூறும் திறம் பெருமகிழ்வுக்குரியது.

## பேயோடாடும் பெருமான்

பேயோடாடும் பெருமானின் திருக்கூத்தைக் குறித்துச் சுந்தரர்,

'கூறுநடைக் குழிகண் பகுவாயன
பேய் உகந்தாட நின்ருேரியிட
வேறுபடக் குடகத்தில் அம்பல
வாணன் நின்ருடல் விரும்பும் இடம்' (7-10-2)

என்று வருணிக்கிருர். இந்தப் பேயோடாடும் பெருமான் வருணனை காரைக்கால் பேயார் முதுகாட்டிலாடும் முக்கண்ணன் கூத்தினை வியந்து பாடும் மூத்த திருப்பதிகப் பாடல்களை நினைவூட்டுகின்றன. அவற்றுள் சில வருமாறு:

'புட்கள் பொதுத்த புலால் வெண்டலையைப் புறமே நரிகவ்வ
வட்கென்றழைப்ப ஆந்தை வீச அருகே சிறு கூகை
உட்க விழிக்க ஊமன் வெருட்ட ஓரிகதித் தெங்கும்
பிட்க நாட்டம் பேணும் இறைவன் பெயரும் பெருங்காடே'

'வேய்க ளோங்கி வெண்முத்து திரவெடிகொள் சுடலையுள்
ஓயும் உருவில் உலறு கூந்தல் அலறு பகுவாய
பேய்கள் கூடிப் பிணங்கள் மாந்தி அணங்கும் பெருங்காட்டின்
மாய ஞட மலையான் மகளும் மருண்டு நோக்குமே!

(மூத்த திருப்பதிகம்,. 3, 8)

இப் பதிகப் பாடல்களின்மேல் சுந்தரர் கொண்ட பெரு விழைவே அவர்தம் திருநடன வருணனை போலும்.

(7-16-1)

## சொல்லாட்சி

இன்னும் சுந்தரர் திருவாக்குகள் சில முன்னூல்களின் செஞ்சொற்ருெடர்களையும் செய்திகளையும் நினைப்பூட்டு கின்றன.

**கொடு கொட்டி காலர் கழலர்** (7-33-5)

'கொடு கொட்டி யாடுங்கால் கோடுயர் அகலல்குல்
கொடிபுரை நுசுப்பினுள் கொண்டசீர் தருவாளோ'

(கலித்தொகை, கடவுள் வாழ்த்து)

'திரிபுரம் எரியத் தேவர் வேண்ட
இமையவன் ஆடிய் கொடுகொட்டி ஆடலும்'

(சிலம்பு : கடலாடு. 40, 44)

புள்ளி நள்ளிகள் பள்ளி கொள்ளும் (7. 35-5)

'புள்ளிக் களவன்' (ஐங்குறு, 21, 22, 24)

மந்தி கடுவனுக் குண்பழம் நாடிமலைப்புறம் முந்தி (7-43-8)
பலவின், கனி கவர்ந்துண்ட கடுவன்
மந்தியொடு சிறந்துசேண் விளங்கி (புறம். 200)

'கனி பெற்ற கடுவன் துய்த்தலை மந்தியைக்
கையிடு உப் பயிரும்' (புறம். 158)

நஞ்சுண்டு அதற்கு இறவாது என்றும் இருந்தவனை (7-84-8)

விண்ணோர் அமுதுண்டும் சாவ, ஒருவரும்
உண்ணாத நஞ்சுண்டிருந்தருள் செய்குவாய்
(சிலம்பு : வேட்டுவவரி, இறுதி)

குரவம் அரவின் எயிறேற் றரும்ப (7-99-2)

'அரவெயிற் றன்ன அரும்பு முதிர் குரவு' (அகநா. 237)

'குரவு ......... அரவு கொண்டரும்ப' (பெருங்கதை, 1-49-98)

குரும்பை முலை மலர் குழலி (7 : 16 : 1)

குரும்பையும் இகலி உருத்தெழுமென் முலை'
(பெருங்கதை: 1 : 33 : 182 : 3)

சங்க நூற்கருத்துகளும் தொடர்களும், சுந்தரர் திருவாக்கில் அங்கங்கே வருவது கொண்டு பழந்தமிழ்ப் பயிற்சி மிக்க புலமையாளர் இவர் எனக் கருதலாம்.

### திருக்குறளும் சுந்தரர் வாக்கும்

பதினெண்கீழ்க் கணக்கு நூல்களுள் திருக்குறளும் நாலடியாரும் தலைமணியாய்த் திகழ்வன. திருக்குறளைப் பொன்னே போல் போற்றித் தத்தம்வாக்குகளில் இணைத்து இழைத்து அமைத்துக் கொள்ளாத புலவர் மிகமிக அரியர். இத்தகு பெருநூல் சுந்தரர் திருவுள்ளத்தையும் ஈர்த்தல் இயல் பேயன்றோ?

'அகர முதல எழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே உலகு' (குறள்-1)

என்னும் முதற்குறளின் உயிர்நிலைக் கருத்தை

'அகர முதலின் எழுத்தாகி நின்றாய்' (7-3-7)

என்னும் சுந்தரர் வாக்கிற் காணலாம்.

இவரைப் போன்றே

'அகர முதலானை அணியாப்ப னூரானை' (1-88-5)

'ஆனத்தின் முன்னெ ழுத்தாய் நின்றார் போலும்' (6-28-1)

எனத் திருஞான சம்பந்தரும் திருநாவுக்கரசரும், இம் முதற் குறளைத் தழுவியிருத்தல் ஒப்பு நோக்கத் தக்கது:

'பொறிவாயில் ஐந்தவித்தான் பொய்தீர் ஒழுக்க
நெறி நின்றார் நீடு வாழ் வார் (குறள்-6)

என ஐந்தவித்தவனின் மேன்மையைப் புகல்கிறது திருக் குறள்.

'வேண்டில் ஐம்புலன் என் பரமல்ல' (7-60-7)

'வறிதே நிலையாதவிம் மண்ணுலகின்
நரனாக வகுத்தனை நானிலையேன்
பொறிவாயிலில் வைந்ததினையு மவியப்
பொருதுன் னடியே புகுஞ்சூழல் சொல்லே! (7-3-3)

பொறிவாயில் ஐந்தினையும் அவித்து இறைவன் பொன்னடி புகும் உபாயம் வேண்டுகிறார் சுந்தரர்.

'அறவாழி அந்தணன் தாள் சேர்ந்தார்க் கல்லால்
பிறவாழி நீந்தல் அரிது' (8)

என்னும் குறளில் வரும் 'அறவாழி அந்தணன்' என்பது

'அறக்கண் என்னத் தகும் அடிகள் ஆரூரை' (7-37-2)

எனச் சுந்தரர் வாக்கில் உருமாற்றம் பெறுகிறது.

'கோளில் பொறியில் குணமிலவே எண்குணத்தான்
தாளை வணங்காத் தலை'.

இக் குறளில் இறைவனை 'எண்குணத்தான்' என வள்ளுவர் அழைத்தாங்குச் சுந்தரரும்,

'இறையவனை மறையவனை எண்குணத்தி னானை (7-10-3)

என்று குணங்களால் பெயர் சூட்டுகிறார்.

'பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார்
இறைவன் அடிசேரா தார்' (10)

என வள்ளுவர் பிறவிக் கடல் நீந்துவதற்குரிய வழிகாட்டு கிருர்.

' மற்றே லொரு பற்றில னெம் பெருமான்
வண்டார் குழலாள் மங்கை பங்கினனே
அற்ருர் பிறவிக்கடல் நீந்தி யேறி
அடியேனுய்யப் போவதோர் சூழல் சொல்லே ' (7-3-3)

எனச் சுந்தரர் 'பிறவிக் கடல் நீந்தும்' விரகினை இறைவனிடம் வினவுகிருர்.

' விசும்பின் துளிவீழின் அல்லால்மற் ருங்கே
பசும்புல் தலை காண்பு அரிது ' (16)

என்னும் கருத்து,

' குழைக்கும் பயிர்க் கோர் மழையே யொத்தியால் ' (7-4-4)

என்னும் சுந்தரர் திருவாக்கில் உவமை வண்ணமாகிறது.

'பிறர்க்கு இன்ன முற்பகல் செய்யின் தமக்கு இன்ன
பிற்பகல் தாமே வரும்' (319)

என்பது திருவள்ளுவரின் அறவுரை.

"குற்றெருவரைக் கூறை கொண்டு
கொலைகள் சூழ்ந்த களவெலாஞ்
செற் றெருவரைச் செய்த தீமைகள்
இம்மையேவரும் திண்ணமே' (7-35-4)

என்னும் திருப்பாட்டில் முற்பகல் பிற்பகல் என்பதன் விளக்கம் குறிக்கப்படுகிறது.

உறங்குவது போலும் சாக்காடு உறங்கி
விழிப்பது போலும் பிறப்பு (339)

எனப் பிறப்பிறப்பிற்கு வள்ளுவர் காட்டும் உவமையை,

'ஓடுபுனற்க ரையாம் இளமை
உறங்கி விழித்தால் ஒக்கும் இப்பிறவி' (7-3-4)

எனச் சுந்தரரும் காட்டுகின்ருர்.

'புக்கில் அமைந் தின்று கொல்லோ உடம்பினுள்
துச்சில் இருந்த உயிர்க்கு' (340)

என வள்ளுவர் உரைக்கும் துச்சிலை அவர் பின்வருமாறு சொற்சித்திரமாய்த் தீட்டுகின்ருர்.

'நரம்பிஞே டெலும்பு கூட்டி
நசையிஞே டிசைவொன் றில்லாக்
குரம்பை வாய்க் குடியிருந்து
குலத்திஞல் வாழ மாட்டேன்' (7-8-6)

'உதிரநீ ரிறைச்சிக் குப்பை
யெடுத்தது மலக்குக் கைம்மேல்
வருவ தோர் மாயக் கூரை
வாழ்வதோர் வாழ்வு வேண்டேன்' (7.8.8)

'பொய்த் தன்மைத்தாய மாயப்
போர்வையை மெய்யென் றெண்ணும்
வித்தகத்தாய வாழ்வு
வேண்டிநான் விரும்பகில் லேன்'

எனத் 'துச்சிலே' வெறுத்துப்'புக்கிலே' விரும்புகிருர் சுந்தரர்.

'பற்றுக பற்றற்ருன் பற்றினை யப்பற்றைப்
பற்றுக பற்று விடற்கு' (குறள்.350)

என்னும் திருக்குறள் இறைவன் திருவடியை இறுகப் பற்றி ஏனைய பற்றுகளை விட்டொழிக்க வேண்டும் என்கின்றது.

'மற்றுப் பற்றெனக் கின்றி நின்திருப்
பாத மேமனம் பாவித்தேன்' (7-48-1)

'மற்ருெருதுணையினி மறுமைக்குங் காணேன்
வருந்த லுற்றேன் மறவாவரம் பெற்றேன்
சுற்றிய சுற்றமும் துணையென்று கருதேன்
துணையென்று நான் தொழப்பட்ட வொண்சுடரை' (7.58.2)

'பற்றிஞர்க் கென்றும் பற்றவன் தன்னை' (7-61-2)

'புற்ருடர வாபுக் கொளி யூரவி நாசியே
பற்ருக வாழ்வேன் பசுபதியே பரமேட்டியே!' (7-92-1)

என்னும் சுந்தரர் திருவாக்குகளால் அவர் எவ்வகைப் பற்றும் இன்றி இறைவனையே பற்ருகப் பற்றியமை தெரியவரும்.

'ஐயத்தின் நீங்கித் தெளிந்தார்க்கு வையத்தின்
வானம் நணிய துடைத்து' (353)

என்பது வள்ளுவர் உணர்த்தும் மெய்யுணர்திறம்.

'சங்கையவர் புணர்தற் கரியான்' (7-10-9)

சங்கைப்பட நினையா தெழு நெஞ்சே (7-71-5)

என்னும் சுந்தரர் வாக்கும் அத்திறத்தினை அறிவிக்கும்.

'ஓர்த்துள்ளம் உள்ளது உணரின் ஒருதலையாய்ப்
பேர்த்துள்ள வேண்டாப் பிறப்பு' (357)

என்பது மெய்யுணர்வார் பிறவி நீக்கம் பெறும் நிலைமையைக் காட்டும்.

'ஓர்ந்தனன் ஓர்ந்தனன் உள்ளத்துள்ளே நின்ற ஒண்பொருள் (7-45-4)

உற்றனன் உற்றவர் தம்மையொழிந் துள்ளத்துள் பொருள்
பற்றினன் பற்றினன் பங்கயச் சேவடிக்கே செல்ல
அற்றனன் அற்றனன் ஆமாத்தூர் மேயானடியார் கட்காள்
பெற்றனன் பெற்றனன் பெயர்த்தும் பிறவாமைக்கே' (7-45-10)

'மழைக்கரும் பும்மலர்க்கொன்றை யினனை
வளைக்கலுற் றேன்மறை வாமனம்பெற்றேன்
பிழைத்தொரு காலினிப் போய்ப் பிறவாமைப்
பெருமைபெற் றேன்பெற்ற தார்பெறு கிற்பார்? (7-58.4)

என்பவற்றில் சுந்தரர் பெற்ற 'பிறவாமைப்பேறு' சுட்டப் படுதல் காணலாம்.

'செருக்குஞ் சினமும் சிறுமையும் இல்லார்
பெருக்கம் பெருமித நீர்த்து' (431)

'இவறலும் மாண் பிறந்த மாணமும் மாண
உவகையும் ஏதம் இறைக்கு' (432)

என நீக்க வேண்டும் அறு பகைகளை அடுக்கிக் காட்டுகிறார் வள்ளுவர்.

'வலையம் வைத்த கூற்ற மீவான்
வந்துநின்ற வார்த்தை கேட்டுச்
சிலைய மைத்த சிந்தை யாலே
திருவடி தொழுதுய்யி னல்லால்
கலைய மைத்த காமச் செற்றக்
குரோத லோப மதவருடை
உலையமைத்திங் கொன்ற மாட்டேன்
ஒணகாந்தன் தளியு ளீரே (7-5-8)

எனக் காம குரோதங்களைப் போக்க வேண்டும் என்பதனைக் குறிப்பித்துள்ளார்.

**நாலடியாரின் நன்மணம்**

இனி, சுந்தரர் வாக்குக்கும் நாலடியார் அறவுரைகளுக்கும் இடையே காணும் சில ஒற்றுமைகளையும் காண்போம்.

'மன்றம் கறங்க மணப்பறை யாயின
அன்றவர்க்கு ஆங்கே பிணப்பறையாய்ப் பின்றை
ஒலித்தலும் உண்டா மென்று உய்ந்து போம் ஆறே
வலிக்குமாம் மாண்டார் மனம்' (நாலடி. 23)

என்பதில் காணும் மணப்பறை பிணப்பறையாதல்,

"மகரக் குழையாய் மணக் கோலமதே
பிணக் கோலமதாம் பிறவி இதுதான்
அகரம் முதலின் எழுத்தாகி நின்றாய்
அடியேன் உய்யப் போவதோர் சூழல் சொல்லே' (7-3-7)

எனச் சுந்தரர் வாக்கில் மணக்கோலம், பிணக்கோலமாக மாறுகிறது.

புல்நுனி மேல் நீர்போல் நிலையாமை யென்றெண்ணி
இன்னினியே செய்க அறவினை—இன்னினியே
நின்றான் இருந்தான் கிடந்தான் றன் கேள்அலறச்
சென்றான் எனப்படுத லால் (நாலடி. 29)

எனவரும் நாலடி நானூற்றுப் பாட்டில் வரும் நிலையாமைக் கருத்து விளக்கத்தினைச் சுந்தரர் திருவாக்கிலும் காணலாம் :

'புன்னு னைப்பனி வெங்கதிர் கண்டாற்
போலும் வாழ்க்கை பொருள் இலைநாளும்
என்னெ னக்கினி இற்றைக்கு நாளை
என்றிருந் திடர் உற்றனன் எந்தாய்
முன்ன மேஉன் சேவடி சேரா
மூர்க்கனாகிக் கழிந்தன காலம்
இனனம் என்றனக் குய்வகை அருளாய்
இடைமருதுறை எந்தை பிரானே!" (7-60-3)

"உடா அதும் உண்ணுதும் தம்முடம்பு செற்றும்
கெடாஅத நல்லறமும் செய்யார்—கொடா அது

வைத்திட்டி னூரிழப்பர் வான்தோய் மலைநாட
உய்த்திட்டும் தேனீக் கரி'' (நாலடி. 10)

என 'ஈயாது வைத்திட்டினர் இழப்பர்' (நாலடி. 10) என நாலடியார் கூறுமாறு சுந்தரரும்,

'உழக்கே உண்டு படைத்திட்டி வைத்திழப்பார்களுஞ் சிலர்கள்' (7-78-4)

என உலகினர் சிலருடைய இயல்பினைக் கூறியுள்ளார்.

**சம்பந்தர் நாவரசர் தமிழ் போற்றுதல்**

சங்கத் தமிழோடு வள்ளுவர் வாக்கு முதலியவற்றையும், சுந்தரர் பாடல்களில் இடையிடையே காண்கின்றபொழுது பழந்தமிழோடு இடையறாது வருகின்ற தொடர்பு நமக்கு விளங்குகின்றது. நம்பியாரூரர்க்கு முன்னோடியாக, நாளும் இன்னிசையால் சைவமும் தமிழும் தழைக்கப் பெருந்தொண்டு புரிந்த சம்பந்தர், நாவுக்கரசர், தேவாரப் பாசுரங்கள் திகழ்ந்தன. சுந்தரர் இவ்விருவர் பாடல்களையும் பெரிதும் ஆராய்ந்தவர் என்பது அவ்விருவரையும் குறித்து அவர் தமது பாடல்களில் பொறித்துள்ள செய்திகளால் விளங்கும். இவருடைய பதிகப் பாக்களில் பெரும்பாலனவும் முன்னை இருவர் அருளிய திருப்பதிகங்களை அடியொற்றியே அமைந்துள்ளன. இறைவன் பெருங் கருணைத் திறத்தை வியந்து உளமுருகி அன்பு ததும்ப ஒவ்வொன்றும் வெளிப்படுவதை நாம் காணலாம்.

பாடல் அமைப்பில் மட்டுமின்றிச் சொற்பொருள் அமைப்பிலும், கூட அவ்விருவரையும் அடியொற்றி இவர் செல்வது காணலாம். எனவே, தொட்ட தொட்ட இடந்தோறும் சுந்தரர் திருப்பதிகங்களில் முந்திய அருளாளர் இருவரின் அருளிச் செயல்களின் மறுபதிவுகள் தோன்றி விளங்கும். மூவர் தேவாரங்களுக்கு இடையே காணப்படும் ஒப்புமைக் கருத்துகளை எடுத்து ஆராய்வோமாயின், அவை மிகமிக விரிந்து பரந்து செல்லும். மூவர் தேவாரத்தையும் பயிலும்போது ஒருவருக்கொருவர் தெய்வத்திருவருளைப் பறைசாற்றுவதில் எவ்வளவு இணைந்து செல்கின்றார்கள் என்பது கண்கூடாகத் தெரியவரும்.

## 5. பா நலன்

### நயத்திற்குச் சுந்தரனூர்

சுந்தரர் திருப்பாடல்கள் துள்ளு நடையினவாய், எதுகை மோனை, முரண் முதலிய தொடைகள் இயைந்தன வாய் அடுக்குச் சொற்களை ஆங்காங்கே கொண்டனவாய், பத்திநலம் கனிந்தனவாய் அமைந்துள்ளன. சொல்நயமும் பொருள் நயமும் இவர் பாடல்களின் தனிச் சிறப்பென ஆன்றோர் கருதுகின்றனர். மூவர் வாக்குகளையும் பிற பத்தர்களின் பாடல்களையும் ஒப்பு நோக்கிக்கண்ட ஒரு புலவர்,

> ‘வாக்கிற் கருணகிரி ; வாதவூரர் கனிவில் ;
> தாக்கிற் றிருஞான சம்பந்தர் ;—நோக்கிற்கு
> நக்கீர தேவர் ; நயத்துக்குச் சுந்தரனூர் ;
> சொற்குறுதிக் கப்பரெனச் சொல்’ (பெருந். 1802)

என்று கூறிச் சுந்தரர் திருவாக்கை **நயத்துக்குச் சுந்தர னூர்** என்று சிறப்பித்துக் கூறுகிறூர்.

### உவமைச் சிறப்பு

சுந்தரர், தம் பாட்டை நயம்பட உரைத்தற்கு உவமை முதலிய அணிகளைப் பொருட் பொருத்தமுற எடுத்தாளு வதும் சிறப்பாகக் கருதத்தக்கது.

சிவபெருமான் உருவத்திற்கு இவர் எடுத்துக்காட்டும் உவமை சிலவற்றைப் பார்ப்போம் :

‘அந்தி வானமும் மேனியே சொலும்’ (7.36.4)
‘செக்கர்வான் அந்தி அன்னூனை’ (7.38.8)
‘செக்கர் வானத்து இளஞாயி றன்னூன்’ (7-96-2)
‘தழல் போலும் திருமேனி (7-1-6) (7.86.3)
‘பொன் செய்த மேனியினீர்’ (7.25.1)
‘பொன்னூர் மேனியனே’ (7.24.2)
‘செம்பொனே யொக்கும் திருவுருவானை’ (7-55-10)
‘குன்றி போல்வதுஓர் உருவரோ’ (7-33-3)
‘செம்பவளத் திருவுருவன்’ (7-89-4)

'மாணிக்கத்தின் மலைபோல வருவார்' (7-53-1)

'மின்னேர் உருவத்து ஒளியானே' (7-62-2)

என்று இவ்வாறு சிவனெனும் நாமம் தனக்கேயுரிய செம் மேனியம்மானின் திருமேனியை இயற்கையிற் காணும் அந்தி வானத்தொடும், எரியும் தழலொடும், செம்பொன் நிறத்துடனும் ஒப்பிட்டுக் காட்டி மகிழ்விக்கிறார். மேலும், குன்றிமணி, செம்பவளம், மாணிக்கம், மின்னல் ஆகிய வற்றையும் அவர்தம் திருவுருவுக்கு ஒப்புக் காட்டுதலும், இவரிடம் காணும் ஒரு தனிச் சிறப்பு.

இறைவன் திருவடியை,

'ஏரிக் கனகக் கமல மன்ன சேவடி' (7-32-2)

என்றும், அவன் மணிமிடற்றை,

'காரிருள் போன்ற கறையணி மிடறு' (7-58-9)

என்றும் ஒப்புமை காட்டிச் சிறப்பிக்கின்றார். இவ்வாறே பார்வதி தேவியின் உருவத்தையும் பலபட வருணித் துள்ளார். பொதுவாக மாதரின் சாயல், கண், முலை, மொழி, முதலியவற்றிற்கு இவர் காட்டும் உவமைகள் பண்டைநூல்களில் வருகின்ற மரபுவழி உவமைகளே. எடுத்துக்காட்டாகக் கண்ணிற்கு மீனையும், மானையும், வேலையும், வாளையும் ஒப்புமைப்படுத்திக் காட்டுவதைச் சொல்லலாம். உடம்பைக் கிழிபட்ட பறைக்கும் (7-8. 1) கண்ணிலானைக் கோல்கொண்டு இழுத்தலுக்குக் கழித் தலைப்பட்ட நாயையும் (7-54-5) ஒப்பிட்டுக் கூறுவது சுந்தரரது புதிய படைப்பாம்.

### பலபொருள் உவமை

இறைவன் நிலையை உயிர், மழை முதலிய பல பொருளுக்கு ஒப்பிட்டுப் பின்வரும் பாடற் பகுதியில் உரைக்கின்றார் :

'இழைக்கு மெழுத்துக் குயிரே யொத்தியால்;
இலையே யொத்தியால்; உளையே யொத்தியால்;
குழைக்கும் பயிர்க்கோர் புயலே யொத்தியால்;
அடியார் தமக்கோர் குடியே யொத்தியால்!' (7-4-4)

இதனைப் பலபொருள் உவமை என்பர் அணிநூலார்.

## பழிப்பதுபோலப் புகழ்தல்

இறைவனைப் பழிப்பது போலப் புகழ்ந்துரைக்கும் பாசுரங்கள் தம்பிரான் தோழராகிய இவரிடம் அதிகமாகக் காணலாம்.

‘திங்கள் தங்கு சடைக்கண் மேலோர்
திரைகள் வந்து புரள வீசும்;
கங்கையாளேல் வாய்திற வாள்;
கணபதியேல் வயிறு தாரி;
அங்கை வேலோன் குமரன் பிள்ளை;
தேவி யார்கோற் றட்டி யாளார்;
உங்களுக்காட் செய்ய மாட்டோம்,
ஓண காந்தன் றளியுளீரே!’ (7-5-2)

‘வார மாகித் திருவ டிக்குப்
பணிசெய் தொண்டர் பெறுவ தென்ன!’
ஆரம் பாம்பு; வாழ்வ தாரூர்;
ஒற்றி யூரேல் உம்ம தன்று;
தார மாகக் கங்கை யாளைச்
சடையில் வைத்த அடிகேள் உந்தம்
ஊருங் காடு; உடையுந் தோலே;
ஓண காந்தன் றளியுளீரே!’ (7-5-9)

‘ஏடுலாமலர்க் கொன்றை சூடுதிர்;
என்பெ லாமணிந் தென்செய்வீர்?
காடுநும்பதி யோடு கையது
காதல் செய்பவர் பெறுவதென்?’ (7-36-7)

‘கையது கபாலம்; காடுறை வாழ்க்கை;
கட்டங்கம் ஏந்திய கையர்;
மெய்யது புரிநூல்; மிளிரும்புன் சடைமேல்
வெண்திங்கள் சூடிய விகிர்தர்;
பையர வல்குற் பாவைய ராடும்
பாச்சிலாச் சிரத்தெம் பரமர்
மெய்யரே யொத்தோர் பொய்செய்வ தாகில்
இவரலா தில்லையோ பிரானார்?’ (7-14-7)

‘பெற்ற போழ்தும் பெறாத போழ்தும்
பேணியுங்கழ லேத்து வார்கள்
மற்றோர் பற்றில ரென்றிரங்கி
மதியுடையவர் செய்கை செய்யீர்—

அற்ற போழ்து மலர்ந்த போழ்தும்
ஆபற் காலத் தடிகேள் உம்மை
ஒற்றி வைத்திங் குண்ண லாமோ
ஓண காந்தன் றளியுளீரே !' (7-5-3)

இப்படிப் புகழாப் புகழ்ச்சியாய்ச் சுந்தரர் உரைப்பன சுவை மிக்கனவாம்.

**சுவைநலம்**

சுந்தரர் திருவொற்றியூரில் சங்கிலியாருக்குத் தாம் இறைவன் முன் ஆணையிட்டுக் கொடுத்த வாக்கை மீறித் திருவாரூர்மேல் எழுந்த காதலால் திருவொற்றியூர் எல்லையைக் கடந்து சென்றதால் கண்ணிழந்தார். கண்ணிழந்த நிலையிலும், காஞ்சியில் ஒரு கண் பெற்ற நிலையிலும், திருவாரூரில் மற்றைக் கண்பெற வேண்டிய காலத்தும், எழுந்த வாக்குகளிலே அவர்பட்ட அவலத்தின் எதிரொலியைக் கீழ்க்காணும் பாடல்கள் சிலவற்றில் காண்கிறோம். *54, 60, 69, 70, 89, 95*ஆம் பதிகங்கள் அவலச் சுவை அமந்தவை. ஒருசில எடுத்துக் காட்டுகள் வருமாறு :

'அழுக்கு மெய்கொடுன் றிருவடி யடைந்தேன்
அதுவு நான்படப் பாலதொன் றானால்
பிழுக்கை வாரியும் பால்கொள்வர் அடிகேள்
பிழைப்ப னாகிலும் திருவடிப் பிழையேன்
வழுக்கி வீழினும் திருப்பெய ரல்லால்
மற்று நான் அறியேன்மறு மாற்றம்
ஒழுக்க வென்கணுக் கொருமருந் துரையாய்
ஒற்றியூரெனும் ஊருறை வானே! (7-54-1)

'மகத்திற் புக்கதோர் சனியெனக் கானாய்
மைந்த னேமணி யேமண வாளா
அகத்திற் பெண்டுகள் நானொன்று சொன்னால்
அழையேற் போகுரு டாவெனத் தரியேன்
முகத்திற் கண்ணிழந் தெங்ஙனம் வாழ்கேன்
முக்கணா முறையோ மறையோதீ!
உகைக்குந் தண்கடல் ஓதம்வந்துலவும்
ஒற்றியூரெனும் ஊருறைவானே! (7-54-9)

**நகையாடுதல்**

தோழமை நிலையில் நின்று இறைவனை எண்ணிய இவர் தமக்கு வேண்டும் போக போக்கியங்களை இறை

வனிடமே உரிமையோடு கேட்கின்றூர். சுந்தரருக்காக இறைவன் பொன்னும், பொதிசோறு முதலியனவும் பரிந்து கொடுத்ததோடு பரவையார் ஊடல் தீர்க்கத் தூதும் சென்றுன். இவ்வாறு இறைவன் தூது சென்றது சுந்தரரின் தமிழ்ச் சிறப்பாலேயே யெனத் 'தமிழ் விடுதூது' ஆசிரியர்,

"...........................................ஓரடிக்கோர்
ஆயிரம் பொன்னிறைக்கும் ஐயரை வீதியிலே
போயிரந்து தூது செல்லப் போக்கிளுய்"

(—தமிழ் விடுதூது, 100)

என்று தமிழை விளித்துப் பேசுகின்றூர். இத்தகைய நிலையில் இறைவனைத் தோழர் நிலையில் வைத்து எள்ளி நகையாடுவதும் இனிமை பயப்பதே. பரவையாருக்காகக் குண்டையூரில் இறைவன் அருளால் கிடைத்த நெல்லைத் திருவாரூரில் பரவையார் இல்லத்தில் சேர்க்குமாறு அவ்விறைவனையே வேண்டுகிறுர்.

'பாதியொர் பெண்ணை வைத்தாய்,
    படருஞ் சடைக் கங்கை வைத்தாய்
மாதர்நல் லார்வருத்த
    மதுநீயும் அறிதியன்றே!
கோதில் பொழில்பு டைசூழ்
    குண்டையூர்ச்சில நெல்லுப் பெற்றேன்,
ஆதியே யற்புதனேயவை யட்டித்
    தரப்பணியே" (7-20-3)

"வாரிருங்குழல் ; வாணெடுங்கண் ;
    மலைமகண் மதுவிம்மு கொன்றைத்
தாரிருந்தட மார்பு நீங்காத்
    தையலாளுல குய்யவைத்த
காரிரும் பொழிற் கச்சி மூதூர்க்
    காமக் கோட்டமுண் டாக, நீர்போய்
ஊரிடும் பிச்சை கொள்வதென்னே?
    ஓண காந்தன் றளியூரே! (7-5-6)

ஓணகாந்தன் தனிப்பெருமானைத் தோழமை உரிமையுடன் நகைச்சுவை ததும்பத் தமது அடிமைத்திறம் புலப்படப் பேசிச் சுந்தரர் அசதியாடியுள்ளார் என்பதனைச் சேக்கிழார் பெருமானும்,

'ஒண காந்தன் தளிமேவும் ஒருவர் தம்மை உரிமையுடன்
பேணி அமைந்த தோழமையால் பெருகும் அடிமைத்திறம்
பேசிக்
காணமோடு பொன்வேண்டி நெய்யும் பாலும் கலவிளங்கும்
யாணர்ப் பதிகம் எடுத்தேத்தி எண்ணில் நிதி பெற்றினி
திருந்தார்' (பெரியபு. ஏயர்கோன். 191)

என்று தமது திருத்தொண்டர் புராணத்துள் எடுத்துக் காட்டியுள்ளார்.

'படவர வுநுண் ணேரிடைப் ;
பணைத்தோள் ; வரிநெடுங்கண் ;
மடவரல் லுமை நங்கை தன்னையொர்
பாகம்வைத் துகந்தீர் !
முடவ ரல்லீர் இடரிலீர் ;
முருகன் பூண்டிமா நகர்வாய்
இடவ மேறியும் போவதாகில்நீர்
ரெத்துக்கிங்கிருந் தீர்எம் பிரானீரே !

திருமுருகன் பூண்டியில் பொன்னும் பொருளும் பறி கொடுத்த நிலையில் இறைவனைக் கேட்கிறார் சுந்தரர். 'எத்துக்கிருந்தீர்'? என்பதில் எவ்வளவு உரிமை தொனிக்கிறது ?

### பழமொழி போற்றுதல்

உவமைகளை எடுத்துக்காட்டிக் கவிஞர்கள் பொருள்களை விளக்கம் செய்வது போலவே வழி வழி வரும் பழமொழிகளையும் தங்கள் பாடல்களில் எடுத்து அமைத்துக் கொண்டிருக்கிறார்கள். மக்களிடையே அன்றாடம் வழங்கி வரும் பழமொழிகளை உடன் வைத்து விளக்கும் போது, சொல்லக் கருதிய பொருள் கேட்பார்க்குத் தெளிவுற விளங்கும். பண்டைப் பெரும்புலவர்கள் வாக்குகளிலும் கூடப் பழமொழிகள் இடம் பெற்றிருக்கின்றன.

'அம்ம வாழி தோழி, இம்மை
நன்று செய் மருங்கில் தீதில், என்னும்
தொன்றுபடு பழமொழி இன்று பொய்த்தன கொல்'

என அகநானூற்றுப் பாடல் ஒன்றில் (101) பழமொழியொன்றை எடுத்துக் காட்டியதுடன், 'தொன்றுபடு பழ

மொழி' என அது நீண்ட நெடுங்காலம் வழங்கிவரும் இயல்பினையும் எடுத்துக் காட்டியுள்ளார். பழமொழிகளின் அருமை பெருமைகளை உணர்ந்து 400 பழமொழிகளுக்கு இலக்கிய வாழ்வு தந்த முன்றுறையரையனர்,

'பண்டைப் பழமொழி நானூறும் கொண்டினிதா
முன்றுறை மன்னன் நான்கடியும் செய்தமைத்தான்'

என்று சிறப்பிக்கப்படுதல் நோக்கத்தக்கது. ஆழ்ந்து நோக்கும்போது, காலம் கணித்து உறுதிசெய்ய இயலாத பழமையை உடையவை இப்பழமொழிகள் என்பது தெளிவு. சுந்தரர் செந்தமிழிலும் திட்பநுட்பம் செறிந்தினிது விளங்கும் பழமொழிகள் பலவற்றைக் காணலாம். இவற்றுள் பெரும்பான்மையும் நிலையாமையைக் குறித்தன என்பது கூர்ந்து நோக்கத்தக்கது.

'வாழ்வாவது மாயம் இது மண்ணாவது திண்ணம்' (7-78-7)
'உறங்கி விழித்தா லொக்கும் பிறவி' (7-3-4)
'மணக்கோ லமதே பிணக்கோ லமதாம் பிறவி' (7-3-7)
'ஒருநெல் வாலூன்ற வருந்தும் உடம்பு' (7-3-6)

இவை வாழ்க்கை நிலையாமையை எடுத்துக்காட்டுவன.

'ஒருபுனற் கரையாம் இளமை' (7-3-4)

என்பது இளமை நிலையாமையை உணர்த்தும். மேலும், உலகியல் வாழ்க்கையை ஒட்டி நட்பு முதலியவற்றைப் பற்றிய பழமொழிகளையும் சுந்தரர் எடுத்து மொழிந்திருக்கும் பான்மை கவனிக்கத்தக்கது.

'பொற்குன்றம் சேர்ந்த காக்கை பொன்னாம்' (7-50-4)
'கன்று முட்டி உண்ணச் சுரந்த காலி
பேயோ டாயினும் பிரிவொன் றின்னா தென்பர்' (7-95-9)
'செத்த போதில் ஆருமில்லை சிந்தையில் வைம்மின்கள்' (7-7-1)
'பஞ்சியிடப் புட்டில் கீறுமோ' (7-43-1)
'இரும்புண்ட நீரை' (7-58-1)
'கழுதை குங்குமம் தான் சுமந்து எய்த்தால் கைப்பர்'
(7-60-1)
'அரைத்த மஞ்சள் ஆவதை அறிந்தேன்' (7-60-2)

இவ்வகைப் பழமொழிகள் இன்னும் பல உள. இப் பழமொழிகளுள் பலவற்றை நீதிமொழிகளாகவும் கருது வது உண்டு.

‘ எள் விழுந்திடம் பார்க்குமாகிலும் ஈக்கும் ஈகிலன்’ (7-34-8)
‘ தாழாதறஞ் செய்ம்மின்’ (7-78-1)
‘ பெரியாரொடு நட்பினிது’ (7-2-2)

என்பவைபோல வருபவை அறவுரைகளேயாம்.

### பத்திப் பனுவல்

இங்ஙனமாகப் பொருள் விளக்கத்திற்கு ஏற்ப, எல்லோரும் எளிதில் ஏற்று அனுபவிப்பதற்குக் தக்கபடி இவர்தம் பாநடை அமைந்துள்ளது. பாடல்களை ஒவ்வொரு வரும் தத்தமக்குரிய இசையில்—பிறர்க்கு எப்படியிருப்பி னும்—ஓதும்போது உளம் கசிந்துருகும்; திருப்பாட்டுத் தெள்ளமுதின் பத்திச் சுவை தெற்றெனப் புலப்படும்.

ஆளுடைய நம்பிகளின் அருப்பாடல்களை நாளும் படித்து அனுபவித்த அருட்பிரகாச வள்ளலாராகிய இராம லிங்க அடிகள் அனுபவத் திருவாக்குப் பின்வருமாறு :

“தேன் படிக்கும் அமுதாம் உன்
திருப்பாட்டைத் தினந்தோறும்
நான் படிக்கும் போதென்னை
நானறியேன் ; நா ஒன்றோ,
ஊன் படிக்கும் உளம்படிக்கும்
உயிர்படிக்கும் உயிர்க்குயிரும்
தான்படிக்கும் அனுபவங்காண்,
தனிக்கருணைப் பெருந்தகையே !”

(ஆளுடைய நம்பிகள் அருள்மாலை—(3253)

# 4

# எட்டாந் திருமுறை

## திருவாசகம்

(வித்துவான். செ. வேங்கடராமச் செட்டியார்).

அறிவாற் சிவனே என்று ஆன்றோர் போற்றும் சான்றோராகிய திருவாதவூரடிகள், குருவாக வந்த சிவ பிரானை நேரில் கண்டு, தேனாய் இன்னமுதமுமாய்த் தீங் கரும்பின் கட்டியுமாய்த் தித்திக்க அனுபவித்துப் பாடிய அமுதனைய தெய்வப்பாசுரங்களின் தொகுப்பாகிய திரு வாசகமும், மலமாசு நீங்கிய தூய ஆன்மாக்களின் தெய் வக்காதலைப் பேசும் திருக்கோவையாரும், சைவத் திரு முறைகள் பன்னிரண்டில் எட்டாந்திருமுறையாக வைத்து எண்ணப்படும் ஏற்றமுடையவையாகும். அவற்றுள் திரு வாசகத்தைப் பற்றி முதலில் சிந்திப்போம்.

திருவாசகம் என்பது, ஞானத்தை யுணர்த்தும் சொல் எனப் பொருள்பட்டுப் பின்பு அடையடுத்த கருவி ஆகு பெயராய் ஞானத்தை உணர்த்தும் சொற்களாலாய நூலினை உணர்த்தியது. திரு — ஞானம்; வாசகம் — சொல். திருவாசகம் எளிமையும் இனிமையும் ஆழமும் மிக்கது. கருங்கல் மனத்தையும் கரைவிக்கும் கனிவு மிக்கது. என்பினையும் உருக்கியீடில்லா இன்ப வெள் ளத்தில் ஆழ்த்தும் ஆற்றலுடையது. சிந்தனையைத் திருத் திச்சிவனடியே சிந்திக்கச் செய்யும் செப்பமுடையது. கேட்ட அளவிலே பொல்லா விலங்குகளையும் பறவை களையுங்கூட ஞான நாட்டம் பெறவைக்கும் பெற்றி யுடையது. பிறநாட்டுப் பிறமதத்துப் பிறமொழி யாளரையும் தன்பாலீர்த்து அவர்தம் மதத்தையும் நூலையும் மறக்கச் செய்து தன்னையே நினைந்துருகச் செய்யும் தகுதிமிக்கது.

## யாப்பமைதி

இத்தகைய தெய்வநூல் சிவபுராணம் முதலிய ஐம்பத்தொரு தலைப்புக்களில் உள்ள அறுநூற்றைம் பத்தாறு அமுதப் பாடல்களைத் தன்பால் கொண்டு மிளிர் கின்றது. முதற்கண் அமைந்த சிவபுராணம் கலிவெண் பாவில் அமைந்துள்ளது. கீர்த்தித் திருவகவல் நிலை மண்டில ஆசிரியப்பாவாகவும், திருவண்டப்பகுதி இணைக் குறள் ஆசிரியப்பாவாகவும், போற்றித்திருவகவல் நிலை மண்டில ஆசிரியப்பாவாகவும் அமைந்துள்ளன. ‘திருத் தசாங்கம்’ ‘திருவெண்பா’, ‘பண்டாய நான்மறை’ என்ற பகுதிகள் வெண்பாவா லியன்றுள்ளன. ஏனையவை தரவு கொச்சகக்கலிப்பா என்ற பாவகையிலும், ஆசிரிய விருத்தம், கலிவிருத்தம், கலித்தாழிசை, கட்டளைக் கலித் துறை என்ற பாவினங்களிலும் அமைந்துள்ளன.

சங்க நூலாகிய பதிற்றுப்பத்தில் நான்காம்பத்து அந்தாதியாக அமைந்து பிற்கால அந்தாதி நூலுக்கு வழி காட்டியுளது. அதுபோலவே திருவாசகத்தில் திருச்சதகம், நீத்தல் விண்ணப்பம், கோயில் மூத்த திருப்பதிகம், கோயில் திருப்பதிகம்; பிரார்த்தனைப் பத்து, குழைத்த பத்து, யாத்திரைப்பத்து என்ற பகுதிகளை அந்தாதியாக அமைத்துப் பிற்கால நூல்கட்கு வழிகாட்டியுள்ளார் மணி வாசகர்.

இனி, திருவாசகத்தின் உட்பிரிவுகட்குப் பெயர் கொடுக்கும் முறையாலும் பதிற்றுப்பத்தினைப் பின்பற்றி யுள்ளார் என்னலாம். பதிற்றுப்பத்தில் ஒவ்வொரு பாட்டி லும் வரும் பொருள்பொதிந்த ஒரு சொல்லைக் கொண்டு அப் பாட்டிற்குப் பெர் சூட்டியுள்ளது காணலாம். திரு வண்டப் பகுதி, பண்டாய நான்மறை, குழைத்தபத்து என் பன அப்பாடல்களில் வரும் முதற்சொல்லையே கொண்டு வைத்த பெயர்களாகும். திருவெம்பாவை, திருவம்மானை, திருக்கோத்தும்பி, திருச்சாழல், திருத்தெள்ளேணம், திருப்பூவல்லி, திருவுந்தியார், திருத்தோணோக்கம், திருப் பொன்னூசல், திருப்பள்ளியெழுச்சி, அடைக்கலப் பத்து, அன்னைப்பத்து, ஆசைப்பத்து, அதிசயப்பத்து, பிடித்த பத்து, அற்புதப் பத்து, சென்னிப்பத்து, திருக்கழுக்குன்றப்

பதிகம் என்ற பெயர்கள் அவ்வப்பகுதியில் பாடல் இறுதியில் வரும் சொல்லாலும், இறுதியடியில் அமைந்த சொல்லாலும் அமைந்த பெயர்களேயாகும். திருப்படை யாட்சி என்பது அப் பகுதியில் முதற்பாட்டில் மூன்றாவது அடியில்வரும் 'படையாட்சி' என்ற சொல்லால் சூட்டிய பெயரேயாகும். செத்திலாப் பத்தும் அத்தகையதே. இவ்வாறு ஒரு பகுதியில் வரும் முதற் சொல்லாலும், இறுதிச் சொல்லாலும், செய்யுளிடையில் வரும் சொல்லாலும் அவ்வப்பகுதிக்குப் பெயர் சூட்டிப் பிற் காலப் புலவோர்க்கு வழிகாட்டியுள்ளார் மணிவாசகர். ஏனைய தலைப்புக்கள் பொருள் நோக்கத்தால் அமைந்தவை யாகும்.

## மணிவாசகர் வரலாறு

திருவாதவூரில் பிறந்து பாண்டிய மன்னனுக்கு முதலமைச்சராய்த் தென்னவன் பிரமராயன் என்னும் பட்டப்பெயரோடு சிறப்புற்றிருந்த மணிவாசகர், பிறந்த ஊரின் பெயரால் 'திருவாதவூரர்' என்று அழைக்கப் பட்டார். இயற்பெயர் யாதென்று தெரிந்திலது. சிவ பிரானைப் பாடும்போது அப் பெருமானைச் சிந்தாநன்மணி, குருமணி, மாசிலாமணி, ஏதாமணி, மாமணி, சிகாமணி, மாணிக்கத்தொளி எனப் பலவிடங்களில் போற்றிப் புகழ்ந்துள்ள காரணத்தால் மணியைப் பற்றிய வாச கத்தைச் சொன்னவர் என்ற பொருள்பட மணிவாசகர் எனவும் மாணிக்கவாசகர் எனவும் மக்கள் இவர்க்குப் பெயர் சூட்டியிருத்தல்வேண்டும். புலவர்கள் தாம் ஆண்ட சொற்றொடர் காரணமாகப் பெயர் பெறுதல் உண்டு என்பதை, 'அணிலாடு முன்றிலார்', 'தேய்புரிபழங்க யிறனார்' எனச் சங்ககாலப் புலவர்கள் பெயர் பெற்றி ருத்தல் கொண்டு அறியலாம். எனவே, மணிவாசகர் என்ற பெயரும் இவர்க்கு இயற்பெயர் அன்று. திரு வாசகத்தில் பலமுறை ஆண்ட சொல்லின் காரணமாகப் பெற்ற பெயரே என்பது தெளிவு. 'மாசில் மணியின் மணிவார்த்தை' (632) எனவும், 'வாக்குன் மணிவார்த்தைக்

காக்கி' (30) எனவும் இவரே குறிப்பிட்டிருத்தல் காணலாம். வார்த்தை, வாசகம் என்பன ஒருபொருளன.

திருவாதவூரர் பாண்டியன் இட்ட கட்டளைப்படி குதிரை வாங்கிவரப் பெரும் பொருளோடு புறப்பட்டவர், திருப் பெருந்துறையில் குருந்த மரத்தடியில் அடியார் பலர் சூழ இருந்து, அவர்கட்கு உபதேசம் செய்துகொண்டிருந்த குரு பரனைக் கண்ட அளவில் இவ்வுலகையே மறந்து அந்தக் குரு பரனுக்குத் தொண்டு பூண்டு அவர்பால் உபதேசம் பெற்று அருள்வாழ்வினை மேற்கொண்டு, முன்பு குதிரை வாங்குதற்கெனக் கொணர்ந்திருந்த பெரும் பொருளைக் கொண்டு திருப்பெருந்துறையில் கோயில் கட்டினார். இதை ஒற்றர் மூலம் உணர்ந்த பாண்டியன் ஏவலரை அனுப்பிக் கேட்க மாணிக்கவாசகர் முன்னைய நினைவு வந்து வருந்தி இறைவன் திருக்குறிப்பினையுணர்ந்து, ஆவணிமூலத்தன்று குதிரை வரும் என்று சொல்லி அனுப்பினார். அச் சொல்லைக் காப்பாற்றச் சிவபிரானே குதிரைச் சேவகனாய்க் காட்டில் உள்ள நரிகளையெல்லாம் பரிகளாக்கிப் பாண்டியன் முன்நிறுத்திக்காட்ட, அவன் மகிழ்ந்து ஏற்றுக் கொண்டான். அன்றிரவு அக் குதிரைகள் எல்லாம் நரிகளாய் மாறி மதுரை நகரிலுள்ள மக்களைக் கடித்துப் பித்தேற்றியது. அதனையுணர்ந்த பாண்டியன் சினந்து மாணிக்கவாசகரை வையையாற்றுச் சுடுமணலில் நிறுத்தி ஒறுத்தானாக, தன் அடியவர் துயர் கண்டு பொறாத சிவபிரான் வையையில் பெருவெள்ளம் வரச்செய்தார். அவ் வெள்ளம் மதுரை நகரை அழிக்காதபடி கரையைக் கட்ட நகர் மக்களுக்கு அரசன் ஆணையிட்டான். அந்த ஆணையை யேற்றுத் தன் பங்கையடைக்க முடியாத வந்திக்காக இறைவனே கூலியாளாய் வந்து பிட்டுக்காக மண் சுமந்தார். மண் சுமந்தவர் சிவபிரான் என்று அறியாத பாண்டியன், அப் பங்கு சரியாக அடைபடாமை கண்டு வெகுண்டு பிரம்பால் அடிக்கின்றான். அவ்வடி எல்லா உயிர்களின் மேலும் படுகின்றது. கூலியாளாய் வந்த சிவபிரான் மறைகின்றார். உண்மையுணர்ந்த பாண்டியன் மணிவாசகரின் பத்திச் சிறப்பினையும் அவர்க்காகச் சிவ பிரான் செய்த திருவிளையாடல்களையும் உணர்ந்து அம் மாணிக்கவாசகரை வணங்கி மன்னிப்புக் கேட்கின்றான்.

பின்பு மாணிக்கவாசகர் இறைவன் குறிப்பின்படி பல தலங்களையும் சென்று வணங்கிப் பெருந்துறையில் மேவிய குருபரனை அடைந்து வணங்கி வீடு வேண்டச் சிவ பிரான் மற்ற அடியார்க்கெல்லாம் வீட்டுலகத்தை அருளி விட்டு, இவரைத் தில்லைக்கு வரச் சொல்லி மறைந்தருளு கின்றார். பின்பு பல தலங்களையும் வணங்கிப் பாடிச் சென்று தில்லையில் பலநாள் தங்கிப் பலவகைப்பாடல் களைப் பாடி வழிபாடு செய்து கொண்டிருக்க, இறைவன் தோன்றிப் 'பாவை பாடிய வாயால் கோவை பாடுக' என்று கட்டளையிட, மணிவாசகர் திருக்கோவையாரைப் பாட நடராசப் பெருமானே அப் பாடல்களை ஏட்டில் எழுதிக் கடைசியில் திருச்சிற்றம்பலமுடையான் எழுத்து எனக் கையெழுத்தும் இட்டுத் திருக்களிற்றுப்படியில் வைத்து விட்டு மறைந்தருளினார். பின்பு இத்திருப்பாடல்கட்குப் பொருள்விளக்க வேண்டும் என்று மக்கள் கேட்டபோது, 'நடராசப் பெருமானே இப் பாடல்கட்குப் பொருள்' என்று சொல்லிவிட்டு அப்பெருமானடியில் கலந்து மறைந்தார் என்பது வரலாறு.

திருவிளையாடற் புராணம், திருப்பெருந்துறைப் புராணம், உத்தரகோசமங்கைப் புராணம், திருவாதவூர்ப் புராணம், முதலிய நூல்களில் சில வேறுபாட்டோடு இவ் வரலாறு பேசப்படுகின்றது.

***மணிவாசகர் வரலாற்றுக் குறிப்பு திருவாசகத்தில் உண்டா?***

திருவாதவூரர் இம்மண்ணுலகில் பிறப்பதற்குமுன் எங்ஙனம் இருந்தார் என்பது முதலிய குறிப்புக்கள் திரு வாசகத்தில் இடம் பெற்றுள்ளன. இறைவன் அருள் கைவரப்பெற்றபின் பழைய நிலையை யுணரும் ஆற்றல் அடியார்கட்கு வாய்ப்பதுண்டு. இதனை,

> 'அறிவிலாத எனைப் புகுந்தாண்டுகொண்டு அறிவதை யருளிமேல்
> நெறியெலாம் புல மாக்கிய எந்தையை' (36)

என மணிவாசகரே குறிப்பிடுதல் காணலாம். மேல்நெறி என்றது உயர்ந்த ஞான நெறியென்றும் முன்னர்த்

தாமிருந்த மேல்நெறி யென்றும் பொருள்படும். இங்குத் தாம் பிறப்பதற்கு முந்தியிருந்த மேலைநெறியைப் புலப் படுத்திய எந்தை எனப் பொருள் கொள்ளலாம். அந் நெறி யாது எனில்? கூறுவல்.

திருவாதவூரில் பிறப்பதற்கு முன்பு ஆளுடையடிகளார், சிவபிரான் திருவடிகளில் கலந்து இன்புற்றிருந்தோராவர். அந்தஇன்ப நிலையில் இருந்தவரைச் சிவபிரான் தென்னாட் டில் சைவப்பயிர் வளர்ப்பதற்காகவும், பிற மதங்களைக் களையெடுப்பதற்காகவும் திருவாதவூரில் பிறக்கச் செய் தார் என்று புலனாகின்றது. தன்னோடு கலந்திருந்த அடி களாரைச் சிவபிரான் பிரித்து ஓர் உடம்பில் புகுவித்துப் பிறப்பித்தார் என்பதையும் அவ்வாறு பிரிந்து வந்து பிறந்த பின்பு இறைவன் தன் திருக்கண்ணால் நோக்கியும், நுண் ணிய—பொருளையுடைய—நொடியளவில் சொல்லக்கூடிய ஒருவார்த்தையைச் செவியறிவுறுத்தினார் என்பதையும் குறிப்பிடுகின்றார். 'நுகத்தடியாகிய பாரம் வைக்காமல் நிலத்தை உழச் செய்வதுபோல் எவ்வித முயற்சியும் யான் மேற்கொள்ளாமலே ஞான நிலையை அடையச் செய்து யான் முன் செய்த பொய்கள் அறுமாறு என்னை எடுத்து யான் பிறந்தபின் உண்டான என் பாசத்துகளையெல்லாம் அறுத்துப் பின்பு உதய மலையில் எழுகின்ற சூரியனைப் போன்ற சோதி வடிவினனாக என்னை ஆக்கி ஆட்கொண்டு தன் அடியவரோடு கூட்டிய அதிசய நிகழ்ச்சியைக் கண்ணாலே கண்டு அனுபவித்தோமே' என்று அடிகளார் வியக்கின்றார். இதனை,

"நீக்கி முன்னெனைத் தன்னொடு
    நிலாவகை குரம்பையிற் புகப்பெய்து
நோக்கி நுண்ணிய நொடியன
    சொற்செய்து நுகமின்றி விளாக்கைத்துத்
தூக்கி முன்செய்த பொய்யறத்
    துகளறுத் தெழுதரு சுடர்ச்சோதி
ஆக்கி யாண்டுதன் அடியரிற்
    கூட்டிய அதிசயங் கண்டாமே." (433)

என்ற திருப்பாட்டு நன்கு புலப்படுத்தல் காணலாம்.

"மானேர் நோக்கி மணவாளா
மன்னே நின்சீர் மறப்பித்திவ்
வூனே புகவென் றனைநூக்கி
உழலப் பண்ணு வித்திட்டாய்" (497)

என்ற அடிகளிலும் இறைவன் தன்புகழை மறக்கச்செய்து தம்மை இவ்வூனுடலில் புகுமாறு தள்ளிய நிகழ்ச்சியை அடிகளார் குறிப்பிடுதல் காணலாம். இங்ஙனம் அவரே கூறுவதால், திருவாதவூரில் அவர் பிறப்பதற்கு முன்பு சிவபிரானோடு கலந்திருந்து அவன்புகழை மறவாது இன்புற்றிருந்தார் என்பதும், மண்ணுலகில் ஊனுடம்பில் புகுந்து அவர் பிறந்த பின்பு, உலகவர் சார்பால் பல துன்பங்கள் உற்று வருந்தினர் என்பதும், சிவபிரான் குருவாக வந்து தன் நோக்காலும், வாக்காலும் திருத்தித் திருவடி சூட்டி அவரை ஞான ஒளி வீசும் சோதிவடிவினராக்கினர் என்பதும் நமக்கு நன்கு புலனாகின்றன. மாணிக்கவாசகர் அவ்வாறு சோதிவடிவினர் ஆகுமாறு சிவபிரான் நோக்கினர் என்பதை,

"ஈறி லாதநீ யொளியை யாகி
வந் தொளிசெய் மானுடமாக நோக்கியும்" (95)

என்று பிறிதோரிடத்தில் அடிகளார் குறிப்பிடுதல் காணலாம்.

இனி வாதவூரர் வரலாற்றில் பெரிய திருப்பத்தை யுண்டாக்கிய நிகழ்ச்சி, பாண்டியன் குதிரை வாங்கக் கொடுத்தனுப்பிய பொருளைக் கொண்டு திருப்பெருந்துறையில் கோயில் திருப்பணி செய்துவிட்டமையாகும். அவ்வாறு செலவிட்ட பாண்டியன் பொருளை மீண்டும் கொடுப்பது அரிதாகலின் அவன் சொற்படி குதிரைகளை அனுப்புவதே செய்யத் தகுவது என்பதையறிந்த இறைவன் ஆவணி மூலத்தன்று குதிரைகள் வரும் என்று கூறுமாறு குறிப்பிட்டார். அந்த ஆவணி மூலத்தன்றே நரிகளைப் பரிகளாக்கிக் கொணர்ந்து காட்டிப் பாண்டியனுக்குக் கொடுக்க வேண்டிய பொருளைத் தாம் கொடாதபடி செய்த அரிய நிகழ்ச்சியைத் தம்வாக்காலே குறிப்பிடுகின்றார்.

" நரியைக் குதிரை யாக்கிய நன்மையும்
ஆண்டுகொண் டருள அழகுறு திருவடி
பாண்டியன் றனக் குப்பரி மாவிற்
றீண்டு கனகம் இசையப் பெருஅ
தாண்டான் எங்கோன் " (கீர்த்தித் திருவகவல்-36-40)

என்று கூறுதல் காணலாம்.

இனி, அந்தக் குதிரைகள் அன்றிரவே நரியாக மாறி மதுரை நகரில் உள்ளோரைக் கடித்துப் பிச்சேற்றிய செய்தியை,

" நரியைக் குதிரைப் பரியாக்கி
ஞால மெல்லாம் நிகழ்வித்துப்
பெரிய தென்னன் மதுரையெல்லாம்
பிச்ச தேற்றும் பெருந்துறையாய் " (647)

என ஆனந்தமாலையில் அடிகளார் அருளியிருப்பதைக் காணலாம். பரியை நரியாக்கிய செய்தியை வெளிப் படையாகக் கூருவிடினும், 'மதுரையெல்லாம் பிச்ச தேற் றும் பெருந்துறையாய்' என்றதனுல், பரிகளை நரிகளாக்கி மதுரையில் உள்ளவர்களைக் கடித்துப் பிச்சேற்றிய நிகழ்ச்சியைப் புலப்படுத்தியுள்ளார் என்பது ஆழ்ந்து நோக்குவார்க்குப் புலனுகும்.

தம் பொருட்டு நரிகளை பரிகளாக்கிய பின்பு, இறை வன் மண்சுமந்த திருவிளையாடல் நிகழ்ந்தது. இதனை,

" குதிரைச் சேவக னுகிய கொள்கையும்
ஆங்கது தன்னில் அடியவட் காகப்
பாங்காய் மண்சுமந் தருளிய பரிசும் " (கீர்த்தி-45-49)

எனக்குறிப்பிடுகின்ருர். இறைவன் தன் அடியவளாகிய வந்தியின் பிட்டினைக் கூலியாகக் கொண்டதும், மண்சுமந் ததும், பாண்டியனுல் பிரம்படி பட்டதும் ஆகிய நிகழ்ச்சி களை,

" கலிமதுரை, மண்சுமந்து கூலிகொண் டக்கோவான் மொத்துண்டு
புண்சுமந்த பொன்மேனி பாடுதுங்காண் " (182)

என அடிகளார் குறிப்பிடுதல் காணலாம்.

திருவாதவூரர் அமைச்சர் பதவியை ஏற்பதற்கு முன்னரே சிவபிரான் அவரைத் தன்பால் அன்புடையவ ராக்கவேண்டித் திருவாதவூரில் தன் பாதச் சிலம்பொலி யைக் காட்டியருளினர் என்பதை,

> "வாத வூரினில் வந்தினி தருளிப்
> பாதச் சிலம்பொலி காட்டிய பண்பும்" (கீர்த்தி 52, 53)

என்ற அடிகளில் விளக்கியுள்ளார். பாதச் சிலப்பொலி யில் அடிகளார்க்கிருந்த ஆசை மிகுதியைப் பிறிதோர் இடத்தில்,

> "சீரார் திருவடித் திண்சிலம்பு சிலம்பொலிக்கே
> ஆராத வாசையதா யடியே னகமகிழத்
> தேராந்த வீதிப் பெருந்துறையான் திருநடஞ்செய்
> பேரானந் தம்பாடிப் பூவல்லி கொய்யாமோ" (292)

என விளக்கியுள்ளார். 'வாதவூரினில் வந்து சிலம்பொலி காட்டிய பெருமானே பெருந்துறையிலும் திருநடனஞ் செய்து அடியேன் அகமகிழுமாறு சிலம்பொலி கேட்பித்து உண்டாக்கிய பேரானந்தத்தைப் பாடிக்கொண்டே மலர் கொய்வோமாக' என்பது பொருள்.

சிவபிரான் திருப்பெருந்துறையில் அந்தணனாய் வந்து ஆட்கொண்ட நிகழ்ச்சியை,

> "அந்தண னாவதும் காட்டிவந் தாண்டாய்" (373)

என்று சொல்லுகின்றார். அவ்வாறு ஆட்கொண்ட காலத்து அடிகளார்க்கு உண்டான அனுபவத்தை,

> "அற்புதமான அமுத தாரைகள்
> என்புத் துளைதொறும் ஏற்றினன் உருகுவ
> துள்ளங் கொண்டோர் உருச்செய் தாங்கெனக்
> கள்ளு றுக்கை யமைத்தனன்"
>
> (திருவண்டப் பகுதி 174-177)

எனத் திருவண்டப் பகுதியில் கூறுகின்றார். திருப்பெருந் துறையில் தன்னை ஆட்கொண்டருளிய பெருமான் தில்லை யில் உள்ள பொதுவினில் வருக என்று சொல்லித் தன்னைச் சேர்த்துக்கொள்ளாது விடுத்த நிலையை,

"நாயினேனை நலமலி தில்லையுட்
கோல மார்தரு பொதுவினில் வருகென
ஏல என்னை யீங்கொழித் தருளி"

எனத் துன்ப உணர்வோடு புலப்படுத்துகின்றார். இறைவன் இவ்வாறு தம்மை ஆட்கொண்டும் இங்கு நிறுத்திவிட்டுப் பிரிந்து சென்ற பிரிவை ஆற்றாது அடிகளார் பலப்பல பாடல்களில் அரற்றுகின்றார். நீத்தல் விண்ணப்பம் முழுமையும் இப்பிரிவை ஆற்றாது அரற்றியவையேயாகும். இப் பிரிவை ஆற்றாது அரற்றுகின்ற நிலையில்தான் மணிவாசகரின் பேரன்புநிலை நன்கு புலனாகின்றது. கொழுநனைப் பிரிந்த கற்புடைக் காரிகைபோல நனவிலும் கனவிலும் சிவபிரானையே நினைந்து உருகுகின்றார்.

முத்தியில் சிவபிரான் ஒருவர் மட்டுமே ஆணாக விளங்குபவர்; முத்தியின்பம் துய்க்கும் ஏனைய ஆண் மக்கள் எல்லாம் பெண்ணாகவே பாவிக்கப் பெறுவர். இந்த முறையால் சிவபிரானைப் பிரிந்த மாணிக்கவாசகர் பெண்மை நிலையடைந்து கனவில் சிவபிரான் அளித்த கொன்றைமாலை சூடுதலும், சிவன் தோள்களைக் கூடுதலும், பின்பு மயங்கியூடுதலும், பின்பு பொருது அவன் செவ்வாய்க்கு உருகுதலும், உருகி அவனைத் தேடுதலும், காணாது வாடுதலும், அவன் காட்சி கண்டு முகமலர்தலும், ஆகிய அன்பு நிகழ்ச்சிகளை 'சூடுவேன் பூங்கொன்றை' என்று தொடங்கும் பாடலில் விவரிக்கின்றார்.

இவ்வாறு கனவிலும் நனவிலும் மறவாது நினைந்துருகியும் இறைவன் தம்மையேற்றுக் கொள்ளாமை நினைந்து,

"நாயேன் அடிமை யுடனாக ஆண்டாய் நான்றான் வேண்டாவோ" (645)

எனவும்,

"பிரியேன் என்றன்று அருளிய அருளும் பொய்யோ எங்கள்
பெருமானே" (598)

எனவும்,

"சீரேறடியார் நின்பாதம் சேரக்கண்டும் கண்கெட்ட
வாரேறாய் இங்கு உழல்வேனோ" (57)

எனவும், இறைவனைப் பிரிந்து கலங்கும்நிலை நம்மையெல்லாம் உருக்கத்தில் ஆழ்த்திவிடுகின்றன. பின்பு, இறைவன் தில்லையில் தம்மைத் தன் கழலில் சேரும் வண்ணம் செய்ததை அறிந்து அடிகளார் மகிழ்கின்ற நிலையை,

"மாதொரு கூறுடைய பிரான் தன்கழலே சேரும்வண்ணம்
ஆதியெனக் கருளியவா ரூர்பெறுவா ரச்சோவே" (656)

எனப் புலப்படுத்தியுள்ளமை காணலாம். பிறர் எவரும் பெற இயலாத பெருநிலையைத் தில்லைக்கூத்தன் தமக்கு அருளியதைத் தெரிவிப்பதோடு திருவாசகம் நிறைவு பெறுகின்றது. இதனால், மணிவாசகர் தில்லைக்கூத்தன் திருவடியில் கலந்தருளியதை உய்த்துணரவைத்துள்ளமை தெளியலாம்.

## சிவஞானபோதம் எட்டாம் சூத்திரம்

மணிவாசகப் பெருமானுக்குத் திருப்பெருந்துறையில் சிவபிரான் குருந்தமரத்தடியில் குருவாய் எழுந்தருளியிருந்து நோக்காலும் வாக்காலும் சிந்தனையைத் திருத்தித் திருவடி சூட்டிச் சிவமாக்கிய அற்புத நிகழ்ச்சியை யுளங்கொண்டே கி. பி. பதின்மூன்றும் நூற்ருண்டில் அவதரித்து சிவஞான போதம் என்னும் சைவசித்தாந்த ஞானப் பெருநூலை இயற்றியருளிய மெய்கண்டார்,

"ஐம்புல வேடரின் அயர்ந்தனை வளர்ந்தெனத்
தம்முதற் குருவுமாய்த் தவத்தினில் உணர்த்தவிட்டு
அன்னிய மின்மையின் அரன்கழல் செலுமே"

என்ற எட்டாம் சூத்திரத்தை இயற்றியிருத்தல் வேண்டும் என்று உறுதியாக நம்பலாம்.

கள்வர் கையிலகப்பட்டுத் தன் உண்மை நிலையை மறந்து கள்வர் சார்பில் வளர்ந்த அரசிளங்குமரனைப் பல்லாண்டு கழித்துக் காட்டுள் மன்னன் சில குறிகளால் கண்டு உணர்ந்து அவனிடம் சென்று, அவன் பழைய நிலையில் அரசிளங்குமரன் என்பதையும், கள்வர் கைப்பட்டுப் பழமையை மறந்தான் என்பதையும் அவனுக்கு உணர்த்தி அழைத்துச் சென்று அரசனுக்கிய நிகழ்ச்சிபோல,

இறைவன் ஆன்மாவின் முன்னைப் பெருந்தவத்தால் குருவாய் வந்து, 'ஐம்புலன்களாகிய வேடர்களால் வளர்ந்து நின் உயர்ந்த நிலையை மறந்தாய்; நீ வீடுபெறுதற்குரிய தகுதியுடையவன்' என்று உணர்த்த, அந்த ஆன்மா, முன்னை ஐம்புலத் தொடர்பை யறவே அறுத்துக்கொண்டு அரன் கழல் தனக்கு உரிமையுடைமையால் அத் திருவடிகளில் கலந்துறையும் என்பது இச் சூத்திரத்தின் பொருளாகும்.

இந்த எட்டாஞ் சூத்திரக் கருத்து, மாணிக்கவாசகர்க்கு இறைவன் குருவாக வந்து ஞானத்தை உணர்த்தியபின் அமைச்சர் பதவி முதலிய எல்லாவற்றையுந் துறந்து இறைவன் கழலையே சேர்ந்த வண்ணத்தையே நினைப்பித்தல் காணலாம்.

> " அருபரத் தொருவன் அவனியில் வந்து
> குருபரனாகி யருளிய பெருமையை " (போற்றித்—)

என மாணிக்கவாசகரே இறைவன் தனக்குக் குருவாய் வந்தருளிய பெருமையைப் புலப்படுத்தியிருத்தல் காணலாம்.

## திருவாசகத்தின் அணிகள்

திருவாசகம் நம்மையெல்லாம் பத்திவலையில் படுக்கும் நூலாக அமைந்திருந்தாலும் தமிழிலக்கியமாகவும் விளங்கி, உவமை முதலிய அணிகள் அழகுற அமைந்து புலமை நலங்களெல்லாம் காட்டும் கண்ணாடியாகவும் விளங்குகின்றது. பொருள்களை உவமை விளக்குவது தனிச்சிறப்புடையது. நவின்றோர்க்கு நலமிகப் பயக்கும் நன்மையது. மாணிக்காசகர் உவமை முதலிய அணிகள் அமையப் பாடுவதில் தலைசிறந்து விளங்குகின்றார். சிலவற்றைக் காண்போம்.

இறைவனைப் பிரிந்த நிலையில் மணிவாசகர்க்கு உள்ளத்தே நிகழும் உணர்ச்சிகளை வெளியிடுகின்றார். ஐம்புல ஆசைகள் ஒருபுறம் இழுக்கின்றன. அவற்றின் வழிச்செல்வது இறைவன் பணித்த நெறிக்கு மாறாகுமே என்ற அச்சம் ஒரு பக்கம் இழுக்கின்றது. இந்த இரண்டிற்கும் இடைப்பட்டு வருந்துகின்ற தமக்குப் பொருந்திய உவமையாக,

"இருதலைக் கொள்ளியின் உள்ளெறும் பொத்து நினைப்பிரிந்த
விரிதலை யேனை விடுதிகண்டாய்" (113)

என்று இருதலைக்கொள்ளியின் உள் அகப்பட்ட எறும்பினைக் கூறுகின்றார். உள்துளையுள்ள மூங்கிலினுள் எறும்பு இருக்கின்றது. அம்மூங்கில் துண்டின் இருபுறத்தும் ஒருவன் தீவைத்து விடுகின்றான். இருதலைக்கொள்ளியாக அது விளங்குகின்றது. மூங்கிலினுள் இருக்கும் எறும்பு, ஒருபக்கத்தும் சென்று உய்ய முடியாமல் எப்படி வருந்தும் என்பதைக் கற்பனை செய்து பார்க்க வேண்டியதுதான். சாதாரணக் கொள்ளியாக இருந்தால் இடையில் அகப் பட்ட எறும்பு அக்கொள்ளிக்கிடையில் நின்றும் நழுவிக் கீழே விழுந்தாயினும் உய்யலாம். மூங்கில் துளையினுள் அகப்பட்டது ஆகலின் அந்த வாய்ப்பும் இல்லாது வருந்து கின்றது. அந்த எறும்பு போல இறைவனைப் பிரிந்த நிலையில் ஐம்புலன்களின் வழியாகவும் செல்ல இயலாமல் மணிவாசகர் வருந்துகின்ற அல்லல் நிலையை இந்த உவமை எவ்வளவு நன்றாக விளக்குகின்றது! இறைவன் வந்து ஐம்புல வழியடைத்து அச்சம் தீர்த்து ஆட்கொள்ள வேண்டும் என்பது குறிப்பு.

## இல்பொருளுவமை

வெம்மை மிக்க நிலத்தில் உள்ளவர்க்கு நாக்கு வறட்சி கொள்ளுதல் இயல்பு. ஆனால், வெள்ளத்தில் நீந்திக் கொண்டிருப்பவர்களுக்கு நாவறளுதல் இயல்பன்று. இறைவனது அருளைப் பெறுதவர்கள் உலகத் துன்பங்களில் வருந்துவது பொருந்தாது. ஆனால், வருந்துகின்றார். இதற்கு ஏற்றவாறு இல்பொருளுவமையைக் கூறித் தம் இயல்பை விளக்குகின்றார்.

"வெள்ளத் துணுவற்றியாங்கு உன் அருள்பெற்றும்
துன்பத்தினின்று
விள்ளக்கிலேனை விடுதி காண்டாய்" (118)

என்பது காணலாம். இந்த உவமை குறுந்தொகையில் வரும், "ஆம்பல் கொய்யுநர் நீர்வேட்டாங்கு" என்ற உவமையை நினைப்பித்தல் காணலாம். 'வெள்ளத்துள் நாவற்றியாங்கு' என்று தொடங்கும் பாசுரத்திற்கு எங்கள்

பெரும்பேராசிரியர் பண்டிதமணி. மு. கதிரேசச் செட்டியார் அவர்கள் ஒரு மடாதிபதியிடம் மேற்கூறியாங்குப் பொருள் விரித்துரைத்தபோது, அந்த மடாதிபதியவர்கள், "நீங்கள் இலக்கியப் பயிற்சியால் கூறிய பொருள் நன்ருகவே யுள்ளது. ஆனல், எங்கள் மடத்துச் சம்பிரதாயப் பொருள்வேறு" என்ருராம். திருவாசகத்தில் ஆழ்ந்த புலமையும் பத்தியும் நிறைந்து, கேட்போர்தம் மனம் உருகி யீடுபாடு கொள்ளுமாறு ஒவ்வொரு பாடற்கும் பொருள் விரித்துக்கூறிமகிழும் எங்கள் அன்புமிக்க பேராசிரியர் செட்டியார் அவர்கள், "அந்தச் சம்பிரதாயப் பொருளை அடியேனும் தெரிந்துகொள்ளலாமா?" என்று கேட்டார்களாம். அப்பொழுது அந்த மடாதிபதி சொன்ன பொருளாவது. 'நாவற்றி என்பது தண்ணீரில் வாழ்கின்ற ஒருவகைப் பூச்சி. அது தண்ணீரில் வாழ்ந்தாலும் நாக்கு வறண்டேயிருக்கும் இயல்புள்ளது. அதைப்போல மாணிக்கவாசகர் இறையருள் பெற்றும் துன்பம் நீங்கப் பெருது வருந்தினர்' என்பதேயாம். அப் பொருளைக் கேட்ட செட்டியாரவர்கள், "நாவற்றி என்பது எது? அது தண்ணீரில் இருந்தும் நாக்கு வறண்டேயிருக்கும் என்பதை யார் அறிந்து சொன்னது? ஆங்கு என்ற உவம உருபு வினைக்கு மட்டுமே வரும் இயல்புள்ளதாயிற்றே? அது பெயர்க்கண் வராதே. இதே போன்ற கருத்துடைய வினையுவமம் பழைய நூலாகிய குறுந்தொகையில் வந்துள்ளதே; அதுபோன்றுதானே இங்கும் இல்பொருளுவமையாகக் கொள்ளவேண்டும்" என்று காரணங்காட்டி விளக்கியும் அவர் ஏற்றுக் கொள்ளவில்லையாம். சம்பிரதாயப் பொருளே சிறந்தது எனச் சாதித்தாராம். அந் நிகழ்ச்சியைச் செட்டியாரவர்களே பாடஞ் சொல்லும்பொழுது ஒரு நாள் சொல்லிச் சம்பிரதாயப் பொருள்பற்றிய தம் கருத்தைப் புலப்படுத்தினர்கள் புன்சிரிப்பினல். இலக்கண அமைதியும், இலக்கிய மரபும் கடந்த சம்பிரதாயப் பொருள் என்று ஒன்று இருக்குமா? சிந்திக்கவேண்டும்.

### முற்றுவமை

திருவெம்பாவையில் மேகத்தை நோக்கி, நீராடும் உருத்திரகணிகையர் வேண்டிக்கொள்ளும்போது சொல்

லும் உவமை முற்றுவமையாகத் திகழ்கின்றது. 'ஏ மேகமே! எதிர்காலத்தில் உமையம்மையின் மேனிபோலக் கருமையோடு திகழ்ந்து, அவள் இடையைப் போல மின்னி, அவள் திருவடியிலணிந்த சிலம்புபோல மெல்லென இடித்து, அவள் திருப்புருவம் போல இந்திரவில் வளைத்து, அவளைப் பிரியாமல் பாகங்கொண்டுள்ள சிவபிரானுடைய அன்பர்கட்கு அவள் நம் கண்முன் சொரிகின்ற அருளைப் போல மழை பொழிவாயாக!' என்கின்றனர். இதில் மேகத்தின் ஒவ்வொரு செயலுக்கும் உமையம்மையிடத் திருந்தே உவமை எடுத்துக்காட்டியிருக்கும் திறம் நாம் எல்லாம் நினைந்து நினைந்து இன்புறத்தக்கதாக உள்ளது.

### உருவகம்

உவமையையும் பொருளையும் ஒன்றென மாட்டுதல் உருவகமாகும். "தனியனேன் பெரும் பிறவிப் பவ்வத்து" என்று தொடங்கும் பாடலில் பிறவியாகிய கடல்; துன்பங் களாகிய அலைகள்; செவ்வாய்ப் பெண்டிராகிய காற்று; காமமாகிய சுறுமீன்; அஞ்செழுத்தாகிய புணை; முத்தி யாகிய கரை என்று மிகப் பொருத்தமாக உருவகஞ் செய்துள்ளமை காணலாம். "பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார், இறைவனடி சேராதார்" என்ற குறட் கருத்தை விரிவுபடுத்திக்காட்டும் முறையில் அமைந்தது இப் பாடல்.

"பிறவியாகிய பெருங்கடலில் ஆர்துணையும் இன்றியே தனித்து வீழ்ந்து, உலகத் துன்பங்களாகிய பேரலைகளில் மொத்துண்டு, பற்றிக் கரையேறுதற்குரிய ஆதரவு ஏதும் இல்லாமல், கொவ்வைக்கனி போன்ற சிவந்த வாயினை யுடைய பெண்டிர் என்ற பெருங்காற்றினால் கலக்கம் அடைந்து, காமமாகிய பெரிய சுறுமீனின் வாயருகே பொருந்தி, 'இதன் வாயில் அகப்படாமல் இனி உய்யும் வழி என்னை' என்று ஏங்கிச் சிந்தித்து, திருவைந்தெழுத் தாகிய தெப்பத்தைப் பிடித்துக்கொண்டு கிடக்கின்ற என்னை, யார்க்கும் முன்னோனாக இருப்பவனே; வளமார்ந்த முத்தியாகிய கரையைக்காட்டி ஆட்கொண்டாய்" என்பது அப் பாடலின் பொழிப்பு. இவ் வுருவகம் எவ்வளவு ஆழ்ந்த

கருத்துடையதாக — அழகாக — அமைந்திருக்கின்றது காண்மின் !

### பழிப்பதுபோலப் புகழ்தல்

மணிவாசகர் தாம் தவறு செய்த வழியும் சிவபிரான் தம்மை விட்டிடுதல் கூடாது என்னும் கருத்தினர். "யான் பாவியன் ஆனுல் உனை நல்காய் எனலாமே?" என்று வினவும் உரிமை அன்புடையவர். ஞான நெறிக்கு மாருன நிலையில் தாம் இருப்பதை விளக்கி, "யான் அங்ஙனம் இருப்பினும் என்னை விட்டிடுதியோ?" என்னை விட்டிடுவாயானுல் உன்னை,

"மழைதரு கண்டன் குணமிலி மானிடன் தேய்மதியன்
பழைதரு மாபரன்" (150)

என்று, "உன் பழிப்பினை உலகறியப் பறையறைந்து சொல்வேன்" என்று இறைவனை அச்சுறுத்துகின்ருர். நம் பழி வெளிப்படலாகாது என்று அஞ்சியேனும் தம்மை யேற்றுக்கொள்வான் சிவபிரான் என்பதே அவர்தம் நோக்கம்.

'இறைவனுகிய நின்பாலுள்ள பழிக்கத் தக்க இயல்புகளை உலகறியச் சொல்லிவிடுவேன்' என்று அச்சுறுத்திய மணிவாசகர் சொல்லும் பழிப்புக்கள் எவை? என்பதை நோக்குவோம். மழைதரு கண்டன், குணமிலி மானிடன், தேய்மறையன், பழைதருமாபரன் என்ற ஐந்து பழிப்புக்களை வெளியிடுகின்ருர். ஐந்தெழுத்தால் புகழப்படுகின்ற அரனுக்கு மணிவாசகர்கூறிய இவ்வைந்தும் எப்படிப் பழிப்புக்கள் ஆகின்றன என்பதை முதலில் பார்ப்போம். (மழைதருகண்டன்) — கருமேகம் பரவிய கண்டத்தையுடையவன் என்பதும், குணங்களை இல்லாதவன் என்பதும், தேவனுக இல்லாமல் மானிடனுக இருக்கின்ருன் என்பதும், தேய்ந்துபோன புத்தியையுடையவன் என்பதும், (பழை தரும ஆபரன்) பழைய தருமத்திற்குப் பிற்பட்ட பாவி என்பதும் (அபரன் - பிற்பட்டவன்) பெரிய பழிப்புக்களாகவே தோன்றுகின்றன.

சிலேடையில் அமைந்த இத் தொடர்கள் ஐந்தும் சிவபிரானுடைய பெரும்புகழ்களைப் புலப்படுத்துவனவாக

அமைந்துள்ளன என்பதை ஆழ்ந்து மறித்து நோக்கு வோர்க்கு நன்கு விளங்குமாறு பழிப்பதுபோலப் புகழ்ந் துரைக்கும் மணிவாசகரின் சொற்றிறனும், புலமைச் சிறப்பும் வியக்கத்தக்கனவாக உள்ளன.

'மழைதருகண்டன்' என்பது கடலில் எழுந்த நஞ்சினை யுண்டமையால் கரியமேகம் போன்றுள்ள நீலகண்டன் என்னும் கருத்தினது. பாற்கடலில் எழுந்த ஆலாலத்தைத் தேவர்களை உய்விக்கவேண்டித் தான் அமுது செய்து கண்டம் கருத்தமை அப் பெருமானது பெரும்புகழை விளக்குவதாகவே யுள்ளது.

'குணமிலி' என்பதும் முதற்கடவுளாகிய சிவபிரான் குண தத்துவத்திற்கு அப்பாற்பட்டவன் என்று பொருள் பட்டுப் புகழ்ச்சியாகவே அமைகின்றது. 'மாண்டன்' என்பது மான் கன்றினை இடக்கையில் ஏந்தினவன்; மான் போன்ற உமையை இடப்பாகத்தே கொண்டவன் என்று பொருள்பட்டு அவன் புகழ் புகன்றதாகவே பொருந்தி யுள்ளமை காணலாம். தேய் மதியன் என்பது, பிறைமதி சூடிய பெம்மான் என்று பொருள்பட்டுப் பிழை செய் தோரும் தன்னை அடைக்கலம் புகுந்தால் அவரைக் காத்து உயர்த்துகின்ற பெருங்குணமுடையவன் என அவன் புகழ் கூறியதாகவே அமைகின்றது.

பழைதருமாபரன் என்பது, பழையோளாகிய ஆதி சத்தியைத் தந்த பெரிய பரன் என்று பொருள்பட்டுச் சிவபிரான் பழமையும் சிறப்பும் தோற்றுவித்ததாகவே முடிகின்றது காணலாம்.

இங்ஙனம், சிலேடையணியை அங்கமாகக் கொண்டு பழிப்பதுபோலப் புகழ் புலப்படுத்தும் இப் பாடலின் அமைப்பையும் ஆழத்தையும் ஆய்ந்து கண்டு அகமகிழாமல் இருக்க வியலுமோ?

திருவெம்பாவையில் பைங்குவளைக் கார்மலரால் என்று தொடங்கும் பாடல் சிலேடையோடு கலந்து வந்த ஏது உவமையாகும். இவ்வாறு பலவகை அணிகளும் இந் நூலில் பாங்கொடு மிளிர்கின்றன.

### சொல்லாட்சி

திருவாசகத்தில் சில அருகிய சொல்வழக்குகள் காணப்படுகின்றன. 'காண்டல்' என்ற தொழிற்பெயர் போலவே 'ஆண்டல்' என்று ஒரு சொல் வழங்கியிருக்கின்றார். காண் பகுதி, தல் விகுதியோடு சேர்ந்தால் 'காண்டல்' எனவரும். ஆனால், ஆள் என்ற பகுதிச்சொல் தல் விகுதியோடு சேர்ந்து 'ஆண்டல்' என்று வருதல் இயல்பாகத் தோன்றவில்லை. அருகிய வழக்காகவே தோன்றுகின்றது.

'கயன்மாண்ட கண்ணிதன் பங்கன் எனைக்கலந் தாண்டலுமே'
(245)

என வருதல் காணலாம்.

கெடல் என்ற தொழிற்பெயர் 'கெட்டல்' என வந்துள்ளது. 'தான் கெட்டலின்றி' (252) என்பது காணலாம். எதுகை நோக்கி இங்ஙனம் புதிய சொல்லை ஆக்கிக் கொண்டார் எனலாம். 'போரப்புரிமின்' (611) என்புழிப் 'போர' என்ற ஒரு சொல்லை எதுகை நோக்கி ஆக்கிக் கொண்டுள்ளார். 'போகம்புரிமின்' என்றோ, 'போதரப் புரிமின்' என்றோ வரல்வேண்டும். சேர, போரில், ஆர என மேல்வந்த எதுகை நோக்கிப் 'போர' என்ற புதிய சொல்லை ஆக்கிக் கொண்டார்.

மாண்ட என்ற சொல் பழைய நூல்களில் மாட்சிமையுடைய என்ற பொருளில் மட்டுமே வழங்கியுள்ளது. 'மாண்ட என் மனைவியும் மக்களும் நிரம்பினர்' (புறநா); 'மனத்தது மாசாக மாண்டார் நீராடி' (திருக்குறள் — 278) என வருதல் காணலாம். இறந்த அல்லது இல்லையாகிய என்ற பொருளில் 'மாண்ட' என்ற சொல்லை மணிவாசகர் ஆள்கின்றார். 'ஆண்டாண்டு தோறும் அழுது புரண்டாலும் மாண்டார் வருவரோ மாநிலத்தீர்' என்ற சொல்லே காலப்போக்கில் மாண்ட எனத் திரிந்து வழங்கியிருக்கலாம்.

உரைமாண்ட (326) கரைமாண்ட, இரைமாண்ட, துரைமாண்ட என ஒருபாவில் நான்கடியினும் மாண்ட என்ற

சொல் வந்துளது. சொல்லிறந்த, வாசகம் கடந்த என்ற பொருளில் 'உரைமாண்ட' என்ற தொடர் வந்துளது. கரையில்லாத காமமாகிய பெருங்கடல் என்ற பொருளில் 'கரை மாண்ட காமப் பெருங்கடல்' என்பது வந்துளது. 'இரைமாண்ட இந்திரியப் பறவை' என்பது நுகர் பொருளாகிய இரையில்லாத இந்திரியங்களாகிய பறவைகள் என்ற பொருளுடையது. 'துரை மாண்ட வா' என்பது, (துரை — தலைமை) தலைமை மாய்ந்துபோன தன்மை என்று பொருள்படும்.

எனவே. நான்கடிகளிலும் மாண்ட என்ற சொல் மாய்ந்துபோன என்ற பொருளிலேயே ஆளப்பட்டிருத்தல் காணலாம். 'கயன் மாண்ட' (245) என்ற பாடலிலும் இச்சொல் நான்குமுறை இப்பொருளிலேயே வந்துளது. எனவே, மாணிக்கவாசகர் காலத்து இச்சொல் இப் பொருளில் பெருவழக்காய் இருந்தமை உய்த்துணரலாம். மேலும், 'துரை மாண்ட' என்ற தொடரில் துரை என்ற சொல்லை வழங்கியுள்ளார். துரை என்ற சொல் தலைவர், தலைமை என்ற பொருளில் பிற்காலத்து வழக்குப் பெற்ற சொல்லாகும். 'உரைமாண்ட உள்ளொளி உத்தமன்' என்ற பாடற்கு நேரிய பொருள் காணும் போதுதான் உண்மை புலனாகும்.

சொல்லிறந்த உள்ளொளியாயுள்ள உத்தமன் தம் உளம் புகா முன்னர்த் தாமே தலைவராக இருந்தார் மணி வாசகர். அவ்விறைவன் தம் உளம் புகுந்த அளவில் காமமாகிய கடலைக் கடந்துவிட்டார். அவ்வாறு தாம் காமத்தைக் கடந்தவுடன் இந்திரியங்களாகிய பறவைகள் நுகர்ச்சியாகிய இரையில்லாதுபோகவே இரிந்து ஓடி விட்டன. (சீவகரணங்கள் மறைந்து சிவகரணங்களாக மாறி) இந்திரியங்கள் மாறின அளவில் அவ்வுடம்பில் தாம் தலைமையாக இருந்த நிலை போய்விட்டது. இறைவனே துரையாக — தலைவனாக — அமர்ந்து விட்டான் என்பதே பொருள். 'என்னுடைய செயல் மாண்டவா பாடி' என்பது, 'நான் கெட்டவா பாடி' என்பதும் இக் கருத்தின வேயாதல் காணலாம்.

எனவே, மாய்ந்த என்ற பொருளில் 'மாண்ட' என்ற சொல்லேயும், தலைமை என்ற பொருளில் 'துரை' என்ற சொல்லேயும் ஆண்டிருப்பதால் மாணிக்கவாசகரின் காலத்தை இச் சொல்லாட்சி கொண்டு நிறுவுதல் எளிதாகலாமன்றோ? 'வந்தனையும் அம்மலர்க்கே யாக்கி' எனவும் 'பாரொருகால் வந்தனையாள்' எனவும் உடன்பாட்டிலும் எதிர்மறையிலும் வந்தனை என்றசொல்லே ஆண்டுள்ளமையும் இங்கு நினையலாம்.

## இலக்கணச் சொல் ஆட்சி

'கொண்டு' என்பது தன்மை ஒருமை வினைமுற்ருய் வரலாம் என்பது இலக்கண நூல் முடிபு. கொண்டேன் என்பது பொருள். ஆனல், அச் சொல் இலக்கியத்தில் பெரும்பாலும் ஆளப்படுவதில்லே.

குலாப்பத்தில், "குலாத்தில்லே யாண்டானேக் கொண்டன்றே" எனப் பத்துப் பாடலிலும் வருகின்றது. கொண்டு என்பது இங்கு, 'கொண்டேன்' என்று பொருள்பட்டுக் கொண்டேனன்றே! என வியந்து கூறும் முறையில் அமைந்திருத்தல் காணலாம். குலா என்பது தில்லேக்கு அடையாகவே வந்துள்ளமையால் பொன்னம்பலத்தால் விளக்கமுடைய தில்லே என்றே பொருள் கொள்ள வேண்டும். இப் பத்திலுள்ள ஒவ்வொரு பாடலிலும், 'கொண்டன்றே' என்ற தொடரையே பயனிலேயாகக் கொண்டு வினே முடிபு செய்யவேண்டியுளது. எனவே, கொண்டு என்ற சொல்லே தன்மை ஒருமை வினைமுற்ருக, மணிவாசகர் ஆண்டிருத்தல் தெளியலாம்.

## ஆகாதே

திருப்படையாட்சியில் ஒவ்வொரு பாடலிலும், 'ஆகாதே' என்ற சொல் பலமுறை வருகின்றது. இச் சொல்லுக்குப் பொருள் கூறுவதில் கருத்து வேறுபாடு உண்டு. எதிர்மறைச் சொல்லாகவே கொண்டு பலர் பொருள் வரைந்துள்ளார்கள். 'மீன் வலே வீசிய கானவன் வந்து வெளிப்படுமாயிடிலே, கண்களிரண்டும் அவன் கழல் கண்டு களிப்பன ஆகாதே' என இயைத்து நோக்குதல்

வேண்டும். நோக்கினுல் ஆகாதே என்பதை, ஆகாது என எதிர்மறைச் சொல்லாய்க் கொள்வதைவிட, வினுச் சொல்லாகக் கொண்டு உடன்பாட்டுப் பொருள் காணுதலே பொருத்தம் என்பது நன்கு புலனுகும். கானவன் வந்து வெளிப்படுமாயிடில் கண்கள் இரண்டும் அவன் கழல் கண்டு களிப்பன ஆகாதா? என்று எண்ணி ஏங்கி அவன் வெளிப்பாட்டை எதிர்நோக்கி நிற்கும் நிலை எவ்வளவு பொருத்தமாக உள்ளது காண்மின். திருக்கோவையார் உரையில் இவ்வாறு வரும் ஏகாரம் வினுப்பொருளில் வந்து உடன்பாட்டுப் பொருளை விளக்கும் என்பதைப் பேரா சிரியர், நாலடியாரில் வரும் "வேற்றுமை யின்றி" என்று தொடங்கும் பாடலில் வரும் 'தூற்ருதே தூரவிடல்' என்ற தொடரை எடுத்துக்காட்டித் தூற்ருதே என்பது தூற்றும் என்று பொருள் படுவதுபோல என விளக்கியுள்ளமை இங்கு நினைக்கத்தகும்.

### திருவாசகத்தில் பிறநூல் கருத்துக்கள் முதலியன

மணிவாசகர் இறைவனைப்பற்றி மனமுருகிப் பாடும் இத் திருவாசகப் பாடல்களில் திருக்குறள் முதலிய பிற நூற் கருத்துக்களும், பழமொழிகளும், பிற தலபுராணக் கருத்துக்களும் அமைந்துள்ளன.

"பற்றுக பற்றற்ருன் பற்றினை" (350)

என்ற குறள் கருத்தும்,

"கற்றதனுலாய பயனென்கொல்"

என்ற குறள் கருத்தும்,

"பற்ருங்கவை யற்றீர்பற்றும் பற்ருங்கது பற்றி
..............................................
"கற்ருங்கவன் கழல்பேணின ரொடுங்கூடுமின் கலந்தே" (508)

என்ற பாடலிலும்,

"பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார்" (10)

என்ற குறள் கருத்து,

"தனியனேன் பெரும்பிறவிப் பவ்வத்து"

என்ற பாடலிலும்,

"வேண்டினுண்டாகத் துறக்கத் துறந்தபின்" (342)

என்ற குறள்,

"காலமுண் டாகவே காதல்செய் துய்மின்" (528)

என்ற பாடலிலும்,

"வேண்டுங்கால் வேண்டும் பிறவாமை மற்றது
வேண்டாமை வேண்ட வரும்" (363)

என்ற குறள் கருத்து,

"வேண்டா தொன்றும் வேண்டாது மிக்க அன்பே மேவுதலே"
(486)

என்ற பாடலிலும் அமைந்துள்ளன.

"பொறுப்ப ரன்றே பெரியோர் சிறுநாய்கள்தம் பொய்ப்பினையே"
(110)

"பிழைத்தவை பொறுக்கை யெல்லாம் பெரியவர் கடமை போற்றி"
(70)

"ஊரா மிலைக்கக் குருட்டா மிலைத்தல்" (91)

"இருதலைக் கொள்ளி எறும்பு" (113)

என்ற பழமொழிகள் இடம் பெற்றுள்ளமை காணலாம்.

சுந்தரமூர்த்தி சுவாமிகள் பாடிய திருத்தொண்டத் தொகையில் கூறப்பட்ட அடியார்களில்,

"கண்ணப்ப னொப்பதோ ரன்பின்மை கண்டபின்" (208)

எனக் கண்ணப்பரையும்,

"தீதில்லை மாணி சிவகருமம் சிதைத்தானை" (319)

எனச் சண்டீசரரையும் மட்டும் குறிப்பிட்டுள்ளார்.

இறைவன் திருவண்ணாமலையில் அண்ணாமலையாய் - அழற்பிழம்பாய் எழுந்த வரலாற்றை,

"அலரவனும் மாலவனும் அறியாமே யழலுருவாய்
நிலமுதற்கீ ழண்டமுற நின்றதுதா னென்னேடீ

நிலமுதற்கீ ழண்டமுற நின்றிலனேல் இருவருந்தம்
சலமுகத்தா லாங்காரத் தவிரார்காண் சாழலோ'' (260)

என்ற பாடலில் விளக்கியுள்ளார். இவ் வரலாற்றினைத் திருவாசகத்தில் ஐம்பதுக்கு மேற்பட்ட இடங்களில் வெவ் வேறு வகையில் விவரித்துள்ளார்.

மணிவாசகர் தம்மைத் தாழ்வுடையவராகக் கூறும் பாடல்களில் நாயினேன், நாயினுங் கடையேன், நரிப்பாய் நாயேன் எனவும், நாய்க்குத் தவிசிட்டு, நாய் சிவிகை யேற்றுவித்து எனவும் நாயைப் பல இடங்களில்—ஐம்பத் தெட்டு இடங்களில் கூறியுள்ளார்.

### திருவாசகத்தில் தலைப்புக்கள்

திருவாசகத்தில் தலைப்புக்கள் பெரும்பாலும் அவ்வப் பகுதியில் வரும் சொல்லால் அமைந்துள்ளமை முன்னரே கண்டோம். அத் தலைப்புக்களில் திருவெம்பாவை, திரு வம்மானை, திருப்பொற்சுண்ணம், திருத்தெள்ளேணம், திருச்சாழல், திருப்பூவல்லி, திருவுந்தியார், திருத்தோ ணோக்கம், திருப்பொன்னூசல் என்ற ஒன்பதும் மகளிரின் விளையாட்டாக அமைந்துள்ளன.

மக்களிடத்தில் சைவசமய உணர்வு பரவச் செய்து எல்லோர்க்கும் உய்யு நெறிகாட்ட வேண்டும் என்ற கருத்துடையவர் மணிவாசகர். மெல்லிய இயல்புள்ள பெண்டிர் மனத்தைச் சமய உணர்வில் பதியச் செய்து விட்டால் பின்பு அவர் வழிச் சென்று ஆடவர்கள் தாமே சமயப் பற்றுடையராவார்கள் என்ற எண்ணத்தில் பெண் டிற்கே உரிய விளையாட்டுக்களைத் தம் பத்தி நெறிகளை அமைத்துப் பாடியுள்ளார். இவ் விளையாட்டுக்களில் 'தெள்ளேணம் கொட்டுதல்' என்பது ஒருவகைப் பறை யைக் கொட்டியோ, கைகளைக் கொட்டியோ விளையாடும் விளையாட்டாக இருக்கலாம்.சாழல், தோணோக்கம் என்பன மிகப் பழைய விளையாட்டுக்கள். அடியார்க்கு நல்லார் சிலப்பதிகார அரங்கேற்றுக் காதையில் வரிக்கூத்தின் வகையைப் பற்றிய பாடல் ஒன்றைக் காட்டியுள்ளார். அதில், "பல்லாங்குழியே, பகடி, பகவதியாள், நல்லார்தம் தோள் வீச்சு, நற்சாழல்,—அல்லாவுந்தி, அவலிடி" என்பன

சொல்லப்பட்டுள்ளன. இப் பாடலில் குறிப்பிட்டுள்ள தோள்வீச்சு என்பதுதான் மணிவாசகர் குறிப்பிடும் தோணேக்கமாக இருக்கலாம். பெண்டிர் தோள்களை வீசிக்கொண்டு அத் தோள்களை மாறிமாறிப் பார்த்துக் கொண்டு ஆடுதலாக இருக்கலாம். அப் பாடலில் குறிப் பிட்ட சாழலும், உந்தியும் அப் பெயரானே திருவாசகத் தும் வந்துள்ளன. அங்குச் சொன்ன அவலிடிக்குப் பதிலாகவே இங்குப் பொற்சுண்ணம் இடித்தல் வந்திருக்க லாம். சாழல் என்ற விளையாட்டின் அமைப்பைத் திருச் சாழலைக்கொண்டு நோக்கினுல், இரு பெண்டிர் எதிர் எதிரே அமர்ந்து ஒருவர் கேள்வி கேட்பதும் மற்ருெருவர் பதில் சொல்வதுமாக அமைந்த சொல்விளையாட்டாக இருக்கலாம் என உய்த்துணர இடமுண்டு.

### சொல்லிய பாட்டின் பொருளுணர்ந்து சொல்லுதல்

ஓதற்கு எளிதாக உள்ள திருவாசகப் பாடல்களின் ஆழ்ந்த பொருள் நுணுக்கங்கள் உணர்தற்கு அரியன வாகவே யுள்ளன. பொருளுணர்ச்சியின்றிப் பாடினுலும் செவிக்கினியவாய்ச் சிந்தைக்கினியனவாய்ச் சிவனடி சேர்ப்பிக்கும் சிறப்பினவே யெனினும் பாட்டின் பொரு ளுணர்ந்து சொல்லுதலையே மணிவாசகர் பெரிதும் விரும்பி னுர் என்பதைச் சிவபுராணத்து இறுதியடிகளால் அறிகின் ருேம்.

'அழுதா லுன்னைப் பெறலாமே' என்பது ஒரு பாட லில் உள்ள தொடர். இதைமட்டும் நோக்கினுல் இறைவ னைப் பெறுதற்கு வழி அழுதலேயாகும் என்று மணிவாசகர் கூறியுள்ளார் என்றே கொள்ளநேரும். ஆனுல் அத் தொடரையுடைய முழுப்பாடலையும் நோக்கினுல் அக் கருத்து மாறுபடும்.

"யானே பொய் என்னெஞ்சும்பொய் என்அன்பும்பொய்
யானுல் வினையேன் அழுதால் உன்னைப் பெறலாமே
தேனே யமுதே கரும்பின் தெளிவே தித்திக்கும்
மானே! யருளாய் அடியேன் உனைவந்து உறுமாறே" (94)

என்பது அப் பாடல். 'தேனுய் அமுதாய்க் கருப்பஞ்சாற் றின் தெளிவாய்த் தித்திக்கும் பெரியோனே, யானே

பொய்யன் ஆனல், எனது நெஞ்சும் பொய் ஆனல், என் அன்பும் பொய் ஆனல், தீவினையுடையவனுகிய யான் அழுதால் மட்டும் உன்னைப் பெற்றுவிட வியலுமோ ? அடியேன் உனைவந்து அடையும் நெறியாது ? எனக்கு உணர்த்தியருள்வாயாக !' என்பது பொருள். உன்னைப் பெறலாமே என்பதிலுள்ள ஏகாரம் வினுப் பொருளது, 'களிப்பன ஆகாதே' என்புழிப்போல. அவ்வேகாரத்தைத் தேற்றப் பொருளதாகக் கொண்டு 'அழுதால் உன்னைப் பெறலாம்' என்று பொருள் செய்யலாகாதோ எனின் ? ஆகாது; என்னை ? அடியேன் உனைவந்து உறுமாறு அருளாய் என்று இறைவனைப் பின்னர் வேண்டிக் கொள்வதால் அந்தப் பொருள் பொருந்தாததாக உள்ளது. அழுதால் உன்னைப் பெறலாம் என்பதே அடிகளாரின் துணிவாயின் பின்பு அடியேன் உனைவந்து உறுமாறுஅருளாய் என வேண்டுதல் பொருந்தாது அன்றே !

இனித் திருவெம்பாவையில் ஒரு பாடலின் பொருளை ஆராய்வோம் :—மாணிக்கவாசகர் தமிழிலக்கிய மரபுகளை நன்குணர்ந்து நடத்துகின்றவர். பரிபாடலில் நல்லந்துவனர் பதினேராவது பாடலில் கூறியுள்ள மார்கழி ஆதிரையில் ஆய்தொடிக் கன்னியர், முனித்துறை முதல்வியர் முறைமை காட்டப் பனிப்புலர் பாடிப் பருமணல் அருவியில் வெம்பாதாக வியனில வரைப்பென வேண்டி ஆடுகின்ற அம்பா ஆடலை அகத்துக்கொண்டே மணிவாசகர் திருவெம்பாவையை அமைத்துள்ளார் என்பதை நாம் உளங்கொளல் வேண்டும். கன்னியர் மார்கழி நீராடும்போது, முனித்துறை முதல்வியர்—தாயர்—அருகே யிருந்து நீராடும் முறைமையினைக் காட்ட அம் முறையே ஆடினுர்கள் என்று பரிபாடல் கூறுகின்றது.

திருவெம்பாவையிலும் அம் முறையையே பின்பற்றி மணிவாசகர் கூறுகின்ருர். திருவெம்பாவை நாடக அமைப்பில் அமைந்துள்ளது ஆதலின் நீராடியவர் யார்? ஆட்டுகின்றவர் யார்? என்பதை நாமே உய்த்துணர வைத்துள்ளார். திருப்பாவையில் முதற் பாடலிலேயே "சீர்மல்கு ஆய்பாடிச் செல்வச் சிறுமியர்காள்" என்று வருவதால் ஆயர் கன்னியரே நீராடப் புறப்படுகின்றனர் என்பது

புலனுகின்றது. மணிவாசகர் பத்தாவது பாடலில் இக் குறிப்பைப் புலப்படுத்துகின்றூர். மார்கழி நீராட்டு என்பதைத் திருப்பாவை முதற்பாடலில் புலப்படுத்த, திருவெம்பாவையில் இறுதிப் பாடலில் “மார்கழிநீ ராடேலோ ரெம்பாவாய்!” எனக் கூறுகின்றூர். பத்தாவது பாடலில் “கோதில் குலத்தான்றன் கோயில் பிணுப்பிள்ளைகாள்!” எனச் செவிலித்தாய் விளிப்பதால், நீராடுமகளிர், அரன் கோயிலில் பணிபுரியும் உருத்திரக்கணிகையரே என்பதைப் புலப்படச் செய்துள்ளார்.

திருவண்ணுமலையில் மணிவாசகர் தங்கியிருந்தபோது மார்கழி விடியலில் மகளிர் நீராட ஒருவரை ஒருவர் எழுப்பிக் கொண்டு குழுவாகச் சேர்ந்து சென்று நீராடிய நிகழ்ச்சியைக் கண்டு அம் முறையில் உருவாக்கிய இலக்கியமே திருவெம்பாவை. பழந்தமிழின் மரபு தோன்ற அமைத்த அத் திருவெம்பாவையில் திருவாசகம் முழுவதிலும் உள்ள எல்லாக் கருத்துக்களையும் சுருக்கமாகச்-செறிவாகப் புலப்படுத்தியுள்ளார் என்னலாம். மார்கழித் திங்கள் விடியற் காலையில் ஒரு செவிலித்தாய் ஒரு கன்னிப் பெண்ணேடு இறைவனைப் பாடிக்கொண்டு புறப்பட்டு, மற்றெரு பெண்ணின் மனைவாயிலில் சென்று நின்று, உள்ளே உறங்குகின்ற ஒரு பெண்ணை எழுப்புகின்ருள் :

“ஆதியும் அந்தமும் இல்லா அரும்பெருஞ்
சோதியை யாம்பாடக் கேட்டேயும் வாட்டடங்கண்
மாதே வளருதியோ வன்செவியோ நின்செவிதான்”

என்பது செவிலித்தாயின் பேச்சு. உறங்குபவள் ஒன்றும் பேசவில்லை. மலர்ப்படுக்கையில் புரண்டு கொண்டிருப்பதைப் பலகணி வழியாகச் செவிலியுடன் வந்த கன்னிப் பெண் பார்க்கின்ருள். தன் தோழியின் நிலை இன்னதெனஅறிந்துகொள்கின்ருள்; சொல்கின்ருள். யாம் பாடக் கேட்டேயும் கண் வளருதியோ நின் செவிதான் வன் செவியோ? எனச் சிறிது கடுமையாகச் சொல்லி எழுப்பிய செவிலியின் மனத்தைத் தணிவு செய்யும் தன்மையில் அவள் பேச்சு அமைந்துள்ளது.

"மாதேவன் வார்கழல்கள் வாழ்த்திய வாழ்த்தொலிபோய்
வீதியாய்க் கேட்டலுமே விம்மிவிம்மி மெய்மறந்து
போதா ரமளியின்மேல் நின்றும் புரண்டு மிங்ஙன்
ஏதேனும் ஆகாள் கிடந்தாள் என்னே! என்னே!
ஈதே என்தோழி பரிசு"

என்பது எழுப்ப வந்த கன்னிப் பெண்ணின் பேச்சு. நாம் மாதேவனைப் பாடக் கேட்டும் பொய்யுறக்கம் கொள்ள வில்லை இவள்; இவள் செவியும் செவிடு அன்று. மாதேவ னுடைய வார்கழல்களை வீதிவாய் நாம்பாடி வாழ்த்திய வாழ்த்தொலிபோய் இவள் காதில் விழுந்தவுடன் எம்பிரா னுடைய நினைவு மிக்கு அவன் அருள் திறத்தை நினைந்து விம்மி விம்மி அழுது, தன்னுடம்பையே மறந்து மலரமளி யில் படுத்திருந்தும் உறங்கிய நிலையுமின்றி, விழிப்பு நிலையு மின்றி இவ்வாறு புரண்டு கொண்டிருக்கின்றாள் என அவள் நிலையைச் சுட்டிக்காட்டித் தெளிவிக்கின்றாள். ஒத்த பருவத்தளாதலின் அத் தோழியின் பத்திப் பரவசத்தை யுணர்ந்து செவிலுக்கு வந்த கன்னிப்பெண் கூறினாள்.

இவ்வாறு பாகுபாடு செய்துகொண்டால் இம் முதற் பாட்டின் அழகிய அமைப்பும் நயமும் நன்கு புலப்படும். முதல் எட்டுப் பாடல்கள் இவ்வாறு கன்னிப் பெண்டிரைத் துயிலெழுப்பும் பாடல்களாக அமைந்துள்ளன. ஒவ்வொரு பாடலிலும் பத்திச் சுவையும் விளையாட்டுப் பேச்சும் ஏச்சும் ஏத்தும் கலந்து களிநடம் புரிகின்றன.

"முத்தன்ன வெண்ணகையாய்!" என்று தொடங்கும் மூன்றாவது பாடலை மட்டும் சிறிது சிந்திப்போம்.

எழுப்பும் பெண்டிர் உறங்கும் பெண்ணின் முகத்தைப் பலகணி வழியாகப் பார்த்துப் பல்லழகினைப் புகழ்ந்து,

"முத்தன்ன வெண்ணகையாய்! முன்வந் தெதிரெழுந்தென்
அத்தன் ஆனந்தன் அமுதன் என்று அள்ளூறித்
தித்திக்கப் பேசுவாய் வந்துன் கடை திறவாய்!"

என விளித்து, முன்பு இருந்த அவள் பத்தியின் நிலையை விவரித்து வாயிற் கதவைத் திறக்குமாறு வேண்டு கின்றனர். இதற்கு முன்பு எழுப்பு முன்னே எழுந்து எதிர்

வந்து இறைவனை என் அத்தன்; ஆனந்தன்; அமுதன் என விளித்துக் கேட்பவர் வாயூறித் தித்திக்குமாறு பேசுகின்றவளே! எழுந்து வந்து உன் வாயிற் கதவைத் திறப்பாயாக! என்பது பொருள். இதில் அவளை, உறங்கும் போதும் முத்துப் போன்ற பற்கள் சிறிது தோன்ற, சிரித்த முகத்துடன் இருப்பவளே! என்று புகழ்ந்துதான் விளித்தார்கள். அவள் தன் முன்னைய இயல்புகளாகிய எழுப்பு முன் எழுந்து எதிர் வருதலும், இறைவனைப்பற்றித் தித்திக்கப் பேசுதலும் ஆகியவைகள் அவளைப் புகழ்ந்து கூறுவனவாகவே அமைந்துள்ளன. ஆனால், அவள் சொல்லும் பதிலைப் பார்க்கும்போது அவள் உள்ளத்தில் சினம் இருப்பது புலப்படுகின்றது.

"பத்துடையீர்! ஈசன் பழவடியீர்! பாங்குடையீர்!
புத்தடியோம் புன்மைதீர்த்து ஆட்கொண்டால் பொல்லாதோ?"

என்பது அவளுடைய பேச்சு. பத்தியுடையவர்களே! ஈசனுடைய பழைய அடியவர்களே! அப்பழவடிமையால் எல்ல நலங்களும் நிரம்பினவர்களே! என்று கருத்தொத்த — பருவமொத்த தோழியர்களை விளிக்கும் போதே அவள் கோபம் புலப்பட்டுவிடுகின்றது. அதற்குமேல் அவள் தன்னைப் 'புத்தடியேன்' என்று சொல்லிக் கொண்டதோடு, தன் புன்மையைத் தீர்த்து நல்லவளாக்கி ஆட்கொண்டால் பொல்லாதோ? என்று அவர்களைக் குருவாக்கி விடுகின்றாள்.

இவ்விளிகளும் இவள் வேண்டுகோளும் எழுப்பவந்தவர்களைப் புகழ்வதுபோலத் தோன்றினாலும் இகழ்ச்சிக் குறிப்பினை விளக்கி வஞ்சப் புகழ்ச்சி என்பதை வாய் விட்டுக் கூறிவிடுகின்றன. அவ்வாறு இவள் சினந்து கூறவேண்டிய காரணம் என்னை? என்று நம்மைச் சிந்திக்க வைக்கின்றார் அடிகளார். எழுப்பவந்தவர்கள் தன்னோடு ஒத்த வயதினராய் — ஒத்த பண்பினராயிருக்கவும் அவர்களைப் பத்துடையீர் என்றும் பழவடியீர் என்றும் பாங்குடையீர் என்றும் உள்ளிருப்பவள் விளித்ததால் எழுப்பியவர்கள் பேச்சிலே தனக்குப் பத்தியில்லை என்ற குறிப்புத் தோன்றியிருக்க வேண்டும். இவள் அளவை நூலுணர்ந்தவள் போலும்! தித்திக்கப் பேசு

வாய்! என்று எழுப்ப வந்தவர்கள் இயல்பாகக் கூறிய சொல்லே அருத்தாபத்தி அளவையால் ஆய்ந்து பார்த்துத் தனக்குத் தித்திக்கப் பேசத்தெரியுமே யொழிய உள்ளத்தில் பத்திசெய்யத் தெரியாது என்ற குறிப்பால் அங்ஙனம் கூறினதாகக் கொண்டாள் என்பதை நாம் உய்த்துரை வேண்டும். அங்ஙனம் கொண்டமையால் எழுப்ப வந்தவர்களைப் பார்த்து, நீங்கள் நிறைந்த பத்தியுடையவர்கள்; ஈசனுக்கு முன்னமே ஆட்பட்டுப் பழவடியீர் ஆய்விட்டீர்கள்; ஆதலால் எல்லாச் சிறப்பும் எய்தப் பெற்றீர்கள். யானே புதிதின் வந்தடைந்த புத்தடியேன். எனக்கு உங்களைப் போன்ற பத்தியும் பழமையும் எப்படி வரும்? என்னிடத்திலுள்ள பத்தியில்லாமை முதலிய புன்மைகளைத் தீர்த்து என்னை ஆட்கொண்டால் பொல்லாதோ? என்புன்மை தீர்த்து ஆட்கொள்ளாமல் என் புன்மைக் குறிப்பால் சுட்டி இடித்துரைப்பது நல்லதன்று என்று பொருள்படுமாறு பேசியுள்ளாள். இவள் பேச்சினைக் கேட்டு எழுப்ப வந்தவர் கூறுவதைக் கேட்போம்.

"எத்தோநின் அன்புடைமை எல்லோம் அறியோமோ
சித்தம் அழகியார் பாடாரோ நம் சிவனை
இத்தனையும் வேண்டும் எமக்கு"

என்று வெறுப்புடன் பதில் கூறுகின்றார்கள். எழுப்பவந்த எங்களுக்கு இத்தனை பேச்சும் வேண்டியதுதான் என்பது அவர்தம் வெறுப்பை நன்கு புலப்படுத்துகின்றது. தாம் சொல்லிய எச்சொல் அவளுக்குக் கோபத்தை யெழுப்பியது என்பதை உய்த்துணர்ந்து கொண்டார்கள். 'தித்திக்கப் பேசுவாய்' என்ற சொல்லில் பேசுவாய் என்பதனால் உள்ளத்தில் பத்தியில்லை என்ற குறிப்புப்படச் சொன்னதாக அவள் அருத்தாபத்தி — யளவையால் உய்த்துணர்ந்து கொண்டு இங்ஙனம் தம்மை வஞ்சப் புகழ்ச்சியாக இகழ்கின்றாள் என்பதைத் தெளிந்த அவர்கள், அந்த அளவையால் தம் சொல்லுக்குப் பொருள் கொள்ளலாகாது என்பதை விளக்கியாக வேண்டும். பகலுண்ணுமையும் பருத்திருத்தலும் ஒரு வழி நிகழாமை போலத் தித்திக்கப் பேசுதலும் உள்ளத்தே பத்தியுடைமையும் ஒருவழி நிகழாதன அல்ல என்பதைக்

காட்டி அவள் குற்றச் சார்த்தில் நின்றும் தங்களை மீட்டுக் கொள்ள வேண்டும். ஆகவே, சொல்லுகின்றார்கள், நின் அன்புடைமை பொய்யோ? நின் உண்மை அன்பை நாங்கள் எல்லாம் அறியேமோ? பத்தியினால் சித்தம் அழகுறப் பெற்றவர்கள் நம் சிவனைப் பாடமாட்டார்களோ? என்று வினவுகின்றார்கள். நாங்கள் நின் அன்புடைமையில் ஐயங்கொள்ளவில்லை என்பதை முன்னர்த் தெளிவு செய்கின்றார்கள். அருத்தாபத்தியளவையால் 'தித்திக்கப் பேசுவாய்' என்பது கொண்டு உள்ளத்தில் பத்தியில்லை என்பதை உணர்வதாயின், பத்தியால் சித்தம் அழகுறப் பெற்றவர்கள் எல்லாம் நம் சிவனைப் பாடாதிருத்தல் வேண்டும். அவ்வாறின்றிப் பத்தியால் சித்தம் அழகுறப் பெற்றவரும் பாடுகின்றார்கள் என்றால், தித்திக்கப் பேசு வாய் என்பதால் உள்ளத்தில் பத்தியில்லை என்று சொன்னதாகப் பொருள் கொள்ளுதல் அருத்தாபத்தி யளவைக்கு ஏலாது என்பதை விளக்கவே "சித்தம் அழகியார் பாடாரோ நம் சிவனை?" என்று வினவினார்கள். இவ்வாறு வினவியதால், அவள் குற்றச் சார்த்துப் பொய் என்பது பெறப்பட்டு விட்டமையால் இறுதியில் தங்கள் வெறுப்பைப் புலப்படுத்த 'இத்தனையும் வேண்டும் எமக்கு' என்கின்றார்கள். இவர் உரையாடல் எவ்வளவு நுட்பமாக அமைந்துள்ளது! இருதிறத்தாரும் அளவை நூல் உணர்ந்து பேசும் ஆற்றல் மிக்கவர்களாகத் திகழ் வதை யறிந்து வியப்பெய்துகின்றோம். மணிவாசகர் வாசகத்தில் நயப்பு எய்துகின்றோம்.

மக்களுக்கு உபதோசம் செய்யும் முறையில் மணி வாசகர் கூறிய பாடல்கள் மிகச் சிலவே, அவற்றுள் பாச நீக்கமும் சிவப்பேறும் பெறச் சுருங்கிய முறையில் வழி சொல்லியுள்ளார். அதனை எடுத்துக் காட்டுவதோடு திரு வாசகத்தைப் பற்றிய உரையை முடித்துக் கொள்கிறேன்.

"புகவே வேண்டா புலன்களில் நீர், புயங்கப் பெருமான் பூங்குழல்கள்
மிகவே நினைமின்! மிக்க வெல்லாம் வேண்டா போக விடுமின்கள்"

## திருக்கோவையார்

திருவாசகம் என்னும் தெய்வப் பாமாலையை யியற்றி யருளிய மணிவாசகரே திருச்சிற்றம்பலக் கோவையார்

என்னும் திருக்கோவையாரையும் இயற்றியருளியுள்ளார். 'கோவை திருவாசகமும் திருமூலர் சொல்லும்' என்று ஆன்றோர் எண்ணும்போது கோவையினையும் சேர்த்துக் கூறியிருத்தல் காணலாம். திருவாசகத்தில் அன்பு நிலையையும் அருள் நிலையையும் புலப்படுத்தித் திருக்கோவையாரில் தூய இன்பநிலையைப் புலப்படுத்தியுள்ளார் என்னலாம்.

சிவபிரானைப் பாட்டுடைத் தலைவனாகக் கொண்டு புது நெறி காட்டிப் பாடிய நூலாதலின் திரு என்ற அடையும் ஆர் என்ற உயர்திணைப் பலர்பால் விகுதியும் கொடுத்துத் திருக்கோவையார் என்று சிறப்பித்து வழங்கினர் பெரியோர். நானூறு துறைகளில் நானூறு கட்டளைக் கலித்துறைகளால் இயன்றுளது இந்நூல். 'காமம் சான்ற ஞானப் பனுவல்' என இதனைக் குமரகுருபரர் புகழ்வர். இந்நூலில் கூறப்படும் துறைகட்குக் கருத்து விளக்கும் முறையில் கொளுக்களும் இடம் பெற்றுள்ளன. மண்ணுலக மக்களின் களவு, கற்பு நெறிகளைக் கூறும் ஏனைக் கோவை நூல்கள் போலாது மலமாசு நீங்கிய சீவன்—முத்தர்களின் பேரின்பக்காதலைப் பேசுகின்றது இந்நூல். இதனை மாணிக்கவாசகரே நன்கு விளக்கியுள்ளமையைப் பின்னர்க் காணலாம். இக்கோவையைப் பிறரெல்லாம் சிவபிரானை நாயகியாகவும் நாயகனாகவும் கொண்டு பாடிய நூல் என்பர். இந்நூலுள் புகுந்து நோக்குங்கால் சிவபிரானைப் பாராட்டுடைத் தலைவனாகக் கூறியுள்ளாரே யன்றிக் களவித் தலைவனாக யாண்டும் கூறாமை தெளியலாம்.

மண்ணுலக மன்னவனைப் பாட்டுடைத்தலைவனாகக் கொண்ட பாண்டிக் கோவை முதலிய கோவை நூல்களைப் போலாது திருச்சிற்றம்பலமுடையானைப் பாட்டுடைத் தலைவனாகக் கொண்டமை இந்நூற்குத் தனிச் சிறப்புத் தருவதாகும். மேலும் இந்நூலில் பேசப்படுகின்ற தலைவனும் பாங்கனும் பாங்கியும் தாயும் சிவபிரானிடத்தில் அயரா அன்பு கொண்டவராக உள்ளமை பெருஞ்சிறப்பாகும்.

" அணியும் அமிழ்தும் என்னாவியு மாயவன் தில்லைச் சிந்தா
மணி உம்பராரறியா மறையோன் அடி வாழ்த்தலரில்" (15)

என்று தலைவன், தனக்குச் சிவபிரான் அணியும், அமிழ்தும், ஆவியுமாக இருக்கின்றமையைப் புலப்படுத்தியிருத்தல் காணலாம். பாங்கனும்,

> "சிறைவான் புனற்றில்லைச் சிற்றம்பலத்தும் என் சிந்தை
> யுள்ளும்
> உறைவான்" (20)

எனத் தன் சிந்தையுள் சிவன் தங்கியிருத்தலைப் புலப் படுத்தியுள்ளான். பிரிவு கூறல் என்ற துறையில் தோழி யும் தலைவன் பகைதணி வினைக்குப் பிரிவதை யுணர்த்தும் போது,

> "பல்பிறவித் தொகை தணித்தற்கு என்னை ஆண்டு
> கொண்டோன்
> தில்லை" (313)

என்று கூறித் தன் சிவபத்தியைப் புலப்படுத்துகின்றாள். இனித் தாய், சுடரோடிரத்தல் என்ற துறையில்,

> "நானணுகப் பெற்றேன் பிறவி பெருமற் செய்தோன் தில்லை"

எனத் தான் சிவபிரானை நணுகியதையும், நணுகியதால் பிறவி பெருமல் அவன் செய்ததையும் குறிப்பிடுதல் காணலாம்.

இங்ஙனம் அகப்பொருள் துறையில் வரும் உறுப் பினர்கள் எல்லாம் சிவனுக்குப் பத்தராகத் திகழச் செய்த பெருமை திருக்கோவையார்க்கன்றி வேறு எக்கோவை யில் காண இயலும்? மேலும், இங்குச் சொல்லப்படுந் தலைவன் மண்ணுலக வாழ்வில் மயங்கிப் பாசத்தால் கண்டுண்ட ஏனைக் கோவைத் தலைவர்களைப் போன்றவ னல்லன். "இருவினை யறுத்தென்னை ஓசையா லுணர்வார்க் குணர்வரியவன் உணர்வுதந்தொளி யாக்கிப் பாசமானவை பற்றறுத்து உயர்ந்த தன் பரம்பெருங் கருணையினுல், ஆசைதீர்த்து அடியாரடிக் கூட்டிய அற்புதம் அறியேனே" (574) என மணிவாசகர் கூறுவதுபோலவே, அவரால் கூறப் படும் இத் தலைவனும் இறைவனை இடைவிடாது சிந்தித்து ஏத்தி அவனருளால் மும்மலப் பாசம் முறையுற நீங்கிய

சீவன் முத்தர் என்பதையும் விளக்கியுள்ளார். தலையின் கண்ணழகைப் பாராட்டும் தலைவன்,

> " ஈசற்கி யான்வைத்த அன்பின் அகன்று அவன் வாங்கியஎன்
> பாசத்திற் காரென்று " (107)

என்று கூறுகின்றான்.

இதில் தலைவியினது கண் யான் சிவன்பால் வைத்த அன்பு எவ்வளவு அகலமானதோ, அவ்வளவு அகலமானது எனக் கண்ணின் அகலத்தைக் கூறிப்பின் அக்கண்ணின் கருமைக்கு உவமையாக, அவன் வாங்கிய என் பாசத்தின் கார் என்று கூறியுள்ளான். இதனால், தலைவன் இறைவனிடத்துப் பேரன்புடையவன் என்பதும் இத் தலைவனது பேரன்பு நோக்கி இறைவன் இவனது இருண்ட பாசத்தை நீக்கினான் என்பதும் பெறப்படுதல் காணலாம். மும்மலமும் நீங்கிய முத்தான்மாவாக உள்ள தலைவன் மீண்டும் சிற்றின்பங் கருதி ஒருத்தியை விரும்புதல் தகுமோ எனின் ? தகும். எங்ஙனம் எனின், தலைவன் பாசம் நீங்கினவன் என்றால் அவனோடு ஒத்த பண்புடைய தலைவியைத்தானே விரும்பியிருப்பான். எனவே அத் தலைவியும் சிவன்பால் கொண்ட அன்புடையளாய் அவன ருளால் பாசம் நீங்கினவளாதல் தெளிவு.

ஆனால், பாசம் நீங்கப்பெற்ற ஆன்மாக்கள் மெய்யுறு புணர்ச்சியை விரும்பிக் காதலித்தனர் என்பது பொருந் துமோ எனின் ? கூறுவல். இந்த ஐயத்தைத் தலைவன் கூற்றே விடையாய்த் தெளிவு தருகின்றது. தலைவன் தன் னைப் பிரிவானோ என்று தலைவி அஞ்சிய நிலையில் தலைவன் கூறுகின்றான்.

> " சிந்தாமணி தெண்கடலமுதம் தில்லையான் அருளால்
> வந்தால் இகழப் படுமோ மடமான் விழிமயிலே
> அந்தாமரை அன்னமே நின்னை யான் அகன்று
> ஆற்றுவனோ " (12)

என்பது அவன் கூற்று. " தவஞ்செய்து பெறத்தக்க சிந்தாமணி யென்னும் இந்திரன் செல்வமும் பாற்கடல் அமுதமும் தில்லையான் அருளால் முயற்சியின்றிக் கிடைத்

தால் இகழப்படுமோ? அதுபோலத் தில்லையானருளால் என் முயற்சியின்றிக் கிடைத்த உன்னை இகழ்ந்து பிரிய கில்லேன், பிரியின் தரியேன்' என்று தலைவியைத் தேற்று கின்றான்.

"கொள்ளேன் புரந்தரன் மாலயன் வாழ்வு" என்று கூறத்தக்க விறல்படைத்த முத்தான்மாவாக விளங்குபவன் தலைவன். அவனுக்கு இந்திரன் செல்வமாகிய சிந்தாமணியும் அவன் உண்ணும் தெண்கடலமுதமும் பொருளல்ல வாயினும், "நரகம் புகினும் எள்ளேன் திருவருளாலே இருக்கப்பெறின் இறைவா" என்ற கொள்கையுடையவனுதலின், 'தில்லையான் அருளால் வந்த சிந்தாமணியையும் அமுதையும் அவன் ஆணை கருதி யேற்றுக்கொள்ளுதல் போல அவனருளால் கிடைத்த நின்னையும் விரும்பி ஏற்றுக் கொண்டேன். இனி, உன்னைப் பிரியேன், பிரியில் தரியேன்' என்று கூறினன் என்பது கருத்து. இதில் தலைவியைக் குறிப்பிடும்போது 'அந்தாமரை அன்னமே' என்று விளிக்கின்றான். அவ் விளி, கருத்து மிக்கதாக உள்ளது. அன்னப் பறவையின் இயல்பினையுணர்ந்த உயிர் நூலோர், அன்னம் தன் வாழ்நாளில் ஒரேமுறைதான் உடலுறவை விரும்பும் என்று கூறுகின்றார்கள். பிறகு உடலுறவை விரும்பாது இறுதிவரை அன்புகொண்டு வாழுமாம். இக் கருத்தோடு அவ் விளியை நோக்கினுல் தலைவனும் தலைவியும் எதிர்காலத்தில் மெய்யுறுதலைப் பெரிதும் விரும்பாது இறைவனுக்கு அடியார் என்ற அன்பினுல் பிணைக் கப்பட்டு அகலாது தலைவனும் தலைவியும் ஒன்றி வாழ்வார்கள் என்பது புலனும்.

"ஒருநாள் புணரப்புணரின் அரைநாள் வாழ்க்கையும்
வேண்டலன் யானே"

என்ற குறுந்தொகையடியும் இந்த உயர்ந்த கருத்தினதே யாகும்.

இனிக் கோவையாரில் வரும் ஒரு பாடலைச் சிறிது சிந்திப்போம். 'பாங்கன் வினுதல்' என்ற துறையில் தலைவனைப் பார்த்துப் பாங்கன்,

"சிறைவான் புனற்றில்லை யம்பலத்தும் என் சிந்தையுள்ளும்
உறைவான் உயர்மதிற் கூடலின் ஆய்ந்த ஒண்டீந்தமிழின்
துறைவாய் நுழைந்தனையோ அன்றி ஏழிசைச் சூழல் புக்கோ
இறைவா தடவரைத் தோட்கு என் கொலாம்புகுந்
தெய்தியதே" (20)

என்று வினவுகின்றான். தலைவன் பெருந்தோள்கள் மெலிந் திருப்பதைக் கண்ட பாங்கன் அதற்குக் காரணம் அறிய விரும்புகின்றான். தலைவனே! பெரிய மலைபோன்று பருத்துத் திரண்டிருந்த நின் தோள்கள் இவ்வாறு மெலியக் காரணம் என்னை? மதுரையில் சிவபிரான் ஆராய்ந்து கூறிய இனிய தமிழ் அகப்பொருள்துறையில் நுழைந் தனையோ? அல்லது, ஏழிசை பயின்ற சூழலாகிய பரத்தையர் சேரியில் புகுந்தனையோ? என்பது அவன் வினா.

தமிழ் அகத்துறைகளைப் படிப்பதாலோ, ஏழிசையைப் பயில்வதாலோ தோள் மெலிவு ஏற்படுவதில்லை. இன்பத் துறையில் எளியர் ஆகுவோர்க்கே தோள் மெலியும். இந்த உண்மையை உளங்கொளல் வேண்டும். அந்த இன்பத் தைத் தன்னேரில்லாத் தலைவியாலோ பரத்தையிடமோ ஒரு தலைவன் பெறலாம். 'தன்னேரில்லாத் தலைவனுக்குக் குரவர்களால் இவனுரிமையென்றே வளர்க்கப்பட்டாரா கலின் தலைமகளை யெய்துதவதன் முன்னரே பரத்தையர் உளர்' என்பது இறையனார் களவியலுரையில் நாற்பதாஞ் சூத்திரத்தில் நிறுவப்பட்டுள்ளமை இங்கு நினைதல் வேண்டும்.

சிற்றம்பலவன் கூடலில் ஆய்ந்த தீந்தமிழ் என்றது, இறையனார் ஆய்ந்து செய்த இறையனார் களவியலையே என்பதையும், துறை என்றது அதில் கூறப்பட்ட அகப் பொருள் துறைகளையே யென்பதையும் உய்த்துணரலாம். துறைவாய் நுழைதலாவது, காட்சி முதலிய துறைகளில் தலைவியைக் காணுதல் முதலிய செயல்களைச் செய்த லேயாம். ஏழிசைச் சூழல் புகுதல் என்பது, ஏழிசையில் கற்றலைக் குறிக்கும் சொல்லால் துறை கற்றனையோ? ஏழிசை பயின்றனையோ? என்று கூறாமல், துறைவாய்

நுழைந்தனேயோ? சூழல் புக்கோ என்று கூறியுள்ளமையை ஊன்றி நோக்க வேண்டும்.

அறிவிற் சிறந்த பாங்கன், தலைவனை வினவுகின்ற போது, தலைவனிலையோடு சிறிதும் இயைபுபடாத சங்க நூலக் கற்றலையோ, இசைப் பயிற்சியையோ குறித்து வினவியிருப்பானு? என்று சிந்தித்தல் வேண்டும்.

அக்கருத்தால் வினவியிருப்பின், அவன் வினவிற்கு விடை சொல்லும் தலைவன் அவ்விரண்டில் ஒன்றினை உடன் பட்டு ஏற்றுக் கொண்டிருத்தல் வேண்டும்.

'உற்றதுரைத்தல்' என்ற துறையில் தலைவன் பாங் கனது வினவிற்கு விடையிறுக்கின்ருன்,

"கோம்பிக் கொதுங்கி மேயா மஞ்ஞை குஞ்சரங் கோளிழைக்கும்
பாம்பைப் பிடித்துப் படங்கிழித் தாங்கு அப்பணை முலைக்கே
தேம்பல் துடியிடை மான்மட நோக்கி தில்லைச் சிவன்ருள்
ஆம்பொற் றடமலர் சூடுமென் ஞற்றல் அகற்றியதே" (21)

என்பது அவன் விடை. "மான்மட நோக்கியின் அப்பணை முலைக்கே தேம்பும் துடியிடையானது தில்லைச்சிவன் தாளாகிய பொன்போற் சிறப்புடைய தாமரைப் பூவைச் சூடுகின்ற எனது ஆற்றலை நீக்கிவிட்டது" என்பது கருத்து. இதனுல் தலைவன், தீந்தமிழ்த்துறையில் நுழைந்து தன் தோள் மெலியப் பெற்றமையை உடன்பட்டு ஏற்றுக் கொண்டுள்ளதை யறிலாம். ஏழிசைச் குழலில் புகவில்லை. தலைவியின் அழகைக் காணுதலாகிய காட்சி முதலிய தமிழ்த்துறையில்தான் புகுந்தேன்; அதனுலேதான் என் தோள்கள் மெலிந்தன என்பதைச் சொல்லாமல் சொல்லித் தெளிவுபடுத்தியுள்ளதைக் காணலாம்.

இங்குத் தலைவன் சங்க நூல்களைப் படித்தேன்; என் வலிமை குன்றியது என்று சொல்லவில்லை. ஒரு தலைவியின் இடையழகைக் கண்டதால் அவ்வழகு சிவபிரானுடைய திருவடிக் கமலங்களை எப்போதும் சிந்திக்கிற என் பேராற்றலை அகற்றிவிட்டது என்பது அவன் கருத்து. பாங்கன் வினவையும் தலைவன் கூறிய விடையையும்

இயைத்து நோக்கினுல் இப் பொருளே பொருத்தமுடையது என்பது தெளியலாம்.

பல நாளாகச் சிந்தித்துக் கூறிய இப் பொருள் பொருத்தமிக்கது என்பது என் கருத்து. அவையில் உள்ள உங்களுக்குப் பொருந்துமேல் கொள்ளவும், இல்லையேல் தள்ளவும் உரிமையுண்டு. இதுகாறும், ஞானத்தின் திருவுருவாக விளங்கிய மாணிக்கவாசர் கூறியருளிய திருவாசகம், திருக்கோவையார் என்ற அமுதக் கடலிலிருந்து சில துளிகளை யானறிந்தவாறு கூறினேன். என் சிறுமையைப் பொறுப்பீர்கள் என்ற நம்பிக்கையுடையேன். பொறுமையுடன் இதுகாறும் கேட்டுக்கொண்டிருந்த உங்களுக்கு என் உளமார்ந்த நன்றி உரித்தாகும். இவ் விரு நூல்களையும் ஆழ்ந்து கண்டு கூறும் வாய்ப்பினையளித்த சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ்த்துறைக்கு என் நன்றி என்றும் உரியதாகும்.

# 5

# ஒன்பது, பதினேன்ரூந் திருமுறைகள்

பேராசிரியர் அ. ச. ஞானசம்பந்தன்

சைனம், வைணவம் என்ற சமயங்களைப் பொறுத்த மட்டில் கி. பி. 7ஆம் நூற்ருண்டு தொடங்கிப் 12 ஆம் நூற்ருண்டு வரை ஒவ்வொரு நூற்ருண்டிலும் அச்சமயங் களுக்குரிய நூல்கள் தோன்றின என்று கூறவியலாது. ஆனல், சைவத்தைப் பொறுத்த மட்டில் கி. பி. 5.ஆம் நூற்ருண்டு எனக் கூறத்தக்க காரைக்கால் அம்மையார் காலந்தொட்டுப் 12-ஆம் நூற்ருண்டு முடியச் சைவ சமய நூல்கள் தோன்றி வந்துள்ளன. கி. பி. 7 முதல் 9-ஆம் நூற்ருண்டுவரைத் தேவார திருவாசகங்கள் 10 முதல் 12 வரை திருவிசைப்பா, பதினென்ரும் திருமுறை 12-ம் திரு முறை எனப்படும் பெரியபுராணம் என்பவை இக்கால எல்லையில் தோன்றியவை.

## இசை, இயல் தொகுப்புகள்

கி. பி. பத்தாம் நூற்ருண்டில் கண்டராதித்தர், திரு மாளிகைத்தேவர், சேந்தனர், வேணுட்டடிகள், திருவாலி யமுதனர் ஆகிய ஐவரும் பதினென்ரும் நூற்ருண்டில், பூந்துருத்தி நம்பி காட நம்பி, புருடோத்தம நம்பி, சேதி ராயர் கருவூர்த்தேவர் ஆகியோரும் வாழ்ந்தனர்[1] எனலாம். இப்பெருமக்கள் பாடிய 29 பதிகங்களில் 28 பதிகங்கள் திருஇசைப்பா என்றும் ஒன்று திருப்பல்லாண்டு என்றும் வகுக்கப் பெற்றதுடன் இவை முழுதும் 9-ஆம் திருமுறை என்று வழங்கலாயிற்று. இதனை 9-ஆம் திருமுறை என்று கூறியது பொருத்தமே. ஏன் எனில் முதல் 8 திருமுறை களும் (திருக்கோவை நீங்கலாக) இசைப்பாடல் எனக் கூறப்படுபவை. எனவே இசைப்பாடல்களா யமைந்த

1. மு. அருணசலம், தமிழ் இலக்கிய வரலாறு-10ஆம் நூற்ருண்டு, பக். 442,

இசைப்பா 9-வது திருமுறையாக வைக்கப்படுதல் சரியே. ஏனைய மூன்றும் இயற்பாடல்களேயாம்.

இனிப் 10 வது திருமுறையாக உள்ள திருமந்திரமும் ஒருவர் இயற்றியதே. எனவே 12 திருமுறைகள் என்பவற்றுள் பலரால் பாடப்பெற்றுத் தொகுக்கப் பெற்ற திருமுறைகள் 9, 11 ஆகிய இரண்டுமேயாம்.

### 11 ஆம் திருமுறை

அடுத்துப் 11ம் திருமுறை, இறையனுர் முதலாக நம்பியாண்டார் நம்பி ஈருக உள்ள 12 ஆசிரியர்களாற் பாடப்பெற்ற 40 நூல்களின் தொகுப்பாகும். இவர்கள் பல்வேறு காலங்களில் வாழ்ந்தவர்களாவர். இவர்கள் ஒரே ஒரு பிரபந்தம் இயற்றிய பரணதேவர், இளம் பெருமானடிகள், அதிராவடிகள் ஆகிய மூவர் முதல் 10 நூல்கள் இயற்றிய நம்பியாண்டார் நம்பி உள்பட 12வர் ஆவர்.

இவ்விரு தொகுப்பு நூல்களையும் பற்றி விரிவாகக் காணு முன்னர் இவை தோன்றிய காலம், சூழ்நிலை முதலியவற்றை ஆராய்வது பயனுடையதாகும். அவ் வாராய்ச்சி சில உண்மையான ஐயங்களையும் தோற்றுவிக்கிறது. அந்த ஐயங்கட்கு என்னுல் விடை காணமுடியவில்லை. இங்குள்ள பெரியோர்கள் கவனத்திற்கு இவ்வையங்களைக் கொண்டு வருவதே என்னுடைய நோக்கமாகும்.

### சில ஐயங்கள்

முதலாவது ஐயம் இதுவரை நாம் கூறி வந்தபடி இராசராசன் முதலாய சோழர்கள் உண்மையில் தமிழ்ச் சமய இலக்கியங்களைப் போற்றினரா? அல்லது அவர்களையும் மீறி இவை வளர்ந்தனவா? என்பதாகும். இரண்டாவது ஐயம் இத் திருமுறைகளை நம்பியாண்டார் நம்பி இராசராசன் வேண்டுகோட் கிணங்கித்தான் தொகுத்தாரா? அப்படியே தொகுத்திருப்பினும் தாம் பாடியுள்ள 10 பிரபந்தங்களை அவற்றுடன் சேர்க்கும் அளவிற்குத் துணிந்திருப்பாரா? என்பதாகும்.

### திருமுறை வெளியீடு

தேவார திருவாசகங்கள் தோன்றிய பின்னர் அவை போன்ற பாடல்கள் ஒன்றரை நூற்றுண்டுக்காலம் தோன்ற வில்லை என்பது தெளிவு. மேலும் நால்வர் பாடல்களில் புறச் சமயங்களாகிய சமணம் பௌத்தம் என்பவை வலு வாகவும் மென்மையாகவும் தாக்கப்படுகின்றன. 9ஆம் திருமுறையில் அக் குறிப்பு எதுவும் இல்லை. எனவே அச் சமயங்கள் இரண்டும் தமிழ் நாட்டைப் பொறுத்தவரை வலுவிழந்துவிட்டன என்று கூறுவதில் தவறு ஒன்றும் இல்லை. அதனல்தான் அச் சமயங்கள் பற்றிய குறிப்பு ஒன்றும் இசைப்பாவில் இடம் பெறவில்லை. முதலாம் இராசராசன் ஒருசிலர் பாடிய தேவாரப் பதிகங்களைக் கேட்டு அவற்றை முழுவதும் பெற வேண்டி நம்பியின் துணையுடன் பெற்றுன் என்று திருமுறை கண்ட புராணம் கூறுகிறது. அக் கதையில் முதல் ஏழு திருமுறைகளும் சிதம்பரத்தில் ஓர் அறையில் வைத்துப் பூட்டப்பெற்றிருந் தனவென்றும் தில்லை வாழ் அந்தணர்கள் மூவரும் வந்தால் ஒழிய அவ்வறையைத் திறக்கக் கூடாது என்று கூறி விட்டனர் என்றும், இராசராசன் மூவர் படிமம் செய்து அவ்வறையின் எதிரே நிறுத்தி அவர்களைத் திறக்குமாறு பணித்தான் என்றும் அப் புராணம் கூறுகிறது.

### பதியம் விண்ணப்பித்தவர் பெயர்ப் புதுமை

இதில் புதுமை என்னையெனில் தேவாரப் பதிகங்களை இறைவன் முன்னர் ஓதுதற்கு 48 ஓதுவார்களையும் பக்க வாத்தியம் வாசிக்கின்றவர்களையும் தான் நியமித்ததாக முதல் இராசராசனே அவனுடைய கல்வெட்டில் கூறி யுள்ளான். இவர்களுடைய ஆண்டுச் சம்பளம் 90 கலம் நெல்லாகும். இந்த 48 பேர்களுடைய பெயர்களும் ஞான சிவன், சதாசிவன், பூர்வசிவன், வாமசிவன், சத்யசிவன், தத்புருஷசிவன், அகோரசிவன், ருத்ரசிவன் என்பன போன்றே முடிகின்றன. இவ்விறுதிப் பெயர்கள் அவர் களுடைய திட்சாநாமம் எனக் கூறப்படுகிறது. மூவர் முதலிகள் பெயர்கள் இப்பிடாரர்கள் இயற்பெயராக வருகின்றன. 'ஆச்சன் திருநாவுக்கரையனை நேத்திர

சிவன் (44), 'பொற்சுவரன் நம்பியாரூரனான தர்மசிவன் (43), 'சிவக் கொழுந்து சம்பந்தனான அகோரசிவன்' (37). பலர் மூவர் பெயருடன் இறுதியில் ஒரு பெயரையும் சேர்த்து வைத்துள்ளனர்.

### கல்வெட்டில் இல்லை

இவ்வளவு விவரங்களைக் கல்வெட்டில் கூறிய இராசராசன் தேவாரங்களைத்தான் சிறைமீட்டிருப்பின் சொல்லாமற் போயிருப்பானா? அவன் கி.பி. 985 முதல் 1014 வரை 29 ஆண்டுகளே ஆட்சி செய்திருக்கின்றான். இக் கால எல்லையில் பற்பல போர்கள் புரிந்து சோழப் பேரரசை விரிவுப்படுத்தினான். அவனுடைய பிரதாபங்களை விரித்துக் கூறும் பரசஸ்தியில் அவனுடைய பல்வேறு வெற்றிகளும் பேசப்பட்டுள்ளனவே தவிர இப் பெருங்காரியம் பேசப் படவில்லை. தேவாரப் பதிகங்களைக் கண்டு எடுத்தவன் அவனாயின் இதனைவிடக் கல்வெட்டுக்களில் பொறிக்கக் கூடிய சிறப்புப் பொருந்திய செய்தி வேறு எதுவுண்டு? பிறவிடங்களில் இதுபற்றிக் கூறாவிடினும் பதியம் விண்ணப்பஞ்செய்கிறவர்கள் பட்டியல் தந்தவிடத்திலாவது குறித்திருக்கலாம்.

### பதிகம் ஓதல் பழைய மரபே

அப்படியே பார்த்தாலும் தேவாரப் பதியங்களைத் திருக்கோயில் விண்ணப்பம் செய்யும் வழக்கத்தை இவன் தான் முதன் முதலில் ஏற்பாடு செய்தான் என்றும் கூறுவதற்கில்லை. இவனுக்கு ஏறத்தாழ நூறாண்டிற்கு முன்னரே முதற்பராந்தகன் நாள்தோறும் பூசாகாலத்தில் திருப் பதியம் பாடும் ஏற்பாட்டை எங்கள் ஊராகிய லால் குடியிலும் அள்ளூரிலும் செய்திருந்தான் எனக் கல் வெட்டால் அறிகிறோம்.[2]

பராந்தகனுக்கும் முற்பட்டவனாகிய விஜய நந்தி விக்கிரமனாகிய பல்லவமன்னன் திருவல்லம்[3] என்ற ஊரில் திருப்பதியம் விண்ணப்பம் செய்ய ஏற்பாடு செய்து

2. K. A. N., Colas, P. 637 (373 of 1903 and 99 of 1929)
3. K. A. N., Colas, P. 637 (511 of iii, p. 93 II 32. 33)

அவ்வாறு செய்பவர்களின் பெயர்ப் பட்டியலையுந் தந்துள் ளான். நம்பியாண்டார் நம்பி எந்தக் காலத்தில் வாழ்ந் திருப்பினும் அவர்தாம் திருமுறைகளை வெளிக் கொணர்ந் தார் என்ற கதை பொருளற்றதாகிறது. மேலும் திரு முறை கண்ட புராணத்தில் இராசராசன் தன்னிடம் வந்தார் கூறிய ஓரிரண்டு பதிகங்களைக் கேட்டு அவற்றை முழுவதும் பெற விரும்பினான் என்றுகூறுவதும் கட்டுக் கதையாகிறது. பல்லவனாகிய விஜய விக்கிரமன் காலத்தில் பதியம் விண்ணப்பிப்பவர்கள் பெயர்ப் பட்டியல் இடம் பெற்றால் ஒன்றிரண்டு பதிகங்களே புழக்கத்தில் இருந்தன என்ற கதை பொருத்தமற்றது என அறியமுடிகிறது.

இதைவிட முக்கியமான ஒன்றும் கவனிக்கப்படல் வேண்டும். முதற் பராந்தகன் காலத்துக் கல்வெட்டுகள் மூலம்[4] அறியப்படும் செய்திகள் சில உண்டு. இவன் காலத்தேயிருந்து திருப்பதியம் முறையாகக் கோயில் களில் ஓதும் பழக்கம் ஏற்பட்டது. இவன் கல்வெட்டுக் களிலிருந்து இவன் காலத்தில் திருவாதவூராளி நாயனர் (மணிவாசகர்) அருளிய திருவெம்பாவை திருச்சாழல் முதலியன நன்கு அறியப்பெற்றிருந்தன என்றும் தெரிகிறது. எனவே இராசராசன் காலத்தே நம்பி மூலமே இவை வெளிவந்தன என்ற கூற்றுப் பொருத்த மற்றதாகவே படுகிறது.

எனவே இராசராசன் திருப்பதியம் விண்ணப்பம் ஓது வார்களை நியமித்ததும், அவர்கள் பெயர்ப் பட்டியல் கொடுத்ததும் புதுமையானதன்று. இவை இரண்டுமே அவனுக்கு நூறாண்டுகளின் முன்னர்த் தொட்டு நடை பெற்றுவந்த பழக்கங்கள் ஆகும்.

**சோழர் சமயம் யாது**

இந் நிலையில் இடைக்காலச் சோழர்களுடைய சமயம் பற்றி ஒரு சிறிது அறிவது பயன்தரும். விஜயாலயன் தொடங்கி இவர்கள் அனைவரும் சைவர்களாகவே இருப் பினும் பிற சமயங்களையும் போற்றி வளர்ப்பவர்களாகவே இருந்தனர். புற சமயங்களைக் கூடப் போற்றிய பெருமை யுடைய இவர்கள் சைவ சமயத்தில்காணப்பெற்றபல்வேறு

4. K. A. N., Colas, p. 658 (129 of 1914; 349 of 1911 etc).

பிரிவுகளுள் எப்பிரிவைப் போற்றினர் என்பதை அறிவது நலந்தரும்.[5] முதலாம் இராசராசன் அவன் மகன் முதலாம் இராசேந்திரன் ஆகிய இருவரும் வடநாட்டிலிருந்து காளாமுக சைவர்களை இவண் கொண்டு வந்து குடியேற்றினர் என்றும் அறிய முடிகிறது.[6] இராசேந்திரன் தன்குல குருவாகிய உடையார் சர்வசிவ பண்டிதருக்கு 'ஆசார்ய போகமாக' பெரிய நிலப்பரப்பை வழங்கியுள்ளான். இவர் தஞ்சைக் கோயிலில் பூசை செய்துவந்தவர். இவரும் இவருடைய சீடர்களும், அவர்களுடைய சீடர்களும் தஞ்சை, ஆர்யதேசம், மத்யதேசம், கௌடதேசம் ஆகிய யாண்டிருப்பினும் இந் நிலப்பயனை அனுபவித்துக் கொள்ளலாம். வாரணசியில் உள்ள கொல்லாமடத்தைச் சேர்ந்த ஞான சிவ இராவளர் என்பாரும், பிக்ஷா மடத்தைச்சேர்ந்த வேறு ஓர் இராவளரும் குறிக்கப் படுகின்றனர்.

### காளாமுகர் செல்வாக்கு

இடைக்காலச் சோழர் காலத்திய சைவம் சிவயோகி களின் சைவத்திலிருந்து வெறுப்புத்தரக் கூடிய பாசுபதம், காளாமுகம், ஆகிய பல பிரிவுகளுடன் படர்ந்திருந்தது.[7] மகாவிரதிகள் என்று கூறப்பெறும் காளாமுகர்கள் அதிகப் பிரபலமடைந்திருந்தனர். ஒன்பதாம் நூற்றாண்டு முதல் பன்னிரண்டு முடிய இவர்கள் தமிழ்நாட்டில் அதிகச் செல்வாக்குப் பெற்றிருந்தனர். இரண்டாம் பராந்தகன் காலத்திருந்த கொடும்பாளூர் தலைவன் விக்ரமகேசரி மூவர் கோயிலைக் கட்டி அதனுடன் ஒரு பெரிய மடத்தையும் கட்டி வடநாட்டு மதுரையிலிருந்து வந்த ஆத்ரேய கோத்ரத் தைச் சேர்ந்த மல்லிகார்ஜுனர் என்ற காளாமுக குருவுக்கு அளித்தான்.

வட ஆர்க்காட்டில் உள்ள மேல்பாடியில் இருந்த காளாமுக மடத்தின் தலைவராக இருந்தனர் லகுலீஸ்வர

---

5. K. A. N. Colas P. 643 (ed. 1955)
6. K. A. N. Colas P. 642 (ed. 1955)
7. K. A. N. Colas P. 648 (ed. 1955)

பண்டிதர் எனப்படுவார். திருவொற்றியூரில் சதுரானன பண்டிதர் என்பாரும் இருந்தார்.

இவற்றை எல்லாம் எடுத்துக் காட்டிய திரு நீல கண்ட சாஸ்திரி தம் சோழர் என்ற நூலில்? 'இந்த எடுத்துக் காட்டுக்கள் சோழர் காலத்தில் தென்னுட்டில் காளாமுகர், பெற்றிருந்த செல்வாக்குச் சான்ருகும்' என்று கூறுகிருர்.[8]

### தமிழர் மடங்கள் சில

காளாமுகர் மடங்களும், குகைகளும் முதலாம் இராசராசன் காலத்திற்கு முற்பட்டே இருந்து பல்கின என்பது நீலகண்ட சாஸ்திரியாரின் கொள்கை.[9] சோழர் காலத்தில் இவற்றின் செல்வாக்குப் பரவியது எனலாம். இம்மடங்களில் சில தமிழ் மக்களின் ஆதரவுடன் அவர்களாலேயே பரிபாலிக்கப்பட்டும் இருந்து வந்தன. திருச்சத்திமுற்றத்து 'முதலியார் மடம் திருவிடைமருதிலேச் சேர்ந்த 'மாளிகை மடத்து முதலியார் சந்தானம்'[10] என்பவை தமிழ் நாட்டினுள் அடங்கி இருந்தவை. இதன் எதிராகக் காளாமுகர் மடங்கள் பல ஆர்யதேசம், காசி, காஷ்மீர் முதலியவற்றுடன் தொடர்பு கொண்டிருந்தன. இவற்றுள் முக்கியமானவை 'கோளகி மடம்' போன்றவை. வடநாட்டிலிருந்து பட்டர்கள் ஏராளமாக வருவிக்கப் பெற்றுத் திருவரங்கம் போன்ற மடங்கள் பாசுபதர் காளாமுகர், காபாலிகம் பிரிவைச் சேர்ந்தவையாகும்.[11] சைவ அந்தணர், வைணவர் ஆகியோரும் மடங்கள் வைத்திருக்கலாம் எனினும் நாம் அவை பற்றி அறியச் சான்றுகள் அதிகம் இல்லே.

சோழர் காலத்தில் அமோகமாக வளர்ந்த இந்த இடங்கள், குகைகள் என்பவற்றுள் லகுலீசபாசுபதம் போன்ற பிரிவினர், மடங்களிலும் அப்பட்டமான காளாமுகர் குகைகளிலும் வாழ்ந்திருத்தல் கூடும். நாளா

---

8. K. A. N. Colas P. 648 (ed. 1955)
9. KAN - Colas, p. 650.
10. Ibid.
11. K. A. N. — Colas - p. 651.

வட்டத்தில் இவற்றிடையே வேறுபாடுகள் குறைந்து போயினும் இவர்கள் செல்வாக்குக் குறைந்ததாகத் தெரிய வில்லை.

**குகையிடி கலகம்**

இந்நிலையில் குலோத்துங்கள் காலத்தில் கி.பி. 1200ல் 'குகையிடி கலகம்'[12] என்ற பெயருடன் ஒரு புரட்சி தோன்றிற்று. திருத்துறைப்பூண்டியில் இருந்த குகைகள் பெரிதும் நாசப்படுத்தப் பெற்றன. வரலாறுகளும் கல் வெட்டுக்களும் இதுபற்றி விரிவாகப் பேசவில்லை எனினும் இந்நிகழ்ச்சி எங்கோ ஓரிடத்தில் மட்டும் நடைபெற்ற தன்று. ஓரிடத்தில் ஒரு சமயம் நிகழ்ந்திருந்தால் 'குகையிடி கலகம்' என்ற பட்டப் பெயரைத் தந்திருக்க மாட்டார்கள். எனவே இது தொடர்ந்து நடைபெற்ற ஒரு கலகம் என்றே கொள்ளவேண்டும்.

**கன்னட, தெலுங்கு நாடுகளில் காளாமுகர் பிடிவிடுதலை**

குகையில் இருந்த காளாமுகர்களை அழிப்பதே இக் கலகத்தின் நோக்கமாதல் வேண்டும். ஒன்று முதல் பன்னிரண்டாம் நூற்றாண்டுவரை இத்தமிழ்நாட்டில் மட்டும் அல்லாமல் கன்னடம் தெலுங்கு நாடுகளிலும் இவர்கள் செல்வாக்கு பரவி இருந்ததாகத் தெரிகிறது.[13] கி. பி. 1156ஐ ஒட்டிக் கல்யாணியைத் தலைநகராகக் கொண்டு ஆட்சி செய்த கலசூரி பிஜ்ஜலா மன்னனிடம் அமைச்சராய் இருந்த பசவர் காளாமுகர் பிடியை ஒழித்து வீர சைவத்தை நிலைநாட்டியதும், இக்காலத்தில்தான். இதே நேரத்தில் தெலுங்கு நாட்டில் காளாமுகர் பிடியிலிருந்து விடுபட்டு ஆராத்ய சைவம் வளரலாயிற்று.

**சோழர் போற்றியது காளாமுக சைவமே**

தமிழ்நாட்டில் நிகழ்ந்த குகையிடி கலகமும் கன்னட நாட்டு வீரசைவமும் தெலுங்கு நாட்டின் ஆராத்ய சைவமும் காளாமுகரை எதிர்த்து நிகழ்ந்த புரட்சியின் விளைவே

---

12. K. A. N. — Colas - p. 653.
13. K. A. N. — A History of South India, p. 435, 436.

யாகும். இடைக்காலச் சோழர் இராசராசன் தொடங்கி இரண்டாம் குலோத்துங்கன் வரைக் காளாமுகரைப் போற்றினர் என்ருல் இவர்கள் சமயத்தை வளர்த்தனர் என்று கூறலாமே தவிர, முழு மூச்சுடன் தமிழர் கண்ட சைவத்தை வளர்த்தனர் என்று கூற ஒண்ணுது.

இராசராசன்தான் திருமுறை கண்டான் என்பதைப் பலரும் இன்று ஏற்றுக் கொள்ளினும் அது நன்கு நிறுவப்பட்ட ஒன்றன்று. முதலாவதாக அவன் இப்பெரு நிகழ்ச்சியைத் தன்னுடைய கல் வெட்டுக்களில் யாண்டுங் குறிப்பிடவில்லை. இரண்டாவதாக 48 பிடாரர்களை வைத்துத் திருப்பதியம் விண்ணப்பம் செய்ய நிபந்தங்கள் வழங்கினுன் அவன் என்னில் அவன் காலத்துக்கு முன்னரே திருப்பதிகங்கள் பெருவழக்காய்த் தமிழ்நாட்டில் இருந்திருத்தல் வேண்டும்.

### திருமுறை கண்ட புராணம்

திருமுறை கண்ட புராணத்தை ஆதாரமாகக் கொண்டால் இவை வெளிக்கொணரப் பெற்றுச் சிதலத்தின் பிடியிலிருந்து இவற்றை வெளிப்படுத்திப் பின்னர் திருநீலகண்ட யாழ்ப்பாணரின் வழி வந்த ஒரு பெருமாட்டியின் உதவியால் இசை வகுக்கப்பெற்றன என்று அறிகிருேம். இக்கதை எத்துணைத் தூரம் நம்புதற்குரியது என்பது ஒரு புறம் இருக்க இக்கதையிலிருந்து அறியப்படுவனவற்றையுங் காண்டல் வேண்டும்.

### தில்லையந்தணர் யார்

முதலாவது தில்லை வாழ் அந்தணர் எனப்படுவோரில் பலரும் காளாமுகப் பிரிவைச் சேர்ந்தவர்களாகவோ அன்றிச் சோழனுல் வடநாட்டிலிருந்து இறக்குமதி செய்யப் பெற்றவர்களாகவோ இருந்திருத்தல் வேண்டும். இவர்கள் நால்வரைப் போற்றும் மரபுடையவர் அல்லர் என்பது இன்றுகூட இவர்கள் நால்வர் பெயர்களைத் தாம் வைத்துக் கொள்வதில்லை என்பதனுல் அறியலாம். என்ருலும் ஏதோ ஒரு மன்னனே (இராசராசன் அல்லாமல் அவன் முன்னேருள் ஒருவன்) நேரே வந்து தேவாரங்களை வெளிக்கொணர வேண்டும் என்று கூறுகையில் இவ்வந்

தணர்கள் வேறு வழி இல்லாமல், செங்கோலுக்குப் பயந்து, ஆனால் அதே நேரத்தில் முடிந்தவரை தடை செய்ய முயன்றனர். எவ்வாறு இதனைத் தடை செய்ய லாம் என்று ஆராய்ந்து அவர்கள் இறுதியாக ஒரு சிறந்த வழியை மேற்கொண்டனர். மூவர் வைத்துப் போன வற்றை அவர்களே வந்தால் ஒழிய வெளியே எடுக்க உரிமை இல்லை என வாதிட்டனர். ஆனால் மன்னர் மூவர் படிமங்களைக் கொண்டு வந்து எதிரே நிறுத்தியவுடன் அவை வெறும் படிமங்கள் என்று கூற அவர்கட்கு நெஞ்சில் உறுதி இல்லை. அப்படிக் கூறினால் அவர்கள் வழிபடும் இறைவனும் படிமந்தானே என்று கூற வாய்ப்பாகிவிடும்.

### பண் அமைத்த கதையின் உட்பொருள்

தில்லை வாழ் அந்தணர்கள் இத்தமிழ் நாட்டைச் சேர்ந் தவர்களாக இருந்திருப்பின் இந்நிலை நேர்ந்திருக்க நியாய மில்லை. அவருள் பலர் சோழர்களால் தமிழ்நாட்டில் குடி யேற்றப் பெற்ற வடவர்களாக இருந்திருத்தல் கூடுமோ என்ற ஐயமும் தோன்றுகிறது. மேலும் வெளியில் எடுக் கப் பெற்ற தேவார ஏடுகள் கரையான் உண்டு எஞ்சிய வையே எனவும் அவ்வரலாறு கூறுகிறது. அவ்வாறாயின் இவற்றிற்குப் பின் அமைக்க வேண்டிய பொறுப்பு யாரு டையது என்ற வினாத் தோன்றியவுடன் தில்லைக் கூத்தன் திருவருள் புரிந்ததாக அறிகிறோம். திருஞானசம்பந்தரு டன் யாழ் வாசிக்கும் பணியை மேற்கொண்டிருந்த திரு நீலகண்டயாழ்ப்பாணரின் மரபில் வந்த ஒரு பெரு மாட்டியை கூத்தன் திருவருள் அறிவிக்க அழைத்து வந்து பண் அமைத்தனர் என்றும் அறிகிறோம்.

கதையின் இப்பகுதியும் ஓர் உண்மையை அறிவுறுத்து கிறதோ என்று ஐயப்பட வேண்டியுளது. தேவாரங்கள் காளாமுகத் தொடர்புடையோரால் ஏற்கப்படாமல் ஆனால் அதே நேரத்தில் யாழ்ப்பாணர் முதலிய தமிழர்களால் மட்டும் போற்றிப் பாதுகாத்து இசை அமைப்புடன் பாது காக்கப்பட்டன என்றும் நினைக்கத் தோன்றுகிறது.

### இராசராசனால் முடியக் கூடியதா ?

இக்கதை உண்மையாயின் இவ்வளவு செயல்களையும் செய்த பின்னர் இராசராசன் காலத்திலேயே தேவாரப்

பதியம் ஓதும் பிடாரர்கள் 48 மரைத் தஞ்சைக் கோவிலில் அமைத்தான் என்றால் அவனுடைய 29 ஆண்டு ஆட்சிக் காலத்தில் இது முடியக்கூடியதா என்பதும் ஆராய்ச்சிக் குரியது. தஞ்சைப் பெருவுடையார் கோயில் கட்டி முடிந்தது இராசராசனின் ஆட்சியாண்டு 25-நாள் 275ல் என்று கல்வெட்டுப் பேசுகிறது. இக்கோயில் முடிந்த பின்னர் அவன் மூன்று ஆண்டுகளே வாழ்ந்துள்ளான். இதில் திருமுறை கண்டு, இசை வகுத்து அவற்றைக் கோயிலில் பாடச் செய்தான் என்பது ஏற்கக் கூடியதாய்த் தெரியவில்லை. மேலும் இக்கோயிலில் உடையவரை நிலை நிறுத்த உதவியவர் கருவூர்த்தேவர் என்ற சித்தராவார். அவரே திருவிசைப்பாவில் இராசராசேச்சுரம் பற்றி ஒரு பதிகம் பாடியுள்ளார். இராசராசன் திருமுறை கண்டது உண்மையானால், நம்பிகள் அவர் காலத்தவர் என்றால் உடனிருந்த கருவூர்த்தேவர் திருமுறை கண்ட நிகழ்ச்சி பற்றியோ, நம்பிகளைப் பற்றியோ ஒரு குறிப்பும் கூறாமல் போனது வியப்பே.

**நம்பி காலம் பற்றிய கருத்து வேறுபாடு**

இந்நிலையில் திரு. சதாசிவப் பண்டாரத்தாரவர்கள் கூறியுள்ளபடி நம்பிகள் வாழ்ந்தது முதல் ஆதித்தசோழன் காலமாகிய (871—907) ஒன்பதாம் நூற்றாண்டின் இறுதியோ என்றும் எண்ணத் தோன்றுகிறது. திருத்தொண்டர் திருவந்தாதியில் புகழ்ச்சோழ நாயனார் (50) இடங்கழி நாயனார் (65) கோச்செங்கணான் (82) ஆகிய மூவரையும் தம் காலத்து வாழ்ந்த சோழனுடைய முன்னோர்கள் என்று பாடுகிறார். தம் காலத்து வாழ்ந்த சோழனைக் குறிப்பிடுகையில் ‘சிங்கள நாடு பொடி படுத்தோன்’ (50), ‘சிற்றம்பலம் கொங்கில் கனகம் அணிந்த ஆதித்தன் குலமுதலோன்’ (65), ‘செம்பொன் அணிந்து சிற்றம்பலத்தைச் சிவலோகம் எய்தி’ (82) என்றும் கூறுகிறார். இவர் இராசராசன் காலத்திருந்திருப்பின் இரண்டு பாடல்களிலும் பொன்வேய்ந்த செய்தியும் ஆதித்தன் என்ற பெயரையும் வைத்துப் பாட நியாயமில்லை.

எனவே நம்பியாண்டார் நம்பி வாழ்ந்த காலம் முதலாம் ஆதித்தன் காலம் எனக் கூறலாம்.

### நம்பியின் அந்தாதி வழி

திரு. பண்டாரத்தாரின் இக் கருத்தை வன்மையாக மறுக்கும் திரு. மு. அருணாசலம் அவர்கள்[14] நம்பியின் 'புலமன்னியமன்னைச் சிங்கள நாடு பொடிபடுத்து' என வரும் பகுதியைக் காட்டி முதலாம் ஆதித்தன் சிங்களத்தை வென்றதாகக் கல்வெட்டு ஆதாரம் யாதுமில்லை எனவே 'சிங்களாந்தகன்' என்ற விருதுப் பெயருடைய முதல் இராசராசனையே இது குறிக்கும் என வாதாடுகிறார். மேலும் கல்வெட்டாதாரமின்மையின் இதனை ஏற்கலாகாது எனக் கூறும் பொழுது அதற்கு இராசராசன் கல்வெட்டில் ஆதாரமின்றேனும் நம்புவதில் தடை இல்லை என்கிறார்.

### இருவருக்கும் முழு ஆதாரமில்லை

நம்பியின் பாடல்கள் மூன்றில் இரண்டு விஷயம் கூறப் பெறுகிறது. முதற்பாடலில் ஈழ நாட்டை வென்றதும், இரண்டு மூன்றும் பாடல்களில் அம்பலம் பொன் வேய்ந்ததும் பேசப் படுகின்றன. இதில் புதுமை யாதெனில் முதலாம் ஆதித்தன் அம்பலம் பொன் வேய்ந்தான்; ஆனால் அவன் ஈழத்தை வென்றானா என்பது அறியப்படவில்லை. முதலாம் இராசராசன் ஈழத்தை வென்றான்; ஆனால் பொன்னம்பலம் பொன்வேய்ந்தானா என்பது அறியப்படவில்லை. எனவே திரு. பண்டாரத் தார்; திரு. மு. அருணாசலம் அவர்கள் இருவர் கொள்கை யும் முற்றிலும் நிறுவப் பெற்றது என்று கூறுதற்கில்லை.

### காளாமுகர் செல்வாக்கு

இதற்கிடையில் இவர்கள் இருவரும் கூறாமல் விட்ட தும் இக்கட்டுரையில் ஆராயப்படுவதுமாகிய காளாமுகர் செல்வாக்கைப் பற்றிச் சிந்திக்கவேண்டும். இராசராசன் நம்பியாண்டார் நம்பி போன்ற சிவனருட் செல்வர் ஒரு வரை அறிந்திருப்பின் 'சர்வ சிவாச்சாரியார்' என்ற காளா முகரையும், ('மகாவர்த்தின்கள்') அவன் மகன் இராசேந் திரன் 'ஞான சிவாச்சாரியார்' என்ற காளாமுகரையும் குலகுருவாகக் கொண்டிருந்ததுடன் அவருக்கு ஆயிரக்

---

14. தமிழ் இலக்கிய வரலாறு, 11ஆம் நூற்றாண்டு, மு. அ., ப. 301
15. KAN., Colas, p. 648

கணக்கான நிலங்களை ஆசார்ய போகமாக[15] அளித்ததன் நோக்கம் யாது? இது தவிர இராசேந்திரன் சாளுக்கியர்கள் ஆசார்யராகிய லகு லீச பண்டிதரை ஆதரித்ததுடன் அவருக்கும் நிரம்ப நிலங்கள் அளித்துள்ளான்.

### கல்வெட்டின்மை

இராசராசன் காலத்தில் நம்பிகளின் துணைகொண்டு அவன் தேவாரங்களை வெளிக் கொணர்ந்திருப்பின் அத்தகைய மாபெருங்காரியத்தைப் பற்றிக் குறித்திடாமல் இருந்திருப்பானு என்பது ஆராய்ச்சிக்குரியது. தேவாரப் பதியங்களைத் திருக்கோயிலில் ஓதுவதற்கு 48 பேர்களை நியமித்து அவர்கள் ஒவ்வொருடைய பெயரையும் விடாமல் கல்லில் பொறிக்கச் செய்த சோழ மன்னன் இத்தனைக்கும் மூலமாக உள்ள தேவாரங்களைத் தான் வெளிக் கொணர்ந்ததைப் பொறிக்காமல் விட்டான் என்பது அறிவுக்குப் பொருத்தமாக இல்லை.

### கல்வெட்டில் நம்பி பெயரில்லை

அதுதான் விட்டான் என்றாலும் நம்பியின் உதவியால் இதனைச் செய்திருப்பின் அந்த நம்பியைப் பற்றியோ அவர் திருமுறைகளை வகுத்த சிறப்பையோ குறிக்காமல் விட்டது சற்றும் நம்பமுடியாத ஒன்றாகும். இந்த அடிப்படையில் பார்க்கும்போது இராசராசன் காலத்தில் தேவாரத் திருமுறைகள் முன்னரே வகுக்கப்பெற்று நன்கு பயின்று வந்தன என்று கொள்வதில் தவறு இல்லை. எனவேதான் அவன் திருக்கோயிலில் அவற்றை ஓதும் பணியைச் செய்வித்தான். அவன் செய்தது அதுமட்டுமேயாகலின், அதை மட்டும் பொறித்து வைத்தான்.

### முதல் எழு திருமுறைகள்

அப்படியானால் தேவாரங்கள் திருவாசகம் (முதல் 8 திருமுறைகள்) தவிர ஏனையவற்றை நம்பி தொகுத்தார் என்பது பொருந்தாக் கூற்றாய் முடியும். அப்படியே அவர் 11 திருமுறைகளைத் தொகுத்தார் எனக் கொள்வதானால் அவர்தாம் பாடிய 10 நூல்களைப் பதினொன்றாந் திருமுறையில் தாமே சேர்த்துக் கொண்டார் என்பதும் சரியாகப் படவில்லை. மேலும் அரசனே இதனை விரும்பியிருப்பினும்

நம்பி போன்ற ஒருவர் தாம் பாடிய பாடல்களைத் தாமே திருமுறைகளில் சேர்த்துக் கொண்டார் என்பது சற்று நம்புதற்கரியதாக உளது. திரு. மு. அருணாசலம் அவர்கள் (த. இ. வர. 11ம் நூற்றாண்டு பக். 300) தம் நூலில் இது பற்றிக் குறிப்பிட்டுச் சைவ, வைணவத்தில் இது மரபென்று கூறுவதும் ஞானசம்பந்தர் முதலியோரும் பல சுருதி பாடியுள்ளார் என்பதும் ஏற்கக் கூடியவையன்று. தம்பாடல்களை விட உயர்ந்தவை என்று கருதி அவற்றைத் தொகுக்கும் ஒருவர் தம்முடையதையும் அவற்றுடன் சேர்த்தல் சிறப்பன்று.

**9 முதல் 11 வரை பிற்காலத் தொகுப்பு**

இதன் எதிராக நம்பி முதலாம் ஆதித்தன் காலத்தவர் என்று பண்டாரத்தார் கருத்தை ஏற்றுக் கொண்டால் அவர் முதல் 7 அல்லது 8 திருமுறைகளை மட்டும் தொகுத்தார் என்று கொள்வதில் தவறு இல்லை. முன்னர் வந்தவர்கள் ஒருவரோ அன்றிப் பலரோ சேர்ந்து எஞ்சிய மூன்று திருமுறைகளை வகுத்தனர். பத்தாம் நூற்றாண்டின் இறுதியிலும் 11 ஆம் நூற்றாண்டின் தொடக்கத்திலும் திருவிசைப்பா திருப்பல்லாண்டு தோன்றின.

**இசைப்பா தோன்றக் காரணம்**

அப்படியானால் இடைப்பட்ட 1½ நூற்றாண்டுகளில் சைவ சமய சம்பந்தமான நூல்கள் எதுவும் தோன்றாமல் திடீரென்று 10 ஆம் நூற்றாண்டின் இறுதியில் திருவிசைப்பா முழுவதும் தோன்றக் காரணம் யாது? ஆதித்தன் காலத்தில் அளவால் சிறுகி இருந்த காளாமுகர் செல்வாக்கு இராசராசன், இராசேந்திரன் காலத்தில் மிகவும் பெருகிச் செல்வாக்கிலும் வலுப்பெற்றுவிட்டது. அரசியல் செல்வாக்குப் பெற்றிருந்தனர் காளாமுகர்கள் என்பது முன்னரே குறிக்கப் பெற்றது. அவர்கள் இந்நாட்டுச் சைவத்திலும் மாறுபட்டவர்கள். கிரியைகளில் அதிகக் கவனம் செலுத்துபவர்கள்; வட நாட்டிலிருந்து வந்தமையின் வடமொழிமாட்டு அதிக ஈடுபாடு கொண்டவர்கள்; கன்னட, தெலுங்கு நாடுகளிலும் தம் செல்வாக்கைப் பூரணமாகச் செலுத்தி வந்தனர்; 1200இல் இரண்டாம்

குலோத்துங்கன் காலத்தே[16] குகை இடிக்கலகம் நடைபெற்றது என்பதும் அறியப்படுகிறது. திரு. சாஸ்திரியார் இது பற்றி ஒன்றும் அறியக்கூடவில்லை என்று கூறியுள்ளார். திரு. பண்டாரத்தார் கோளகிமடம், பிட்சாவிருத்தி மடம் ஆகியவை இடிபட்டன[17] என்று கூறுகிறார். இவற்றை ஆட்சி செய்தவர்கள் காளாமுகர்கள். இவர்களை எதிர்த்து எழுந்த கிளர்ச்சியே குகையிடிக் கலகமாகும்.

### எதிர்ப்பின் மூலம் யார்?

இவ்வெதிர்ப்பு ஏற்படக் காரணமாய் இருந்தவர்கள் யார்? முதலாம் இராசராசன் காலம் முதல் ஓங்கி வளர்ந்த செல்வாக்குடைய இக் காளாமுகர்களை எதிர்த்து இந் நாட்டு பக்தி வழியைப் பரப்பினவர்களாகிய திருவிசைப்பாப் பாடிய அன்பர்களேயாவர். கருவூர்த்தேவர் முதலிய இவர்கள் தேவர் சித்தர் மரபைச் சேர்ந்தவர்கள். சித்தர்கள் கிரியைகளில் அதிக நம்பிக்கை வைக்காதவர்கள். ஞான வழியை மேற்கொண்ட சிவவாக்கியர் போன்றவர்களும், பக்தி வழியை மேற்கொண்ட கருவூர்த்தேவர் போன்றவர்களும் சித்தர் களத்தில் உண்டு. காளாமுகர் தொல்லையை எதிர்த்துப் புரட்சி நடத்திய இவர்கள் மேற்கொண்ட வழி மூவர் முதலிகள் மேற்கொண்ட பக்தி வழியாகும்.

### இசைப்பா எவ்வாறு மக்களைத் தூண்டிற்று?

திருவிசைப்பாப் பாடல்களில் சிதம்பரம், வீழிமிழலை, ஆவடுதுறை, விடைகழி, களந்தை ஆதித்தேச்சரம், கீழ்க் கோட்டூர் மணியம்பலம், முகத்தலை திரைலோக்கிய சுந்தரம், கங்கை கொண்ட சோழேச்சுரம், நாட்டியக்குடி, தஞ்சை, ஆரூர், பூவணம் என்ற ஊர்களைப் பற்றிப் பாடப் பெற்றுள்ளன. இதில் பூவணம் நீங்கலாக எஞ்சியுள்ளவை அனைத்தும் சோழ நாட்டில் உள்ளவை. எனவே சோழர் ஆட்சியில் அவர்களால் கட்டப்பெற்ற ஆதித்தேச்சரம், மணியம்பலம், முகத்தலை, திரைலோக்கிய சுந்தரம், கங்கை கொண்ட சோழேச்சுரம், தஞ்சை, ஆகிய ஊர்கள் பற்றி

---

16. KAN, Colas, p. 652.
17. பிற்காலச் சோழர் சரித்திரம், சதாசிவ பண்டாரத்தார்-170.

எழுந்தன. மன்னர்கள் தம் பெயரால் கட்டிய கோயில் கட்கும் சிறப்பு உண்டு என்று மக்கள் மத்தியிலும், மன்னர் மத்தியிலும் ஓர் எண்ணத்தை உருவாக்க இவை எழுந்தன போலும்.

### மூவர் செய்யாதது ஏன்?

மூவர் முதலிகள் செய்யாத ஒரு காரியமாகும் இது. 'நம்பியாரூரராகிய சுந்தரர் பல்லவ மன்னர்கள்மாட்டுப் பேரன்பு பூண்டவர்தான். அவர்கட்காக இரக்கங்கொண்டு 'பல்லவர்க்குத் திறை கொடா மன்னவரை மறுக்கஞ் செய்யும் புலியூர்ச் சிற்றம்பலம்' என்று கூடப் பாடியுள்ளார். ஆனால் காஞ்சி சென்ற பொழுது வானத்தை முட்டும் கைலாயநாதர் கோயிலைப் பாட மறுத்து அதன் அண்மையிலுள்ள ஒரு சுற்றுடைய 'கச்சி அநேகங்காவதம்' என்ற கோயிலை மட்டுமே பாடினர்.

### சோழர் கட்டிய கோயில்களைப் பாடியது ஏன்?

இதன் எதிராகச் சோழர்களைக் காளாமுகச் செல் வாக்கிலிருந்து இழுப்பதற்காகவே அவர்கள் கட்டிய கோயில்கட்கும் இசைப்பாப் பாடினர். திருவிசைப் பாடல்கள் தேவாரம் திருவாசகம் போன்று எளிய மக்களும் கற்று உணர்ந்து பாடிப் பயன் பெறப் பாடப் பெற்றவை யேயாகும். எனவே அறிவின் துணைகொண்டு ஆராய்ந்து அறியப்படவேண்டிய பகுதிகள் குறைவாகவே இருக்கும். அன்பு நெறியில் செல்பவர்கட்குத் தத்துவ விசாரணையில் அதிகக் கவனம் செல்லாது. இவற்றைப் பாடியவர்கள் அறிவாற்றலில் சிறந்த தத்துவ ஞானிகளேயாயினும் அறிவால் குறைந்த சாதாரண மக்களை மனத்துட் கொண்டிருந்தமையின் அன்பு நெறியையே பெரிதும் போற்றிக் கூறினர். இடை இடையே தத்துவக் கருத்துக்கள் காணப் பெறுமே தவிர இது தோத்திர நூலே தவிரச் சாத்திர நூலன்று.

### இசைப்பா தோத்திர நூலே

'ஒளிவளர் விளக்கே உலப்பிலா ஒன்றே' என்ற மாளிகைத் தேவர் பாடலில் வரும் 'சித்தத்துள் தித்திக்கும்

தேன்' என்றும், 'அளிபவர் உள்ளத்து ஆனந்தக் கனி' என்றும் தில்லைக் கூத்தனைக் குறிக்கின்றார். சித்தம் புற மனத்தைத் தாண்டி நிற்கும் ஒன்று. இதனை (Sub-conscious state) எனலாம். அதிலும் தித்தித்தலாவது நாமாகச் செய்து கொள்ளும் பழக்கத்தால் வருவதன்று. மனம் முழுதும் நிறைந்த வழியே சித்தத்தில் ஒன்று தேங்கும்.

எனவே நம்முடைய முயற்சிக்கும் அப்பாற்பட்டுள்ள சித்தத்தில் அவன் தேனாகத் தித்திக்க வேண்டுமாயின் 'யான்' என்பதற்று நாம் அதுவாக ஆதல் வேண்டும். இதனைத் துரிய நிலைக்கண் எழும் அனுபவம்என்றும் 'அளிபவர் உள்ளத்து ஆனந்தக் கனி' என்பதற்கு அதீத நிலைக் கண் தோன்றுவது என்றும் பொருள் எழுதியுள்ளனர். அளி அன்பிற்கும் இரக்கத்திற்கும் ஒரு பெயராகும். அன்புடையார் உள்ளத்தே இறைவன் இருப்பான் என்பதை விட்டுத் துரியாதீத நிலை என்றெல்லாம் பொருள் எழுதுவது நம் சாத்திர அறிவைக் காட்டப் பயன்படுமே தவிர நூலுக்கு உரையிட்டதாக ஆகாது.

### சமயிகள் வெறுப்பே தவிரச் சமய வெறுப்பன்று

இப் பெருமக்கள் சைவ நெறி நிற்பினும் தமக்குப் புறம்பாகிய சமண, பௌத்தம் என்றவற்றையும் இறை வனே படைத்தான் என்பதை உறுதியாக நம்பினர். ஆனால் அவற்றைப் பின்பற்றுபவர்கள் தவறிழைத்தனர் ஆதலால் சமயிகளைக் கண்டிக்க நேர்ந்தது. இசைப்பா 8வது பாடலில் 'புறஞ்சமண் புத்தர் பொய்கள் கண்டா யைத் தொண்டனேன் புணருமா புணரே' என்று பாடி யுள்ளார் மாளிகைத்தேவர். இதே கருத்தைத் திருஞான சம்பந்தரும் இரும்பூளைத் தேவாரத்தில் 'துணைநன்மலர் தூய்த்தொழுது' என்று தொடங்கி இறுதியடியில் 'ஈசன் அணைவில் சமண், சாக்கியம் ஆக்கியவாறே' என்று கூறிப்போனார்.

### இசைப்பாவில் புதுமை

திருமாளிகைத் தேவரின் இரண்டாவது பதிகம் (உயர் கொடியாடை) அம்பலத்தானைப் பாதாதிகேசம் வருணிப்

பதும் திருவாலியமுதனார் 22வது பதிகத்தில் ‘மையல்மா தொருகூறன்’ என்று தொடங்கிப் பாதாதிகேசம் வருணிப் பதும் திருவிசைப்பாவிற் காணப்பெறும் புதுமை. 28 பதிகங்களில் 20 பதிகங்கள் அகத்துறையில் அமைந் துள்ளமை ஒருவகை வளர்ச்சியை அறிவிக்கும்.

### தேவரின் கவிதைச் சிறப்பு

கருவூர்த்தேவரின் கீழ்வரும் பாடல் அவருடைய உறுதிப்பாட்டை நன்கு அறிவிக்கிறது.

தத்தையங்கு அனையார் தங்கள்மேல் வைத்த
தயாவை நூறாயிரங் கூறிட்டு
அத்தில் அங்கு ஒருகூறு உன்கண் வைத்தவருக்கு
அமருலகு அளிக்கும் நின் பெருமை ...... (140)

உலகியலில் வைக்கும் பற்றில் இலட்சத்தில் ஒரு பங்கை இறைவன்மேல் வைத்தாலும் அவர்கட்கு தேவர் உலகை அளிப்பன் என்பதே இதன் பொருள். இதே கருத்தை உலகம் போற்றும் ஷேக்ஸ்பியர், தமது எட்டாவது ஹென்றி என்ற நாடகத்தில் அழகாகக் கூறுகிறார்.

“ ...................... O Cromwell
Had I but served my God with half the zeal
I served my King, he would not in mine age
Have left me naked to mine enemies ”

(Henry VIII. Act III Sc.2. Line 455-57)

### இறைவன் அழகுபேசல் ஏன்?

இலக்கிய நயம், கவிதைச் சிறப்பு, ஓசைநயம், பொருள் ஆழம், சிறப்புமிகு சொற்றொடர் ஆட்சி என்று எடுத்துக் கொண்டால் கருவூர்த்தேவர் தனிச்சிறப்புடன் இலங்குகிறார்.

‘ நீலமே கண்டம், பவளமே திருவாய், நித்திலம் நிறைந் திலங்கினிவே
போலுமே முறுவல்; நிறைய ஆனந்தம் பொழியுமே திரு முகம்; ஒருவர்

கோலமே அச்சோ! அழகிதே என்று குழைவரே கண்டவர்;
உண்ட
தாலமே; ஆகில் அவர் இடம் களந்தை அணிதிகழ் ஆதித்
தேச்சரமே (96)

திருவிசைப்பாப் பாடல்களில் இறைவனின் மேனி அழகை அதிகம் வருணிப்பதும் கூடக் காளாமுகரின் கோர வடிவத்தை நினைவூட்டி மக்கள் மனத்தை அக்கொடிய காட்சியிலிருந்து திருப்பவே ஆகும் என்றும், பெரும்பகுதிப் பாடல்கள் அகத்துறையில் அமைந்திருப்பதும் அழகுணர்ச்சியை அதிகப்படுத்தவே என்றும், நினைப்பதில் தவறு ஒன்றும் இல்லை.

### அகத்துறைப் பாடல்கள் அதிகம்

தேவார காலத்தில் அருகிக் காணப்பெறும் அகத்துறை இப்பொழுது பெரிய இடத்தைப் பெறுகிறது. 28 பதிகங்களில் 20 பதிகங்கள் அகத்துறையில் அமைந்திருப்பதே இவ்வுண்மையை வெளிப்படுத்தும்.

'பத்தியாய் உணர்வார் அருளை வாய்மடுத்துப்
பருகு தோறும் அமுதம் ஒத்து அவர்க்கே
தித்தியாய் இருக்கும், தேவர்காள், இவர்தம்
திருவுரு இருந்தவா பாரீர்! ........ (184)

'பவளமால் வரையைப் பனிபடர்ந்து அனையதோர்
படர் ஒளி தருதிரு நீறும்
குவளை மாமலர்க் கண்ணியும் கொன்றையும்
துன்று பொன் குழல் திருச் சடையும் (226)

என்பன போன்ற அடிகள் இறைவன் திருவுரு அழகில் ஈடுபட்டுப் பாடப் பெற்றவை.

### சந்தப் பாடல்கள்

'பவளமே மகுடம்: பவளமே திருவாய்; பவளமே திருஉடம்பு
அதனில்
தவளமே களபம்; தவளமே புரிநூல்; தவளமே முறுவல்;
ஆடுஅரவந்
துவளுமே; கலையுந் துகிலும் ...... (95)

என்பன போன்ற சந்த இன்பம் நிறைந்த பாடல்களும் உண்டு. வேணாட்டடிகள் என்பார் பாடிய இசைப்பாப்

பதிகத்தில் ‘தம்பானை சாயப் பற்றார்’ (206) ‘பொகியாதோ கீழ்க் கொம்பு’ (207) ‘கைச்சாலும் சிறுகதலி இலை வேம்பும் கறி கொள்வர்’ (205) என்பன போன்ற பழமொழிகள் இடம் பெறுகின்றன. திருமாளிகைத் தேவர் இவற்றிய ‘கோயில்’ பற்றிய இசைப்பாவில் வரும் சில பாடல்கள் நம்மாழ்வார் பாடலை நினைவூட்டுகின்றன.

சேவேந்து வெல்கோடி யானே! என்னும்
 சிவனே சேமத் துணையே! என்னும்
மாவேந்து சாரல் மகேந்திரத்தின்
 வளர் நாயகா! இங்கே வாராய் என்னும் (30)

இப் பாடல் நம்மாழ்வாரின் ‘மண்ணை இருந்து துழாவி இது வாமனன் மண் என்னும்’ ‘விண்ணைத் தொழுது, அவன் மேவு வைகுந்தம் என்று கைகாட்டும் ...... (3264)’ என்ற பாடலை நினைவூட்டுகிறது.

### புரட்சிக்கு வித்திட்டவை இசைப்பாக்களே

10, 11ஆம் நூற்றாண்டுகளில் காளாமுகர்களை எதிர்த்து நடைபெற்ற அமைதியான புரட்சிகளின் பயனாக 1200 வாக்கில் குகையிடிக் கலகம் நடைபெற்றுக் காளாமுகர் செல்வாக்குத் தமிழ்நாட்டில் ஒழிந்தது. தமிழ் மரபுக் கேற்பப் பக்திப் பாடல்களைப் பாடிப் பக்தி இயக்கத்தை வளர்த்ததே இப்புரட்சிக்குக் காரணமாயிற்று. அப் பணியைச் செய்த பெருமை முன்னரே இருந்த தேவாரங் களுடன் புதியனவாய்ப் படைக்கப் பெற்ற திருவிசைப் பாவுக்கே உரியது. மேலும் தம் எதிரில் வாழ்கின்ற சோழர்கள் கட்டிய கோயில்களைப் போற்றும் வகையில் இப் பாடல்கள் தோன்றினவாகலின் அந்தப் பிராந்தியத் தில் வாழுகின்ற மக்களின் நாட்டுப் பற்றையும், தமிழ்ப் பற்றையும் சமய உணர்வையும் வளர்க்க இப் பாடல்கள் துணை புரிந்தன.

### திருமுறை கண்ட புராணம் உண்மையா?

இத்துணைக் குழப்பத்திற்கும் காரணமாக அமைந்தது ‘திருமுறை கண்ட புராணம்’ என்ற பெயரில் வழங்குகின்ற ஒரு சில பாடல்களாகும். அது உமாபதி சிவம் இயற்றியது

என்று கூறப் பெற்றதால் பலரும் அதனை வேத வாக்காக நம்பித் தம் ஆராய்ச்சிக் கோட்டையை அதன் மேல் கட்டினர்.

### யார் இயற்றியது ?

பெரிய புராணத்தைப் பதிப்பித்த யாழ்ப்பாணத்து ஆறுமுக நாவலர் அவர்கள் தமது முதற்பதிப்பில் இந் நூலையும் சேர்த்து அடிக்குறிப்பாக 'இதனை இயற்றியவர் யார் என்று அறியக் கூடவில்லை. சிலர் உமாபதி சிவம் என்றும் கூறுவர்' என்று எழுதினர். அடுத்த பதிப்புகளை வெளியிட்டவர்கள் இந்த அடிக்குறிப்பை எடுத்துவிட்டு உமாபதி சிவாச்சாரியார் அருளியது என்றே பதிப்பித்து விட்டனர்.

### 11ஆம் திருமுறை

9ஆம் திருமுறையின் நிலை இது என்ருல் 11ஆம் திருமுறை பற்றிக் கூறத்தேவையில்லை. காலத்தால் ஞானசம்பந்தருக்கும் முற்பட்ட காரைக்கால் அம்மையார் பாடல்களிலிருந்து நம்பியாண்டார் நம்பி பாடல்கள் வரை இதில் இடம் பெற்றுள்ளன. திருவாலவாயுடையார் (1) காரைக்கால் அம்மை (4), ஐயடிகள் காடவர்கோன் (1), சோமான் பெருமாள் (3), நக்கீர தேவ நாயனர் (9), சங்க நக்கீரர் (1), கல்லாடதேவர் (1), கபிலதேவர் (3), பரணதேவர், இளம் பெருமானடிகள், அதிராவடிகள் (ஒவ்வொன்று), பட்டினத்துப் பிள்ளையார் (5), நம்பியாண்டார் நம்பி (10), என 12 பேர்களுடைய 40 நூல்கள் இதில் இடம் பெற்றுள்ளன.

### பல குழப்பங்கள்

இவற்றுள் க்ஷேத்திரத் திருவெண்பா, கார் எட்டு என்பவையும் இடம் பெற்றுள்ளன. முதலதில் ஒவ்வோர் ஊரிலுள்ள இறைவனையும் ஏத்த வேண்டும் என்று கூறப் படுகிறது. இரண்டாவதில் கார் காலத்தை இறைவனேடு உவமித்துப் பாடியுள்ளது என்பதும் அறியப்படல் வேண்டும். எந்த அடிப்படையில் இவை பக்தி நூல்கள் ஆயின என்று அறியக் கூடவில்லை. சங்கப்பாடல் எனப்பெறும் திருமுருகாற்றுப்படையையும் கார் எட்டையும், ஒருவரே

பாடினார் என்ற கருத்தில் இந் நூல் தொகுக்கப் பெற்றுள்ளது. இவற்றையெல்லாம் பார்க்கும்போது இதனைத் தொகுத்தவர்கள் வெறும் பக்தி ஒன்றைமட்டும் துணையாகக் கொண்டு அன்று வழங்கிய கதைகளையெல்லாம் ஏற்றுக்கொண்டு தொகுத்தனர் என்றே கூறத் தோன்றுகிறது.

### பலதரப் பாடல்கள்

இது ஒரு தொகுதி நூல் என்றாலும் இதில் காணப் பெறும் அனைத்தும் தரமான பக்திப் பாடல்கள் என்று கூறுதற்கில்லை. இவை நம்பியால் தொகுக்கப் பெற்றன என்பதற்கும் திருமுறைகண்ட புராணம் தவிர வேறு சான்றில்லை. காரைக்கால் அம்மையின் மூன்று நூல்கள், சேரமானின் மூன்று நூல்கள், பட்டினத்துப் பிள்ளையின் 5 நூல்கள் ஆகியவை பக்திப் பாடல்களின் முதல் தரத்தில் நிற்கக் கூடியவை.

நக்கீர தேவரின் கயிலைபாதி காளத்தி பாதி சிறந்த ஓசை நயமுடைய வெண்பாக்களாலானது. ஓரளவு பக்தியையும் கொண்டிலங்குவது. ஈங்கோய் மலை எழுபதில் இயற்கை வருணனை பெரிதும் இடங் கொண்டுள்ளது. வலஞ்சுழி மும்மணிக் கோவை சுவையுடன் அமைந்தது. அடுத்துள்ள திருஎழுகூற்றிருக்கை, பெருந்தேவ பாணி என்பவை இடைக்காலப் பிரபந்தங்கள் வகையைச் சேர்ந்தன. சொற் சாலந் தவிர இதில் அதிகம் ஒன்றும் இல்லை.

### புதிய கருத்து—காளாமுகர் எதிர்ப்பே

அடுத்துள்ள கோபப்பிரசாதத்தில் இரண்டு கருத்துக்கள் புதுமை உடையன. இதுவரை பக்தி நூல்களிற் காணப்படாத இக் கருத்துக்கள் இங்கு எவ்வாறு புகுந்தன என்பது ஆராயற் பாலது.

"கொச்சைத் தேவரைத் தேவர் என்று எண்ணிப்
பிச்சரைப் போல ஓர்
ஆரியப் புத்தகப் பேய்கொண்டு புலம்புற்று
வட்டனை பேசுவோர் மானுடம் போன்று
பெட்டினை உரைப்போர் பேதையர்

(கோபபிர. 80 முதல் 85 வரை)

சிறு தெய்வங்களைப் பற்றிக் கொண்டு, சிவபெருமானை வழிபடாமல் வடமொழித் தருக்கம் முதலியன பயின்று வெட்டியாகப் பேசும் மாக்களை இழித்துரைக்கும் இப்பகுதி. இதுவும் இக்கட்டுரையில் முன்னர்க் குறிக்கப் பெற்ற காளாமுகர்களைப் பற்றியதாகலாம் என்று நினைக்க வேண்டி யுளது. ஆனல் இப் பகுதி அத்வைதம் பரவி இருந்த நிலை யைக் குறிக்கும் என திரு. மு. அருணசலம் அவர்கள் கூறுவது ஏற்புடையதாகத் தெரியவில்லை. 10, ஆம் நூற்ருண்டுகளில் அத்வைதம் தமிழ்நாட்டைப் பொறுத்த வரை இத்துணை வழக்குப் பெற்றிருந்தது என்பது பொருத் தமாகப் படவில்லை.

மேலும் நக்கீரர் இவ்வரிகளை அடுத்து, ‘நிலத்து உள் கலை மீன்தலை என்பலம் என்ருல் அதனை அடுத்து நிறுப் போர் ஒருத்தர் இன்மையின்’ (87—89) என்று பாடுகிருர். இந்த எடுத்துக் காட்டுக் காளமுகர்களைப் பற்றி நினைக்கை யில் பொருத்தமுடையதாகுமே தவிர அத்வைதிகளை நினைக் கையில் சரியாகாது. ‘ஆடுபோலக் கூடி நின்றழைத்தும்’ (94) என்பதும் காளமுக, காபாலிக, கோளகி வழிபாட்டு முறைக்கே பொருத்தமுடையதாகும்.

இதனை அடுத்து நக்கீரர் பெயரால் ஒரு திருக்கண் ணப்பதேவர் திருமறமும், கல்லாடர் பெயரால் ஒரு திரு மறமும் அமைந்துள்ளன. பதினேராந் திருமுறை முழு வதிலும் சிறந்த கவிதை என்றும், பக்திப் பெருக்குடன் கூடிய சிறந்த கவிதை என்றும் பார்த்தால் பட்டினத்துப் பிள்ளையாரின் பாடல்கள் முதலாவதாக நிற்கும்.

### நம்பி பாடல்

நம்பியாண்டார் நம்பியின் 10 நூல்களுள் ஆறு திரு ஞானசம்பந்தர் பற்றியனவேயாகும். எனவே அவரிடத்து இவர் மிகுந்த ஈடுபாடு கொண்டிருந்தார் என்பது வெளிப் படை. மேலும் ஞானசம்பந்தர் முதலியோர் பற்றிப் பாடிய திருத்தொண்டர் திருவந்தாதியில் இவர் கூறும் பல செய்திகளை சேக்கிழார் பாடவில்லை. நம்பி இராசராசன் காலத்தில் வாழவில்லை, முதலாம் ஆதித்தன் காலத்தவரே என்பதற்கு இதுவும் ஓர் சான்ருகும்.

### ஆதாரமற்ற தொகுப்பு

திரு. மு. அருணாசலம் அவர்கள் தம்முடைய தமிழ் இலக்கிய வரலாறு 11ஆம் நூற்றாண்டு என்ற நூலில் 329 ஆம் பக்கத்தில் "பதினோராம் திருமுறைப் பிரபந்தங்கள் இவைதாம் என்று சொல்லியதற்கு எந்தப் பழைய ஆதாரமும் இல்லை. முதலில் அச்சிட்டவர் இப்போதுள்ள பிரபந்தங்களை அச்சிட்டார். தொடர்ந்து இவையே பதினோராந் திருமுறை என்று வழங்கி வருகின்றன" என்று கூறியுள்ளார். இக் கருத்தை முற்றிலும் ஏற்றுக் கொள்வதுடன் இத் தொகுப்பு நம்பியாண்டார் நம்பியால் தொகுக்கப் பெறவில்லை; 13ஆம் நூற்றாண்டு வாக்கில் யாரோ தொகுத்தார் என்றுதான் நினையவேண்டியுளது; நாளாவட்டத்தில் ஏடெழுதுவோர் பலர் கைங்கரியங்களும் இதில் இடம் பெற்றிருக்கலாம்.

### முடிவுரை

இறுதியாக 9, 11ஆம் திருமுறைகள் எனப்படுபவை நம்பியாண்டார் நம்பியால் தொகுக்கப் பெறவில்லை என்பதும், அவர் இராசராசன் காலத்து வாழவில்லை, முதல் ஆதித்தன் காலத்தவர் என்பதும், 9 ஆம் திருமுறை தோன்றக் காளாமுகர் கொடுமையே காரணம் என்பதும் ஞானசம்பந்தர் ஏழாம் நூற்றாண்டில் தம் பாடல் மூலம் புரட்சி செய்ததுபோல 9ஆம் திருமுறையில் 1200இல் ஏற்பட்ட குகையிடிக் கலகம் போன்ற ஒரு புரட்சி ஏற்பட்டது என்பதும் விளங்கும்.

# 6

# பத்தாம் திருமுறை

## திருமந்திரம்

*மகாவித்வான் ச. தண்டபாணி தேசிகர்*

தெய்வத் தமிழ் நலங்கனிந்த சான்றோர்களே!

வணக்கம் பல.

இன்று நாம் திருமந்திரச் சிந்தனையிற் கலந்து களிக்கின்றோம்; அதன் தொடர்புரையாகச் சில மொழிகள் :

உலக வழக்கில் 'ஒன்றறிந்தவன் உத்தமன்; இரண்டறிந்தவன் பெரியவன்; மூன்றுமறிந்தவன் முழு ஞானி' என்றதொரு சொல்வழக்கு உண்டு. அது போலச் சமய உலகில் தன்னை மட்டும் அறிந்தவன் தருக்கன்; தன்னையுந் தடைகளையும் அறிந்தவன் தன்னலக்காரன்; தலைவனையும் அறிந்தவன் முழுஞானி என்ற ஒரு வழக்கிருக்கிறது.

தன்னையறியும்போது தடைகளையும் உணரத்தானே நேரும். ஒன்றொன்றை மட்டும் உணர இயலுமா என வினவலாம். ஆம்; மூன்றையும் உணருவான். நோயையுணருவான்; நோய்முதலை அதுதணிக்கும் வாயறிந்து தணிப்பான். தணித்தவுடன் தான் ஒரு இன்பமயன் என்று எண்ணுகிற நோயாளியைப் போலத் தன்னை உணர்வோடு கூடிய ஒரு பொருள் என்று உணருவான். தடைகளையுணர்ந்து நீங்கித் தன்னையே தலைவனாக எண்ணியிருப்பான். பற்ற வேண்டிய பற்றற்றான்பற்றினை அடையாமல் தன்னையே பற்றி நிற்பான். இவன் நிலையே ஒன்றொன்றைப் பற்றித் தான் கண்டனைத்து இவ்வுலகு என்ற தன்மையில் நிற்கும் நிலை.

இதற்குக் காரணம் இவன் உள்ளம், அன்பு நெறியாகிய ஆணிவேரும், அறநெறி அறிவு நெறியாகிய பக்கவேர்களும்

ஒக்க வளர்ந்த பிறகு வளராத ஊனமுடையது. அதனாலேயே கண்ட ஒன்றிலேயே காலூன்றி நிற்பதா யிற்று. இந்த நிலை சமுதாயத்தில் வளராதிருக்க — உண்மை ஓங்கக் காலத்தெய்வம் மூன்றற்கும் மூன்று நூல்களைத் தோற்றுவித்தது.

அவற்றுள் அறநெறி மனித மனத்தைக் கழுவித் தூய்மையுறுத்துவது. அன்புநெறி தலைவனிடத்திலே வழிப் படுப்பது. அறநெறி தெளிந்து ஆண்டவனுடைய அருளார முத வாரிதியில் என்றும் இன்புற்றிருக்கச் செய்வது. இம் மூன்று நெறிகளும் ஒன்றற்கொன்று துணையாய் உடனியங் குவன. அத்தகைய மூன்று நெறிகளுள் அறநெறிக்குத் திருக்குறளையும், அன்புநெறிக்குத் திருவாசகத்தையும், அறிவு நெறிக்குத் திருமந்திரத்தையும் அருளியது காலத் தெய்வம். இம் மூன்றிலே நம் சிந்தனை திருமந்திரத்தைப் பற்றியது.

### திருமந்திரப் பெருமை

ஒரு நூலின் அருமை பெருமைகளை அந்நூலும், நூற்பாக்களும் அக்கால நூல்களிலும் பிற்கால நூல் களிலும் போற்றப்பெறுவதைக் கொண்டேயறிய வேண்டும். திருமுறையாசிரியர்கள் அனைவரும் கல்வியறி வோடு கடவுட் கருணையால் விளைந்து கொண்டேயிருக்கும் அனுபவ ஞானமும் மிக்கவர்கள். ஆகையால் அவர்கள் உலாவுகின்ற அருளுலகமும் — அவற்றில் அவர்கள் காணும் காட்சிகளும் — அவைகளால் அவர்கள் நுகரும் இன்பமும் ஒன்றாகவேயிருக்கலாம். ஆனால் சொல் லாட்சியும், தொடர்களுங்கூட அப்படியே அமைந்திருக்கு மானால், அவர்களிற் காலத்தால் முற்பட்டவர்களின் மொழி அவர்களை அப்படியே கவர்ந்திருக்கிறது. அதனாலேயே அவர்கள் ‘முன்னோர் மொழி பொருளேயன்றி அவர் மொழியும் பொன்னேபோற்’ போற்றினராதல் வேண்டும் என்று துணியலாம்.

சில கருத்து மாறுபாடுகள் இருப்பினும் திருமந்திரம் காலத்தால் முற்பட்டது ஏனைய திருமுறைகளைக் காட்டிலும் என்பது ஓரளவு துணிவாதல் கூடும். திருக்குறள் காலத்

தால் இதனின் முந்தியதாகலாம். ஆதலால் திருமுறை கட்கும் திருக்குறளுக்கும் உள்ள ஒப்புமைகள் பலவற்றைக் கொண்டு திருமந்திரப் பெருமையைச் சாதிக்கலாம். ஆயினும் விரிவஞ்சி ஒவ்வொன்றிலும் கருத்துக்கொன்றும், சொல்லாட்சிக் கொன்றுமாகக் காட்டிப் பெருமையைப நினைவோம்.

**ஒப்பால் பெருமை**

'தன்னை யொப்பாய் ஒன்றும் இல்லாத் தலைமகன்' (திருமங். 7). இது சிறிது வாய்பாடு மாறி 'தனக்குவமை யில்லாதான்' (குற. 7) எனத் திருக்குறளிலும், "தன்னேர் பிறரில்லாத் தலைவன்' (சம். பதி. 26. பா. 2) என ஞான சம்பந்தர் வாக்கிலும், 'மற்றொருந் தன்னொப்பார் இல்லா தானை' அப்பர் வாக்கிலும் (6. 1-3) வருதலைக் காண் கிறோம். இதில் கருத்தோட்டமும் சொல்லாட்சியுங்கூட ஒத்துள்ளன.

மற்றொன்று,

'அந்தண்மை பூண்ட அருமறை யந்தத்துச்
சிந்தை செய்யந்தணர்' (திருமந்திரம் 234)

என்பது

அந்தணர் என்போர் அறவோர் மற்றெவ்வுயிர்க்கும்
செந்தண்மை பூண்டொழுக லான் (திருக்குறள், 30)

என்பதும் ஒன்றன் நிழல் ஒன்றாக அமைந்தவை.

வாயு மனமுங் கடந்த மனோன்மணி
பேயுங் கணமும் பெரிதுடைப் பெண்பிள்ளை
ஆயும் அறிவும் கடந்த அரனுக்குத்
தாயும் மகளுநல் தாரமு மாமே (திருமந்திரம், 1178)

என்பது

'எம்பெருமான் இமவான் மகட்குத் தன்னுடைய கேள்வன் மகன் தகப்பன்' என்ற திருப்பொற்சுண்ணம் 13ம் பாடலும், 'அவளத்தனும் மகனும் தில்லையான்' என்ற கோவை திருவாசகத்து 112ம் பாடற்பகுதியும் இணைதல் காண்க.

மற்றென்று, சத்திய ஞானனந்த அனுபவநிலை எங்ஙனிருந்தது என்பதைக் காட்டும் பாடல்.

பாலொடு தேனும் பழத்துள் இரதமும்
வாலிய பேரமு தாகும் மதுரமும்
போலுந் துரியம் பொடிபட உள்புகச்
சீலமயிர்க்கால் தொறுந் தேக்கிடுமே" (திருமந்திரம், 2831)

என்பதனை அப்பர்சுவாமிகள் 'பாலின் நெய் யாம்; பழத்தின் இரதமாம்' (6-15-1) எனல் காண்க.

அங்ஙனமே,

'காமம் வெகுளி மயக்கம் இவை மூன்றன்
நாமங் கெடக் கெடு நோய்' (360)

என்ற குறள்

'காமம் வெகுளி மயக்கம் இவை கடிந்து
ஏமம் பிடித்திருந் தேனுக் கெறிமணி
ஓமெனும் ஓசையின் னுள்ளே யுறைவதோர்
தாம மதனைத் தலைப்பட்ட வாறே' (2436)

என்ற திருமந்திரத்தில், வள்ளுவர் கூறியாங்கு நோய் கெட்டதேயன்றி, நாதங்கடந்த இடத்தில் விளையும் இன்பத்தையும் எய்தினேன் எனப் பயனும் விளக்கப் பெற்றமையைக் காண்கிறோம்.

பிற்காலத்துச் சங்க மருவிய நூல்களில் நாலடியாரில்,

"நார்த் தொடுத்தீர்க்கி லென்நன்றுந் தடக்கிலென்
பார்த்துழிப் பெய்யிலென் பல்லோர் பழிக்கிலென்
தோற் பையுள் நின்று தொழிலறச் செய்தூட்டும்
கூத்தன் புறப்பட்டக் கால்"

எனவரும் (யாக்கை 6) பாடல்

"காக்கை கவரிலென் கண்டார் பழிக்கிலென்
பாற்றுளிப் பெய்யிலென் பல்லோர் பழிச்சிலென்
தோற்பையுள் நின்று தொழிலறச் செய்தூட்டும்
கூத்தன் புறப்பட்டுப் போன இக்கூட்டையே"

என்ற 167ம் திருமந்திரத்தின் எதிரொலியாக முற்றும் ஒத்திருத்தலைக் காண்கிறோம்.

**மேற்கோளாட்சியால் பெருமை**

சிவப்பிரகாசப் பெருந்திரட்டு, குறுந்திரட்டு, ஞானவரணவிளக்கமாபாடியம், முத்தி நிச்சயப் பேருரை, சிவஞான மாபாடியம், சிவப்பிரகாசம்—மதுரைச் சிவப்பிரகாசனுர் உரை, சிவப்பிரகாசச் சிந்தனையுரை, வைராக்கிய தீபம், அவிரோத வுந்தியார் முதலியவற்றி உரை, பெருந்தொகை இவைகளில் மேற்கோளாக எடுத்தாளப் பெற்றுள்ளமையும் திருமந்திரப் பெருமை நாமுணர்தற்குரிய இரண்டாவது சான்ருகும்.

முத்தி நிச்சயப் பேருரையில், கமலை வெள்ளியம்பலவாண முனிவர், ‘பன்றியிட்ட குட்டிகள் போலாது குஞ்சரமீன்ற கன்றென ஆண்டுக்கொன்ருக அருளிய திருமந்திர மாலையாரிலும்’ எனப் பாராட்டுகிருர்.

தாயுமானவர், திருமூலர் தம் குருவின் மரபின் முதல் குருவாதலால் அவருபதேசமொழியாகிய,

திரையற்ற நீர்போலச் சிந்தை தெளிவார்க்குந்
புரையற்றி ருந்தான் புரிசடை யோனே (2995)

என்னும் மந்திரத்தை ஏற்று அதனைப் பயிற்சிக்குக் கொணர்ந்து ஒடுங்குநாளைத் தாம் எதிர்நோக்கியிருப்பதாகக் கூறும்,

‘திரையற்ற நீர்போலத் தெளிய’ எனத் தேர்ந்த
உரைபற்றி உற்று அங்கு ஒடுங்குநாள் எந்நாளோ ”

என்ற கண்ணியும்,

சக்கர வர்த்தி தவராச யோகியெனும்
மிக்க திருமூலன் அருள் மேவுநா ளெந்நாளோ

எனப் பேசும் எந்நாட்கண்ணியும் திருமூலர் பெருமையையும் திருமந்திரப் பெருமையையும் தெளிவாகக் காட்டுவனவாம்.

இதனுலேயே ஔவையாரும்,

“ தேவர்குறளும்......திருமூலர்சொல்லும்
ஒருவாசகம் என்றுணர் ”

என்றூர்கள்.

இங்ஙனம் பல ஒப்புமைகளைக் காணலாம். ஆகவே திருமந்திரம் சங்க இலக்கியங்களிலும் இடைக்காலத்துப் பக்திப் பனுவல்களிலும், பிற்காலத்துச் சங்க மருவிய இலக்கியங்களிலும் கருத்தொத்தும், சொற்ருெடர் ஆட்சி களை உதவியும் பலவகையில் கருத்து விளக்கத்திற்காக ஆளப்பெற்றும் பெருமை பெற்று விளங்கியதைக் காண் டோம்.

இனி அதன் அமைப்பைக் காண்போம்.

திருமந்திரம் கலி விருத்தத்தாலானது. கலி விருத்தப் பாடல்களை நச்சினுர்க்கினியர் கொச்சக ஒரு போகு எனக் கலிப்பாவின் வகைகளுள் ஒன்ருகக் கருதுவர். அதனுல் இது பா வகையாலும் பழமையானது என்பதற்கு ஐய மின்று.

யாப் பருங்கல விருத்திச் செய்யுளியல் உரையில்

“ இலைநல வாயினு மெட்டி பழுத்தாற்
குலைநல வாங்கனி கொண்டுண லாகா விலையான்
முலைநல கண்டு முறுவலிக் கின்ற
வினையுடை நெஞ்சினை வேறுகொ ளீரே ”

இம் மூலர் வாக்கு சீர் மிக்குவந்தவாறு கண்டு கொள்க, என்று செய்யுள் சீரால் ஆரிடச் செய்யுள் போல மிக்கு வந்ததற்கு எடுத்துக்காட்டப் பெற்றுள்ளது.

இதுவும் கலிவிருத்தத்தால் ஆகிய இந்நூலின் தொன் மையைக் காட்டுவதற்கு ஏற்றதாகலாம். ஆனுல் சற்றேறக் குறைய நூற்றுக்கு ஐம்பது விழுக்காடு வட சொற்கள் கலந்துள்ளமை இந்நூலின் தொன்மைக்கு இடையூருகின்றது. சமயம் தழுவிய நூல் ஆதலாலும் சமயக் குறியீட்டுச் சொற்கள் பெரும்பாலானவை ஆரியச் சொற்களே ஆதலாலும் தொன்மைக்கு இழுக்காகாது என்று எண்ணவும் கூடும்.

### பாடல் தொகை

சேக்கிழார் பெரியபுராணம் "மூவாயிரம்" என்கின்றது. திருமூலரும் "மூலன் உரைத்த மூவாயிரம் தமிழ்" எனக் (3046) கூறுகின்ருர். ஆகவே மூவாயிரம் தான் அவர் பாடியது என்பது துணிபு. பிற்காலத்து ஏடுகளிலும் ஆயிரத்துத் தொள்ளாயிரத்து இருபத்து இரண்டாமாண்டு பதிப்பாகிய பழம்பதிப்பு ஒன்றிலும் மூவாயிரத்து இருபத்திரண்டு பாடல்கள் காணப்படுகின்றன. இன்றுள்ள சமாஜப் பதிப்பின் பாடல் தொகை 3069. காசிமடத்துப் பதிப்பின் பாடல் தொகை 3081. இவை நிற்க, திருமந்திரப் பாடல்களை மேற்கோளாக எடுத்தாண்டு ஞானவரண விளக்கம், முத்திநிச்சயம் முதலான உரை நூல்களில் சற்றேறக்குறைய 70 பாட்டுக்கள் வரையில் அச்சுப்பதிப்புகளில் காணுத பாடல்கள் காணப்படுகின்றன. இவையன்றி ஒரே பாட்டு இரு முறை அல்லது மும்முறையாக 52 இடங்களில் வந்து மொத்தத் தொகையை மிகுத்துள்ளன. பதிப்புக்குப் பதிப்பு பாட பேதங்கள் மிகுதியாகக் காணப்படுகின்றன. இவை இன்றுள்ள திருமந்திரத்தின் பொதுவான அமைப்பு முறை.

துடிசைக் கிழார் சிதம்பரனுர் அவர்கள் ஓரளவு வந்த பாடல் மீளவும் வருவனவற்றை நீக்கிக் கழக வெளியீடாக அச்சிட்டுள்ளார்கள்.

### பகுப்பு முறை

இந்நூல் பாயிரமும் ஒன்பது தந்திரமும் ஆகிய பத்துப் பெரும்பிரிவுகளை உடையது. தந்திரம் என்ற பாகுபாடு தமிழ் நூல்களில் வேறு எவற்றிலும் காணப்படாத ஒன்று. ஆனல் வடமொழியில் ஆகமங்களுக்குத் தந்திரம் என்ற பெயர் வழக்கிலுள்ளது. ஒவ்வொரு ஆகமத்தின் தொடக்கத்திலும் "தந்திரா அவதார படலம்" என்று அந்தந்த ஆகமத்தின் தோற்றுவாய் அறிவிக்கப்படுகிறது. திவாகரம் போன்ற நிகண்டுகளில் தந்திரம் என்பது நூலின் பெயராகவே காணப்படுகிறது. தந்திரமென்ற ஆரியச் சொல்லுக்கு விரித்துரைப்பது என்று பொருள். ஆகவே விரித்துரைப்பதாகிய நூலின் பெயராகிய தந்திரம் நூற்

பகுப்புக்கும் பெயராய் இந்நூலில் ஆளப்படுகிறது. இதற்குக் காரணம் ஒவ்வொரு தந்திரமும் ஒவ்வொர் ஆகமத்தின் கருத்து என்ற கொள்கை நிலவுவதாற்போலும் எனக் கருதலாம். ஆசிரியர் திருமூலரே "தந்திரம் ஒன்பது சார்வு மூவாயிரம்" எனப் (பா. எண். 101) பகுப்பு முறையையும் உணர்த்துகிறார்.

### அதிகார அடைவு

ஒவ்வொரு பெரும்பகுப்பும் பலபல உட்பிரிவுகளாகிய அதிகாரங்களை உடையது. கடவுள் வாழ்த்து முதலாகத் தோத்திரம் ஈறாக 231 அதிகாரங்களை உடையதாக ஒரு பதிப்பு கூறுகிறது. சமாசப் பதிப்பு 239 அதிகாரங்களை உடையதாகக் கூறுகிறது. இவற்றை எண்ணிப் பார்க்கும் போது அதிகாரப் பகுப்புக்கள் ஆசிரியரே அமைத்ததாக இருக்க முடியாதோ என்று எண்ணத் தோன்றுகிறது. அல்லாமலும் அதிகாரத் தலைப்பிற்கு இயைபில்லாத பாடல்களும் ஆங்காங்கு காணப்படுவது இக் கருத்துக்கு அரண் செய்கிறது.

திருமூலர் சிவயோகத்திருந்து ஆண்டுக்கொன்றாகப் பாடினார் என்ற புராண வரலாற்றை நம்புகின்றபோது எண்ணத் தோற்றம் அதிகார அமைப்பு முறையிலே தோன்றியிருக்க இயலாது. ஆகவே அதிகாரப் பகுப்பு முறை யாராலோ பகுக்கப்பட்டது என்பது துணிபு.

எடுத்துக்காட்டாக 6ந் தந்திரத்து, திருநீறு என்ற அதிகாரத்தின் கீழ் உள்ள மூன்று பாடல்களில் முதல் பாடலும் இறுதிப் பாடலும் அதிகாரத்தோடு சிறிதும் இயைபில்லாதன (1665, 1667). இப்படிப் பல.

### ஆசிரியர்

இந்நூல் ஆசிரியர் திருமூலர் சித்தர் மரபைச் சேர்ந்தவர். செந்தமிழ் நாட்டிலே தொன்னாளிலே மனத்தை ஒடுக்கி ஒரு நிலை நின்று யோக வாயிலாகத் தெய்வத் தன்மை பெற்ற சான்றோர்கள் சித்தர் எனப்பட்டனர். மன வன்மையைப் பெருக்கித் தெய்வத் தன்மையை மேலே

பெற்றவர்கள் சித்தர்கள். டாக்டர் பேராசிரியர் தெ. பொ. மீ. அவர்கள் கலைக்களஞ்சியம் 4ந் தொகுதியில் பின்வரும் விளக்கத்தைத் தருகிறார்கள். "சித்தர்கள் என்றால் சித்தி பெற்றவர்கள். பேறு பெற்றவர்கள் வீட்டின்பம் பெற்றவர்கள். கடவுளைக் காணமுயலுகின்றவர்களைப் பக்தர்கள் என்றும் கண்டு தெளிந்தவர்களைச் சித்தர்கள் என்றும் தேவாரம் பிரித்துக் கூறும். அனுபூதி ஞானம் பெற்ற இவர்களை mystics என்று ஆங்கிலச் சொல் குறிக்கும். சித்தர்கள் அனுபவ நிலையில் அனைவரும் ஒத்த கருத்துடையர் ஆயினும் நெறிகளாலும் தெரிவிக்கும் முறைமையானும் வேறுவேறான முறைமையைக் கையாண்டவர்கள். பிற்காலத்தில் சித்தர்கள் முறை சாவா மூவா நிலையை அடைவதே என்ற அளவில் கருதப்பட்டதாயினும் முற்காலத்தில் காய சித்தி பெற்றுச் சிவஞான வாயிலாக இரண்டற்ற நிலையில் சிவத்தோடு ஒன்றியிருத்தலே சித்தர்களின் முடிவாகக் கருதப் பெற்றமையைத் திருமூலர் திருமந்திரம் தெரிவிக்கும். சித்தர்களில் அனுபூதி யடைந்தவர்கள் நாதர்கள் என்று அழைக்கப்பட்டனர். இதனைச் சிவானந்த நாதர், போதானந்த நாதர், முக்தானந்த நாதர், கோரக்கநாதர் என்பன போன்ற வழக்கு உண்மையை வரிவசியா ரகசியம் போன்ற நூல்கள் தெரிவிக்கும். அச் சித்த மரபில் சிவானந்த நாதராகிய ஸ்ரீகண்ட பரமசிவத்திடத்தில் உபதேசம் பெற்றவர் திருநந்திதேவர். அவரிடம் தன்னோடு எண்மர் உபதேசம் பெற்றதாகத் திருமூலர் தன்னுடைய குருபாரம் பரியப் பகுதியில்

நந்தி அருள்பெற்ற நாதரை நாடின்
நந்திகள் நால்வர் சிவயோக மாமுனி
மன்று தொழுத பதஞ்சலி வியாக்ரமர்
என்றிவர் என்னோ டெண்மரு மாமே (பா. எண். 67)

என்று கூறுகின்றார்.

ஆகவே திருமூலர் யோக வழி நின்று ஞானத்தை நண்ணிய நல்லாசிரியர் என்பதறியப்படும்.

### திருமூலர் வரலாறு

வடகயிலையில் வாழ்ந்த சிவயோகியார் ஒருவர், அகத்தியரைக் காண, தென்திசை வந்தார். திருவாவடு

துறைக்கு அண்மையில் வருகின்றபோது சாத்தனூரிலே மூலன் என்னும் இடையன் இறந்து கிடக்க அதற்காற்ருது பசுக்கள் கதறுகின்ற நிலையைக் கண்டார். கருணை, உள்ளத்தைக் கரைத்தது. பசுக்களின் துன்பத்தைப் போக்கச் சிவயோகியார் கூடுவிட்டுக் கூடுபாயும் முறையால் மூலன் உடலிற் புகுந்தார், பசுக்கள் மகிழ்ந்தன. மூல யோகியார் மாடுகளை அவரவர்கள் வீட்டில் சேர்ப்பித்துவிட்டு ஊர்ப் பொதுவிலுள்ள அரசர் மன்றம் ஒன்றில் தங்கிச் சிவ யோகம் பயில்வதானர். பழைய உடல் மறைந்தமையால் இந்த வுடலிலேயே வாழவேண்டிய இன்றியமையாமை ஏற்பட்டது. ஆதலால் திருவாவடுதுறையிலுள்ள படர் அரசின் கீழ் இருந்து சிவயோகத் தாழ்ந்து திருமந்திரமாலை 3000 அருளிச் செய்தார். மீட்டும் வடகயிலை சென்ருர் என்பது சேக்கிழார் பெரியபுராணம் தரும் வரலாறு.

இதற்கு வித்து 'எம்பிரான் திருமூலன் அடியார்க்கும் அடியேன்' என்னும் திருத்தொண்டர் தொகைப் பகுதி. அதன் முளை

"குடி மன்னுசாத்தனூர்க் கோக்குல மேய்ப்போன் குரம்பை புக்கு
முடி மன்னு கூனற் பிறையாளன் தன்னை முழுத் தமிழின்
படி மன்னு வேதத்தின் சொற்படியே வர விட்டென்னுச்சி
அடி மன்ன வைத்த பிரான் மூலனுகின்ற அங்கணனே"

(திருவந்தாதி)

என்னும் நம்பியாண்டார் நம்பி செய்த திருத்தொண்டர் திருவந்தாதி.

இங்ஙனம் வளர்ந்து வந்த வரலாற்றை ஒரு சிறு ஓவியமாக "கயிலாயத்து ஒரு சித்தர்" என்ற கவிதையில் தீட்டிக் காட்டியவர் உமாபதி சிவாச்சாரிய சுவாமிகள்.

இவ்வளவுக்கும் மூலமாகத் திருமூலரே தமது ஞான வாழ்வு தொடங்கிய நிலைமுதற் கொண்டு வரலாற்றைத் தம் கூற்ருகவே சித்திரிக்கின்ருர். "நாங்கள் எண்மர் நந்தி தேவனிடம் அருள் பெற்ருேம். நாதன் என்ற பட்டத்தையும் பெற்ருேம். அவன் அருள்வழி நின்று மூலனை நாடித் தென் திசையில் இருந்தோம். நந்தி வழிகாட்ட மந்திரம்

பெற்றேம். என் வழியிலே மாலாங்கன், இந்திரன், சோமன், பிரமன், உருத்திரன். கந்துருக்காலாங்கி, கஞ்ச மலையன் இந்த எழுவரும் வந்தனர். இவர்களில் முதல் நால்வரும் நாலு திசைகளிலும் சென்று நான் பெற்றதெல் லாம் நானிலம் பெறுக என்று அங்கங்கே யிருந்து அறம் உரைக்கலானுர்கள். நான் மட்டும் இங்கிருந்து சிவாகமங் களைத் தமிழ் செய்யலானேன். நான் புவனுபதி என்னும் செல்வியைப் போற்றினேன். அதனுல் வேதாகமங்களைத் தமிழில் செய்யத் திருவருள் தூண்டியது. "என்னை நன்ருக இறைவன் படைத்தான் தன்னை நன்ருகத் தமிழ் செய்யுமாறு" என் வாயிலாகத் தமிழ்ச் சாத்திரம் என் னும் மந்திரமாலையை உறைப்புடன் கூடி நின்று ஓத வைத் தான். ஆதலால் நான் சதாசிவன் ஆயினேன் என்று அறிவித்துக் கொள்கிருர். இந்த அகச்சான்றைக் கொண்டே சேக்கிழார் திருமூலர் வரலாற்றைத் தொகுத் திருக்கிருர்.

### வரலாறு கூறும் வேறு நூல்கள்

இவர் வரலாறு திருவாவடுதுறைப் புராணத்தும் செவி வழிச் செய்திகளிலும் திருக்கோடிக்கா ஸ்தல மான்மியத் திலும் சிறிது மாறுபாட்டுடன் காணப்படுகிறது. மாறு பாடுகள் மூலன் உடலிற் புகுந்தமையும், ஊரில் சில அற்புதங்களை நிகழ்த்திக் காட்டியமையும் அன்றி வேறு சிறப்பான நிகழ்ச்சிகள் இல்லை.

### துடிசைக்கிழார் பதிப்பு முகவுரையில்

துடிசைக்கிழார் சிதம்பரனுர் எழுதும் வரலாற்றில் திருமூலரது இயற்பெயர் சுந்தரநாதர் என்பதும், அவர் தோன்றி வளர்ந்தது பாண்டியநாடு என்பதும் அவர் கல்வி பயின்ற இடம் பொதிகை மலைத் தமிழ்ச் சங்கம் என்பதும் அது அகஸ்தியரால் அமைக்கப்பட்டது என்பதும் அதில் பயின்ற இவர் வடகயிலை சென்று நந்தி குருகுலத்தில் சனகாதி நால்வர், சிவயோக மாமுனி, மன்று தொழுத பதஞ்சலி, வியாக்ரமர் என்ற எழுவரோடு பயின்ருர் என்பதும் பின்னர் பதஞ்சலி வியாகர்மரோடு தில்லைவரை வந்து திருக்கூத்துக் கண்டு எண்ணில் யுகமிருந்து மீளவும்

கயிலை சென்ருர் என்பதும், பின்னர் ஒருக்கால் அகத்தியரைக் காணவிரும்பித் தென்நாடு போந்து திருவாடுதுறையில் தங்கினர் என்பதும்அப்போது பாடப்பட்டதே தமிழ் மூவாயிரமென்னும் திருமந்திரம் என்பதும் அதற்கு முன் சுந்தரநாதராக இருந்தபோது உபதேசம் முப்பதும், மந்திரம் முந்நூறும் அவரால் செய்யப்பட்டன என்பதும் ஆகிய குறிப்புக்கள் கூறப் பெற்றுள்ளன.

இவ்வரலாற்றுக்கு அவர்கள் காட்டும் ஆதாரங்கள்.

1. திருமூலர் தமிழ் மூவாயிரமேயன்றி உபதேசம் முப்பதும், மந்திரம் முந்நூறும் செய்தார். அதன் சிறப்புப் பாயிரத்தில்

"சுந்தர நாதன் சொல்லிய மந்திரம்
நந்தி யெங்நாதன் நாவார ஓதினன்"

என வரும்பாடலும்,

தமிழ் மூவாயிரத்துள் 'சுந்தரவாகமச் சொன்மொழிந் தானே' யென்றயிடத்தைச் 'சுந்தரன் ஆகமச் சொன் மொழிந்தான்' என்று திருத்திப் படித்த பாடலுமேயாகும்.

2. இந்தப்பாடமும், மந்திரமுந்நூற்றுப் பாயிரப் பாடலும் கூறிய 'சுந்தரன்' என்ற சொல்லாட்சி பாண்டிய நாட்டு வழக்கென ஊகித்து, சோமசுந்தரக் கடவுள், சௌந்திர பாண்டியன், அழகன் என்ற வழக்காறுகளைத் துணைக்கொண்டு இவர் பாண்டியநாட்டிற் பிறந்தவர் என்ருர்கள்.

3. இதிலிருந்து விளைந்து வளர்ந்த வரலாறே சுந்தர நாதர் பொதிகைக் குருகுலத்தில் பயின்ருர், கயிலைக் குருகுலம் சென்ருர் என்பன.

4. மீண்டு வந்ததும், தில்லைக்கூத்துக் கண்டதும் "தப்பிலாமன்றில் தனிக்கூத்துக் கண்டபின், ஒப்பில் எழுகோடியுகம் இருந்தேனே" என்ற 74வது திருமந்திரம் செய்த உதவி.

5. அதன்மேல் விளைந்த கற்பனை சுந்தர நாதர் வட கயிலை சென்று மீண்டும் பொதிகைக்கு வழிக்கொண்டு வந்தார் என்பது. அதன் மேலுள்ளவை சேக்கிழார் கூறும் வரலாறுகளே.

இத்தனை வளர்ச்சிக்கும் காரணமான 'மந்திரம் முந்நூறு' என்ற நூல் திருமூலராற் செய்யப் பெற்றதொன்ருயின் தெய்வச் சேக்கிழார் பெருமான் கூருமல் விட்டிருப்பாரா. திருமூலரும் ஒன்பதாந்தந்திரத்து இறுதியில்,

" மூலன் உரைசெய்த மூவாயிரந் தமிழ்
மூலன் உரைசெய்த முந்நூறு மந்திரம்
மூலன் உரைசெய்த முப்பது உபதேசம்
மூலன் உரைசெய்த மூன்றும் ஒன்ருமே " (3046)

என்ற பாடலில் உபதேசம் முப்பது, மந்திரம் 300, மூவாயிரந் தமிழ் மூன்றும் வேறு வேறு நூல்களல்ல. மூன்றும் ஒன்று தான், அவை மூலனுலேயே செய்யப்பெற்றவை, என்று சொல்லியிருக்க வேண்டாமே :

தமிழ் மூவாயிரத்தில் முதல் முப்பது பாடல்கள் உபதேசமாதலையும், மந்திரப்பகுதி மட்டும் நான்காந்தந்திரத்து மந்திரம் இன்றுள்ள பாடற்ருெகைப்படி முந்நூற்றறுபத்திரண்டாதலையும், நான்காந்தந்திரத்தில் ஏனைய பகுதிகளில் ஒன்ருகிய அருச்சனை, மந்திரங்கள் சித்தியா வதற்குச் செய்யப்பெறும் வழிபாட்டையும், நவகுண்டப்பகுதி ஓமகுண்டவகைகளையும், ஆகுதிசெய்யும் முறைகளையும், பூரண சக்தியும் ஆதார ஆதேயமும், தியானம், ஆருதார வழிபாடுகளையும் அறிவிப்பனவாக, மந்திரப்பகுதிக்குத் துணையாக அமைந்தனவேயன்றி மந்திரங் கூறுவன அல்ல. ஆகவே மந்திரம் 369 பாடல்களே. ஏனையவையுஞ் சேர்ந்து மூவாயிரம் ஆயிற்று. அதனுலேயே சேக்கிழார் பெருமான் 'முன்னிய அப்பொருண்மாலைத் தமிழ் மூவாயிரஞ் சார்த்தி' என அறுதியிட்டுக் கூறினுராதல் வேண்டும்.

மந்திரம் முந்நூறு என்ற நூல் திருமூலர் செய்ததாக இப்போது அச்சாகிக் கொண்டிருக்கிறது. அது திருமூலர் செய்த நூலாயின், கருப்பத் திருமந்திரம், வைத்தியப்

பகுதி இருப்பதாகச் சொல்லப்பெறும் திருமூலர் எண்ணுயிரம், பதினெண் சித்தர் பாடலில் ஒன்ருகிய திருமூலர் ஞானம் என்ற நூல்களும் அவர் செய்தனவாதல் கூடும். துடிசைக்கிழார் அவர்களே பிற்கூறியவற்றை அவர் செய்தனவாகக் குறிப்பிடாமை சிந்தித்தற்குரியது. மந்திரமுந் நூருகச் சொல்லப் பெறும் நூலிலும் பெரும் பகுதி நாலாந் தந்திரப் பாடல்களும் சிறுபான்மை வேற்றுப்பாடல்களும் விரவியுள்ளன. கலிவிருத்தமாகிய சொக்கச ஒருபோகு பாடுதற்கு எளிதாய் இருத்தலின் பிற்காலத்தோர் பலர் திருமூலர் பெயரால் பல நூல்களை எழுதினர் என்றல் இழுக்காகாது.

ஆகவே சேக்கிழார் கூருத, சுந்தரநாதன் என்ற இயற் பெயரை அடியாகக் கொண்டு எழுந்த கற்பனைகள் அனைத்தும், வரலாற்றுப் பிணைப்புக்கள் அனைத்தும் ஏலாக் கூற்ருயின.

### திருமூலர் காலம்

திருமூலர் காலத்தை ஒருவகையான் ஆராய்ந்து கி. மு. 6000 முதல் கி.மு. 100 வரை வாழ்ந்து திருக்கயிலைக்குச் சென்ருர் என்பர் துடிசைக்கிழார் அவர்கள். அவர்கள் கூறும் காரணங்கள் :

1. சுந்தரநாதர் பதஞ்சலி, வியாக்ரபாதர் இவர்களுடன் பயின்றவர்; வியாக்ரபாதர் வசிட்டருடைய தங்கையின் கணவன். வியாக்ரபாதர் மகன் உபமன்யு. வசிட்டர் தசரத மன்னனுடைய குலகுரு. ஆகவே வசிட்டர் இராமாயண காலத்தவர். இராமாயண காலம் கி.மு. 6000 என்பது ஆராய்ச்சியாளர் முடிவு. திருமூலர் காலமும் அது என்பது.

2. திருமூலர்

“ ஓதும் எழுத்தொடு உயர்க்கலை மூவைந்து
ஆதியெழுத்தவை ஐம்பதோ டொன்றென்பர் (963)
அந்தமும் இன்றியே ஐம்பத் தொன்ருயதே” (946)

என்பதால் தமிழாகமஞ் செய்த தமிழ்முனிவர் காலத்தே உயிரெழுத்துப் பதினைந்தும் மெய்யெழுத்து 36ம் இருந்திருத்தல் வேண்டும் ; அதுவும் வட்டெழுத்து வழங்கிய

காலத்தில் வாழ்ந்தவராதல் வேண்டும். தொல்காப்பியர் காலத்தில் உயிரும் உடம்புமாக முப்பதெழுத்துத்தமிழ் எழுத்தாக வழங்கிய காலம். அதுவும் சதுர எழுத்து வழங்கிய காலம். இதற்கு முந்தியது திருமூலர் காலம். இடைச் சங்க காலம் கி.மு. 6805—3105 வரை. இடைச்சங்ககாலத்தில் தொல்காப்பியர் எழுத்துச் சீர்திருத்தம் செய்து முப்பதாக்கினர். தொல்காப்பியர் காலம் கி.மு. 6000. ஆதலால் திருமூலர் கி.மு. 6000க்கு முந்தியவர் என்பது.

3.

> “ வெருக்குருவாகிய வேதியர் சொல்லும், கருக்குருவாகிய கண்ணனுமாமே ” (53)

என்று திருமூலர் கண்ணன் வேடர்களாற் கொல்லப்பெற்று வேகாது கருகிய உடலோடு வெள்ளத்தில் அடித்துச் செல்லப்பட்டதையும், வேதியர்கள் கரையேற்றிக் கோயில் சமைத்து வழிபட்டதையும் நினைவூட்டுகிறர். அதனல் திருமூலர் கண்ணன் இறந்தகாலமாகிய கலியுகத் தொடக்கத்தில் வாழ்ந்தவராதல் வேண்டும். அது இற்றைக்குச் சுமார் 5000 ஆண்டுகட்கு முன் என்பது.

4. சுந்தரநாதர் அதன் பின் அகத்தியரைக் காணவந்து திருமூலனுகி மூவாயிரத்தைச் செய்திருத்தல் வேண்டும். அந்தக்காலம் கி. மு. 3100. துறைசையில் மூவாயிரம் ஆண்டு வாழ்ந்து தமிழ் மூவாயிரம் செய்தார். இங்ஙனம் வாழ்ந்து அவர் வடகயிலே சென்றது கி. மு. 100ல் என்று வரையறை செய்வார்கள். இவர்கள் கணக்குப்படி மூலர் சுந்தரநாதராக இருந்த கால முதல் மூலனுய் முத்தியடைந்த காலம் வரையில் 5900 ஆண்டு வாழ்ந்தார் என்று ஏற்படுகிறது.

### வ. செங்கல்வராயபிள்ளையவர்கள் கருத்து

சேக்கிழார் மூலர் துறைசையிலிருந்து ஆண்டுக்கொரு பாட்டாக மூவாயிரம் பாடினர் என்று கூறுவதால் கி. பி. 9 நூற்றுண்டுக்கு மேல் கி. மு. 2100க்கு முன்னரும் வாழ்ந்தார் ஆதல் வேண்டும்.

ஞானசம்பந்தர் திருவாவடுதுறைக்கு வந்தபோது பலி பீடத்தருகில் தமிழ் மணம் கமழுவதாகச் சொல்லித்

தோண்டிப்பார்க்கச் செய்து திருமந்திரச் செப்பேட்டை எடுத்து விளக்கங்கண்டனர் என்ற செவிவழிக் கதையால் திருமந்திரக் காலம் 7ம் நூற்ருண்டுக்கு முந்தியதாகலாம் என்பார்கள்.

இவற்றிலுள்ள கற்பனை—ஊகம் இவற்றைக் கழித்து, அகச்சான்றும், சேக்கிழார் திருவாக்குந் துணைக்கொண்டு நோக்கின் திருமூலர் மன்றுதொழுத பதஞ்சலி, வியாக்ரமர் இவர்களோடு பயின்றவர், தில்லைவந்து திருநடங்கண்டவர் என்ற உண்மை திருமந்திரத்தாலும் கோயிற்புராணம் முதலியவற்ருலும் உறுதிப்படுகின்றது. பதஞ்சலியுள் மாபாடியம் செய்த பதஞ்சலியும், யோகசூத்திரம் செய்த பதஞ்சலியும், உளராதலின் அவரின் இவருடன் பயின்ருர் வேறு எனற்கு, ‘மன்று தொழுத’ என அடைகொடுத்ததைக் கொண்டு ஆராயின் தில்லைத் திருநடனத்தை முதன்முதற் கண்டு, பதஞ்சலியார் இவருடன் உறைந்தவராதல்வேண்டும். பதஞ்சலியாருடன் வாழ்ந்த முனிவர் வியாக்ரபாதர். இவர் இரணியவர்மனைக்கொண்டு தில்லைத் திருக்கோயில் திருப்பணியை முதன்முதற் செய்வித்தார் என்று கோயிற்புராணங் கூறுகிறது. திருநாவுக்கரசர் தில்லைக்கு எழுந்தருளியபோது தில்லைக்கோயில் செப்பமாக இருந்ததாகத் தெரிகிறது. ஆதலால் இரணியவர்மன் அப்பர் காலத்திற்கு முற்பட்டவனுதல் வேண்டும். இவனே சிற்றம்பலத்தை முதலிற் பொன் வேய்ந்தான் என்றும் வரலாற்ருசிரியர்கள் கருதுகிருர்கள்.

இவனைப் பற்றிய கல்வெட்டொன்று காஞ்சிபுரம் வைகுந்தப் பெருமாள் கோயில் கருவறையின் தென்புறச் சுவரில் உள்ளது. அதில்,

“பல்லவ வமிசம் பிரமனை முதல்வனுகக் கொண்டு பரம்பரையாக வருவது. அவ்வமிசத்தில் வந்த பரமேசுரப் போத்தரையன் சொர்க்கம் சென்ற பிறகு நாடு சீர்குலைய அமைச்சர்கள் தில்லைக்கு வந்து இரணியவர்மனை அரசு தாங்க அழைத்தனர். இரணியவர்மன் தன் குலத்தவர்களையழைத்து ‘ராஜ்யாபிஷேகம் செய்து கொள்கிறீர்களா’

என்று கேட்டான். அனைவரும் மறுத்தனர். தன் மக்களாகிய ஸ்ரீ மல்லன், ரணமல்லன், சங்கிராமமல்லன், பல்லவ மல்லன் ஆகிய நால்வரையுங் கேட்டான். முதல் மூவரும் மறுத்தனர். பல்லவ மல்லனாகிய பரமேசுவரன் மட்டும் ஒப்பினான். அப்போது அவனுக்கு வயது பன்னிரண்டு. அதனால் அவனை அனுப்ப இரணியவர்மன் சம்மதிக்கவில்லை. தரணிகொண்ட கோசர் பல்லவ மல்லனுடைய உடற் கூற்றியல்பைக் கண்டு இவனே தக்கவன் எனக் கூறித் தேற்றினார். பல்லவ மல்லனுக்குக் காஞ்சியரசை நல்கினார்கள். சில ஆண்டுகளில் அவன் போரில் இறந்தான். அதனைக்கண்ட இரணியவர்மனே தரணி கொண்ட கோசர் படையுதவ அவருடன் காஞ்சி ஆட்சியை ஏற்றான். இரணியவர்மனுக்கு நந்திவர்மன் எனப் பெயர் சூட்டினர். இரணியவர்மன் காஞ்சிபுரத்தை தலைநகராகக் கொண்டு பல்லவ நாட்டையாண்டு வந்தான்" என்ற வரலாறு காணப் படுகிறது. (S. I. I. Vol. IV 135 A.R. No. 37 of 1888) இவனைக் கோயிற்புராணம் ' தில்லையில் வியாக்ரபாதரால் முடிசூடப் பெற்றான். இவன் சோழநாட்டையாளுங் காலத்தில் இவன் தந்தை வசிட்டரையனுப்பிப் பல்லவ அரசையும் ஏற்றுக் கொள்ளும்படி வற்புறுத்தப் பெற்றான். இவன் வியாக்கிர பாதருடைய ஆணையின்வண்ணம் சென்று பல்லவ நாட்டையும் ஆண்டான்' என்று கூறுகிறது. ஆனால் இவன் பெயர் அரசர் வரிசையில் இடம் பெறவில்லை. இவனுடைய நான்காம் மகன் பல்லவ மல்லனே நந்திவர்மன் எனப் பட்டந் தாங்கி ஆண்டான்.

இந்த நந்திவர்மன் இரண்டாம் நந்திவர்மன் என்றும் அவன்காலம் கி. பி. 710-775 என்றும் பல்லவர் வரலாற்றில் டாக்டர் இராசமாணிக்கனார் கூறுகிறார்கள். ஆகவே திருமூலர் தில்லையில் வியாக்கிரமருடன் வாழ்ந்த காலம் கி. பி. 710-775 ஆகலாம் என்று துணியலாம். (டாக்டர் மா. இராசமணிக்கனார்—பல்லவர் வரலாறு பக். 172 முதல் 175 முடிய).

அன்றியும் திருமூலர் நான்காந் தந்திரத்து அசபை யென்னும் பகுதியில் " ஆமே பொன்னம்பலம் அற்புதம் ஆனந்தம் " (887) தேவருறைகின்ற சிற்றம்பலம் என்றும்,

..............சிதம்பரம் (886) என்றும் சிதம்பரத்தில் தென்பொது பொன்வேய்ந்துள்ளமையைக் குறிக்கின்ருர். தில்லைக்கோயில் முதன்முதற் கட்டிப் பொன்வேய்ந்தவன் இரணியவர்மன் என்று காஞ்சிக் கல்வெட்டும், கொற்றவன் குடி, தண்டந்தோட்டம் பட்டயங்களும் சொல்லுகின்றன. ஆகவே திருமூலர் இரணிய வர்மன் காலத்தவராகவோ அல்லது சற்றுப் பிந்தியவராகவோ இருக்கலாம். நீண்ட காலம் யோக சாதனையால் வாழ்ந்தவராகக் கொண்டாலும் இவர் கி. பி. மூன்ரும் நூற்ருண்டுக்கு முன் வாழ்ந்தவர் என்பது உறுதியாகாது. ஆகவே முதல் நூற்ருண்டில் வாழ்ந்த வள்ளுவர், மறைமலையடிகள் கருத்துப்படி மூன்ரும் நூற்ருண்டினராகவோ — அதற்குச் சிறிது பின்னராகவோ கருதப்பெறுகின்ற மாணிக்கவாசகரும் திருமூலரும் ஏறக் குறைய நானூறு ஆண்டுகளுக்கிடையில் வாழ்ந்தவர்கள் எனலாம்.

அதனுலேயே நூலமைப்பு முறையில் மூவருக்கும் ஓரளவு ஒற்றுமை நிலவக் காண்கிருேம். வள்ளுவர் பாயிரத்தில் கடவுள் வாழ்த்து நூல் வாழ்வதற்குரிய வாழ்த்தாக அமையாமல் கடவுளை வாழ்த்துதல் மக்கள் மேற்கொள்ள வேண்டிய சிறந்த அறன் எனக் கூறப் பெற்றிருப்பது போலத் திருமூலர் கூறும் கடவுள் வாழ்த்தும், கடவுளியல்பு, முதன்மை, அவனேடு உறவு கொள்வதன் இன்றியமையாமை, அன்புசெய்யுமுறை, பயன் இவற்றை உணர்த்தி அமைகிறது. அதுபோலவே திருவாசகத்தில் 'நமச்சிவாய வாழ்க' என்னும் சிவ புராணக் கலி வெண்பா வாழ்த்தும் வணக்கமும் பயனும் உணர்த்துவதாக அமைந்துள்ளது. இங்ஙனம் அமைப்பு முறையிலும் மெய்ப்பொருளியலை விளக்கும் முறையிலும் இம்மூன்று நூலினும் ஒத்த உணர்வுகள் பலவற்றைக் காணலாம்.

### தமிழாகமம் எழுந்த சூழ்நிலை

சமுதாயம் அரசர், அந்தணர், வணிகர், வேளாளர் என்ற நால்வகையினதாக இருப்பினும் திருமூலர் அந்தணர் ஒழுக்கம், அரசாட்சி முறையிரண்டை மட்டும் விதந்துகூறி ஏனைய ஒழுக்கங்களை எல்லாருக்கும் பொதுவாக உரைக் கின்ருர்.

அரசன் கற்றவனாக இருத்தல் வேண்டும். அவன் கடமை நாட்டில் தவம், தானம் முதலியவற்றிற்கு இடையூறு நேராமற் காத்தல். போலித்துறவிகளும் போலியந்தணர்களும் வாழாமற் காத்தல் வேண்டும் (240, 241). ஞானியரல்லாதாரை ஞானிகளாக்குதல் வேண்டும். அங்ஙனமே போலியான சித்தர் யோகர் இவர்களாலும் நாட்டிற்கு நலிவு வராமற் காப்பது மன்னவன் கடமை என்கின்றார்.

அங்ஙனமே அந்தணரிலக்கணங்கூறி, அவர்கள் பயிலத்தக்க வேதாந்த ஞானம் வேட்கை யொழிந்த இடமே, அந்த அனுபவங் கைவராத அந்தணர் அணியும் நூல் வெறும் பஞ்சுதான், சிகை கேசந்தான் என்று இழிவுரைக்கின்றார். இவை முதலான நிகழ்ச்சிகளால் திருமூலர் காலத்து மரபுவழிப் பெருமையும், உரிமையும் பேணப்பெற்றமையால், உண்மையாக மெய்யுணர்ந்தாரும் யோக ஞானவொழுக்கமுடையாரும் பேணப்படாத நிலை நிலவியதாகலாம். ஞான முதிர்ச்சியல்லது பரிபாகம் உயிருக்கேயன்றி அதுபோர்த்துவந்த போர்வையாகிய உடலுக்கு அன்று என்பதையும், எப்பொருள் யார்யார் வாய்க்கேட்பினும் அப்பொருள் மெய்ப்பொருள் காண்பதேயறிவு என்பதையும் விளக்க, சிவயோகியாகப் பரிபாக முற்ற ஆன்மா மூலனுடலிற் புகுந்து உயர்ந்த ஞானத்தை உலகிற்கு உதவத் திருவருள் துணைசெய்தது என்பதை எண்ண வைக்கிறது. அன்றியும் எத்தகைய உயர்ந்த கருத்துக்களையும் எம்மொழியிலும் தரலாம். மக்களுக்குப் பயன்தர வேண்டியதொன்றுதான் என்ற உண்மையை உய்ந்துயரத் தமிழில் ஆகமம் செய்ய வைத்தது திருவருள் என்ற சில கருத்துக்களை அவர் பாடல்களும் வரலாறும் காட்டுகின்றன.

உலகில் இட்டார் இடாதார் என இருவகையினருளர். அவருள் இட்டார் பெரியோர்; இடாதார் இழிகுலத்தோர்; ஈயாதான் செல்வம் எட்டிப் பழுத்தது போலாம்; செல்வத்துப் பயன் ஈதலேயாதலின் வட்டிக்கு வாங்கிப் பொருளையீட்டியவர் செல்வம் பயனின்றிக் கழிதலின் அது மண்ணுக்குத்தான்; பணத்திற்காகப் பலரைப் பணிந்து வாழ வேண்டாம். இறைவனையே ஏத்தி வாழுங்கள் என்பன

போன்ற நீதிகள் அவர் காலத்துச் செல்வர் நிலையைச் சித்திரிப்பன.

அறநூல்களில் அன்பெனப்படுவது தொடர்புடையார் கட் காதலுடையனுதல் அளவிலே நிற்க இவர் அன்பே சிவம்; அன்புடையார் அரனைக் காண்பர்; இறைவன் அன்புள்ளவர்களுக்கே அணைதுணையாவான் என்று அன்பு இறைவனிடந்தான் செலுத்தத்தக்கது என்பதை வற்புறுத்துகிருர்.

கற்ருேர்க்கழகு கடவுளைத் தொழுதல், பற்றிற் பரமனைப் பற்றி நிற்கக் கற்றவர்களே பேரின்பம் உறுவர் என, கற்றதனுலாய பயன் வாலறிவன் நற்ருளைத் தொழுதலே என்பதை வற்புறுத்துகிருர். இத்தகைய கருத்துக்களை எண்ணிப் பார்க்கும்போது திருமந்திரம் எழுந்த காலத்து மக்கள் வீணை சாதி சமய மொழிச் சழக்கில் அகப்பட்டுத் தடுமாறினர், அவற்றைப் போக்கவே இவர் தமிழ் மூவாயிரஞ் செய்தார் என்ற எண்ணம் வலியுறுகிறது.

மக்களோடு உறவு செய்யாத சமய நிலை உலவிய காலத்தே—வெறும் சடங்கு சம்பிரதாயங்களுக்கு முதன்மையும் பெருமையுந் தந்து உலகம் தடுமாறியபோது வேதாந்தம் கூறும் நெறி 'சிவனை நினைந்து குரு கூறும் சிவ நெறிதான்' (54) என்பதை விளக்கி, 'வேதமதாவது சிவனடி' தான் என்று தெளிவிக்கிறது. ஆகவே அறிவனுபவத்திற்கு வராமல் வெறுஞ் சடங்குகளில் நிற்பதை வெறுக்கிறது.

இங்ஙனம் வரும் பல பகுதிகள் மரபு வழிப் பெருமையை மாற்றி அறிவு வழியனுபவமே சிறந்தது என்பதைத் தெரிவிக்கின்றன.

இந்நூலின் உட்கிடையாக நூல் முழுதும் ஊடுருவிக் கிடக்கும் கடவுள் உண்மை, கடவுளியல்பு, உயிரியல்பு, உயிர் இறையை அறிந்து அனுபவிக்கத் தடையாயிருக்கும் பாசம் இவற்றை நீக்கு முறைகளை உபதேச முப்பது வாயிலாகச் சுருக்கி உணர்த்திய ஆசிரியர், வெண்மையாடையிலன்றிச் சாயம் படியாதது போலத் தூய்மையான உள்ளத்

திலன்றி உபதேசங்கள் ஏறு என்பதை உளங்கொண்டு, முதற்றந்திரத்தில் நிலையாமை ஞானத்தை யாக்கை நிலையாமை, உயிர் நிலையாமை, செல்வம் நிலையாமை, இளமை நிலையாமைகளால் நன்கு வற்புறுத்திக் கூறிப்பின், கல்வி, கேள்வி, ஒழுக்கம் இவைகளைத் தெளிவிக்கின்றார். இங்ஙனம் முதல் தந்திரம் முழுதும் அகத்தூய்மை, புறத்தூய்மை, நம்பிக்கை இவைகளைப் பயக்கும் அறவுரையாக அமைகிறது. இடையிடையே இறைமையையும் உணர்த்திச் செல்கிறது.

புராண வரலாறுகள் இறைவனுடைய அளவிலாற்றலையுணர்த்தும் கதைகளாக மட்டும் போற்றப்பெற்ற சூழ்நிலையில் அவை இறைவனுடைய கருணையைக் காட்டுவன. அவைகளை மெய்ப்பொருளியல்பில் அணுகி அறிய வேண்டும் என்பதை வீரட்டும் எட்டு, இலிங்கபுராணம், தக்கன் வேள்வி, சக்கரப்பேறு முதலான பகுதிகள் உணர்த்துகின்றன. எடுத்துக்காட்டாக,

" அப்பணி செஞ்சடை யாதிபுராதனன்
முப்புரம் செற்றனன் என்பர்கள் மூடர்கள்
முப்புர மாவது மும்மல காரியம்
அப்புரம் எய்தமை யாரறி வாரே "

என்பதில் (343) முப்புரம் எரித்தான் இறைவன் என்ற வரலாறு நம்மை விட்டகலாது நிற்கின்ற மும்மலங்களைச் சுட்டான், நம்மைப் பொன்னாக்கினான், இன்ப நிலை எய்துவித்தான் என்கின்ற உண்மையை உணர்த்துவது என்கிறார்கள்.

இறைவன் ஐந்தொழில்களையும் இயற்றி ஆன்மாக்களை அதனுட்படுத்தித் தூய்மையுறுத்துகிறான். அதனால் ஒரு மலங்கழன்ற உயிர், இருமலங்கழன்ற உயிர், மும்மலமுங் கெட்ட உயிர் என உயிர்கள் மூவகைப்படுகின்றன. அவைகளின் பரிபாக நிலைக்கேற்ப உண்ணின்றும் குருவாக முன்னின்றும் கோயிலாகவும் விளங்கி உண்மைகளை உணர்த்துகிறான்.

உணர்த்தியும் உணர மாட்டாத உயிர்கள் காட்டிய் குருவையும் காட்டப்பெற்ற பொருளாகிய சிவத்தையும்

அடியார்களையும் இகழ்ந்து அழிகின்றன. அங்ஙனம் அழியாமல் உடையான் அடியார்களையே உறுதுணையாகக் கொண்டு உய்யுங்கள் என்றுணர்த்துகிறார். இவ்வளவும் இரண்டாந் தந்திரச் செய்திகள்.

உண்மையுணர்ந்து ஒடுங்கவேண்டுமானால் மனம் பக்குவம் பெறுதல் வேண்டும். மனமோ மூச்சுக்காற்றின் வழியே ஐம்புலன்களைப் பற்றி உலகில் உலாவந்து பற்றியதைப் பற்றி நில்லாமல் ஒன்றுவிட்டு ஒன்றாகத் தாவுவது. இத்தகைய மனத்தை நிலைக்கச்செய்வதற்காக இயமம், நியமம், ஆசனம், பிராணாயாமம், பிரத்யாகாரம், தாரணை, தியானம், சமாதி என்ற எட்டு யோக உறுப்புக்களைப் பயில வேண்டிய முறைகளையும், பயனையும், அணிமா, மகிமா முதலான அட்ட மாசித்திகளையும் உணர்த்துகிறார். பின்னர் உடம்பு உயிருக்கு வீடாதலால் உடம்பை அநித்தியம் என்று உதறித்தள்ளாமல் பாதுகாத்து அழியா உடம்பு பெற வேண்டிய வழிகளை உபதேசிக்கின்றார். இங்ஙனம் காயசித்தி பெற்றவர் பிராணாயாம முறையால் தத்தம் மரண எல்லையை அறிந்து அதிலிருந்து தப்பி மார்க்கண்டேயராக வாழலாம் என்கின்றார்.

அடுத்து வாரசரம் என்ற பகுதியில் வளர்பிறை தேய்பிறை நாட்களுக்கு ஏற்பக் கிழமைகள் ஏழிலும் விடியற்காலை துயில் எழுந்தவுடன் மூச்சோட்டம் எந்த மூக்கின்வழியாகத் துவங்கும், எவ்வளவு நாழிகையில் மாறும் என்பவற்றை விளக்குகிறார். சரம்பார்த்துச் செயல் தொடங்குவதே நம் நாட்டுப் பழம்பழக்கம். கேசரியோக முதலான இருக்கை வகைகள் சிலவற்றைச் சொல்லி மூன்றாந்தந்திரத்தை யோக முறைத் தந்திரமாக முடிக்கின்றார்.

நான்காந் தந்திரம் முழுதும் மந்திரம் மந்திரங்களில் அசபையாகிய அம்சம், பஞ்சாக்கரம், அதன்வகைகள், எழுத்துக்களை மாற்றி எண்ணுதல், அதன்பயன் திரிபுரை, புவனை நவாக்கரி மந்திரங்கள், இந்த மந்திரங்களுக்குரிய யந்திரங்கள், யந்திரங்களில் மந்திரங்களை அடக்கும் முறை, வழிபடும் முறை, இவைகளை யக வழிபாடாக்க மூலாதார முதல் ஆறாதாரங்களில் யந்திர வடிவாக — மந்திர வடிவாக

— ஒளியாக வைத்து எண்ணுமுறை, அதனால் விளையும் சித்திகள் இவைகளை யுணர்த்துகிறார்.

ஐந்தாந்தந்திரத்து, இவ் வழிபாட்டை மேற்கொள்ளும் சைவ பேதங்கள் சரியை கிரியை யோகம் ஞான மாகிய நால்வகை நிலைகள், இவைகளுக்குரிய மறுபெயர்கள், அவற்றால் அடையும் முத்திகளாகிய சாலோக சாமீபசாரூப சாயுச்சிய முத்திகள், ஆன்மா மலபரிபாகமுற்ற போது இருள்நீக்கமும் ஒளி வருகையும் உடனிகழ்வதுபோல நிகழ்வதாகிய திருவருட்சத்தியின் பதிவு, மந்தம் மந்தரம், தீவிரம், தீவிரதரம் ஆகிய அதன் நால்வகை நிலைகள், கடவுளின் உண்மை நிலையைக் கண்டு தெளிந்து, அகச்சமயம் ஆறினும் அவரவர் பொருளாய் நிற்பது பரசிவமே எனக் கண்டு அன்பு செய்தல் ஆகியவற்றை விளக்குகிறார்.

ஆறும் தந்திரத்து, கண்டு தெளிந்த பரம்பொருளை யறிந்து தெளிய ஆசான் இன்றியமையாதவன். ஆசானாக வருவானும் இறைவனே. ஆசான் அறிவித்தபடி நின்று, திருவடி ஞானம்பெற்று, அறிவானும் அறிவும் அறியப்படு பொருளுமான பேதநிலைதானேயகன்று நிற்றலே உண்மையான துறவு. இத்தகைய துறவுடையார் செய்வன யாவும் தவம். இத்தவமுடையார்க்கே ஞானம் கிட்டும். ஞானம் பெற்றார் சிவவேடந்தாங்கிய அடியார்களைச் சிவனெனவே காண்பர். சிவ வேடத்திற்குரிய சாதனம் திருநீறு. அதனைப் பூசிய சிவவேடத்தார் மனநிலையைக் கொண்டு இவர் தவ வேடத்தார், இவர் அவ வேடத்தார் எனப் பிரித்தறிந்து பின்பற்றுதல் வேண்டும் என்ற உண்மைகளை உணர்த்துகிறார்.

ஏழாந்தந்திரம் முழுதும் அண்டம் பிண்டம் அனைத்தையும் சிவகுருவாக அதாவது சிவலிங்கமாகப் பார்க்கும் பயிற்சிக்கு வழி கூறுகிறது. தனக்குள்ளே ஆறு ஆதாரங்களிலும் உணர்வு மயமாகச் சிவத்தைக் காணும் உபாயம் உணர்த்துகிறது. உயிர், உணர்வு ஒளியனைத்தும் சிவலிங்கமாதலைத் தெரிவிக்கிறது. அங்ஙனம் பெற்ற அனுபவத்தை அகத்தும் புறத்தும் பூசிக்கும் முறைமையைக் கூறுகிறது. இடையிலே சிவஞானி உண்ணுமுறை, பிச்சை எடுக்கு முறை இவைகளையும் சொல்லுகிறது. இறுதியிலே

சிவஞானி எந்த வகையிலும் விந்துவையும் சாத்தையும் நழுவ விடலாகாது, அங்ஙனம் நழுவச் செய்வது கூடா வொழுக்கம். அதனையறவே கடிதல் வேண்டும். எப்போதும் மலரணைந்த வண்டுபோல அநுபூதித் தேனையுண்டு ஆனந்தமாக வாழ்தல் வேண்டும் என அறவுரைகளைக் கூறியமைகிறது.

எட்டாந்தந்திரம், உடல் என்பது இரத்தம் முதலான ஒன்பது தாதுக்களின் கூட்டம். இது தூல உடம்பு. சூக்கும வுடம்பு சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம், புத்தி, மான், அகங்கரமாகிய எட்டன் கூட்டம். இதனைப் புரியட்ட தேகம் என்பர். இதன் அழிவும் ஆக்கமும் நனவில் கனுமறப்பது போலவும், நாகம் தோலுரித்தாற் போலவும் நிகழ்வன, மனிதன் போர்வை கிழிய மற்றொன்றைப் போர்ப்பது போல உயிர் ஒருடம்பு போக ஆணையின் வண்ணம் மற்றோருடம்பைக் கொள்ளும். ஆனாலும் இவ்வுடம்பை யழித்துக் கொள்ளலாகாது. நம்முடைய கழுத்துக்கு மேலே புருவ நடுவில் புத்தியை வைப்போமானால் உடம்பைப் பற்றிய எண்ணமே ஒழியும். இதுதான் உடல் விடல் என்பது என்ற உண்மைகளை யுணர்த்துகிறது. உடலொடு கூடிய ஆன்மா கனவு நனவு முதலான ஐந்து நிலைகளை எய்துகின்றன. அவை அனுபவ வேறுபாட்டால் கீழால் அவத்தை—மேலால் அவத்தை—நடுவில் அவத்தையென முத்திறப்படுவன. ஆன்மா மலத்திற் கட்டுண்டு நிற்கும் நிலையில் கேவல சகல நிலைகளையும், விடுபட்டு நிற்கும் நிலையில் சுத்த நிலையையும் எய்தும். சுத்தாவத்தை எய்திய உயிர் பரத்தோடு ஒன்றியே நிற்கு நிலை பராவத்தை. அது நின்மலாவத்தை எனவும் படும். அப்போது ஆன்மா அறிவே வடிவாய், முப்பாலும் பாழால் முடிவிலொரு சூனியமாய் அப்பாலும் பாழென்றிறந் திருக்கும். அந் நிலையில் எதன் குற்றமும் யார் குற்றமுந் தோன்றாது. நின்மலனாக விளங்கும். உலகம் அனைத்தையும் தன்னுட் கண்டு ஒன்றிலும் பற்றாமல் உயிர் இன்ப மயமாயிருக்கும் என்ற உயர்ந்த அனுபவ நிலையை உணர்த்துகிறது.

ஒன்பதாம் தந்திரம், இதுவரை உடனுயிருந்த உணர்த்தி வந்த குருவும் அவருறைகின்ற மடமும் தனக்குள்ளாகவே ஞான வடிவாய் நிற்க, ஆன்மா,

'கருடன் உருவங் கருதும் அளவில்
பருவிடம் தீர்ந்து பயங்கெடு மாபோல்
குருவின் உருவங் குறித்தஅப் போதே
திரி மலந் தீர்ந்து சிவனவ ளுகும். (2659)

அந்நிலையில் நுண்ணெழுத்தாய் ஒலியளவாய் உணரப் பெறும். ஓங்காரத்தோடு ஒன்றிய உணர்வாகிய பிரணவ சமாதி கூடும். சமாதி முற்றிய நிலையில் ஒளி புலப்படும். அவ்வொளி எங்கும் காணப்பெறும். எல்லாம் ஒளியாகத் தோன்றும். அந்த நிலையிலும் அநுபூதியடைந்த ஞானி திருவைந்தெழுத்து வடிவாகத் திருக்கூத்துக் கண்டு ஞான காயமே தானுய்க் கலந்த நிலையில் விளங்குவான்.

அப்போது உரைப்பானுகிய தானும் கேட்பானும் பிறனும் இன்மையால் சிவமான தனக்குள் தன்னனு பவத்தை கண்டு தானே வினுவித் தானே கேட்டுத்தான் தானுய் நிற்பன். இதுவே சூன்ய சம்பாஷணே. இங்ஙன மாகத் திருவடிப் பேறடைந்தோர் தன்மையை இலக்கண வகையாற் கூறி அவர்கட்கும், தோத்திரம் இன்றியமை யாதது, அது வாசனுமலம் தாக்காத வண்ணம் பாது காத்துத் தன்னிலையிற் ருழாது வைக்கும் என முடிகிறது. இவைகளே திருமந்திரம் கூறும் சுருக்கக் கருத்து.

இந்நூல் தந்திரம் மந்திரம் உபதேசம் என முப்பகுதிப் படும் எனத் திருமூலரே கூறுகிருர். தந்திரம் என்பது செயல்முறைகளே விளக்கும் கர்மபாகம். மந்திரம் என்பது கருத்தூன்றலாகிய உபாசனேப்பகுதி. உபதேசம் என்பது ஞானக்கேள்வி. இப் பகுப்பின் படியே திருமந்திரத்து முதல் மூன்று தந்திரங்களில் கன்மபாகமாகிய தந்திரம் கூறப்பெறுகின்றது.

நான்கு ஐந்து ஆறு என்ற மூன்று தந்திரங்களால் உபாசனேப் பகுதியாகிய மந்திரங்களும் ஏழு எட்டு ஒன்ப தாகிய மூன்று தந்திரங்களால் ஞானபாகமாகிய உபதேசங் களே கூறப்பெற்றுள்ளன எனலாம்.

கன்மபாக அறிவால் பாசஞானத்தை யகற்றி, மந்திர மாகிற உபாசனுபாக அறிவால் பசுஞானத்தையும் கடிந்து,

உபதேசபாகத்தால் சிவஞானம் பெற்று ஆன்மாக்கள் உய்ய வேண்டும் என்பதை விளக்கிச் செல்கிறது.

**திருமந்திரம் மொழிபெயர்ப்பா ? முதனூலா ?**

திருமந்திரம் விசுவநாதப்பிள்ளை அவர்கள் பதிப்பின் முகவுரையில் டாக்டர் வி. வி. ரமணன் எம். ஏ., அவர்கள் 'மந்திர மாலிகா' என்று வடமொழியில் ஒரு நூலுண்டு, அதன் மொழி பெயர்ப்பே இது என்கின்றார்.

முப்பதாண்டுகளாக வடமொழிப் பேரறிஞர்களிடமும், கையெழுத்துப் புத்தகசாலையிலும் ஆய்ந்தவரையில் இத்தகையதொரு நூலிருந்ததே இல்லை என்ற முடிவு கிடைத்தது. ஆகவே அதன் மொழிபெயர்ப்பு இது என்பது இதன் பெயராகச் சேக்கிழார் கூறு 'திருமந்திர மாலை' என்ற ஆட்சியிலிருந்துண்டான கற்பனை என்றே துணியலாயிற்று.

அன்றியும், வடமொழி நூலின் வழிவந்ததாயின், 'சிவபெருமான் அம்மையாருக்கு ஆரியத்தையும் தமிழை யும் ஒக்க அருளினார்' என்ற 65ம் மந்திரமும், 'வேதம் உரைத்தானும் வேதியன் அல்லன்' என்ற 52ம் மந்திரமும், 'பேர் கொண்டார்ப்பான்' என்ற 519ம் மந்திரமும் இந் நூலில் இடம் பெற்றிரா. ஆகவே இந்நூல் மந்திரமாலி காவின் மொழிபெயர்ப்பன்று என்பது துணிவு.

திருமூலர் கூறும்,

அந்தி மதிபுனை அரனடி நாடொறும்
சிந்தை செய்தாகமம் செப்பலுற் றேனே" (79)

"சுந்தர ஆகமச் சொன்மொழிந் தானே" (101)

என்ற பகுதிகள் இந்நூல் ஆகம வழி வந்தவை என்பதை வலியுறுத்துகின்றன.

மேலும்,

அஞ்சனமேனி யரிவையொர் பாகத்தன்
அஞ்சொடிரு பத்து மூன்றுள ஆகமம்
அஞ்சலி கூப்பி அறுபத் தறுவரும்
அஞ்சா முகத்தில் அரும்பொருள் கேட்டதே (57)

என்ற மந்திரம் சதாசிவமூர்த்தியினுடைய உச்சிமுகமாகிய ஈசானத்திலிருந்து இருபத்தெட்டாகமங்கள் தோன்றின என்பதை உணர்த்தும்.

அவற்றுள் ஒன்பதாகமங்களைத் தாம் பெற்றதாகக் கூறுகிறார் (62) பெற்ற ஆகமங்கள்

பெற்றநல் ஆகமங் காரணம் காமிகம்
உற்றநல் வீரம் உயிர்சிந்தம் வாதுளம்
மற்றவ் வியாமளம் ஆகுங்கா லோத்திரம்
துங்றநற் சுப்பிரம் சொல்லு மகுடமே

யென இவை என்றும் (63) இவைகளைத் தமிழ் செய்யுமாறு தன்னை படைத்தனன் என்றும் கூறுகின்றார். ஆகவே, திருமந்திரம்

முதல் தந்திரம்—காரணகமம்
2ம் தந்திரம்—காமிகாகமம்
3ம் தந்திரம்—வீராகமம்
4ங் தந்திரம்—சிந்தியாகமம்
5ங் தந்திரம்—வாதுளம்
6ங் தந்திரம்—வியாமளம்
7ங் தந்திரம்—காலோத்தரம்
8ங் தந்திரம்—சுப்ரபேதம்
9ங் தந்திரம்—மகுடம்

என்ற ஆகமங்களில் சாரமாக அமைந்தவையென முற்கூறிய 63ம் மந்திரத்தின் வரிசையில் ஒன்பது தந்திரங் களையும் எண்ணுவர் சிலர், இவற்றுள் வியாமளம்—சாக்த ஆகமம். சிவாகமம் அன்று. காலோத்திரம் உபாகமம் மூலாகமம் அன்று.

இவற்றுள்ளும் காரணம் காமிகம், சிந்தியம், சுப்ர பேதம் என்ற நான்கும் சிவபேதமாகிய பத்து ஆகமங் களில் உள்ளவை. ஏனையவை ருத்ரபேதமான பதினாறு. வியாமளம் சாக்தம். காலோத்தரம் உபாகமத்தில் ஒன்று. இவற்றின் சாரமாக ஒன்பது தந்திரங்கள் அமைந்தன என்பது மிக மிக ஊன்றி ஆராயத்தக்கதாம்.

அன்றியும் முதற்றந்திரம் காரணாகமசாரம் என்பது இன்று அச்சிட்டு வழங்குகிற காரணாகமத்தோடு இணைத்து எண்ணும்போது தெளிவிற் கிடையூருகிறது. இந்த வகையில் ஒப்புநோக்கியாய வேண்டிய பகுதிகள் மிகவுள்ளன.

இவையனைத்தையும் இணைத்து எண்ணுகிறபோது 'சீலாங்க வேதத்தைச் செப்பவந்தேனே' *(77)* "சுந்தர ஆகமச் சொல்மொழிந் தானே" *(101)* "தமிழ்ச் சாத்திரம் மிகாமை வைத்தான்" *(87)* என்பன முதலிய கூற்றுக்களைக் கொண்டு வேதாகமங்களின் பிழிவாக அவற்றின் கருத்தினையுட்கொண்டு, அனுபவமுங்கூட்டி ஆக்கப்பெற்ற தமிழ் முதனூல் திருமந்திரம், மொழி பெயர்ப்பு அன்று என்று துணியலாம்.

**பிற்காலச் சித்தர்கள் வாயுரைக்கும் இதற்கும் உள்ள ஒற்றுமைகள்**

சித்தர்கள் சித்தம் என்றும் ஒன்ருகத்தான் உள்ளது. சொல்லும் செயலுங்கூட அப்படித்தான். பெரும்பாலும் சொல்லக் கருதியவற்றை மறைத்து, படிப்பவர்கள் — கேட்பவர்கள் மனத்திலே ஒரு கிளர்ச்சியையும், விழிப்பையும் ஊட்டிக் கூறுவார்கள்.

எடுத்துக்காட்டாக,

"சிழ்க்கை விளைந்தது செய்வினை மூட்டிற்ற
ஆக்கை பிரிந்தது அலகு பழுத்தது
மூக்கினிற் கைவைத்து மூடிட்டுக் கொண்டுபோய்க்
காக்கைக்குப் பலி காட்டிய வாறே" (திருமந்திரம்: 147)

இதே கருத்துச் சிறிது மாற்றத்துடன்,

"சீயும் மலமும் செறிசெந் நீரும் நிணமும்,
சேர்ந்திடு துர்நாற்ற முடைக் குடம் ஈதுடைந்தால்,
நாயும் நரியும் பெரிய பேயுங் கழுகும்
நமதென்றே தின்றிடும்என் ருடு பாம்பே"

என்பர் பாம்பாட்டிச் சித்தர்.

"ஊரெலாங் கூடி ஒக்க அழுதிட்டுப்
பேரினை நீக்கிப் பிணமென்று பேரிட்டுச்

சூரையங் காட்டிடைக் கொண்டுபோய்ச் சுட்டிட்டு
நீரினில் மூழ்கி நினைப்பொழிந் தார்களே'' (145)

"ஆர்த்தெழு சுற்றமும் பெண்டிரு மக்களும்
ஊர்த்துறைக் காலே ஒழிவர் ஒழிந்தபின்
வேர்த்தலை போக்கி விறகிட் டெரி மூட்டி
நீர்த்தலை மூழ்குவார் நீதியிலாரே'' (157)

இவ்விருமந்திரங்களின் கருத்தையும் ஒரு சேர

மனையாளும் மக்களும் வாழ்வும் தனமும் தன்வாயில்மட்டே
இனமான சுற்றம் மயானம் மட்டே வழிக்கேது துணை?

என்ற பட்டினத்தார் பாடல் தாங்கி நிற்கிறது.

இங்ஙனமே ஆருதாரத்தையுணர்ந்துந் திருமந்திரமும், பட்டினத்தார் கூறும் பூரண மாலையில் வரும் ஆதார தியானமும் ஒருங்கெண்ணத்தக்கவை.

ஆதாரம் என்பது ஒளி சென்று பற்றி நிற்பதற்கு இட மாக நிற்பது. உடலுக்குள் முதுகந் தண்டைசுற்றிச் செல்லும் நரம்பு சுழிமுனை எனப்படும். அந்த நரம்பின் இடையிடையே முடிச்சுப் போல ஆறு நிலையங்கள் உள்ளன. அவற்றில் மேலெழும்பி வரும் ஒளி தங்கும். தடைபடும்; அதனை மீட்டும் பிராணாயாமம் என்னும் மூச் சடக்கி விடுமுறையிலும் சில கணம் நிறுத்தி வைக்கும் முறையாலும் தடையினின்றும் ஒளியை எண்ணத்தால் அதாவது தியானத்தால் மேலெழுப்பலாம். இங்ஙனம் எழுப்பி தலையுச்சி வரை செலுத்துமுறையே ஆருதார தியானம் எனப்பெறுவது. அவற்றை ஒரு மந்திரத்தாலே தொடுத்துணர்த்துகிறது, திருமந்திரம்.

'நாலும் இருமூன்றும் ஈரைந்தும் ஈராறும்
கோலிமேல் நின்ற குறிகள் பதினாறும்
மூலங் கண்டாங்கே முடிந்து முதலிரண்டும்
காலங் கண்டானடி காணலுமாமே'' (1764)

என்பது இது மூலாதார முதல் விசுத்தி வரையுள்ள ஐந்து நிலைகளையுங் கண்டு கடந்தால் ஆஞ்ஞையில் சதாசிவத் தைக் காணலாம்; களிக்கலாம் என்கிறது.

நாலு — மூலாதார சக்கரம். இது கடுவிடுகருவிக்குக் கீழே ஒரு விடும்விழிக்கு மேலே உள்ள — செந்நிறமான — நான்கிதழ்த் தாமரை வடிவானது. அதனால் நாலு என்ற எண்ணாற் குறிக்கப்பெற்றது. அந்த நாலு இதழ்களிலும் வ, ஶ, ஷ, ஸ என்னும் நான்கெழுத்துக்கள் பொன்னிறமாக விளங்கும் இத்தாமரையின் பொகுட்டில் நாற்கோண வடிவமும், எட்டுச் சூலங்கள் சூழ்ந்ததுமான — மஞ்சள் நிறமுடைய பூமி மண்டலம் உள்ளது. அதன் நடுவில் 'ணம்' என்ற பூமிவீய (பீஜ) எடுத்துள்ளது. அதில் குழந்தை வடிவான பிரமா இருக்கிறார். அத்தாமரையில் பதியைக் கிளறும் தீ உள்ளது. அத்தாமரை மலரின் நடுவில் அதாவது காணிகையில் மின்னல் வடிவான முக்கோணச் சக்கரம் ஒன்றுண்டு; அதன் நடுவில் காம வாயும், காம பீஜமும் உள்ளன. அவற்றின்மேல் கருநிறமான சுயம்பு லிங்கம் ஒன்றுண்டு. அதற்குமேல் மூன்றரை வளைய வடிவான குண்டலினி என்னும் சக்தியிருக்கிறது. அவ்விலிங்கத்தின் மீது தண்டவடிவான சித்தலைச்சக்தி விளங்குகிறது. இதன் விளக்கத்தைத் திருமூலர் பின்வரும் ஆறு திருமந்திரங்களால் விளக்குகின்றார்.

இவ்வண்ணமே ஆறு, பத்து, பன்னிரண்டு, பதினாறு, இரண்டு என்ற எண்கள் அவற்றையுடைய தாமரையிதழ்களையுணர்த்துவன. இவற்றால் அங்கங்குள்ள எழுத்து, அதிதெய்வம் முதலியவற்றை யறிந்து எண்ணவேண்டும். உடலுள் உறுப்புக்கள் அதாவது நாடிகள் அவ்வடிவில் உள்ளன என்பது கருத்தன்று. வடிவுடையதாக என்ன வேண்டும். அந்த எண்ணமே குதம் (மலவாய்) இதற்கு இரண்டு விரற்கிடைமேலுள்ள கருவாயிலையடுத்துள்ள உள்ளுறுப்பு. அதன்மேல் எட்டுவிரற்கிடை யளவில் அதாவது வயிற்றிடையுள்ள உறுப்பு. அதன் மேலது மேலே பத்து விரற்கிடையில் உள்ள இதயம். அதன்மேலது கழுத்து; அதன் மேலது புருவ நடு. இவையாயினும் முறையே மூலாதாரம், சுவாதிட்டானம், மணிபூரகம், அநாகதம், விசுத்தி, அஞ்ஞை என்ற பெயரால் யோக நூல்களில் வழங்கப்பெறும். இவைகளின் விளக்கம் எமது திருமந்திரவுரையில் இப்பாடலுக்கு யோகபிந்து பநிஷத், பாதஞ்சல யோக சூத்திரம், டாக்டர் அவிலான்

எழுதிய ஸர்ப்பண்ட் பவர் முதலிய நூல்களின் துணைக் கொண்டு ஓரளவு தரப்பெற்றுள்ளது. இதனையப்படியே

"மூலத்துதித் தெழுந்த முக்கோணச் சக்கரத்துள்
வாலைதனைப் போற்றுமல் மதிமறந்தேன் பூரணமே"

உந்திக்கமலத்துதித் தெழுந்த பிரமாவைச்
சந்தித்துக் காணுமல் தட்டழிந்தேன் பூரணமே

என்பன முதலாக ஆருதாரங்களை விளக்கி, இறுதியாக,

உச்சி வெளியை உறுதியுடன் பாராமல்
அச்சமுடன் நானும் அறிவழிந்தேன் பூரணமே"

என்று ஆருதாரங்களுக்கும் மேலதாகிய ஆயிர இதழ்த் தாமரை வடிவதாகிய சகஸ்ராரச் சக்கரத்தையும் அதில் ஒளி வடிவப் பரசிவம் விளங்குவதையும் உணர்த்தியமைகிறது பட்டினத்தார் பாடல்.

இங்ஙனம் சித்தர் பாடல்கள் மக்கள் கவிதைகளாய், எளிமையில் விளங்குவதாய் வழக்கு மொழியில் அமைந்து செய்யுணடையிலும், சொல்லாட்சியிலும் கருத்தமைதியிலும் மிடுக்குடைய திருமூலர் மூவாயிரத்திற்கு விளக்கந் தரும் துணைகளாய் அமைந்துள்ளன எனலாம்.

**திருமந்திரம் வற்புறுத்தும் சமயநிலை**

திருமூலர் கருத்து மனிதன் மனத்தால் உயருகிருன். அதற்குரிய முதல் உபாயம் மனவடக்க மனம் அடங்க ஒழுக்கம் இன்றியமையாதது. ஒழுக்கத்தினின்று மூச்சடக்க வேண்டிய முறைப்படி அடக்கிப்பழகிஞல் மனம் அடங்கும். அடங்கிய மனம் ஒன்றிலே உரைத்து நிற்க மந்திரங்களும், யந்திரங்களும் இன்றியமையாதன. வழிபாடுகளும் தேவை. இந்நிலையில் இடைவிடாது பழகி வருகின்றவனுக்கு என்ருவது குரு கிடைப்பார். அவர் வழியாக உபதேசங்கேட்டுத் தெளிந்து சரியை யாதி நான்கு நிலைகளில் நின்று பழக வேண்டும். இவற்றில் யோகநெறி யன்றி ஞானம் நிலைபெருது. ஞானம் என்பது தன்னையும் தலைவனையும் தடைகளையும் உணர்ந்து தடைகளையகற்றி வீடுபெற்றுத் தலைவன் தாளில் அடங்கிய அனுபவ அளவில் இன்பமயமாக இருப்பதே. அந்நிலை

யில் அறிவானும் அறியப்படுபொருளும், அறிவும் கலந் தொன்ருக விளங்குவதால் எல்லாம் சூனியமாய்த் தோன் றும். அந்நிலையில் உயிர் தம்மனுபவங்களைத் தானே விளுவி, தானே விளு விடை கண்டு தம்மளவில் அமைதி யுறும். அதனை உலகினர்க்கும் உணர்த்த வேண்டும் என்ற உள்ளம் படைத்த உயர்ந்தோர் சொல்லியுங் காட்டுவர். அதுவே சூனிய சம்பாஷணை. அதில் ஒன்றி ரண்டு

வாழையும் சூரையும் வந்திடங் கொண்டன;
வாழையிற் சூரை வலிது வலிதென்பர்
வாழையின் சூரையை வன்துண்டஞ் செய்திட்டால்
வாழையிடங் கொண்டு வாழ்கின்ற வாறே '' (2922)

இதனுள் வாழை—சிவானுபவம், சூரை—உலகானுபவம். வினைக்கீடான உலகத்து நுகர்ச்சியை நீக்கினுல் வாழை வளரும். வாழ வைக்கும் என்பது கருத்து.

அங்ஙனமே,

'' பட்டிப் பசுக்கள் இருபத்து நாலுள
குட்டிப் பசுக்கள் ஏழுள ஐந்துள
குட்டிப் பசுக்கள் குடப்பால் சொரியினும்
பட்டிப் பசுவே பனவற்கு வாய்த்தவே '' (2874)

இம்மந்திரம் ஆன்மத்தவம் 24ம், வித்யாத்வம் ஏழும் சிவ தத்வம் ஐந்துமாக 36 தத்வங்கள் உயிர்களை உய்விப்பதற் காக இறைவனுல் அருளப் பெற்றவை. அவற்றுள் வித்யா தத்துவங்களாகிய மாயை, காலம், நியதி, கலை, வித்யை, அவிசம், புருடன் என்னும் ஏழும், சிவதத்துவங்க ளாகிய சிவம், சக்தி, நாதம், விந்து, சுத்தவித்தை என்னும் ஐந்தும் குட்டிப் பசுக்களாக உருவகிக்கப் பெறுகின்றன. ஆன்ம தத்வங்களே 24ம் பட்டிப் பசுக்கள். வித்யாதத்துவங் களையும் சிவதத்துவங்களையும் துணைக்கொண்டு சிறிது அறிவு விளக்கம் பெற்று குருவினருளால் கரும்பைத் தேனைப் பாலையுண்டு முத்தியினிற் கலந்திருக்கவேண்டிய உயிர், ஆன்ம தத்துவங்களாகிய பட்டிமாடுகளைக் கட்டிக் கொண்டு வாளாக கெடுகின்றன என்கின்ருர். இங்ஙனம் 70 மந்திரங்கள் இப்போக்கில் அமைந்தவை.

இவ்வண்ணம் இந்நூல், முப்பொருளுண்மையைச் சாதனங்களையுணர்த்தி உயர் ஞானம் பெற்று உய்ய உபதேசிப்பதோடு, தத்துவஞானம் அன்புநெறி வழியாகத்தான் அடையவேண்டும்; படிமுறையிற் பயில வேண்டும்; பயின்று வீடுபேறடைந்தாலும் அவர்களும் மால் அற நேயம் மலிந்தவர் வேடமும், ஆலயமும் அரனெனத் தொழுதல் வேண்டும்; வணங்குதலும் வாழ்த்துதலும் வேண்டும் என்று கூறுவதால் சுத்தாத்துவித சித்தாந்த முத்தி நிலையைக் காட்டும் ஞான நூல் என்பது தெளிவு.

மெய்கண்டார் காலத்திற்கு முன்பு சித்தாந்தச் செந்நெறியைத் தொகுத்து விளக்கியது இந்நூல் ஒன்றே எனற்கு ஐயமின்று.

இந் நூலையடியாகக் கொண்டு, பரசமயக் கொள்கைகள், மந்திரங்களும் தத்துவங்களும் காமியப்பயனைக் கருதிச் செய்வன இருக்க அவை எங்ஙனம் ஞான வாயிலாகின்றன. இந்நூலால் அறியப்பெறும் அடியார்கள் தலங்கள் அவற்றால் அறியப்பெறும் வரலாற்றுண்மைகள்—புராண வரலாறுகளைப் புத்தி செய்ய வேண்டிய முறை—அவை எங்ஙனம் அன்பிற்கு வாயிலாகி ஞான ஏதுவாகின்றன என்பன போன்ற நாற்பத்தொரு தலைப்புக்கள் உள்ளன.

**செய்ய வேண்டியன**

திருமுறைத் தொகுப்பில் பத்தாவதாகச் செந்தமிழ் கூறும் நல்லுலகத்துச் சிந்தனை நூலாக—சிவம் பெருக்கும் தவநூலாக விளங்கி இதுவரை நூற்றுக்கணக்கான பதிப்புக்களைப் பெற்றுள்ளது இந்நூல்.

உரை நூல்களாக, விசுவநாதபிள்ளையவர்கள் குறிப்பு, சுந்தரமுதலியார் எழுதிய உபதேச முப்பது உரை, கம்பளிச் சட்டை கயிலாய நாதர் உரை (சில பாடல்கட்கு மட்டும்) பலவற்றைப் பெற்றுள்ளது.

பின்னர் துடிசைக்கிழார் சிதம்பரனர் அவர்கள் குறிப்புரையும், முதுபெரும்புலவர் சிவஞானச்செல்வர்

ப. இராமநாதபிள்ளையவர்கள் விரிவுரையும் பெற்றுக் கழக வாயிலாக வெளிவந்துள்ளது.

அடியேனும், எட்டாந்தந்திரம் வரையில், தமிழிலும் வடமொழியிலும் ஆங்கிலத்திலும் கிடைத்த துணை நூல் களையும், ஏடுகளையுங்கொண்டு ஆராய்ந்து 'பஞ்சாட்சர தீபம்' என்னும் விரிவுரை திருவாவடுதுறையாதீன வாயிலாக வெளிவரத் திருவருள் துணை செய்து, அதன் மேலுள்ள பகுதிகள் வெளிவரத் திருவருள் துணையில்லா மையால் கைவிட நேர்ந்தது.

பின்னர், தருமையாதீனத்தாலும், உயர்திரு. ஜி. வரதராசபிள்ளையவர்களாலும் குறிப்புரைகள் எழுதப் பெற்று வெளிவந்துள்ளன.

இத்தனையிருந்தும் சற்றேறக்குறைய முப்பதாண்டு களாக இதில் பயின்று வரும் பணியிலும் இந்நூலுக்குத் திருத்தமான மூலபாடம் இதுவரை வெளிவர இல்லை என்பது குற்றமாகாது.

முதன்முதல் இந்நூல் வெளிவந்த காலத்தைவிட இன்று எத்துணையோ சாதனங்கள் கிடைக்கின்றன. ஏடுகள் கிடைக்கின்றன. அன்று வெளிவராத உரை நூல்கள் பல இன்று வெளிவந்துள்ளன. யோக நுணுக்கம் பற்றிய வடமொழி நூல்களும், உபநிடதங்களும் ஆகமங்களும் கிடைக்கின்றன. அவற்றைத் துணைக்கொண்டு, சிறந்த முயற்சியால் திருந்திய பதிப்பு ஒன்று கிடைக்கத் திரு வருள் துணை செய்ய வேண்டும். அந்த முறையில் மொழிக்காழ்ப்பின்றிக் கருத்து வளம் ஒன்றையே துணை யாகக் கொண்டு உரை திருந்திய மூலபாடத்திற்கு எழுதப் பெறின் உதவியாக இருக்கும் என்பதைத் தெரிவித்துக் கொண்டு அமைகின்றேன்.

# 7

# பன்னிரண்டாம் திருமுறை

## திருத்தொண்டர் புராணம்

டாக்டர் சுப. அண்ணுமலே

*0. 0* திருத்தொண்டர் புராணம் எனப் பெயர் அமைத்துச் சேக்கிழார் இயற்றிய இலக்கியம் காப்பியம் என்னும் வகையைச் சார்ந்தது. அதன் இயல்புகளே ஆராயப் போந்தது இக்கட்டுரை. முதற்கண் அதன் தனித் தன்மையை இனங்காணுதற் பொருட்டுச் சேய்மையும், அண்மையுமான இலக்கியப் பின்னணியிலும், அதனே நிறுத்தி ஆய்தல் முறை. இவற்றுள் இலக்கியப் பின்னணியை முதற்கண் நோக்குவோம்.

### 1. 0 சேய்மைப் பின்னணி

திருத்தொண்டர் புராணம் காப்பிய இனத்தைச் சேர்ந்தது ஆதலின், காப்பியப் பின்னணியை மட்டும் நோக்குதல் அமையும். அதற்கு முற்பட்ட காப்பியங்கள் ஒரு மரபையே பின்பற்றி அமைந்தில. சேய்மைக் காலத்தில் தோன்றிய சிலப்பதிகாரமும் மணிமேகலேயும் இரட்டைக் காப்பியம் எனக் கூறப்படினும் காப்பியத் தன்மையால் வேறுபட்டு, இருவேறு மரபுகளேத் தோற்றுவித்தன. இரட்டைக் காப்பியம் என்னும் கூற்றுத் தண்டியலங்காரம் கூறும் பெருங்காப்பிய இலக்கணத்தின்படி அவையிரண்டும் அமைந்துள்ளனவா என ஆராய்ந்ததன் விளேவே. தண்டியலங்காரம் வடமொழி இலக்கண நூலின் தழுவலாகப் பிற்காலத்தில் தோன்றிய இலக்கணம். அதை முற்பட்ட காப்பியங்களில் இட்டு நோக்குதல் பொருத்தமன்று. அவ்வாறு இட்டு நோக்காதவர்கள் சிலப்பதிகாரம் மணிமேகலே இரண்டையும் ஐம்பெருங் காப்பியங்களுள் இரண்டாகக் கொண்டனர். இட்டு நோக்கியவர்களோ, ''நாற்பொருள் பயக்கும் நடைநெறி'' அவ்விரண்டற்கும் தனித்தனிப் பொருந்தாமை கண்டு, அறம் பொருள்

இன்பம் மூன்றும் பயக்கும் சிலப்பதிகாரம், வீடு பயக்கும் மணிமேகலையின் மேல் உரைப் பொருள் முற்றியது ஆதலின், அவ்விரண்டும் சேர்ந்தே ஒரு பெருங்காப்பியம் ஆகும்; இங்ஙனமன்றி இரண்டு நூலாக இருவராற் செய்யப்பட்டமையின் இரட்டைக்காப்பியம் என்று கொண் டனர். இவை வெவ்வேறு காப்பிய மரபுகளைத் தோற்று விக்கின்றன என்ற உண்மையை நோக்கின், இரட்டைக் காப்பியம் என்னும் கருத்து மெலிவுறும். இனித் தண்டி யலங்கார இலக்கணத்தை மறந்து, சிலப்பதிகாரம் மணி மேகலைகள் தோற்றுவித்த மரபுகளை நோக்குவோம்.

*1. 1.0* சங்ககாலத்தில் அரசர்களையே தலைவர்களாகக் கொண்டு பாடிச் சலித்துப் போன நிலையில், சிலப்பதி காரம் குடிமக்களைத் தலைவர்களாகக் கொண்டது. அக் காப்பியத்தின் தலைமக்கள் இருவர். அவர்கள் கண்ணகி யும் கோவலனும். குடிமக்களைத் தலைமக்களாகக் கொள்ளி னும் அக்காப்பியம் முடியுடை வேந்தர் மூவரின் சிறப்பை யும் பரக்கப் பேசி, ''முடியுடை வேந்தர் மூவர்க்கும் உரிய தாகி'', கண்ணகியை அம்மூவர்க்கும் மகளாக்கி மூவரும் அவளைப் போற்றும் நிலையைக் காட்டுகின்றது. ஒருவரைத் தலைவராகக் கொண்டு அவரது சிறப்பை மட்டுமே கூறுதல் என்பதின்றி, கண்ணகி கோவலன் - இருவரது சிறப்பை யும் காட்டுவதுடன் மன்னர் மூவருள் ஒருவரை மட்டும் உயர்த்துதலின்றி மூவரையும் ஒரு படித்தாகச் சிறப்புரைப் பது சிலப்பதிகாரம். மூவர் நாடுகளையும் அவற்றின் தலை நகர்களையும் முந் நாட்டு மக்களையும் ‘ தமிழகம் தமிழினம்’ என்ற ஒருமை நோக்கில் கண்டு வருணிப்பது அக் காப் பியம். தமிழகத்துக் கதையைக் கூறும் வகையில் மட்டு மின்றி இவ்வகையிலும் அது தேசியக் காப்பியம்.[1] ஆட் களுக்குச் சிறப்புக் கொடுத்து அவர்களைப் புகழாமல் பண்பு களுக்குச் சிறப்புக் கொடுக்கும் ஒரு காப்பிய நெறியைக் கனவிற் கண்டார் இளங்கோ. எனினும் ஆட்களை ‘அவர்கள் செய்தது கூறிக் கிளந்து புகழும்’ சங்க மரபு[2] அவரை

1. கூத்து வகைகளுள் தேசிகம் என்பது தமிழ்நாட்டிற்கு உரியது என்று சிலப்பதிகார உரைகள் தரும் செய்தி இங்கு ஒப்பு நோக்கத் தக்கது.

2. ‘செய்யா கூறிக் கிளத்தல்
எய்யா தாகின்றது எஞ்சிறுசெந் நாவே’ (புறம்.)

விடவில்லை. ஆதலால் ஒரு மன்னர் என்றில்லாமல் மன்னர் மூவரையும் பாடுதலும், அம்மன்னரையும் தலைவராக்காமல் குடிமக்களுள் மன்னர் பின்னோரைத் தலைவராக்குதலுமாக இத்துடன் நின்றது இவரது தேசியம். தனது காப்பிய நெறிக் கனவை ஓரளவு நிறைவேற்றுவாராய்ப் பரத்தையர் குல மாதவியைக் கற்பிலும் பிற பண்பிலும் அறிவிலும் சிறந்த மாந்தராக அமைக்கின்றார். 'ஒருவர்ப் புகழ்வர் செந்நாப் புலவர்' என்ற சங்க காலக் கவிதைமரபை மாற்றி - ஒருமையைப் பன்மையாக்கி அப்பன்மையில் பொதுமை காணும் தேசியக் காப்பிய நெறியைத் தோற்றுவித்தார் இளங்கோவடிகள்.

*1. 2.0* சாத்தனாரும் தேசியக் காப்பியமே பாடினார். ஆனால் அவர் பன்மையை விட்டு மீண்டும் ஒருமைக்கே சென்றார். எத்தகைய ஒருமை? மன்னர்களின் சூழலில் சிக்கிக் கொள்ளாமல், குடிமக்களுள்ளும் வணிகர், அந்தணர் படைத்தலைவர் என்றுள்ள உயர்குலத்தோரை நினையாமல், முன்னுள்ள கவிதை, காப்பிய மரபுகளுக்கு எதிர்க்கொடி பிடித்தார் அவர். பரத்தைக் குலத்து மணிமேகலையைத் துணிந்து காப்பியத் தலைவியாக்கி ஏழைகள், எளியோர், பிணியாளர், முதியோர், ஆதரவற்றோர் ஆகிய தேச மக்களின் இடையே அவளைத் தொண்டுபுரிய வைத்தது அவரது தேசியம். மன்னர்கள் அதிகாரப் புகழ் வெறிகளால் நிகழ்த்திய போர்களை அவர் மதிக்கவில்லை. மக்கள் பசியுடன் நிகழ்த்திய போரையே அவர் கண்டார். அப்போரில் மக்களுக்குத் தலைமை தாங்குதற்குத் துய்ப் போரை விடுத்துத் துறவியைத் தேர்ந்தெடுத்தார். 'துய்க்கும் உலகமாம் தேவருலக வாழ்வே வேண்டாம்; பசியால், நோயால், முதுமையால் எய்க்கும் உலகமாகிய இவ்வுலகில் தான் வாழ்வேன்; தொண்டுபுரிய மக்கள் இல்லாத இடத்தில் இறப்பேன்' என்று கூறிய மக்கள் தொண்டர் ஆபுத்திரனின் வழித்தோன்றலாக - பிறப்பாலன்று, தொண்டால் - மணிமேகலையை ஆக்கி, மன்னர்கள் செய்ய முடியாத செயலை - பசியும் பிணியும் பகையும் நீக்கும் செயலை - தன்னலமற்ற ஒரு துறவின் தொண்டு செய்ய முடியும் என்று காட்டினார் சாத்தனார். சிலப்பதிகாரம் செல்வத் தேசியம்; மணிமேகலை ஏழைத் தேசியம்.

இளங்கோவின் நோக்கு, பண்புகளின் மென்மையும் நுண்மையும் திண்மையுமான தனி மனிதப் பண்பாடு. சாத்தனாரின் நோக்கு, பரத்தையொழிப்பும் சிறையொழிப்பும், மது ஒழிப்பும் அனைத்திற்கும் மேலாகப் பசியொழிப்புமான சமுதாயச் சீர்திருத்தப் பண்பாடு. இந் நோக்கினைக் கொண்டதால் அறம் இக் காப்பியத்தில் தலைதூக்கி நிற்கிறது. ஆனால் அதில் மிக்க பற்றும் பிற சமயங்களிடத்து வெறுப்பும் கொண்டது. அதன் விளைவாக மணிமேகலை அறச் செல்வியாக மட்டுமின்றிப் பிற சமயங்களை மறுக்கும் சமயத் தலைவியாகவும், பவத்திறம் அற நோற்கும் அக நோக்குடையவளாகவும் படைக்கப்படுகின்றாள்.

*1. 2.1* மணிமேகலை தோற்றுவித்த காப்பிய மரபைப் பின்பற்றிக் குண்டலகேசி, நீலகேசி, வளையாபதி ஆகிய காப்பியங்கள் குடிமக்களுள் ஒவ்வொருவரைத் தலைவராகக் கொண்டு தோன்றின. ஆயின் இவை சமயத் திறங்களையும் சமய வாதங்களையுமே பெருகப் பேசின; சமுதாயத்தை மறந்தன.

## 2. 00 *அண்மைப் பின்னணி*

ஒன்பதாம் நூற்றாண்டிலிருந்து தமிழக அரசியலில் ஒரு பெரு மாறுதல் உண்டாயிற்று. வல்லரசாம் பேரரசுக் காலம் தோன்றி நிலைபெற்றது. பல்லவப் பேரரசும் பாண்டியப் பேரரசும் சோழப் பேரரசும் அடுத்தடுத்து நிலவி மக்களின் நாகரிகத்தை மட்டுமன்றிப் புலவரின் சிந்தனைப் போக்கையும் காப்பிய, கவிதை நெறியையும் மாற்றின. சமயநெறி சார்ந்தாலும் மக்களை - அவருள்ளும் பெண்களை - தலைமாந்தராகக் கொண்டு நிலைபெற்றிருந்த காப்பிய மரபு மாறி, மீண்டும் அரசருள் ஒருவரைத் தலைவராகக் கொள்ளும் மரபும், அத்துடன் இளங்கோவின் கனவிற்கு மாறாக, காப்பியத் தலைவனின் புகழ்பாடி, மற்றவர்களைப் பின்னணியில் நிறுத்தும் புது மரபும் தோன்றின. பேரரசைத் துதிபாடும் நிலையின் விளைவு இது. வடமொழிக் காவ்யாதர்சம் 'தன்னிகரில்லாத் தலைவன்' என்று கூறிய சித்தாந்தத்தை (concept) இத் தமிழ் மரபு இவ்வாறு பயன்படுத்தியது. ஏழாம் நூற்றாண்டில் கொங்குவேளிர் தமது பெருங்கதை என்னும் காப்பியத்தின் வாயிலாக இம்

மரபைத் தோற்றுவித்தார். எல்லாத் திறமையும், எல்லாச் சிறப்பும் காப்பியத் தலைவனுக்கு உண்டு; காப்பியத்தின் பிற மாந்தர் எல்லாம் அவனுக்குத் தாழ்ந்தவர்களே; அவன் செயலெல்லாம் சரியானவையே; அனைத்து உயர்வுகளும் அவன் ஒருவனுக்கே உரியன என்று கொள்வது இம்மரபு. சங்ககாலத்திலிருந்த வீர வழிபாடு (Hero worship) அசுர உருவம் கொண்டு, சக்கரவர்த்தி வழிபாடாக (Emperor worship) மாறியது. பெருங்கதைத் தலைவன் உதயணன் வீரம் மிக்க போர்க்கலை, நுண்மை மிக்க இசைக்கலை, அழகு மிக்க ஒப்பனைக்கலை ஆகிய கலைகளில் வல்லவன். காதல் புரிவதில் அற்புத இயல்பு (Romance) அவனிடம் உள்ளதாகக் காட்டப்படுகிறது. இங்ஙனம் ஒருவனை உயர்த்தும் பொருட்டு அவனிடம் எல்லாச் சிறப்புக்களும் திணிக்கப்பட்டன. முன்னைய காப்பியங்களின் தலைமாந்தரும் கவிஞர்களின் படைப்பே என்றாலும் அதில் தன்மை நவிற்சி இருந்தது. ஆனால் பெருங்கதை தோற்றுவித்த காப்பிய மரபில், தலைமாந்தர் உயர்வு நவிற்சிக் கற்பனைப் படைப்பாகி விட்டனர். உயர்வு உடையவன் என்பது வேறு, நிகரற்றவன் என்பது வேறு அன்றோ? ஒருவனை நிகரற்றவனாகக் காட்டுவதற்கு மற்றவரைத் தாழ்த்துவதும், அவனை இறப்ப உயர்த்துவதும் தேவையாகின்றன. இளங்கோவடிகள் படைத்த மாந்தர்கள் உயர்வுடையவர்கள். ஆனால் பெருங்கதை மரபோ ஒருவனை நிகரற்றவனாகப் படைத்தது.

*2. 1.0* இம்மரபில் எழுந்ததுதான் சீவக சிந்தாமணிக் காப்பியம். திருத்தக்கதேவர் துறவியாயினும், வணிகச் சாத்தனார்தம் சிந்தனையில் கருக்கொண்டு படைத்த துறவித் தலைமையை அதன் தொண்டு வாழ்க்கையைக் காப்பியம் ஆக்க, அவருக்கு விருப்பமும் திறமையும் இருந்தனவோ இல்லையோ, பேரரசுவழிபாடு நிலவியதாகிய அவர்காலம் இடம் கொடுக்கவில்லை. துறவின் சிறப்பை, இன்றியமையாமையை எடுத்துக்காட்டுவது தான் அவர் நோக்கம். ஆனால், பாவம், பேரரசுச் சூழலில் அகப்பட்டுக் கொண்டார். விடுபட வழி தெரியவில்லை. பெருங்கதை மரபைப் பின்பற்றி, எண்மர் மகளிரை மணக்கும் சகலகலா வல்லவனாக, உதயணனை விடச்

சிறந்த அற்புதக் காதல் கலைஞனாக, அதே சமயம் பஞ்ச வடி முனிவர்களுக்கும் தத்துவத் தெளிவு கூறும் அறிஞனாக, பகைவரை ஓடஓட விரட்டும் தனிப்பெரு வீரனாக, எல்லா ஆற்றலும் இவன்பால் உள என்னுமாறு படைத்தார்; படைக்க வேண்டியதாயிற்று. சமணத் துறவிக்குச் சிருங் காரச் சுவையும் பாடத் தெரியும் என்று காட்டுவதற்காகத் தேவர் சிந்தாமணியைப் பாடவில்லை. சமயப் போட்டி நிலவிய காலம் அது. பாரதத்திலும் இராமாயணத்திலும் வரும் தலைமாந்தர்க்கு அவதாரங்களுக்கு நிகராக—அவரை விட மேலாக ஒருவனைப் படைத்துக் காட்ட வேண்டிய கட்டாயம் சமணர்கட்கு இருந்தது. அதன் விளைவே சிந்தா மணியாம் சீவகசாமியின் படைப்பு. சமயப் போட்டியில் ஈடுகொடுக்க, இம்மரபில் சூளாமணிக் காப்பியத்தையும் இயற்றினர் சமணர். அதில் கண்ணன் — பலராமன் இணைக்குப் போட்டியாகத் திவிட்டன்—விசையன் இணை யைப் படைத்தார் தோலாமொழித் தேவர்.

2. 2.0 கம்பரும் இம் மரபையே பின்பற்றினாராயினும், அவதாரமாகிய இராமனைக் காப்பியத்தலைவனாக்கினார். ஆயினும், சீவகன், திவிட்டன், விசயன் போல் ஒரு குற்ற மும் இல்லாதவனாகப் படைக்காமல்,

"வாய்மையும் மரபும் காத்து
மன்னுயிர் துறந்த வள்ளல்
தூயவன் மைந்த னேநீ
பரதன்முன் தோன்றி னாயே
தீமைதான் பிறரைக் காத்துத்
தான்செய்தால் தீங்கன் றாமோ"

என்று பொய்யுரையாத புண்ணியனும் சிறியன சிந்தியா தானுமாகிய வாலி ஏசுதற்குக் காரணமான குற்றம் உடையவனாகப் படைத்தார். கம்பராமாயணத்தில் இரா மன் தன்னிகரற்ற தலைவன் அல்லன். இராமதாசனாகிய குகனே பரதனை, 'ஆயிரம் இராமர் நின்கேழ் ஆவரோ தெரி யின்' என்கின்றான். பரதன் மட்டுமோ, வாலி, சடாயு, அனுமன், சீதை, தாரை ஆகியோரின் படைப்புக்களும் உயர்ந்தவை. இராவணனின் மாட்சி தசரதனதைக் காட்டி லும் விஞ்சியது. கோசலத்து வீரம் மட்டுமல்ல; கிட்கிந்

தையின் வீரமும், இலங்கையின் வீரமும் உயர்ந்தவையே, அரசகுமரன் பரதனின் அன்புமட்டுமல்ல; காட்டுவேடன் குகனின் அன்பும் உயர்ந்ததே. கோசலத்து அன்புக்குப் பரதன்; இலங்கையின் அன்புக்குக் கும்பகன்னன்; கிட்கிந்தையின் அன்புக்கு அனுமன்; வேறுவேறு குலம், ஆனல் பண்பு ஒன்று என்று காட்டுகிருர் கம்பர். இளங் கோவடிகள் கண்ட கனவு—பண்புகளுக்குச் சிறப்புக் கொடுத்து ஆட்களைப் பெரிதாக மதியாத — அவர்களின் பிறப்பு, அந்தஸ்து ஆகியவற்றைப் பொருட்படுத்தாத— காப்பிய நெறிக் கனவு—கம்பரால் ஒருவாறு நனவாக்கப் படுகின்றது. அதன் விளைவே அவரதுகாப்பியத்தில் உள்ள மானிடப் பொதுமைப் பண்பு ஆக்கம் (universalism). "மானு டம் வென்றதன்றே" என்று கம்பர் கூறுவது. சுக்கிரீவன் கண்ட இராமன் அளவில் அன்றி மேற்கூறிய கருத்தில் அவரது காப்பிய முழுமைக்கும் பொருந்துவது. காப்பியத் திற்கு ஒருவனைத் தலைவனுக்க வேண்டிய நிலை, வான்மீக முதனூலால் அவருக்கு இருந்தது. ஆயினும் கருத்தளவில் அவர் அதை விரும்பவில்லை என்பதை, எந்தப் பேரரசுச் சித்தாந்தம் புலவர்களின் காப்பிய மரபை மாற்றி, ஒரு தலைவன் துதிபாடச் செய்ததோ அந்தப் பேரரசுச் சித்தாந் தத்தையே ஏற்றுக் கொள்ளாதவர்போல், "மன்னன் உயிர்த்தே மலர்தலை உலகம்" என்று வழிவழி வந்த அரசத்தன்மைச் சித்தாந்தத்தையே மாற்றி,

"செயிரிலா உலகினில் சென்று நின்றுவாழ்
உயிரெலாம் உறைவதோர் உடம்பும் ஆயினன்"

என்று அவர் தசரதனைப் பற்றிக் கூறுவதால் அறியலாம். அவர் காலத்தில் சோழப் பேரரசு பெருவலி படைத்து விளங்கியது. பேரரசு வழிபாடுதான் நிலவியது. ஆனல் திருத்தக்க தேவர் இப் பேரரசுச் சிந்தனைச் சூழலில் சிக்கிக் கொண்டதைப்போல் கம்பரும், பின்புவந்த சேக்கிழாரும் சிக்கிக்கொள்ளவில்லை. சேக்கிழாரைப் பற்றிப் பின்பு காண்போம். கம்பரின் கவிதை உலகை ஆண்ட அவரது கருத்துலகில் பேரரசன் சிறப்பில்லாதவன்; அவன் மக் களின் தொண்டனே. இவ்வாறு அவர் கருதினுர் ஆயினும், தம் காப்பியத்திற்கு இராமனையே தலைவனுக்கினுர். காரணம், வான்மீக முதனூல் மட்டுமன்றி அவன் பரம்

பொருளின் அவதாரம் எனக் கம்பர் துணிந்தமை ஒன்று. அவனது பண்பில் அவருக்கிருந்த தனித்த ஈடுபாடு மற்றொன்று. ஆதலின் காப்பியத் தொடக்கத்திலேயே "அவர் தலைவர் அன்னவர்க்கே சரண் நாங்களே" எனக் குறிப்பிடுகின்றார். இது பக்தியின் விளைவு. பக்தி என்னும் 'ஆசை பற்றி அறையலுற்றார்'.

## 3.00 திருத்தொண்டர் புராணம் தோற்றுவித்த மரபு

இதுவரை கூறிவந்த காப்பிய மரபுகளுக்கு எல்லாம் எதிர்க்கொடி பிடித்தது திருத்தொண்டர் புராணம். இளங்கோவடிகள் கனவு கண்ட பண்புத்தலைமைக் காப்பிய நெறியில் கம்பரை விட வளர்ந்து நின்றே சேக்கிழார் தமக்கு முற்பட்ட காலத்துக் காப்பிய மரபுகளுக்கு எதிர்க்கொடி பிடிக்கின்றார். உயர்வுடையவனோ, தன்னிகரற்றவனோ இவ்விருவரில் ஒருவனாக அமையும் தலைவனை அல்லது இருவரையும் உடைத்தாதல் காப்பிய மரபாக அதுவரை இருந்து வந்தது. கருத்தால் விரும்பாவிடினும் கம்பர் ஒருமைத் தலைமையையே தம் காப்பியத்தில் செயலாக்கினர். சேக்கிழாரோ, இரண்டாம் குலோத்துங்க சோழன் அல்லது மூன்றாம் குலோத்துங்க சோழனின் காலத்தில் வாழ்ந்தும், அரசின் முதலமைச்சராக இருந்தும், தம் காப்பியத்திற்குப் பன்மைத் தலைமையோ ஒருமைத் தலைமையோ எதனையும் அமைக்கவில்லை. தலைமையை உடைத்தாதலே காப்பிய மரபு எனின், சேக்கிழாரின் காப்பியத்தைக் "காப்பிய மறுதலை" (Anti-epic) என்றுதான் கூற வேண்டும். இது பற்றியே இக் கட்டுரையில் சற்று முன்பு பேரரசுச் சிந்தனைச் சூழலில் திருத்தக்க தேவரைப் போல் சேக்கிழார் சிக்கிக்கொள்ளவில்லை என்று கூறப்பட்டது. 1968-ஆம் ஆண்டில் மில்டனைப் பற்றித் தொகுக்கப் பெற்ற திறனாய்வுக் கட்டுரைகளுள் "Paradise Lost: The Anti-Epic" என்ற கட்டுரையை எழுதிய T. J. B. Spencer பின்வருமாறு கூறி அக்கட்டுரையை முடிக்கின்றார்:

"And now by a lucky chance we are perhaps in a peculiarly happy condition for becoming close to paradise Lost. Contemporary critical theory and practice have accustomed us to the notion of the 'anti-novel' aud the 'anti-hero'. It is now at last obvious what Para-

dise Lost is. It is the 'anti-epic'. Wherever we turn we find the traditional epic values inverted. It closed the history of this epic genre in England-the epic form as understood by Petrarch, Ronsard, Vida or Boileau and Dryden. It closed the history of the epic ."

இக் கூற்றுச் சற்றேறக் குறையத் திருத்தொண்டர் புராணத்திற்கும் பொருந்துகின்றது. மில்டனையும் சேக்கிழாரையும் ஒப்பிட்டு இதைக் கூறவில்லை; அவ்வாறு ஒப்பிடும் முயற்சியில் மற்றொரு சமயத்தில் இறங்கலாம். ஆனால் 'anti-epic' ஆக அமைவது என்னும் தன்மை Paradise Lost-க்குப் போலத் திருத்தொண்டர் புராணத்திற்கும் பொருந்துகின்றது.

*3. 1.0.* இக் கூற்றை ஆராய்ந்து நிறுவுமுன், திருத்தொண்டர் புராணத்தைப் பற்றிச் சிறிது காலத்திற்கு முன்பு நிலவிய ஒரு கருத்து, அதனைக் காப்பியமன்று எனப் பலரும் நினைத்தமைக்கு ஒரு மேலெழுந்தவாரியான சான்றாகும் எனக் குறிப்பிடலாம். அக் கருத்தை சி. கே. சுப்பிரமணிய முதலியார் எடுத்துக் காட்டி மறுக்கின்றார். அது வருமாறு :

"பெரிய புராணத்தைத் தனித்தனி பற்பல சரிதங்கள் கோத்த கோவை என்று சிலர் கருதுகிறார்கள். அது தவறு. பெரிய புராணமானது தொடர்நிலைச் செய்யுளாய் ஒரு பழஞ் சரிதத்தைச் சொல்வதாய் ஒரு பெரிய உள்ளீடாகிய கற்பனையை எடுத்துக்காட்டுவதாயுள்ள ஒரு பெருங்காவியமே ஆகும்.......சுந்தரமூர்த்திகளே இந்தப் பெருங்காப்பியத்திற்கு நாயகராவார். அவரே பாட்டுடைத் தலைவர். பரவையாரும் சங்கிலியாரும் தலைவியர்கள்."[1]

*3. 2.0.* சுப்பிரமணிய முதலியார் கூறும் மறுப்புரையின் வன்மை மென்மைகளை ஆராயுமுன்பு, முன்பு கூறி வந்த காப்பிய நெறிக் கருத்து வளர்ச்சியைத் தொடர்ந்து காணுதல் வேண்டும். சேக்கிழாரின் காப்பியக் கொள்கையை ஆக்கியதில் பேரரசுகளின் வரலாறு, சமுதாயநிலை, சமய நெறியின் அடிப்படை உண்மை ஆகியவை பங்கேற்கின்றன.

---

1. "சேக்கிழார்" பக்கம் 34-35.

3. 2.1. பல்லவப் பேரரசின் வீழ்ச்சியையும் சோழப் பேரரசு நிலைபெறுதற்காக அவ்வப்போது நடைபெற்ற பெரும்போர்களையும் வரலாற்றால் அறிந்தும், தம் காலத்தில் கண்டும் இருந்த சேக்கிழார் பேரரசு வழிபாட்டால் தோன்றி வளர்ந்திருந்த உயர்வு நவிற்சிக் கற்பனைப் படைப்பில் சிக்கிக் கொள்ளாமல், காப்பிய நெறி பற்றிச் சிந்தித்திருக்க வேண்டும். ஏழாம் நூற்றாண்டு தொடங்கிச் சமய குரவர்களும் திருத்தொண்டர்களும் தோற்றுவித்த சமய மறுமலர்ச்சியாகிய அன்புநெறியும், தொண்டு வாழ்வும் மக்களின் வாழ்வில் அக அமைதியையும் புற அமைதியையும் இன்பத்தையும் உண்டாக்கி, பேரரசின் அரசியலை விட, அதில் நிகழ்ந்த போர்களைவிட, அவற்றில் பெற்ற வெற்றி எக்களிப்புக்களை விட, பேரரசின் அதிகார ஆர்ப்பாட்டங்களை விட, ஆழமான முத்திரை (impression) பதித்துள்ளமையைச் சேக்கிழார் கண்டார். அரசியல் மாற்ற முயலாத, மாற்ற முடியாத மக்கள் உயர்வு தாழ்வுச் சிக்கலை அன்பு நெறி மாற்றிவிடுதலைக் கண்டார். தலைவன், தலைமை என்ற கருத்து வேரூன்றியதால் நாட்டுத் தலைவன், கோட்டத் தலைவன், சாதித் தலைவன், சமயத் தலைவன், குலத் தலைவன் என்று பேசும் நிலை ஒரு புறம் இருக்க, அன்பு நெறியின் காரணத்தால், தன்னடக்கம் வந்து 'அடியார்', 'அடியேன்' என்று கூறும் நிலை மக்களிடையே பெருகி வரக் கண்டார். தலைமைக் கருத்து உள்ள இடத்தில் போட்டியும் பொறாமையும் பூசலும் போரும் தவிர்க்க இயலாமற் போவதையும், 'அடியேன்' எனத் தன்னைக் கருதும் தன்னடக்கம் உள்ள இடத்தில் அன்பும் அமைதியும் இன்பமும் வளர்வதையும் கண்டார். சங்க காலத்திலிருந்து தம் காலம் வரை தொடர்ந்து இருந்து வரும் வீர வழிபாடு, பேரரசு வழிபாடு என்ற தனி மனித வழிபாடு, முடிவாகத் தீமையே விளைத்தது என்பதைக் கண்ட அவர், அதற்கு மறுதலையாகச் சமய குரவர்களும் திருத்தொண்டர்களும் வளர்த்த அன்பு - தொண்டு நெறியால், மனித வாழ்வு புறப்பாதிப்பிற்கு இலக்காகாமல் அகவளர்ச்சி பெறுவதைக் கண்டார். இந்த அன்பு - தொண்டு நெறி, தன் மறுப்புப் பண்பை - தன்னடக்கத்தை உருவாக்கித் தன்னுடனே வைத்து வளர்ப்பதாகும்.

துறவால் வரும் தன்மறுப்பு - தன்னடத்கக்தை விட, அன்பால், தொண்டால் வரும் தன் மறுப்பு - தன்னடக்கம் இயற்கையானது; மாறுதது; வளர்ச்சிப் படியாக அமைவது. அன்பு நெறியில் வாழ்ந்த திருத்தொண்டர்கள் ஒருவரை யொருவர் முந்தியவாறு வணங்கிக் கொண்டனர். அவ் வாறு வணங்கிடும் உணர்வில் இன்ப நிறைவைக் கண்டனர். ஏன்? அவர்கள் தலைமை பற்றி வணங்க வில்லை. தலைமை பற்றி வணங்குதல் ஒரு வழிச் செலவே. இருவரும் அன்பால் வணங்குதலின் அன்புள்ளங்கள் கலத்தலால் இன்பம் விளைகின்றது. அந்த அன்பையே இருவரும் வேண்டுகின்றனர். வேறு ஒரு பயனையும் கருத வில்லை. அன்பைக் கொடுக்கக் கருதினார்கள். எதையும் பெறக் கருதவில்லை. வீடு பெறுவதாயினும் வேண்டாம் என்றார்கள்.

> "கூடும் அன்பினில் கும்பிடலே யன்றி
> வீடும் வேண்டா விறலின் விளங்கினார்"[1]

இருவரும் ஒருவர்க்கொருவர் 'அடியேன்' என்று கூறிக் கொண்டனர். அவர்கள் செல்வர்களா? அல்லர். "ஆடையும் கந்தையே." அக் கந்தையும் மிகை என்னும் கருத்தினர். இறைவன் பணி ஒன்றே நாட்டம். கையில் பொருள் ஒன்றுமில்லை. ஆனால், எல்லாம் உள்ளது போன்ற மனநிறைவு. எதையும் பிறரிடம் வேண்டாத—விரும்பாத வீரம்.

> "ஆரங் கண்டிகை ஆடையும் கந்தையே
> பாரம் ஈசன் பணியல தொன்றிலார்
> ஈர அன்பினர் யாதுங் குறைவிலார்
> வீரம் என்றால் விளம்பும் தகையதோ"[2]

அவர்களின் உள்ள நிலையை விளங்கிக் கொள்ளக் காந்தி யடிகளின் பொன்மொழி ஒன்றை ஒப்புநோக்கலாம்:

"I must reduce myself to zero. So long as man does not of his own free will put himself among his fellow creatures, there is no salvation for him."

1. திருத்தொண்டர் புராணம்: திருக்கூட்டச் சிறப்பு, 8ஆம் பாடல்.
2. ,, ,, 9ஆம் பாடல்.

3. 2.2 கட்டாயத்தினுல் அன்றித் தன்னியல்பால் எழுகின்ற அன்பால், அனைவர்க்கும் ‘அடியான்’ எனத் தன்னைக் கருதிக்கொள்ளும் மனநிலை, தொண்டர்களிடம் இருந்ததைச் சற்று முன்னைய வரலாறும் சமகால வரலாறும் சேக்கிழாருக்கு உணர்த்தின. இவற்றுள், நம்பியாரூரர், தாம் கலைக் கல்வி சாத்திரக் கல்விகளில் சிறந்தவராயிருந்தும், இறையருளைப் பெருகப்பெற்றும், இறைவனுடன் தோழமை பேணும் நிலையைப் பெற்றும், தொண்டர்கள் ஒவ்வொருவரையும் கூறி அவர்க்கெல்லாம் அடியேன் என்று தம்மைக் கூறிக்கொண்டு பாடியிருந்த திருத்தொண்டத் தொகை, தலைவராதற்கு முந்துவதைவிட அடியானுகத் தொண்டுசெய்ய முந்துவதே சமுதாய அமைதியை விளைவித்து மானுட இனத்தை அகநோக்கு வளர்ச்சியில் இட்டுச்செல்ல வல்லது என்ற கருத்தைக் கொண்டிருந்த சேக்கிழாருக்கு ஓர் உந்து ஊக்கம் (Inspiration) ஆக அமைந்தது. தொண்டர்கள், தம்மைக் கருதாது தொண்டினையே கருதினுர்கள் ஆதலின், ஆள் முக்கியத்துவம் மறையப் பண்பு முக்கியத்துவம் (Importance of values) வளர்வதைக் கண்டார். காப்பிய நெறியில் இளங்கோ வடிகள் ஆளுக்கன்றிப் பண்புச் சித்திரிப்பிற்கு முக்கியத்துவம் கொடுப்பதைக் கனவு காண, கம்பர் அதனை ஒருவாறு செயற்படுத்த, சேக்கிழார், திருத்தொண்டத் தொகையால் தாம் பெற்ற உந்தூக்கத்தால் அதனை நன்கு வளர்த்து, ஆள் முக்கியத்துவம், உயர்ந்தோர் தலைமை, தன்னிகரற்ரூேர் தலைமை ஆகியவை இன்றியும் காப்பியம் நடக்கும் என்பதை — ஒரு காப்பியப் புரட்சியைத் — தோற்றுவித்தார். அதாவது, ‘கூடும் அன்பினில் கும்பிடும்’ வணக்கத்தில் தலைமை புலப்படாது, அன்பு உரிமையே பெறப்பட்டு, புறத்தோற்றங்கள் எதையும் கருதாத மனிதப் பண்பே புலப்பட்டதன்ரூே? அவ்விருவரில் யாவர் தலைவர்! இருவரும் அடியாரே. நம்பியாரூரர் திருத்தொண்டத் தொகையில் பாடிய அனைவரும் அடியாரே. அவர்க்கெல்லாம் தனித்தனி அடியவராகத் தம்மைக் கூறிக்கொண்டார் நம்பியாரூரர். ஆதலின், அத் திருத்தொண்டர்களின் வரலாற்றையே சேக்கிழார் காப்பியம் செய்த போது ஒருவரையும் காப்பியத் தலைவராகக் கொள்ள

வில்லை. அன்பினால் பணிதலையே விரும்பியவர்களைத் தலைவராக்குதல் அவர்கள் கருத்திற்கே மாறுபடுமன்றோ?

*3. 2.3* ஆள் முக்கியத்துவம் போற்றாது பண்பு முக்கியத்துவம் போற்றுவதில் கம்பர் வழியில் அவரினும் வளர்ந்துள்ளார் சேக்கிழார். இதற்குத் திருத்தொண்டர்களின் வாழ்வே அகச் சான்றும் காரணமாய் அமைந்தது. காளத்தி வேடனின் அன்பை ஆறு நாட்களில் ஏற்றுக்கொண்ட இறைவன், சிவகோசரியார் பல்லாண்டு பூசை செய்தும் அவர்க்கு அருள் வழங்கவில்லை. மலரிட்டுப் பூசை செய்த சிவகாமியாண்டாரும், நாள்தோறும் கல்லால் எறிந்த சாக்கியரும் இறைவன் அடியார்களே. குடுமித்தேவரைச் செருப்புக்காலால் மிதித்த திண்ணனார் இறைவனது அருளைப்பெறுகின்றார். ஆனால், இலிங்கத்தை அல்ல, அதற்கு அபிடேகத்திற்கு என வைத்த பாற்குடத்தைக் காலால் எற்றிய எச்சதத்தனின் காலை வெட்டிய மகனின் செயல் ஏற்றுக் கொள்ளப்பட்டது. திருநீல கண்ட யாழ்ப்பாணரைத் திருஞான சம்பந்தர் அழைக்கும் பொழுதெல்லாம் "ஐயரே" என்று அழைத்தார். யாருக்கும் விலகாத திருப்புன்கூர் நந்தி, நந்தனார்க்காக விலகி இறைவனின் உருவத்தை அவர் நன்கு பார்க்கும்படி செய்தது. பெற்ற தந்தையின் காலை வெட்டிய சண்டேசர் இறைவனின் பிள்ளையாகப் பேணும் நிலையைப் பெற்றார். திருத்தொண்டர் ஒருவரைப் பாதநீர் விட்டுக் கழுவி உபசரித்த போது, அவர் முன்பு வேலைக்காரராக இருந்தாரே என்று எண்ணிக் கரகநீர் வார்க்கத் தயங்கிய மனையாளின் கையை வெட்டினார் ஒரு தொண்டர். சிவ வேடம் கண்டு வணங்கி, அவ் வேடத்தான் வாளால் குத்த, அவன் பகைவன் என்று இனம் கண்டு கொண்டும், அவனைத் தொழுது உயிர் கொடுத்து வென்றார் ஒரு திருத்தொண்டர். தெருவில் உவர்மண் தாங்கி, மழையால் அவ்வுவர் மண் கரைந்து திருநீறிட்டாற்போல் தோன்ற நடந்து வந்த வண்ணார் ஒருவரை, அவர் நாட்டு மன்னன் அடிபணிய, அவர் பயந்து, 'யார் என்று எனைக் கொண்டது அடியேன் அடிவண்ணான் என்னச் சேரர் பிரானும் அடிச்சேரன் அடியேன் என்று, திருநீற்றின் வாரவேடம் நினைப்பித்தீர்; வருந்தாது ஏகும்"[1]

1. கழறிற்றறிவார் : 19.;

என்று கூறி நடந்தான். திருவாரூரில் வாழும் மக்களை யெல்லாம் சிவகணங்களாகக் கண்டார் நமிநந்தியடிகள். நாவரசரையே வழிபட்டு உய்ந்தார் அந்தணராம் அப்பூதி.

இவையெல்லாம் குலம் பேசாது அந்தஸ்து பேசாது, மானுடம் பேசும் கம்பரின் வழியில் சேக்கிழார் வளர்ந்து நின்றமைக்குச் சில சான்றுகள். இவற்றை இங்குக் கூறியது, சேக்கிழார் காப்பியத் தலைமை என்ற கருத்து மரபை முற்றிலும் ஒதுக்கி, ஒருமையை ஏத்தாது, பன்மை யைப் பாடி அவற்றுள் பொதுளும் அன்புப் பொதுமையை- அந்த மானுடப் பண்பை - அதன் பல்வேறு கோணங்களில் கண்டு காட்டியுள்ளார் என்று தெரிவிப்பதற்கே ஆகும்.

மும்மைத் தமிழகத்தையும் மூவேந்தரையும் பாடி அரசியல் ஒற்றுமை திகழும் தேசியத்தைக் காட்டினுர் இளங்கோ. சமுதாயச் சீர்திருத்தத்தைப் பாடி, ஏழைத் தேசியத்தைக் காட்டினுர் சாத்தனுர். கங்கை முதல் இலங்கை வரை பரவிய மானுடப் பண்புகளின் பொது மையைக் கம்பரும், புறத்தோற்றத்தை - சாதிப் பிறப்பை, பதவிப் பெருமையை நோக்காமல் அன்பினல் வணங்கித் தன் மறுப்பு - தன்னடக்கத்தால் தொண்டு செய்து நிறைவும் இன்பமும் காணும் ஆன்மீக வீரப் பொதுமை யைச் சேக்கிழாரும் பாடி தேசியத்தில் அக வளர்ச்சியைக் காட்டினர். சேக்கிழாருக்குச் சேய்மைப் பின்னணியி லிருந்த இளங்கோ சாத்தனுர்களின் தேசிய நோக்கை, இடையில் வந்த காப்பிய ஆசிரியர்கள் மறந்தனராக, கம்பரும் சேக்கிழாரும் அதைப் புதுப்பித்து, அதன் வேறு படி நிலையைக் (another phase) காட்டினர்.

*3. 3.0.* இனி, சுப்பிரமணிய முதலியார் நம்பியாரூர ரைச் சேக்கிழாரின் காப்பியத்திற்குத் தலைவராகக் கொண்டமையின் வன்மை மென்மைகளைக் காண்போம். டாக்டர் இராசமாணிக்கனர், அ. ச. ஞானசம்பந்தம் ஆகி யோரும் முதலியாரின் கருத்தையே ஏற்றனர். முதலி யாரின் கூற்று, சேக்கிழாரது நூலைக் காப்பியமன்று எனக் கூறியவர்களின் கூற்றை மறுத்ததற்காக, தண்டியலங்காரம்

கூறும் காப்பிய இலக்கணத்தைச் சேக்கிழாரின் நூலில் இட்டுப் பார்த்த முயற்சியின் விளேவாகும். தண்டி கூறும் காப்பிய இலக்கணத்தின் கூறுகளான பல்வகைப் புனேவும் வருணனேயும் நிகழ்ச்சிகளும் பெருங்கதை, சிந்தாமணி, சூளாமணி, கம்பராமாயணம் ஆகிய காப்பியங்களில், காப்பியத் தலைவன் தலைவியர் தொடர்பாகவே அமைந் துள்ளன. ஆனுல் முதலியார் அவர்கள் இவற்றைத் திருத்தொண்டர் புராணத்தில் காட்டப்புகுந்தபொழுது, இவற்றுட் பலவும் அவர் காப்பியத் தலைவரென நாட்டக் கருதும் நம்பியாரூரரின் தொடர்பாக இல்லாமையைக் காணுததேனே? தண்டியலங்காரம் கூறும் ஒவ்வொரு வருணனேயும் ஒவ்வொரு திருத்தொண்டரின் சரிதத்தி லிருந்து எடுத்துக் காட்டுகின்ருர் அவர். சிறப்பாக, நம்பியாரூரர் தலைவராயின், அவர் பிறந்த திருமுனேப்பாடி நாடும் திருநாவலூருமன்ருே நாடு நகரச் சிறப்புக்களுட் கூறப்பட்டிருத்தல் வேண்டும்? காப்பியத்தின் பலவிடங் களில் நம்பியாரூரரை முனேப்பாடித் திருநாடர்[1] என்றும், முனேப்பாடிப் புரவலனுர்[2] என்றும், திருமுனேப்பாடி வேந்தர்[3] என்றும், நாவலூர் நாவலனுர்[4] என்றும், நாவலூர் மன்னர்[5] என்றும் வழங்கும் சேக்கிழார் இவற்றை விட்டுச் சோணுட்டையும் திருவாரூரையும் காப்பியத்தின் நாடு நகரங்களாகச் சிறப்பிப்பது ஏன்? இதற்கு அமைதி கூற வந்த முதலியார், "திருத்தொண்டத் தொகை பிறந்ததும் பரவையார் காதல் மணம் நிகழ்ந்ததும் ஆகிய சோழநாடும் திருவாரூரும் இப் பெருங்காப்பியத்திற்கு நாடும் நகரமும் ஆகும்" என்று கூறுகிருர். சங்கிலியாரின் காதல் மணம் நிகழ்ந்தது திருவொற்றியூராதலின், அதுவும் திருநகரச் சிறப்பில் இடம் பெற்றிருக்கவேண்டும். பெற வில்லேயாதலின் சோணுடும் திருவாரூரும் சிறப்பிக்கப் பட்டமைக்கு வேறு காரணம் இருத்தல்வேண்டும். அதனேச் சேக்கிழாரே கூறுகின்ருர்.

---

1. கழறிற்றறிவார்: 97;
2. ஏயர்கோன்: 175.
3. ஏயர்கோன்: 66;
4. ஏயர்கோன்: 22;
5. ஏயர்கோன்: 169.

1. "உலகம் உய்யவும் சைவம்நின் ஞேங்கவும்
அலகில்சீர் நம்பி ஆரூரர் பாடிய
நிலவு தொண்டர்தம் கூட்டம் நிறைந்துறை
குலவு தண்புனல் நாட்டணி கூறுவாம்"[1]

தொண்டர் கூட்டம் நிறைந்து வாழ்வது சோழநாடு ஆதலின், அதனைச் சிறப்புரைப்பேன் என்கின்ருர்.

2. திருத்தொண்டர்களை நம்பியாரூரர் கண்டது திருவாரூர்ப் பூங்கோயிலின் தேவாசிரிய மண்டபத்தில் ஆதலின், திருவாரூர் நகரம் சிறப்பிக்கப்படுகிறது. இங்கு ஒரு குறிப்புக் கூறவேண்டும். இப்போதுள்ள திருத் தொண்டர் புராணப் பதிப்புக்களில் திருநகரச் சிறப்பு நான்காவது பகுதியாகவும், திருக்கூட்டச் சிறப்பு ஐந்தாவது பகுதியாகவும் அச்சிடப்பட்டுள்ளன. இதன்படி திருநகரச் சிறப்பின் இறுதிப் பாடல், 'அணையதனுக்கு அகமலராம் அறவனுர் பூங்கோயில்' என்ற இறுதியடியை உடைத்தாய், அதில் தொடங்கிய பொருள் முற்றுப் பெருது நிற்கிறது. திருக்கூட்டச் சிறப்பையும் சேர்த்தால்தான் அது முற்றுப் பெறும். ஆதலின் திருவாரூர்த் தேவாசிரிய மண்டபத்தில் திருத்தொண்டத் தொகை பாடியமையால், சேக்கிழார் அந் நகரத்தின் சிறப்பை உரைத்தார்.

இவ்விரண்டு சிறப்பாலும் தொண்டர் கூட்டமே முக்கி யத்துவம் பெறுதல் வெளிப்படை. நம்பியாரூரரின் நாடு, நகரங்களைச் சிறப்பிக்காத சேக்கிழார், பின்னர்த் திருக் குறிப்புத் தொண்டரின் நாடு நகரங்களை மிகப் பெரிய அள வில் வருணிக்கின்ருர். காரணம், தொண்டர்கள் நிறைந்து வாழும் சேஞட்டை வருணித்தாகிவிட்டது. அதே சிறப் பினை உடைய தொண்டை நாட்டையும் காஞ்சிபுரத்தையும் வருணிக்க வேண்டும் என்பதேயாகும். இதனுல் சேக் கிழார், தம் காப்பியத்திற்கு நம்பியாரூரர் புராணம் எனப் பெயரிடாமல், 'திருத்தொண்டர் புராணம்' என்றே பெயர் வழங்கினர்.[2]

3. 3.1. மேலும், "திருத்தொண்டர் தொகைவிரி இன்றென் ஆதரவால் இங்கியம்புகேன்" என்று, தம்

1. திருமலைச் சிறப்பு, 40.
2. பாயிரம், 10.

முதனூலும் திருத்தொண்டர்களையே பாடுகின்றது எனவும்,

“அந்த மெய்ப்பதி கத்தடி யார்களை
நந்தம் நாதனும் நம்பியாண் டார்நம்பி
புந்தி ஆரப் புகன்ற வகையினில்
வந்த வாறு வழாமல் இயம்புவாம்”

என்று தமக்கு முற்பட்ட வழிநூல் நம்பியாண்டார் நம்பி பாடிய திருத்தொண்டர் திருவந்தாதி எனவும் குறிப்பிடுகிறார். விரிநூலாகிய அவரது காப்பியமும் முன்னூல்களைப் போல, திருத்தொண்டர்களைப் பாடு பொருளாகக் கொண்டது எனல் பொருந்துமேயன்றி, நம்பியாரூரரைத் தலைவராகக் கொண்டது என்றல் பொருந்தாது. அவ்வாறாயின் திருமலைச் சிறப்பில் ஆலாலசுந்தரரின் நிகழ்ச்சியைக் கூறியது எற்றுக்கு எனின், முதனூலாசிரியரின் வரலாறு கூறுவதற்கே என்க. இது அப் பகுதியின் முடிவால் நன்கு பெறப்படும். நம்பியாரூரரின் புராணத்தை ஓரிடத்தில் கூறி முடிக்காமல். தடுத்தாட்கொண்ட புராணத்திலும், ஏயர்கோன் கலிக்காம நாயனார் புராணம் கழறிற்றறிவார் புராணங்களிலும், இறுதியில் வெள்ளானைச் சருக்கத்திலும் கூறியது எற்றுக்கு எனின்,

“அந்தமில் புகழ் ஆலால சுந்தரன்
சுந்தரத் திருத்தொண்டத் தொகைத்தமிழ்
வந்து பாடிய வண்ணம் உரைசெய்வாம்”

எனச் சேக்கிழாரே திருக்கூட்டச் சிறப்பின் (திருநகரச் சிறப்பு) இறுதியில் கூறியாங்கு, தடுத்தாட்கொண்ட புராணத்தின் காரணம் புலப்படுகின்றது. ஏயர்கோன், கழறிற்றறிவார் ஆகியோர் நம்பியாரூரரின் சமகாலத்தவர்கள், அமரோடு தொடர்புடையவர்கள் ஆதலின் அவர்களின் சரிதத்தில் அவரது வரலாற்றைக் கூறினார். இறுதியில் அவர் கைலை சென்றமையை வெள்ளானைச் சருக்கத்துட் பாடினார். திருத்தொண்டத்தொகை விரிக்கு ஒரு முன்னுரையும் முடிவுரையும் போலவே, தடுத்தாட்கொண்ட புராணமும் வெள்ளானைச் சருக்கமும் முறையே அமைகின்றன. அவற்றிலும் இடையில் பிற நாயன்மார் வரலாறுகளிலும் நம்பியாரூரரின் சரிதத்தை அடக்கிக்

கூறியமை சேக்கிழாரின் காப்பி உத்தி. அதனுலேயே புராணம் எழுதும் நம்பியாரூரரின் சரிதையாகி விடாது. "பிள்ளை பாதி புராணம் பாதி" என்ற பழமொழியின்படி திருஞான சம்பந்தரின் வரலாற்றில் ஒரு பாதிக் காப்பியம் செல்ல, மறுபாதியில் உள்ள அறுபத்திரண்டு அடியார்களுள் ஒருவராகிய நம்பியாரூரரின் வரலாறு ஏறக்குறைய மறந்துபோகும் அளவு, பெருக்கத்திலும் ஆழத்திலும் மிக்கனவாகப் பிற அடியார்களின் வரலாறுகள் உள்ளன.

இதுவரை கூறியவற்ருல் முதலியாரின் கூற்றுப்படி நம்பியாரூரர் காப்பியத்தலைவர் ஆகார். தலைமையைக் கொண்டு காப்பிய மரபை நிலைநாட்ட முயலாமல், வேறு வழியில் நிலை நாட்டுதலே ஏற்புடையது என்க. வேறு வழியாது ?

3. 4. ஆங்கில இலக்கியத்தில், Elizebethan Poetry-யைச் சேர்ந்த, Spenser இன் Faerie Queene சேக்கிழாரின் திருத்தொண்டர் புராணத்தைப் போலப் பல கதைகளின் கோவையே. அதனை undramatic poetry என அழைக்கும் Roger sale என்னும் திறனுளி, அது பற்றி எழுதுவதைக் காண்போம் :

"........I want to call The Faerie Queene undramatic rather than thematic or allegorical. In principle at least the poem is endless, and there is nothing in its frame work to prevent it from going on and on as long as Spenser can think of events to relate.........what holds "The Faerie Queene" together,...............is not so much a conceptual idea as a state of mind. No matter how long one has been away from the poem, no matter where one picks it up, no matter how long one reads, it always seems the same".[1]

இக்கூற்றுத் திருத்தொண்டர் புராணத்திற்கும் பொருந்துகிறது. அது ஒரு தலைவனின் கதையன்ருதலின் ஒரு கரு உடையதன்று. 63 அடியார்களின் வரலாறுகளைக் கூறியதே போல இன்னும் பல அடியார்களின் வரலாறுகளை அது கூறலும் அதன் போக்குக்குப் பொருந்தும். அவ் வரலாறுகளில் உள்ள பொதுமை, ஏதோ ஒரு கருத்துக்

1. Spenser's undramatic poetry, Elizebethan poetry Ed. by Paul J. Alpers, 1967, page 427.

கொள்கை என்பதை விடத் தொண்டர்களின் குறிப்பிட்ட மனநிலையே—மனப் பக்குவமே எனலாம். அதுவே அவர்களின் பல திறத்து வரலாறுகளைப் பிணைக்கின்றது.

தொண்டர்களின் இந்த மனப்பக்குவத்தைச் சேக்கிழார், இறைவன் நம்பியாரூரர்க்குத் தொண்டர்களின் பெருமையைச் சொல்லுமுகமாகப் பின்வாறுமாறு கூறுகின்றார் :

"பெருமையால் தம்மை ஒப்பார்
பேணலால் எம்மைப் பெற்றார்
ஒருமையால் உலகை வெல்வார்
ஊனம்மேல் ஒன்றும் இல்லார்
அருமையாம் நிலையில் நின்றார்
அன்பினால் இன்பம் ஆர்வார்
இருமையும் கடந்து நின்றார்
இவரைநீ அடைவாய் என்று"[1]

தொண்டர்களுள் உயர்வு தாழ்வு இல்லை. அன்பினால் வழிபாடு செய்து இறைவனை உணர்ந்து, அவனருளைப் பெற்றவர்கள்; உலகையே வெல்லும் மனவொருமைப்பாடு உடையவர்கள்; எவ்விதக் குறையும் அவர்கள் மனத்தில் இல்லை. செய்வதற்கரிய தொண்டுகளைச் செய்பவர்கள்; யாவர்க்கும் அன்பு காட்டி அதன்வழி இன்பம் அடைபவர்கள்.

*3. 4.1* இது திருத்தொண்டர்கட்கெல்லாம் பொதுவான மனநிலை. இதுவே நோக்காக, பாவிகம் என்னும் காப்பியப் பண்பாக அமைந்து, திருத்தொண்டர்களின் வரலாறுகளைப் பிணைத்துக் கொண்டிருக்கின்றது. அவ்வாறாயின், இவ்வரலாறுகளைச் சருக்கம் மாற்றியும் சருக்கத்தினுள்ளும் இடம் மாற்றியும் அமைத்தாலும் ஒன்றும் கெட்டு விடாது என்று கருதலாகாது.

Roger Sale, "Faerie Queene" பற்றி மேலும் எழுதுவனவற்றைக் காண்போம் :

"Just because the story of Britomart exists as a narrative indipendently of the story of the squire of Dames, just because in some

---

1. தடுத்தாண்டகொண்ட புராணம் : 196.

ways the story of Britomart in the Castle Joyeous exists independently of her subsequent rescue of Amoret, the poem is not therefore a hodge-podge. But in a poem as long, as even in tone, as repetitious in its events, the major organizing fact is going to be sequence, pure and simple". [1]

இவர் கூற்றுப்படி Faerie Queene இன் கதைகளை ஒரு குறிப்பிட்ட முறையில் தொகுத்துள்ள வைப்பு முறையே அதன் அமைப்பாகும். சேக்கிழாரின் காப்பியத்திலும் ஒரு வைப்பு முறையில் திருத்தொண்டர்களின் வரலாறுகள் கூறப்படுகின்றன. அவை ஓர் அமைப்பை உருவாக்கியுள்ளனவா என்று காண முயல்வோம்.

அவ்வாறு ஓர் அமைப்பு இருக்குமாயின் அந்தப் பெருமைக்குரியவர்,

> "தம்பிரான் தோழரவர் தாம்மொழிந்த தமிழ்முறையே
> எம்பிரான் தமர்கள்திருத் தொண்டேத்தல் உறுகின்றேன்"[2]

என்று சேக்கிழார் கூறுதலின், நம்பியாரூரரே என்று கூற வேண்டும். ஆயின் சேக்கிழாருக்கு அதில் பங்கு இல்லையா எனின், உண்டு என்க. என்னை? நம்பியாரூரர் திருத்தொண்டத் தொகையில், திருத்தொண்டர் பெயர்களை மட்டுமே, சிலர் பெயர்கட்குப் பொருள் பொதிந்த அடைமொழிகளுடன் வரிசைப்படுத்துகின்றார். அவ்வைப்பு முறைக்குக் காரணம் கூறவில்லை. சேக்கிழார் தாம் திருத்தொண்டர்களின் வாழ்க்கை வரலாறுகளை எல்லாம் பல மூலங்களிலிருந்து திரட்டி அறிந்து கொண்டதோடு, நம்பியாரூரர் கையாண்ட வைப்பு முறையின் காரணத்தையும் அவ்வாழ்க்கைப் பண்புகளிலிருந்து ஆய்ந்து தெரிந்து கொண்டிருக்கின்றார். ஆதலின் காப்பிய அமைப்பிற்கு ஏறத்தாழ அவரே உரிமையுடையவர் ஆகிறார்.

*3. 4.2.* ஒரு தலைவனின் அல்லது தலைவியின் சரிதம் காப்பியப்படுமாயின், அச்சரிதத்தின் தொடர்ச்சியே காப்பியத்தில் சந்தி (Sequence) ஆகின்றது. ஆனால் பலரது வரலாறு காப்பியப்பட்டுள்ள திருத்தொண்டர் புராணத்

1. Spenser's undramatic Poetry : Page 427.
2. தடுத்தாட்கொண்ட புராணம்: 203.

தில், காப்பியத்தின் நோக்காகிய ஆன்மீக வீரம் என்பதன் பல கோணங்களுள் ஒரு கோணம் ஒரு சருக்கம் முழுவதிலும் வரும் திருத்தொண்டர்களின் சரிதங்களிலும், பிறிதொரு கோணம் அடுத்த சருக்கத்தில் இடம் பெறும் திருத்தொண்டர்களின் சரிதத்திலும் காட்டப்பெறுவதால் சந்தி பெறப்படும். அல்லது ஒரு சருக்கத்தினுள்ளேயே கோண வேறுபாடுகள் காட்டப்படுவதால் பெறப்படும். சுருங்கக் கூறுமிடத்து, திருக்தொண்டர்களின் சரிதங்கள் அடுத்தடுத்து உள்ளவற்றை ஒப்பு நோக்கி ஒப்புமையும் வேற்றுமையும் அறிவதால் இச் சந்தித் தொடர்ச்சி பெறப்படும். நம்பியாரூரரின் சரிதத்தைத் தொடக்கம், நடு, இறுதிகளில் அமைப்பதும், சருக்கத்தின் இறுதிதோறும் அவருக்கு வாழ்த்துப் பாடுவதும் கொண்டு, திருத்தொண்டர் புராணம் முழுவதும் அவரது சரிதையே என்று கூறுவதை விட, இவ்வமைப்பு காப்பியத்திற்கு ஆசிரியர் அளித்த மேலோட்டமான அமைப்பு (Formal Structure) என்றும், நாம் மேலே குறிப்பிட்ட சந்தித் தொடர்ச்சியே காப்பியத்திற்கு அவர் அமைக்கும் 'செயல் முறை அமைப்பு' (Operative structure) என்றும் கூறுவது பொருந்தும். இனி இச் சந்தித் தொடர்ச்சியினைக் காட்டப் புகுவோம்.

*3. 4.3* காப்பியத்தின் நோக்கத்தினை விளக்குவதாக அமையும் இச்சந்தித் தொடர்ச்சியில் முதல் கூறுபாடாக அல்லது அதன் முகமாக (Introduction) திருமலைச் சருக்கத்தின் உயிர்நாடியாகிய திருநகரச் சிறப்பு அமைகிறது. அது திருக்கூட்டச் சிறப்பையும் தன்னுட் பெற்றிருத்தலின் திருத்தொண்டர் புராணம் முழுமைக்கும் முகமாக (Introduction) அமைகின்றது. திருநகரச் சிறப்பில் சேக்கிழார் மனுவேந்தனின் வரலாற்றைக் கூறுகின்றார். அதைக் கூறுவதன் நோக்கமே, காப்பியத்தில் உள்ள சந்தித் தொடர்ச்சிக்கு, அது முகமாய் அமைவதைக் கருதியது ஆகும். திருத்தொண்டர்களின் வீரம் என்பது, அவர்தம் சிந்தையில் கொண்ட கொள்கையினின்றும் வழாமை யாகும். மனுவேந்தன் "மன்னுயிர்கட்கெலாம் கண்ணும் ஆவியுமாய்" அறநெறி வழுவாமல் இருந்தமையும், அவனது "பனிப்பில் சிந்தையினில் உண்மைப்

பான்மை சோதித்தால் என்ன” நிகழ்ந்த பசுங்கன்றின் நிகழ்ச்சியும், தன் மைந்தனையே தேர்க்காலில் ஊர்ந்து அறத்தை நிலை நாட்டியமையும், சோதனைக்கும் உலகியற் பாசத்திற்கும் வேறு எதற்கும் தளர்ந்து தயங்கி விடாமல், அன்பின் காரணமாகத் தாம் மேற்கொண்ட கொள்கையில் விடாப்பிடி காட்டுகின்ற திருத்தொண்டர்களின் சரிதங்களுக்குப் பொருத்தமான முன்னுரையாக அமைகின்றது. மேலும் அறநெறியில் நிற்றலும் இறையருளைப் பெறுதலும் வேறு வேறானவை அல்ல; அறநெறி வழாதவர்க்கு இறையருளும் கிடைப்பதற்கு மனுவேந்தனின் வரலாறு சான்று பகர்கின்றது.

*3. 4.4* புராணத்துள், ஒவ்வொரு சருக்கத்திலும் முதல் திருத்தொண்டராக இடம் பெறுபவர், முதற் சருக்கத்து முதல் தொகையடியாராகிய “தில்லை வாழ்ந்தணரைப்” போல யாதேனும் ஒரு வகையில் திருக்கோயில் பணி—பாடும் பணி உட்பட—செய்தவர்களாக அமைதல் சைவ சமயத்திற்குச் சிறந்த கோயில் வழிபாட்டை நினைவுறுத்துகின்றது எப்பொருளையும் ஆக்குபவனாகிய இறைவன், ஆளுடைய நாயகனாக வீற்றிருக்கும் இடம் கோயில் ஆதலின், இவ்வகையில் குறிக்கப்படும் திருத்தொண்டர்கள், தில்லை வாழந்தணர், எறிபத்தர், மூர்த்தி, திருநாவுக்கரசர், திருஞானசம்பந்தர், சாக்கியர், பொய்யடிமை இல்லாத புலவர், கணம்புல்லர், கழற்சிங்கன், பத்தராய்ப் பணிவார்கள், பூசலார் ஆகியோர். எறிபத்தர், கோயிற் பணி செய்த சிவகாமியாண்டாரைத் தகைந்த யானையைப் பரசால் எறிந்து கொன்றமையின், அவரும் கோயிற் பணியே செய்தவர்.

*3. 4.5* முதற் சருக்கத்துள், இரண்டாவதாக இடம் பெறுபவர் திருநீல கண்டர். இவர் குயக் குலத்தவர். இவர் முதலில் இளமை மீதூரா இன்பத் துறையில் எளியராய்ப் பரத்தையில்லம் அணைந்து வந்தார் ஆயினும், மனைவியார் ‘எம்மைத் தீண்டுவீராயின் திருநீல கண்டம்’ என ஆணையிட்டவுடன் திருநீலகண்டத்தின் மீதுள்ள அன்பால், “எம்மை என்றதனால் மற்றை மாதரார் தம்மையும் என்தன் மனத்தினும் தீண்டேன்” என்று அவர் கூறி, முதுமை

எய்துங்காறும் அவ்வுறுதியை அயலறியாமலும் காத்து வந்தமை, அவரும் தில்லைவாழந்தணர் போலவே, "செம்மையால் தணிந்த சிந்தை" உடையவர் என்பதைக் காட்டும். அது பற்றியே சேக்கிழார் அவரை "ஆணை கேட்ட பெரியவர்" என்று சிறப்பிக்கின்றார்.

*3. 4.6* மூன்றாவதாக இடம் பெறும் இயற்பகையோ, இல்லை என்னாது கொடுக்கும் இயல்பிற்கேற்பத் தம் மனைவியை அடியார்க்கு அளிக்கச் சித்தமானார். சிற்றின்பத் துறையில் எளியராம் அளவு சென்ற ஒருவர் தம் இளமை துறப்பதும், அதை அயலறியாமல் காப்பதும், இயற்கைக்கு மாறான செயல்களே. அதைப் போலவே மனைவியை மற்றவனுக்கு அளிப்பதும் இயற்கைக்கு மாறான செயலே. இளமை துறப்பதிலும் அருமை அதனை அயலறியாது காத்தல். அதைப்போல், மனைவியை அடியார்க்கு அளித்தலினும் அருமை, அவரை ஊரின் எல்லையில் உள்ள கானகத்தின் அளவும் பாதுகாப்பாக உடன்சென்று விட்டமையும் எதிர்த்த சுற்றத்தாரை அழித்தமையும்.

*3. 4.7* நான்காவதாக வருபவர் இளையான்குடி மாறர். அவரும் விதை நெல்லைக் குற்றுண்ணாத உலகியற்கையை மீறியே முதல்நாள் விதைத்த நெல்லையும் வாரிக்கொண்டு வந்து, வீட்டுக்கூரையை விறகாக்கி அடியார்க்குச் சோறாக்கினார். நாளைக்கு உணவுக்கென விதைத்த நெல்லையும் இருந்து வாழும் வீட்டையும் சிதைத்து விருந்திட்டார். அரசரின் இயற்கை, பகைவரை வென்று தீர்த்தல். ஆனால், மெய்ப்பொருள் நாயனாரோ அவ்வியற்கைக்கு மாறாகத் தம் பகையைத் தியாகம் செய்தார்; முத்தநாதப் பகைவனின் சிவவேடம் கண்டு, அவன் வாளால் குத்தவும் 'எம்பிரானன்பர் என்று' அவனைத் தொழுது, உயிர்விட இருப்பவர், அவனைப் பாதுகாப்பாக நகரெல்லையில் விடுமாறு மெய்க்காப்பாளனுக்கு ஆணையிட்டார். அடுத்துவரும் விறன்மிண்டர், "சிவனார் செய்ய கழல்பற்றி எப்பற்றினையும் அற எறிவார்," சிவனடியார் தம்மைத் தொழுதுவந் தணையாது ஒதுங்கும் வன்றொண்டரைப் "புறகு" என்று உரைத்தார். ஊரெல்லாம் கொண்டாடும் வன்றொண்டரை இவர் "புறகு" என்றார். இஃது ஊர் இயற்கைக்குப் பகை

யன்றோ? மேலும், அவ்வன்றொண்டருக்குத் தம்பிரானும் நண்பர் எனத் தம்மைக் கூறிய இறைவனையே, தம் சொந்த அன்பிற்கும் மாறாகப் "புறகு" என்றார். இறைநெறித் தூய்மையைக் காப்பதற்காக இறைவனை மதிக்கும் மதிப்பையே தியாகம் செய்தார். இத் தைரியம் யாருக்கு வரும்? மெய்ப்பொருள் நாயனர் எந்த உணர்ச்சியால் (சிவ வேடத்தை மதித்தல்) பணிந்து வென்றாரோ, அதே உணர்ச்சியால் எதிர்த்து வென்றார் விறன்மிண்டர். அந்த எதிர்ப்பின் விளைவாகத் திருத்தொண்டர் தொகையைப் பாடினர் நம்பியாரூரர். வணிகர் துலையால் நிறுத்தி ஊதியம் ஈட்டுவது இயல்பு. ஆனால், தம்மிடம் தரப்பட்ட கோவணம் காணாமற் போனதற்காக, தம்மையும் குடும்பத்தாரையும் துலையில் நிறுத்திக்கொண்டு, கோவணத்திற்கு ஈடாகக் கொடுக்கத் துணிந்தமையும் வணிகர் இயற்கைக்குப் பகையே.

இங்ஙனம் இயற்கைக்கு மாறான செயல்களை - "செயற்கருஞ் செய்கைகளை"[1]த் தம் மனவுரத்தால் செய்த திருத்தொண்டர்கள் முதற் சருக்கத்தில் இடம் பெறுகின்றார்கள், கோயிற் பணி செய்த தில்லை வாழந்தணரைத் தவிர. இவரனைவரும் மனவுரத்தால் ஒவ்வொரு வகையில், இறையன்பு, அடியார்பால் அன்பு கருதித் தியாகம் செய்த ஆன்ம வீரர்கள். இவருள் அமர்நீதியார் தம்முட்படச் சர்வ பரித்தியாகம் செய்தவர். "புவனம் யாவையும் நேர்நிலா எம்பிரான் திருவரைக் கோவணம் அதுவும் கொண்ட அன்பினில் குறைபடா அடியவர் அடிமைத் தொண்டும் ஒத்தலால் ஒத்து நேர் நின்றது அத்துலை".

*3. 4.8* "இலை மலிந்த வேல் நம்பி எறிபத்தர்" என்று தொடங்கும் இரண்டாம் சருக்கத்துள் ஆனயர் ஒருவரைத் தவிர ஏனையோர் ஆயுதம் ஏந்தி, அன்பால், வன்மை செய்தவர்கள். முதற் சருக்கத்தில் போந்தவர்கள் ஆயுதந் தாங்காமலே வெறும்மனவுரத்தால் அருமை புரிந்தவர்கள். அடியாரைத் தகைந்த யானையையும், அதைத் தடுக்காத பாகரையும் மழுவினால் எறிந்தார்எறிபத்தர். சிவனடியாரை

---

1. செயற்கருஞ் செய்கை செய்த தீரனே ஓலம்"-இயற்பகை: 29

மதியாதாரை அவர் தண்டித்தார். அடுத்து வரும் ஏனாதி நாதர், சிவனடியார் வேடத்தை மதித்துப் பகைவனின் வாளுக்குப் பலியானார். இந்த வேறுபாட்டினால் விளையும் பொருள்நலம், இவ்விரு வரலாறுகளும் அடுத்தடுத்து வைக்கப்பட்டதனால் விளைவதே. இவற்றை இடம் மாற்றி வைத்தால் இப் பொருள் நலம் கெடும். அடுத்துவரும் கண்ணப்பர், இலிங்கபூசைக்கு வேண்டிய முறையான பொருள்களுள் ஒன்றையும் அறியாதவர். அவரது செருப் படியையும், எச்சில் நீரையும், சுவை பார்த்த ஊனையும் இறைவன், "அவனுடைய செயல் எல்லாம் நமக்கு இனிய வாம்" என்று ஏற்றார். அடுத்துவரும் குங்குலியக் கலயரோ, பூசைப் பொருளான குங்குலியம் வாங்கத் தம் மனைவியின் தாலியையும் விற்றவர். கண்ணப்பர் தம் கண்ணை அம்பால் இடந்து அப்ப இறைவனின் கண்ணில் குருதி நின்றது. குங்குலியக் கலயர் தம் உடலில் சங்கிலி பூட்டித் திருப்பனந்தாள் கோயில் இலிங்கம் சாய்ந்திருந் ததை, அரசனின் யானைப்படை எல்லாம் சங்கிலி கட்டி இழுத்தும் நேராகாத இலிங்கத்தை, தாம் ஒருவரே "நண்ணிய ஒருமையன்பின் நாருறு பாசத்தாலே திண்ணிய தொண்டர் பூட்டி இளைத்து" நிற்க, "அண்ணலார் அவ் வொருப்பாடு கண்டபோதே நேரே நின்றார்"[1]. கண்ணப் பரும் இந்தத் திண்ணப்பரும் கொண்ட பூசைப்பொருள் களில் இருந்த வேறுபாடு பெரிதன்று. கண்ணையும் உடலை யுமே இறைவனுக்கு அளிக்க முந்திய செயலில் இருந்த அன்பும் பரிவும் ஆதுரமுமே முக்கியமானவை. இவையே ஒருவர் வகையில், இறைவனின் கண் குருதியை நிறுத்தின; மற்றொருவர் வகையில், இலிங்கத்தை நேராக நிறுத்தின. கண்ணைக் கொடுத்தார் திண்ணனார்; கண்போல் வளர்த்த அருமை மகளின் திருமண விழாவில், அடியார் விரும்பினார் என்பதற்காக, வாள்கொண்டு அந்த மகளின் கூந்தலை அறுத்து அவருக்கு அளித்தார் மானக்கஞ்சாறர். மகளின் திருமணக் கோலத்தைக் கண்டு மனமகிழும் நாளில் அவளது கூந்தலை அடியார்க்கு அளிக்கும் பாசத் தியா கத்தை அடியாரன்பினால் செய்தார் மானக்கஞ்சாறர். உடலை நிலைநிறுத்துவதாகி உணவு இல்லாத போதும்,

1. குங்கிலியக் கலயர் : 28.

பசியால் மெலிந்து தளர்ந்த போதும், மனம் தளராமல், செங்நெல்லரிசிச் சோறும் செங்கீரையும் மாவடுவும் இறைவனுக்கு அன்புடன் ஊட்டுவதற்கு எடுத்துச் சென்ற அரிவாட்டாயர் கண்ணப்பரைப் போன்றவர் அன்ருே? "நீர் பசித்திருக்க இங்கு நிற்கவும் கில்லேன்" என்று சோர்தரும் கண்ணீர் வார, அன்பு கொண்டுய்ப்பக் கண்ணப்பர் சென்றதைப் போலவே, தாயரும் தமக்கு உணவின்றி, மனைவியார் தண்ணீர் வார்க்க அதனைப் பருகி, முன்பு போல் முதல்வனுரை அமுது செய்விக்க மூளும் அன்புபோல் தூய செங்நெல் முதலியன சுமந்து சென்ருர். உண்ணு மெலிவால் தள்ளாடி வீழ்ந்தார். உணவெல்லாம் கமரில் கவிழ்ந்தன. "அல்லல் தீர்த்தாள வல்லார் அமுது செய்தருளும்" காலத்தில் நான் சென்று சேர முடியவில்லையே என்று, அரிவாளைத் தம் கழுத்தில் இட்டு அறுத்துக் கொள்ளத் துணிந்தார். கண்ணப்பரைக் கண் அப்ப என்று தடுத்த கை இவர் கையையும் தடுத்தது. இறைவன் உண்பதை உணர்ந்தால் தான் இவர் மனத்தின் ஏக்கம் மாறும் என்று, இறைவன் மாவடுவைக் கடித்து உண்ணும் விடேல் விடேல் என்னும் ஒலியும் கமரிலிருந்து கேட்டது. அன்பு கண்டால் ஆலயத்தில் இருந்து மட்டும் அன்றிக் கமரில் வந்தும் இறைவன் அமுது செய்வான் என்று உணர்த்தி, கண்ணப்பரின் வாயில் சுவை பார்த்து எச்சிற்பட்டதையும் அமுதாக ஏற்றுக் கொள்வான் என்பதோடு ஒப்ப வைத்து எண்ணத் தக்கது இது.

*3. 4.9* இச் சருக்கத்தின் இறுதியில் வரும் ஆனுயர், முற்போந்தவர்களுடன் முரணுல் பொலிகின்ருர்; ஆயுதம் ஏந்தவில்லை; எந்தத் தியாகமும் செய்யவில்லை; குழல் ஏந்தினுர்; அற்புதமான இசையில் திருவைந்தெழுத்தை வாசித்தார். முற்போந்தோரின் அன்பு, ஆயுதத்தின் வழியே செயற்பட்டுத் தியாகமாக—செயலாக உருவம் கொண்டது. ஆனுயரின் "மனத்தன்பின் விளைந்த இசைக் குழலோசையும் வையந்தன்னையும் நிறைத்து வானந்தன் வயமாக்கிப் பொய்யன்புக் கெட்டாத பொற் பொதுவில் நடம் புரியும் ஐயன்றன் திருச்செவியின் அருகணையப் பெருகியது." அன்பு ஒன்று அதன் வெளிப்பாடு வேறு

வேறு. கொன்றை மரத்தைப் பார்த்துச் சிவபெருமான் திருவுருவம் அதனிடத்துத் தோன்ற, அதைக் கண்டு உருகி, ஒன்றிய சிந்தையில் அன்பை உடையவர்பால் மடைதிறந்த ஆனயரின் செயல்,

"நெடிது போதுயிர்த்து நின்று
நிறைந்தெழு மயிர்க்கால் தோறும்
வடிவெலாம் புளகம் பொங்க
மலர்க்கண்ணீர் அருவி பாய
அடியனேற்கு இவர்தாம் இங்கே
அகப்பட்டார் அச்சோ"

என்று திண்ணனர் உருகி நின்றதோடு ஒப்பு நோக்குமாறு ஒரு சருக்கத்துள் அமைந்தது.

*3. 4. 10* மூன்றும் சருக்கத்தில் வருபவர் அனைவரும் வழிபாட்டுக் கடமை தவருதவர்கள். அவருள் திருக் குறிப்புத் தொண்டர், திருத்தொண்டர்களை வழிபட்டவர்; நாள்தோறும் அவர்களது ஆடைகளை வெளுத்துக் கொடுத் தவர். பிறர் திருக்கோயில்பணி செய்தவர்கள். சண்டேசர் தாமே அமைத்த மணற்கோயிலில் அபிடேகப்பணி செய் தவர். இறைவழிபாடும் அடியார் வழிபாடும் ஒரு படித் தானவை என்று காட்டுவது இச் சருக்கத்தில்வரும் சந்தித் தொடர்ச்சி. சந்தனம் அரைக்கும் வழிபாட்டுக்கடமை முட்டிற்று என்று, அரைக்கும் கல்லில் முழங்கையைத் தேய்த்து, 'கட்டும் புறந்தோல் நரம்பு என்பு கரைந்து தேய' நொந்தார் மூர்த்தியார். அடியார்க்கு எனத் தோய்த்த ஆடை புலராதவாறு மழை பொழிந்ததே, அவர் குளிரால் வருந்துவரே என்று துவைக்கும் கல்லில் தலையை மோதிக் கொண்டார் திருக்குறிப்புத் தொண்டர். நாள் தவருமல் இறைவனை மலர் பறித்திட்டு அருச்சித்தவர் முரு கனர். உருத்திர பசுபதியோ, நாள்தோறும் கழுத்தளவு தண்ணீருக்குள் நின்று உருத்திர மந்திரம் செபித்து வழி பட்டவர். கோயிலை நெருங்கி உள்புகமுடியாத குலத்தில் பிறந்த நந்தனர் கோயிலுக்கு முரசு, வீணை முதலிய வற்றுக்கு வேண்டிய தோலும், நரம்பும் கொடுத்தும், குளம் வெட்டியும், தில்லைக்குச் செல்ல விரும்பி, குலம் இடம் தராமையால் தொடர்ந்து நாளைப் போவேன் என்று

ஆரா அன்பால் மொழிந்தவர். தீயில் வீழ்ந்தெழுந்து, தூயராகித் தில்லை மன்றுள் சென்று, 'ஐயரே' என அந்தணர் அழைத்து வணங்க, பெருமானுடன் கலந்து மறைந்தவர். சண்டேசர், தந்தை அபிடேகச் செயலைச் சிதைத்தமைக்கு வெகுண்டு அவர் காலை வெட்டியவர். இவ் வரலாறு அனைத்திலும் 'வழிபாட்டுத் தொடர்ச்சி' என்னும் பண்பு அமைதலைக் காணலாம். 'நாளைப் போவேன்' என்று நாள்தோறும் நினைத்ததும் மனம் நாள்தோறும் சென்ற தொடர்ச்சியைக் காட்டும். அபிடேக வழிபாடு, தந்தையின் செயலால் இடையூறு பட்டதைக் கண்டே சண்டேசர் வெகுண்டார். இவ்வழிபாட்டுத் தொடர்ச்சியைக் காத்தமை இவர்களது அன்புத் தொடர்ச்சியைக் காட்டும். முருகனாரும் பசுபதியாரும் அந்தணராகப் பிறந்தவர்கள். அவர்களை அடுத்து வரும் நாளைப் போவாரோ, தில்லை வாழந்தணராலேயே 'ஐயர்' என வழங்கப்படும் அளவு அன்பால் உயர்ந்து நின்றவர். இவர் வரலாற்றோடு, அந்தணனாகப் பிறந்தும் வழிபாட்டுப் பெருமையை அறியாதுபோன எச்ச தத்தனை உறழ்ந்து காணவேண்டும். அடியார்களின் குறிப்பு அறியும் தொண்டனாரின் அறிவு கூட அவனுக்கு இல்லாது போயிற்றே என்பதை இச் சந்தித் தொடர்ச்சி அறிவிக்கின்றது.

*3. 4. 11* அடுத்த சருக்கத்தில், முதல்வர் திருநாவுக்கரசர். சைவம் விட்டுச் சமணம் புகுந்து பின்பு தப்பிச் சைவம் சார்ந்து உய்ந்தவர். குலச்சிறையோ தம்மைச் சுற்றிலும் சமணமாக இருந்தும், தம்மைப் பணி கொண்ட பாண்டியன் சமணனாக இருந்தும், தாம் அதைத் தழுவாது சைவராகவே இருந்தது அன்றியும், பாண்டிய நாட்டில் சமணம் நீங்கிச் சைவம் மலரவும் தொண்டாற்றினார். அது பற்றியே பெரு நம்பி எனப்பட்டார். இவர் இருவரும் திருஞான சம்பந்தர்பால் பேரன்பு கொண்டவர்கள். சம்பந்தரும் நாவரசரும் சைவத்தின் புண்ணியக் கண்கள் என்றால், குலச்சிறையும் பாண்டிமாதேவி மங்கையர்க்கரசியும், பாண்டிய நாட்டுச் சைவ மறுமலர்ச்சிக்கு இரு கண்கள். திருஞான சம்பந்தர்பால் அன்பு பூண்ட நீலநக்கரும் இச் சருக்கத்துள் வருகின்றார். திருநாவுக்கரசரைச் சிவன் எனவே வணங்கி அவர் பெயரைக் கூறியே

உய்ந்த அப்பூதியும், நம்பியாரூரரை வணங்கி அவர் பெயரைக் கூறியே உய்ந்த பெருமிழலைக் குறும்பரும் இச் சருக்கத்தில் வருகின்றனர். நம்பியாரூரர் திருவஞ்சைக் களத்திலிருந்து வெள்ளையானை மீதிவர்ந்து கைலைக்குச் சென்றதைத் தொலைவில் உணர்ந்து, "கண்ணிற்கரிய மணி கழிய வாழ்வார்போல வாழேன்" என்று, யோகத்தால் கைலையை ஆரூரர்க்கு முன் சென்றடைந்தார். அவர்க்கு அடுத்துவரும் காரைக்காலம்மையாரோ அக் கைலையைத் தலையால் நடந்து அடைந்தார். திருநாவுக்கரசரோ காலால் நடந்து, கால் குதி தேய, கையால் தவழ்ந்தும், கை எலும்பு தேயக்கண்டு 'மெய் கலந்தெழு சிந்தை அன்பின் விருப்பு மீமிசை பொங்கிட......வருந்தி உந்தினர் மார்பினுல்." "மார்பமும் தசை நைந்து சிந்தி, வரிந்த என்பு முரிந்திட.... புரண்டு புரண்டு சென்றனர். பின்னர் செயலற்றுத் தங்கினர். பின்பும் கைலை செல்லாது இறையருளால், தீங்கு நீங்கிய யாக்கை பெற்றுத் திருவையாற்றில் கைலைக் காட்சி பெற்றனர். நீலநக்கர், தம் மனைவியார் தாய் அன்பால் இலிங்கப் பெருமான்மேல் சிலந்தி விழுந்த தென்று ஊத, எச்சில் பட்டுவிட்டதென்று வருந்தவும், பெருமான் அவரது கனவில் தோன்றித் தம் உடலில் அம் மையார் ஊதிய இடம் தவிர மற்ற இடம் கொப்புளம் கண்டிருப்பதைக் காட்டியவுடன் எச்சில், தீண்டாமை ஆகிய கருத்துக்களை விட்டு ஒழித்து, திருஞானசம்பந்தருடன் தம் இல்லத்திற்கு வந்த திருநீல கண்ட யாழ்ப் பாணர்க்கு ஓமகுண்டத்திற்கு அருகே, அவர்தம் பாடினி யோடு துயில இடங்கொடுத்தார். அவரை அடுத்து வரும் நமிநந்தி, தண்ணீரைக்கொண்டு விளக்கெரிக்கும் திரு வருளைப் பெற்றாராயினும், திருவிழாப் பார்த்து வந்தவர், பலரும் வந்ததால் தீட்டுப்பட்டு விட்டது எனக் கருதி, இரவில் வழக்கப்படி வழிபாடும் செய்யத் தயங்கினாராக, மறுநாள் திருவாரூரில் பிறந்த அனைத்து மக்களும் சாதி வேறுபாடின்றிச் சிவகணங்களாகத் தோன்றக் கண்டார். மற்றொரு சந்தித் தொடர்ச்சியாவது; காரைக்கால் அம் மையார்க்குத் திருவருட்பெருமையை உணரும் கணவன் வாய்க்கவில்லை, அடுத்து வரும் அப்பூதியடிகளார்க்கோ, அடியாரை வழிபடுதலில் ஒத்த உள்ளம் உடைய மனையா

ளும் மைந்தரும் வாய்த்தார்கள். அடுத்து வரும் நீலநக்கர்க்கும் அவ்வாறே. மற்றுமொன்று, காரைக்காலம்மையாரின் அன்பும் நீலநக்கரின் மனைவியாரின் அன்பும் ஒப்பு நோக்கத் தக்கவை.

*3. 4. 12* நான்காம் சருக்கத்தில் வருபவருட் பெரும்பாலோர் மறுத்தலாகிய பண்பு மிக்கவர்கள். திருஞானசம்பந்தர், சமண பௌத்த மதங்களை மறுத்துச் சைவத்தை மறுமலர்ச்சி பெறச் செய்தவர். "திசையனைத்தின் பெருமையெலாம் தென்றிசையே வென்றேற", தாவில் சராசரங்கள் எல்லாம் சிவம் பெருக்கியவர். ஏயர்கோன் கலிக்காமர், நம்பியாரூரர் இறைவனைத் தூது விட்ட செயலை ஏலாது மறுத்தவர். அவரால்தான் தமது வயிற்றுநோய் தீரவேண்டும் என்றால், அவரைக் காண்பதை விட உயிர் விடுவதே நன்று எனத் துணிந்தவர். இவர்களின் சரிதங்கள் அடுத்தடுத்து வருவதில் மற்றுமொரு சந்தித் தொடர்ச்சி உள்ளது. மூன்றாண்டுப் பாலகராய் அம்மையையும் அப்பனையும் நினைந்து அழுதது முதல் இறுதிவரை திருஞானசம்பந்தர் கேட்டவற்றை எல்லாம், எவ்விதச் சோதனையும் இன்றி, மறுக்காது அருளிய இறைவன், ஏயர்கோனின் சரிதையில் கூறப்பட்டவாறு, நம்பியாரூரர் கேட்டவற்றைத் திருவிளையாடலும் சோதனையும் நிகழ்த்தியே கொடுத்தான். பெண்ணையாற்றில் இட்டுக் குளத்தில் தேடியபோது மறைத்துப் பரவை பரிகசிக்குமாறு செய்ததும், திருவொற்றியூரில் சங்கிலியார் திருமணம் தொடர்பாகக் கண் இழக்கச் செய்ததும் சான்று. இறைவனது அருளிச்செயலில் தோன்றும் முரணை இவ்வரலாறுகள் அறிவிக்கின்றன. மற்றும், திருத்தொண்டர்களின் கூட்டம் நிறைவதால் திருநகரச் சிறப்பில் இடம் பெற்ற திருவாரூர், திருத்தொண்டர் புராணத்தின் நடுநாயகமாகிய திருஞானசம்பந்தர் புராணத்தும், ஏயர்கோன் சரிதையிலும், நம்பியாரூரர் தொடர்பாகவும் மீண்டும் சிறப்புப் பெறுகிறது. ஆரூர் இறைவனை மீண்டும் மீண்டும் காணவிரும்பிச் சென்றார் ஞானசம்பந்தர். நம்பியாரூரரோ, ஆரூர் இறைவனை 'எங்ஙனம் நான் மறந்திருப்பேன்' என்று கூறிப் புறப்பட்டதாலேயே ஒற்றியூரில் கண் இழந்தார். இவர் கண் இழந்து இறை

வனைக் கண்ணுரக் காணப் பெருது வருந்தியமையும், தண்டியடிகள் பிறந்தபொழுதே கண்காணுர் ஆகியும், புறம் நோக்கும் கண்டவுணர்வு துறந்து அகம் நோக்கும் குறிப்பைப் பெற்று, திருவாரூர்ப் பெருமான் அடிகள் திருவடிக்கே தொண்டு செய்தமையும் ஒப்பு நோக்குமாறு ஒரே சருக்கத்துள் இச்சரிதங்கள் இடம் பெற்றுள்ளன. இனி இச்சருக்கத்தில் வருவோரின் பொதுவியல்பான மறுத்தற் பண்பிற்கு வருவோம். தண்டியடிகள் சமணரை மறுத்து, அவர் கலக்கம் கண்டவர். திருமூலர் தன் உடலைத் துறந்து இடையனின் உடலின் புகுந்து, மனையாளை மறுத்து யோகத்தில் அமர்ந்தவர். மேற் சருக்கத்துள் திருமுறைத் தமிழ்தந்த திருநாவுக்கரசர் காரைக்காலம்மையார் ஆகியோர் சரிதங்கள் ஒருங்கு வைக்கப்பெற்ருற்போலவே, இச்சருக்கத்துள் திருஞான சம்பந்தர், நம்பியாரூரர், திருமூலர் ஆகியோரின் சரிதங்கள் ஒருங்கு வைக்கப்பட்டன. மூர்க்க நாயனுர் அறவொழுக்க நெறியையும் மறுத்துச் சூதாடியும், அதில் கரவு செய்தவர்களை வாளால் குத்தியும் மூர்க்கர் எனப் பெயரெடுத்து சிவத்தொண்டு செய்தவர். சோமாசி மாறர் மறுத்தல் நெறியாளரல்லர் ஆயினும், அதைச் செய்த ஏயர்கோன் கலிக்காமர்க்கு மாருய், நம்பியாரூரரைக் கண்டு தொழுது நட்புப் பூண்டவர்.

*3. 4. 13.* அடுத்த சருக்கத்துள் முதல்வர் சாக்கியர். மேற்சருக்கத்து முதல்வரான திருஞான சம்பந்தர் சமணத்தையும் பிற மதங்களையும் மறுத்து இறையடியைப் பேணியவர். சாக்கியரோ புறமதமாகிய சாக்கியத்தைச் சார்ந்தவராயினும், அதனை மறுக்காமலே சிவனிடம் மாருத அன்புபூண்டு, தம் மதத்தார் அதனை உணராமைப் பொருட்டு, மலரால் அன்றிக் கல்லால் இலிங்கப் பெருமானை எறிந்து, புதுமையான வழிபாட்டைச் செய்தவர். திருஞான சம்பந்தர், திருநாவுக்கரசரின் சொன்மலரையும் ஏற்றுக்கொண்ட இறைவன், சாக்கியர் எறிந்த கல்லையும் மலராக ஏற்றுக் கொண்டான். அன்பின் பெருமை எண்ணவும் படுமோ? தொடர்ந்த மூன்று சருக்கங்களுள் முதல்வராக வைக்கப்பட்ட இம்மூவர்களின் அன்புநிலையும் ஒப்பு நோக்குமாறு இவ்வைப்பு முறை அமைந்துள்ளது.

சாக்கியரை அடுத்துவரும் சிறப்புலி நாயனர் வைதிக நெறியில் நின்றே, சிவனடியார் பக்தி பூண்டு ஒழுகினர். அடுத்து வரும் சிறுத்தொண்டர், காபாலிக மதத்தார் உவக்கும் நர பலியைச் செய்து — தம் மகனையே கறி சமைத்து அடியார்க்கு அளித்தவர். அங்ஙனம் அளித்தும், அடியவர் உண்ண வேண்டும் என்னும் ஆர்வத்தால், விரைந்து தாம் உண்ணப்புகுந்தார். இச்செயலில் அவரது தன் முனைப்புப் புலப்படுகின்றது. ஆனல் அடுத்துவரும் கழறிற்றறிவாரோ முடி சூடி அரசாளுமாறு அமைச்சர்கள் வேண்டியபோதும், தன் முனைப்பின்றி, "அன்பு நிலைமை வழுவாமை அரசுபுரக்க அருள் உண்டேல் என்பும் அரவும் புனைந்தாரை இடை பெற்றறிவேன்" என்று இறைவனிடம் விண்ணப்பம் செய்தே, இறையருளால் யாவும் யாரும் கழறினவும் அறியும் உணர்வு பெற்று அரசுப் பொறுப் பேற்றார். அடுத்துவரும் கூற்றுவ நாயனர், தில்லைவாழந் தணர்கள் தமக்கு முடிசூட்ட மறுத்தமையால், இறைவனின் பாத மலர்களையே முடியாகப் பெற விரும்பி அவ்வண்ணமே பெற்றார். இவ்வொற்றுமையால் இவர்கள் சரிதம் அடுத் தடுத்து இடம் பெறுகின்றன.

3. 4. 14 பொய்யடிமையில்லாத புலவர் சருக்கத்துள் வருபவர் பெரும்பாலோர் பொய்யடிமை இல்லாதவர்களே. இறுதியில் வரும் நாயனர் ஆகிய காடவர்கோன், புலவரும் ஆவார்.

புகழ்ச் சோழர் சிவனடியார்களிடம் மெய்யன்பும் மெய்யடிமையும் பூண்டவர் என்பது எறிபத்தர் சரிதத் தாலேயே விளங்கியது. இங்கு அது மேலும் வலியுறு கின்றது. தம் படைத்தலைவர்கள் போர்க்களத்திலிருந்து கொண்டுவந்த பகைவர் தலைகளுள் ஒன்று சடைமுடி உடையதாயிருந்ததைக் கண்டு, சிவனடியாரைக் கொல்லக் காரணமானேன் என்று, அத்தலையையும் தாங்கியவாறு தீக் குளித்து உயிர் நீத்தார் வெற்றிமன்னர் புகழ்ச்சோழர். அடியார்பால் இவர் அடிமை பொய்யாத ஒன்றென்பது இதனல் போதரும். அடுத்துவரும் நரசிங்க முனையரும் அரசர். திருநீற்றுக் கோலத்திற்கு அடிமை பூண்டவர். "சீலமிலரே எனினும் திருநீறு சேர்ந்தாரை" மதித்து

வணங்கியவர். அடுத்துவரும் அதிபத்தர் மீன்வலைஞர். பலநாள் பட்டினி கிடந்த பின்பு கிடைத்த பொன்மீனை, பிடிக்கும் முதல் மீனைச் சிவன் கழலுக்கென விடும் வழக்கப்படி கடலிலேயே விட்டவர். செயல், மறம்புரி செயலே. எனினும் அதிலும் மெய்ம்மையைக் காத்தார்.

"தம் மறம்புரி மரபினில் தகும் பெருந் தொண்டு
மெய்ம்மையே புரி அதிபத்தர்"[1]

கலிக்கம்பர் அடியார் பக்தி பூண்டவர். ஒருநாள் வந்த சிவனடியார் முன்பு தம் இல்லத்தில் வேலையாளாக இருந்ததைக் கருதித் தம் மனைவியார் உபசரணையில் தயக்கம் காட்ட, இவர் மனைவியாரின் கையை வெட்டினர். கலியர், திருக்கோயிலில் விளக்கிடும் பணி மேற்கொண்டார். தம் வளமெல்லாம் அழிந்து கூலி வேலை செய்தாயினும் அப்பணியை விடாது செய்து, கூலியும் கிடைக்காமற் போகவே வாளால் கழுத்தை அறுத்துக்கொண்டு குருதியை எண்ணெய்யாகச் சொரிந்து விளக்கேற்ற முற்பட்டார்.

*3. 4. 15* அடுத்த சருக்கத்து முதல்வர் கணம்புல்லர். அவரும் திருக்கோயில் விளக்குப்பணி செய்ய மேற்கொண்டு, வறுமையால் புல்லைத் திரியாக்கி எரித்துப் பின் அதுவும் கிடைக்காமையால் தம் திருமுடியை மடுத்து விளக்கெரித்தார். காரியார் கோயில் பலவும் கட்டினர். நின்றசீர் நெடுமாறர் சம்பந்தரால் சமணத்திலிருந்து விடுவிக்கப் பட்டுத் திருநீற்று நெறியை வளர்த்தவர். வாயிலார் மனக்கோயில் அமைத்தவர்.

*3. 4. 16* அடுத்த சருக்கத்தில் சிவாபராதம் செய்தவர்களைத் தண்டித்த வரலாறுகள் வருகின்றன. கழற்சிங்கரின் மனைவி கோயில் மாலைக்கென வைத்த பூவை எடுத்து மோந்தாள் என்று அவளது மூக்கைச் செருத்துணையார் அறுத்திட, இத்தண்டம் போதாதென்று கழற்சிங்கர் அவளது கையையும் துணித்தார். அடுத்துவரும் இடங்கழியார் சிவனடியார்க்கு அமுதிடுவதற்கு ஒருமுறை கையில் பொருளின்றி, அரசரின் பண்டாரத்தில் புகுந்து திருடினர். அதற்குத் தண்டனை வழங்கவில்லை அரசன்.

---

1. அதிபத்தர் : 20

பண்டாரத்தைச் சிவனடியார்கள் கொள்ளை கொள்க என்று பறை சாற்றினன். இரண்டு அரசர்களின் செயல் களையும் ஒப்பு நோக்கலாம். முன்னது அபராதமாகத் தெரியாது. ஆயினும் தண்டம் பெற்றது. பின்னது சட்டப்படி குற்றம் ஆயினும் அது தண்டத்திற்கு உரித்தாக வில்லை. இதுவே இங்குள்ள சந்தி. புகழ்த்துணையார் பசி மயக்கத்தில் அபிடேகக் குடத்தை இலிங்கப் பெரு மான்மேல் போட்டு மயங்கிவிட்டார். இது அபராதமே எனினும் இறைவன் தண்டம் செய்யவில்லை. மாருக அவரது வறுமை தீருமளவும் நாள்தோறும் ஒரு பொற் காசு அளித்தான். கோட்புலியார் திருவமுது படிக்கெனத் தாம் சுற்றத்தாரிடம் ஒப்புவித்துச் சென்ற நெற்கூட்டினை அவர்கள் தம் வறுமையால் உண்டு தீர்த்துவிட, அவர் களைத் தாமே கொலை செய்து தண்டம் வழங்கினர்.

*3. 4. 17* பத்தராய்ப் பணிவார் சருக்கம் முழுதும் தொகையடியார்கள் கூறப்படுதலே அதில் அமைந்த சந்தி.

*3. 4. 18* மன்னிய சீர்ச் சருக்கத்துள் முதல் திருத் தொண்டர் பூசலார் மனக்கோயில் அமைத்தவர். மங்கை யர்க்கரசியார், தம் கணவனை பாண்டியன் சமணம் சார்ந் திருந்தும், தம் மனத்தில் சிவனன்பை மறைத்து வைத்து, தன்னந் தனியளாகக் கோயிற்பணி செய்தவர். இவ்வகை யில் இவரும் மனக்கோயில் கட்டியவரே. பூசலார் வறுமை காரணமாக மனக்கோயில் அன்பால் சமைத்தார். மங்கை யர்க்கரசியாரோ பட்டத்தரசியாக இருந்தும் சூழ்நிலையால் மனக்கோயில் சமைத்தார். சேக்கிழார் இவரை “எங்கள் தெய்வம்” என்று கொண்டாடி, இசைஞானியார் நம்பி யாரூரரை நமக்கு அளித்த தெய்வம் ஆதலின் அவரோடு ஒரு சருக்கத்தில் வைத்தார். மங்கையர்க்கரசியார், திரு ஞான சம்பந்தரை வணங்கித் தமிழ்நாட்டில் சைவத்தை வளர்த்தார். அடுத்துவரும் நேசர் அதுபோல அடியார் பக்தி பூண்டவர். அவர்கட்கு ஆடை நெய்து கொடுத்தவர். கோச்செங்கட்சோழர் சிவாலயங்கள் கட்டுவதையே வாழுட் பணியாகக் கொண்டார். பாண்டி அரசி பாண்டி நாட்டில் கோயில்கள் பெருகுமாறு பணி செய்ததை அடுத்து இச்சரிதம் அமைந்தமை இவ்வொப்புமை

பற்றியே. மேலும் அவள் பாண்டிமாதேவியாயினும் வளவர்கோன் பாவை என்னும் பொருத்தமும் காணற்பாற்று. சோழர்குலம் சைவத்திற்குச் செய்த நிலையான திருப்பணி இங்ஙனம் இரு சரிதங்கள் அடுத்தடுத்து அமைத்து உறுதி செய்யப்பட்டது. கோயில் என்றால் பாணர் என்னும் இழி குலத்தார் அங்கே நுழையலாகாது என்பது அக்காலச் சாதிச்சட்டம். அதை இறைவனே திருநீலகண்ட யாழ்ப் பாணர்க்காக மீறி, கோயிலில் **அரிசன நுழைவை அன்றே செய்தான்.** மதுரைக் கோயிலில்தான் அது அன்று நடந்தது. கோயிலில் ஒரு தனிவாயிலே அவருக்கு வகுத்து, அதன்வழியே அவரது உள்ளே வரவழைத்து இசைத்தொண்டு புரியச் செய்தான். திருநீலகண்ட யாழ்ப் பாணரின் சரிதத்தைச் சேக்கிழார் முன்பே திருஞான சம்பந்தரின் வரலாற்றை அடுத்து வைக்காமல் இங்கே வைத்த தன் கருத்து நன்கு சிந்திக்கத்தக்கது. சிலந்தி பட்டால் திட்டு என்கிறோம். அந்தச் சிலந்தியே கோயிலில் இலிங்கப்பெருமான்மீது வெயில்படாமல் வாய்நூலால் பந்தல் அமைத்தது. அது அனுசிதம் என்று கருதிய ஒரு யானை அப்பந்தலைச் சிதைத்தது. ஆயினும் இறைவன் அப்பந்தலை அனுசிதம் என்று கருதவில்லை. சிலந்தியைக் கோச்செங்கட்சோழனாகப் பிறப்பித்தான். சிலந்திப் பிறப்பில் அனுசிதம் பார்க்காத இறைவன் பாணர் பிறப்பிலும் அனுசிதம் பார்க்கவில்லை. பிறப்பைக் காட்டிலும் தன்னைப் பேணிய அன்பையே அவன் பார்த்தான். அனுசிதம் பார்த்தால் கண்ணப்பரின் வழிபாட்டை ஏற்றுக்கொண்டு உள்ளம் குளிர்ந்து 'அவனுடைய செயலெல்லாம் நமக்கு இனியவாம்' என்று கூறியிருப்பானா?

3. 4. 19 தம்குடி வாழப் பிள்ளை பெறுவார் மற்றவர். ஆனால் சடையனாரும் இசை ஞானியாரும் ஞாலமெல்லாம் குடிவாழ நம்பியாரூரரைப் பெற்றார்கள். அவர் இதுவரை போந்த திருத்தொண்டர்களைப் பாடி ஞாலத்தின் குடிகள் எல்லாம் வாழச் செய்தார். அடுத்த சருக்கம், நம்பியாரூரர் தம்பணி முடித்துக் கைலையடைந்தமை கூறுகிறது.

3. 4. 20 இதுகாறும் திருத்தொண்டர் புராணம் ஒரு தலைவரைப் பற்றியது எனினும் வைப்பு முறையால்

தொடர்ச்சியமைப்புப் பெற்ற காப்பியமே என நிறுவ முயற்சி மேற்கொள்ளப்பட்டது. இவ்வைப்பு முறையால்,

(1) திருத்தொண்டர்களின் அன்பின்பல கோணங்களும்

(2) இறைவன் அடியார்கட்கு அருளும் வண்ணமும்

ஒப்பு நோக்கியும் உறழ்ந்து நோக்கியும் உணரப்படுகின் றன. இது காப்பியப்பயன் திருத்தொண்டர் புராணத்தின் காப்பிய அமைப்பை ஆய்ந்தோம். இனி, காப்பியத்தின் சிறப்பு இயல்புகளைக் காண்போம்.

*3. 5* காப்பியம், கவிக்கூற்றுக அமையும் விவரிப்பு இயல் இலக்கியம் (narrative) ஆதலின் கவிஞனின் கருத்து அதில் இடங்கொள்ளுதற்கு மிக்க வாய்ப்பு உண்டு. கடமையுடைய மன்னர் 'கடைசியர் பரந்து நீண்ட கண் கை கால் முகம் வாய் ஒக்கும் களையலால் களையிலாமை யால்......உலாவி நிற்பார்' என்று வயற் காட்சியை விவரிக்கும் விவரணத்துடன், "பெண்கள்பால் வைத்த நேயம் பிழைப்பரோ சிறியோர் பெற்றால்" எனத் தம்கருத்துரையையும் கூறும் இயல்பு கம்பரிடம் உள்ளது. அது பன்மடங்கு மிகுதியாகச் சேக்கிழாரிடம் உள்ளது. அதன் மிகுதிபற்றித் திருத்தொண்டர் புராணத்தை விவ ரணக் காப்பியம் (narrative epics) என்றலினும் கருத் துரைக் காப்பியம் (Epic of considered opinions) எனல் பொருந்தும். ஒவ்வொரு திருத்தொண்டரின் வாழ்க்கை யையும் விவரிக்கும்போது அவ்வாழ்வின் குறிக்கோளையும் அவர் ஒவ்வொரு சந்தர்ப்பத்திலும் நடந்துகொண்ட முறை யையும் பற்றித் தம் கருத்துக்களைச் சேக்கிழார் தொடக்கம், இடை, இறுதி மூன்றிடங்களிலுமோ ஒவ்வோர் இடத்திலோ கூறுது விடுவதில்லை. தொண்டர்களின் வாழ்வை மேலோட்டமாக நோக்குவார்க்கு அதன் சிறப்பும் பெரு மையும் புலப்படா. பருப்பொருள் நோக்குடன் அதைப் பார்க்கக்கூடாது. ஆதலின் அதை விவரிக்க வந்த கவிஞர், இவற்றைத் தாமே ஆராய்ந்து கருத்துரை சொல்வதைக் கவிதையின் ஓர் உறுப்பாகவே கொண்டார். இவ்வுறுப்புச் சேக்கிழார் கவிதையின் சிறப்பு உறுப்பாகும். ஈண்டுக் கருத்துரை எனக் கூறியது, கதை மாந்தரின் எண்ணங்களை அன்று. அவற்றைக் கதைப்போக்கில் எடுத்துக்கூறிச்

செல்வது கவிஞரின் இயல்பே. அது பாத்திரப் படைப்பின் ஒரு கூறே. ஆனல் அம்மாந்தர்களின் எண்ணங்களையும் நோக்கத்தையும் அவர்கட்கு நிகழ்ந்ததையும் அவர்களின் நோக்கம் நிறைவேறியமையையும் பற்றிப் பொது அறிஞராக நின்று, கவிஞர் யாது கருதுகிருர் என்பது வேறு. இங்ஙனம் கருத்துரை கூறுதலில், நீட்டி முழக்காமல், அது தனியாகத் தோன்ருமல், கவிதையுடன் கலந்தே உணரப்படுமாறு, கவிதைச்சுவை குன்ருமல் கூறுதல் சேக்கிழாரின் இயல்பு. இங்ஙனம் வாழ்க்கையை முற்றும் ஆய்ந்து கருத்துரை கூறும் இயல்பு மிக்கிருத்தலின் இவரது காப்பிய நடையே (Style) தனித்தன்மை பெற்று விளங்குகிறது. திருத்தொண்டர்களின் வாழ்க்கையில் உணர்வு மிக்க கட்டங்கள் எத்துணையோ வருகின்றன. அவற்றை எல்லாம் அவர்களுடைய ஆன்றமைந்த உள்ளம் கொந்தளிப்பு இன்றித் தாங்கி, அமைந்த ஒழுக்கினவாதல் போன்றே, சேக்கிழார் அக் கட்டங்களை விவரிக்கும் கவிதையும் உணர்வின் அலைகளைக் காட்டாது அடுத்ததை மட்டும் காட்டி, அமைதியாய், மெல்லென்ற நடையுடைத்தாய், உணர்வினை உள்ளடக்கிச் செல்கின்றது. உணர்வுக் கொந்தளிப்பை உண்டாக்கும் சொற்களைக்கூட ஆள்வதில்லை சேக்கிழாரது நடை. இவ் வகையில் அவர் கவிதை நாடக மறுதலைப் பண்பினதாகும் (undramatic poetry). ஆனல் கம்பர் கவிதை பலவிடங்களில் நாடகப் பண்புடைத்தாக விளங்குகிறது. அவர் அமைக்கின்ற உரையாடல் உறழ்வுகளும் (exchanges in dialogue) அடைமொழிகளும் சான்று. உணர்வுமிக்க கட்டங்களில் சேக்கிழார் அமைக்கும் உரையாடல்களும் அடைமொழிகளும் கூட நாடகக் கவிதையாக நடக்கவில்லை. காரணம், இவை இரண்டும் மாந்தரின் பண்பியற் படைப்பின் (characterisation) கூறுகளாக மட்டுமின்றிச் சேக்கிழாரின் கருத்துரை கவிதைப் பண்பின் (poetry expressive of considered opinion) கூறுகளாகவும் விளங்குதலே ஆகும்.

திருநீல கண்டத்துக் குயவனுரை இறைவன் சோதித்தமை, "எரிதளிர்த் தென்ன நீண்ட மின்னெளிர் சடையான் தானும் தொண்டரை விளக்கம் காண, நன்னெறி இதுவாம் என்று ஞாலத்தார் விரும்பி உய்யும் அந்நெறி காட்டுமாற்

ருல்" என்று கருத்துரைப்பர் சேக்கிழார். அமர்நீதி யாரைச் சோதிக்கவந்தவர், நீராடி வந்து, "தொண்டர் அன்பெனும் தூயநீர் ஆடுதல் வேண்டி" அவரைச் சோதிக் கப் புகுந்து,

"மண்டுதன்புனல் மூழ்கிய ஈரத்தை மாற்றத்
தண்டின்மேலதும் ஈரம், நான்தந்த கோவணத்தைக்
கொண்டு வாரும் என்றுரைத்தனர் கோவணக்கள்வர்"[1]

என்று விவரிக்கின்றார். இவ்வுரையில் இறைவன் ஆடிய தண்ணீருக்கும் இனி ஆடப்புகும் அன்பிற்கும் உள்ள வேறு பாட்டைத் "தூய" என்னும் அடைமொழியால் அழகுற உணர்த்துவது மட்டுமின்றி, இனிப் புகும் உணர்ச்சிக் கட்டத்தை அமைதியாக ஏற்றுக் கொள்ளுதற்குக் களத் தையும் அமைத்து விடுகின்றார். ஆதலின்,

"நல்ல கோவணம் கொடுப்பன் என்று உலகின்மேல் நாளும்
சொல்லுவித்த தென் கோவணம் கொள்வது துணிந்தோ
ஒல்லை ஈங்குறு வாணிபம் அழகிதே உமக்கு என்று
எல்லை யில்லவன் எரிதுள்ளினுலென வெகுண்டான்"[2]

என்பது முதல், பின்வரும் உணர்ச்சிக் கட்டங்கள் யாவும், அவ்வுணர்ச்சியை இழத்தலின்றியும் அமைதியாக நடக் கின்றன. இந்த அமைதி நடைக்குச் சேக்கிழார் பின்ன ரும் ஆங்காங்குக் கூறும் கருத்துரையும் அடைமொழியும் உதவுகின்றன. அமர்நீதியார் துலைத்தட்டில் இட்ட பூந்து கிற் பொதிகள், சோதிக்க வந்தவரின் கோவணத்திற்கு நேரெடை நிற்கவில்லை. அமர்நீதியார் 'பட்டொடும் துகில் அனேககோடிகள்' இட்டார். பின்னும் கோவணத் தட்டுத் தாழ்ந்தே நின்றது. உலகியலால் நோக்கின் இது அதிசயந் தான். அமர்நீதியாரும் அதிசயித்தார். இக் கட்டத்தில் கருத்துரைக்கப் புகுவார் கவிஞர்:

"முட்டில் அன்பர்தம் அன்புஇடும் தட்டுக்கு முதல்வர்
மட்டுநின்ற தட்டு அருளொடும் தாழ்வுறும் வழக்கால்"

அது நிகழ்ந்தது என்கின்றார். பூந்துகிற் பொதிகளை இடவில்லையாம் அமர்நீதியார்; அன்பையே இட்டனராம்.

1. அமர்நீதியார்: 19
2. ,, 26

அந்த அன்பில் - ஆடவந்தவராதலின், இறைவனின் அருள் கோவணமாகி எதிர்த்தட்டில் இருக்கின்றதாம். அந்த அருளின் இயல்பை யாரே அளக்கவியலும்? அதனால் அது இட்ட தட்டுத் தாழ்ந்ததாம். இவ்வாறு கருத்துக்கூறி நம் அதிசயத்தைப் போக்குகிறார் கவிஞர். இறைவன் அருளோடு அன்பரிடம் விளையாட வந்ததால், அன்பரின் அன்பு முதிர்ச்சி செயலாக வெளிப்படுங்காறும், அருளிட்ட (அருளால் இட்ட) தட்டுத் தாழ்ந்து நின்றது. அது வெளிப்பட, அமர்நீதியார்,

> "உலகில் பல்தனம் ஒன்றொழியாமை உய்த்தொழிந்தேன்
> தலைவ, யானும் என்மனைவியும் சிறுவனும் தகுமேல்
> துலையில் ஏறிடப் பெறுவது உன் அருள்"

எனத் தொழுது நின்றார். நின்றவர் இறைவன் என்று அறியாராயினும் "தகுமேல்", "உன் அருள்" என்ற சொல்லாட்சி, அமர்நீதியாரின் அன்பு முதிர்ச்சியை - 'தாம்' கரைந்து நிற்கும் நிலையின் தோற்றத்தை நம் உளங்கொள்விக்கின்றன. ஒக்க ஏறினர் தட்டில்; ஒத்துநின்றது துலை. இங்கும் கருத்துடன் புகுவார் கவிஞர்:

> "மண்டு காதலின் மற்றவர் மகிழ்ந்துடன் ஏற
> அண்டர் தம்பிரான் திருவரைக் கோவணமதுவும்
> கொண்ட அன்பினில் குறைபடா அடியவர் அடிமைத்
> தொண்டும் ஒத்தலால் ஒத்துநேர் நின்றதுஅத் துலைதான்."

இறைனது திருவருளுக்கு அன்பர் அன்பு ஒருகாலும் நேராகாது. ஆனால் அமர்நீதியின் அன்பு முதிர்ச்சியைக் காட்டுவதற்குத் திருவருட் குறிப்பு ஒரு கோவணமாகி நின்றது. அக் குறிப்பு நிறைவுற்றது என்பார், அன்புநீரில் ஆடவந்தவர், ஆடிவிட்டார் என்பார்.

"கோவணமதுவும் அடியவர் அடிமைத் தொண்டும் ஒத்தன" என்றார். திருத்தொண்டின் பெருமையை விளக்கும் காப்பிய நோக்கம் இக் கருத்துரை வடிவில் நிறைவேறுகின்றது. முன்பு ஒவ்வாமைக்குக் காரணம்கூறி நம் அதிசயத்தை ஒழித்தவர் இங்கு ஒத்தமைக்கும் காரணங் கூறி உணர்வைச் சமன் செய்கின்றார்.

திருத்தொண்டர்களையன்றி அவர்களைச் சார்ந்த மாந்தர் அல்லது பிறமாந்தர்களைப் பற்றிக் கூறுங்காலும் அவர்களது இயல்பை அறிவிக்கும் கருத்துரைகளைச் சேக்கிழார், அவர்கள் பற்றிய நிகழ்ச்சிகளில் பெய்தே கூறுகின்றார். ஒருசான்று காண்போம்.

பொத்தப்பி நாட்டு உருப்பூர் வேடர் தலைவனுக்கு ஆண்மகவு பிறந்தது. "கருவரை காளமேகம் ஏந்தியது என்னத் தாதை பொருவரைத் தோள்களாரப் புதல்வனை எடுத்துக் கொண்டான்." நிறத்தால் தாதையும் பிள்ளையும் ஒத்தவரே. பிள்ளையினிடத்தில், "அரும் பெறல் உலக மெல்லாம் அளப்பரும் பெருமை காட்டித் தரும்குறி பலவும் சாற்றும் தன்மையிற் பொலிந்து தோன்ற", "அண்ணலைக் கையில் ஏந்தற்கு அருமையால் உரிமைப்பேரும் திண்ணன் என்றியம்பும்" எனக் கூறினான் தந்தை. நுட்பமாய் நோக்க வல்லார்க்கு அம்மகவு பிற்காலத்தில் உலகம் முழுவதும் அளத்தற்கரிய பெருமையை எய்திடுவதற்கான அறிகுறி பலவும் அதனிடம் இருப்பது புலனாகும். ஆனால் பருப்பொருள் - அறிவு ஒன்றுமே உடைய வேடர் தலைவன், திண்மையே கருதித் திண்ணன் எனப் பெயரிட்டான் என்று கூறுகின்றார் கவிஞர். வேட்டுவர் உணராராயினும் கவிதையை யனுபவிக்கும் நாம் ஒருவாறு அம் மகவினை வளர்ப்பவரே ஆதலின், நாம் உணர்ந்து இன்புறும் வண்ணம், அதன் எதிர்கால மாண்பைப் பற்றிய செய்திகளைச் சேர்த்தே, குழந்தைப் பருவச் செயல்களை வருணிக்கின்றார் :

> "இருசுடர்க்கு உறுகண் தீர்க்கும் எழில்வளர் கண்ணீர்மல்கி
> வருதுளி முத்தம் அத்தாய் வாய் முத்தம் கொள்ள மாற்றி"

என்று அவர் வருணிக்கும் அழகுக்காட்சி, பின்னர்ப்புகும் நிகழ்ச்சியை உள்ளுறுத்திய கருத்துரையைக் கொண்டு விளங்குவது மட்டுமன்றி, அதனை ஒருவாறு ஒத்தும் விளங்குகின்றது. மகவின் கண்ணில் மல்கிவந்த கண்ணீர் முத்து தாய் தன் வாய் முத்து அளித்தமையால் மாறிற்றும். "உற்ற நோய் தீர்ப்பது ஊனுக்கு ஊன் எனும் உரைகண்டார்" எனப் பின்பு திண்ணனார் கண்டு, இருசுடர்க்கு உறுகண் தீர்த்தார். அதையொத்து இங்கும்

முத்து என்னும் சொல்லொப்புமையை வைத்துச் சுவை சேர்க்கின்ருர் கவிஞர்.

திருத்தொண்டரின் உணர்விற்கும் அவர் பிறந்த சூழலுக்கும் பொருத்தமின்மையும் தோன்றுவதுண்டு. நந்தனுர் உணர்வு இதற்குச் சான்று. பொருத்தமின்று என்னும் கருத்தை வார்த்தைகளால் கூருமல், சூழலேயும் தொண்டர் உணர்வையும் அடுத்தடுத்துக் கூறுவதாலேயே (Juxtaposition) பெற வைக்கின்ருர்.

"..............................புடைஎங்கும்
தள்ளும்தாள் நடையசையத் தளேயவிழ் பூங்குவளேமது
விள்ளும் பைங்குழற் கதிர்நெல் மிலேச்சியபுன் புலேச்சியர்கள்
கள்ளுண்டு களிதூங்கக் கறங்குபறையும் கலிக்கும்"

"இப்படித்தாகிய கடைஞர் இரும்பின் வரைப்பினின் வாழ்வார்
மெய்ப்பரிவு சிவன் கழற்கே விளேத்த உணர்வொடும் வந்தார்"

என்கின்ருர் கவிஞர். அங்குப் பிறந்தவர் யாரும் இவ்வுணர்விணக் கொள்ளமுடியாது என்பார் இவர். இவ்வுணர்வொடும் வந்தார் என முன்ணப் பிறப்பின் உணர்வுத் தொடர்ச்சியைக் குறிப்பிடுகிருர்.

திண்ணனுரினும் மிகு இளமைப் பருவத்திலேயே உணர்வு சிறக்கப் பெற்றவர் பின்னர்ச் சண்டீசப்பதம் பெறும் விசார சருமர். அவ்வுணர்வுப் பெருமைக்குக் குல வழியில் காரணம் இருந்தது ; ஆனுல் இவரைப் பொறுத்த அளவில் அது தாயின்வழியே வந்தது என்ற கருத்தை உணர்த்துகின்ருர் சேக்கிழார். தந்தை எச்சதத்தன் இருமை விணக்கும் ஒரு வடிவாய் இருந்தமையால், தாயே "பற்றை எறியும் பற்று வரச் சார்பாயிருந்தாள்" என்கின்ருர். இங்ஙனம் விசார சருமர்க்குக் கருவில் வாய்த்த திருவுடன் முன்ணப் பிறப்பின் அறிவுத் தொடர்ச்சியும் இருந்ததால் வேதாகமங்களின் உணர்வு எல்லாம் அவரது சிந்தை விரிய விரிய உடன்மலர்ந்து விளங்கப் போகின்றமைக்கு அடையாளமாம் செவ்வி உணர்வு அவரது ஐயாட்டைப் பருவத்திலேயே தோன்றிவிட்டது என்பார், தக்க உவமை அமைத்து,

"......................ஆகமங்கள்
முந்தை அறிவின் தொடர்ச்சியினுல் முகைக்கு மலரின் வாசம்போல்
சிந்தை மலர உடன்மலரும் செவ்வியுணர்வு சிறந்ததால்"

என்று கூறுகின்றூர்.[1] பின்னர் வழிபாட்டிற்கு ஊறு செய்த தந்தையைக் காலின்கண் எறிந்த அவர்க்கு, வழி பாட்டில் இருந்த 'ஒன்றும் உள்ளத்து உண்மையினுல்', இடையூற்றை அகற்றிய உணர்வுதான் இருந்ததேயன்றிப் பாசத்திற்கும் வணக்கத்திற்கும் உரிய தந்தையின் காலே வெட்டிய உணர்வு இல்லேயாம். இவ்வுண்மையைத் தெரி விப்பது, சேக்கிழார் போகின்ற போக்கில் தெரிவிக்கும் கருத்துரையே.

"எறிந்த அதுவே அர்ச்சனையில் இடையூறகற்றும் படையாக
மறிந்த தாதை இருதாளும் துணித்த மைந்தர் பூசனையில்
அறிந்த இடையூறகற்றினராய் முன்போல் அருச்சித்திடப்
புகலும்"

எச்செயலேயும் அதன் பயன்நோக்கி உணர்தலும், பயன் சிறந்தவழிச் செயலேயும் சிறப்புடையதாகக் கோடலும் அறத்துறையில் ஏற்புடைய வல்ல எனினும் கவிதைத் துறையில் எதிரதைக் குறிக்கும் குறிப்பை உள்ளூறுத்தி, நிகழ்விண வருணித்தல் அழகுபயப்பதே ஆகும். இவ் வழகு ததும்பத் திருஞான சம்பந்தரின் அழுகையை வரு ணிக்கின்றூர் சேக்கிழார். கவிஞரின் கருத்துரை கருத் துரையாக அன்றி வருணனே வடிவில் வெளிப்படுகின்றது. தேவாரச் சொன்மலர்கள் விரிந்து மணம் பரப்பவிருக்கும் வாய் துடிக்க அழுததாம் பிள்ளே. அவ்வழுகைதானே அம்மையப்பர் அருள் சுரத்தற்கு வாயிலாயிற்று! அவ் வருள்தானே தேவாரத் தமிழின் வாயிலாக உலகை உய் விக்க நின்றது! ஆதலின் பிள்ளேயாரின் அழுகைச்செயலே அருட்செயலாகவே வருணிக்கின்றூர் கவிஞர். தேவாரம் தந்த வாய் ஒன்றே, கண்ணும் மலரே, அதைப் பிசைந்த கையும் மலரே, எனக்கூறி உருகுகின்றூர் :

"கண்மலர்கள் நீர்ததும்பக் கைம்மலர்களால் பிசைந்து
வண்ணமலர்ச் செங்கனிவாய் மனியதரம் புடைதுடிப்ப

1. சண்டேசுர நாயனுர் : 13.

எண்ணில்மறை யொலிபெருக எவ்வுயிரும் குதுகலிப்பப்
புண்ணியக் கன்றனையவர்தாம் பொருமி அழுதருளினர்''[1]

கருத்துரையைச் சிந்தையிற் கொண்டதால் வந்த உருக்கம் கவிதையின் நடையில் ஏறியுள்ளது. எதிரது காட்டும் கருத்துரை தழுவியதாதலின் இக்கவிதை ''எவ்வுயிரும் குதுகலிப்ப''ப் பிள்ளையார் அழுதார் என்கிறது. அல்லாக் கால் பிள்ளை அழப் பிறர் குதுகலிப்பர் உண்டோ? பிள்ளை யாரின் அழுகையை எதிரது காட்டுவதாக மட்டுமின்றி, முன்னதைக் காட்டுவதாகவும் கவிஞர் கருத்துரைக்கின்றார்:

''.......................... ஈசர் கழல்
முன்உணர்வு மூள அழத் தொடங்கினர்''[2]

சேக்கிழார் கருத்துரை செறித்துக் கூறும் வண்ணனை களுள் முடிமணியாய்த் திகழ்வது, குடத்து எலும்பிலிருந்து, ''போதியோ என்னும் அன்னமெய்த் திருவாக்கு எனும் அமுதம் அவ்வங்கம் துன்ன வந்து வந்து உருவமாய் தொக்குக்'' ''குடம் உடைந்து எழுவாள், போற்று தாமரைப் போதவிழ்ந்து எழுந்தனள் போன்று'', பூம்பாவை உயிர் பெற்று, ''அழகினுக்கு அணியாய்'' நின்றபோது, வேதாக் கிழவனும் வேதத் தமிழ் உரைத்த பிள்ளையும் அவளை நோக்கிய பார்வையை வருணிக்கும் வண்ணனை ஆகும். எண்ணில்லாத ஆண்டுகளாக எத்துணையோ அழகு உருவங்களைப் படைத்த வேதாக்கிழவன், தான் படைத்த பூம்பாவை என்று கருதி, அழகு பருகும் பார்வையோடு தன் நான்கு முகத்தாலும் அவளைப் பார்த்தானும்.

ஆனல் உண்மையில் இறையருளால் அவள் மீண்டும் தோன்றியுள்ளாள், என்பதை உணர்ந்த பதினுருண்டுப் பிள்ளை, பூம்பாவையினும் அழகு மிக்கவளின் ஞானப் பாலைப் பருகிப் புண்ணிய ஞானச் செல்வராக வளர்ந்த வராதலின், அருளன்றி வேறு அறிவு தோன்ருதவராய், அருளையே பூம்பாவையிடத்திற் கண்டாராம். அருளைக் காண்டற்குத் தகுதிபெருத வேதாக்கிழவன் அழகு என்று கருதித் தனக்குள்ள நான்கு முகத்தாலும் காணப்

1. திருஞானசம்பந்தர்: 62
2. ,, 61

போதாதோ என்று எண்ணினன். அருளைக் காணும் தகுதி பெற்ற பிள்ளையாரோ அதனை ஆயிரம் முகத்தால் கண்டனராம்.

> "எண்ணிலாண் டெய்தும் வேதாப் படைத்தவன் எழிலின் வெள்ளம்
> நண்ணுநான் முகத்தால் கண்டான்; அவளினும் நல்லாள் தன்பால்
> புண்ணியப் பதினுருண்டு பேர்பெறும் புகலிவேந்தர்
> கண்ணுதல் கருணைவெள்ளம் ஆயிர முகத்தாற் கண்டார்"[1]

படைத்தவனும் மயங்கும் அழகு வெள்ளத்தை அழகாக அன்றி இறைவனின் அருளாகக் கண்டார் என்பது பிள்ளை யாரின் பண்புநலன். அதனைத் தம் கருத்துரையால் நமக்குப் புலப்படுத்துகின்றூர் கவிஞர். அவர் ஆளும் அடைமொழிகள், இக் கருத்துரைக்கு உதவும் பாங்கு, இங்கு எண்ணத் தக்கது; விருந்து பயப்பது. கருத்துரையில் வாய்த்த ஏக்கழுத்தம் கவிதையின் நடையிலும் சாயல் காட்டுகிறது.

சாக்கியர் கல்லால் எறிந்தது சாலுமோ என்பார்க்குத் தம் கருத்துரையால் ஐயம் நீக்குவாராய்த்

> "துன்னிய மெய்யன்புடனே எழுந்தவினை தூயவர்க்கு
> மன்னுமிகு பூசனையாம் அன்புநெறி வழக்கினல்"[2]

என்று கூறுகிறூர் கவிஞர்.

இதுகாறும் கூறியவற்றுல் திருத்தொண்டர்புராணம் கருத்துரைக் காப்பியமாம் தன்மையினை விளக்கும் சான்றுகள் சில அறியப்பட்டன.

3. 6. இக்காப்பியத்தின் மற்றொரு சிறப்பியல்பு, இதில் கூறப்படும் இயற்கை வருணனைகள், தாம் இடம் பெறும் வரலாற்றிற்குப் பொருந்த, அவ்வரலாறுடைய வரின் சிறப்பைக் குறிப்பால் காட்டுவனவாயிருத்தலாகும்.

---

1. திருஞானசம்பந்தர் : 1109
2. சாக்கியர் : 13

ஏனாதி நாதர் பிறந்த ஈழக்குலச் சான்றோர் குடியில் தான் அவரை முடிக்கத் துணிந்த பாதகனும் அதிசூரனும் தோன்றினன் என்பதைக் குறிப்பால் காட்டுவதுபோல வருகிறது,

> "வேழக் கரும்பினெடு மென்கரும்பு தண்வயலில்
> தாழ"[1]

என்னும் இயற்கை வருணனை.

இயற்கையும் தமிழும் சிலேடையால் இணைந்து கொஞ்சும் வண்ணனையொன்று மும்மையால் உலகாண்ட மூர்த்தி நாயனர் புராணத்துள் வருகின்றது. மூர்த்தியார் கோயிற்பணி செய்வாராய்ச் சமணரால், தம்பணி முட்ட, முழங்கையைத் தேய்த்த தொண்டராக விளங்கியவரே, பின்னர்ப் பாண்டிநாட்டின் மன்னருமாயினர் என்பதைக் குறிப்பால் சுட்டுவதாக அவ்வியற்கை வண்ணனை அமைந்துள்ளது. ஒன்றல்ல, நான்கு கிளைகளாக விளங்குவது அவ்வண்ணனை. அவற்றுள் ஒரு கிளை,

> "சால்பாய மும்மைத் தமிழ்தங்கிய அங்கண்மூதூர்
> நூல் பாயிடத்தும் உள ; நோன்றலை மேதிபாயப்
> பால்பாய் முலைதோய் மதுப்பங்கயம்பாய எங்குஞ்
> சேல்பாய் தடத்தும்உள ; செய்யுள்மிக் கேறு சங்கம்"[2]

என்னும் பாடல். "திருநீறு, கண்டிகை, வேணி முதல் மும்மையினல் உலகாண்டனர் மூர்த்தியார்" என்பதைத் தொகையொருமையால் சுட்டுவது மும்மைத் தமிழ் என்னும் தொடர். ஆனல் இதுவன்று இயற்கை வண்ணனை ; இதைத் தொடர்ந்து வருகிறது அது. நகரப் படலம், நாட்டுப்படலம் இரண்டும் சேர்ந்து வருகின்றன. செய் உள் மிக்கு ஏறு சங்கு சேல் பாய் தடத்தும் உளவாம் ; செய்யுள் மிக்கு ஏறுசங்கம் நூல்பாயிடத்தும் உளவாம். இரண்டு செய்திகளைச் சொல்லொற்றுமையால் ஒரு பொருளாகக் காட்டி, ஒன்றே ஈரிடத்தும் உளதென்று அணிபடக் கூறி, மூர்த்தியாரின் மாண்பைச் சுட்டுகின்றார். மற்ற மூன்று கிளைகளும் இவ்வாறே அமைந்துள்ளன. இந்தச்

1. ஏனாதி நாதர் : 2
3. மூர்த்தியார் : 5

சாயல் அடுத்த வரலாற்றில் — முருகநாயனர் வரலாற்றில் — தோன்றுகிறது :

> "வண்ண மதுரத் தேன்பொழிவ வாசமலர் வாயே அல்ல
> ..........................................................................
> பண்ணின் கிளவி மணிவாயும் பதிகச் செழுந்தேன் பொழியு
> மால்"[1]

என்று வருணித்து, ஆலயத்திற்கு மலர்த்தொண்டு செய்த முருகனர், திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர் ஆகியோரின் தேவாரப்பதிகங்களை ஓதியின்புற்றமையைக் குறிப்பால் சுட்டுகின்ரூர்.

"கொல்லெறி குத்தென்ரூர்த்துக் குழுமிய" வேட்டுவர் இனத்தில், பிறந்தும், நாளாறிற் கண் கிடந்து அப்பும் அன்புப் பெருமை திண்ணனர்க்கு எங்ஙனம் வாய்த்தது என்பதைச் சுட்டுவார் போல் இயற்கைவண்ணனை அமைக்கின்ரூர் :

> "வன்புலிக் குருளையோடும் வயக்கரிக் கன்றிஞேடும்
> புன்றலைச் சிறுமகார்கள் புரிந்துடன் ஆடலன்றி
> அன்புறு காதல்கூர அணையும்மான் பிணைகளோடும்
> இன்புற மருவியாடும் எறிற்றியர் மகளிர் எங்கும்"

திண்ணனரின் அன்பு தாய்க்குலத்திடமிருந்து பெற்றது என்பது விளக்கமாகிறது. அவரை மழவிளம் பருவத்தே "குலமுது குறத்தி ஊட்டிக் கொண்டு கண் துயிற்றிக் கங்குல் புலர ஊன் உணவு நல்கிய" வழக்கம் அன்ரூே, பின்பு காளத்தி மலையின்மீது ஆரா அன்பினில் குடுமித் தேவரைக் கண்டுகொண்டபோது, இரவினில் கண் துயிலாது காத்து, "யாமம் சென்று சுருங்கிட, அறிந்த புள்ளின் சூழ்சிலம்போசை கேட்டு, அரும்பெறல் தம்பிரான் பசிப்பரோ" என்று அமுது கொண்டு அணையல் வேண்டி, "விரைய வைத்தது !" "ஆர் தமராக நீர் இங்கிருப்பது என்று அகலமாட்டேன் ; நீர் பசித்திருக்க இங்கு நிற்கவும் கில்லேன்" என்று தடுமாற வைத்தது ! நெஞ்சைப் பிழியும் இந்த அன்பைக் குறிப்பால் காட்டுகிறது,

1. முருகனர் : 3

"அன்புறு காதல்கூர அணையும் மான்பிணைகள்"

என்னும் வரி. அன்பால் தாமே வந்து சிறுமியரை நெருங்கி நிற்குமாம் மான் பிணைகள்.

திருநாளைப் போவாரின் மேற்கா நாடு,

"திகழ்ந்த புனற் கொள்ளிடம், பொன், செழுமணிகள் [திரைக்கரத்தால்
முகந்துதர இருமருங்கும் முளரிமலர்க் கையேற்கும்
அகன்பணை நீர் நன்னாடு"[1]

என்று வருணிக்கும் வண்ணனை, நந்தனாரைப் பின்னர்த் தில்லையில் செந்தீயின் சுடர்க்கரங்கள் செம்மலர் மேல் வந்தெழுந்த அந்தணராய் அள்ளித்தர, தில்லைவாழ் அந்தணர்கள் கைதொழுது ஏற்றுக் கொண்டனர் என்பதைக் குறிப்பால் சுட்டும். இப்பாடலை அடுத்து வரும்,

"பாளைவிரி மணங்கமழும் பைங்காய் வன் குலைத் தெங்கின்
தாளதிர மிசை முட்டித் தடங்கிடங்கின் எழப்பாய்ந்த
வாளைபுதையச் சொரிந்த பழம்மிதப்ப வண்பலவின்
நீளமுதிர் கனி கிழிதேன் நீத்தத்தில் எழுந்துகளும்"[2]

என்னும் பாடல், குறிப்புப் பொருள் செறிந்த வண்ணனைகட்கு எல்லாம் முடிமணியாய் விளங்குகிறது. கிடங்கில் உள்ள வாளைமீன் தென்னையை முட்டிப் பழம் விழச் செய்தமை நந்தனார் பெற்ற அரும்பேற்றைச் சுட்டுவது. வாளைமீன் மறைய அப்பழம் மிதந்தமை, புலையர் குலப் புன்மை மறைய நந்தனார் ஐயர் ஆயினமையையும், கது மெனச் சொரிந்த பலாப்பழத் தேன் கலந்த தண்ணீரில் வாளை ஆடியமை, இறைவனின் திருவருளில் நந்தனார் துளையமாடியதையும் சுட்டுவது.

திருக்குறிப்புத் தொண்டரின் புராணத்தில் வரும் வருணனை பன்முகத்தது. அவரை மட்டும் சுட்டும் குறிப் புப் பொருள் அன்றிப் பிற திருத்தொண்டர்களையும் சுட்டும் குறிப்புப் பொருள் அவற்றில் உண்டு. ஒன்று காணலாம்.

1. திருநாளைப்போவார் : 1
2. : 4

" சுழிப் புனற்கடல் ஓதம் முன் சூழ்ந்து கொண்டணிய
வழிக்கரைப் பொதிப் பொன்னவிழ்ப் பனமலர்ப்புன்னை ;
விழிக்கு நெய்தலின் விரைமலர்க் கட்சுரும்புண்ணக்
கழிக்கரைப் போதி சோறவிழ்ப் பனமடற் கைதை"[1]

என்றும் வண்ணனை. முறையே சுந்தரர், திருமுதுகுன்றத்தில் இறைவனைப் 'பொன்தா' என்று வேண்டி,

" ஆடி யசைந்தடி யாரும் நீரும் அகந்தொறும்
பாடிப் படைத்த பொருளெலாம் உமையாளுக்கோ
மாடமதிலணி கோபுரம்மணி மண்டபம்
மூடி முகில் தவழ் சோலை சூழ் முதுகுன்றரே"[2]

என்று வளைத்துக் கொண்டு கேட்க, இறைவன் பன்னிரண்டாயிரம் பொன் கொடுத்ததையும், திருநாவுக்கரசர்க்குத் திருப்பைஞ்ஞீலி போகும் வழியில் அழிவாம் பசி வந்தணைந்திட, இறைவன் பொதிசோறு வைத்துக்கொண்டு காத்திருந்து அவிழ்த்தெடுத்துக் கொடுத்ததையும் சுட்டுவது. திருமுனைப்பாடி வளநாட்டில்,

" கடைஞர் மிடைவயற் குறைத்த கரும்பு குறைபொழி கொழுஞ்சாறு
இடைதொடுத்த தேன்கிழிய இழிந்தொழுகு நீத்தமுடன்
புடைபரந்து ஞிமிறொலிப்பப் புதுப்புனல்போல் மடையுடைப்ப
உடைமடை அக்கரும்படு கட்டியின் அடைப்ப ஊர்கள் தொறும்"[3]

என்று சேக்கிழார் காட்டும் இயற்கைக்காட்சி, திருநாவுக்கரசர் சைவம் விட்டுச் சமணம் சார்ந்தமையையும் பின்பு தமக்கையாலேயே மீட்கப்பட்டமையையும் குறிப்பால் சுட்டும்.

இனிக் குறிப்புப்பொருள் அமையாது தனி இயற்கைக் காட்சியாய் அமைவனவும் திருத்தொண்டர் புராணத்துள் மிகுதி. அவற்றுள் மிக்க அருமைப்பாடு உடையன ஓரிரண்டு காட்டுவோம்.

(அ) தளிர்கள் நிலமகளின் மார்பில் எழுதிய தொய்யில் :

---

1. திருக்குறிப்புத்தொண்டர் : 36
2. சுந்தரர் தேவாரம் : திருமுதுகுன்றம் : நஞ்சியிடை : 5
3. திருநாவுக்கரசர் : 5

"எழுந்திரைமா கடலாடை இருநிலமா மகள்மார்பில்
அழுந்துபட எழுதும் இலைத் தொழில் தொய்யில் அணியினவாம்
செழுந்தளிர்"[1]

(ஆ) செழுநிலவின் துகள் அனைய மணற்பரப்பு[2]

இயற்கையில் கவிஞர் ஏற்றும் தற்குறிப்பும் ஏராளம்; விரிவஞ்சி விடுகின்றோம்.

*3. 7.* இதுகாறும் திருத்தொண்டர் புராணத்தின் காப்பிய இயல்புகளுள் சிலவற்றைக் கருதினோம். எஞ்சிய வற்றை இடனின்றி விடுகின்றோம். உணர்வு நலன், உரை யாடல் வளன், உவமைத் திறன், அடைமொழித் திறன், கற்பனை வளன், தேவார உரைத்திறன் ஆகியவை விடுக் கப்படுகின்றன. சொல்லாட்சியையும் நடையையும் சிறிது புலப்படுத்தும் வண்ணம், உளம் கவரும் சொற்றொடர்கள் சிலவற்றை இங்குத் தருகின்றோம்.

(1) மெய்வண்ணம் தளர் மூப்பின் பருவம் எய்தி
வில்லுழவின் பெருமுயற்சி மெலிவானான்[3]

(2) தந்தைநிலை உட்கொண்டு தளர்வு கொண்டு
தங்கள் குலத் தலைமைக்குச் சார்பு தோன்ற
வந்தகுறை பாடதனை நிரப்புமாறு மனங்கொண்ட
குறிப்பினால் மறுமை கொண்டு[4]

(3) வண்டமிழ் மென்மலர் மாலை[5]

(4) விருப்புறுமேனி கண்ணீர் வெண்ணீற்று வண்டலாட[6]

(5) கறியமுதங் குதவாதே திருவமுது கைகூட[7]

(6) பால்நாறும் பொன்மணி வாயினர்

---

1. இடங்கழியார்: 1
2. கலியர்: 4
3. கண்ணப்பர்: 43
4. : 54
5. திருநாவுக்கரசர்: 155
6. : 171
7. காரைக்காலம்மையார்: 19
8. திருஞானசம்பந்தர்: 89

(7) கலைஞானத் தாழிய கடலே அதனிடை அமுதே[1]

(8) வானத்தின் மிசையன்றி மண்ணில் வளர் மதிக்கொழுந்து[2]

(9) கானத்தின் எழுபிறப்பு[3]

(10) மிக்கதிரு விளக்கிட்டார் விழுத்தொண்டு விளக்கிட்டார்[4]

(11) மண்ணீர்மை நலஞ்சிறந்த வளவயல்கள் உளவயல்கள்[5]

### 4. 1 இலக்கணம்

*(அ) யாப்பு:* யாப்பு வகைகளுள் கொச்சகக் கலிப்பா சேக்கிழாரின் விருப்பிற்குரியது எனலாம். குற்றெழுத்தே மிக்குவரத் தொகுத்துக் கொச்சகக்கலியில் சிறந்த துள்ள லோசையை அமைத்துள்ளார் :

" தண்டரளம் சொரிபணிலம் இடறியிடை தளர்ந்த சைவார்
வண்டலையும் குழலலைய மடநடையின் வரம்பணைவார்

என்னும் வரிகள் சான்று.

அடுத்து மாமாகாய் மாமாகாய் அமைந்த அறுசீர் விருத்தத்தின் ஆட்சி சேக்கிழாரிடத்து மிகுதி. நான்கு காய் இரண்டு மா அமைந்த அறுசீர் விருத்தங்களும் மிகுதி. விளமா மா விளமாமா அமைந்த அறுசீர் விருத்தமும் மிகுதியே. ஆனல் சந்தநயம் வாய்ந்த எழுசீர் விருத்தத்தைக் குறைவாகவே ஆள்கின்ருர் :

" கையுந் தலைமிசை புனையஞ் சலியன
கண்ணும் பொழிமழை ஒழியாதே
பெய்யுந் தகையன கரணங் களுமுடன்
உருகும் பரிவின பேறெய்தும்" [6]

என்ற வரிகள் சான்று. கொச்சகக் கலியைப் போல மிகுதியாக ஆளவில்லை எனினும் கலித்துறையும் சேக்

---

1. திருஞானசம்பந்தர் : 90
2. ,, 728
3. கலியர் : 11
4. மானக்கஞ்சாறர் : 2
5. திருநாவுக்கரசர் : 167 ;

கிழாரின் விருப்பத்திற்குரியது எனலாம். அதில் பல சந்தங்களை அமைத்து ஆள்கின்றார் :

(1) "இப்படி யொப்பதொ ரற்புத மெங்குள தென்றென்றே
துப்புறழ் வேணியர் கோயிலின் வாயில் புறஞ்சூழ" [1]

(2) "காழியர் தவமே கவுணியர் தனமே கலைஞானத்
தாழிய கடலே அதனிடை யமுதே அடியார்முன்" [2]

(3) "குழல்செய் வண்டினங் குறிஞ்சியாழ் முரல்வன குறிஞ்சி
முழவு கார்கொள முல்லைகள் முகைப்பன முல்லை" [3]

(4) "அஞ்சி றைச்சுரும் பறைபொழிற் சண்பையாண் டகையார்
தஞ்சி வத்திரு மணஞ்செயத் தவஞ்செய்நா ளென்று" [4]

என்பன சில சான்றுகள்.

காய் காய் மா மா காய் காய் மா மா அமைந்தனவும், மாவிள விளமா மாவிள விளமா அமைந்தனவும் ஆகிய எண்சீர் விருத்தங்கள் சிலவிடங்களில் ஆளப்படுகின்றன. கலி விருத்தமும் ஆங்காங்குத் தலை காட்டுகின்றது.

### 4. 2 (ஆ) சொல்லிலக்கணம்

"ஒருவரைக் கூறும் பன்மைக் கிளவியும்
ஒன்றனைக் கூறும் பன்மைக் கிளவியும்
வழக்கி னாகிய உயர் சொற் கிளவி
இலக்கண மருங்கிற் சொல் லாறல்ல" [5]

என்று தொல்காப்பியனார் கூறிய வழுவமைதிக்குச் சிறப்பு வழக்கு அளிக்கின்றார் சேக்கிழார். திருத்தொண்டர்களையும் அவர்களைச் சார்ந்தோருள் உயர்ந்தவர்களையும் உயர்சொற் கிளவியிலேயே வழங்குதலைத் தம் மரபாகக் கொண்டார். இயற்பெயருடன் 'ஆர்' — விகுதி சேர்ந்த உயர்சொற்கிளவியே அவரது பெருவழக்கிற்கு உரியது.

---

1. திருஞானசம்பந்தர் : 87
2. திருஞானசம்பந்தர் : 91.
3. திருக்குறிப்புத்தொண்டர் : 10
4. திருஞானசம்பந்தர் : 1190;
5. தொல்காப்பியம் : கிளவியாக்கம் : 27

திருத்தக்க தேவர், உயர்திணையை உயர்சொற்கிளவியால் வழங்குதலுடன்,

"செந்தார்ப் பைங்கிளியார் சென்றூர்க்கு"[1]

என அஃறிணையையும் ஆரீற்று உயர்சொற் கிளவியால் வழங்கினர். திருத்தொண்டர் புராணத்துள் அவ்வழக்குக் காணப்பட்டிலது. புகழனர், தொண்டனர், சோழனர், திண்ணனர் என ஆண்பால் விகுதியை மாற்ருதே அதன் பின் 'ஆர்'—விகுதி சேர்த்தல் சேக்கிழார் தொடங்கி வைத்த வழக்கே எனலாம். பெண்பாற் சொற்கட்டும் இவ்வாறே ஆர் விகுதி சேர்த்துத் "திருமகளார்", "மங்கையர்க்கரசியார்" என வழங்குவார். உயர்சொற் கிளவியால் வழங்கப்படுபவரே, ஒரு கதை மாந்தரின் சினத்திற்கு ஆளாகி, அவர் கூற்ருல் கூறப்படும் பொழுது, ஒருமைச்சொல்லால் வழங்கப்படுகின்ருர். சினங்கொண்ட ஏயர்கோன் கலிக்காமனரின் கூற்று இதற்குச் சான்று:

"அரிவை காரணத்தி னலே ஆளுடைப் பரமர் தம்மை
இரவினில் தூதுபோக ஏவியங்கிருந்தான் தன்னை"[2]

ஆனல், ஆகில், என்ருல் என்னும் வினைச்சொற்கள், வினைமுற்றிற்குப் பின்னெட்டாய்ச் சேர்ந்து வரைவுப் பொருள் வினையெச்சமாகச் சேக்கிழாரால் ஆளப்படுகின்றன. "பிறந்தருள உளதானல்"[3], "எரிப்பீராகில்",[4] "முதற்பொருளாஞ ரென்ருல்"[5] என்பவை சான்று.

முன்னிலைப் பன்மை ஏவலுக்கும் வியங்கோளுக்கும் ஒருபடித்தாகச் 'செய்யும்' என்னும் முற்றுப் பயன்படுவதையும் திருத்தொண்டர் புராணத்துட் காணலாம். இது பிற்காலத்தில் பெருவழக்குப் பெற்றது.

"பொங்குபுனல் யான் மூழ்கித் தருகின்றேன் போதும்"[6]

"ஒருவரும் எதிர்நில்லாமே ஓடிப்போய் பிழையும்"[7]

என்பவை காட்டு.

---

1. சீவகசிந்தாமணி: குணமாலையார் கலம்பகம்.
2. ஏயர்கோன்: 387
3. திருநாவுக்கரசர்: 11
4. நமிநந்தி: 10
5. தில்லைவாழந்தணர்: 9
6. திருநீலகண்டர்: 29
7. இயற்பகை: 17

'உம்' - இடைச் சொல், மேற்காட்டிய "ஆகில்", என்னும் ஈற்றுவினையெச்சத்தோடும், 'ஆயின்' என்னும் ஈற்று வினையெச்சத்தோடும் ஒட்டிச் சிறப்புப் பொருளில் வழங்குவதை,

(1) "மற்றுங்கள் தனங்களின் ஆகிலும் இடுவீர்"[1]

(2) "பெற்றியால் தவமுன் செய்தானுயினும்"[2]

என்னும் வரிகளிற் காணலாம்.

இனி இலக்கணத்தை இலக்கியச் சுவைபடப் பயன் படுத்தும் இடங்கள் சிலவற்றைக் காண்போம்.

'உம்' - இடைச்சொல் எண்ணுப்பொருளிலும், பெய ரெச்ச ஈருகவும் வருதலைப் பயன்படுத்தி முருகநாயனுரின் மலர்த்தொண்டினை நயம்பட வண்ணிக்கின்ருர் :

"கோட்டு மலரும் நிலமலரும் குளிர்நீர் மலரும் கொழுங் கொடி
தோட்டுமலரும் மாமலரும் சுருதிமலரும் திருவாயில் [யின்
காட்டுமுறுவல் நிலவலரக் கனகவரையின் பன்னுகநாண்
பூட்டும் ஒருவர் திருமுடிமேல் புனையலாகு மலர்தெரிந்து"[3]

அடுத்து,

"ஆடல் நீடுவ துகிற்கொடி அணிகுழற் கொடிகள்"

என்பது வேற்றுமைத் தொகையும் அடையடுத்த ஆகு பெயரும் இணைந்து விளக்கும் இலக்கியச் சுவைக்குச் சான்று. புணர்ச்சி - இலக்கணமும் இவ்விலக்கியச் சுவை யைத் தரவல்லது என்பதை,

(1) "காடெல்லரம் கழைக்-கரும்பு காவெல்லாம் குழைக்கரும்பு
மாடெல்லாம் கருங்-குவளை வயலெல்லாம் நெருங்கு வளை"[4]

(2) "மண்ணீர்மை நலஞ்சிறந்த வளவயல்கள் உளவயல்கள்"[5]

(3) "பூங்கணிவீ தியிலணைவோர் புலமறுகும் சில மறுகு"[6]

என்ற வரிகளால் அறியலாம்.

இதுகாறும் சேக்கிழாரது திருத்தொண்டர் புராணத் தின் காப்பியவிலக்கிய இயல்புகள் சிலவும், இடைக்காலத் தமிழின் நிலைகாட்டும் இலக்கணவியல்புகள் சிலவும் எடுத் துக்காட்டப்பட்டன.

---

1. அமர்நீதி : 37
2. கண்ணப்பர் : 8
3. முருகர் : 8
4. திருநாட்டுச் சிறப்பு : 17
5. மானக்கஞ்சாறர் : 2
6. ,, : 5

# 8
# சமண சமய நூல்கள்

டாக்டர் வி. பி. தேவதத்தா

மூவா முதலா உள்ள உலகத்தில் வாழும் உயிர்கள் அனைத்தும் இன்ப ஆக்கமும் துன்ப நீக்கமும் விழைந்து நிற்றல் இயல்பு. பெறுதற்கரிய இவ்வுடம்பின் பயன் அழியாத பேரின்ப நிலைக்கு முயல்வதேயாம். நிலையாத யாக்கை கொண்டு நிலைத்த இன்பமடையும் நன்முயற்சியே வாழ்க்கையின் குறிக்கோளாம். இக்குறிக்கோளை மறவாது போற்றவும் ஆற்றவும் பேராற்றல் படைத்த சான்றோர்கள் அருமையும் பெருமையுமுடைய நூல்களை யாத்துத் தந்தனர். அவர்தம் உழைப்பால் மொழி வளர்ந்தது; வளர்ந்த மொழியால் மக்கள் உள்ளம் செம்மை நெறியைத் தழுவியது; உயர்ந்தது.

உயிர்களை உய்விக்கும் நல்நெறியின்கண் நடாத்திச் செல்கின்ற இலக்கியங்கள் யாண்டிருந்து தோன்றின? வாழ்க்கையை வளமாக்கத் தோன்றிய இலக்கியங்கள் வாழ்க்கையினின்றே முகிழ்த்தன. ஆம்! வாழ்க்கை இத்தன்மைத்து எனக்காட்டலும், இத்தன்மைத்தாய் அமைய வேண்டுமென்ற விழைவை வெளிப்படுத்தலும் இலக்கியத்தின் பண்பாய், பயனாய் அமைந்தது.

இலக்கிய வடிவிலும் சொல்லும் வகையிலும் இவ்விலக்கியங்கள் காலத்திற்கு ஏற்றதோர் கோலம்பூண்டு பொலிவு பெறுவதை யாவரே தடுக்க வல்லார்? தன்னேரில்லாத் தகைமைத்தாய் இலங்கும் நந்தமிழ் மொழியின் இலக்கிய வரலாற்று ஏடுகளைத் திருப்பிப் பார்ப்போமேயானால் அவற்றின் வளனும் நலனும் விளங்கக் காணலாம்.

சங்ககாலத்து இலக்கியங்களில் காதலும் வீரமும் களிநடம் புரிவதைக் காணலாம். அக்காலத்து வாழ்ந்த மக்களின் அகப்புறநெறியை அறக்கோட்பாட்டை அவை

காட்டாநிற்கும். சமயம் அக்காலத்தே இலைமறை காய் போல மறைந்து கிடந்தமையை அக்காலப் பாடல்கள் பாடி நிற்கும். இயற்கையோடு இயைந்த தெய்வநெறியே ஆங்குக் காணப்படும் இறைநெறியாம். என்றாலும், உயிரின் தன்மையை ஊழ்வினையின் வலிமையை அப் பாடல்கள் புலப்படுத்தும் நிலையைப் பயில்வோர் உணர லாம்.

காலம் மாறும்போது கருத்தும் மாறும். கருத்தின் மாற்றம் இலக்கிய மாற்றத்தைத் தோற்றுவித்தது. மாற் றத்தில் புதுமை புகுந்தது. இதற்குக் காரணம் என்னை? பல்வேறு வகையான மக்களின் தொடர்பே என்றால் தவறா காது. புதியவர்கள் வருகை புதுமைநெறிகளைத் தந்து நின்றது. பின்னர் அப்புதுமைநெறி அறமாக — குறிக் கோளாக இலக்கியத்தில் இடம்பெற்றது. எனவே சங்க கால மக்களின் வாழ்வியலை வண்ணமுறச் சித்திரிக்கும் அவைகளின் மூலம் சமணமும் பௌத்தமும் தமிழகத்தில் இடம்பெற்றிருந்த பெற்றியைக் காணலாம்.

மதுரைக்காஞ்சி ஆருகதப்பள்ளியும், பௌத்தப்பள்ளி யும் மதுரையில் இருத்தனவாகக் கூறும்.[1]

"விண்பொரு நெடுங்குடைக் கொடித்தேர் ஓரியர்
திண்கதிர்த் திகிரி திரிதரக் குறைத்த
உலக விடைகழி யறைவாய் நிலைஇய
மலர்வாய் மண்டிலத் தன்ன"[2]

என்ற புறநானூற்றுப் பாடலில் இவ்வடிகள் அருக சமயத் தினரது புராண வரலாறு ஒன்றினை உட்கொண்டது என் பதை உரைநோக்கியறியலாம். மற்றொரு பாடலிலும் இவர்களைப் பற்றிய குறிப்பினை யறிய முடிகிறது.

"ஒரு முகுநூல், இகல்கண்டோர் மிகல் சாய்மார்"[3]

என்ற அடிகள் வேதவேள்விக்கு மாறுபட்ட சமயத்தார் அக்காலத்து இருந்தனர் என்பதையே புலப்படுத்தும். வேத வேள்வியை எதிர்ப்போர் சமணரும் பௌத்தருமா வரன்றோ? சங்க காலத்து வாழ்ந்த புலவர்களுள் சமணர்

---

1. 487-488
2. புறநானூறு : 175
3. ,, : 176

களும் இருந்தனர் என்பதை அறிஞர் அறிவர். எனவே, தமிழகத்தில் அக்காலத்திலேயே சமணமும் பௌத்தமும் இருந்தமையை அறியலாம்.

அருகிக் காணப்பட்ட இவர்கள் பெருகிக் காணப் பட்டதும் சில நூற்றுண்டுகள் கழிந்த பின்னரேயாம். கி.மு. மூன்றும் நூற்ருண்டிலேயே வடநாட்டினின்றும் பத்திரபாகு சுவாமிகள் எண்ணுயிரம் சீடர்களுடன் தென்னுட்டிற்கு வந்த செய்தி வரலாற்றுச் சிறப்புடையது. அவர்களுடன் சந்திரகுப்த மன்னரும் துறவியாகி அனைவரும் மைசூர் நாட்டிலுள்ள சிரவண பெளிகுளாவில் தங்கினுர்கள். அது சமயம் பத்திரபாகு சுவாமிகள் தமது சீடர்களில் ஒருவரான விசாக முனிவருடன் சில துறவிகளைப் பாண்டிய நாட்டிற் கும் சோழ நாட்டிற்கும் அனுப்பி அந்நாடுகளிலுள்ள சமண முனிவர்களோடு அளவளாவி ஆங்காங்கு அறநெறிகளைப் போதிக்குமாறு பணித்துள்ளார். இவைகள் யாவுமே கல்வெட்டுச் சான்றுகளுடன் கூடிய வரலாற்று உண் மைகள்.

களப்பிரர் ஆட்சியில் சமணர் சிறப்புப் பெற்றனர் என்பார் சிலர். வச்சரநந்தி இந்தக் காலத்தில்தான் மதுரையில் சைன சங்கம் நிலை நாட்டியது என்பர். இச் சங்கத்தின் உதவியால் பற்பல நீதிநூல்களை இயற்று வராயினர். அவைகளே அறநூல்களாக மலர்ந்தன. பின்னர், களப்பிரர்களை வென்று வாகை சூடிய பல்லவர் காலத்தும் சமணம் தழைத்தோங்கியது எனலாம். இக் காலத்தின் முற்பகுதி இவர்தம் பொற்காலமாய்ப் பொலிந்து தமிழின் ஏற்றத்திற்கும் பல்வகை இலக்கியத் தோற்றத்திற்கும் விளைநிலமாய் அமைந்தது எனலாம்.

விழுப்பந்தரும் ஒழுக்கத்தையே உயிரினும் மேலான ஒன்ருகப் போற்றிய இவ்வறவோர் தத்தம் உணர்வை யாவர்க்கும் புலப்படுத்தி உய்யுமாற்றை அருளினர். இப் பணியைச் செய்ய விழைந்த அவ்வறங்கிடந்த நெஞ்சினர், எவ்விடத்துச் சென்ருலும் அவ்விடத்து மக்களோடு உளங் கலந்து, உயிர்கலந்து உறவாடினர். இவ்வுறவுக்கு அவர் தம் மொழியைக் கற்று, தேர்ச்சிபெற வேண்டியிருந்

தமையை நன்குணர்ந்து, அவ்வம்மொழிகளைக் கற்றுத் துறை போயினர். செந்தமிழ் மொழியும் அவர்களை ஈர்த்தது; அவர்தம் பணியால் பீடுற்றுப் பொலிவு பெற்றது. இவ்வாறு தாமுணர்ந்த சமயப் பேருண்மைகளை விளக்கிய நூல்கள் சாலப்பலவாம். அவைகளை அறநூல், காப்பியம், சிற்றிலக்கியம், புராணம், இலக்கணம், நிகண்டு, மணிப்பிரவாள நடையில் அமைந்த உரைநடை நூல் ஆகிய தலைப்பின்கீழ் ஆராய்தல் நன்றாம். தமிழிலக்கியத்தைப் பொறுத்தமட்டில் நூல் எழுந்த காலத்தைக் குறிப்பிட்டுக் கூறுதெலென்பது சிக்கலான ஒன்றாம். எனவே, அரிதில் முயன்று, உண்மைகளை வெளியிடும் இக்கால ஆராய்ச்சியில் புகுந்து தம்முள் பிணங்கியும் சுணங்கியும் வரும் அறிஞர்கட்கே அவ்வாய்ப்பை விட்டு, இலக்கிய நோக்கோடும் சமய நோக்கோடும் "இடைக்காலச் சமண இலக்கியங்களை" ஆய்தலே இன்றைய நோக்காம்.

### அறநூல்கள்

சங்க இலக்கியங்களுக்குப் பின்னர்ப் பெரிதும் தோன்றி வளர்ந்தவை அறநூல்களென முன்னரே கண்டோம். முடியுடைவேந்தராலும் வேளிர் முதலிய சிற்றரசராலும் ஆளப்பட்டு வந்த தமிழ்கூறு நல்லுலகம் கி.பி. மூன்றாம் நூற்றாண்டில் களப்பிரர் என்ற அந்நியர் ஆட்சிக்குப்பட்ட செய்தியை அறிந்தோம். இவர்கள் பாலிமொழியை ஆதரித்ததால் தமிழ்மொழி வளமுடைய இயலாமற் போய் விட்டது. தமிழர்தம் மொழி, கலை, நாகரிகம், முதலியவற்றில் சில கூறுகளை இழக்கும்படி நேரிட்டது. அதனால், தமிழிலக்கிய வரலாற்றிலே இக்காலப்பகுதியினை 'இருண்டகாலம்' என வழங்குவர். இருண்ட காலத்தில் ஒளிகாட்ட அறநூல்கள் தோன்றின காலத்தை பதினெண் கீழ்க்கணக்கு நூல்கள் தோன்றின காலம் என்பர். இப்பதினெண்கீழ்க்கணக்கு நூல்களைச் சங்ககால இலக்கியம் என்பர் ஒரு சாரார். கூறும் பொருளாலும் நடையாலும் வேறுபட்டிருக்கின்றன என மறுப்பார் ஒரு சாரார். இவைகளுள் காலத்தால் முந்தியன சில; பிந்தியன சில. எனவே, இப்பதினெண்கீழ்க்கணக்கு நூல்கள் சங்கம் மருவிய காலத்தில் தோன்றியன என்றே கொள்வர். 'அந்நூல்களெல்லாம் எவ்வாண்டில் எழுதப்பெற்றன என்

பதை அறிந்து கோடற்கு ஆதாரங்கள் கிடைக்கவில்லை. அன்றியும், அவை எந்த நூற்றாண்டில் தோன்றியிருக்கக் கூடுமென்பதும் உய்த்துணர்ந்து கூறவேண்டிய நிலையில் தான் உள்ளது"[1] என்ற கருத்தை ஈண்டு நினைவு கூர்தல் நன்றாம்.

பன்னிரு பாட்டியல் கிழ்க்கணக்கு நூல்களின் தன்மையை

"அடிநிமிர்பில்லா செய்யுட் டொகுதி
அறம்பொரு ளின்பம் அடுக்கி யவ்வகைத்
திறம்பட வுரைப்பது கீழ்க்கணக்காகும்".[2]

என விளக்கிச் செல்கிறது. எனவே கீழ்க்கணக்கு நூல்களெல்லாம் குறுகிய அடிகளையுடையனவாய் அறம், பொருள், இன்பம் என்ற மூன்றையும் கூறுமென்பது வெளிப்படை.

சங்ககாலத்தில் அகவற்பாக்கள் பயின்றுவந்தன. இப்பிரிவிலோ வெண்பா பயின்றுவரக் காணக்கின்றோம். அறக்கருத்துக்களைக் கூற இவ்வெண்பாவே ஏனையவற்றினும் சிறந்தது என எண்ணினர் போலும்.

"நாலடி நான்மணி நானாற்ப தைந்திணைமுப்
பால்கடுகங் கோவை பழமொழி — மாமூலம்
இன்னிலை சொல் காஞ்சியுட னேலாதி யென்பவே
கைந்நிலைய வாங்கீழ்க் கணக்கு"

என்னும் வெண்பா பதினெண்கீழ்க்கணக்கு நூல்கள் யாவை என்பதை நமக்குப் புலப்படுத்தும். இவ்வற நூல்கள் படிப்பார் மனத்தை ஈர்க்கும் வகையில் உவமையின்பமும் இலக்கிய இன்பமும் கொண்டு இலங்குவன. அறக்கருத்துக்களை குறைந்த அடிகளில் இலக்கியச் சுவை மேலோங்கக்கூற முற்படுவது ஒரு தனிச் சிறப்பாகும்.

பதினெண்கீழ்க்கணக்கு நூல்களுள் பெரும்பாலான நூல்கள் சமணப் பேரறிஞர்களால் இயற்றப்பட்டன

1. தி. வை. சதாசிவ பண்டாரத்தார்; தமிழ் இலக்கிய வரலாறு I ப. 28
2. மேற்கோள்: 133

என்பதை யாவரும் அறிவர். அவைகளுள் இடைக் காலத்தில் தோன்றியவற்றுள் முதன்மையானது நாலடி யாரேயாம்.

**நாலடியார்.**

பற்பல சமயத்தாரும் தத்தம் சமயமென உரிமை பாராட்டும் திருக்குறளுக்கு அடுத்த நிலையில் வைத்துப் போற்றப்படுவது இந்நூலாகும். இதன் பெருமையை 'ஆலும் வேலும் பல்லுக்குறுதி, நாலும் இரண்டும் சொல்லுக்குறுதி' என்றும், 'பழகுதமிழ்ச் சொல்லருமை நாலிரண்டில்' எனவும் வழங்கும் உரைகளால் உணரலாம். ஒல்காப்புகழ்பெற்ற தொல்காப்பிய உரையாசிரியர்க ளாலும் பிறராலும் மேற்கோளாக எடுத்தாளப்பட்ட பெருமையினை உடையது இந்நூல்.

சமண முனிவர்களால் இயற்றப்பெற்ற இந்நூல் நானூறு பாடல்களை உடையது. இந்நூலுக்கு முதன்முதல் உரை எழுதியவர் பதுமனார் ஆவர். சிறப்பு விகுதி சேர்ந்து 'நாலடியார்' ஆகியது எனப்பெயர்க்காரணம் கூறுவர். நாலடியாரும் குறளைப் போன்றே அறத்துப்பால், பொருட் பால், காமத்துப்பால் என முப்பெரும் பகுதிகளாகப் பிரிக்கப்பட்டுள்ளது.

**நூற்சிறப்பு**

சீரிய உவமைகளாலும் செறிவார்ந்த சொற்களாலும் உறுதிப் பொருட்களைக் கூறுவதில் இந்நூல் தனிச்சிறப்பு வாய்ந்தது எனலாம். இம்மையில் ஈடில்லாப் பெருமை யைக் கொடுக்கும் கல்வியின் தன்மையை இவர் கூறும் வகை இனியதாம்.

> 'குஞ்சியழகும் கொடுந்தானைக் கோட்டழகும்
> மஞ்சள் அழகும் அழகல்ல — நெஞ்சத்து
> நல்லம்யாம் என்னும் நடுவு நிலைமையால்
> கல்வியழகே அழகு'[1].

ஆம்! உடலழகு, உடையழகு, அணியழகு எல்லாமே நிலைத்து நிற்பனவல்லவவே. எழு பிறப்பும் ஏமாப்பை

1. நாலடியார்: 131

யளிக்கும் உண்மைக் கல்வியைக் காட்டிலும் அழகுடைய அருமைப் பொருள் வேறுண்டோ?

குற்றம் பார்க்கில் சுற்றமில்லை; பிழை பொறுத்தல் இல்லையேல் நட்பு இல்லை. அயலவர் செய்தால் அறியாமை என மன்னித்து விடலாம். ஆனால் ஆண்டுபல நம்மோடு பழகி நெருங்கியிருக்கும் நண்பன் பிழை செய்தால் என்ன செய்வது? உள்ளம் எத்துணை நைந்துருகும்? அவனையும் பொறுத்தல் நன்றோ? ஆம்! அவனையும் பொறுத்தலே நன்றாம். எதையெண்ணிப் பொறுப்பது? உலகிலுள்ள எப்பொருள்தான் குறையற்றது? குறையற்ற நிறை பொருள் யாண்டுளது? நெல்லுக்கு உமியுண்டு; நீர்க்கு நுரையுண்டு; புல்லிதழ் பூவிற்குமுண்டு. நண்பனும் மனிதனே. அவனும் குறைகளுக் கப்பாற்பட்டவனல்லன் என்பதை எண்ணியே பொறுத்தல் வேண்டுமென்பார். அவர் கூறும் சொற்களாலேயே அதனைக் காண்போம்:

"நல்லார் எனத்தாம் நனிவிரும்பிக் கொண்டாரை
அல்லார் எனினும் அடக்கிக் கொளல்வேண்டும்
நெல்லுக்கு உமியுண்டு நீர்க்கு நுரையுண்டு
புல்லிதழ் பூவிற்கும் உண்டு"[1]

நெருநல் உளனொருவன் இன்றில்லை என்ற பெருமையை உடையது இவ்வுலகம். நீர்க்குமிழி யன்ன அழியும் தன்மையது இவ்வுடம்பு; அழியுமின்பமிது; இதனை அறியாத பேதையர் 'வாழ்க்கை நிலையானது என்றும் இவ்வின்பம் நிலையானது' என்றும் எண்ணி மயங்குகின்றனர். இவர்கள் தம் அறியாமையை என்னென்பது! பலிபீடத்திற்கு அழைத்துச் செல்லப்பட்ட ஆடு வெறியாடுவோன் கையிலுள்ள மாலையைக் காண்கிறது. மாலையிலுள்ள பசுந் தளிரைக் கண்டு ஆசையோடு உண்ண முற்படுகிறது; உண்டு மகிழ்கிறது. உண்ட இன்பமும் உண்ட அதுவும் நிலைக்கப்போவது இன்னும் மிகச்சிறிய காலமே. அதன் பின்னர் உயிரையே பறிகொடுத்துவிடுகிறது. நிலையாத இன்பத்தையெண்ணி மகிழும் பேதையர்க்கு இதைவிடச் சிறந்த உவமை கூறல் இயலுமோ?

---

1. நாலடியார், 221.

தளிரைக்கண்டு ஆசைப்படாவிட்டால் ஒருவேளை தப்ப வேண்டுமென்ற எண்ணமும், அவ்வெண்ணத்தின் அடியாய் முயற்சியும் பிறக்கலாம். அழியும் இன்பத்தில் மூழ்காமலிருந்தால் அழியா இன்பத்தைப்பெற முயலலாம் என்ற கருத்தும் சிந்திக்கற்பாலது.

செத்தாரைச் சாவார் சுமக்கும் உலகு என இரங்கிக் கூறும் தன்மையும், செல்வம் நிலையற்றது; அதனைப் பெற்றால் இம்மைக்கும் மறுமைக்கும் பயனைத்தரும் செயல்களைச் செய்க எனத்தூண்ட 'செல்வம் சகடக்கால் போல வரும்' என்றும், 'மருவுமின் மாண்டார் அறம்' எனவும் விளக்கிப் போந்தமை அவர்தம் திறனுக்குச் சான்றாகும். வாழ்நாள் கழிந்துகொண்டே இருக்கின்றது, என்று முடியுமோ அறியோம், அதனால் நிலைபெற்ற பொருள்கள் என்று நிலைக்கும் செல்வப் பொருள்கள் நிலைபெறா என்றுணர்ந்து அறத்தைச் செய்ய விரைமின் என்று கூற, பாடலின் ஓசையையும் சொற்களையும் அதற்கேற்ப அமைத்திருக்கும் திறன் சாலவும் நன்றாம்.

> "நின்றன நின்றன நில்லா எனவுணர்ந்
> தொன்றின ஒன்றின வல்லே செயின் செய்க;
> சென்றன சென்றன வாழ்நாள் செறுத்துடன்
> வந்தது வந்தது கூற்று"[1]

பழமொழிகளை எடுத்தாளுவதிலும் இது சிறந்து விளங்குகிறது.

அயல்நாட்டிலிருந்து ஈண்டுவந்த ஜி. யு. போப் அவர்கள் இதனை ஆங்கிலத்திலும் மொழிபெயர்த்தார் என்பது இதன் பெருமைக்கு மற்றொரு சான்று.

முத்தரையரை இரு பாடல்கள்[2] குறிப்பதால் அவர்கள் சிறந்து விளங்கிய ஏழாம் நூற்றாண்டின் இடைப்பகுதியே இந் நூலின் காலம் என்பர் திரு. வையாபுரிப்பிள்ளை[3].

---

1. நாலடியார், 5.
2. நாலடியார், 200, 290.
3. காவிய காலம்

## பழமொழி

பேகன் என்னும் பேரறிஞன், "ஒரு தேசத்தின் அறிவின் மாட்சி, அறிவின்மாட்டுப் பிறந்த நகைச்சுவை யின்பம், வீரம் ஆகிய இவைகளை அத்தேயத்தின் பழ மொழிகளினின்றும் கண்டுபிடிக்க முடியும்"[1] என்ருர்.

பழமொழி நானூறு எனக்குறிக்கப்பெறுவதால் இது நானூறு பாடல்களை உடையது என அறியலாம். ஒவ் வொரு பாவின் இறுதியிலும் ஒவ்வொரு பழமொழியை உரைப்பதால் இப்பெயர் பெற்றது என்பர்.

பண்டைத் தமிழகத்தில் வழங்கிய பழமொழிகளையும் கடையெழுவள்ளல்களில் சிலரைப்பற்றிய வரலாறு களையும் சேர சோழ பாண்டிய வரலாறுகளையும் கூறுவ தால் வரலாற்றுக் குறிப்புக்களையறிய இந் நூல் பெரிதும் பயன்படுகின்றது. உலகியல் முறையுணர்ந்து கருத்துக் களைக் கூறுவதிலும் இந் நூல் சிறந்து காணப்படுகிறது.

உடன்பிறந்தாராயினும் இருவர் நெடுநாள் உட னுறைதல் இன்பத்தைப் பயப்பதற்கு மாருகத் துன்பத் தைப் பயக்கும். 'பழகப் பழகப் பாலும் புளிக்கும்' என்ற பழமொழியை ஈண்டு நினைவு கூர்தல் நன்ரும். அதனுல் திருமகளே யாயினும் நெடுநாள் உடனுறைதல் இன்னு மைக்கே காரணமாகுமாம். உடனிருப்பதால் கசப்பும், நீங்கி வாழ்தலால் இன்பமும் தோன்றுதல் உலக இயற்கை யென்பார்,

"கருவினுட் கொண்டு கலந்தாரும் தம்முள்
ஒருவழி நீடும் உறைதலோ துன்பம்
பொருகடல் தண்சேர்ப்ப! பூந்தாமரைமேல்
திருவொடும் இன்னது துச்சு"[2]

அன்பு, நாண், ஒப்புரவு, கண்ணேட்டம் நான்கும் சான் ருேர்க்கு அணியாமென்று வள்ளுவர் கூற, இவரோ 'அறி மடம்' என்ற பண்பும் அவர் தமக்கு அணியாமெனக்கூறிப்

---

1. The genius, wit, and spirit of a nation are discovered in its proverbs.
2. பழமொழி, 365.

பெருமையைத் தேடிக்கொள்கிருர். சங்க காலத்தில் வாழ்ந்த கடையெழு வள்ளல்கள் கொடைமடம் படுத்த சான்ருேராவர். இன்னுர், இனியார் எனப்பாராதும் சிந்தியாதும் வாரிவாரி வழங்கும் வண்மையாளர். ஈத்துவக்கும் இன்பத்தைத் துய்த்ததால் கொடைமடம் படுத்து எதைச் செய்வது என அறியாநிலையில் உள்ளத்தில் பெருக்கெடுத்தோடும் அன்பின் திறத்தால் வாரிவழங்கும் வள்ளண்மையை அறிமடமெனக் கூறி, அதைச் சான்ருேர்க்கு அணியாக அணிவிக்கும் திறன் மகிழற்பாலதாம்.

> "முல்லைக்குத் தேரும் மயிலுக்குப் போர்வையும்
> தொல்லை யளித்தாரைக் கேட்டறிதும் — சொல்லின்
> நெறிமடற் பூந்தாழை நீடுநீர்ச் சோப்ப !
> அறிமடமும் சான்ருேர்க்கு அணி"[1]

என்கிருர். இன்னும் மனுநீதி கண்ட சோழன்[2], பொற்கைப்பாண்டியன்[3], கரிகாற்சோழன்[4] என்போரைப்பற்றிய செய்திகளும் வருகின்றன.

இராமாயண பாரதக் கதைக் குறிப்புக்களும்[5] புராணக் குறிப்புக்களும்[6] காணப்படுகின்றன. அக்காலத்து வழங்கிய பழமொழிகள் சில இக் காலத்தும் அப்படியே வழங்கப்படுகின்றன. சான்ருக இருதலைக் கொள்ளி[7], குன்றின்மேல் இட்ட விளக்கு[8], நிறைகுடம் நீர் தளும்பல் இல்[9], பாம்பறியும் பாம்பின கால்[10], தொளையெண்ணுர் அப்பம் தின்பார்[11].

இக் காலத்து வழங்காதனவற்றுள் ஒரு சில.

சுரையாழ அம்மி மிதிப்ப,[12] பாய்பவோ வெந்நீரும் ஆடாதார்தீ[13] புலித்தலையை நாய்மோத்தல் இல்[14]. அக்காலத்து வழங்கிய பழமொழிகள் சில இக் காலத்து சிறிது மாறியும்

---

1. பழமொழி, 74
2. ,, 239
3. ,, 76
4. ,, 239
5. ,, 234, 257, 356.
6. ,, 177, 183.
7. ,, 141.
8. பழமொழி, 80.
9. ,, 9.
10. ,, 7.
11. ,, 165.
12. ,, 122.
13. ,, 159.
14. ,, 204.

திரிந்தும் அதே பொருளைக் கொடுக்கின்றன. எடுத்துக் காட்டாக 'முழங்குறைப்பச் சாண் நீளுமாறு'[1] என்பது சாண் ஏறினல் முழம் சருக்குகிறது என்றும், 'விரையிற் கருமம் சிதையும்'[2] என்பது 'பதருத காரியம் சிதருது' என்றும், 'பொருள்கொடுத்துக் கொள்ளார் இருள்'[3] என்பது 'காசு கொடுத்துத் தேள்கொட்டிக் கொள்வது போல' என்றும் வழங்குகின்றமையை அறியலாம்.

பழமொழிகளை மிகச் சிறந்த முறையில் நூல் முழுவதும் அமைத்து எழுதப்பட்ட நூல்களுள் மிகத்தொன்மை வாய்ந்தது இந் நூலாகும். இதன் ஆசிரியர் முன்றுறை யரையனர் என்பர். முன்றுறை என்னும் ஊரில் வாழ்ந்த குறுநில மன்னரென்பர்.

உடம்பிற்குப் பிணியேற்படின் மருத்துவரை நாடி மருந்துண்கிறேம். பிணிநீங்கி மகிழ்கிறேம். இவ்வுடற் பிணி மட்டும் நீங்கினல் போதுமா? உள்ளப்பிணியும் நீங்க வேண்டுமல்லவா? உள்ளப்பிணிதான் என்னை? தீய நினைவுகளால் அலைக்கப்படுவதே இப் பிணியாம். இப் பிணியைத் தீர்க்க மும்மருந்து தருகிறார்கள், மூவர்.

### திரிகடுகம்

சுக்கு, மிளகு, திப்பிலி சேர்ந்தது திரிகடுகமாம். இம் மூன்று பொருள்களால் இயன்ற மருந்து உடல்நோயைப் போக்குமா போல இந்நூலின் ஒவ்வொரு செய்யுளிலும் கூறப்பெறும் மூன்று அரிய கருத்துக்களும் உளநோயைப் போக்கி உரமூட்டும் தன்மையனவாம். நல்லாதனர் இந் நூலை இயற்றினரென்பர். காலம் கி. பி. ஐந்தாம் நூற்றுண்டு. சான்ருக ஒரு பாடலைக் காண்போம்.

"அருந்ததிக் கற்பினள் தோளும் திருந்திய
தொல்குடியின் மாண்டார் தொடர்ச்சியுஞ் — சொல்லின்
அரிலகற்றுங் கேள்வியார் நட்புமிம் மூன்றுந்
திரிகடுகம்போலு மருந்து"[4]

---

1. பழமொழி, 100.
2. ,, 164.
3. ,, 3.
4. திரிகடுகம், 1.

**சிறுபஞ்சமூலம்**

கண்டங்கத்திரி, சிறுவழுதுணை, சிறுமல்லி, பெருமல்லி, நெருஞ்சி ஆகிய ஐந்து வேர்கள் மக்கள் நோயைத் தீர்ப்பது போல மனப்பிணியை இப்பாடல்கள் தீர்க்குமென்பது கருத்தாம். ஒவ்வொரு பொருளிலும் ஐந்தைந்து உறுதிப் பொருள்களைக் கூறுவது. வனப்பு பற்றி இவ்வாசிரியர்

> " கண்வனப்பு கண்ணோட்டம் ; கால்வனப்புச் செல்லாமை ;
> எண்வனப்பு இத்துணை ஆம் என்று உரைத்தல், பண்வகுப்பும்
> கேட்டார், நன்று என்றல் ; வேந்தன் தன்நாடு
> வாட்டான் நன்று என்றல் வனப்பு " [1].

**ஏலாதி.**

ஏலம், இலவங்கப்பட்டை, நாககேசரம், மிளகு, திப்பிலி, சுக்கு ஆகிய அறுவகைப் பொருளும் மருத்துவ அளவில் சேர்ந்து செய்யப்பட்ட மருந்து ஏலாதி யென்பர். ஒவ்வொரு பாடலிலும் அவ்வாறு உறுதிப்பொருள்களைக் கூறிச் செல்வர். மக்களின் அறியாமையைப் போக்கி உயிர்க்கு உறுதி பயக்கும் மெய்யுணர்வை அளிக்கவல்லது என்பது இந்நூற்பெயரால் அறியக் கிடப்பதோர் உண்மையாம். இதனாசிரியர் கணிமேதாவியார்.

வீடு பேற்றின் இயல்பை இவர் கூறியிருக்கும் பாங்கு மிக இனியதாம்.

> " பொய்தீர் புலவர் பொருள்புரிந் தாராய்ந்த
> மைதீர் உயர்கதியின் மாண்புரைப்பின்—மைதீர்
> சுடரின்று சொல்லின்று மாறின்று சோர்வின்
> றிடரின் றினிதுயிலு மின்று"[2].

கீழ்க்கணக்குத் தொகுதியில் உள்ள இன்னா நாற்பது, இனியவைநாற்பது, நான்மணிக்கடிகை, ஆசாரக்கோவை, முதுமொழிக் காஞ்சி முதலியனவும் சமணப் பெரியோர்களால் செய்யப்பட்டனவேயென்றாலும் ஒருசாரார் இல்லையென மறுத்துக் கூறுவர். அப்படியே அமைந்தாலும் சமணத்தின் அடிப்படைக் கொள்கைகளைப் பொது நோக்காகக் கொண்டு வற்புறுத்துவதைக் காணலாம்.

---

1. சிறுபஞ்ச மூலம், 9.
2. ஏலாதி, 66.

பொதுவான அறப்பண்புகளை யாவர்க்கும் கூறிய சமண சமயச் சான்றோர்கள் காலச் சூழ்நிலை மாறியபோது தமக்கே உரிய உரிய அறங்களை எடுத்துக் கூறுவாராயினர். இத்தகைய அறநூல்கள்' பிற்கால அறநூல்கள் என வழங்கப் பெற்றன. அவைகளுள் அறநெறிச்சாரம், அருங்கலச்செப்பு, ஜீவசம் போதனை என்பவை யடங்கும்.

காலத்தால் முந்திய எலிவிருத்தம், நரிவிருத்தம், கிளி விருத்தம் கிடைத்தில என்பது தமிழர்தம் இழப்பாம்.

**காப்பியங்கள்**

**பெருங்கதை :—** வாழ்க்கையினின்றும் முகிழ்த்து, வாழ்க்கையை வளமாக்கப் பற்பல இலக்கியங்கள் தோன்றின. அவை காலச்சூழ்நிலைக்கு ஏற்றதோர் வகையில் மாற்றங் கொண்டன. அறநூல்களுக்குப் பின்னர் காப்பியங்கள் மலர்ந்தன. அவைகளுள் கொங்கு வேளிரால் இயற்றப்பட்ட பெருங்கதையை முதலில் காண்போம்.

செந்தமிழ் மொழியிற் சிறந்து விளங்கும் தொடர் நிலைச் செய்யுள் நூல்களுள் ஒன்று. காப்பியமெனினும் தொடர்நிலைச் செய்யுள் எனினும் ஒக்கும்.

"அம்மை அழகு தொன்மை தோலே
விருந்தே இயைபே புலனே இழைபெனு..."[1]

எனத் தொடர்நிலைச் செய்யுட்குரிய எண்வகை வனப்பினையும் கூறி, அவற்றுள்

"தொன்மை தானே
உரையொடு புணர்ந்த பழமை மேற்றே"[2]

என்னும் நூற்பாவால் பழையகதையைப் பொருளாகக் கொண்டியற்றும் தொடர்நிலைச் செய்யுள் தொன்மை என்னும் வனப்பினையுடையதென்பர். 'இழுமென்மொழியால் விழுமியது நுவலினும் பரந்த மொழியான் அடிநிமிர்ந்து ஒழுகினும் தோல் என மொழிப தொன்

1. தொல். செய். கு. 1.
2. தொல். செய். 237.

மொழிப் புலவர்' என இலக்கணம் வகுப்பார். (தொல் காப்பியர்)

சிலப்பதிகாரமும் மணிமேகலையும் பொருட் ரொடர்ச்சி யாம் கதைத் தொடர்ச்சி மட்டுமே கொண்டன. பெருங் கதையோ இதனேடு அந்தாதி எனப்படும் சொற்ரொடர்ச்சி யுங் கொண்டு இலங்குவது. இந் நூலினைக் கொங்குவேள் மாக்கதை என்றும், உதயணன் கதை யென்றும் வழங் கினமை பழைய உரைகளால் அறிகிறோம். இதற்கு முதல் நூலாக குணாட்டியர் எழுதிய பிருகத்கதையைச் சொல் வார்கள். கி. பி. 5 அல்லது 6 ஆம் நூற்றாண்டில் துர்விநீதன் என்னும் கங்கமன்னன் பிருகத்கதையை வடமொழியில் செய்தானென்றும் அதனுடைய வழி நூலே இது வென்றும் கூறுவர். சிலர், இந்நூலின் காலத்தை அறிந்து கொள் வதற்குப் போதிய சான்றுகளில்லை. எனினும் இது கடைச் சங்க காலத்திற்கும் சற்றுப் பிந்தியது என்பர் ஒருசாரார். மற்றொரு சாரார் கி. பி. ஏழாம் நூற்றாண்டு எனக் குறிப்பர்.

இனி இப் பெருங்கதையை ஐம்பெருங்காவியங்களுள் ஒன்றாக ஏன் வைக்கவில்லையென எண்ணத்தோன்று கிறது. ஐம்பெருங் காவியம் என்னும் வழக்கு பிற்காலத் தார் வழக்கென்றும், அவ் வழக்கு அத்துணைப் பொருத்த முடைத்தென்றுங் கூறலாம். எனவே காப்பியங்களுள் ஒன்றாகக் கருதப்படவில்லையெனினும் இந் நூல் காப்பியத் திற்குரிய பண்பு நலன்களோடு இலங்குகிறது என்பதில் யாதொரு ஐயமுமில்லை.

"சிறந்த இலக்கியம் வெறும் பூம்பொழில் போல்வது மட்டும் அமையாது; அஃது இன்சுவைத் தீங்கனி நல்கும் பழமரத்தோட்டம் போன்றும் அமைதல் வேண்டுமென்பர்" மேனாட்டு அறிஞரொருவர். பாநலத்தில் சிறந்து நிற்பதோடு மக்களுக்கு உறுதி பயக்கும் பொருள்களையும் அது விரி வாகக் கூறவேண்டும். இம்முறையில் காணும்போது கொங்கு வேளிரால் இயற்றப்பட்ட இக்காப்பியம் சிறந்து விளங்குகிறது என்பதில் ஐயமென்னை?

உஞ்சைக்காண்டம், இலாவாண காண்டம், மகத காண்டம், வத்தவகாண்டம், நரவாண காண்டம், துறவுக்

காண்டம், என்னும் ஆறு காண்டங்களையுடையதென்பர். உஞ்சைக் காண்டத்தின் முற்பகுதியும் துறவுக்காண்டமும் கிடைத்தில. இடையிடையே சிலவடிகளும் கிடைக்கப் பெற்றிலம். இது தமிழர் செய்த தவக்குறைவேயாம்.

கோசம்பி நகரத்தை ஆட்சிசெய்த சதானிகன் பயந்த உதயணனுடைய கதையைக் கூறிச்செல்லும் இக்காப்பியம் தமிழர்தம் பண்பாட்டினை - அக்காலப் பழக்க வழக்கங்களை நன்கு உணரவைக்கும் பெற்றியதாம். "அந்நாளைய நாகரிச வாழ்வின் சிறப்பெலாம் வகையெலாம் இந்நூலில் விளங்குவது போல வேறு எந்தத் தமிழ் நூலிலும் விளங் குவதில்லை. பெண்ணின் பெருமை, கல்வியின் மாண்பு, மக்களியல்பு என்பனவெல்லாம் இதில் விளங்குவதோடு அரசியல் சூழ்ச்சியெலாம் கருத்தைக் கவரும் தன்மையில் வேறு நூலில் இல்லாத வகையில் இக்கதையில் சிறந்து நிற்கக் காண்கிறோம்". எனப் பாராட்டுகிறார் தமிழறிஞர் திரு. தெ. பொ. மீனாட்சி சுந்தரம் அவர்கள்.

**வருணனைத்திறன்**

பயில்வோர் வியப்படையும் வண்ணம் வருணனைப் பகுதிகள் பல யாண்டும் பொலிவு பெறுவதைக் காண லாம். வெறும் அழகைப்பற்றி மட்டுமே அவை யமையாது மிக உயரிய கருத்துக்களைக் கொண்டிலங்குவது ஆசிரியர் தம் திறனைக் காட்டும்.

மாலைப்போது வருகின்றது; கணவனைப் பிரிந்த கற் புடைப்பெண்டிர் பிரிவுத்துயரால் வருந்துகின்றனர்; மாலைப்போதும் உடன்சேர்ந்து கொண்டதால் அவர்கள் துன்பம் மேலும் வளர்கிறது; மாலைநேரம் வருகிறது என்று நினையும்போதே நடுங்கும் உள்ளத்தையுடையராய் இருக் கின்றனர் அம்மகளிர். தன்வரவால் மகளிர் படும் பாட் டைக்கண்ட மாலை நேரமோ முல்லைநகை தோன்ற ஆறுதல் கூறி வருகிறதாம்.

"ஆண்கடன் அகறல் அதுநோன் றொழுகுதல்
மாண்பொடு புணர்ந்த மாசறு திருநுதல்
கற்புடை மகளிர் கடன் எனக் காட்டி
வினைக்கும் பொருட்கும் நினைத்துநீத் துறையுநர்"[1]

---

1. 3-7 : 7-11.

"எல்லை கருதிய திதுவென" மெல்லியலார்க்குப் பரிவுடன் கூறுவது எத்துணை அழகுடைத்து ! ஐந்திணைக் காட்சிகளை இவர் காட்டிச் செல்லும் தன்மை தனிச் சிறப்புடையதாம். குறிஞ்சி நிலத்தைக் கூற வந்தார், பிறரால் அளவிடற் கரிய நோன்பினை மேற்கொண்ட துறவோர் போன்று எஞ்ஞான்றும் சிறிதும் நடுங்குதலில்லா அழகுடைய மலையைக் கூறுகிறார். அதில் காணப்படும் நிரம்பாத குறை வழிகளை எளிதில் நிறைவு பெறாத வரைவின் மகளிர் குறை யுள்ளத்திற்கும் அதில் கல்லாத மக்களின் நெஞ்சம் போன்று நொய்யனவான நுரைகளைத் தாங்கி மெய்ம் மையை உணர்ந்த மேன்மக்களது நண்பு போன்றும், ஆழ வீழ்கின்ற அருவியென்றும் கூறும் தன்மை இவர்தம் உள்ளப் பாங்கையும் உவமை நயத்தையும் புலப்படுத்தி நிற்குமன்றோ ?

இலக்கியங்கட்குப் பெரிதும் சிறப்பளிப்பன அவற்றி லமைந்துள்ள சுவைகளேயாம். எண்சுவையும் இந்நூலில் பரவி நின்று இன்பத்தை யளிப்பதில் இணையற்றதாய் விளங்குகிறது எனலாம்.

இவ்வாறு இலக்கிய இன்பந்தரும் இந் நூலில் உயிர் களுக்கு உறுதி தரும் பொருள்கள் பல ஆங்காங்கே விரித் துரைக்கப்படுகின்றன. சான்றாக,

"நன்றாய்வந்த ஒருபொருள் ஒருவற்கு
நன்றே யாகி நந்தினு நந்தும்
நன்றாய் வந்த ஒருபொருள் ஒருவற்கு
அன்றாய் மற்றஃ தழுங்கினும் அழுங்கும்"[1]

என்றும், தீதாய் வந்த ஒரு பொருள் ஒருவற்குத் தீதே யாகித் தீயினும் தியும், தீதாய் வந்த வொரு பொருள் ஒரு வற்கு ஆசில் பெரும்பொருள் ஆகினும் ஆகுமென்பார். இவ் வுண்மையினை வாழ்க்கையில் நாம் பன்முறை கண்டிருக் கிறோமல்லவா ?

காஞ்சித் திணையை இவர்,

"நிலையா
ஆக்கமும் கேடும் யாக்கை சார்வா

1. 2. 1 : 58-61.

ஆழிக் காலிற் கீழ்மேல் வருதல்
வாய்மை யாமென "[1]

உணர்த்துவார்.

நட்பைப்பற்றிக் கூற வந்தார் 'உடையழிகாலை உதவிய கைபோல் நடலை தீர்த்தல் நண்பன தியல்பு' என இலக்கணம் கூறுவார். இவ்வுலக இன்பம் எத்தன்மைத்து என இவர் விளக்கும் திறன் சாலவும் இனிதாம். வரம்பில் காமத்தைப்பற்றி உணர்த்த நினைத்தவர்,

அலையெறியும் கடலினூடே சூறைக்காற்று மோதி அலைத்தலால் பொறிகலங்கிக் கவிழ்ந்தது மரக்கலம். உடைமரம் பற்றி உயிர் உய்ந்தோர் வழிதப்பிச் சென்று உயிரினங்கள் வாழ்தலில்லா ஒரு தீவின்கண் சென்றடைந்தனர். கடுமையான பசிப்பிணி வாட்டியது. தீவினுள்ளே இருந்த மரங்களிற் கிளைகள் தோறும் நெருங்கிக் கனிந்துள்ள கனிகள் பார்ப்போர் கண்கள் துன்புற ஒளிவீசின. அவைகள் நச்சுக்கனிகளென அறியாது உண்டவர் நிலை எத்தகைத்தோ அத்தகைத்தாம் காமத்தில் மூழ்கியவர் நிலையெனக் கூறிச் செல்வார்.

சிறந்த புலவன் இடத்திற்கேற்ற வகையில் சொற்களைப் பெய்து வைப்பான். வாசவதத்தையின் தோழியரும், பதுமாவதியின் தோழியரும் பந்தாடும் தன்மையை விளக்கப் புகுந்த ஆசிரியர் அதற்கேற்பச் சீர்களையமைத்து, ஓசையினிமையை உண்டாக்குகின்றார். மானனீகை என்ற பேரழகி வாசவதத்தையின் தோழி. இருபத்தொரு பந்துகளை வைத்துக்கொண்டு அவள் ஆடும் பாங்கினை,

"சுழன்றன தாமம்; குழன்றது கூந்தல்;
அழன்றது மேனி; அவிழ்ந்தது மேகலை;
எழுந்தது குறுவியர்; இழிந்தது சாந்தம்
ஓடின தடங்கண்; கூடின புருவம்;
அங்கையி னேற்றும் புறங்கையி னோட்டியும்
தங்குற வளைத்துத் தான் புரிந் தடித்தும்" [2]

---

1. 3. 9 : 31-34.
2. 4. 12 : 225-230.

எனக் காட்டும்போது நம்மையும் மானனீகையின் ஆடலைப் பார்க்கும்படித் செய்துவிடுவது அவர்தம் புலமைக்குச் சான்ரும்.

பெண்மைக்கு இவர் கூறும் இலக்கணம்,

"அன்புடைக் கணவர் அழிதகச் செயினும்
பெண்பிறந் தோர்க்குப் பொறையே பெருமை"[1]

என்பதாம். இளமையும் வனப்பும் கொண்டு, இல்லொடு வரவும் வளமையும் தறுகணும் நிறைந்து, வரம்பில் கல்வியில் உயர்ந்து, தேசத் தமைதியும் மாசில் சூழ்ச்சியும் அறிந்து வீணையில் - வில்லாற்றலில் ஈடும் எடுப்புமில்லா தவனுய் இலங்கிய உதயணன், ஒண்மையும் நிறையும் ஓங்கிய ஒளியுடையவளாய், மென்மையும் பெருமையுங் கொண்டு, நிலம்புடை பெயரினும் விசும்புவந் திழியினும் கலங்காத கற்புநிலையுடைய வாசவதத்தை என்னும் மங்கையைக் கோப்பெருந் தேவியாக அடைந்த பெற்றி யன் வாசவதத்தையைப் புணர்ந்ததோடு பதுமாவதி, விரிசிகை, மானனீகை என்னும் மகளிரையும் மணந்த மாண்பினை விரித்துக் கூறு மிக் காப்பியம் இலக்கிய நயமும் பொருட்சுவையும் மிக்கதோர் நூலாம் என்பது வெள் ளிடைமலை.

**சீவகசிந்தாமணி**

"சுவை மலிந்த இலக்கியம்! இன்பச் சுவையின் இருப்பிடம்; வீரச்சுவையின் விளைநிலம் இது! பண்டைக் காலத் தமிழர்களின் பழக்க வழக்கங்கள் பலவற்றை இதன்கண் நன்கு தெளியலாம்" எனக் கவிமணி போற்று கிருர் இக்காப்பியத்தை. ஐம்பெருங் காப்பியங்களிலே தலைசிறந்ததும் முதன்மையாக வைத்து எண்ணப்படுவதும் இக் காப்பியமேயாம். காப்பிய இலக்கணங்கள் யாவும் விரவிவரப்பெற்ற தீந்தமிழ்க் காப்பியமென்பர் அறிஞர்.

பண்டைய தமிழர்தம் நெறியாகிய அகப்புறநெறி யென்னும் தமிழிலக்கிய மரபினின்றும் காவிய நெறியைப் உண்டாக்கிப் புதுமை செய்தவர் கொங்குவேளிர். திருத் தக்கதேவரோ புதுமைக்குப் புதுமை செய்தார். பழைய

1. 4 . 14 : 98-99.

செய்யுட் போக்கையும் மாற்றிப் புதியதொரு நெறியைப் படைத்துக்கொண்டார். விருத்தப்பாவாலேயே பாடப் பட்ட இக் காப்பியமே அதற்குச் சான்றும். சங்க நூல்கள் தரும் அளப்பரிய இன்பக்கடலில் மூழ்கித் திளைத்தவர், அவர்தம் முத்தனைய கருத்துக்களைப் பொன்போற் தம் நூலிற் பதித்து வைத்தனர்.

**பெயர்க்காரணம்**

தன்மையால் பெயர் பெற்றதென்பர் நன்னூல் உரை யாசிரியர். காப்பியத்தலைவனும் சீவகனை 'சீவ' என இடுகாட்டில் தெய்வம் வாழ்த்தியதாலும், அவனைப் பெற்ற தால் பேறடைந்த அன்னை விசயமாதேவி 'சிந்தாமணியே கிடத்தியால்' எனக் கூறியதாலும் இப் பெயர் பெற்ற தென்பர். சீவகன் பிறந்து கலைகளால் நிரம்பப்பெறுதலை நாமகளை மணத்தல் என்றும், போரின் வெற்றியை மண் மகளை மணத்தலென்றும், மன்னனாய் மணிமுடிதரித்துச் செங்கோல் நடாத்தினமையைப் பூமகளை மணத்தலென் றும், வீடுபெறுதலை முக்தி மகளை மணத்தலென்றும் கூறுவ தோடு, மகளிர் எண்மரைத் தன் திறங்காட்டி, விறல்காட்டி, கவின் காட்டி, கலைத்திறங்காட்டி மணத்தலைக் கூறுவதால் இதனை 'மண நூல்' என்றும் வழங்குவர்.

**காலம்**

இதன் காலத்தை இருவேறு வகையாகக் கூறுவர். சமயப்பூசல் எழுந்த தேவார காலத்திலும் முந்தியது என்பர் ஒரு சாரார். மற்றொரு சாரார் ஒன்பதாம் நூற் றாண்டில் தோன்றியதென்பர்.

பழந்தமிழ் இலக்கண இலக்கியவுரைகளில் மேற் கோளாக எடுத்தாளப்பெறும் சிறப்புப் பெற்ற இந்நூல் சுவையனைத்தும் நிரம்பப் பெற்றது. பயிலுந்தொறும் அமிழ்தினும் ஆற்ற இனிமையைப் பயந்து நிற்பது. கதையை நடத்திச் செல்லும்போதே ஆசிரியர் ஆங்காங்கே தம் சமயக் கருத்துக்களைக் கூறிச் செல்லும் பான்மை இவர்தம் நல்லிசைப் புலமைக்கு நற்சான்றும்.

**பாத்திரப்படைப்பு**

எண்மரை மணந்து பகையை வென்று அருளாட்சி நடத்துகிறன் காப்பியத்தலைவனும் சீவகன். இன்பத்தை இனிதாகத் துய்த்த தூய்மையுள்ளம் ஆதலினுலே விரைவிலேயே மெய்யுணர்ந்து விடுகின்றான். இம் மெய்யுணர்வுக்கு இளமைக் காலத்தே தம்மாசிரியராய் விளங்கிய அச்சணந்தி அடிகளின் வாயிலாய்க் காஞ்சிப் பொருளாகிய நிலையாமையை உணர்ந்தது தூண்டுகோலாய் அமைகிறது. ஓராண்டுக் காலம் முடியும்வரை வெகுளல் கூடாது என்ற ஆசிரியரின் ஆணையைக் காப்பாற்றச் சிங்கத்தை குறுநரிக் குழாம் வளைந்தாற்போலத் தன்னைச் சூழ்ந்து கொண்ட கட்டியங்காரன் ஏவலர்க்கடங்கிச் செல்கின்றான். அளவு கடந்து பொங்கும் சினத்தை அணைகட்டித் தடுக்கிறான். இச் செயல் வெகுளியை அறிவின் ஆட்சிக்குள்ளே அடக்கியவன் என்ற பண்பினைப் பரவுகிறது. ஊழ்தரவந்த உழுவலன்போடு வந்த குலமகள் பாலன்றிக் காமத்தாலே நெஞ்சு நெகிழ்ந்திலன் என்பதை இந்நூலில் யாண்டும் காணலாம்.

வேடுவர்களால் கவரப்பட்ட ஆநிரைகளை மீட்க வகையறியாது தோற்றுத் திரும்பியது அரசன் படை. மேம்பட்ட வீரமும் விளங்கும்படி 'மொய்யமர் நாட்செய்து ஐயன் முதல்விளையாடி' ஆநிரைகளை மீட்ட கருணை மறவன் என்ற செய்தியைத் தரும் கோவிந்தையார் இலம்பகம். வேடர் சீவகனுக்கு நிகரன்மையானும் பகையின்மையானும் தன் அருளும் வீரமும் மேம்படுத்தச் சென்றான் ஆதலாலும் அவரை அஞ்சப்பண்ணி நிரை மீட்டான் என்பர் நச்சினார்க்கினியர். கட்டியங்காரனோடு நிகழ்த்தும் போருக்கு இது நாட்கோள் என்பார். நிரை மீட்பார், தன் இனிய மகளை மனைவியாய் அடையலாம் என முரசறைந்த நந்தகோனிடம் இன்மொழி உகந்தன கூறிப் பதுமனுக்கு அளிக்கும்படி கூறியது தலைவனின் ஒழுக்கத்திற்கும் உள்ளப்பெருந்தன்மைக்கும் நல்லதொரு எடுத்துக்காட்டாம். வீணையில் வென்று காந்தருவதத்தையை மணந்தது இவன்தன் கலையிலக்கணத்தைப் புலப்படுத்தி நிற்கும். அந்தணர் சோற்றுத் திரளைக் கௌவிய நாயை நையப் புடைத்த போது, நாயின் வருத்தங்கண்டிரங்கி 'பஞ்சநமஸ்காரத்தை'

ஓதி உய்வடையச் செய்த அருளாளன். காட்டிடையே செல்லும்போது தீயினுல் கலங்கித் தவித்த யானைகளைக் காப்பாற்றினமை இவன் தன் அன்புள்ளம் செய்த அருட் திறத்திற்கு மற்ருெரு சான்ரும். இவ்வாறு எப்பண்பில் நோக்கினும் அப்பண்பில் தனக்கு ஒப்பாருமிக்காருமின்றித் தன்னேரிலாத தலைவனுய்த் திகழச் செய்கிருர் தேவர்.

வளனும் நலனும் வாய்ந்த ஏமாங்கத நாட்டின் மன்னன் சச்சந்தன். அவன் செங்கோல் நடாத்தும் செம்மை யாளன்; குடிகளைக் காத்தோம்பும் கொற்றவன்; ஒளி பொருந்திய வேலினன்; புறங்கெடாத படையினன்; வாடாத வென்றியன். அவன் தன் மனைவியோ, அழிவற்ற கற்பினையும், அமுதம் போன்ற இனிய தோற்றத்தினையும் உடையவள். இத்துணைப் பேறுகளைப் பெற்ற இறைவனே கடமையை மறந்து காமத்தால் கருத்தழிகின்றனன். அளவு கடந்த இன்பத்தைத் துய்த்தல் கேட்டினையே விளைவிக்கும் என்பதற்கு இவனே விளக்கமாகினுன்.

ஏனைவகையால் தேறிய கண்ணும் வினைவகையால் வேருகும் மாந்தர் பலர் என்பதற்கு இலக்கணமாக அமை கிருன் கட்டியங்காரன் என்ற அமைச்சன். இப் பாத்திரங் களை உருவாக்கிச் செல்லும் தன்மை போற்றற்பாலதாம்.

**கற்பனைத்திறன்**

நாட்டு வளமும் நகர் வளமும் இவர் வழிச் சிறந்து நிற்கின்றன. நானிலமும் நன்கு விளக்கப்படுகிறது இவரால். நானிலத்தின் தன்மையைப் பயில்வார் இவர் தம் கற்பனைத் திறனை நன்கு உணர்வர்.

கல்வியிலும் கலைகளிலும் மேம்பட்டு நிற்பதாம் ஏமாங் கதநாடு, அறிவினுல் விளக்கம் பெறுவதோடு பொருளி னுல் நிறைவு பெற வேண்டியதும் நாட்டிற்கு மிகத் தேவை யல்லவா? இவை இரண்டுமிருந்து தன்னுயிர்போல் மக்களைக் காத்திடும் மன்னவன் இல்லையென்ருல் யாது பயன்? எனவே, நாட்டின் வளங்கூறப் புகுந்தார் முதற் பாடலிலேயே இக் கருத்தைப் புலப்படுத்தி நிற்பதைக் காணலாம்.

"நாவீற்றிருந்த புலமாமகளொடு நன்பொற்பூ வீற்றிருந்த திருமாமகள் புல்ல நாளும் கோ வீற்றிருந்த நாடு" என்பது கண்டு இன்புறலாம். இத்தகு பெற்றியமைந்த நாடு, நாட்டு வளங்கூறப் புகுந்த பின்னேயோர்க்கு வழி காட்டாமல் என் செயும்?

இசையால் திசைபோய நாட்டின் இயற்கை வளத்தை,

"காய்மாண்ட தெங்கின் பழம் வீழக் கமுகின் நெற்றிப்
பூமாண்ட தீந்தேன் றொடைகீறி வருக்கை போழ்ந்து
தேமாங் கனிசிதறி வாழைப் பழங்கள் சிந்தும்"[1]

என்கிறார். இதைவிட வளமான நாடு இருக்க முடியுமா? சுருங்கக்கூறின், அந்நாடு "நற்றவம் செய்வார்க்கிடந் தவஞ் செய்வார்க்குமஃதிடம் நற்பொருள் செய்வார்க்குமஃதிடம்" என்கிறார்.

இயற்கையின் வழியிலும் பாத்திரங்கள் ஒருவரோடு ஒருவர் உரையாடும் நிலையிலும் அறக்கருத்துக்களை இவர் பெய்து வைத்துள்ளமை இவரின் புலமையை விளக்கா நிற்கும்.

கள்ளுண்பார் தம்மறிவு மயங்கி செய்யத்தகாததைச் செய்வர் என்று கூறி அதனைக் கடிய விரும்பிய புலவர்,

"..................பருகிய தேறல் தேங்குழிக்
களிப்பவுண் டிளவனங் கன்னி நாரையைத்
திளைத்தலிற் பெடைமயி றெருட்டுஞ் செம்மற்றே"[2].

என்று பாடுகின்றார், உழவர்கட்கு உழத்தியர் மதுவை வார்ப்பர். சிந்திய தேறலை உண்ட இளவன்னம் கன்னித் தன்மையையுடைய நாரையைப் புல்லுமாம். இது அறிவு கலங்கியதால் ஏற்பட்ட விளைவு. அதனைக் கண்ட மயில் தன் பெடைக்குக் காட்டிக் கள்ளுண்பவர் நிலை ஈதாமென்று தெளிவுறுத்தும் என்று மாந்தர்க்கு அந்நிலையை உணர்த்தும் நிலை கவினுடையதாம்.

1. நாமகள் இலம்பகம், 31.
2. நாமகள் இலம்பகம், 50.

களையெடுக்கச் சென்ற உழவர் தம் காதலியரின் கண்ணென எண்ணிக் குவளையைப் பறியாது விடுவராம்; காதலியரின் அழகிய ஒளிபொருந்திய முகமென நினைத்துத் தாமரை மலரிடைச் செல்லாராம். அவர்தம் அன்புள்ளத்தைக் கூறும் பெற்றிதான் என்னே!

முற்ருத நெற்கதிர்கள் சூற்பசும்பாம்பு போல் நிமிர்ந்து நிற்கின்றன. முற்றிய கதிர்களோ வளைந்து கிடக்கின்றன. இதனைக் கண்ட புலவர் நெஞ்சம் உலகியலை நினைக்கிறது; உவமை பிறந்து இன்பமளிக்கிறது. நற்குடி பிறவாதார் செல்வம் பெற்ருல் தலைநிமிர்ந்து செருக்கித் திரிதலும், ஆன்றவிந்தடங்கிய ஆன்ருேரின் பண்பு நிலையும் நினைந்து அவைகளையே உவமையாகப் பெய்துவிட்டார்.

இனி உரையாடல் மூலம் அறக்கருத்தைக் கூறும் திறனை ஆய்வோம். நாட்டை நன்முறையில் காக்க வேண்டிய காவலன் கழிபேர் இன்பத்தில் மூழ்கிக் கடமையைப் புறக்கணிக்கிருன்: நம்பிய அமைச்சனே பெறலரும் சூழ்ச்சியன்; வஞ்சனை யுள்ளத்தான். மன்னனைக் கொன்று மண்ணைக்கொள்ளவிழைந்து வெல்ல வருகிருன். இச்செய்தியைக் கேள்விப்பட்ட மன்னன் மனந்தெளிந்து நிலையுணர்கிருன். ஆலம் வித்தனைய குலக்கொழுந்திற்கு யாதொரு தீங்கும் வராமற் காக்க தன் உயிரனையாளை மயிற்பொறியில் அனுப்ப எண்ணி அவளிடங்கூற, மயிலனையவள் மயங்கி நிற்கிருள். அந்நிலையில் மன்னன் கூறும் அறவுரை அவன்தன் உயிரனையாளுக்கு மட்டுமோ உரித்து? மாநிலத்தோர்க்கும் உரித்தாமன்ருே?

> "சாதலும் பிறத்த ருனுந் தம்வினைப் பயத்தினுகும்
> ஆதலு மழிவு மெல்லாம் அவை பொருட்கு இயல்பு கண்டாய்
> நோதலும் பரிவுமெல்லாம் நுண்ணுணர்வின்மை யன்றே"[1]

இறத்தலும் பிறத்தலும் அவரவர் செய்த வினைப்பயனுல் ஆகும். ஆக்கமும் அழிவும் பொருள்களுக் கியல்பாம்; இயற்கைப் பண்பாம். எனவே துன்பத்திற்கு நடுங்குதல் நுண்ணுணர்வு இல்லாமையன்ருே?

---

1. நாமகள் இலம்பகம், 269.

கானகத்தில் செல்லும்போது வழிப்போக்கன் ஒருவன் சீவக நம்பியை 'எவ்வூரீர்? எப்பதிக்குப் போகின்றீர்? உமக்கு மனைவியர் எத்துணையர்? ஒழுக்கமுடைய மக்கள் எத்துணையர்?' எனக் கேட்கிறான். 'என் ஊர் இவ்வுடம்பே. இவ்வுடம்பெடுத்தற்கே போகின்றேன். எனக்கு மனைவியர் நால்வர்; ஒவ்வாத மக்கள் ஒருவருமிலர்; அந்நால்வர் வயிற்றுள் பிறந்த ஒழுக்கமுள்ள மகன் ஒருவனே' என விடையளிக்க, விளங்காத மறைமொழியை விளக்குமாறு வேண்ட, நம்பியும் நவில்கின்றான்.

> " நற்றானம் சீலம் நடுங்காத்தவம் அறிவர்சிறப்பின் நான்கும்
> மற்றாங்கு சொன்ன மனைவியர் இந்நால்வர் வயிற்றுட் டோன்றி
> உற்றான் ஒருமகனே மேற்கதிக்குக் கொண்டுபோம் உரவோன் தன்னைப்
> பெற்றார் மகப்பெற்றார் அல்லாதார் பிறர் மக்கள் பிறரே கண்டீர்"[1]

என்பது எத்துணை பொருள் பொதிந்த உண்மை!

இவை தவிர நூலினுள் யாண்டும் விழுமிய தம் சமயக் கருத்தை வரையாது வழங்குகிறார். அவையெல்லாம் அனைவர்க்கும் உரிய அறமாதலை அறிஞர் உணர்வர். சமண சமயத்தின் உயிராய் அடிப்படையாய் இலங்கும் கருத்து ஈதோ,

> " மெய்வகை தெரிதல் ஞானம் விளங்கிய பொருள்கள்தம்மைப்
> பொய்வகை யின்றித் தேறல் காட்சி; ஐம்பொறியும் வாட்டி
> உய்வகை உயிரைத் தேயா தொழுகுதல் ஒழுக்கம் மூன்றும்
> இவ்வகை நிறைந்த போழ்தே இருவினை கழியு மென்றான்."[2]

சித்திரகூட மலையில் தாபதருடன் உரையாடிபோது இல்லறத்தினின்று வீடுபேற்றினை யடைதல் இயலாதென விளக்கம் கூறித் தெளிவு படுத்துவான். மனைவியரோடு வாழ்ந்து கொண்டே வீடுபேற்றையடைய விழையும் தன்மையைக் கல்லைக் கட்டிக் கொண்டு கடலை நீந்துகிறவன் கரையேறுவனெனிற் காமத் தொடர்புடன் நோற்கின்றவர் களும் உய்வர் எனக் கூறுவது சிந்தித்தற் பாலதாம்.

---

1. கேமசரியார் இலம்பகம், 1545.
2. கேமசரியார் இலம்பகம், 1436.

அயலார் ஊருக்கோ சுற்றத்தினர் இருக்கும் ஊர்க்கோ செல்லும்போது பொதிசோறு கைக்கொள்ளாமற் போவதில்லை. ஆனால் அறியாத ஊர்க்குக் கூற்றுவன் அழைத்துச் செல்லத்தனியே செல்லும் மனிதர் அறமாகிய பொதிசோற்றைத் தேடிக் கொள்ளாமற் போவதேன்? சிந்திக்க உண்மை புலனாம். அறஞ்செய அவர் அனைவரையும் தூண்டும் திறங்கொண்டு வியப்பெய்துவோ மன்றோ? நுகர்வனவாகிய காமத்தாலும் கள்ளாலும் ஊனாலும் பின்னர் விளைவது தீவினையே எனக்கூறி விலக்குகிறார் தேவர்.

இடத்திற்கேற்ற வகையில் எண்சுவைகளைக் கையாளுவதில் கைதேர்ந்தவர் இவர். உரிய சொற்களை விழுமிய முறையிலே பெய்து ஓசையின்பத்தை யளிப்பதில் வித்தகரவர்.

எல்லாச் சுவையினும், பயில்வோர் உள்ளத்தைச் சிறைப்படுத்திப் பிணிக்கும் தன்மையில் அவலச்சுவையே முன்னிற்பது. அவலச்சுவை மனத்தைத் தொடுவது போல் வேறெந்தச் சுவையும் தொடுவதில்லை. இச்சுவையை இவர் எடுத்தாளும் பாங்கு இவர்தம் பாநலத்திற்கு நல்லதோர் எடுத்துக்காட்டாம்.

சமணர் இன்பத்தைப் பாட வல்லாரல்லர்; துறவறத்தையே பாடவல்லார் என்ற பழிசொல் நீக்கி இழுமென் மொழியால் இன்பச் சுவையை காவியமெங்கும் வாரிவாரி வழங்கப் புகுந்தார். காப்பியத்தின் முதற் பகுதியிலேயே அவலச் சுவையினை அள்ளியள்ளிப் பருகும்படி வைத்திருப்பது அவர்தம் நல்லிசைப் புலமைக்கு நல்லதோர் எடுத்துக்காட்டாம்.

அரண்மனையில் வெற்றி முரசமார்ப்ப, சங்கொலிப்ப, நாட்டாரும் நகரத்தாரும் விழாக்கோலம் பூண்டு தம் எதிர்கால மன்னனும் இளஞ்சிங்கத்தின் பிறப்பை அன்போடும் ஆரவாரத்தோடும் வீதிகள் தோறும் தோரணம் கட்டி விழாக் கொண்டாடப் பிறக்க வேண்டியவன் இடுகாட்டில் யாருமில்லாத் தனியிடத்து நரியின் ஊளையே முழவாக ஒலிக்க, இறந்தாரை எரிக்கும் ஈமத்தீயே விளக்காய் நிற்க, சுடு

காட்டு அரங்கில் பேய்கள் நடனமாட, கூகைகள் யாண்டும் குழறிப் பாராட்டப் பிறக்க நேர்ந்ததே என விளக்குமிடம்:

" வெவ்வாய் ஓரி முழவாக விளிந்தார் ஈமம் விளக்காக
ஒவ்வாச் சுடுகாட்டுயரரங்கின் நிழல்போல் நுடங்கிப் பேயாட
எவ்வாய் மருங்கும் இருந்திரங்கிக் கூகை குழறிப் பாராட்ட
இவ்வாருகிப் பிறப்பதோ இதுவோ மன்னர்க்கியல்
வேந்தே "[1]

பாடலின் இறுதியடியைப் பயிலும்போது இதயம் நெகிழ்ந்து நிற்கும் நிலையைத்தானே அடைகிறோம்?

இத்தகைய நலன்களையுடைய இக்காப்பியத்தை வெளிநாட்டார் பலரும் போற்றிப் புகழ்ந்தனர். திறமான புலமையெனில் பிறநாட்டார் அதை வணக்கம் செய்தல் இயல்பேயன்றோ? தேவர்தம் காப்பியக் கோயிலை எங்ஙனமெல்லாம் வணங்கினர் என்பதைப் பார்ப்போம்.

வீரமாமுனிவர் இவரை 'கவிஞர் வேந்து' எனப் புகழ்வார். "சிந்தாமணிக் காப்பியம் தலைசிறந்த தமிழிலக்கியச் சின்னமாகும்; தமிழ்ப் பெருங்காதற் காவியம்; தமிழின் இலியதும் ஓடிசியுமென இலங்கும் இப்பெருங் காப்பியம் உலகப் பெருங்காப்பியங்களுள் ஒன்று" எனப் போற்றுவார் ஜி. யு. போப்.

"சிந்தாமணி இலக்கியச் சிறப்பு மிக்கது; இச்சிறப்பின்றேல் இதுபண்டே மறைந்து போயிருக்கக் கூடும். அதன் ஆசிரியர் நடை ஒரு தனி நடையாகும்; அஃது ஓர் உயரிய இலக்கிய நூலாய் அமைந்துள்ளது" என்பார் சூலியேன் வேன்சோன்.

சுருங்கக்கூறின் கல்வியிற் பெரியனென்றும், கவிச்சக்கரவர்த்தியென்றும் பாராட்டப்படும் கம்பன் "சிந்தாமணிக்கடலிலிருந்து ஓரகப்பை முகந்து கொண்டேன்" எனக் கூறுவானாயின் இதன் பெற்றியைக் கூறுமாறு எங்ஙனம்?

---

1. நாமகள் இலம்பகம், 309.

**வளையாபதி**

ஐம்பெருங்காப்பியங்களின் இறுதியில் குறிக்கப் பெறுவது இந்நூல். முழுமையாகக் கிடைக்கப்பெருத நூலிது. புறத்திரட்டைத் தொகுத்த சான்ருேர் இதனி னின்றும் 66 செய்யுட்களைத் தொகுத்துள்ளார். உரை யாசிரியர்கள் எடுத்தாண்ட பெருமையினை உடையதாம் இந்நூல்.

எளிமையும் தெளிவும் அறத்தின் விளக்கமும் கொண்ட தொரு நூலென இதனைக் கூறலாமெனப் போற்றியுரைப் பர் அறிஞர்[1]. தக்கயாகப் பரணியின் உரையாசிரியர், அப்பரணியின் ஆசிரியராகிய கவிச்சக்கரவர்த்தி ஒட்டக் கூத்தர் "கவியழகு வேண்டி வளையாபதியை நினைத்தார்" என எழுதுவதினின்றும் இதன் தன்மையை உணரலாம்.

மக்கட்பேற்றின் சிறப்பினை இந்நூல்,

"பொறையிலா வறிவு போகப் புணர்விலா இளமை மேவத்
துறையிலா வனசவாவி துகிலிலாக் கோலத் தூய்மை
நறையிலா மாலை கல்வி நலமிலாப் புலமை நன்னீர்ச்
சிறையிலா நகரம் போலும் சேயிலாச் செல்வ மன்றே"[2]

**சூளாமணி**

ஐஞ்சிறு காப்பியங்கள் என்ற பிரிவிலே முதன்மை யாய் இலங்குவதாம் இம்மணி. சிறு காப்பியப் பிரிவில் இதை வைத்துக் கூறினுலும் தண்டியாசிரியர் கூறும் பெருங்காப்பிய இலக்கணங்கள் யாவும் பொருந்தி யிருக்கும் காப்பியமாம். எக்காரணத்தால் இதனை இப் பிரிவில் வைத்தனர் என்பதை யறிய இயலவில்லை.

தோலாமொழித் தேவரால் இயற்றப்பட்டது இது. இவரது இயற்பெயர் இன்னதென அறியக்கூடவில்லை. 'ஆர்க்குந் தோலாதாய்'[3] என்றும் 'தோலா நாவிற் சச்சுதன்'[4] என்றும் இனிய தொடரை வழங்கியிருப்ப

1. தெ. பொ. மீனுட்சிசுந்தரம்—சமணத் தமிழிலக்கிய வரலாறு, பக். 92.
2. வளையாபதி, 12.
3. சூளாமணி, 1473.
4. சூளாமணி, 308.

தால் அச் சொற்றொடரின் அருமை நோக்கிப் பிற்காலத்துச் சான்றோர் 'தோலாமொழித் தேவர்' என வழங்கியிருக்கலாம்.

இந்நூலின் காலத்தையும் உறுதியாகக் கூறச் சான்றுகள் ஏதுமில்லை. சிந்தாமணியின் காலத்தைக் குறித்தது போல் 'தேவார காலத்துக்கு முந்தையது' என்பார் ஒரு சாரார். மற்றொரு சாரார் ஒன்பதாம் நூற்றாண்டின் பிற்பகுதியிலோ பத்தாம் நூற்றாண்டின் முற்பகுதியிலோ தோன்றியிருக்கக் கூடுமென்பர்.

தன்மையால் சூளாமணி எனப் பெயர் பெற்றதென்பர் மயிலைநாதர். சூளாமணி[1] என்ற சொற்றொடர் இந்நூலின்கண் பல இடங்களில் வருகிறது. எனவே இவ் வழகிய சொற்றொடராலும் இப் பெயர் பெற்றிருக்கலாம் என்பர்.

வடமொழியில் எழுதப்பட்ட மகாபுராணத்தில் இக் கதையின் மூலம் காணப்படுகிறது. ஸ்ரீ புராணத்திலும் இக் கதையைக் காணலாம். பதினோராவது தீர்த்தங்கரராகிய சிரேயாம்சர் காலத்தில் வாழ்ந்த முதலாம் வாசுதேவனாகிய திவிட்டனின் சரித்திரத்தைத் தீஞ்சுவை பயக்கும் செந்தமிழ்ச் செய்யுட்களால் பாடிப்பரவுகிறார் தோலாமொழியார்.

சிந்தாமணியைப் போலவே ஈண்டும் நாட்டு வளமும் நகர வளமும் விரிவாகப் பேசப்படுகின்றன. நாட்டையும் நகரையும் காணச்செய்த கவிஞர் அந் நாட்டின் கொற்றவனைக் காணச் செய்யும் முறை இனியதாம். மன்னன் எவ்வழி அவ்வழி மக்களன்றோ? பயாபதியின் மாட்சியை, 'மாறி நின்றவரையும் வணக்கினல்லது சிறி நின்றவரையும் செருப்பதில்லை' என்பதனோடு அமையாது வெளிப்பகை வென்று உட்பகையையும் வென்ற கொற்றவன் என்று

---

1. ஓங்கிய சூளாமணியின் ஒளிர்வது (மந்திர. 45).
மலைக்கோர் சூளாமணி (மந்திர. 91).
முடிமேல் சூளாமணி, முளைத்த சோதி (அரசியல், 389)
உலகின் முடிக்கோர் சூளாமணியாயினான் (முக்தி, 96).

சுட்டுகிறார். மன்னன்தன் கொற்றம் மக்களின் மாட்சியைக் காட்டும் உரைகல்லல்லவா? மன்னவன் தேவியர் பலரையுடையான்; எனினும் கோப்பெருந்தேவியராய்ப் பொலிவு பெற்றவர் மிகாபதியும் சகியுமாவர். திருமகள் புலமையாக்கும் செல்வி என்றிவர்கள் போல இருவரும் இறைவனுள்ளத் தொருவரா யினியரானார். மன்னவன் ஆவியாவார் மகளிர், அம் மகளிர்தம் இன்னுயிராகி நின்றான் இறைமகன். இதைக்காட்டிலும் ஒத்த அன்பைப் பார்க்க இயலுமா? இவர்கள் தம் இன்பத்தின் பயனே திவிட்டவிசயர். தேவலோகத்தினின்றும் ஈண்டு வந்து தோன்றியவர். இத் தலைவனுக்கேற்ற முறையில் கல்வியிலும் கவினிலும் பொலிவு பெற்ற சுயம்பிரபையை உருவாக்குவது ஆசிரியர்தம் திறனைக் காட்டும்.

சுரமை நாட்டு மன்னனும் பயாபதியை வானவர் நாட்டு மன்னனுக்கிய தோலா மொழியார் வானநாட்டு மன்னன் சுவலசைடியை அதற்கேற்ப விளக்கிச் செல்கிறார். இவன் அருளாட்சி நடக்கும் நாட்டில் நடுங்கினவை, மாளிகையில் பறந்த கொடிகள்தானும். இவனிடம் காணும் குற்றமாவது ‘குணங்களாலற்ற கீழுயிர் மேல் அருளாமையே’ என்பார். இவன் பயந்த மகளே காப்பியத் தலைவியாய் மிளிர்பவள். மங்கையர் பிறப்பே இவளால் தொழப்பட்டது எனக் கூறுவது அவள் தன் பெற்றியைப் பறைசாற்றும்.

கதையை நடாத்திச் செல்லும்போதே அரசன், அமைச்சன், ஒற்றன் ஆகியோரின் இலக்கணங்களைக் கூறிப்போகும் தன்மையர். சான்றாக ஒன்றைக் காண்போம். மரக்கலம் தொல்லையின்றிக் குறிப்பிட்ட கரையிலே சென்று சேர, காற்றின் உதவி வேண்டுமாறு போல நுட்பமான நூலறிவினையுடைய அமைச்சர்கள் ஆட்சி இனிது நடத்தத் தேவை யென்பார்,

“மாலமர் நெடுங்கடல் மதலை மாசிலாக்
காலமைந் தொழுகுமேற் கரையுங் காணுமே
நூலவர் நுழைவொடு நுழைந்து செல்லுமேல்
வேலவ ரொழுக்கமும் வேலை காணுமே”[1]

---

1. சூளாமணி, 235.

அமைச்சர்களே அரசனுக்கு மனமும் கண்ணும் வாழ்க்கையும் வலியும் ஆவதோடு அற்றமில் அரசும் கோலும் ஆவார் என விளக்குகிறார்.

இவர்தம் கற்பனையழகும் இயற்கையை வருணித்துச் செல்லும் திறனும் கற்பார் மனத்தைப் பிணிக்கும் இயல்பினவாம்.

ஞாயிற்றின் மறைவை விண்ணியல் உருவவீதி மேனின்று இறங்கி, கண்ணியல் விலங்கல் நெற்றியில் கதிரென்றும் கையால் ஊன்றி, மண்ணியல் மரத்தின் கிளைகளின் நுனியைப் பிடித்துப் பின் அவையும் விட்டுப் பண்ணியல் பிறிதொன்றாகிப் பையவே மறைந்து போனான் என்று கூறும் தன்மை கவினுடைத்தல்லவா ?

வெறுங்கற்பனையை மட்டும் குழைத்துக் கொடுக்காது உலகியலின் தன்மையைக் கூறும் பாங்கு இவர்தம் புலமைச் சிறப்பைக் காட்டாநிற்கும். ஞாயிறு மறைய அந்தி மாலை தோன்றுகிறது. இதனைக் கூறவந்தவர் மேலவரை நினைக்கின்றார்; கயவரை எண்ணுகின்றார்; கவிதை பிறந்ததாங்கே! தம்மைப்போல் பிறரையும் எண்ணி அன்பு செய்தல் மேலவர் பண்பாம்; தான் இடர்க்கடலில் மூழ்கியபோதும் பிறரின்பங் கண்டு மகிழும் பெற்றியதாம் அவர்தம் உள்ளம். ஆனால், கயவரோ அயலாரின் இன்பங்கண்டு அழுக்காறும் துன்பமுங்கண்டு மகிழ்வும் கொள்ளும் புன்மையர். இதனை, தாமரை குவிந்து அல்லி மலர்வதற்கு ஒப்புமையாக்கிப் பாடுவார். அவ்வினிய பாடல் :

> "காதலா ரகன்ற போழ்திற் கற்புடை மகளிர் போலப்
> போதெல்லாம் குவிந்த பொய்கைத் தாமரை பொலிவு நீங்க
> மீதுலாந் திகிரி வெய்யோன் மறைதலும் சிறுவெள் ளாம்பற்
> றுதெலா மலர நக்குத் தம்மையே மிகுத்த வன்றே"[1]

கணவனைப் பிரிந்த கற்புடை மகளிரின் தன்மையை இதனினும் காட்டலும் இயலுமோ? வெள்ளாம்பல் நகைத்தது; ஏன் தெரியுமா? அது சிறு வெள்ளாம்பலன்றோ? சிறுமை

1. சூளாமணி, 1029.

யுடையார்க்குப் பெரியோரின் துன்பத்தைப்பற்றிக் கவலே யென்? எத்துணைப் பொருள் நிறைந்த கற்பனை!

எத்துணைதான் நல்லவராய் ஒருவர் வாழ்ந்திடினும் யாவர்க்கும் இனியராய் வாழ்தல் என்பது அரிதினும் அரிதாம். இத்தன்மையை நாளும் நாளும் நாம் கண்டு வருகிறோம். ஒரு சாரார்க்கு இனிமையாற்றும்போது அதுவே இன்னொரு சாரார்க்கு இன்னாமையைத் தருகிறது. இதைத் தவிர்ப்பது எங்ஙனம்? அதுவே உலக இயற்கையாய் அமைந்து கிடக்கும்போது மாற்றுமாறு எங்ஙனம்?

தண்மதியின் வரவால் மலர்ந்த ஆம்பலையும் கூம்பிய தாமரையையும் கண்ட புலவர் இங்ஙனம் சித்தித்தார்; சிந்தனை சீரோடும் சொற்களாய் மாறியது; கவிதையின் வடிவிலே வார்த்துவிட்டார் உண்மையினை. பாடலைக் காண்போமா?

“அங்கொளி விசும்பிற் றோன்றி யந்திவா னகட்டுக்கொண்ட
திங்களங் குழவிப் பால்வாய்த் தீங்கதிர் முறுவ னோக்கித்
தங்கொளி விரிந்த வாம்ப ருமரை குவிந்த வாங்கே
யெங்குள ருலகுக் கெல்லா மொருவரா யினிய நீரன்”[3]

எத்துணை அழகிய அரிய உண்மையிது! எத்துணை எளிய தன்மையில் விளக்கிவிட்டார். இதுதான் புலவரின் புலமையெனலாமன்றோ?

செய்யவேண்டியவற்றைச் சிந்தித்துச் செயலாற்றுக; போற்றுவார் போற்றலும் தூற்றுவார் தூற்றலும் உன் முயற்சியைத் தடுத்து நிறுத்த வேண்டாம். பிறர் பழிக்கின்றார்கள் என்றோ புகழ்கின்றார்கள் என்றோ பாராமல் கடமையைச் செய்ய வேண்டுமென்ற பொருளையும் இதனின்றும் பெறலாமல்லவா?

காப்பிய முழுவதும் சமயக் கருத்துக்கள் மணங்கமழ வைக்கிறார் தோலாமொழியார். வினையின் வழியே உயிர்கள் செல்லும்; இதை யாரும் தடுத்த லியலாது. கருத்திலும் கவினிலும் ஒத்து இன்னும் இருக்கிற உயர்வு

3. சூளாமணி, 1031.

களிலெல்லாம் ஒத்திருக்கும் இருவரில் ஒருவர் மற்ரெருவர்க்கு அடிமையாக இருக்கும் நிலையைப் பார்க்கிரேமே, அது ஏன்? ஒத்த இருவரில் ஒருவரை அடிமையாக இருக்கும்படி கடவுள் படைத்திருப்பாரா? பின் ஏன் இந்நிலை? அது அவரவர் ஊழ்வினையே என்பார் அதனை வலியுறுத்திக் கூற 'செய்வினைக் கிழவனென்பான்தான்' இத் தன்மைய நிலையை அளிக்கின்ருன் என வற்புறுத்திச் சொல்வார். அவன் செய்வினைக் கிழவன். நாம் செய்த வினைகளுக்கு உரிமையுடையவன்; உரிமையுடையவன் விருப்பம்போல்தானே நடக்கவேண்டும்? அவனுக்கு உரிமையை அளித்தபோதே நாம் அவன்தன் அடிமையாகி விட்டோமல்லவா? பின்னர் எங்ஙனம் அவன் செயலைத் தடுக்க முடியும்?

இனி இவ்வுலக மக்கள் நுகரும் இன்பத்தினைக் கீழ் வருமாறு புலப்படுத்தி நிற்பார். 'யானையால் துரத்தப் பட்ட ஒருவன் பாழுங் கிணற்றிலே வீழ்ந்து, அதனுள் தூங்கும் கொடிபற்றித் தூங்குங்கால் மேலிருந்து அவன் வாயிற் சொட்டிய ஒரு துளி தேனை நக்கி அவன் இன்புற்றதையொக்கும்' என்பார். இத்தகையதை நம்பியா வாழ்வது? இதனினும் மேலான இன்பத்தைப் பெறுவது தானே இவ் வாழ்க்கையின் குறிக்கோள். பின் ஏன் இம் மயக்கமும் மருட்சியும் என்பார்போல் அவை நீக்கு மாற்றையும் புலப்படுத்துகின்ருர்.

வாழ்க்கையில் நிலைத்து நிற்பன எவை? செல்வமா? இளமையா? யாக்கையா? எதுவுமேயில்லை என்பதுதானே உண்மை? இதை அறியவில்லையா என்று வினவுவர் போல் காட்சியளவில் காட்டுவது அவர்தம் திறனுக்கோர் சான்ரும்.

கவின்மிக்கு விளங்கும் இளந்தளிர் இரண்டே நாளில் முறிந்து மரகதமணியின் நிறத்தையடைகிறது. பின்னரோ அந்நிறமும் மங்கி, நிறங்கறுத்த இலையாய் மாறி, உரிந்து மங்கி மண்ணோடு மண்ணுய் மறைவதை உவமையாய்க் காட்டி நிலையாமையை உணர்த்தும் அவர்தம் புலமையைப் போற்றுமா றெங்ஙனம்? இதோ அவ்வழகிய பாடல்:

"எரிபுரையெழில தாய விளந்தளி ரிரண்டு நாளின்
மரகத வுருவ மெய்தி மற்றது பசலை கொண்டு
கருகிலை யாகி வீழ்ந்து கரிந்து மண்ணுதல் கண்டும்
வெருவிலர் வாழ்து மென்பார் வெளிற்றினை விலக்க
லாமோ!"[1]

எல்லாப் பேற்றையும் பெற்ற பயாபதி மன்னன் இறுதியில் சாரணர்பால் அறங்கேட்கின்றான். பிறந்தனர்: பிறந்து சாலப் பெருகினர்; பெருகிப் பின்னை இறந்தனர் என்பதல்லால் வேறொன்றையும் காண இயலாத இவ்வுலகின் தன்மையை நன்கு ஓர்ந்தான்; உண்மை தெளிந்தான். இப் பிறவியில் தானடைந்த பேற்றிக்கெல்லாம் காரணமாய ஊழ்வினையை நினைத்தான். இத்தகைய பேற்றினை யளித்த நல்வினையை 'முன்னுபகாரி' என அவன் தன் நெஞ்சம் நினைத்தது. அவ்வுபகாரி செய்த உதவியை மறத்தல் கூடாது என்று முடிவு செய்தான். பயன்? தவத்தினை நாடிச் சென்றான். தவமுடையார்க்கே தவமாகும். எனவே, தவத்திற்கு ஆயத்தமானான். எரிகின்ற சுடரி னெய் பெய்திடுதிரி தூண்டி யாங்கு விளக்கம் பெற்றான்.

பின்னர்ப் பொருளிலார்க் கிவ்வழி இன்பயிழப்பைப் போல அருளிலார்க்கு அவ்வழி அறத்தின் பயனின்மையை-மருவிய மனிதரை இகழ்ந்து புதிய காமுறும் திருமகள் நிலையை - குலமிலர் குணமிலர் என்னுங் கோளிலன் வலைமிகு சூழ்ச்சியார் வழியவாகிய நிலமகளின் தன்மையைத் தம் மைந்தர்க்குப் புலப்படுத்தித் துறவை மேற்கொள்கிறான்.

இவனுடைய துறவு நிலையைப் பாடும்போது உயிர்கள் சுழன்று வரும் நான்கு கதிகளையும் அவைகளின் தன்மைகளையும் விரித்துக்கூறி, வினையின் பயனை வலியுறுத்தி, நிலையாமையை விளக்கிச் செல்லும் தன்மை சாரமுடையதாம்.

வீட்டின்பம் அடைய வேண்டுமாயின் நற்காட்சி, நன்ஞானம், நல்லொழுக்கம் ஆகியவைகளைக் கடைப்பிடித்தே

1. சூளாமணி 1846.

யாக வேண்டிய நிலையை உணர்த்தும் திறன் சாலவும் இனியதாம். பயாபதி, மன்னு உலகின் நிலையறிந்து மன்னுதல் குறித்து வாழ்ந்தவன். மன்னனாக விளங்கிய வனின் துறவைக் கூறுவதால், அதற்கேற்ற முறையில் வினைகளை வென்றமை யெல்லாம் உளங்காண் கேவலப் பேரொலியா லிம்பர் உலகெலாம் துளங்கா துயர்ந்துலகின் முடிக்கோர் சூளாமணியாயினான்.

பெருங்காப்பியப் பண்புகளெல்லாம் விரவி வரப் பெற்றது இந்நூல் என ஒரு முறை கற்போரும் உணர்வர். பெருங்காப்பியம் தன்னிகரில்லாத் தலைவனையுடைத் தாய் இலங்க வேண்டுமென்று பேசும் தண்டிலங் காரம். இக் கருத்தை வைத்து நோக்குவோமேயானால் இக்காப்பியத்துள் திவிட்டனும் பயாபதியும் தலைவன் என்று சொல்லும் தன்மையை உடையார் போலத் தோன்றும். இக்காரணத்தால் சிலர் பயாபதியே காப் பியத் தலைவன் என்பர். காப்பிய முழுவதும் நிறைந்து இறுதியில் இம்பருலகத்துச் சூளாமணியானதை எடுத்துக் கூறிப் பேசுவர் இச்சாரார். ஆனால், ஆழ்ந்து படிப் போர்க்குத் திவிட்டனே தலைவனாதற்குரிய பண்புநலன் களைப் பெற்றவன் என்பதை உணர்ந்து கொள்ள முடியும்.

ஆசிரியரின் அடியொற்றிச் சென்று நம் கருத்தைக் கூறுதலே நன்றாம். இக்கண்கொண்டு நோக்கினால் தன்னி கரற்ற தலைவன் யாரென விளங்கும்.

நூல் நுதலிய பொருள் இன்னது என்பதைக் கூறும் போது

"பைங்கண் மதர்வைப் பகுவாயரி யேறு போழ்ந்த
செங்கண் ணெடியான் சரிதம்மிது செப்பலுற்றேன்"[1]

எனக் கூறுகிறார் ஆசிரியர். செங்கண்ணெடியான் என்று ஈண்டுக் குறிக்கப்பெறுபவன் திவிட்டன் என்பதை விரித் துரைக்க வேண்டாம்.

காப்பியத் தலைவன் செயல்படும் தன்மையில் மேலோங்கி யிருத்தல்வேண்டும். சுயம்பிரபையை மணந்து

1. சூளாமணி 2.

கொண்டதால் அழுக்காறு கொண்டு போர்க் கெழுந்த அச்சுவக்கிரீவனைக் கொன்றது; மானமே பெரிதெனப் போற்றித் திறை செலுத்த மறுத்தமை, பைங்கண் மதர்வைப் பகுவாயரியேறு போழ்ந்தது, கோடிக் குன்ற மெடுத்தது யாவுமே திவிட்டன் செயல்களாய் விளங்கக் காண்பதால் இவனே காப்பியத்தலைவன் எனலாம்.

இவ்வாறு முதல் வாசுதேவனும் திவிட்டநம்பியின் சரித்திரத்தைக் கூறுமிக் காப்பியம் எண் சுவையும் கொண்டு இலங்குவதாம். இடத்திற்கேற்பச் சொற்களையும் சீரையும் அமைத்து ஓசையில் மாற்றத்தை யளிப்பதில் தோலாமொழியார் வல்லுநர் எனலாம். குறளடி, அளவடி, நெடிலடி, கழிநெடிலடி என்பனவற்றுக் கெல்லாம் மேற் கோளாகக் காரிகையாசிரியர் காட்டியிருப்பது இக்காப்பி யத்தின் செய்யுட்களேயாம்.

இக்காப்பியத்தின் செய்யுளினிமையைத் திரு. தெ. பொ. மீனாட்சிசுந்தரனார் அவர்கள் கீழ்வருமாறு புகழ்ந் துரைப்பர். "இவ்வளவு இனிமையாகச் செல்லும் செய்யுட்கள் தமிழில் சிலவே எனலாம். சிந்தாமணியிலும் இந்த ஓட்டமும் நடையுமில்லை" என்பது இதன் எளிமை யான இனிமையான பாடல்களை உணர்த்துமன்றோ?

### யசோதர காவியம்

'ஒன்றாக நல்லது கொல்லாமை' — அறங்களில் தலையாயதும் நல்லாறு எனப்படுவதுமான அறத்தைக் கூறவிழைந்தபோது இது எழுந்ததாம். உயிர்க்கொலை கூடாது என்பதையே மையக் கருத்தாகக் கொண்டு தோன்றிய நூலிது. நல்வினை, தீவினை ஆகியவைகளின் பயனை விளக்கமாக எழுதப்பட்டிருப்பது போலவும் தோன்றுகிறது. இது ஐந்து சருக்கங்களைக் கொண்டுள்ளது.

நுண்கலைகள் காமத்தை விளைவிப்பன என்ற கொள்கையின் கூறுபாட்டை இந்நூலில் காணமுடிகிறது. இக்காப்பியத்தில் வரும் யசோதரன் மனைவி அமிர்தமதி, யானைப்பாகனின் இசைபாடிய திறங்கண்டு, அவனை விரும்பித் தன்னிலை தவறுகிறாள் என்பார். நுண்கலைகளில் இசையும் ஒன்றென்பதால் இவ்வாறு கூறினார் போலும்.

காமத்தின் தன்மையை இவர்காட்டும் தன்மை,

" எண்ணம தலாமை பண்ணு மிற்பிறப்பிடிய நூறும்
மண்ணியல் புகழை மாய்த்து வருவழிவளர்க்கு மானத்
திண்மையை யுடைக்கு மாண்மை திருவொடு சிதைக்குஞ் சிந்தை
கண்ணெடு கலக்கு மற்றிக் கடைப்படு காம மென்றான் "[1]

வாழ்கின்ற உயிரையெல்லாம் தன்னுயிர்போல் எண்ணி அன்பு செய்தல் அழியா இன்பத்தைப் பயக்குமென்று நெறிப்படுத்துகிறார். அருள்புரிந்த மனத்தராகி ஆருயிர்க்கு அபயநல்கி, கொலை, களவு, காமம், பொய் ஆகியவைகளைப் புறக்கணித்துவிட்டால் நம்மை வருத்தும்படியான துன்பம் ஏதும் வராது; வானவர் இன்பமே வரும்.

சிறுகாப்பியப் பகுதியுள் ஒன்றாயினும் காப்பியத்திற் குரிய பண்புகள் அமையப் பெறவில்லை. என்றாலும் சமண சமயக் கருத்துக்களைக் கூறுவதில் சிறந்தே விளங்கு கிறது. ஆயினும்,

" ஆக்குவ தேதெனில் அறத்தை யாக்குக
போக்குவ தேதெனில் வெகுளி போக்கவே
நோக்குவ தேதெனில் ஞானம் நோக்குக
காக்குவ தேதெனில் விரதம் காக்கவே"[2]

யாண்டும் பரவி நிற்கும் உயிர்கள் அனைத்திற்கும் பொது வாய அறமன்றோ!

### உதயணகுமார காவியம்

இதனைப் பதிப்பித்த உ. வே. சாமிநாதையர் அந் நூலின் முகவுரையில் 'காப்பிய இலக்கணங்களை உடைய தன்று; இலக்கண வழுக்கள் உள்ளன; சந்த நயமும் பொருட்பொலிவும் இல்லை' என இதன் சிறப்பின்மையைக் குறிக்கிறார்.

அகவற்பாவால் ஆகிய பெருங்கதையின் சுருக்கமே இவ்விருத்த யாப்பில் தோன்றிய உதயணகுமார காவிய மென்பர். பெருங்கதைக்கண் அழிந்துபட்ட முதல், இடை, இறுதிப் பகுதிகளில் போந்த கதைதானும் இத்தகையது

1. யசோதர காவியம், 126.
2. " 330.

என்பதையறிய இந்நூல் பெரிதும் உதவுகிறது. நன்றி மறவாமல் இந்நூலையும் போற்றுதல் நம்மனோர் கடனென்கிறார்.

இதன் ஆசிரியரின் பெயரும் காலமும் அறியச் சான்றுகளேதுமில்லை.

**நீலகேசி**

இதைக் காப்பியம் என்று கூறுவதினும் வாதநூல் என்று கூறல் நன்றாம். ஆசிரியர் பெயரையோ நூலின் காலத்தையோ அறியச் சான்றுகளில்லை. இதன் உரையாசிரியர் சமயதிவாகர வாமன முனிவர் இவர்தம் புலமையைப் போற்றிப் புகழுவார். அக்காலத்து வழங்கிய சமயங்கள் பலவற்றையும் உணர்ந்து தெளிந்து எழுதிய உரையின்றேல் ஆசிரியரின் கருத்தை யறிவதில் இடர்ப்பாடு உண்டாம். இந்நூல் எழுந்த காலம் எதுவென்பதையறியப் போதிய சான்றுகள் இல்லையெனினும் எத்தன்மைத்து என்பதை இந்நூலின் தன்மை கொண்டு அறியலாம்.

சமயப் பொறையுடன் பற்பல சமயங்கள் வாழ்ந்த காலம் மாறி அவரவர் தத்தம் சமயமே உயர்ந்தது எனக் கூற விழைந்த காலத்தில் இந்நூல் தோன்றியதெனலாம். சமணமும் பௌத்தமும் பெரிதும் மாறுபட்டு நிற்கின்ற காலம். அக்காலத்திருந்த சமயங்கள் தமக்கு எதிராகத் தோன்றிய சமண சமயத்தை அழிக்கும் பொருட்டு இழித்தும் பழித்தும் பேசிய காலமாகவும் இருக்கலாம். அதனால் புண்பட்ட நெஞ்சுடன் ஆசிரியர் சமணப் பேருண்மைகளை உள்ளவாறு வெளிப்படுத்த இந்நூலினை யாத்திருக்கலாம்.

நூலாசிரியர் துயிலும்போதுகனவு கண்டாரென்றும், அக்கனவில் ஒரு தெய்வம் தோன்றி, இந்நூலிற் கூறப்படும் நீலகேசியின் வரலாற்றினைக்கூறி, மறைந்ததென்றும் அக்கனவின் நினைவே செயலாய் முதிர்ந்த போது இந்நூலாகியது என்றும் கூறுவர். சமயக் கருத்தைக் கூறும் வாத நூலேயாயினும் இதன்கண் அமைந்துள்ள பாடல்கள் இனிய ஓசையும் விழுமிய பொருட்செறிவும் வாய்ந்தன என்பதைப் பயில்வோர் உணர்வர்.

### சிற்றிலக்கியங்கள்

அறநூல்களும் காப்பியங்களும் தமிழ்மொழியினை அணி செய்து நின்றமையை இதுகாறும் காண்டோம். காலத்திற்கேற்ப இலக்கியம் தன் வடிவம் மாறித் தோன்றுதலும் வளர்தலும் உண்டு. எனவே, சிற்றிலக்கியங்கள் எனப்படும் நூல்கள் பல வெளியாயின. அவை தொண்ணூற்ருறு வகைப் படுமென்பார்; ஆனல் அவை யாவையென அறிந்துகொள்ள யாண்டும் குறிப்புக்கள் கிடைத்தில. அவைகளுள் உலா, கலம்பகம், பிள்ளைத்தமிழ், அந்தாதி, பரணி, பாவை முதலியன சிலவாம்.

சிற்றிலக்கியத் துறையிலும் சமணர் பின்தங்கிவிடவில்லை என்பதை இவர்கள் எழுதிய திருக்கலம்பகம், திருநூற்றந்தாதி, திருவெம்பாவை, ஆதிநாதர் பிள்ளைத்தமிழ், அப்பாண்டைநாதர் உலா ஆகியவை நன்கு விளக்கும் தன்மையன.

### புராணம்

இத்துறையிலும் இவர்கள் வல்லுநர் என்பதை மேருமந்திர புராணம் உணர்த்தும். இது இடைக்காலத்துக்கும் பிற்பட்டது எனலாம். நீலகேசிக்கு உரை எழுதிய வாமன முனிவரே இதனை இயற்றியவர்.

### வசனநடை

மணிப்பிரவாள நடையிலும் இவர்கள் வல்லவர்கள் என்பதற்கு ஸ்ரீ புராணமே சாலும். தமிழில் வசன நூல்கள் இலக்கியமாக அமைந்தவை கிறித்தவர்கள் எழுதுவதற்கு முன் இல்லையெனலாம். எனவே, முன் தோன்றி உரைநடை இலக்கியமாக விளங்குவது ஸ்ரீ புராணமாம். இந்நூல் மணிப்பிரவாள நடையில் அமைந்தது. முத்தும் பவழமும் கலந்த மாலைபோலத் தமிழ்ச் சொல்லும் வடசொல்லும் கலந்த இலக்கிய நடையெனப் பொருள் கூறுவர்.

குணபத்திராச்சாரியார் ஒன்பதாம் நூற்ருண்டில் இயற்றிய 65 பெரியோர்களின் வரலாறு கூறும் உத்தர புராணத்தினைப் பின்பற்றிய நூலென்பர். புராணம்

என்பது பழைமை அல்லது பழைய வரலாறு என்று பொருள்படும். 'நாடும் நகரும் அரசும் கூறித் தொடங்கும் பின்னைய தமிழ்ப் புராண மரபு இதையொட்டி எழுந்ததே என்பர் அறிஞர் தெ. பொ. மீ அவர்கள்.'[1]

### இலக்கண நூல்கள்

வாழ்க்கை வளமாக அமைய அறச்சட்டங்களை வகுத்தவர்கள், இலக்கியங்களைப் படைத்து வளமாக்கியது போலவே மொழிக்கும் இலக்கணங்களைத் தோற்றுவித்து மரபு வழாமல் காத்தனர். காலச் சூழ்நிலையில் வளரும் மொழியானது வரம்புமீறித் தன் போக்கில் மாற்றங் கொள்ளாது வரம்போடும் அமைய இவ்விலக்கணங்களே துணைபுரிந்தன எனலாம்.

இலக்கியங்களைப் படைத்தலினும் இலக்கணங்கள் அமைத்தல் என்பது அருமைப்பாடு உடையதாம். புதிதாக இலக்கணம் எழுத வேண்டுமானால் அதற்கு முன்னர் தோன்றிய இலக்கியங்களை யெல்லாம் நன்கு உணர்ந்து அவைகளுள் வழக்காறு அற்றுப் போனவைகளை நீக்கிப் புதுமையானவற்றிற்கு இலக்கணம் கூறியமைதல் வேண்டும். இது அவ்வளவு எளிய காரியமன்றே.

தமிழுக்கு இவ்விலக்கணப் பெருமையைத் தந்தவர்கள் சமணர்களே எனலாம். தமிழிலக்கணம் முதலில் எழுத்து, சொல், பொருள் என மூன்றாக இருந்தது. இறையனார் அகப்பொருட்காலத்து யாப்பு என்பது தனியாகப் பிரிந்து நான்காவது இலக்கண ஆராய்ச்சியாக விளங்கியது. பின்னர், அணியியல் ஐந்தாம் பகுதியாக வளர்ச்சியுற்றது. புதியதாய் இலக்கண நூல்கள் இயற்றப்பட்டாலும் ஒரு சிலவே காலப் போக்கில் தம் பெருமையை இழக்காது நிலைத்து நிற்கின்றன என்ற உண்மையை நாம் உணரலாம்.

யாப்பு பாவினையும் பாவகையையும் ஆராய, பாட்டியல் பிரபந்த வகைகளை விளக்கியது எனலாம். இறையனார் அகப்பொருள், அகப்பொருளை விளக்கவும் புறப்பொருளை விளக்கப் புறப்பொருள் வெண்பா மாலையும் தோன்றின.

---

1. சமணத் தமிழிலக்கிய வரலாறு, ப. 137.

**அவிநயம்**

அவிநயனூர் இயற்றிய இந்நூல் அகவற் பாவாலும் வெண்பாவாலும் ஆயது. "இலக்கியத்தில் வெண்பாக் காலம் வளர்ந்தது போல இலக்கணத்திலும் வெண்பாக் காலம் வளர்ந்தது"[1] என்பர் அறிஞர் தெ. பொ. மீனுட்சி சுந்தரனுர் அவர்கள்.

**புறப்பொருள் வெண்பாமாலை**

பன்னிரு படலத்தைத் தழுவி எழுதப்பட்ட இந்நூல் ஐயனுரிதனுர் என்னும் சேரமரபினரால் இயற்றப்பட்டது. தொல்காப்பியப் புறத்திணையியலில் கூறப்பட்டிருக்கும் பழந்தமிழ் நாட்டுப்போர், வீரம், கொடை, மக்கள் வாழ்வு முதலிய செய்திகளைக் கூறுகிறது. தொல்காப்பியப் புறத் திணையியலில் கூறப்பட்டிருக்கும் செய்திகளோடு சிற்சில இடங்களில் மாறுபடுகிறது. இது எட்டாம் நூற்றுண்டில் தோன்றியதென்பர்.

**நம்பியகப்பொருள்**

இரண்டாகப் பிரிந்த பொருளாராய்ச்சி புறப் பொருளைப் பொறுத்தமட்டில் புறப்பொருள் வெண்பா மாலையே முடிந்த முடிவாயிற்று, அகப்பொருளை மேலும் விளக்க நம்பியகப்பொருள் தோன்றியது எனலாம். நாற் கவிராஜ நம்பியென்பவரால் இயற்றப்பட்டது. பன்னி ரண்டாம் நூற்றுண்டில் எழுந்த நூல் எனலாம். இறை யனுர் அகப்பொருள், அகப்பொருளை விளக்கியது. ஆனுல் அந்த விளக்கமும் போதாத முறையில் பிற நூல்கள் தோன்ற அவசியம் நேர்ந்திருக்கலாம். அவைகளுள் இன்று வரை நின்று நிலவுவது 'நம்பியகப்பொருளே'.

**யாப்பருங்கலம், யாப்பருங்கலக்காரிகை**

அவிநயத்திற்குப் பின் சிறந்த இலக்கணமாக விளங்கு வது யாப்பருங்கலமேயாம். தீபங்குடியில் வாழ்ந்த அமித சாகரர் இதனை இயற்றியருளினுர். இவரே யாப்பருங்கலக் காரிகை என்னும் நூலையும் எழுதினுர். தொல்காப்பியப்

1. சமணத் தமிழிலக்கிய வரலாறு, ப. 152.

பொருளதிகாரத்தின் செய்யுளியல், பாக்களைப்பற்றியும் பாக்களின் அமைப்புப்பற்றியும் விரிவாகக் கூறினும் பிற்காலத்தில் தோன்றிய சில புதிய பாவினங்களுக்கும், காலத்தால் வழக்கொழிந்து போனவற்றிற்கும் காரண மாகப் புதிய நூல்களின் அவசியம் ஏற்பட, அவை எழுந் தன எனலாம். இன்றுவரை இவை பெரிதும் பயிலப்பட்டு வருவதை யாவரும் நன்குணர்வர். பதினோராம் நூற் றூண்டில் தோன்றின எனலாம்.

**நேமிநாதம்**

குணவீர பண்டிதரால் இயற்றப்பட்டது. எழுத்து, சொல் என்னும் இரண்டு இலக்கணங்களையும் சுருக்க மாகக் கூறுகிறது. எனவே இதற்குச் சின்னூல் என்ற பெயரும் உண்டு. பாட்டியல் மரபைக்கூறும் வச்சணந்தி மாலை என்ற நூலும் இவரால் இயற்றப்பட்டதே. வெண் பாப் பாட்டியல் என்றும் அது வழங்கப்பெறும்.

**நன்னூல்**

பவணந்தி முனிவரால் இயற்றப்பட்டது இந்நூல். எழுத்திலக்கணம், சொல்லிலக்கணம் விளக்கப்படுகிறது இரண்டு அதிகாரங்களில். ஐந்திலக்கணமும் எழுதியிருப் பாரோ என்ற ஐயப்பாடும் சிலர்க்குண்டு.

'பழையன கழிதலும் புதியன புகுதலும் வழுவல கால வகையினானே' என்ற முறையில் இடைக்காலத்தில் எழுந்தது. 'தெளிவும் எளிமையும் வரையறையின் நுட் பமும் பாகுபாட்டின் சிறப்பும் இந்நூலின் அழகுகளாம். தொல்காப்பியக் கடலை எளிதே கடப்பதற்கு மிதவை யாகவும் வழிகாட்டியாகவும் இலங்குவது இந்நூல். தொல்காப்பியனார் காலத்திற்குப் பின்னர் வழக்காறு அற்றுப்போன இலக்கணங்களை விடுத்து இடைக்காலத் தமிழின் இயைந்த பெற்றிக்கு இணைந்த முறையில் இந் நூலை எழுதினார். பின்வந்த பலராலும் புகழப்பெற்ற நூல் இது.

"முன்னூல் ஒழியப் பின்னூல் பலவினுள்
நன்னூ லாருக் கெந்நூ லாரும்
இணையோ வென்னுந் துணிபே மன்னுக"

என்பது இதன் சிறப்பிற்குச் சான்ருய் இலங்கும். பன்னிரண்டாம் நூற்ருண்டில் தோன்றியது.

### நிகண்டுகள்

நிகண்டு என்பது சொல்லின் பொருளேயறிய அகராதி போல் பயன்பட்ட ஒன்ருகும். எனவே சொற்களின் பொருளே விளக்க நிகண்டுகள் முற்காலத்தில் தமிழ் மக்களுக்கு அகராதிகளாகப் பயன்பட்டன என்று கூறலாம். நிகண்டைக் கற்ற பழங்காலப் புலவர்கள் எத்துணே அரிய நடையாயினும் அதனேப் புரிந்துகொள்ளும் ஆற்றல் படைத்தவராய் விளங்கினர். மொழியில் வல்லுநராதற்கு நிகண்டில் பயிற்சியும் அக்காலத்தே தேவைப்பட்டது. தொல்காப்பியச் சொல்லதிகாரத்தின் உரியியல் இத்தகைத்தேயாம். நிகண்டு முதலிய சொற்பொருளுணர்த்தும் நூல்கள் செய்யுள் வடிவிலே நின்று பொருள் உணர்த்துகின்றன. இக்காலத்து அகராதிகள் போன்று அக்காலத்து இவை யாண்டும் பரவிப் பயன்பட்டிருக்கலாம்.

நிகண்டுகள் ஒரு மொழியை அறிவார்க்குப் பெரிதும் துணேபுரிவனவாம். இந்தத் துறையிலும் தமிழை வளர்த்த பெருமை சமண அறிஞர்கட்கே உரித்தாம்.

### திவாகரம்

இப்போது கிடைக்கும் நிகண்டுகளில் பழமையானது திவாகரமாம். ஆதி திவாகரம் என்ற நூல் ஒன்றிருந்தது என்பர் சிலர். 'ஆதி திவாகரம் என்பது இதுவே எனலாம்'[3] என்பர் அறிஞர் ஒருவர். இது திவாகர முனிவரால் இயற்றப்பட்டது. சேந்தன் திவாகரம் என்றும் வழங்கப்பெறும். காலம் எட்டாம் நூற்ருண்டெனலாம்.

### பிங்கலந்தை

திவாகரத்திற்குப் பிந்தியது இது. இதனே யாத்தவர் பிங்களவர் என்பர். திவாகரரின் புதல்வரே இவ

---

3. தெ. பொ. மீனட்சிசுந்தரம், சமணத் தமிழ் இலக்கிய வரலாறு, பக். 146.

ரெனக் கூறுவர். பன்னிரண்டாம் நூற்றூண்டில் தோன்றிய நன்னூல் இந்தப் பிங்களரைச் சுட்டுவதால் அதற்கும் முந்தியதாம் இந்நூல். திவாகரத்தில் பல பொருள் ஒரு சொற்கள் 384ஆம். பிங்கலத்தில் 1091 கூறப்படு கின்றன. இது இடைப்பட்ட காலத்தின் வளர்ச்சியெனக் கொள்ளலாமன்றோ?

தமிழ்நாடெங்கும் பரவி நின்று பயன்பட்ட சூடாமணி நிகண்டு இதற்கும் பிந்தியதாம்.

ஒரு காலத்தே மிகச் சிறப்புப் பெற்றிருந்த இந் நிகண்டுகள் மேலை நாட்டாரின் வருகையால் அகராதிகள் தோன்றியபின் வழக்கொழிந்தன. அகராதியில் சொற்கள் அகரவரிசை முறையாக அமைக்கப்பட்டமையின் சொற் களுக்குப் பொருளை உணர்ந்து கொள்வது எளிதாக இருந்தது. எனவே நிகண்டுகளின் சூத்திங்களாக உள்ள நூற்பாக்களை நெட்டுருச் செய்தல் அருகிப்போயிற்று எனலாம்.

முடிவுரை

இதுகாறும் கண்டவற்றூல் சமணசமயம் தமிழ்மொழி யின் வளர்ச்சிக்கு எத்துணைப் பணிபுரிந்துள்ளது என்பதை உணரலாமன்றோ? காலத்திற்கேற்றதோர் முறையில் இலக்கியங்களைப் புதுப்புது நெறியில் படைத்துத் தன் னேரில்லாதவர்களாக அச்சமயச் சான்றோர் இலங்கினர் என்பது வெள்ளிடைமலை.

இனி இவர்களியற்றிய நூல்களில் புலனுகும் இவர் தம் சமயக் கொள்கைகளைச் சுருக்கமாகப் பார்ப்போம்.

கடவுள்—படைத்துக் காத்து அழிக்கும் கடவுளோ நமது வாழ்வுக்கும் தாழ்வுக்கும் இன்பத்திற்கும் துன்பத் திற்கும் காரணமான கடவுளோ ஈண்டில்லை. நம்மைப் போன்று உலகில் பிறந்து, வளர்ந்து, வாழ்ந்து, அறிவு பெற்று, தவமியற்றி, அறவுரைபகர்ந்து, மக்கள்வாழ்க்கைக் குப் பாதை கோலி, வீடுபேறு பெற்ற ஆற்றல்மிக்க உயரிய ஒரு ஆன்மாவையே கடவுள் என்கிறது இச்சமயம்.

கடையிலா ஞானத்தோடு காட்சி வீரியமே இன்பம்
அடைவிலா ஆயுவின்மை அந்தராயங்க ளின்மை
இடையுறு நாமமின்மை விதித்த கோத்திரங்களின்மை
உடையவன் யாவன்மற் றிவ்வுலகினுக்கு இறைவனுமே"

இவ்வாறு வினையின் நீங்கி விளங்கியோர், அறிவர் என்றும் தீர்த்தங்கரரென்றும் வழங்கப் பட்டனர். அவர்கள் வகுத்த நெறியில் நிற்போர் சமணர் எனலாம். எனவே, கடவுள் தன்மையை—அதாவது குற்றங்குறைகள் ஒரு சிறிதும் இல்லாத ஆற்றல் படைத்த மேலான ஒரு நிலையை மனிதன் அடையலாம் என்பது இவர்தம் கொள்கை.

**ஊழ்வினை**

அப்படியாயின் உயிர்களை நடாத்திச் செல்வது எதுவெனக் கேட்கலாம். ஊழிவினையென்பதே விடையாம். ஊழ்வினையின் வழியே உயிர்கள் செல்லும். நீர்வழிப்படூஉம் புணைபோல் ஆருயிர் வினைவழிச் செல்லும் தன்மைய. எனவே தீவினையகற்றி நல்வினையையும் அறவே அறுத்து, வினையின் நீங்கி விளங்கிய அறிவனாக வேண்டுமென்பதே இவர்தம் கோட்பாடாம்.

எனவே, உயிர்கள் உய்வடையச் சமண சமயம் நற்காட்சி, நன்ஞானம், நல்லொழுக்கம் என்ற மூன்று பண்புகளை வற்புறுத்திக் கூறும். இந்த மூன்றும் சொல்லும் பொருளும்போல, விளக்கும் ஒளியும் போல ஒன்றுடன் ஒன்று நெருங்கிய தொடர்புடையன. இவைகளின் உதவி கொண்டு சமணசமய அறவோர் அறநெறிகளை வகுத்துக் கொடுத்துள்ளனர். அது இல்லறம் துறவறம் என இரு வகைத்தாம். இவ்விரு அறங்களையுமே விரித்துக் கூறியிருப்பதை இவர்தம் நூற்களில் காணலாம்.

**இல்லறம்**

துறவறத்தைப் பெரிதும் போற்றுவதால் இல்லறத்தை அறவே விரும்பாதார் என்ற நிலையே யாண்டும் பரவி நிற்கிறது. ஆனால், உண்மை அதுவன்று; அறத்தைக் கூறும்போதே அதனை இருவகைப்படுத்திக் கூறியிருப்பதே மேற்கண்ட துறவறத்தைப் போற்றிக் கொண்டாடினும் இல்லறத்தைப் போற்றாமலில்லை.

இல்லறமும் துறவறமும் ஒன்றுக்கு ஒன்று மாறுபட்ட வாழ்க்கை நெறியினைக் கொண்டிருப்பதாகத் தோன்றும். ஆயினும், அடிப்படையில் ஒன்றுக்கு ஒன்று நெருங்கிய தொடர்புடையனவாம்.

> "துறந்தார்க்கும் துவ்வாதவர்க்கும் இறந்தார்க்கும்
> இல்வாழ்வான் என்பான் துணை"[1]

என்பது பொய்யாமொழியன்றோ? இல்லறத்தாரின் உதவியும், ஒத்துழைப்பும் இல்லாது போனால் பிறருக்குத் தொண்டு செய்யவோ, அறவுரை நிகழ்த்தவோ வாய்ப்பில்லாமற் போய்விடும். அதைப்போலத் துறவிகளின் வாழ்க்கை முறைகளும் அறிவுரைகளும் வழிகாட்டி அற நெறித் துறைகளில் செலுத்தாவிடின் இல்லறத்தாரின் வாழ்க்கை சீர்கெட்டுச் சிதைந்து போகும். எனவே, இரண்டும் இன்றியமையாதன என்பதை உணரலாம். வினைகளைக் கட்டறுத்து இறையியல்பை அடைய இறுதியில் துறவறமே துணையாய் நிற்றலால் அந்நெறியைப் பெரிதும் போற்றியிருப்பதில் வியப்பில்லை.

பக்தியினால் வீடுபேறடையலாம் என்பார் சிலர்; ஞானம் மட்டுமே போதுமென்பார் சிலர்; மற்றுஞ் சிலரோ கருமம் மட்டுமே போதுமென்பார். ஆனால் சமணரோ அவ்வாறு நினைப்பதில்லை. நற்காட்சி, நன்ஞானம், நல்லொழுக்கம் மூன்றுமே வேண்டுமென்பார். இம்முறையில் எது ஒன்று குறைந்தாலும் எந்த ஆத்மாவும் வீடுபேறடைதல் இயலாதாம். இவை ஏணிபோல் ஒருவனுக்குப் பயன் படுகின்றன. இருபுறங்களில் இருக்கும் சட்டங்கள் நற்காட்சிக்கும் நன்ஞானத்திற்கும் நிகராகும். நடுவே இருக்கும் படிகள் நல்லொழுக்கத்திற்கு இணையாகும். இந்த மூன்றில் எது ஊனப்பட்டாலும் ஏணியின் பயனை யடைதல் இயலாது.

வாழ்க்கையில் அறமும் மறமும் கலந்தே காணப்படுகின்றன. மறத்தினின்றும் அறத்தைப் பிரித்துணர்ந்தறியும் வழியை அறியாவிட்டால் செம்மையான நெறியை

---

1. திருக்குறள், 42.

யறிய இயலாது. எனவே, விரிவாக இவ்விரு அறங்களும் பேசப்படுகின்றன.

கடைப்பிடிக்க வேண்டிய முறைகளை விரிவாகக் கூறக் காலம் இடந்தராது என்பதாலும் விரிவஞ்சியும் சில கூறியமைகிறேன். எல்லா உயிர்களையும் தன்னுயிரே போல் கருதும் தன்மையுடைய கொல்லாமை, உள்ளத்தின் உயர்ந்த அறமாம் பொய்யாமை, பிறர் பொருளையும் தன் பொருட்போல் காக்கவென்ற கள்ளாமை, சமுதாய ஒழுக்கத்தை வரையறை செய்யும் பிறன்மனை நயவாமை, சமுதாயத்தின் செல்வ வளத்தைச் சீர்ப்படுத்தும் மிகு பொருள் விரும்பாமை ஆகியன அணுவிரதம் எனப்படும். இது இல்லறத்தார்க்கு உரியது. துறவறத்தார்க்கு இவை விரிந்த அளவில் உரித்தாம். அவை மகாவிரதம் என அழைக்கப்படும். துறவறநெறியில் கட்டுப்பாடு நிறைந்திருக்கும். எல்லாவற்றிற்கும் கொல்லாமையே அடிப்படையாய் இலங்கும். "எந்தச் சமயமும் அரசினரின் துணையின்றி ஆதரவின்றி வளர்ந்ததுமில்லை; அழிந்ததுமில்லை. இந்த உண்மை உலகிலுள்ள எல்லாச் சமயங்கட்கும் பொருந்தும்"[1]. எனவே தங்கள் ஒழுக்கத்தாலும் தவ நெறியாலும் மக்களை ஈர்த்து, மன்னன் மனத்தையும் ஈர்த்ததால் ஒரு சமயம் மேலோங்கி வளர்ந்தது; வளர்ந்த போது இலக்கியங்களும் வளர்ந்தன; வாழ்ந்தன; வாழ்விற்கு வழிகோலின.

பின்னர், பக்தி இயக்கம் பரவியது; இறைவனை இனிமையான பாடல்களால் பக்தி செய்து அடையலாம் என்ற கொள்கை மேலோங்கியது. மக்களும் மன்னரும் அக் கொள்கையை ஏற்பாராயினர். எனவே, வளம் பெற்றிருந்த சமயம் குறையத் தொடங்கியது. இன்று அருகியே காணப்படுகிறது. எத்தகைய உயர்ந்த கோட்பாடுகளை உடையதாயினும் அரசின் துணையின்றி எந்தச் சமயமும் தழைத்து ஓங்க இயலாது. எனவே, சமண சமய வளர்ச்சியும் தடைப்பட்டது. ஆயினும், அச் சமயச் சான்றோர் அற நூல்களைத் தந்த அறவோர்; காப்பியங்களைக் கண்ட கவிஞர்; சிற்றிலக்கியங்களை இயற்றிய செம்மை

1. பகவான் மகாவீரர் வரலாறு, அ. லெ. நடராசன்.

யாளர்; புராணங்களைப் பாடிய புலவர்; இலக்கணங்களை யளித்த கொடையாளர்; நிகண்டுகளைப் படைத்த ஆன்றோர். மணிப்பிரவாள நடையை உண்டாக்கிய வித்தகர் என்பதை மறத்தற்பாலுமோ? தமிழிலக்கியம் உள்ள வரை அவர்தம் தொண்டும் பாராட்டப்படும்; போற்றப் படும்.

“ திங்கள் மும்மாரி பெய்க திருவறம் வளர்க செங்கோல்
நன்கினி தரசளுள்க நாடெலாம் விளைக மற்று
மெங்குள வளத்தினேரும் இனிதூழி வாழ்க எங்கள்
புங்கவன் பயந்த நன்னூல் புகழொடும் பொலிக மிக்கே.”

துணைபுரிந்த நூல்கள்


1. தொல்காப்பியம்.
2. புறநானூறு
3. மதுரைக்காஞ்சி
3எ. பதினெண்கீழ்க்கணக்கு
4. பெருங்கதை
5. சீவக சிந்தாமணி
6. விளையாபதி
7. சூளாமணி
8. யசோதர காவியம்
9. உதயண குமார காவியம்
10. நீலகேசி
11. அருங்கலச் செப்பு
12. ஜீவசம்போதனை
13. இலக்கியக்கட்டுரைகள்—டாக்டர் மொ. அ. துரையரங்கசாமி.
14. காவிய காலம்—திரு. எஸ். வையாபுரிப்பிள்ளை.
15. சமணத்தமிழ் இலக்கிய வரலாறு--திரு. தெ. பொ மீனுட்சி சுந்தரனர்.
16. சமணமும் தமிழும்—திரு. சீனி. வேங்கடசாமி
17. தமிழ் இலக்கிய வரலாறு—திரு. சதாசிவ பண்டாரத்தார்.
18. பகவான் மகாவீரர் வரலாறு—திரு. அ. லெ. நடராசன்.




# 9

# பௌத்த சமய நூல்கள்

டாக்டர் சோ. ந. கந்தசாமி

முன்னுரை

மக்கள் வாழ்விற்கும் மொழிவளர்ச்சிக்கும் சமயங்கள் ஆற்றியுள்ள அரும்பணிகள் என்றும் பாராட்டத் தக்கவை. நாவல நாட்டில் தோன்றிய சமயங்களில் பௌத்தம் ஒன்று தான் மிகுதியாக அயல்நாடுகளில் பரவும் சிறப்பினைப் பெற்றது. இலக்கியம், கலை, வாழ்வியல் முதலிய பல துறைகளிலும் பௌத்தத்தின் பதிவு காணப்படுகிறது. தமிழகத்தில் கி. மு. 300 - கி. பி. 1200 வரை பௌத்தம் நிலவியது எனலாம். இக்காலப் பகுதியில் பௌத்தப் பேரறிஞர்கள் எழுதிய நூல்கள் எண்ணில. திரிபிடகங் களுக்குத் தமிழிலும் தெலுங்கிலும் உரைகள் எழுந்தன. மணிமேகலை, பிம்பிசாரக் கதை, குண்டலகேசி முதலிய காப்பியங்களும் சித்தாந்தத் தொகை, திருப்பதிகம் முதலிய கொள்கை விளக்கப் பனுவல்களும், வீர சோழியம் என்ற இலக்கண நூலும் பௌத்தச் சான்றோர் களின் படைப்பே. இவற்றுள் மணிமேகலையும், வீர சோழியமுந்தான் முழுமையாகக் கிடைக்கின்றன. இலக் கண உரைகளில் பௌத்தப் பாக்கள் பல மேற்கோளாகக் காணப்படுகின்றன. இவை அக்காலத்து வழங்கிய பௌத்த நூல்களைச் சேர்ந்தனவாதல் வேண்டும். இக் கூறுகளையெல்லாம் ஓரளவு தெளிவுறுத்துவது இக்கட்டுரை யின் நோக்கம்.

இப்பணியினை நல்கிய சென்னைப் பல்கலைக்கழகத் தார்க்கும், தமிழ்த்துறைத் தலைவர் பேராசிரியர் டாக்டர் ந. சஞ்சீவி, எம்.ஏ., எம்.லிட்., பிஎச். டி. அவர்கட்கும் என் நன்றி.

மன்பதை உய்ய மக்களுக்கு அறப்பாதை காட்டிய புத்தர்பிரான் உலகச் சிந்தனையாளர் வரிசையில் சிறப்

பிடம் பெறத்தக்கவர். மக்கள் வரலாற்றில் கி. மு. 6ஆம் நூற்றுண்டு முக்கியத்துவம் வாய்ந்தது. இந் நூற்றுண்டில் தான் யவனத் தீவுகளில் ஹெராக்கிளிட்டஸ் என்ற மேதையும், ஈரானில் சொராஸ்டர் என்ற சிந்தனைச் சிற்பியும், சீனத்தில் கன்பூசியஸ் என்ற புரட்சியாளரும் நம் நாட்டில் புத்தர் என்ற ஞானச் செல்வரும் தோன்றினர். காலத்தின் தேவைகளைக் கருத்தில் இருத்திச் சமுதாயத்தில் புரட்சியும் புத்துணர்ச்சியும் சிந்தனைக் கிளர்ச்சியும் மறுமலர்ச்சியும் பூத்தொளிரப் பணிபுரிந்த புனிதர்களே இவர்கள்.

### ஆசியப் பேரொளி

புத்தர் தோன்றிய காலத்தில் இந்தியாவில் வேள்விகளும் உயிர்க்கொலைகளும் நடந்தன. சாதிக்கொரு நீதியும், சமுதாய ஏற்றத் தாழ்வுகளும் நிலவின. சடங்குகளும் சம்பிரதாயங்களுமே மதம் எனக் கடைப்பிடிக்கப் பட்டன. வேதங்கள் கூறுவன எல்லாம் உண்மைகள் எனக் கண்மூடித்தனமாகக் கருதப்பட்டன. சிந்தனைச் சோகையும் மூடநம்பிக்கையும் மக்கள் மனத்தைக் கவ்வியிருந்தன; மக்கள் படும் துன்பங்களுக்கு முடிவு காண இளமையிலேயே அரசவாழ்வையும் இல்லறத்தையும் துறந்து ஆன்மீகப் பயணத்தைப் புத்தர் மேற்கொண்டார். அவர் துறவு தியாகத்தன்மை வாய்ந்தது. வேத விற்பன்னர்களின் உரையாடல்கள் புத்தரின் ஆன்ம தாகத்தைத் தணிப்பதாயில்லை. ஆதலின் கடும் நோன்புகளைக் கைவிட்டுப் போதி மரத்தின் நிழலில் புலனடங்கித் தியானம் புரிந்து உள்ளொளி பெற்றார். அவர் மெய்யுணர்வில் சுடர் விட்ட அறிவுப்பேரொளி நாற்புறமும் ஊடுருவிப் பாய்ந்தது. அவர் பெற்ற அனுபவங்களை நான்கு வாய்மைகள், பன்னிரு நிதானங்களின் சார்பில் தோற்றம், எண்வகை நெறிகள், பத்துச் சீலங்கள் என்று ஒருவாறு தொகுத்துச் சொல்லலாம்.

யூதராகப் பிறந்த ஏசு, யூத மதத்தை எதிர்த்துப் புது நெறி தோற்றினாற்போல், இந்துவாகப் பிறந்த புத்தர் இந்துமதத்தின் அழுகல் பகுதிகளை அறவே கடிந்து பௌத்தத்தை நிறுவினார். வைதிகம் கற்பித்த சாதிபேதங்களைச் சாடிச் சமத்துவம் பேசிய முதல் இந்தியர் புத்தரே.

வேள்விகளையும் உயிர்க்கொலையினையும் கண்டித்து அருட் கொள்கையை நிலைநாட்டியவரும் அவரே. வேதங்களாயினும் எந்நூலாயினும் நன்ருகச் சிந்தித்து மெய்ப்பொருள் காண வேண்டும் என்று அறிவுறுத்தியவர் அவரே. புத்தரை முதலில் புறக்கணித்த வேத விப்பிரர்கள் பின்னர் அவர்க்குச் சிறந்த சீடர்களாக மாறிப் பௌத்தப் பேரொளியை எங்கும் பரப்பிய தொண்டர்களாகத் திகழ்ந் தனர். மகாகாசிபர், சாரிபுத்தர், மௌத்கல்யாணர் முதலிய வேத விற்பன்னர்கள் குறிப்பிடத்தக்க புத்தரின் சீடர்களாவர். புத்தர் ஒரு நாளும் அப்பாலைத் தத்துவ ஆராய்ச்சியிலும் தருக்கமுடிச்சுகளிலும் தலையிட்டு வீண் பொழுது போக்க விரும்பவில்லை. ஒரு ஞான்று, அவர் சிடருள் ஒருவர். "பெருமானே, கடவுள் இருக்கிருரா?" என வினவினர். புத்தர் மோனம் சாதித்தார். "பெருமானே, கடவுள் இல்லையா" எனத் தொடர்ந்து கேட்டார். புத்தர் வாய் பேசவில்லை. இந் நிகழ்ச்சியால் இறையுண்மை, இன்மை இரண்டையும் பற்றிப் புத்தர் கவலைப் படவில்லை என்பது வெளிப்படை. அன்ருட வாழ்வில் மக்கள் அனுசரிக்க வேண்டிய அறங்களை மாத்திரமே வற்புறுத்தினர். உலகாயதம் தவிர, இந்திய தத்துவங்கள் அனைத்தும் ஒத்துக்கொண்ட வினைக்கொள்கையினைப் புத்தரும் போதித்தார். பொய்யாமை, கள்ளாமை, கள்ளுண்ணமை, கொல்லாமை, நல்வாழ்க்கை, காமமின்மை முதலிய சிலங்களும், நற்காட்சி, நல்லூற்றம், நல்வாய்மை, நற்செய்கை, நல்வாழ்க்கை, நன்முயற்சி, நற்கடைப்பிடி, நல்லொழுக்கம் என்ற நன்னெறிகளும் பௌத்தத்தை ஒரு செயல் முறைச் சமயமாக (Practical religion) விளங்கச் செய்வனவாம். புத்தரின் பொன் மொழிகள் பகைவரையும் திருத்தும் பாங்குடையவை.

### புத்த சங்கமும் புதுப் பிரிவுகளும்

கொள்கை விளக்கத்திற்கும் சமயம் பரப்புதற்கும் பணியாற்றும் அறிஞர் குழுவாகிய சங்கத்தை உலகிலேயே முதன் முதல் நிறுவியவர் புத்தரே. அவர் பரி நிர்வாணம் அடைந்த அண்மைக் காலத்தில் அஜாத சத்துருவின் முயற்சியால் இராசகிருகத்தில் கூடிய தேரர்களின் முதற் சங்கம் புத்தரின் போதனைகளை மூன்று பிடகங்களாகத்

தொகுக்கும் முயற்சியை மேற்கொண்டது. ஆண்டில் முதிர்ந்த உபாலி விநயபிடகத்தையும், புத்தரிடம் அன்பு முதிர்ந்த சீடராகிய ஆனந்தர் சுத்தபிடகத்தையும், அறிவில் முதிர்ந்த மகாகாசிபர் அபிதம்ம பிடகத்தையும் நினைவிலிருந்து ஒப்பித்தனர் என்றும், அவற்றை எஞ்சிய தேரர் ஒப்புக்கொண்டனர் என்றும் அறிகிறோம். இச்சங்கம் நடந்து நூறுண்டுகட்குப் பின் காலாசோகன் ஆதரவில் வைசாலியில் நிகழ்ந்த இரண்டாம் சங்கமும், அசோகர் காலத்தில் பாடலிபுரத்தில் கூடிய மூன்றும் சங்கமும் குறிப்பிடத்தக்கவை. தேரர்களின் கருத்து முரண்பாடுகள் புதுக் கிளைகள் தோன்றக் காரணமாயின. புத்த வசனத்திற்குப் புது விளக்கம் கண்ட மகாசங்கிகர் என்னும் பிரிவினர் பழைமை விரும்பிகளான தேரவாதிகளைப் புறக்கணித்தனர். கி.மு. முதல் நூற்றுண்டில் இலங்கையில் வட்டகாமணியின் ஆட்சிக் காலத்தில் கூடிய நான்காம் சங்கம் திரிபிடகங்களுக்குச் சிங்கள மொழியில் எழுத்துருவம் கொடுத்தது. கனிஷ்கரின் ஆதரவில் காஷ்மீர்ப் பகுதியில் ஜாலந்தர் என்ற இடத்தில் கூடிய ஐந்தாம் சங்கம் பார்சுவர், வசுவமித்திரர் முதலியோர் தலைமையில் பல புதிய கொள்கைகளைப் பௌத்தத்தில் இணைக்க முயன்றது. இதன் விளைவாக மகாயானம், ஹீனயானம் என்ற பெரும் பிரிவுகளும் புதுப்பிடகங்களும் தோன்றின. சுமார் 500 பிட்சுக்கள் பாலி திரிபிடகங்களை ஆராய்ந்து, புது விளக்கம் தரும் வகையில் சூந்திர உபதேசம், விநய விபாஷம், அபிதர்மவிபாஷம் என்னும் புதுப்பிடகங்கள் மூன்றினை உருவாக்கினர். கி.பி நான்காம் நூற்றுண்டில் தோன்றிய யோகாசார பௌத்தம் விநயபிடகத்தை மாத்திரம் ஏற்றுக்கொண்டு, பன்னிரு சாத்திரங்களை அபிதம்ம பிடகமாகவும், ஆறு சூத்திர நூல்களைச் சுத்தபிடகமாகவும் அமைத்துக் கொண்டனர். மகாயானம் ஹீனயானம் என்ற இரு பெரும் பிரிவிற்குள் பதினெட்டின் மிக்க குறும் பிரிவுகளும் காலப் போக்கில் கிளைத்தன. இவற்றுள் சௌத்திராந்திகம், வைபாஷிகம் என்ற ஹீனயானப் பிரிவுகளும் மாத்தியமிகம் யோகாசாரம் என்ற மகாயானப் பிரிவுகளும் குறிப்பிடத்தக்கவை. துறவிகளுக்கே நிருவாணப் பேறு கிட்டும் எனக் கூறிய தேரவாதத்தினைத் தான் மகாயானர்கள் ஹீனயானம் என்று நகையாடினர்.

தேரவாதம் இலங்கை, தமிழகம், கிழக்கிந்தியத் தீவுகளில் பின்பற்றப் பட்டதால் தென் பௌத்தம் என்றும், நூல்கள் பெரும்பாலும் பாலியில் எழுதப் பட்டதால் பாலிபௌத்தம் என்றும் கூறப்பெறும். மகாயானம் வட இந்தியா, நேப்பாளம், திபெத்து, சீனம், ஜப்பான் முதலிய பகுதிகளில் பரவியதால் வட பௌத்தம் என்றும், நூல்கள் வடமொழியில் வரையப் பெற்றதால் வடமொழிப் பௌத்தம் என்றும் இயம்பப்பெறும். இது ஒரு பொது வரையறையே.

**பௌத்தத்தில் இந்து மதக் கொள்கைகள்**

இந்து மதத்தை எதிர்த்துப் புதுநெறி வகுத்த புத்தரின் மதத்தில், பிற்காலப் பிட்சுக்கள் பல இந்துமதக் கொள்கைகளைப் புகுத்திவிட்டனர். மகாயானத்தில் தத்துவம், தருக்கம், அண்ட அமைப்பியல் (Cosmology) தியானம், பக்தி, தந்திரம் முதலிய துறைகள் வளர்ந்தன. பாமர மனிதனுக்குத் தன் குறைகளை முறையிட இறைவன் தேவைப்பட்டான். ஆதலின், இந்து சமயத்தின் உந்துதலால், புத்தரே முதற் கடவுள் என்றும் அவர் ஒரே காலத்தில் தருமகாயம், சம்போக காயம், நிர்மாணகாயம் என்ற மூன்று வடிவுகளுடன் விளங்குகிறார் என்றும், எல்லாத் தெய்வங்களும் புத்தரின் ஆணையின்கீழ் ஏவல் புரிகின்றன என்றும் மகாயானம் முழங்கிற்று. அரிய சீலங் காக்கும் அருகர்கள் சிலர்க்கே நிர்வாணப்பேறு கிடைக்கும் எனக் கூறிய ஹீனயானம் போலாது, புத்தரைப் போற்றும் அனைவர்க்கும் உய்தி உண்டு என்னும் பேரருட் கொள்கையும், மறங்கடிந்து அறம் நிலைநிறுத்த அவ்வப்பொழுது புத்தர் தோன்றுவார் என்னும் அவதார நம்பிக்கையும், மக்கள் தொண்டே உய்யவழி எனக் கொண்ட போதிசத்துவக் கொள்கையும் மகாயானத்தில் சிறப்பிடம்பெற்றன. புதிய இலக்கியங்கள், ஓவியங்கள், சிற்பங்கள் முதலியன தோன்றவும் மகாயானம் காரணமாய் அமைந்தது.

**சங்க காலத்தில் பௌத்தம்**

கி.மு. 3—ஆம் நூற்றாண்டில் அசோகன், தன் மைந்தன் மகேந்திரன், உடன்பிறப்பினள் சங்கமித்திரையின் தலை

மையில் இலங்கைக்கு அனுப்பிய தேரர் குழு தமிழகத்தில் பௌத்தத்தை முதன் முதல் பரப்பியது எனலாம். கி.மு. இரண்டாம் நூற்ருண்டு முதல் கிடைக்கும் தமிழ்ப் பிராமிக் கல்வெட்டுக்களில் பல பௌத்தச் சார்பினவாய் உள்ளன. மாங்குளம் கல்வெட்டுக்கள் நெடுஞ்செழியனும் அவன் உற வினனும் கனிநந்தன் என்ற பிட்சுக்குக் கல்படுக்கை வழங்கிய செய்தியைக் குறிக்கின்றன. இப்பாண்டியனைப் பாட்டுடைத் தலைவனுகக் கொண்ட மதுரைக் காஞ்சியில் பௌத்தப் பள்ளிக்குக் குடும்பத்துடன் சென்று மக்கள் வழிபட்ட செய்தியைக் காண்கிறோம். இளம்போதியார் (நற். 72), சங்கவருணன் (புறம் 360), தேரதரன் (குறுந். 195), சிறுவெண்தேரையார் (புறம். 362) முதலிய சங்கப் புலவர்கள் பெயரினல் பௌத்தச் சார்பினராயினும் காதலையும் பாடியுள்ளனர்; காஞ்சியினையும் பாடினர். சிபியின் மரபில் வந்தவன் செம்பியன் என்ற கருத்து புறநானூற்றில் (37, 39, 43, 46) காணப்படும். சுத்த பிடகத்தின் குட்டகநிகாயத்தின் இறுதியில் உள்ள சரியாக பிடகத்தில் புத்தர் சிபியாகப் பிறப்பெடுத்த செய்தி உண்டு. இளங்கோவடிகள் புகாரில் இருந்ததாகக் குறிக்கும் இந்திர விகாரம் ஏழும் அசோகன் மைந்தன் மகேந்திரனுல் கட்டப்பெற்றவை என்பர். பட்டினப்பாலை சுட்டும் புகார் நகரில் தவப்பள்ளிகள் விளங்கின. நெய் தற்கலியில், இறந்த மீனையே குருகுகள் தின்றன என நல்லந்துவனுர் நவில்வதில் (நெய். 14 : 31 — 34) சௌத் திராந்திக பௌத்தத்தின் சாயலைக் காணலாம். குறுந் தொகை (130) குறிப்பாய் உணர்த்தும் நிலத்தில் குளித்தல், நெடுவிசும்பு ஏறுதல் முதலியன அசுவகோஷரின் புத்த சரிதத்தில் குறிக்கப்படும் புத்தரின் அற்புதங்களுடன் ஒப்பிடத்தக்கவை. இக் குறிப்புக்களைத் தவிர வேறு ஆதாரங்கள் சங்க இலக்கியங்களில் காண்பதற்கில்லை. ஆதலின் சங்ககாலத் தமிழகத்தில் பௌத்தம் வேரூன்ற வில்லை யெனலாம். இதனை,

“பழைய நூலாகிய வேதத்திற்கு மாறுபட்ட நூல் களைக் கண்டோராகிய புத்தர், முதலாயின புறச்சமயத் தோரது மிகுதியைச் சாய்க்க வேண்டி அவரது மெய் போன்ற பொய்யை உளப்பட்டறிந்து அப்பொய்மையை

மெய் என்று கருதாமல் உண்மைப்பொருளை அவர்களுக்கு ஏற்பச் சொல்லி" (புறம். 166: 1 — 7) எனவரும் புறநானூற்றின் பழைய உரை புலப்படுத்தும். ஆதலின் பௌத்தக் காப்பியமாகிய மணிமேகலை சங்க காலத்தில் தோன்றியிருத்தல் இயலாது.

### 1. மணிமேகலை

மணிமேகலையின் கருத்துக்கள் பல சங்க இலக்கியங்களில் தோன்றவில்லை. இக் காப்பியம் காட்டும் புகார், காஞ்சி, வஞ்சி, மதுரை, இலங்கை, முதலிய நகரங்களின் நிலை சங்கநூல்கள் சுட்டுவனற்றினினும் மாற்றமடைந்துள்ளது. இந்நூல் உணர்த்தும் சமுதாயமும் சங்கச் சமுதாயத்துடன் வேறுபடுகிறது. மொழியமைப்பும் சங்கநூல் மொழி நிலையின் மாறுபடுகிறது.

### மணிமேகலை ஆசிரியர் யார்?

பௌத்தம் தழைத்திருந்த பொற்காலத்தில் பூத்த காவியச்சோலைதான் மணிமேகலை. இக்காப்பியத்தின் ஆசிரியரும் சங்க நூல்களில் பத்துப்பாடல்கள் (அகம். 53, 134, 229, 306, 320 ; நற். 36, 127, 336, குறுந் 154, புறம். 59) யாத்த சீத்தலைச் சாத்தனாரும் ஒருவர் எனப் பலரும் கருதுகின்றனர். எனினும் சீத்தலைச்சாத்தனார் முற்காலப் புலவர் என்பதும், மணிமேகலைச் சாத்தனார் புகார் நகரம் கடலில் மூழ்கியபின் பௌத்தம் பரப்பிய பிற்காலப் புலவர் என்பதும் டாக்டர் நாவலர் ச. சோமசுந்தர பாரதியார் அவர்களின் கருத்தாகும் (செந்தமிழ் 1942—43 பக். 301). இருவர் பாடல்களிலும் வரும் இளைஞர் உலகம் வேறுபடுகிறது. இருவர் குரலும் (Tone and Texture of the Poets) மாறுபட்டு ஒலிக்கின்றன. இருவர்தம் நடைகளும் வேறுபட்டு இயங்குகின்றன. காதலின்பத்தின் பெருமையினைப் பாடும் சீத்தலைச் சாத்தனாரும் பெண் இன்பத்தை இகழ்வதுடன் துறவுதான் வீடுபேறு நல்கும் என நவிலும் மணிமேகலைச் சாத்தனாரும் ஒருவராதல் இயலாது.

### சாத்தனார்-சொல்லின் பொருள்

சாத்தனார் என்ற சொல்லினை மூன்று வகைகளில் ஆராய்கிறார்கள். சாஸ்தா என்ற சொல் புத்தரைக் குறிக்

கும் என்று அமரகோசமும் நாமலிங்கானுசாசனமும் கூறுகின்றன. எனவே, பௌத்த காப்பியத்தின் ஆசிரியர் சாத்தனுர் என்றபெயர் 'சாஸ்தா' விலிருந்து தோன்றியது என்பர். சங்க நூல்களில் சுமார் 30 புலவர்கள் சாத்தனுர் என்ற பெயர் உடையவர். அழிசி நச்சாத்தனுர், அந்துவன் சாத்தனுர், உறையூர் முதுகண்ணன் சாத்தனுர் என வரும் பெயர்கள் காண்க. இவர்களில் ஒருவர் கூட புத்தனைக் குறிக்கவில்லை. எனவே, இவர்கள் பெயர் சாஸ்தாவிலிருந்து தோன்றியிருத்தல் இயலாது. ஒரு சாரார் பாசண்டச் சாத்தன் சமயத்தைத் தழுவியதால் சாத்தனுர் எனப்பட்டார் என்பர். முதன் முதல் பாசண்டச் சாத்தன் சிலப்பதிகாரத்தில்தான் வருகிறுன். சங்க நூல்களில் அவனைப் பற்றி ஒரு செய்தியும் இல்லை. எனவே, இவர்கள் கருத்து ஏற்புடையதாய் இல்லை. சாஸ்திரி என்ற சொல் தான் சாத்தன் என்ருயிற்று என்பார் கருத்தும் நகைப்பிற்குரியது.

இச்சொல் சாத்து+அன் என்ருகும்; வேந்து+அன்; கூத்து+அன் என அமைதல் போல. சாத்து — வாணிபத்தினை உணர்த்தும் (பெரும்பாண். 79—81, அகம். 39, 245, 291; சிலம்பு. 11 : 190; திரு. கீர்த்தி 27—8). வாணிக மரபில் தோன்றிய மேற்கூறிய புலவர்கள் சாத்தனுர் எனப் பெயர் பெற்றனர். காப்பியர், வள்ளுவர் என்பது போல சாத்தனுர் என்பது குடிப்பெயராகும் வாணிக மரபில் பிற்காலத்தில் வந்த மணிமேகலை ஆசிரியர் மதுரைக் கூலவாணிசன் சாத்தனுர் எனக் குறிக்கப் பெற்ருர். பாலி நூல்களில் செல்வர்கள், வாணிகர்கள் தம் பொருளைத் தானம் செய்துவிட்டுத் துறவியான கதைகள் பல உள்ளன. அங்ஙனமே செல்வ வாணிகராகிய மணிமேகலைச் சாத்தனுரும் பௌத்தராக வாழ்ந்தவராதல் வேண்டும். அவர் காப்பியத்தில் நிலவணிகம், கடல் வணிகம் பற்றிய குறிப்புக்கள் மிகுதியாய் உள்ளன. பௌத்தத்தைச் சார்ந்த கோவலன், அவன் முன்னேர்கள், சாதுவன், கம்பளச்செட்டி, ஒன்பது செட்டிகள் முதலியோர் பற்றிய குறிப்புக்களை மணிமேகலையில் காணலாம்.

## மணிமேகலை கி.பி. 200க்குப் பின் எழுந்தது

### 1. மகாயானம்

கி.பி. 200க்குப் பின் எழுந்த காரண்டவியூகம், இலங்கா வதாரம், லலில விஸ்தாரம், சத்தருமபுண்டரிகம், அவதான சதகம் முதலிய மகாயான நூல்களில் கூறப்படும் புத்தரின் அவதாரக் கொள்கை, அவர் தோன்றுங்கால் நிகழும் நன்னிமித்தங்கள், புத்தஞாயிறு, பிறவிப்பிணி மருத்துவன், ஆதிமுதல்வன் முதலிய குறியீடுகள், திரிகாயக் கொள்கை முதலிய கருத்துக்கள் மணிமேகலையில் வந்துள்ளன. புத்த பக்தியின் விளைவாகத் தோத்திரப் பகுதிகளும் மணி மேகலையில் காணப்படுகின்றன (*11 : 61—72, 10 : 11—15*). புகார், மணிபல்லவம், காஞ்சி முதலிய இடங்களில் புத்தரின் பாதபீடிகை வழிபாடு நிகழ்ந்ததைக் காண் கிறோம். முதன் முதல் கி.பி. இரண்டாம் நூற்றுண்டினைச் சேர்ந்த அமராவதி சிற்பத்தில் தான் இத்தகைய வழிபாடு காணப்படுகிறது. புகாரில் திகழ்ந்த புத்தரின் கோட்டத் தைப் ‘புலவோன் கோயில்’ (*20 : 5*) எனக் குறித்துள்ளார். சரணுகதிக் கொள்கையும் மணிமேகலை சுட்டுகிறது. (*30 : 3—4*). போதி சத்துவக் கொள்கையும் மணிமேகலையில் நிலை நாட்டப்பட்டுள்ளது. அறவண அடிகள் சிறந்த போதி சத்துவராகக் காட்சி தருகிருர். பௌத்தக் கடவுளர்க்கெல் லாம் இந்திரனே தலைவன் என்றும், யாவர்க்கும் புத்தரே பெருந்தலைவர் என்றும், வேதக் கடவுளர் அனைவரும் புத்த ருக்குக் கீழ்ப்பட்டவர்கள் என்றும் மகாயானம் கூறுகிறது. கி.பி. *100—400*இல் ஆண் தெய்வங்களே பௌத்தத்தில் முக்கியம் பெற்றன. ஆனல் கி.பி. முதல் தோன்றிய யோகாசார பௌத்தம் பெண் தெய்வங்களையும் இணைத் துக் கொண்டது. மணிமேகலா தெய்வம், சம்பாபதி, தீவ திலகை, சிந்தாதேவி முதலிய பௌத்தப் பெண் தெய்வங் களைச் சாத்தனுர் படைத்துள்ளார். தமிழ்ப் பௌத்தர்கள் உருவாக்கிய கற்புத் தெய்வம் கண்ணகி சாத்தனுரால் போற்றப்படுதல் காணலாம். ஹீனயான பௌத்தம் பெண் தெய்வங்களை உடன்படவில்லை.

### 2. புத்தரின் ஜாதகக் கதைகள்

விலங்குகள், மக்கள், நரகர் முதலியோர் படும் துன்பத் தைப் போக்கப் புத்தர் பல பிறப்புக்கள் எடுத்தார். இப்

பிறப்புக்கள் புத்தரின் கருணைப்பெருக்கைக் காட்டுகிறது. புத்தரின் பல்வேறு பிறப்புக்களை விளக்கும் சாதகக் கதைகள் கி. பி. இரண்டாம் நூற்றாண்டில் இறுதி வடிவம் எய்தின. மணமேகலையில் சாத்தனார் பல சாதகக் கதைகளைக் குறித்துள்ளார். இந்திரனுக்குப் புத்தர் விழிகளை அளித்தது, நரக உலகம் சென்று துன்புறுவோரை ஆற்றியது, கருடனால் வருந்திய நாகங்களுக்குப் பாதுகாப்பு அளிக்கும் பொருட்டுத் தயாதருமத்தினைக் கருடனுக்கு உபதேசம் செய்து கருடனால் நாகங்களும் அமிழ்தம் பெற்று உய்யச் செய்தது, மணிமேகலா தெய்வம், இந்திரனின் பாண்டு கம்பளம் துளங்குதல், அட்சயபாத்திரம் முதலியன புத்தர் சாதகக் கதைகளில் காணப்படுபவை.

### 3. புத்தரின் எண்ணிக்கை

பாலி நூல்களில் கௌதம புத்தருக்கு முன் ஆறு புத்தர்கள் தோன்றினர் என்ற செய்தி உண்டு. புத்த வமிசம் என்ற நூல் 24 புத்தர்களைக் குறிக்கிறது. இந்நூல் புத்த சுத்தபிடகத்தில் மிகவும் பிற்காலத்தில் இணைக்கப் பட்ட பகுதி என்பர் விண்டர் நீட்ஸ். மஹாயான நூல்களில்தான் புத்தர் கோடிக்கணக்கானவர், எண்ண முடியாதவர், என்றும் கூறப்பட்டுள்ளன. துன்பத்தினின்றும் மக்களை விடுவிக்க அவ்வப்பொழுது இவர்கள் அவதாரம் செய்தவர்கள். சாத்தனார் "இறந்த காலத்து எண்ணில் புத்தர்களும்" (30 : 14) எனக் குறித்துள்ளார். புத்தரின் எண்ணிக்கை பற்றிப் பல்வேறு மஹாயான நூல்களில் காணப்படும் கருத்துக்கள் கீழே தரப்பட்டுள்ளன.

| மஹாயான நூல்கள் | காலம் | புத்தரின் தொகை |
|---|---|---|
| 1. மஹாவஸ்து | கி. பி. 100-200 | முந்நூறு மில்லியன் |
| 2. புத்த சரிதம் | கி. பி. 200 | கங்கைக் கரையின் மணலை ஒத்தவர் |
| 3. இலங்காவதார சூத்திரம் | கி. பி. 300 | ஷை |
| 4. லலித விஸ்தாரம் | கி. பி. 300 | பத்து மில்லியன் |
| 5. சத் தரும புண்டரிகம் | கி. பி. 300-400 | ஷை |
| 6. சுகாவதி வியூகம் | கி. பி. 300- | எண்ணிறந்தவர் |
| 7. கருணா புண்டரிகம் | கி. பி. 300 | எண்பத்தொன்று மில்லியன் நியூதங்கள் |
| 8. பிரஞ்ஞாபாரமித சதகம் | கி. பி. 300 | எண்ணிறந்தவர் |

எனவே சாத்தனார் இந்நூல்களின் காலத்திற்கு முந்தியவ ராகக் கருதுதல் இயலாது.

## 4. புத்த சரிதம்

கி. பி. இரண்டாம் நூற்றாண்டினராகிய அசுவகோஷர் எழுதிய புத்த சரிதத்தின் பயிற்சி மணிமேகலை ஆசிரி யர்க்கு உண்டு. இந் நூலினைப் பின்பற்றியே சாத்தனார் புத்தரின் பிறப்புக் கதையினைப் பாடுகிறார் (12 : 85 - 99, 30 : 3 - 16). தருமமே சகடமாகவும் தருமத்தின் அங்கங் களே சக்கரத்தின் உறுப்புக்களாகவும் உருவகம் செய்து புத்த சரிதம் புகலும். உலகில் அறம் தழைக்கும் பொருட்டுப் புத்தரும் போதிசத்துவரும் அறவாழி உருட்டிய செய்தியைப் புத்த சரிதத்தில் காண்கிறோம். மணிமேகலை யிலும் இக்குறிப்பு காணப்படும். தன் தந்தை சுத்தோ தனனுக்குத் தவத்தின் ஆற்றலைக் காட்டப் புத்தர் நிலத்தில் குளித்தலும், வானத்தில் ஏறுதலும், அந்தரத்தில் திரிதலும் ஆகிய அற்புதங்களைச் செய்து காட்டினார் என்பது புத்த சரிதம் 19-ஆம் வருக்கத்தில் காணப்படும். புத்தரின் அருள்பெற்ற சாரணர்களும் இவ்வற்புதங்களை நிகழ்த்தி யதை மணிமேகலை கூறுகிறது (24 : 46-7). புத்தன் பாதத் தில் ஆயிரம் ஆரங்கள் பொருந்திய சக்கர ரேகை இருந்த செய்தி புத்த சரிதத்தில் மணிமேகலையில் (5 : 104) காண்கிறோம்.

## 5. அக்கபாதர்

நியாய சூத்திரத்தின் ஆசிரியர் அக்கபாதர். இவர் காலம் கி.பி. இரண்டாம் நூற்றாண்டு என்பர் பேராசிரியர் வித்யாபூஷணர். இந்நூலில் நாகார்ச்சுனரின் சூனிய வாதம் மறுக்கப்படுவதாலும் கி. பி. நான்காம் நூற்றாண் டில் தோன்றிய விஞ்ஞான வாதம் காணப்படாமையாலும் அக்கபாதரின் காலம் கி.பி. 200—400 என்பர் பேராசிரியர் ஜேகோபி. அக்கபாதர் காட்சி, கருதல்,உபமானம், ஆகமம் என்ற நான்கு அளவைகளையும் கொண்டவர் எனச் சாத் தனார் தெளிவாகக் குறித்துள்ளார். (27: 77—85). இவ் வலிய அகச்சான்று சாத்தனாரின் காலம் அக்கபாதருக்குப் பிற்பட்டது என்பதற்கு ஆதாரமாய் அமைகிறது.

6. கிருதகோடி

மீமாம்ச சாத்திரத்திற்குப் போதாயனர் எழுதிய உரை நூல் கிருதகோடி எனப்படும். இவர் கி.பி. 100—200 இல் வாழ்ந்தவர். சாத்தனர் கிருதகோடியைக் குறித்துள்ளார் (27 : 6).

மனுஸ்மிருதி

இந்நூல் கி.பி. இரண்டாம் நூற்ருண்டில் இறுதி வடிவம் எய்தியது எனப் பேரறிஞர் பி. வி. கானே கருதுகின்ருர். வருண வேறுபாடுகளை மணிமேகலை குறிக்கிறது. (5: 87, 6 : 56). விசுவாமித்திரன் பசியால் நாயூன் தின்ற செய்தி மனுஸ்மிருதியிலும் (10, 108), மணிமேகலையிலும் (11 : 84—87) கூறப்பட்டன. உலகம் பிரமதேவன் இட்ட முட்டை என்பது மனுஸ்மிருதியின் முதல் அத்தியாயத்தில் மொழியப்பட்டுள்ளது. சாத்தனரும் இக் கருத்தினைச் சமயக் கணக்கர் தம் திறம் கேட்ட காதையில உரைத்துள்ளார் (27 : 96—7). பிழைப்பின் பொருட்டு வேதத்தினையோ வேதாங்கங்களையோ ஓதுவிப்பவன் ஆரணஉவாத்தி என மனுஸ்மிருதி (2, 141) கூறும். ஆரணஉவாத்தியைச் சாத்தனரும் குறிப்பிடுகிருர் (13 : 3—4).

இதுகாறும் இயம்பிய ஏதுக்களால் மணிமேகலை கி.பி. இரண்டாம் நூற்ருண்டிற்குப் பிற்பட்ட நூல் என்பது தெளிவாகிறது. எனினும் பல்லவர்களைப் பற்றி மணிமேகலை கூருததால் அவர்கள் காலத்திற்கு (கி.பி. 250) முற்பட்டது என்பர் சிலர். மணிமேகலை வரலாற்று நூலாக இருந்து பல்லவர்களைக் கூருமல் விட்டிருந்தால் இவர்கள் கூறும் கொள்கையை நாம் ஏற்றுக் கொள்ளலாம். மணிமேகலை ஒரு காப்பியம், எனவே, பல்லவர்களைப் பற்றிச் சொல்ல வேண்டிய கட்டாயம் இல்லை. வள்ளுவர் மூவேந்தரைப் பற்றிக் கூருமையால் அவர் காலத்தில் மூவேந்தரும் இல்லை என்பது பொருந்துமா? மூவேந்தரையும் குறிக்கும் மாணிக்கவாசகர் பல்லவரைப் பற்றிக் கூருததால், அவர் பல்லவர்க்கு முற்பட்டவரா? மணிமேகலையில் வரும் மணி பல்லவன் பல்லவர்களின் தாயகம் என்ற கொள்கையும் இவண் எண்ணத்தக்கது. (Vide, The origion of the Palla-

vas, pp. 75-80). எனவே, பல்லவர்களைப் பற்றிய குறிப்பு மணிமேகலையில் அறவே இல்லையென்றும் அதனால் அந் நூல் கி.பி. 200—ஐச் சார்ந்தது என்றும் எண்ணுதல் ஆராய்ச்சிக்குப் பொருந்தாது.

### திருக்குறளுக்குப் பிற்பட்டது

சாத்தனார் திருக்குறளை ஆழமாகப் படித்தவர். வள்ளுவரைப் பௌத்தராகப் பாவிக்கிறார். கி.பி. 14-ஆம் நூற்றாண்டினராகிய சமயதிவாகரர் நீலகேசி உரையில் திருக்குறளை "எம்ஓத்து" எனக் குறிப்பதால் அதனைச் சமண நூல் என உரிமை கொண்டாடும் அறிஞர்கள் இவ்வுரையாசிரியர்க்கு மிகவும் முற்பட்ட சாத்தனார் கூறும் கருத்துக்களையும் சிந்தித்துப் பார்த்தல் வேண்டும். புறச் சமயங்களைப் 'பல்வேறு சமயப் படிற்றுரை' எனப் பழித்துரைக்கும் சாத்தனார் வள்ளுவரைப் 'பொய்யில் புலவன்' எனவும் அவர் குறளைப் 'பொருளுரை' எனவும் போற்றுகிறார் (22 : 59—61). வள்ளுவர் பௌத்த சமயத்தினை நன்குணர்ந்து நற்கருத்துக்களை எடுத்து இயம்பியுள்ளார் என்பதில் ஐயமில்லை.

### அ. திருவடி வணக்கம்

மகாயான பௌத்தம் புத்தரைக் கடவுளாக ஏற்றுக்கொண்டு அவன் பாதபீடிகையினை வணங்க வழி காட்டியது. திருக்குறள் கடவுள் வாழ்த்தில் கடவுளின் வடிவமாகத் திருவடி மட்டுமே கூறப்படுகிறது. இதனால் வள்ளுவர் புத்தரின் பாத வழிபாட்டினைக் குறிக்கிறார் எனலாம். கடவுளைக் குறிக்கும் தொடர்கள் பொதுப்பட இருப்பினும், சில புத்தரையும் குறிப்பதாய் உள்ளன. பகவன், வாலறிவன், இருள்சேர் இருவினையும் சேரா இறைவன், வேண்டுதல் வேண்டாமை இலான் முதலியன மணிமேகலைக் கருத்துடன் ஒத்துள்ளன. புத்தர் பிறந்ததும் நடந்தபொழுது அவர் பாதம் நிலத்தில் படவில்லை என்றும் ஆங்காங்கே தாமரை மலர்கள் தோன்றித் தாங்கின என்றும் பௌத்த நூல்கள் கூறும்.

வள்ளுவரும் 'மலர்மிசை ஏகினான்' எனக் குறித்தல் காண்க. புத்தர் அறவாழி உருட்டிய செய்தியை மணி

மேகலை மொழியும். அறவாழி அந்தணன் எனத் திருக் குறள் இயம்பும். எல்லா வுயிர்க்கும் கருணை காட்டிய காரணத்தால் தம்மபதம் புத்தரை அந்தணன் எனப் போற்றும். பிறவிப் பெருங்கடல் என்ற குறளுக்குச் சாத்தனார் விளக்கம் தருகிறார் (11 : 23-25). இந்தக் குறளில் சுட்டப்படும் இறைவன் புத்தனே என்பது சாத்தனார் கருத்து. மணிமேகலையில் ஆதிசினேந்திரன் (29 : 47), ஆதிமுதல்வன் (29 : 23), பகவன் (3 : 61, 26 : 54, 28 : 174 என்ற புத்தரின் பெயர்களும் வள்ளுவர் வழங்கும் 'ஆதி பகவன்' என்ற பெயரும் ஒப்பிடத் தக்கவை.

### ஆ. துறவு

ஐம்புலனையும் கட்டுப்படுத்திப் பொருள்களின் தொடர்பிலிருந்து விடுபட்டு, பற்றும் அவாவும் அறுத்து, உலகின் நிலையாமையினை உணர்ந்து மெய்ப்பொருள் கண்டவர் நீத்தார் எனப்படுவார். நீத்தார் பெருமை என்ற அதிகாரத்தில் பௌத்தத் துறவியரின் பெருமை கூறப் பட்டதாகக் கருதலாம். நிலையாமை, துறவு, அவா வறுத்தல் முதலிய அதிகாரங்கள் பௌத்தத்துடன் நெருங் கிய தொடர்பு உடையவை. நிலையாமை என்ற அதிகாரத் தில் வரும் 'உறங்குவது போலும்' என்ற குறளைச் சாத்த னார் ஆண்டுள்ளார் (16 : 86-87).

### இ. மெய்யுணர்வு

பொருளின் உண்மைத் தன்மையினை ஐயம் திரிபற ஆராய்ந்து உணர்தலே மெய்யுணர்வு எனப்படும். மெய் யுணர்வுதான் விடுதலைக்கு வழி என்றார் புத்தர். துன்பத் திற்குக் காரணம் பிறப்பு; பிறப்பிற்குக் காரணம் ஆசை; இங்ஙனம் காரண காரியங்களாய் அமைந்துள்ள பன்னிரண்டு நிதானங்கள் துக்கத்திற்கு அடிப்படையா கின்றன என விநயபிடகம் விளம்பும். நிதானம் என்ற பாலிச்சொல்லைச் சார்பு என வள்ளுவரைப் பின்பற்றிச் சாத்தனாரும் மொழிபெயர்த்துக் கூறுகிறார் (குறள் 359 : மணி 30:17). பிற சார்புகள் பேதைமையிலிருந்து காரண காரிய அடிப்படையில் பிறத்தலின் பேதைமைதான் பிறப் பிற்குக் காரணம் என்றார் வள்ளுவர் (குறள் 358). இதற்கு அடுத்த குறளில் சார்புகளை உணர்ந்து, அவற்றின் நீங்கி

வாழ, பிறவி நோய் இல்லை என்கிறார். இதனைச் சாத்தனார் வழிமொழிகிறார் (30 : 119-133). துன்பங்களைப் போக்க வேண்டின் காமம், வெகுளி, மயக்கம் மூன்றையும் முனிய வேண்டும் என்று வள்ளுவரும்(360) சாத்தனாரும் (30 : 252—260) மொழிந்துள்ளனர்.

ஈ. பத்துக் குற்றங்கள் :

மனம், மொழி, மெய்களால் நிகழும் பத்துக் குற்றங்களைத் தீவினையெனச் சுத்தபிடகம் உரைக்கும். அவற்றை (1)உடம்பில் தோன்றுவன (2) சொல்லில் தோன்றுவன (3) செயலில் தோன்றுவன எனப் பாகுபாடு செய்து பிடகத்தின் வழிநின்று வள்ளுவரும் சாத்தனாரும் விரித்துரைத்தனர். சங்க நூல்களில் வேள்விகள், புலால் உணவு பற்றிய குறிப்புக்கள் மிகுதி. புலாலை மறுத்துச் சங்கப் புலவர் ஒருவர் கூடப் பாடவில்லை. புலால் புது அறமாகும். வள்ளுவர் ஒன்றன் உயிர்செகுத்து உண்ணாமை, ஆயிரம் வேள்வி புரிவதைவிட மேலானது என விளம்பினார். புத்தரின் பஞ்சசீலங்களாகிய காமமின்மை, கொல்லாமை, கள்ளாமை, பொய்யாமை, கள்ளுண்ணாமை முதலியவற்றையும் திருக்குறளில் காண்கிறோம். முதன் முதல் பரத்தமை ஒழுக்கத்தைக் கடிந்தவர் வள்ளுவரே. இதுவும் சீலங்களில் ஒன்றாகும். ஏழைகளின் பசி போக்குவதே சிறந்த அறம் என்றார் வள்ளுவர். சாத்தனாரும் 'பாரகம் அடங்கலும் பசிப்பிணி யறுக' எனப் பாடினார். 'அன்பிலார் எல்லாம்,' என்ற குறளின் உரை சிபியின் கதையினைக் கூறும். இக்கதையினை முன்பே குறித்துள்ளோம். 'நெய்யால் எரி நுதுப்பேம்' என்ற குறள் கருத்து சம்யுக்த நிகாயம் 12, 53- இல் காணப் படுகிறது. புத்தரைப் பின்பற்றி வள்ளுவரும் 'பிறப்பொக்கும்' எனச் சமத்துவம் பேசினார். வள்ளுவர் கூறும் மருந்து அதிகாரம் புத்தர் பாரத்துவாசனுக்குப் புகட்டிய போதனையுடன் ஒப்பிடத் தக்கது. பௌத்த நூல்களில் மருந்தைப் பற்றி மிகுதியாகக் கூறப்பட்டுள்ளது. சுத்தபிடகத்தின் ஒரு பகுதியாகிய தம்மபதத்தினைப் பின்பற்றியே வள்ளுவரும் அறக் கருத்துக்களைத் தனித்தனித் தலைப்புக்களில் தொகுத்துள்ளார் எனலாம். எனவே, பௌத்த சமயக் கருத்துக்களை வள்ளுவர் உணர்ந்தவர் என்பது தெளிவு. ஆதலின்,

சாத்தனுர் திருக்குறளுக்குப் பௌத்தக் கொள்கையின் அடிப்படையில் விளக்கம் தருதல் பொருத்தமுடையதே. அவர் திருக்குறளை எடுத்துப் பயன்படுத்தும் இடங்கள் பல.

திருவள்ளுவர் காலம் கி. பி. 100 முதல் கி. பி. 600 வரை பலவாருகக் கூறப்படுகிறது. எனினும் கி. பி. 2-ஆம் நூற்ருண்டு என்ற கொள்கை பலராலும் ஒத்துக் கொள்ளப்பட்டது. எனவே, இக்காலத்திற்குப் பின்னர் மணிமேகலை எழுந்தது எனலாம்.

### கி. பி. 300க்குப் பின் மணிமேகலை தோன்றியது

**1. நாகார்ச்சுனர் :**

இவர் ஆந்திரப் பகுதியினர். மாத்தியமிக பௌத்தத்தினை உருவாக்கியவர். இவர் காலம் கி. பி. 200-300 என விந்தியாபூஷணர் கணித்துள்ளார். இவர் எழுதிய மூல மாத்தியமிகக் காரிகையில் பிரதிநியசமுத் பாதத்தை அன்மைச் சொற்களால் விளக்கியுள்ள பகுதியைச் சாத்தனுர் இனிய தமிழில் எடுத்துரைத்துள்ளார், (30:37-42). பௌத்தத்தின் முதல் தருக்க நூலாசிரியர் நாகார்ச்சுனரே. இவர் யாத்த உபாய கௌசல்ய இருதய சாத்திரம் என்னும் தருக்க நூல் கி. பி. 472 இல் சீனத்தில் மொழி பெயர்க்கப்பட்டது. இந்நூலின் முதல் இயலில் பிர திக்ஞை, ஏது, திட்டாந்தம் என்ற மூன்று உறுப்புக்களே போதும் என்றும் உபநயம், நிகமனம் என்பன மிகை யென்றும் குறித்துள்ளார். சாத்தனுரின் தருக்கத்திலும் இம் மூன்று உறுப்புக்களுமே கூறப்பட்டுள்ளன.

**2. ஈசுவரகிருட்டிணர் :**

சாங்கியம் பற்றி அறிதற்கு முழுமையாகக் கிடைக்கும் தொன்னூல் ஈசுவரகிருட்டினர் எழுதிய சாங்கியக் காரிகை யேயாகும். பேராசிரியர் இராதாகிருட்டிணனுர் இவர் காலம் கி. பி. 3-ஆம் நூற்ருண்டு என்ருர். சமயக் கணக் கர்தம் திறம்கேட்ட காதையில் சாத்தனுர் சாங்கியத்தினை விரிவாக விளக்குகிருர். ஆதலின் இந்நூல் பயிற்சியும் அவர்க்கு வாய்த்திருத்தல் வேண்டும்.

### 3. பரதசாத்திரம் :

பரத முனிவர் எழுதிய நாட்டிய சாத்திரம் ஆடல், பாடல் முதலிய அழகியற் கலைகளின் அமைதி கூறுகிறது. இந்நூல் தென்னாட்டிற்குச் சிறப்புரிமை உடையது. பரத நூலின் காலம் கி. பி. 3- ஆம் நூற்றாண்டென்பர் பேரா சிரியர் ஏ. பி. கீத். சாத்தனார் இந்நூலைக் குறிப்பிடுகிறார் (18:57-8).

### சிலம்பும் மேகலையும் :

இளங்கோவடிகள் காலம் கி. பி. 3-ஆம் நூற்றாண் டென்பர் டாக்டர் மு. வ. அவர்கள். அடியார்க்கு நல்லார் மணிமேகலைக்குப்பின் சிலப்பதிகாரம் இயற்றப் பட்டது என்ற கருத்தினர். ஆயினும் இரு காப்பியங் களையும் ஒப்பிட்டு ஆராய்வோர் சிலம்பு முற்பட்டது என்பர். சிலப்பதிகாரத்தினைச் சாத்தனார் பயின்றிருத் தல் கூடும். சிலப்பதிகாரம் மாதவி, மணிமேகலையின் துறவினையும் (15: 99-106, 27: 105-108, 20: 7, 30 : 9-34), மாசாத்துவானின் துறவினையும் (27: 90-95, 29 : 6) கூறு கிறது. இம்மூவரும் பௌத்தத்தினைச் சார்ந்தவர்கள். இவர்தம் துறவுக் கதையினைச் சாத்தனார் விரிவாகப் பாடு கிறார். இரண்டு காப்பியங்களும் சமகாலத்தில் எழுந் திருத்தல் இயலாது. ஒன்றின் செல்வாக்கு ஒன்றில் காணப்படுகிறது. ஒரே பொருளைப் பற்றிய வேறுபட்ட கருத்துக்களும் இரண்டிலும் உள்ளன :

1. மணிமேகலைக்கு உதயகுமரன் என்ற காதலன் இருந்த செய்தி சிலம்பில் இல்லை.

2. மாதவியின் தாய் சித்திராபதி என்பதும் சிலம்பில் இல்லை சிலம்பில் வரும் மாதவியின் தாய் நற்பண்பினளாய்த் திகழ் கிறாள். ஆயின், மணிமேகலையில் மிகவும் இழிந்த நிலையில் இலங்குகிறாள். தன் மகளும் பெயர்த்தியும் துறவு பூண்டதை அறவே வெறுக்கிறாள். இளங்கோ பெண்களை மாயை என்றோ காமக் கூடு என்றோ கருதவில்லை. பொருட் பெண்டிரையும் மாதவியையும் உத்தமியாக உருவாக்கிக் காட்டும் இளங்கோ வின் உள்ளம் சித்திராபதியைப் பொருள் நசை வாய்ந்த காமப் பரத்தையாகக் காட்டவில்லை. ஆனால், சாத்தனார் கயமைக் கிழத்தியாய்ப் புனைந்துள்ளார்.

3. இந்திரவிழாவிற்கு மாதவி வாராமை பற்றி ஊர் மக்கள் அலர் தூற்றிய செய்தி சிலம்பில் இல்லை. மேகலையில் உண்டு.

4. சிலம்பில் புகார் நகரத்தின் பொலிவு கூறப்பட்டுள்ளது. புகார் காண்டம் என்ற பகுதியும் உண்டு. மேகலையில் புகாரைக் கடல் விழுங்கிய செய்தியைக் காண்கிறோம்.

5. சிலம்பில் ஆசீவகம், சமணம், பௌத்தம், வைதிகம் ஆகிய சமயக் குறிப்புக்கள் உள்ளன. ஆனால், மணிமேகலையில் சாங்கியம், நியாயம். வைசேடிகம், மீமாம்சகம், உலோகாயுதம், பிரமவாதம் முதலிய புது நெறிகளும் புகலப்பட்டுள்ளன.

6. சிலம்பில் சமயவெறி இல்லை. சமயப்பொறை உண்டு. பௌத்த சமயத்தினை மரியாதை உணர்ச்சியுடன் குறித்துள்ளார் (19 : 1-14). எனினும் இளங்கோ சமயத்தினை மிகுதியாகக் குறிப்பிடுகிறார். மேகலையில் சமய வெறியும் புறச் சமய வெறுப்பும் காண்கிறோம். சமண சமணத்தைச் சாத்தனார் மிகவும் இழித்தும் பழித்தும் புனைந்துரைக்கிறார். திகம்பரத் துறவி நாணமும் உடையும் இன்றி யானைபோல் நடந்து வருதலை நகையாடுகிறார். உண்ணாநோன்பினன் இங்ஙனம் உடல்பருத்துத்தோன்றுதலும் மாசடைந்த மேனியனாய்த் திகழ்தலும் அவரால் இகழப்படுகின்றன. அவன் முன் குடிகாரன் தோன்றி மது அருந்தத் தூண்டுவது நகை விளைக்கிறது (3 : 86-103). இக்காட்சியின் எதிரொலி சமணனாய் இருந்த முதலாம் மகேந்திர வர்மன் எழுதிய மத்த விலாசப் பிரகசனத்தில் பௌத்தத்துறவியைக் குடிகாரன் சந்தித்துப் பேசும்படி எழுதத் தூண்டியது எனலாம்.

சமண முனிவர்களால் விரட்டப்பட்ட சுதமதியின் தந்தைக்குப் பௌத்தத் துறவிதான் பாதுகாப்பளித்துப் பேணுகிறான் (5 : 56-79). இங்ஙனம் சமணத்தை இகழ்ந்துரைக்கும் சாத்தனார் சமணச் சார்புடைய இளங்கோவின் நண்பராயிருத்தல் இயலாது.

7. இசை, கூத்து, ஒப்பனை முதலிய அழகுக் கலைகளைச் சிலம்பு ஆதரித்துப் போற்றுதலும் மேகலை வெறுத்து ஒதுக்குதலும் ஒரு வேறுபாடாகும்.

8. நெடுஞ்சேரலாதன் மகன் செங்குட்டுவன் என்பதும் கோவலன் இவன் காலத்தவன் என்பதும் இளங்கோ கூறும் செய்தி. கோவலனுக்கு 9 தலைமுறைக்கு முன் நெடுஞ்சேரலாதன் இருந்தான் என்றும் அப்பொழுது ஒரு கோவலன் பௌத்தத்

துறவியாகவும் சேரனின் நண்பனுகவும் விளங்கினுன் என்றும் சாத்தனுர் கூறுகிருர்.

9. சிலப்பதிகாரச் சமுதாயம் ஆடலும் பாடலும் அழகும் செழுமையும் கெழுமி இன்பமயமாய் உள்ளது. எனின், மணிமேகலைச் சமுதாயம் பசியும் பிணியும் பஞ்சமும் நிறைந்து துன்பமயமாய் உள்ளது.

10. சிலம்பு இல்லறத்தை இகழவில்லை ; துறவறத்தைத் தூற்றவில்லை ; இரண்டையும் திருக்குறள் வழி நின்று மதிக்கிறது. ஆனல் மேகலையோ இல்லறத்தை இகழ்ந்து துறவினையே மதிக்கும் துணிபுடையது.

11. சிலம்பில் கண்ணகிக்குத்தான் கோயில் உண்டு. மேகலையில் கண்ணகி கோவலன் இருவர்க்கும் கோயில் உண்டு (26 : 2-5).

இங்ஙனம் சில வேறுபாடுகள் காணப்படுதலின் இரண்டு காப்பியங்களும் ஒரு காலத்தில் எழுந்தன எனல் ஒவ்வாது. சிலம்பின் சாயல் மேகலையில் காணப்படுகிறது :

1. வான்வழி இறங்கும் சாரணர்கள் சமணம் பௌத்தம் இரு சமயத்திலும் உள்ளனர். சாவகர் என்றே இல்லறத்தாரை அழைக்கும் மரபு இரண்டிலும் உண்டு. உண்ணு நோன்பிருந்து உயிர் துறத்தல் இரு நெறிக்கும் பொது. சாரணர் அருகனின் பல பெயர்களைப் பாராட்டுதலும், கவுந்தியின் அருக வழிபாடும் சிலம்பில் காணப்படுதல் போல், மேகலையில் மணிமேகலா தெய்வம், மணிமேகலை-இவர்தம் புத்த வழிபாடு அமைந்துள்ளது.

2. புகார் நகரத்திற்கு மருங்கில் வாழ்ந்த கவுந்தி சமணத்தில் மேலான ஞானம் பெறுவதற்கு மதுரைக்குப் புறப்பட்டது போல், புகாரில் பிறந்த மணிமேகலை பௌத்தப் போதனை பெறுவதற்குக் காஞ்சிமாநகர்க்குப் புறப்பட்டார்.

3. பெருங்காப்பியம் படைக்கும் எக்கவிஞனும் தான் படித்துச் சுவைத்த இலக்கியங்களையும் கலைகளையும் அரசியல், சமயம், நாடு, மொழிகளையும், தன்னுடன் பழகிய பல்வேறு பண்புடைய மக்களையும் மறந்து எழுதுதல்

இயலாது. மணிமேகலையில் சிலப்பதிகாரச் செல்வாக்கு காணப்படுகிறது; சிலம்பின் வரிகள் அப்படியே மேகலையில் ஆளப்பட்டுள்ளன. நகர்கள், பருவங்கள், இயற்கை, உவமைகள் — இவற்றிலும் சிலப்பதிகாரச் சாயல்கள் மணிமேகலையில் உள்ளன. காதையின் இறுதியில் ஓதப்பெறும் கருத்துச் சுருக்கத்தை அடுத்த காதையின் துவக்கத்தில் தொடுத்துப்பாடும் அந்தாதி அமைப்பினைச் சாத்தனுர் சிலம்புப் பயிற்சியால் கைவரப் பெற்றூர் எனலாம். மணிமேகலை தோன்றுவதற்குச் சிலப்பதிகாரம் ஒரு வழிகாட்டியாய் அமைந்திருக்க வேண்டும்.

இரு நூல்களும் சம காலத்தவை என்பவர் இவற்றின் பதிகங்களைச் சான்று காட்டுகிறூர்கள். பதிகச் செய்திக்கும் நூலிலுள்ள கருத்துக்கும் முரண்பாடு இருப்பதால் சிலப்பதிகாரப் பதிகத்தை இளங்கோ எழுதவில்லை என நாவலர் பாரதியார் முடிவு செய்துள்ளார். சிலம்பில் வரும் தண்டமிழ் ஆசான் சாத்தன் மணிமேகலையின் ஆசிரியராய் இருத்தல் இயலாது. அவன் வெள்ளியம்பலத்து நள்ளிருட் கிடந்தோன் ஆவான். செங்குட்டுவன் சிறந்த சைவன். சைவமுட்பட பிற சமயங்களைப் படிற்றுரை எனப் பழித்துரைக்கும் மணிமேகலையின் ஆசிரியர் செங்குட்டுவனின் நண்பனுய் அருகில் அமர்ந்து கண்ணகியின் கதையினைக் கூறுதல் இயலாத ஒன்று. ஆதலின், மணிமேகலை ஆசிரியரும் சிலப்பதிகாரம் குறிக்கும் சாத்தனுரும் வெவ்வேறு அறிஞர்கள் எனல் வேண்டும். பின்வந்தோரின் கவனக் குறைவால் இருவரும் ஒருவராக மயங்கி இயங்கி வருகின்றனர். சிலம்பின் காலம் எதுவாயினும் அது மணிமேகலைக்கு முற்பட்டது என்பது பலரின் கருத்து.

### கி.பி. 400க்குப் பின் மணிமேகலை தோன்றியது

#### 1. வாத்சாயனர்

இப் பெயரினர் இருவர். ஒருவர் தருக்கநூற் புலவர். ஒருவர் காமசூத்திரத்தினைத் தொகுத்தவர். அளவை நூல் வல்லவராகிய வாத்சாயினரைத் திரமிளர் என்றே குறிப்பர். இவர் கி.பி. 4ஆம் நூற்ருண்டில் காஞ்சியில் வாழ்ந்த தமிழர். அக்கபாதரின் நியாய சூத்திரத்திற்கு முதன் முதல் விரிவுரை வழங்கியவர் இவரே. ஏதுப்

போலிகளை முதன் முதல் எடுத்துரைத்தவர் இவர் என்றும், இவர்க்குப் பின்னரே பக்கப் போலி, திட்டாந்த போலிகள், அளவை நூலாரால் உருவாக்கப்பட்டன என்றும் இந்தியத் தருக்க வரலாற்றுப் பெருநூல் எழுதிய பேரறிஞர் வித்தியாபூஷணர் கருதுகின்றார். பக்கம், ஏது, திட்டாந்தம் இம்மூன்றின் போலி வகைகள் மணிமேகலையில் காணப் படுகின்றன. சாதன்மியம், வைதன்மியம் எனத் திட்டாந்தங்களை இருவகைப்படுத்திய முதல்வரும் வாத் சாயினரே. நையாயிகரின் தருக்கத்தை உரைக்கும் பகுதியில் சாத்தனார் இவ்விருவகைத் திட்டாந்தங்களையும் எடுத்துரைத்தார். ஆதலின் வாத்சாயினருக்குப்பின் வாழ்ந்தவர் சாத்தனார் என முடிவு செய்யலாம்.

### 2. வாத்சாயன மல்லநாகர்

தமக்குமுன் வழங்கிவந்த காமவியல் நூற்பாக்களுக்கு வடிவம் தந்து தொகுத்த பெரியார் இவர். காமசூத்திரக் கருத்துக்களை, காமத்துப்பாலுடன் இணைத்து ஒப்பியல் ஆய்வு நிகழ்த்திய முன்னோடிகள் திருக்குறள் உரையாசிரியர்களே.[84] கலைகளில் வல்லளாய் அழகு, பண்பு, அறம், நிறைந்த பரத்தை, கணிகை என்ற ஒரு தகுதி பெற்று அரசவையில் ஆசனத்திற்கு உரியளாகிறாள் எனக் காமசூத்திரம் கழறுகிறது, *(1, 3, 20)*. மாதவி இவ்விலக்கணத்திற்குப் பொருந்தியவளாய்த் திகழ்கிறாள் *(2; 18-32)*. கணிகை என்ற பெயர் மணிமேகலையில் பல இடங்களில் வழங்கக் காணலாம் *(11 : 13-14) (16 : 6 ; 22 : 30, 24 : 2)*. கணிகையின் மைந்தன் சுகந்தன் புகாரினை ஆண்ட செய்தியைச் சாத்தனார் குறித்துள்ளார். *(22 : 30-34)*. ஆதலின் காமசூத்திரப் புலமை சாத்தனார்க்கு இருந்திருத்தல் கூடும்.

### 3. விட்டுணு புராணம்

சாத்தனார் குறிப்பிடும் 'கடல்வணன் புராணம்' *(27 : 98-99)*, வைணவ புராணமாகிய விஷ்ணுபுராணத்தைச் சுட்டும் எனக் கருதலாம். புராணங்கள் யாவும் கி.பி. *400*க்குப்பின் தான் தொகுக்கப்பட்டவை. சாத்தனார் குறிப்பிடும் வைணவ சமயத்தினை விளக்கும் தொன்மை யான முதலாழ்வார் பாடல்களும் கி.பி. *400-600* என்ற

காலப் பகுதியைச் சேர்ந்தவையே. இக்காலத்தில்தான் வைணவம் முழு வடிவம் பெற்றது.

### 4. காஞ்சியின் நிலை

பெரும்பாணாற்றுப்படையில் கச்சியின் செழுமை குறிக்கப்பட்டுள்ளது. மணிமேகலையில் காஞ்சியில் பெரும் பஞ்சம் ஏற்பட்டதைக் காண்கிறோம். (28 : 156-7, 168-9). இந்தப் பஞ்சத்திற்கு மழையின்மை காரணம் என்று அறிகிறோம். எனினும் கி.பி. 4-ஆம் நூற்றாண்டில் வட நாட்டில் ஆண்ட சமுத்திரகுப்தன் காஞ்சி அரசனை முறியடித்துப் பெரும் பொருள் கவர்ந்து சென்று புரவி வேள்வி புரிந்தான். இவன் படையெடுப்பும் காஞ்சியின் பஞ்சத்திற்குக் காரணமாகலாம்.

### 5. ஆசங்கரும் வசுபந்தும்

கி.பி. 4-ஆம் நூற்றாண்டினராகிய ஆசங்கரின் யோகா சார பூமிசாத்திரத்தினையும் வசுபந்துவின் அவிதரும கோசத்தையும் பின்பற்றியே சக்கரவாளக் கோட்டம் உரைத்த காதையில் பௌத்தத்தின் அண்ட அமைப் பியலைச் சாத்தனார் விவரித்துள்ளார். போதி சத்துவர்க் குரிய இன்றியமையாத் தகுதிகளில் பௌத்தத் தருக்கப் புலமையினை ஆதிசங்கரர் வற்புறுத்தியுள்ளார். மணி மேகலையில் போதிசத்துவராகிய அறவணஅடிகள் பௌத்தத் தருக்கப் புலமை நிரம்பியவராய் மணிமேகலைக் கும் தருக்கத்தைப் புகட்டுதல் காணலாம். பௌத்தத்தின் வளர்ச்சியில் 500 ஆண்டுகட்கு ஒருமுறை புதுமை பூத்தது என ஷேர்பட்ஸ்கி அறிந்துரைக்கிறார். வெறும் அறக் கருத்துக்களே அருளி மறைந்த புத்தருக்குச் சுமார் 500 ஆண்டுகட்குப் பின் மகாயானம் உருவாகியது. அதன் விளைவாகத் தத்துவச் சிந்தனை வளர்ந்தது. அதற்கு 500 ஆண்டுகட்குப்பின் பௌத்த தருக்கம் தனிச் சிறப்பு பெற்றது. கி.பி. 4, 5ஆம் நூற்றாண்டுகளில் தருக்கம், தத்துவம் இரண்டுமே இணைந்து வளர்ந்தன. இவ் விரண்டுமே பௌத்த தருமம் எனக் கருதப்பட்டது. சாத்த னாரும் ‘தவத்திறம் பூண்டு தருமம் கேட்ட கதை’, ‘பவத்திறம் அறுகெனப் பாவை நோற்ற காதை,

இரண்டிலும் தருக்கமும் தத்துவமுமே கூறியுள்ளார். வசுபந்துதான் முதன் முதல் காட்சி, கருத்து என்ற இரண்டளவைகளைக் கொண்டவர். இவரைப் பின்பற்றியே இவர் மாணவர் திக்நாகரும் பிறரும் இவ்விரண்டுமே எடுத்துரைத்தனர். பெரும்புலமையும் பேராய்ச்சித் திறனும் மிகுந்திருந்ததால் வசுபந்துவை இரண்டாம் புத்தரெனப் பௌத்தப் பேருலகம் பாராட்டியது. சாத்தனாரும்,

> "ஆதிசினேந்திரன் அளவை இரண்டே
> ஏதமில் பிரத்தியம் கருத்தள வென்ன" (29 : 47-48)

என இரண்டு அளவைகளையே இயம்பினர். இவ்விரண்டினையும் ஆதிபுத்தனே அருளியதாகக் கூறுமிடத்து அவர் நினைவில் இரண்டாம் புத்தரெனப் போற்றப்படும் வசுபந்துதான் நின்றார் எனக் கருதலாம். இரண்டு அளவைகளைக் கொண்ட இவர்களைச் சௌத்திராந்திக யோகாசாரர்கள் எனக் குறித்தல் மரபு.

யோகாசார பௌத்தத்தின் மையக்கொள்கை ஆலய விஞ்ஞானத்தை உள்பொருளாக உடன்பட்டதுதான். சாத்தனார் "உணர்வு உள்வழக்கு" என வரும் பகுதியில் இவ்விஞ்ஞான வாதத்தை ஏற்றுக் கொண்டுள்ளார்.

பன்னிரு நிதானங்களையும் பலவகையில் அடைவு செய்து சாத்தனார் விளக்குகிறார். பேதைமை, செய்கை இரண்டும் இறந்த காலத்திற்கும், உணர்ச்சி, நாமரூபம், ஷட்டாய தளம், ஊறு நுகர்வு, வேட்கை, பற்று, பவமாகிய தோற்றம் என்ற எட்டு நிதானங்களும் நிகழ் காலத்திற்கும், பிறப்பு, வினைப்பயன் இரண்டும் எதிர்காலத்திற்கும் உரியன என்றார் (30 : 160-168). இப்பகுதி வசுபந்துவின் அபிதரும கோசத்தில் (3 : 20-24)

> 'Saprattya Samutpādo dvadasangastri kandakah
> pūrva parantayordve dve madhyestau"

எனவரும் பகுதியை எதிரொலிக்கிறது. ஆதலின் சாத்தனார் இவர் காலத்திற்குப் பிற்பட்டவர் ஆதல் வேண்டும்.

**கி. பி. 500க்குப் பின் மணிமேகலை எழுந்தது :**

**பௌத்தத்தின் பொற்காலம் :**

கி.மு. முதல் நூற்றுண்டில் தான் திரிபிடகங்கள் இறுதி வடிவம் எய்தி எழுத்துருப் பெற்றன. கி. பி. 100-400 வரை பாலி இலக்கிய வரலாற்றின் இருண்ட காலம் என்பர் டாக்டர் பி. சி. லா. கி. பி. 400-600 பௌத்தத்தின் பொற் காலம் எனப் போற்றப்படும். இக்காலப் பகுதியில் வாழ்ந்த புத்த தத்தர், புத்த கோஷர், தர்மபாலர் முதலி யோர் பிடகங்களுக்குப் பேருரைகள் கண்டனர். இலங்கை யிலும் புகார், காஞ்சி முதலிய தமிழகத் தலைநகர்களிலும் வாழ்ந்த பிட்சுக்கள் அடிக்கடி ஒன்றுகூடி, பிடகங்களை ஆராய்ந்து புதுவிளக்கம் கண்டனர். இக்காலப் பகுதியில் தான் மணிமேகலை ஆசிரியர் வாழ்ந்திருத்தல் வேண்டும். சாத்தனுர் புத்தரின் ‘பிடகநெறி’ (26 : 66) யினைக் குறிப் பிடுகிறுர். இதனுல் பிடகங்கள் அவர் காலத்தில் மிகுதி யாகப் பயிலப்பட்டமை அறியப்படும். அன்றியும் திரிபிட கங்களுக்குத் தமிழிலும், தெலுங்கிலும் சிறந்த உரைகள் விளங்கின. டாக்டர் பி. சி. லா., “The Andha - atthakathe represented a commentarial tradition handed down at Kancipura. Presumably, it was written in some native dialect of the Deccan. Tha Samkhepa atthakatha .....was a south Indian work. vide History of Pali Literature Vol. II p. 376.

A most important information is found in this book of Damila-bhasa and Andhabhasa i. e., The languages of the Tamils and the Andhras Abids p. 438.

எனக் குறித்தல் காண்க. பிடகங்கள் ஹீனயானம், மகா யானம் இரண்டிற்குமே அடிப்படையான மறை நூல் களாகும்.

**மணிமேகலை பௌத்த உலகின் ஒப்பற்ற காப்பியம் :**

பாலி மொழியில் பெருங்காப்பியங்கள் தோன்ற வில்லை. பிடகங்களும் பௌத்த மறைகளேயாகும். சிங்கள மொழியிலும் பிடக உரைகளும் தீபவம்சம், மகா வம்சம் முதலிய வரலாற்று நூல்களுமே தோன்றியுள்ளன. மகாயானத்தின் மொழியான சமஸ்கிருதத்தில் கி.பி. 2-ம்

நூற்றுண்டில் அசுவகோஷர் எழுதிய புத்த சரிதமும், பிறர் யாத்த லலிதவிஸ்தாரம், இலங்காவதார சூத்திரம் முதலி யனவும் புத்தரைப் பற்றிய சிற்றிலக்கியங்களே. இருண்ட காலத்திற்குப் பின் எழுதப்பட்டவையெல்லாம் பிடக உரைகளே ஆகும். ஒரு நாட்டின் அரசியல், சமுதாய இயல், பண்பாடு, வணிகநிலை, புறச்சமயத் தத்துவ, தருக்கங்கள் முதலியவற்றைத் தெளிவாக எடுத்துரைத்துப் பௌத்தமே தலைசிறந்தது என்று நிலைநாட்டும் பொருட்டுப் புத்தரின் கடவுள் தன்மையினையும், போதிசத்துவரின் தொண்டு மனப்பான்மையினையும் பௌத்த அண்ட அமைப்பியல், அறிவியல், தருக்கம், தத்துவங்களையும் தெளிவாக விளக்கி இலக்கியச் சுவையும், கற்பனைவளமும், நடையழகும், பொருந்த எழுதப்பெற்ற மணிமேகலைக்கு ஒப்பாக பௌத்த உலகத்தில் ஒரு பெருங்காப்பியம் தோன்றவில்லை எனலாம்.

இந்தியத் தத்துவ வரலாற்றறிஞர்கள் கி. பி. 14-ஆம் நூற்றுண்டில் எழுந்த மாத்துவரின் சர்வமத சங்கிர கத்தினையே பெரிதும் பேணுவர். இந்தியாவில் முதன் முதல் சர்வமத சங்கிரகமாக நூல் எழுதியவர் மணி மேகலைச் சாத்தனுரே. சமயக் கணக்கர் தம் திறம் கேட்ட காதை இவ்வுண்மையினை உறுதிப் படுத்தும். இக்காதை யினைத் தனி நூலாகக் (manual) கருத வேண்டும். இறுதியின் இரண்டு காதைகளும் இரண்டு தனித்தனி நூல்கள் (manuals). 29-வது காதை பௌத்தத் தருக்க நூல். 30-வது காதை பௌத்தத் தத்துவ நூல்.

புத்தர் பௌத்த மதத்தை நிறுவியவரே. அவருக்குப் பின்வந்தோர் பௌத்தத்தின் பிரசாரகரே. ‘ஆனல் காஞ்சி, புகார் முதலிய தலைநகர்களில் வாழ்ந்த தமிழ்த் தேரர்கள் பௌத்த மதத்தின் கிளைகளாகிய தியானம், யோகம், தாந்திரிகம் முதலிய பல நெறிகளை உருவாக்கி, சினம், ஜப்பான், கிழக்கிந்தியத் தீவுகளுக்குப் பரப்பிய செய்தியை வரலாறு உணர்த்தும். கி. பி. 500க்குப் பின் தான் வரையறுக்கப்பட்ட பௌத்த தருக்கங்கள் தோன்றின என்று வித்யாபூஷணரும் ஷேர்பட்ஸ்கியும் கருதுகின்றனர். திக்நாகர், சங்கரசுவாமி, தம்மபாலர்,

பரமார்த்தர், தருமகீர்த்தி, அனைவரும் காஞ்சிப் பகுதியைச் சேர்ந்தவர்களே. இந்தப் பின்னணியில் மணிமேகலையின் காலம் கி. பி. 5-ஆம் நூற்றாண்டிற்குப் பின்னர்தான் என்ற கருத்திற்கு அரண் செய்யும் பல சான்றுகளை இவண் காண்போம்.

**1. காவிரிப்பூம்பட்டினத்தில் பௌத்த சங்கம் :**

கி. பி. 5-ஆம் நூற்றாண்டில் வச்சிரநந்தி மதுரையில் திரமிள (தமிழ்) சங்கத்தை நிறுவிச் சமணத்தைப் பேணினார். இதே காலத்தில் புகார் நகரின் கடற்கரையில் புத்ததத்தர் என்ற பெரியார் பௌத்த சங்கத்தை நிறுவி, பௌத்த மதத்தைப் பரப்பினார். கனதாசர், புத்தகோஷர், புத்தசீகர் முதலியோர் இச் சங்கத்தில் தொடர்பு கொண்டவர்கள் என டாக்டர் பி. சி. லா, ஆராய்ந்துரைத்துள்ளார். சங்க தருமன் இச்சங்கத்தினனுதல் கூடும். சாத்தனார்,

"வலம்புரிச் சங்கம் வறிதெழுந் தார்ப்பப்
புலம்புரிச் சங்கம் பொருளொடு முழங்க" (7 : 112-13)

என்ற புகாரில் திகழ்ந்த பௌத்த சங்கத்தினைக் குறித்துள்ளார். வினயபிடகம், சுத்தலிபாங்கம் என்பன சங்கத்தின் இயல்புகளை, The Sangha should consist of men who were learned who could effectively explain the doctrines of the religion to laymen and defend and uphold them in disputation-Vide, Sacred Books of the East, Vol. X, p. 43.

என வரையறுத்துக் கூறுதல் காண்க. இவ்விலக்கணத்திற்கு இலக்கியமாகத் திகழ்ந்தது புகார் நகரத்துப் பௌத்த சங்கம் எனலாம். இச்சங்கத்தினைச் சார்ந்தோர்களைப் பற்றி,

1. Buddhsiha was fellowmonk residing in the monastery erected by Venhudasa or Kanhadasa in the beautiful river port of Kaveri-vide, A History of Pali Literature Vol. II, p. 378.

2. Buddhadatta, a contemporary of Budghaghosa was a celebrity of the Mahavihara of Ceylon, and was an inhabitant of the Kaveri region in the kingdom of the Cholas......His works which were all written in the famous monastery erected by Kanhadasa or Venhudasa ......on the banks of the river Kaveri......In his Abhidharmavatara,

he depicts the beautiful scenes of Kaveripattna (Pukar). Sometimes he lived in the Vihara at Butamangalam in the Chola country, where he wrote his commentary vinayaviniccaya-Ibid., p. 384, 397-8.

3. Madurattavilasini, a commentary on the Buddhavamsa was ascribed neither to Buddhaghosa nor to Buddhadatta, but to a Buddhist monk living at the mouth of the Kaveri in South India-Ibid., p. 399. எனக் குறிக்கப் பெறுதல் காணத்தக்கது. கி.பி. *1964-65*இல் காவிரிப் பூம்பட்டினத்தில் நிகழ்ந்த புதைபொருள் ஆராய்ச்சியில் பௌத்தப் பள்ளிகள், புத்தர் சிலை முதலியன கண்டெடுக்கப் பட்டுள்ளன. இவையனைத்தும் கி.பி. 5-ஆம் நூற்றுண்டினைச் சேர்ந்தவை என அறிஞர்கள் முடிவு செய்திருத்தல் காண்க. புகார் நகரில் பௌத்தப் பள்ளிகள் இருந்த செய்தியையும் சாத்தனுர் குறித்துள்ளார்.

**2. திக்நாகர் :**

காஞ்சிமா நகரில் தோன்றிய இப்பேரறிஞர் நாளந்தா பல்கலைக் கழகத்தின் தலைவராகத் திகழ்ந்தவர். பல சொற்போர்களில் வாகைசூடி, "தர்க்கபுங்கவர்" எனப் புகழப் பெற்றவர். இவர் எழுதிய பிரமாண சமுச்சயம், ஹேதுச் சக்கரம், பிரமாண சமுச்சய விருத்தி, ஆலம்பண பரிக்ஷா முதலியன அயல் மொழிகளிலும் அக்காலத்தில் மொழிபெயர்க்கப் பெற்ற சிறப்பினை உடையவை. திக்நாகரின் பிரமாண சமுச்சயம் துவங்குவது போன்றே மணிமேகலையின் தருக்கப் பகுதியும்,

"ஆதிசினேந்திரன் அளவை இரண்டே
ஏதமில் பிரத்தியம் கருத்தள வென்ன" (29: 47-48)

எனத் துவங்குகிறது. திக்நாகரைப் பின்பற்றி நாமம், சாதி, குணம், கிரியை, (திரவியம்) என்ற பஞ்சவித கல்பனைய விலக்கிச் சுட்டுணர்வினையே பிரத்யட்சப் பிரமாணமாகச் சாத்தனுர் கொண்டுள்ளார். "எனச் சொலிவிட்டனர்" (*29:49-50*) எனப் பிறர் கூற்ருக இருக்கருத்தினை இசைத்திருத்தல் காண்க. நியாயப் பிரவேசத்தின் ஆசிரியர் திக்நாகரே என்றும் அவர்க்கு முன்னேர் (Predecessor) என்றும், அவர் மாணவர் என்றும், மூவகைக் கருத்துக்கள் உள்ளன. பக்கப்போலி, ஏதுப்போலி, திட்டாந்தப் போலிகளை வகுத்துரைக்கும் வகையில் நியா

யப்பிரவேசத்தின் கொள்கையும் சாத்தனரின் கொள்கையும் ஒத்துள்ளன.

அறுவகைத் தரிசனங்களில் திக்நாகர் நியாயம், வைசேடிகம், சாங்கியம், மீமாம்சம் என்ற நான்கினையே தம் பிரமாண சமுச்சயத்தில் எடுத்துக்கூறியுள்ளார். சாத்தனரும் இந்நான்கினையுமே இயம்பினர். ஆதலின் திக்நாகரின் காலத்தையொட்டிச் சாத்தனர் வாழ்ந்தவராதல் வேண்டும்.

### 3. புத்தகோஷர் :

இவர் வசுபந்துவின் மாணவர். மகதநாட்டினராயினும் தமிழகத்திலும் இலங்கையிலும் தம் வாழ்நாளைக் கழித்தவர். புத்ததத்தர், சங்கபாலர், புத்தமித்திரர், ஜோதிபாலர், முதலியோர் இவர் காலத்துப் பௌத்தப் பேரறிஞர்கள். இவர் எழுதிய விசுத்திமார்க்கத்தினைச் சாத்தனர் ஏதமில் நெறி, பழுதில் நெறி, பெரியோன் பிடக நெறி எனக் குறித்தனர் என்று கருதலாம். விசுத்திமார்க்கம் பாலிப் பிடகங்களின் சாரமாய் அமைந்த பௌத்தக் களஞ்சியமாகும். நாமரூபத்தினைச் சாத்தனர் இந்நூலினைப் பின் பற்றியே விளக்கியுள்ளார். புத்தகோஷர் சாதகங்கள் தம்மபதம் முதலிய சுத்தபிடகப் பகுதிகளுக்கு வரைந்த உரைகளில் காணப்படும் கதைக்குறிப்புக்களைச் சாத்தனர் பயின்றிருத்தல் வேண்டும். இக்கதைகளில் செட்டிகள் பெருஞ்செல்வதைத் தானம் புரிந்து துறவியான செய்தி காணப்படும். சாத்தனரும் "நன்றறி செட்டி" எனச் சாதுவனையும் ஒன்பது செட்டிகள், கம்பளச்செட்டி என்போரையும் குறித்துள்ளார். இச்சொல் புத்தகோஷரின் உரையில் காணப்படுவது. மெண்டகச் செட்டி, தனஞ்செயச்செட்டி, மகாசுவனச் செட்டி, சக்க பாலச்செட்டி முதலியோர் கதைகள் புத்தகோஷரால் கூறப்பட்டுள்ளன. மகாதானச் செட்டியின் கதை சாதுவன் கதையுடன் ஒத்துள்ளது. இருவரும் சிற்றின்பத்தில் மூழ்கி சூதாடி வறுமையடைந்து பின்னர் பௌத்தத்தைத் தழுவுகின்றனர். புத்தகோஷர் கூறும் கிசாகோதமிகதை சக்கரவாளக் கோட்டம் உரைத்த காதையில் வரும் கோதமையின் கதையை ஒத்துள்ளது. ஸ்ரீமா என்ற பரத்தையின்

கதையினைப் போன்றதுதான் மாதவியின் கதை. பல பெண் துறவிகளைப் பற்றிய கதைகள் புத்தகோஷரின் உரையில் காணப்படுகின்றன. மாதவி, மணிமேகலை, சுதமதி முதலியோர் கதைகளைப் புனைய இக்கதைகள் வழிகாட்டியாய் இருத்தல் கூடும்.

புத்தகோஷரின் சுமங்கலவிலாசினியில் புத்தர் மெய்ஞ் ஞானம் பெற்ற நாள் வைகாசி விசாகம் எனக் குறிக்கப் பெற்றுள்ளது. சாத்தனாரும் இந்நாளைக் குறித்துள்ளார். புத்தகோஷர் மிகுதியாகக் குறிப்பிடும் கபிலவஸ்து, கோசாம்பி, வாரணசி, அங்கம், மகதம், காந்தாரம், ஜம்புத் வீபம், துஷிதலோகம் முதலியன மணிமேகலையிலும் இடம் பெற்றுள்ளன.

## 4. உதயணன் கதை:

உதயணன் கதை கி. பி. 5-ஆம் நூற்றாண்டில் எழுதப் பட்டது. துர்வினிதன் என்பவனும் ஒரு காவியம் எழுதி யுள்ளான். காளிதாசனின் மேகசந்தேசத்திலும் கி. பி. 5-ஆம் நூற்றாண்டினைச் சேர்ந்த விஷ்ணுபுராணத்திலும் இக்கதை காணப்படும். புத்தகோஷரும் உதயணன் கதையைக் குறித்துள்ளார். பிராகிருதம், பாலி, வட மொழி, முதலிய பன்மொழிகளில் பெரும்புலமை படைத்த சாத்தனார் மேற்கூறிய நூல்களிலிருந்து உதயணன் கதைக்குறிப்பினை எடுத்து ஆண்டுள்ளார். கோசாம்பி நகரத்து அரசனான உதயணனை உச்சயினி அரசன் பிரச்சோதனன் வஞ்சித்துச் சிறைவைத்தான். உதயணனின் அமைச்சன் யூகி என்பவன் நோயாளி போல் வேடம் புனைந்து உச்சயினி சென்று அவனை விடுவிக்க முயன்றான் (15:61-65) எனச் சாத்தனார் குறிப்பிடுகிறார்.

## 5. தம்மபாலர்:

காஞ்சியில் வாழ்ந்த அமைச்சரின் முதல் மைந்தர் இவர். கி. பி. 7-ஆம் நூற்றாண்டில் காஞ்சிமாநகர்க்கு வந்த யுவான்சுவாங் என்ற சீன யாத்திரிகர் தம்மபா லரைக் காஞ்சிபுரத்தவர் எனக் குறித்துள்ளார். இவரும் நாளந்தா பல்கலைக் கழகத்தின் தலைவராக விளங்கியவரே.

தம்மபாலரும் சாத்தனரும் நண்பர்களாயிருந்திருத்தல் கூடும். மணிமேகலையில் வரும் அறவண அடிகளும், ஆச்சாரிய தம்மபாலரும் ஒருவரே என்று மகா மகோபாத்தியாய பண்டித குப்புசாமி சாஸ்திரிகள் கருதுகிறார். காஞ்சிபுரத்தினர் என்பதற்கு ஏற்பவே அறவண அடிகளும் அந்நகரில் தங்கி மணிமேகலைக்குப் பௌத்த தருக்கமும், தத்துவமும் போதிக்கிறார். தம்ம பாலர் நாட்டின் பல பாகங்களுக்கும் போய் வந்தது போலவே அறவணரும் புகார், இலங்கை, மதுரை, வஞ்சி, காஞ்சி, அங்கநாடு, முதலியவற்றிற்குப் பயணம் செய்தவராகத் தோன்றுகிறார். தாம் வாழ்ந்த அங்கநாட்டின் நில நடுக்கத்தை நிகழும் முன்னரே குறிப்பிடுகிறார். ஆதலின் சாத்தனர் இவர் காலத்தினை ஒட்டி வாழ்ந்திருத்தல் வேண்டும்.

**6. மகாவமிசம்:**

இலங்கை வரலாற்று நூலாகிய மகாவமிசம் கி. பி. 5-ஆம் நூற்றாண்டில் மகா நாமன் என்பவரால் உருவாக்கப் பட்டது. இந்நூலில் காணப்படும் கருத்துக்கள் மணிமேகலையில் வந்துள்ளன.

1. **மாமணிப்பீடிகை:** சுயம்புவாகத்தோன்றிய புத்தரின் பீடியினை நாக நாடாளும் அரசர் இருவர் (மகோதரன், குலோதரன்) பெயர்த்தெடுக்க முயன்று பெரும் போர் புரிந்தனர். அப்பொழுது புத்தரே நேரில் தோன்றி அமைதிப்படுத்திப் பீடிகையினைத் தமக்குரியதென உரைத்து அனைவரையும் பௌத்த தருமத்தினைப் பின்பற்றச் செய்தார் என்ற செய்தி மகாவமிசத்தில் காணப்படும். இச்செய்தியினைச் சாத்தனர் விரிவாக எடுத்து விளம்பியுள்ளார் (8: 43-63). மணிமேகலை கூறும் மணிபல்லவம் மகாவமிசம் கூறும் நாகத்தீபத்துடன் ஒப்பிடத்தக்கது.

2. புத்ததேரர் ஒருவருக்கு இழைத்த கொடுமை காரணமாக, பௌத்த தெய்வங்கள் சினந்து நாகத்தீவினை அழித்த செய்தி மகா வமிசத்தில் காணப்படும். நாக நாட்டின் அழிவினை மணிமேகலையும் குறிப்பிடும் (9:20-21).

3. வானில் பறத்தல் முதலிய அற்புதங்கள், பாதபங் கயமாலே, அட்சயபாத்திரம், முதலியன மகாவமிசத்திலும் மணிமேகலேயிலும் கூறப்பட்டுள்ளன.

4. விசயனின் படகுகள் நக்கத்தீவத்தில் (உடுக்காத நாகர்கள் வாழும் இடம்) சேர்ந்ததாக மகாவமிசம் உரைத் தது. மணிகேலேயில், சாதுவன் நக்கசாரணராகிய நாகர்கள் வாழும் தீவினே அடைந்த செய்தி ஒப்பிடத்தக் கது. மகாவமிசம் குறிப்பிடும் காந்தாரம், கபிலவஸ்து, கோசம்பி, அவந்தி, உச்சயினி, வாரணுசி, விந்தியம், புகார், காஞ்சி முதலிய பௌத்தத் தொடர்புடைய நகரங்களும் மணிமேகலேயில் கூறப்படுதல் காணலாம்.

### 7. தாந்திரிக பௌத்தம்

கி. பி. 5, 6-ஆம் நூற்ருண்டுகளில் தென்ஞட்டில் உரு வாகிய தாந்திரிக பௌத்தம் மாந்திரிகச் செயல்கள், அற் புதங்கள் முதலியவற்றை விரித்துரைக்கும். மணிமேகலே யிலும் இப்பௌத்தத்தின் சாயலேக் காண்கிருேம். மணி மேகலா தெய்வம், தீவதிலகை, வான்வழிப் பறக்கும் சாரணர்கள் முதலியோர் செயல்கள் குறிப்பிடத்தக்கவை. மந்திரம் கொடுத்த காதை என்ற தலேப்பில் சாத்தஞர் எழுதுவதற்கு இப்பௌத்தம் துணேபுரிந்திருக்க கூடும். மணிமேகலேயின் துறவு வாழ்க்கையில் குறுக்கிடும் தீஊ களேப் போக்கும் உபாயங்களாக மூன்று மந்திரங்களே மணி மேகலேக்கு மணிமேகலா தெய்வம் உரைத்தல் காணலாம். அவை 1. உருமாறிக் கொள்ளுதல்; 2. வான்வழிப் பறத்தல்; 3. பசி போக்குதல் என்பவனவாம். வஞ்சிமா நகரில் சமயக் கணக்கர் முன்னிலேயில் மணிமேகலே ஆண் உருவில் தான் சமய போதனே பெறுகிருள். தன் மகன் உதயகுமரன் மணிமேகலேயின் பொருட்டுக் கொல்லப் பட்டான் என்றறிந்த இராசமாதேவி அவளேப் பலவாறு பழிவாங்கச் சதி செய்கிருள். கயவனே அனுப்பிக் கற் பழிக்க முயன்றபோது மணிமேகலே ஆண் வடிவெடுத்தாள். கயவன் வெட்கி வெளியேறிஞன். அரசி சிறையில் பட்டினி போட்ட பொழுதும் மந்திரம் ஓதி மணிமேகலே பசி தணித்துக் கொண்டாள். வானப்பாதையில் சாவகம், மணிபல்லவம் வஞ்சி, காஞ்சி, முதலிய இடங்களுக்கு மணி

மேகலை பயணம் சென்ற செய்தியைக் காண்கிறோம். ஆதலின் தாந்திரிக பௌத்தத்தினைச் சாத்தனார் அறிந்தவர் எனலாம்.

## 8. காளிதாசன், காரைக்கால் அம்மையார், திருமூலர்

காளிதாசனின் காலங்குறித்து அறிஞரிடையே கருத்து வேறுபாடுகள் இருப்பினும் கி. பி. 5ஆம் நூற்றாண்டினர் என்ற கொள்கையினைப் பலர் கூறியுள்ளனர். காரைக் கால் அம்மையார், திருமூலர் இருவரும் மூவர்க்கும் முற் பட்டவர்கள். இவர்கள் பாடல்களில் சிவபிரானின் அட்ட மூர்த்தத்தினைச் சுட்டியுள்ளார். (27: 89-90). எனவே, இவர்கள் காலத்திற்குப் பிந்தியவராதல் கூடும். சைவ சமயக் கருத்துக்களை விரித்துரைக்கும் பழமையான தமிழ் ஆகமநூல் திருமந்திரமே. கி. பி. 5-ஆம் நூற்றாண்டிற்குப் பின்னர்தான் சைவம் முழு வடிவம் பெற்றது என அறிஞர்கள் கருதுகின்றனர். சாத்தனார் அட்டமூர்த்தத் துடன் இறைவனின் முத்தொழில், கலைவடிவம், ஒப்புமை யில்லாத தன்மை முதலிய பல இயல்புகளையும் உடைய வன் சிவபிரான் எனக் குறித்துள்ளார். காஞ்சியில் 19 மொழிகள் பேசும் மக்கள் இருந்தனர் என மணிமேகலை கூறுகிறது (28: 221). திருமந்திரம் 59-ஆம் பாடல் 'பண்டிதர் என்போர் பதினெட்டுப் பாடையும் கண்டவர் கூறும் கருத்தறிவார்' எனப் பகரும். இவ்விரு நூல் களுக்கு முற்பட்ட தமிழ் இலக்கியங்களில் 18 மொழிகள் பற்றிய குறிப்பு இல்லை.

## 9. மீமாம்சப் பிரமாணங்கள்

மீமாம்ச தத்துவத்தினை உருவாக்கிய சைமினி காட்சி, கருதல், ஆகமம் என மூன்று அளவைகளே மொழிந் துள்ளார். ஆயின், சாத்தனார் சைமினி மொழிந்த அளவைகள் 6 எனக் குறித்துள்ளார் (27: 78-84). முற் கூறிய மூன்றுடன் உபமானம், அருத்தாபத்தி, அபாவம் என்பனவும் சேர்த்து 6 அளவைகளைக் கூறியவர் குமாரிலப் பட்டரே ஆவார். இவர் கி. பி. 6-ஆம் நூற்றாண்டில் மீமாம்ச சூத்திரத்திற்கு உரை எழுதியவர். இவர்க்குச் சில நூற்றாண்டுகட்கு முற்பட்ட விருத்திகாரர் எனப்படும் உப

வருஷரும் (?) இவ் ஆறு அளவைகளைக் கொண்டுள்ளார் என்பர் பேரறிஞர் பி. வி. கானே. தத்துவங்களின் உரையாசிரியர் கருத்துக்களைத் தத்துவங்களை நிறுவியவர் கருத்தாகக் கூறும் பழக்கத்தவர் சாத்தனுர் என்பதற்குப் பல சான்றுகள் உள்ளன. வசுபந்துவின் கருத்தினைப் புத்தனின் கருத்து எனக் கூறியதை முன்பு கண்டோம்.

### 10. வைசேடிகம் — பிரமாணங்கள், பொருள்கள்

வைசேடிகத் தத்துவத்தினை உருவாக்கிய கணுதர், காட்சி, கருதல், என்ற இரண்டு அளவைகளையே இயம்பியுள்ளார். ஆயின், சாத்தனுர் இவற்றுடன் ஆகமம், உபமானம், அருத்தாபத்தியும் சேர்த்து, கணுதர் கூறிய அளவைகள் ஐந்தெனக் கூறியுள்ளார். வைசேடிக சூத்திரத்திற்குப் பதார்த்த தரும சங்கிரகம் என்னும் பேருரை வகுத்த பிரசஸ்தபாதர் கி. பி. 5-ஆம் நூற்றுண்டினர் ஆவார். இவர்தான் முதன் முதல் ஐந்து பிரமாணங்களைக் கூறிய வைசேடிகர் ஆவார். இவர் உரையினைச் சாத்தனுர் பயின்றவர் என்பதற்கு மேலும் ஓர் ஆதாரம் மணிமேகலையில் உண்டு. கணுதர் திரவியம், குணம், கர்மம் என்ற மூன்று பதார்த்தங்களே மொழிந்துள்ளார். ஆயின், சாத்தனுர் வகுத்துரைக்கும் வைசேஷிகத் தத்துவத்தில் இம் மூன்றுடன் சாமானியம், விசேடம், கட்டம் என்பனவும், சேர்த்து ஆறு பதார்த்தங்கள் கூறப்பட்டுள்ளன (27:241-262). இவ் ஆறும் பிரசஸ்தபாதரின் பதார்த்த தரும சங்கிரகத்தில்தான் முதன் முதல் காணப்படுகிறது. ஆதலின் சாத்தனுர் இவர் காலத்திற்கு முற்பட்டவர் என மொழிதல் ஆய்வு நெறிக்கு அப்பாற்பட்டது.

### 11. பரமார்த்தரின் சாங்கியக் காரிகை உரை

கி. பி. 450-550 இல் வாழ்ந்த பரமார்த்தர் என்னும் பௌத்தப் பெரியார் காஞ்சியைச் சேர்ந்தவர். இவர் சீனத்திற்கும் சென்று பௌத்தம் பரப்பிய சான்ருேர். சாங்கிய காரிகைக்குப் பௌத்தத்தின் சார்பில் விரிவுரை கண்டவர். சாத்தனுர் கூறும் பல கருத்துக்கள் இவர் உரையுடன் ஒத்திருத்தல் நோக்கத்தக்கது.

## 12. பாஹியான் பயணக் குறிப்பு

கி. பி. 5-ஆம் நூற்ருண்டின் முற்பகுதியில் தென்னுட்டிற்குப் போந்த பாஹியான் எழுதிய பயணக் குறிப்பில் காணப்படும் கருத்துக்களில் சிலவும் மணிமேகலேயில் காணப்படுவனவும் ஒத்துள்ளன.

1. அட்சய பாத்திரத்தினை இருவருமே குறிப்பிடுகின்றனர்.

2. இலங்கையில் சமந்த மலேயின் உச்சியில் புத்தனின் பாத பங்கயம் திகழ்ந்ததை பாஹியான் குறித்துள்ளான். சாத்தனுரும் இதனைக் குறிப்பிடுகிருர்.

3. இலங்கை மிகப் பழங்காலத்தில் மக்கள் நடமாட்டம் இன்றி நாகர்கள் ஆவிகள் வாழும் இடம் என்றும் பலநாட்டு வணிகப் பெருமக்கள் அங்கு வருதல் பழக்கம் என்றும் பாஹியான் குறிப்பிடுகிருன். இலங்கையில் ஒரு பகுதியாகிய மணிபல்லவம் மக்கள் நடமாட்டம் இல்லாத இடம் என்பதைச் சாத்தனுரும் சாற்றுகிருர் (14 : 80-86). இப் பகுதியில் வாழ்ந்த நாகர்களேப் பற்றியும், கிழக்குத் தீவுகளுக்குச் செல்லும் படகுகள் இத்தீவில் தங்குவதையும் சாத்தனுர் குறிப்பிட்டுள்ளார்.

4. சுமத்திரா, ஜாவா நாடுகளுக்குப் பயணம் சென்ற பாஹியான் அங்கு பௌத்தம் அப்போதுதான் நுழைந்தது என இயம்பியுள்ளான். சாத்தனுர் காட்டும் சாவகத்திலும் கிழக்குத் தீவுகளிலும் பௌத்தம் பரவத் துவங்கும் முதல் படியினைப் பார்க்கிரேம்.

இருவர் கருத்துக்களும் ஒத்திருத்தல் இவர்கள் சம காலத்தவர் அல்லது சற்று முன்னே பின்னே வாழ்ந்தவர்கள் என்பதைக் காட்டும்.

## 13. கூர்ச்சர வினைஞர்

புகார் நகரில் சம்பாபதி என்ற பௌத்த தெய்வத்திற்கு கூர்ச்சர தேசத்து வினைஞரின் வேலேப்பாடமைந்த கோயில் திகழ்ந்ததைச் சாத்தனுர் குறிப்பிடுகிருர் (18:145).

பெருங்கதையிலும் அவர்கள் கலைத்திறமை கூறப்பட்டது. கே. எம். முன்ஷி அவர்கள்,

"Tee Gurjaras were always coupled with the Hunas. They migrated to all parts of India in 450 A. D. Among them were Gurjara Brahmanas, Gurjara Masans etc...............another reference to 'Kuccara-k-kutikai' a temple of Gurjara workmanship referred to in a Tamil Poem Manimekalai composed in the 6th century A.D.

— Vide The Glory that was Gurjaradesa, Part III, p. 4, 5, 8.

### மணிமேகலை கி. பி. 700-800-இல் எழுதப்பட்ட காவியமா ?

மணிமேகலையின் காலம் கி. பி. 7, 8-ஆம் நூற்றாண்டு என்பர் சிலர். இக்கருத்து பொருந்துமா? என்பதை இவண் ஆராய்வோம்.

#### 1. மும்மூர்த்தி வழிபாடு

கி. பி. 7, 8-ஆம் நூற்றாண்டுகளில் சிவபிரானும் திருமாலுமே பெருங்கடவுளர்களாகப் போற்றப்பட்டனர். இக்காலத்தில் பிரமனுக்கு முக்கியத்துவம் நல்கப் பெறவில்லை. ஆனால் மணிமேகலையில் சிவன், திருமால், பிரமன் ஆகிய மும்மூர்த்திகளை வணங்கும் மக்கள் வாழ்ந்தனர் என்பது சமயக் கணக்கர்தம் திறம் கேட்ட காதையால் அறியப்படும் (27 : 86-99). கி. பி. 6-ஆம் நூற்றாண்டின் இறுதியிலும் 7-ஆம் நூற்றாண்டின் ஆதியிலும் காஞ்சியில் ஆண்ட முதலாம் மகேந்திரன் மும்மூர்த்திக்குக் கோயில் அமைத்திருக்கிறான். கி. பி. 5-ஆம் நூற்றாண்டினராகிய பூதஞ்சேந்தனாரும், காளிதாசரும் மும்மூர்த்தியைக் குறித்துள்ளனர். ஆதலின் சாத்தனார் இவர்கள் காலத்தை ஒட்டி வாழ்ந்தவராதல் வேண்டும்.

#### 2. யுவான்சுவாங் பயணக் குறிப்பு

கி. பி. 7-ஆம் நூற்றாண்டில் தென்னிந்தியாவினைப் பார்வையிட்ட யுவான்சுவாங் பௌத்த சமயமும் பௌத்த பள்ளிகளும் சீர்கெட்டு அழிவதைக் குறிப்பிட்டுள்ளார். மணிமேகலையின் காலத்தில் பௌத்த சமயம் தமிழகத்தின் தலைநகர்களிலும் இலங்கையிலும் முழுமையாய்ப் பரவி

யதை அறிகிறோம். புகார் நகர அரசனும் அரசியும் மணி மேகலையின் அற்புதங்களை வியந்து சிறைக்கூடங்களை அறச் சாலைகளாக மாற்றிய செய்தியை நினைத்தல் வேண்டும். காஞ்சி மன்னன் புத்தனுக்குக் கோயிலும், சோலையும் பொய்கையும் அமைத்துப் பிட்சுக்களையும் ஆதரித்தான். கிழக்கிந்தியத் தீவுகளிலும் பௌத்தம் பரவத் தொடங்கி யதைச் சாத்தனர் குறிப்பிட்டுள்ளார். ஆதலின் சாத்தனர் பௌத்த சமயம் அழிவடைந்து கி. பி. 7, 8-ஆம் நூற்றாண் டில் வாழ்ந்தார் எனக் கருதுவது பொருந்தாது.

### 3. சைவ வைணவத்தின் சிறப்புக் காலம்

கி. பி. 7, 8-ஆம் நூற்றாண்டுகள் சைவ சமயத்தின் சிறப்புக் காலமாகும். நாயன்மார்களும் ஆழ்வார்களும் பௌத்த, சமண மதங்களை ஒழிப்பதற்கு ஊர் ஊராகச் சென்று பக்தி இயக்கத்தைப் பரப்பினர். தேவாரம், திரு வாசகம், திவ்வியப் பிரபந்தம் ஆகிய நூல்களில் பௌத் தத்தைவிட சமணம் பற்றிய குறிப்புக்கள் சற்றுக் கூடுத லாகவே காணப்படும். போதிமங்கையில் சாரிபுத்தன் தலைமையில் வந்த பௌத்தர்களை வென்று சைவராக்கிய சம்பந்தர் சிறப்பினை நம்பியாண்டார் நம்பியும் சேக் கிழாரும் விரித்து உரைப்பர். பதிகத்தின் பத்தாம் பாடலில் சமண பௌத்தங்களைத் திட்டமிட்டுக் கண்டித்தல் சம்பந்த ரின் இயல்பாகும்.

மாணிக்கவாசகர் இலங்கை மன்னனுடன் வந்த பௌத்தர்களைத் தில்லையில் வாதில் வென்று ஊமைகள் ஆக்கிய செய்தியும், இலங்கை வேந்தனின் ஊமை மகளை உரையாட வைத்த அற்புத நிகழ்ச்சியும், தோற்ற பௌத் தர்களைச் சைவராக்கிய தொண்டும் பிற்கால நூல்களில் கூறப்பட்டுள்ளன. சாக்கிய நாயனர் வரலாறும் பௌத் தத்திலிருந்து சைவம் நோக்கி மக்கள் திரும்பிய நிலைமைக் குச் சான்று பகரும்.

கி. பி. 8-ஆம் நூற்றாண்டினராகிய மங்கைமன்னன் நாகையில் பௌத்தவிகாரையில் விளங்கிய புத்தரின் பொற்சிலையைக் களவாடி திருவரங்கப்பெருமானின் கோயில் பணியை நிறைவேற்றிய செய்தியைக் குருபரம்

பரை கூறும். தொண்டரடிப் பொடியாழ்வார் திருமாலின் குறிப்பு கிட்டுமேல் சமண பௌத்தர்களின் சிரங்களையும் கொய்யத் தயார் எனக் கொக்கரித்துப் பாடியுள்ளார். கி. பி. 700-1000 இக்காலப் பகுதியில் பௌத்தம் பற்றிய கல்வெட்டுச் சான்றுகள் மிக மிக அருகிலேயே கிடைத்துள்ளன. ஆதலின், பௌத்தம் மிகவும் சோதனையும் வேதனையும் அடைந்த கி. பி. 700-800 இல் மணிமேகலை தோன்றியிருத்தல் இயலாது.

### 4. சாவகம், கிழக்கிந்தியத் தீவுகளில் பௌத்தம்

மணிமேகலை, ஆபுத்திரன், சாதுவன் முதலியோர் பயணம் சென்ற தீவுகளைக் கிழக்கிந்தியத் தீவுகளாகக் கருதலாம். சாத்தனர் குறிப்பிடும் சாவகம் ஜாவா ஆகும். இந்நாட்டிற்கு கி.பி. 7-ஆம் நூற்றாண்டில் வந்த இட்சிங் என்ற சீனப் பயணி பௌத்தத் துறவிகள் ஆயிரத்திற்கு மேல் கண்டதாகக் கூறுகிறார். கிழக்கிந்தியத் தீவுகளில் கி.பி. 7, 8ஆம் நூற்றாண்டுகளில்தான் பௌத்தம் எங்கும் பரவியது. இக்காலத்தைச் சேர்ந்த புத்தர் சிலைகள் பல கிடைத்துள்ளன. ஜாவாவிலும் கி. பி. 500க்குப் பிற்பட்ட புத்தர் சிலைகளே கிடைத்துள்ளன. மணிமேகலை காட்டும் சாவகத்தில் புத்த சமயம் முழுதும் பரவவில்லை. மணிமேகலையின் முயற்சியில் சாவக மன்னன் புண்ணியராசன் பௌத்தத்தினைப் பல்வேறு தீவுகளிலும் பரப்பும் பணியினை மேற்கொள்கிறான். மன்னர்களால் மட்டுமின்றிக் கடலில் பயணம் செல்லும் வாணிகக் குழுவாலும் பௌத்தம் கிழக்குத் தீவுகளில் பரவியது என்று பேராசிரியர் பிரியன் ஹாரிசான் கூறியுள்ளார். மணிமேகலையிலும் இக்கருத்திற்குச் சான்று காணப்படுகிறது. சாதுவன் கடல் வாணிகருடன் கிழக்குத் தீவுகளுக்குப் பயணமிட்டான். கலம் உடைந்ததும் நாகர் வாழும் தீவினை அடைகிறான். புலாலும் கள்ளும் மங்கையுமே பேரின்பம் என எண்ணிய நாகர் தலைவனுக்கும் குடிமக்களுக்கும் கள்ளுண்ணாமை அகிம்சை, வினைக் கொள்கை முதலிய பௌத்த அறக் கருத்துக்களைப் போதனை செய்கிறான் (16 : 84—116). எனவே கிழக்குத் தீவுகளில் பௌத்தம் பரவத் துவங்கிய தொடக்க காலத்தினை மணிமேகலை காட்டுகிறதேயன்றி

அங்கு பௌத்தம் தழைத்திருந்த கி. பி. 7, 8ஆம் நூற்றூண்டைய நிலையினை உணர்த்தவில்லை எனலாம்.

### 5. தருமகீர்த்தியின் பௌத்த தருக்கம்

கி. பி. 7ஆம் நூற்றூண்டில் வாழ்ந்த தருக்க மேதை தருமகீர்த்தி என்பவர் திக்நாகரின் மாணவர் ஈசுவரசேனர்; இவர் மாணவர் தருமகீர்த்தி: இவர் திக்நாகரிடமும் பயின்றவர். பிரமாண சமுச்சய வார்த்திகம் என்ற உரையும் நியாயபிந்து என்ற தருக்க நூலும் எழுதிய பேரறிஞர், காஞ்சிபுரத்துத் தமிழர். இவர் நூல்களில் திக்நாகருக்குப்பின் பௌத்த தருக்கத்தில் விளைந்த வளர்ச்சிகளைக் காணலாம். முன்னோர் மொழி பொருளைப் பொன்னே போல் போற்றும் இயல்பை, புதுவன கண்டுரைக்கும் புரட்சியுள்ளமே இவரிடம் மேலோங்கி நிற்கிறது. திக்நாகர் (—சங்கரசுவாமி?), சாத்தனூர் முதலியோர் கூறும் பௌத்தத் தருக்கக் கருத்துக்களையும் தருமகீர்த்தி கூறுவனவற்றையும் ஒப்பிட்டு நோக்கின் சில வேறுபாடுகள் தோன்றுகின்றன :

1. பக்கம், ஏது, எடுத்துக்காட்டு என்ற மூன்று உறுப்புக்களையே திக்நாகரும் சாத்தனூரும் கொண்டனர். ஆனுல் தருமகீர்த்தி எடுத்துக்காட்டு ஏதுவில் அடங்குதலின் எடுத்த மொழியாகிய பக்க தன்ம வசனமும் ஏதுவும் ஆகிய இரண்டு உறுப்புக்களே சாலும் எனக் கொண்டார். இவர் காலத்தவரான சம்பந்தரும் பௌத்தர்களைத், "தர்க்க சாத்திரத்தவர்" எனக் கூறி இவர்கள் இரண்டுறுப்புடைய அளவை வாதிகள் என்பதை "ஏதுக்காளலும் எடுத்த மொழியாலும் மிக்குச் சோதிக்க வேண்டா" என வரும் பகுதியில் உய்த்துணரவைத்தார்.

2. ஆதிசங்கரர் பிரத்தியட்சப் பிரமாணத்தின் இலக்கணமாக நிர்விகல்பம், அப்ராந்தம் என்ற இரண்டு இயல்புகளைக் கூறியுள்ளார். ஆனுல் திக்நாகரும் சாத்தனூரும் நிர்விகல்பமாகிய சுட்டுணர்வினையே பிரத்யட்சப் பிரமாணத்தின் இயல்பாக எடுத்துரைத்தனர். தருமகீர்த்தியோ இருவரினும் வேறுபட்டு அப்பிராந்தமும் அதன் இலக்கணமாகும் என இயம்பினூர்.

3. தருமகீர்த்தி பிரத்தியட்சத்தினை சுவலட்சணம் சாமானிய லட்சணம் என இருவகையாகப் பகுத்துரைப்பர். இக்கருத்து சாத்தனூர் கூறும் பௌத்தத் தருக்கத்தில் இல்லை.

4. அனுமானப் பிரமாணத்தை சுவார்த்தானுமானம், பரார்த்தானுமானம் எனப் பாகுபாடு செய்தல் மணிமேகலையில் குறிப்பாகத்தான் புலப்படுத்தப்பட்டது (29: 470). எனின், தருமகீர்த்தியின் நியாயபிந்துவில் வெளிப்படையாக விளக்கப்பட்டது,

5. திக்நாகரும் சாத்தனூரும் குறிப்பிடும் விருத்தவிய பிசாரி என்னும் ஏதுப்போலி அனுமானத்தும் ஆகமத்தும் கூடத் தோன்றுதெனக் கூறித் தருமகீர்த்தி மறுத்துரைத்தார்.

6. இருவரும் கூறிய ஆகம விருத்தத்தினைத் தனியே எண்ணுமல் அனுமான விருத்தத்துள் அடக்கிக் கொண்டார் நியாயபிந்துவின் ஆசிரியர்.

7. திக்நாகரும் (நியாயப்பிரவேச ஆசிரியர்?) சாத்தனூரும் பக்கப்போலிகள் ஒன்பது என விளக்கினர். ஆயின் தருமகீர்த்தி பிரத்தியட்ச விருத்தம், அனுமான விருத்தம், உலக விருத்தம், சுவவசன விருத்தம் என்ற நான்கே கூறினர்.

8. சாத்தனூரும் திக்நாகரும் ஏதுப்போலி பதினன்கு என்றனர். ஆயின் தருமகீர்த்தி எட்டு ஏதுப்போலிகள் இயம்பினர்.

9. திக்நாகரும் சாத்தனூரும் சாதன்மியத் திட்டாந்தப் போலி 5, வைதன்மியத் திட்டாந்தப்போலி 5, என வகுத்துரைத்தனர். எனின், இவற்றை முறையே ஒன்பது ஒன்பதாகப் பெருக்கிக் கொண்டார் தருமகீர்த்தி.

10. பௌத்த தருக்கத்தின் தொடக்க காலத்தில் பிரதிக்ஞை என்ற நையாயிகக் குறியீடுதான் வழங்கப்பட்டது. அச்சொல்லினை அகற்றிப் பக்கம் (பக்ஷம்) என்ற தருக்கக் குறியீட்டினை முதன் முதல் வழங்கியவர்

திக்நாகரே என்றார் ஷேர்பட்ஸ்கி. சாத்தனார் எல்லா விடங்களிலும் பக்கம் என்ற பௌத்தக் குறியீட்டினையே வழங்கியுள்ளார். ஆனால் தருமகீர்த்தியோ பிரதிக்ஞை, பக்கம் இரண்டினையும் ஆண்டுள்ளார்.

இதுகாறும் இயம்பியவாற்றால் தருமகீர்த்தியின் காலத்திற்குச் சாத்தனார் முந்தியவர் என முடிவு செய்யலாம்.

## 6. களவியல் உரை

இறையனார் களவியலுரை கி. பி. 7, 8ஆம் நூற்றாண்டு களில் இறுதி வடிவம் எய்தியது. இவ்வுரையில் மணி மேகலையின் கருத்துக்கள், தொடர்கள் காணப்படுகின்றன. சில இடங்களில் மணிமேகலை அடிகளை உரைநடைப் படுத்தி யுள்ளார். சில சான்றுகளை இவண் காண்போம்.

1. பாண்டிய நாட்டில் பன்னிரண்டாண்டு பஞ்சம் ஏற்பட்ட செய்தியைச் சங்க இலக்கியத்தில் காண முடியாது. மணிமேகலையில்,

> "பன்னீராண்டு பாண்டி நன்னாடு
> மன்னுயிர் மடிய மழைவளம் இழந்தது" (14 : 55-6)

> "அக்காலத்துப் பாண்டிய நாடு பன்னீரியாண்டு
> வற்கடம் சென்றது" (இறையனார் களவியலுரை)

2. யாக்கையின் இழிதகவினைச் சாத்தனார் கூறி யுள்ள பகுதியும் களவியலுரை வழிமொழியும் இடமும் ஒப்பிடத்தக்கவை :

> "மூப்புவிளி யுடையது தீப்பிணி இருக்கை
> அவலக் கவலை கையா றழுங்கல்" (4 : 115-8)

> "அதுதான் பிறப்புப்பிணி மூப்புச் சாக்காட்டு அவலக்கவலைக்
> கையாற்றின் நீங்கி" (இறையனார் களவியலுரை)

இத்தொடர் மணிமேகலையில்,

> "பிணி மூப்பு, சாக்காடு அவலம் அரற்றுக் கவலை, கையாறு
> என்று இக்கடையில் துன்பம்" (30 : 130-132)

எனவரும் அடிகளை உரைநடைப் படுத்தியதாய்த் தோன்று கிறது.

“ மிக்கோய் இதனைப் புறமறிப் பாராய் ” (4 : 121)

“ பைம்மறியாப் பார்க்கப் பருந்தார்க்கும் தன்மைத்து ”
(களவியலுரை)

ஆதலின் களவியலுரையின் காலத்திற்கு மணிமேகலை முற்பட்டது என மொழியலாம்,

### 7. வராகமிகிரரின் வான நூல் கருத்து

வராகமிகிரர் கி. பி. 6ஆம் நூற்றாண்டினர் என்பர் பேராசிரியர் ஏ. பி. கீத். பஞ்சசித்தாந்திகை பிருகதீசம்கிதை, பிருகத்சாதகம் முதலிய பல நூல்களின் ஆசிரியர். பல புதிய வான நூல் கருத்துக்களை வெளியிட்டவர். இவர் காலத்தில்தான் அசுவதியை முதல்நட்சத்திரமாகஎண்ணும் வழக்கம் முதன் முதல் ஏற்பட்டது. ஆனால், சாத்தனார் கார்த்திகையினை முதல் நட்சத்திரமாக எண்ணியுள்ளார். “ ஒருபதின் மேலும் ஒருமூன்று சென்றபின் மீனத்து இடைநிலை மீனத்து அகவையின் போதித் தலைவன் ” என வரும் பகுதியால் வைகாசித்திங்கள் விசாக நாளில் புத்தர் தோன்றிய செய்தியும், மெய்ஞ்ஞானம் பெற்ற செய்தியும் உணரப்படும். கார்த்திகையினை முதல் நாளாகக் கொண்டு எண்ணினால் தான் விசாகம் இடைநிலை நட்சத்திரமாக வரும். வராகமிகிரருக்கு முற்பட்ட வான நூல் அறிஞர்கள் கார்த்திகையினையே முதல் நட்சத்திரமாகக் கணித்துள்ளனர் என்பதற்கு கிருஷ்ண யஜுர்வேத பிராமணமும் சான்றாகும் என்பர். ஆனால் பௌத்தர்களின் பழைய மரபு கார்த்திகையினை முதல் நாளாக எண்ணுவதே என்பதை மக்கவர்ன் என்ற பௌத்தப் பேரறிஞர் எடுத்தியம்பியுள்ளார். ஆதலின் அசுவதியை முதலாகக் கொண்டு கணித்த வராகமிகரர் காலத்திற்கு முற்பட்டவர் கார்த்திகையினை முதலாகக் கொண்டு கணித்த சாத்தனார் எனக் கருதலாம்.

### 8. யோகதரிசனமும் உத்திரமீமாம்சமும் விளக்கப் படாமை

சாத்தனார் காலத்தில் வைதிக தரிசனங்கள் ஆறினில் நையாயிகம், வைசேடிகம், சாங்கியம், சைமினியின் பூர்வ

மீமாம்சம் என்ற நான்குமே சிறப்பாகப் பயிலப்பெற்றன. கி.பி. 5ஆம் நூற்றாண்டினராகிய திக்நாகரின் பிரமாண சமுச்சயத்திலும் இந்நான்குமே கூறப்பட்டன என்பதை முன்னரும் கூறியுள்ளோம். இவர் சமகாலத்தவரான ஹரிபத்திரர் என்னும் சமணச் சான்றோரும் இந்நான்கு தரிசனங்களையே குறிப்பிட்டுள்ளார். ஆதலின் மணிமேகலையின் காலமும் திக்நாகர், ஹரிபத்திரர் காலமும் மிகவும் அணுகியது என உய்த்துணரலாம்.

**9. கணபங்கவாதம்**

பேராசிரியர் தாஸ்குப்தா கணபங்க பாதம் கி.பி. 700-1000இல் பௌத்தப் பேரறிஞர்களின் முழு கவனத்தையும் பெற்றது என்பர். ஆனால், மணிமேகலையில் பௌத்த தருக்கம் உரைக்கப்பெறும் பகுதியில் கணபங்கபாதம் தெளிவாக மொழியப்பெறவில்லை. எனவே, இக்காலப் பகுதிக்கும் மணிமேகலை முற்பட்டது என முடிவு செய்யலாம்.

இதுகாறும் எழுதியவாற்றால் மணிமேகலையின் காலம் கி. பி. 5ஆம் நூற்றாண்டின் இறுதியும் கி. பி. 6ஆம் நூற்றாண்டின் முற்பகுதியும் ஆகும் என முடிவுசெய்தல் முற்றிலும் பொருந்தும் எனத்தோன்றுகிறது. கி. பி. 7ஆம் நூற்றாண்டு முதல் எழுந்த காப்பியங்கள் எல்லாம் விருத்த யாப்பில் பாடப்பெற்றிருந்தலும் இக்காலத்திற்கு முன் எழுந்த சிலப்பதிகாரம், பெருங்கதை, மணிமேகலை முதலியன பழமை வாய்ந்த அகவல் யாப்பினை ஆண்டிருத்தலும் அறியத்தக்கன.

புகாரில் பிறந்த மணிமேகலை காஞ்சிமாநகரில் அறவண அடிகளிடம் பௌத்த உபதேசம் பெறுவதாகக் காப்பியத்தினை அமைத்துள்ளார். அவர் காட்டும் காஞ்சியில் புத்தர் கோயில் பிட்சுக்களின் ஆராமம் முதலியன விளங்கின. 18 மொழிகள் பேசும் மக்கள் காஞ்சியில் வாழ்ந்தனர். மணிமேகலையைப் போன்ற பல மாணவர்கள் அறவணரைப் போன்ற பல ஆசிரியர்களிடத்தில் பௌத்தக் கல்வி பெற்றிருத்தல் வேண்டும். வடக்கே சாஞ்சி போல, தெற்கே காஞ்சி பௌத்தப் பல்கலைக் கழக

மாய்த் திகழ்ந்தது. மதுரை மாநகர் தமிழ்க் கல்விக்குத் தலைநகராய்த் திகழ்ந்ததுபோல, காஞ்சி பல கலைக் கல்விக்கும் பௌத்த சமயச் சிறப்புக் கல்விக்கும் ஏற்ற இடமாய் இலங்கியது. இந்நகரில் கிடைத்துள்ள புத்தர் சிலைகள் பௌத்தம் தழைத்தமைக்குத் தக்க சான்றாகும். காஞ்சியில் வாழ்ந்த திக்நாகர், தருமபாலர் போன்ற அறிஞர் பெருமக்களுடன் சாத்தனார்க்குத் தொடர்பு வாய்த்திருத்தல் கூடும்.

**சாத்தனாரின் மாபெரும் குறிக்கோள் :**

பல சமயத் தத்துவங்கள், பல கலைகள், கற்பனை வளம், தமிழ், பாலி, வடமொழி, பாகதம் முதலிய பன்மொழிப் பெரும்புலமை, மிடுக்கான தமிழ் நடை அனைத்தும் ஒருங்கே அமைந்த சாத்தனார்க்கு ஒப்பாக ஒரு புலவரைக் காண்டலரிது. அவர் வாழ்ந்த காலம் சமய, தத்துவச் சிந்தனை வாதிகள் மிகுந்திருந்த அறிவு வளர்ச்சிக் காலமாகும். விழாக் காலத்தின் இன்றியமையா நிகழ்ச்சியாக,

"ஒட்டிய சமயத் துறுபொருள் வாதிகள்
பட்டி மண்டபத்துப் பாங்கறிந்து ஏறுமின்" (1 : 60-61)

எனக் குறித்தல் காண்க. நூலின் துவக்கத்தில் ஒலிக்கும் இக் குறிப்பின் விரிவாக நூலின் முடிவுப் பகுதிக்குமுன் சமயக்கணக்கர்தம் திறம்கேட்ட காதையினைப் பரபக்கமாக அமைத்துள்ளார். பௌத்தமே தலையாய நெறி என்பதை நிறுவும் நிலையில் இறுதி இரண்டு காதைகளிலும் பௌத்தத் தருக்கமும் தத்துவமும் திட்ப நுட்பம் செறிய யாத்துள்ளார். அவர் உருவாக்கிய கலைச் சொல்லாக்கங்கள் உளவியல், தத்துவ தருக்க இயல்கள் பற்றிய நூல்களை மொழிபெயர்ப்பவர்க்கு உற்ற துணை புரியும்.

புறச் சமயங்களை உடன்படாவிடினும் உலக உயிரினங்கள் அனைத்தையும் ஒப்ப நோக்கும் அருள் உள்ளம் அவரிடம் பொலியக் காண்கிறோம். வேள்வியில் பலியிட இருந்த பசுவைக் காத்த ஆபுத்திரனின் பிறப்பினை வைதிகர்கள் இழித்துரைத்த பொழுதும் வேத முனிகளின் பிறப்பினை மேற்கோள் காட்டிப் பிறப்பொக்கும் எனச் சமத்துவம் பேசும் பேருள்ளத்தினைச் சாத்தனார் உருவாக்கியுள்

ளார். இளமையைத் துறக்காத இளமையிலே துறவு பூண்டு சீலம் காத்து மன்பதைக்குப் பணியாற்றிய மாண்பினைக் காப்பியம் காட்டுகிறது, மணிமேகலைக்கு ஒப்பாக ஒரு தியாகப் பாத்திரத்தினைச் சாத்தனாரின் சமகால உலகப் புலவர்கள் யாராவது உருவாக்கியது உண்டா?

வெறும் தத்துவச் சிந்தனைகள் மனிதனின் தேவைகளை நேரடியாக நிரப்பிவிட முடியாது. நிலையாமையினை இடித்துரைத்து மன்பதைக்கு அறம் புரிய வேண்டும் என்னும் சீரிய கருத்தினை,

> " தவத்துறை மாக்கள் மிகப்பெருஞ் செல்வர்
> ஈற்றிளம் பெண்டிர் ஆற்றுப் பாலகர்
> முதியோர் என்னுன் இளையோர் என்னுன்
> கொடுந் தொழிலாளன் கொன்றனன் குவிப்பவிவ்
> அழல்வாய்ச் சுடலை தின்னக் கண்டும்
> கழிபெருஞ் செல்வக் கள்ளாட் டயர்ந்து
> மிக்க நல்லறம் விரும்பாது வாழும்
> மக்களிற் சிறந்த மடவோர் உண்டோ " (6 : 97-104)

எனவரும் பகுதியில் எடுத்துரைத்தார். சுத்தபிடகத்தின் குட்டகநிகாயத்தின் குட்டகபாகத்தில் வினுவிடையாக வரும் பகுதி குறிப்பிடத்தக்கது:

> " What is meant by one ?-All beings live on food "
>
> —Vide, History of Pali Literature, Vol. I. p. 195.

இக் கருத்தினையே இன்னும் ஆற்றல் மிக்க சொற்களால் " உண்டிமுதற்றே உணவின் பிண்டம் " எனப் புறநானூறும், " மக்கள் யாக்கை உணவின் பிண்டம் " என மணிமேகலையும் மொழியும் சிறுகுடிகிழான் பண்ணனைப் பாராட்டும் சோழன் பசிப்பிணி மருத்துவன் " என்றாற் போல் சாத்தனார் மணிமேகலையை " ஆருயிர் மருத்துவி " *(17 : 15)* எனப் போற்றினர். அறவண அடிகள் " மக்கள், தேவர், என இருசாரார்க்கும் ஒத்த முடிவின் ஓர் அறம் உரைக்கேன், பசிப்பிணி தீர்த்தல் என்றே " *(12 : 116-118)* என இயம்புதல் காண்க. பாலி, வடமொழி, சிங்களம் முதலிய பௌத்த மொழி நூல்களில் காணப்பெருத விழுமிய கருத்தொன்றினைச் சாத்தனர் விளம்புகின்ருர் :—

"அறமெனப் படுவது யாதென வினவின்
மறவா திதுகேள் மன்னுயிர்க்கெல்லாம்
உண்டியும் உடையும் உறையுளும் அல்லது
கண்டது இல்லென" (25 : 228-231)

சாவக நாட்டு மன்னனுக்கு அறச்செல்வி மணிமேகலை அறிவுறுத்திய இவ்வறக்கருத்தினை உலகப் பெரு நூல்களில் காண்பது அரிது. அமுதசுரபியினைப் படைத்த சாத்தனுர் ஆடை சுரபி உறையுள் சுரபிகளையும் கற்பனை செய்திருப்பார். சமுதாய சமதர்மம் செழிக்கப் பாடுபடும் உலகெங்கிலும் உள்ள அரசியல் தலைவர்களுக்குத் தமிழ்ப் பெருங்காப்பியம் வழங்கும் செய்தி வழிகாட்டியாய் அமையட்டும்!

## 2. பிம்பிசாரக் கதை

வடமொழியில் இடைக்காலத்தில் எழுந்த சாகுந்தலம், இரகுவமிசம், குமார சம்பவம், நைடதம் முதலிய காவியங்களுக்கு மகாபாரதம் இராமாயணம் ஆகிய இதிகாசங்களில் வரும் கதைக்குறிப்புக்கள் காரணமாய் அமைந்தன. அங்ஙனமே தமிழில் பிம்பிசாரக்கதை குண்டலகேசி முதலிய பௌத்தக் காப்பியங்களின் மூலப்பொருள்கள் பிடகங்கள், அவற்றின் உரைகள், பிற பௌத்த நூல்களில் காணப்படுகின்றன. பெருங்கதை, உதயணன் கதை போல் பிம்பிசாரக்கதை என்பதும் காவியப் பெயராய் அமைந்தது. இக்காப்பியத்தின் நான்கடிகள் சமயதிவாகரர் உரையிலும் ஞானப்பிரகாசர் உரையிலும் காணப்படும். நீலகேசி உரையாசிரியர் "இவன் பிறக்கின்ற காலத்து மாதாவினது வலமருங்குலால் பிறந்தான்; அவளும் ஆறுநாள் குற்றுயிரோடு கிடந்து ஏழாம் நாள் இறந்தாள். இது புத்தமாதாக்கள் யாவர்க்கும் ஒக்கும். என்னை?

'உலும்பினி வனத்துள் ஒண்குழைத்தேவி
வலம்படு மருங்குல் வடுநோ யுருமல்
ஆன்றோன் அவ்வழித் தோன்றினன் ஆதலின்
ஈன்றோள் ஏழாநாள் இன்னுயிர் வைத்தாள்'

என்றது பிம்பிசாரக்கதை என்னும் காவியம்; பௌத்தருடையது; அதன் கட் கண்டுகொள்க (நீல. பக். 71)"

என இயம்புதல் காண்க. இப்பகுதியினையே ஞானப் பிரகாசர், தத்துவப்பிரகாசர் இருவரும் சிவஞான சித்தியார் பரபக்கத்தில் சௌத்திராந்திக பௌத்தரின் கருத்தினை விளக்கும் பகுதியில் மேற்கோள் காட்டினர். மேற்கண்ட பிம்பிசாரக் கதைப்பகுதி லலிதவிஸ்தாரம் என்ற மகாயான நூலில் கீழ்வருமாறு காணப்படும்:

"Queen Maya bears the bodhisattva for ten months. This general law applies to all bodhisattvas....When the time comes for her to be delivered, she goes to the Lumbini grove with her companions....*The bodhisattva is then born from her right side which remains uninjured,* as his body is mind-made"

Vide 1. Bodhisattva Doctrine P. 298

2. Literary history of Sanskrit budhism p. 21

"......Such a bodhisattva's mother dies *seven days after his birth* ......vide Bodhisattva Doctrine p. 298.

பிம்பிசாரக் கதையில் "வடுநோய் ஆருமல்" என நீலகேசி உரையில் காணப்படும் பாடம் பிழையானது; சித்தியார் உரையில் "வடுநோய் உருமல்" எனக் காணப் படும் பாடமே தக்கது என்பதை மேற்காட்டிய லலிதவிஸ் தாரத்தின் ஆங்கில மொழிபெயர்ப்புப் பகுதியினை உற்று நோக்கியுணரலாம்.

மகாயான பௌத்தர்க்குரிய லலிதவிஸ்தாரத்தின் 16-ஆம் பகுதியான "பிம்பிசார அபிசங்கிரமனம்" என்னும் அத்தியாயத்தில் துறவுமேற்கொள்ளாமல் புத்தரைத் தடுத்துப் பூமியும் போகமும் நல்கி இல்லறத்தில் இருத்தப் பிம்பிசாரர் முயன்ற செய்தியும்; உலகு உய்ய மெய்ப்பொருள் காணும் நாட்டத்தைத் கூறித் துறவு மேற் கொண்ட சித்தார்த்தரின் செயலும்; பிம்பிசாரன் முன்பே வேண்டியபடி புத்தரானதும் அவனுக்கு அறமுரைத்துப் பௌத்தனுக்கியதும் பிறவும் சொல்லப்பட்டுள்ளன.

இந்நூல், கி. பி. 4ஆம் நூற்றூண்டில் சீனத்தில் மொழி பெயர்க்கப்பட்டது. கி. பி. 9-ஆம் நூற்றூண்டில் ஜாவாவில் போராபுத்தூரில் எழுந்த புத்தர் கோயிலில் இந்நூற்

பொருள்கள் ஓவிய, சிற்பங்களாக அமைக்கப்பட்டன (Vide Literary History of Sanskrit Buddhism, p. 26.) ஆதலின் விழுமிய இந்நூலினைப் பின்பற்றிப் பிம்பிசாரக் கதை பாடப்பட்டிருத்தல் கூடும். கிடைத்துள்ள இக்காப் பியத்தின் நான்கடிகளும் அகவலாய் உள்ளதால், இந்நூல் ஆசிரிய யாப்பில் அமைந்திருத்தல் கூடும். விருத்தக் காப்பியங்கள் எழுந்த கி. பி. 7, 8ஆம் நூற்றாண்டுகட்கு இந்நூல் முற்பட்டது எனலாம்.

**புத்தகோஷரும் பிம்பிசாரக் கதையும்**

சுத்தபிடகத்தின் முதற் பகுதியாகிய தீக்கநிகாயத் திற்கு புத்தகோஷர் எழுதிய சுமங்கல விலாசினி என்னும் உரையில் பிம்பிசாரக் கதை விரிவாக விளம்பப் பெற்றுள்ளது. அக்கதையினைச் சுருக்கிக் கூறுதல் ஆய்வுக்குப் பயன்படும்:—

பிம்பிசாரன் மகத நாட்டு மன்னன். புத்தரின் போதனை கேட்டு வேள்விக் கொலையை விடுத்தவன். பௌத் தத்தைப் போற்றியவன். அவன் மனைவி கருவுற்ற காலத்துத் தனது வலத்தோளின் குருதியைக் குடிக்கும் வேட்கைமிக்கவளாய்த் தளர்ந்து மெலிந்தாள். அவள் ஆசையை உணர்ந்த பிம்பிசாரன் மருத்துவனை அழைத்துக் குருதியை எடுத்துக் கொடுத்துக் குடிப்பித்தான். அதனைக் குடித்தால், கருவிலுள்ள குழவி தந்தைக்குக் காலனாவான் எனச் சான்றோர் சாற்றியதைக் கேட்டு அஞ்சிய அரசி கருச்சிதைக்க முயன்றாள். அதனால் விளையும் தீவினையை விளக்கி அரசன் தடுத்தான். மகன் பிறந்ததும் அரசி கொல்ல முயன்றாள். சேடிப் பெண்கள் குழவியைக் காப் பாற்றினர். பின், இயல்பான தாய்ப்பாசம் குழந்தையைப் பேணி வளர்த்தது. அஜாதசத்துரு எனப் பெயர் சூட்டினர். காளைப் பருவம் எய்தியதும் பிம்பிசாரன் மைந்தனை இள வரசனாக்கினான். (சுமங்கலவிலாசினி பாகம் 1, பக், 134).

புத்தரிடம் பொறாமை பூண்ட அம்மான்சேய் தேவ தத்தன் சித்திகள் வரப்பெற்றவன். அவற்றில் மயங்கிய அஜாதசத்துரு அவன் ஏவிய தீவினைகளைச் செய்ய முற் பட்டான். பிம்பிசாரன் புத்தரை ஆதரிப்பதால் முதல்

அரசனைக் கொல்லத் தூண்டினன். தான் புத்தரைக் கொல்வதாகவும் சூளுரைத்தான். இருவர் இறப்பிற்குப் பின் அஜாதசத்துருவும் தேவதத்தனும் அரசியல், மதத் தலைமையினை அடையத் திட்டமிட்டனர். அதன் விளைவாக அஜாதசத்துரு வெப்பமும் புகையும் சூழ்ந்த வெஞ் சிறையில் பிம்பிசாரனைச் சிறையிட்டு அரசியைத் தவிர யாரும் காணக்கூடாது என ஆணையிட்டான். அரசியும் உணவு கொடுக்கக் கூடாது என எச்சரித்தான். ஆயினும் தன் உடம்பில் தேனீ, வெண்ணெய், நெய், எண்ணெய் கலவையினைப் பூசி அரசனைக் காணச் சென்றாள். பிம்பி சாரன் அரசியின் மெய்யினை நாவால் சுவைத்துப் பசி தணித்துக்கொண்டான். இதனையும் அறிந்த மகன் அரசி யையும் பார்க்காமல் தடுத்துவிட்டான். (Abid, pp. 135 - 136.) உணவின்றியும், பிம்பிசாரன் வாழ்ந்தான் என்பதைப் புத்தகோஷர் சுவையாகச் சொல்லியுள்ளார். புத்தரின் போதனைகளையே உளமார எண்ணி உலாவிக் கொண்டிருந் ததால் பிம்பிசாரன் புதுப்பொலிவுடன் விளங்கினன். அதைக் கண்டு பொருத அஜாதசத்துரு அரசாங்க நாவிதனை ஏவி, பிம்பிசாரன் பாதத்தைக் கீறி எண்ணெயும் உப்பும் இட்டுக் கதிரைக் கரியின் நெருப்பினல் சுடச் சொன்னன். நாவிதன் நணுகியதும் பிம்பிசாரன், தன்னை விடுவிக்கத்தான் வருகிருன் என எண்ணினன். ஆனல், வந்தவன் ஆணையை நிறைவேற்றி விட்டான். “புத்தம் தம்மம்” என்று ஒலிந்தபடியே பிம்பிசாரன் உயிர்துறுந் தான். மறுமையில் சாதும் மகாராஜிக உலகில் வேசவன போதி சத்துவர்க்குப் பணி மகனக ஜவனவசபன் என்ற பெயருடன் வியங்கினன். (Ibid, p. 137).

பிம்பிசாரன் இறந்த அதே நாளில் அஜாதசத்துரு விற்கு மைந்தன் பிறந்தான். இறப்புச் செய்தியும், பிறப்புச் செய்தியும் ஒரே காலத்தில் அமைச்சர்கள் கேள் வியுற்று நற்செய்தியினையே ஓலையின் மூலம் அஜாத சத்துருவிற்கு அறிவித்தனர். அப்பொழுது தான் தந்தையை விடுதலை செய்யக் கட்டளை பிறப்பித்தான். ஆனல், காலம் கடந்த கட்டளை. பிம்பிசாரன் இறப்பினை அறிந்து புலம்பிய வண்ணம் தாயை அடைந்து, தந்தை தன்னிடம் எப்பொழுதாவது அன்பு பாராட்டியது உண்டா?

என வினவினுன். தாய், "மகனே! உன் விரலில் தோன்றிய கட்டியின் வலி தாங்காமல் நீ அழுதாய். ஒருவராலும் உன்னை அமைதிப்படுத்த முடியவில்லை. பின்னர் நீதி மன்றத்தில் இருந்த உன் தந்தையிடம் எடுத்துச் சென்றதும், உன் விரலைத் தன் வாயில் வைத்ததும் கட்டி உடைந்தது; பிள்ளைப் பாசத்தின் பெருக்கத்தால் சீழும் செந்நீரும் சிந்த விடாமல் தானே குடித்து விட்டார்". இதனைக் கேட்டதும் புலம்பி அழுது புரண்டான் அஜாதசத்துரு.

தேவதத்தனின் தூண்டுதல்களைப் பின்னர் அறவே அலட்சியம் செய்துவிட்டான். ஆயினும் தேவத்தன் கிஜ்ஜகூட மலையின் உச்சியில் இருந்து பெரும் பாறைகளைப் புத்தரின் மேல் உருட்டி விட்டான். நளகிரி என்ற யானைக்குக் கள் ஊட்டிப் புத்தர்மீது ஏவினுன். முடிவில் முயற்சிகள் எல்லாம் வீணுகி இரக்கத்திற்கு ஆளானுன். (Ibid, pp. 138-9).

தன் பிழைகளை எண்ணிப் பேழ்கணித்த அஜாதசத்துரு அரண்மனைப் பெரு மருத்துவன் சீவகனுல் அறிவுறுத்தப் பெற்றுப் புத்தரிடம் மன்னிப்புக்கோரி, சரண் புகுந்தான். பேரருட் கடலாகிய புத்தபகவான் ஆறுதல் அளித்து அறவுரைகள் புகட்டி நல்வழிப்படுத்தினுர். அஜாதசத்துருவிற்குப் புத்தர் புகட்டிய அறக் கருத்துக்கள் சுத்தபிடகத்தின் தீகநிகாயத்தில் உள்ள சாமஞ்ஞபல சுத்தாந்தத்தில் காணலாம். இச் சுத்தாந்தத்தின் முடிவில் "சந்தா வித்வா சம்சரித்வா துக்கச்சந்தம் கரிஸ்சந்தி" எனக் கூறும் பகுதி நோக்கத் தக்கது. இதன் பொருள், வினையில் சுழலும் கற்றேர், மற்றேர் எல்லோரும் துன்பத்திற்கு முடிவு காண்கிருர்கள் என்பது. நெஞ்சத்தை நெகிழச் செய்யும் உருக்கமான காட்சிகளையுடைய பிம்பிசாரனின் கதை காப்பிய வடிவம் பெறும் தகுதி படைத்தது தான்.

எனவே, கி. பி. 3-ஆம் நூற்றுண்டில் எழுந்த இலலித விஸ்தாரம், கி. பி. 5-ஆம் நூற்றுண்டில் வாழ்ந்த புத்த கோஷர் எழுதிய சுமங்கலவிலாசின் என்ற உரை ஆகிய

வற்றைப் பயின்றவர் பிம்பிசாரக்கதை என்னும் தமிழ்க் காப்பியத்தைப் பாடியிருத்தல் வேண்டும். இக் காப்பியம் கி. பி. 6-ஆம் நூற்றுண்டில் யாக்கப்பெற்றது எனலாம்.

## 3. குண்டலகேசி

பௌத்தம் தமிழுக்கு நல்கிய காப்பியங்களில் குண்டல கேசியும் ஒன்ருகும். ஐம்பெருங்காப்பியங்களில் ஒன்ருக இதனை மதிக்கும் நிலை மயிலைநாதர் காலத்தே வந்து விட்டது. கி. பி. 11-ஆம் நூற்ருண்டில் எழுந்த வீசோழிய உரையிலும் கி. பி. 10-ஆம் நூற்ருண்டில் தோன்றிய யாப் பருங்கல விருத்தியுரையிலும் இக் காப்பியம் மேற்கோ ளாக ஆளப்பெறுதலுடன் இதன் அமைப்பினைப் பற்றிய குறிப்புக்களும் காணப்படுகின்றன. அகவல் யாப்பிற் காப்பியம் பாடும் மரபின் மாறி விருத்தம், காப்பியக் கலித்துறை என்ற பிற்கால யாப்பில் குண்டலகேசி அமைந்துள்ளது. வீரசோழிய உரையில், "குண்டலகேசி முதலான காப்பியம் எல்லாம் விருத்தமாம்" (யாப்பு. 129) எனவும், "குண்டலகேசி விருத்தம், கலிவிருத்தம், எலி விருத்தம், நரிவிருத்தம் முதலாய் உள்ளவற்றுட் **கலித் துறைகளும்** உளவாமாதலால்" (யாப்பு. 127) எனவும் பெருந்தேவனர் குறித்தல் காண்க. இதனல், குண்டல கேசி விருத்தம் என்ற பெயர் இக் காப்பியத்திற்கு உண்டு என்பது போதரும். இந்நூலின் உட்பிரிவுகள் இலம்பகம், படலம், சருக்கம் என்பவனவற்றில் ஒன்ருக அமைந் திருத்தல் கூடும். குண்டலகேசியின் பாடலைச் சமயதிவா கரர் "காதை" எனக் குறிப்பிட்டுள்ளார். (நீல. 176. 177, 293, பாடல்களின் உரை).

### குண்டலகேசி-அகலக்கவி - காப்பியம்

பெருந்தேவனர் குண்டலகேசியை அகலக்கவி என்றும் காப்பியம் என்றும் கூறுகிருர். (வீர. அலங். 153, 146: 129). திவாகர நிகண்டும் யாப்பருங்கல விருத்தியும் முத்தமிழ் நலத்துடன் பல்கலைத் திறமும் பொருளப் பாடப்பெறுவது அகலக்கவி (—வித்தாரக்கவி) என விளக்குகின்றன. கி. பி. 8-ஆம் நூற்ருண்டில் எழுந்த தண்டியலங்காரம் பாவிகஅணி காவியத்திற்கு இன்றியமையாது வேண்டப்

படும் என்பதை, "பாவிகம் என்பது காவியப் பண்பே" என்ற நூற்பாவில் நுவலக் காணலாம். வீரசோழிய உரையும், "இனிப்பாவிகமானது அகலக் கவிப் புலவன் கருத்து. அஃது குண்டலகேசி, உதயணன் கதை முதலாயினவற்றுள் கண்டு கொள்க" என இயம்புகின்றது. ஆதலின், அகலக்கவி என்பது காவியத்திற்கு ஒரு பெயர் எனக் கருதலாம்.

காப்பியங்களில் பல கலைகள், பல சமயத் தத்துவங்கள், தருக்கம் முதலியனவும் இடம் பெறுதலின்சிற் சில சொற்களின் பொருள் பிற்காலத்தார்க்கு விளங்காமல் இருத்தல் இயல்பே. இதனை, "குண்டலகேசியும் உதயணன் கதையும் முதலாக உடையவற்றில் தெரியாத சொல்லும் பொருளும் வந்தனவெனின், அகலக்கவி செய்வானுக்கு அப்படி அல்லது ஆகாது என்பது. அன்றியும் அவை செய்த காலத்து அச்சொற்களும் பொருள்களும் விளங்கியிருக்கும் என்றாலும் அமையும் எனக் கொள்க (வீர. அலங்க. 146)" என்று வீரசோழிய உரை விளம்புகிறது.

*குண்டலகேசி—தருக்க நூலா?*

பெருந்தேவனார் "தருக்கமாவது நியாயசூடாமணி, புதியாநுட்பம் ஆகியவற்றுட் கண்டுகொள்க" (வீர. பக். 283) என்புழி, குண்டலகேசியைக் கூறாது விடுத்தார். ஆனால், யாப்பருங்கல விருத்தியுரை "தருக்கம் ஆவன ஏகாந்த வாதமும் அநேகாந்த வாதமும் என்ப. அவை குண்டலம், நீலம், பிங்களம், அஞ்சனம், தத்துவதரிசனம், காலகேசி முதலிய செய்யுட்களுள்ளும், சாங்கியம் முதலிய ஆறு தரிசனங்களுள்ளும் காண்க" (பக். 540) என இயம்புகிறது. உரையில், *குண்டலகேசியை அடுத்து நீலகேசி கூறப்படுதல் நோக்கத்தக்கது. நீலகேசியில் குண்டலகேசி வாதச் சருக்கம், அர்க்கச்சந்திரன் வாதச்சருக்கம், மொக்கலவாதச் சருக்கம், புத்தவாதச் சருக்கம் என்ற நான்கும் பௌத்தக் கொள்கைகளை வாதிட்டு நீலகேசி மறுப்பதாக அமைந்துள்ளன. எஞ்சிய சருக்கமும் பிற சமய, தத்துவங்களை வாதிட்டு உரைப்பனவாய் உள்ளன. ஆதலின் நீலகேசி தோன்றுவதற்குக் காரணமாய் அமைந்த குண்டலகேசியிலும் தருக்கப் பகுதிகள்

இருந்திருத்தல் வேண்டும். பௌத்தர்களின் தருக்கக் கொள்கை நீலகேசி உரையிலும் காணப்படுதல் ஒரு சான்றாகும். இடைக்காலத்தில் எழுந்த யாப்பருங் கலம், வீரசோழியம் ஆகிய இலக்கண உரையாசிரியர்கள் தமக்கு மிகவும் முற்பட்ட சிலப்பதிகாரம், மணிமேகலை ஆகிய காப்பியங்களை விடுத்து, சிந்தாமணி, சூளாமணி, குண்டலகேசி, நீலகேசி என்பனவற்றைக் குறித்தல் நோக்கத்தக்கது. ஆதலின், சிலம்பும், மேகலையும் தோன் றிய காலத்திற்கு இவை பிற்பட்டன எனக் கருதலாம். இவற்றின் யாப்பமைதியும் இக் கருத்திற்கு அரண் செய்யும்.

குண்டலகேசியின் ஆசிரியர் நாகசேனர் என இலங் கைத்தேரர் தெரிவித்த செய்தியை அறிஞர் மயிலை சீனி வேங்கடசாமி அவர்கள் குறித்துள்ளனர். இக் காப்பியத் தின் கடவுள் வாழ்த்து புறத்திரட்டிலும் நீலகேசி உரையி லும் காணப்படும். அப் பாடல்:

"முன்றான் பெருமைக்கண் நின்றான்முடி வெய்து காறும்
நன்றே நினைந்தான் குணமேமொழிந்தான் தனக் கென்று
ஒன்றானும் உள்ளான் பிறர்க்கே உறுதிக் குழந்தான்
அன்றே இறைவன் அவன்தாள் சரணங்கள் அன்றே"

நூலாசிரியர் அவையடக்கப் பாடலில் முக்குற்றம் முனிந்த புத்தரின் புகழ் கூறப்புகுவதால் சொற்பொருள் வழுக்களைச் சான்றோர் கருதார் என்று இயம்பும் பகுதி குறிப்பிடத்தக்கது.

**குண்டலகேசியின் காலம்**

இக் காப்பியம் முழுமையாகக் கிடைக்கவில்லை. புறத் திரட்டிலும், உரை மேற்கோள்களிலும் ஆகச் சுமார் 50 பாடல்களும் முதல் நினைப்புச் செய்யுட்களாகச் சுமார் 100 பாடல்களும் அறியப்படுகின்றன. இக் காப்பியத்திற்கு எதிர்நூலாக எழுந்த நீலகேசியிலும் அதன் உரையிலும் கூறப்படும் பௌத்தக் கருத்துக்கள் பலவும் குண்டல கேசிக்கு உரியவை எனக் கொள்வதில் இழுக்கில்லை. குண்டலகேசியின் கதைப்பொருளும் கால ஆராய்ச்சிக்குப் பயன்படும்.

**பிடகஉரைகளில் காப்பியக்கதை (கி. பி. 500—600)**

பெண்ணின்பத்தை வெறுக்கும் சமண பௌத்தர்கள் பெண்ணை வெறுக்கவில்லை. எனவேதான் தம் காப்பியங்களின் கதைகளில் பெண்ணிற்கு முக்கியத்துவம் நல்கி அவர்தம் பெயரைக் காப்பியப் பெயராக அமைத்தனர். குண்டலகேசி தேரி ஒருத்தியின் பெயர். இவள் கதை திரிபிடகங்களில் நடுநாயகமாய் உள்ள சுத்தபிடகத்தின் உரைகளில் காணப்படுகிறது. இப் பிடகத்தின் நான்காம் பிரிவாகிய அங்குத்ர நிகாயத்திற்கும் ஐந்தாம் பிரிவாகிய குட்டக நிகாயத்தின் ஒரு பகுதியாகிய தம்மபதத்திற்கும் புத்தகோஷரும்; அதே நிகாயத்தின் மற்றொரு பகுதியாகிய தேரிகாதைக்குத் தம்மபாலரும் எழுதிய விரிவான உரைகளில் குண்டலகேசியின் கதை காணப்படுகிறது. பாலி நூல் பேரறிஞர் டாக்டர் பி. சி. லா

"The Dhammapada Commentary, Therigatha Commentary, and the Anguttaranikaya Commentary have some of the stories in common, e.g., Kundalakesi, Patacara, Nanta.........etc.

—Vide History of Pali Literature, Vol. II, pp. 451, 458, 512.

என இயம்புதல் காண்க.

குண்டலகேசியின் இயற்பெயர் பத்தா (—பத்ரா) என்பது. இவள் இராசகிருகத்தில் (—இராசகிருகம்) வாழ்ந்த பெருந்தன வணிகரின் செல்வ மகள். அரச புரோகித மகன் சத்துகன் பௌத்தனுயினும் களவாடியதால் நீதி மன்றத்திற்கு விசாரணையின் நிமித்தம் அழைத்துச் செல்லப்பெற்றான். அக் காட்சியை மாளிகையின் மேலிருந்து கண்ட பத்தா அவன் பேரழகில் மயங்கி மணக்கத் துடித்தாள். அவள் ஆசை ஈடேறத் தந்தை கையூட்டு தந்து அவனை விடுவித்து மணமுடித்தார். இருவரும் இன்ப வாழ்வில் ஈடுபட்டிருக்கும் காலத்தில் ஒரு நாள் ஊடல் கொண்ட பத்தா தலைவனைக் கள்ளன் என நினைவுபடுத்திவிட்டாள். அதனால் மனம் கொதித்த சத்துகன் அவளை வஞ்சித்துக் கொல்லக் காலம் பார்த்திருந்தான். ஒரு நாள் தெய்வ வழிபாட்டின் பொருட்டு மலை உச்சிக்கு அழைத்துப் போனான். அணிகலன்களைக்

கவர்ந்து அவளைக் கொல்லப்போவதாக அச்சுறுத்தினன். பணிந்துரைத்தும் விடாமையால் கொலையுண்ணும் முன் அவனை மும்முறை வலம் வருதற்குப் பத்தா வேண்டினுள். சத்துகன் இசைந்தான். பத்தா வலம் வரும்பொழுது பின் புறமிருந்து அவனைக் குப்புறத் தள்ளி வீழ்த்தினன். உருண்டு விழுந்த சத்துகன்புத்தனையே நினைத்ததால் உய்தி பெற்ருன். எனினும் அவன்துயரக் காட்சி பத்தாவின் வாழ்வில் ஒரு மாற்றத்தைத் தோற்றுவித்தது. தலை முண்டிதம் செய்து சமணத் துறவியானுள். அவள் கூந்தல் சுருண்டு சுருண்டு வனப்புற வளர்ந்ததால் குண்டலகேசி என அழைக்கப்பெற்ருள். சமண நூல்களிலும் தருக்கத்திலும் புலமை பெற்று ஊர் தோறும் சென்று புறச் சமயத்தார்களைப் புறங்கண்டு சமணம் பரப்பினுள். புத்தர் தங்கியிருந்த சிராவஸ்தி நகரில் ஜேதவனத்தில் நாவற்கிளையை நட்டு வாதம் புரிய அறைகூவல் விடுத்தாள். புத்தரின் சீடர் சாரிபுத்தர் அவளை வாதில் வென்று புத்தரிடம் சரண் புகச் செய்தார். பின்னர், பௌத்த தருமம் கேட்டுத் தேரியாகித் தவம் புரிந்தாள்.

இக் கதை நீலகேசி உரையில் சிறு மாறுதல் பெற்றுள்ளது. சத்துகன் பெயர் காளன் என்றும் அவன் வணிகன் மகன் என்றும் கூறப்பட்டுள்ளது. (நீல. 286 உரை). இம் மாற்றம் தமிழ்க் குண்டலகேசியில் இருந்திருத்தல் கூடும். எனவே, பிடக உரைகளில் காணப்படும் குண்டலகேசியின் கதை தமிழ்க் காப்பியத்திற்குக் கருவாய் அமைந்தது எனலாம். ஆதலின் புத்தகோஷர், தம்மபாலர் வாழ்ந்த கி. பி. 5, 6-ஆம் நூற்ருண்டுகட்குப் பிற்பட்டுக் குண்டலகேசி காப்பியம் எழுதப்பட்டிருத்தல் வேண்டும்.

**துதாங்கக் கொள்கை**

புத்தகோஷரின் விசுத்தி மார்க்கத்தில் பிட்சுக்களுக்கென வரையறுக்கப்பெறும் துதாங்க நெறியினைக் காணலாம். (History of Pali Literature, Vol. II p. 402) இந் நெறிப்படி 13 உணவு வகை, உடை, உறையுள், பழக்கங்களைப் பௌத்தத் துறவிகள் கடைப்பிடித்தல் வேண்டும். நீலகேசி இக் கொள்கையினைப் பல இடங்களில் எடுத்

தோதுதல் காணலாம். (316, 355, 356, 357). நல்வினை தீவினைகளைக் குசலம், அகுசலம் எனப் பௌத்தர்கள் கொண்டனர் என நீலகேசியில் காண்கிறோம் (பா. 490). இரு வினைகளை இங்ஙனம் குறியிட்டாளுதல் விசுத்திமார்க்கத்தில் காணப்படுகிறது (Ibid, p. 402).

### குண்டலகேசி, நீலகேசியில் பௌத்தப் பிரிவுகள்

புத்தரைத் தொழுதல், போதியைப் பணிதல், தாடையாழ்வார் முதலிய போதி சத்துவ வணக்கம் முதலியன நீலகேசியில் காணப்படும் (254, 255, 328). புத்தரின் பொற்சிலையினை ஒரு பாடல் சுட்டுகிறது. ஈழம் அடிப்படுத்த தாடையாழ்வாரின் தந்தமும், வழிபடப்பட்டது (330 உரை). அவலோகிதன், மைத்திரபாகு என்ற போதிசத்துவக் கடவுளரையும் நீலகேசி உணர்த்துகிறது (189 உரை). புத்தரின் போதனைகள் அடங்கிய திரிபிடகத்தை நீலகேசி குறிப்பிடும் (234, 477). "அன்னுறைற்செய்யப்பட்ட நூல் பிடகம்" என்ற குண்டலகேசிப் பாடலைச் சமயதிவாகரர் மேற்கோள் காட்டினர். குண்டலகேசியின் ஆசிரியருள் ஒருவராகிய அருக்கச்சந்திரர் விநயபிடகத்தையே கருவியாகத் தரங்கி வாதிடுதலின், (238, 242), இப்பிடகத்திற்குரிய தனிச் சிறப்பு போதரும். வைபாஷிக பௌத்தர்க்கு விநடபிடகம் தனியுரிமை உடையது.

### தசபாரமிதை

பத்துவிதப் பண்புகள் நிரம்பி மன்பதைக்கு ஒழியாமல் தொண்டு புரிதல் போதிசத்துவரின் குறிக்கோளாகும். பாரமிதை என்ற சொல் கரைசேர்தல் எனப் பொருள்படும் என்று மோனியர் வில்லியம்ஸ் முதலியோர் கருதினர். இக் கருத்தினை ஒட்டியே மணிமேகலை உரையாசிரியர்களும் பொருள் செய்தனர். ஆனால் நீலகேசி உரையில் பாரமிதை - பூரணை, பூரித்தல், நிறைத்தல் எனப் பொருள் செய்யப்பட்டுள்ளது. இப் பொருளே விழுமியது என்பதை டாக்டர் ஹர்தயாள் ஆய்வுரையினால் அறியலாம். தானம், சிலம் முதலிய பத்து இயல்புகளும் நிறைந்தவரே போதிசத்துவர். முற்காலப்பௌத்தம் ஆறு பாரமிதைகளைக் குறித்தது என்றும் கி. பி. 4-ஆம் நூற்றாண்டிற்குப்

பின்னர்தான் பத்தாகப் பெருகியது என்றும் டாக்டர் ஹர்தயாள் கருதுகின்றார்.

### சாதகக் கதைகள்

புத்தரின் பேரருட் செயலையும் வினைக் கொள்கையினையும் பாமரரும் பாராட்டும் வகையில் பரப்புதற்குப் புனையப் பெற்ற கொள்கை விளக்கக் கதைகளே சாதகக் கதைகள் எனப்படும். இவை, இருவகை பௌத்தத்திற்கும் உரியன. நீலகேசி உரையில் வரும் பௌத்தக் கருத்துடைய பாடல்களில் காணப்படும் சாதகக் கதைகளை இவண் தொகுத்து நோக்குவோம்.

| சாதகக் கதை | குண்டலகேசி நீலகேசி | வடமொழியில் | பாலியில் |
|---|---|---|---|
| 1. அந்தணன் வடிவில் வந்த இந்திரன் இரக்க, சிபி கண்களைக் கொடுத்தது. | பா. 205 பக். 78 | எண் 499 சாதகமாலா கி. பி. 400 அவதானசதகம் கி. பி. 200 | சுத்தபிடகம் குட்டக நிகாயம் சாதகம் கி. மு. 300 |
| 2. முது பார்ப்பனனுக்கு மக்களை அடிமையாகத் தந்தது. சக்கரன் இரப்ப இல்லாளைத் தந்தது. | ஷை | எண் 9 சாதக மாலா | ஷை |
| (இயற்பகை நாயனாரின் கதை இப் புத்த ஜாதகக் கதையின் எதிரொலியே) | | | |
| 3. புனிறுதீராப் புலியின் பசிக்குத் தன்னைத் தந்து அதன் குட்டிகளை உய்வித்தது. | ஷை | எண். 1 சாதகமாலா சுவர்ண பரிபாஷா | ——— |
| —Vde, Lotuses of the Mahayana pp. 41-42. | | | |
| 4. இயக்கர் இரப்பத் தன் தசையைப் பிளந்து தந்தது. | ஷை | எண். 8. சாதக மாலா | ——— |
| 5. சுவைகெழுமிய மாங்கனிகளைத்தர வானரங்களுக்கு உதவிய போதிசத்துவக் குரங்கின் அருள் உள்ளம். | ஷை | எண். 407 சாதகமாலா | ——— |

| சாதகக் கதை | குண்டலகேசி நீலகேசி | வடமொழியில் | பாலியில் |
|---|---|---|---|
| 6. வேடர்க்கு இரையாதற் பொருட்டுக் கண் விழித்துப் பாராமல் கிடந்த திட்டிவிடச் சாதகக் கதை. | ஷை | எண். 524 சாதகமாலா | ——— |
| 7. முயலாய்ப் பிறந்த போதி சத்துவர் சக்கரன் விரும்பியபடி தீப் பாய்ந்து உணவாக முற்பட்டது. | பா. 649 | ——— | ——— |

சில சாதகக் கதைகள் புதியனவாய்த் தோன்றுகின்றன.

## சதுட்டயம் - மகாயானக் கருத்து

தேரவாத பௌத்தம் அநித்தம், துக்கம், அனன்மா என்ற மூன்றியல்புகளை மொழிதல் சுத்தபிடகத்தில் திலக்கணசுத்தத்தில் காணலாம். ஆனல் மகாயான பௌத்தர்களாகிய அசுவகோஷரும் வசுபந்துவும் அநித்தம், அனன்மா, அசுசி, துக்கம் என்ற நான்கு வியபரியாசங்களை விளம்பினர். (Vide, Bodhisattva doctrine, p. 91) இந் நான்கினையும் மணிமேகலையிலும் காணலாம். நீலகேசியில் இந் நான்கும் கூறப்பட்டன *(252, 253, 383, 493, 562)*. இந் நான்கும் சதுட்டயம் என இயம்பப் பெற்றது. குண்டலகேசிப் பாடல்களில் இந் நான்கியல்புகளும் பொதிந்துள்ளன. *(புறத்திரட்டு 388, 391, 410, 413)*. தீவினையஞ்சி, கூடாவொழுக்கம் தவிர்ந்து, காமத்துள் அழுந்தாமல் வாழும் வகையினையும் குண்டலகேசி கூறுகிறது. *(புறத்திரட்டு 205, 288, 302, 303)*. உபேஷா பாவனையை ஒரு பாடல் உணர்த்துகிறது. *(புறத். 724)*. அரசநீதிகளையும் இக் காப்பியம் எடுத்துரைக்கும் *(புறத். 494, 495, 551, 723)*.

## பௌத்த தத்துவப் பிரிவுகள்

நீலகேசி புத்தவாதச் சருக்கத்தில் ஐவகைப் பௌத்தக் கொள்கைகள் குறிக்கப்பட்டுள்ளன *(478)*: *1.* கணத்தன்மை உள்பொருள். *2.* விஞ்ஞானமே உள்பொருள். *3.* பரமார்த்த வகையாலன்றி வியவகார நிலையில் ஆன்மா உண்டு. *4.* அவாச்சியமே பொருள். *5.* சூனியமே

பொருள். இவற்றுள் கணபங்க வாதம், விஞ்ஞான வாதம், சூனிய வாதம் என்பன 251-ஆம் பாடலிலும் கூறப்பட்டன. இக் கொள்கைகளைப்பற்றி இவண் காண்போம்:

1. கணபங்க வாதம் பிடகங்களின் துணிபு, உருபு, வேதனை, உணவு, குறிப்பு, வினை என்ற ஐங்கந்தமே யாகும் என நீலகேசி கூறுதல் (177, 425), "அன்னானாற் செய்யப்பட்ட நூல் பிடகம்" என்ற குண்டலகேசிப் பாடலைத் தழுவியுள்ளது என்றார் சமயதிவாகரர். உலகப் பொருள்களை ஐங்கந்தகளாகப் பகுத்துரைக்கும் பாங்கு எல்லாப் பௌத்தப் பிரிவுகட்கும் ஒத்தது. ஆனால், ஐங்கந் தங்களில் சமுதாயமாய் உள்ள எப்பொருளும் விளக்கின் சுடர்நுனிபோல் தோன்றி மறைவன என இயம்பும் கணபங்கவாதம் குறிப்பிட்ட பௌத்தப் பிரிவிற்கே உரியது. எப் பொருளினும் உண்மை எனப்படுவது கணத் தன்மையே: யத், சத், தத் க்ஷணிகம் என்பர். கணந் தோறும் மாறி இயங்கும் இயல்பினை விளக்கும் கணபங்க வாதம் குண்டலகேசியில் கவிநயம் மிளிரக் கழற்றப்பட் டுள்ளது:

"பாளையாம் தன்மை செத்தும் பாலனும் தன்மை செத்தும்
காளையாம் தன்மை செத்தும் காமுறும் இளமை செத்தும்
மீளுமில் வியல்பு மின்னே மேல்வரு மூப்பு மாகி
நாளும்நாம் சாகின் றுமால் நமக்குநாம் அழாததென்னோ."

இக் கருத்து பழைய பாலி நூல்களில் தெளிவுறுத்தப் படவில்லை. கி. பி. 700-1000-இல் தோன்றிய சௌத்தி ராந்திக வைபாஷிகப் பௌத்த நூல்களில்தான் சிறப் பிடம் பெற்றுள்ளது எனப் பேராசிரியர் தாஸ்குப்தா ஆராய்ந்துள்ளார். (Vide, History of Indian Philosophy Vol. I. p. 161) ஆதலின், குண்டலகேசி இக்காலப் பகுதியில் தோன்றியிருத்தல் வேண்டும். சிவஞான சித்தியார் பரபக்கத்திலும் மாத்துவரின் சர்வமத சங்கிரகத்திலும் சௌத்திராந்திகம் வைபாஷிகம் ஆகிய ஹீனயான பௌத்த நெறிகள் கூறப்பட்டிருத்தல் இவண் எண்ணத் தக்கது.

2. விஞ்ஞான வாதம்: கி. பி. 4-ஆம் நூற்றாண்டில் ஆசங்கர், வசுபந்து என்ற சகோதரர்கள் உருவாக்கிய

விஞ்ஞானவாத பௌத்தம் கருத்துப் பொருள் உண்மையை ஒத்துக்கொண்டது. திக்நாகரைப் போன்றோர் சௌத்தி ராந்திகம் ஆகிய ஹீனயானப் பிரிவையும் யோகாசாரம் ஆகிய மகாயானப் பிரிவையும் இணைத்துச் சௌத்தி ராந்திக யோகாசாரம் என்ற ஒட்டு நெறியை உருவாக் கினர். தருக்கத்துறைக்கு இவர்கள் ஆற்றிய பணி அனைவ ராலும் பாராட்டப்படுகிறது. இவர்கள் ஆகமப் பரி மாணத்தை உடன்படார். பிரத்யட்சம், அனுமானம் என்ற இரண்டு அளவைகளே கொண்டனர். நீலகேசியிலும் இவ் விரண்டுமே பௌத்தர்க்கு உரியனவாய்க் கூறப் பட்டுள்ளன. *(299, 300)*.

*3, 4, 5* மாத்தியமிகம் அல்லது சூனியவாதம்: உலகமே ஒரு மாயைத் தோற்றம். அதன் சாரம் சூனியமே என்ற மாத்திமிகக் கோட்பாட்டினை உருவாக்கியவர் நாகார்ச்சுனர். சூனியத்தை விவரிக்க முடியாமையின் அவாச்சியமே பொருள் என்றனர். சொல்லொணுத நிலையைக் கூறுமிடத்து எதிர்மறை வாசகத்தைப் பயன் படுத்துதல் மாத்தியமிகர்க்கும் மற்ற இந்தியத் தத்துவ ஞானிகட்கும் பழக்கமாகும். அவாச்சியர் என்றே அருக் கச்சந்திரனுகிய பௌத்தாசிரியன் குறிக்கப்பெற்றுன். *(நீல. 227)*.

இனி, அனுன்மவாதம் பௌத்தத்தின் எல்லாப் பிரிவு. களுக்கும் பொதுக் கொள்கையாகும். சில அறக்கருத்துக் களை மக்களுக்கு விளக்கும் வியவகார நிலையில் புத்தரே ஆன்மவாதத்தையும் முடிப்பொருள் நிலையில் அனுன்ம வாதத்தையும் போதித்தார் என்று நாகார்ச்சுனரின் மாணவர் ஆரியதேவர் மொழிந்துள்ளார்:

"The Buddhas, in their omniscience, watch the natures of all living beings and preach to them the Good Law in different ways, sometimes affirming the existence of Atman, and at other times denying it....It is for the people who have not reached the high stage that the Buddhas preach the existence of Atman."

—Vide, Systems of Buddhist Thought pp. 19-20.

இங்ஙனம் பல்வேறு பௌத்தக் கொள்கைகளையும் புத்தர் மொழிந்தார் என நீலகேசி கூறுதல் *(பா. 478)*

சிந்திக்கத்தக்கது. புத்தருக்குப்பின் உருவாகிய பல்வேறு பௌத்தக் கருத்துக்களையும் புத்தவசனமாக வெளியிடுதல் மரபாகிவிட்டது. ஒன்றுடன் ஒன்று முரண்படும் இவ்வளவு பிரிவுகளும் புத்தர் காலத்தில் இல்லாதது என்பதும் இவற்றுக்கு அடிப்படை பிடகங்களில் உள்ளது என்பதும் எண்ணத்தக்கவை.

### *சமய திவாகரர் குறிப்பன*

நீலகேசி உரையில் சிராவகையானம், மகாயானம், மந்திரயானம் என்பன காணப்படும் (பா. 342 உரை). இம் மூன்றில் பின்னிரு நெறிகளைப் பின்பற்றுவோர் கள் ளுண்பர் (நீல. பக். 9, 138). குண்டலகேசி, அருக்கச் சந்திரன், மொக்கலான் முதலியோர் சிராவகயானத்தவர் என்பது "சிராவகயானத்தாராகிய நீங்களொழிய" என வரும் உரைப்பகுதியால் அறியப்படும். மகாயான நூல் களில் சிராவகயானம் ஹீனயானத்தைச் சேர்ந்தது எனக் கூறப்பட்டுள்ளது. மகாயானத்தின் ஒரு பிரிவாகிய மந்திரயானம் தாந்திரிக புத்த நெறியாகும். இந் நெறியில் பெண் தேவதைகளும் அனுமதிக்கப்பட்டன. அபூத நிகழ்ச்சிகளை விரித்துரைக்கும் இப் பிரிவு கி. பி. 6-ஆம் நூற்றுண்டில் எழுந்ததென முன் கண்டோம்.

இதுகாறும் எழுதியவாற்றல், குண்டலகேசியின் காலம் கி. பி. 8-ஆம் நூற்றுண்டாகக் கொள்ளலாம் என்றும், நீலகேசி ஒரு நூற்றுண்டு கடந்து உருவாகி யிருக்கும் என்றும் எண்ணலாம்.

### *நீலகேசியின் பிழையுள்ளம்*

பௌத்தத்தின் நிலையில் நின்று அதன் கொள்கை களை ஆராயும் மனநிலையை மாற்றுச் சமயத்தாராகிய சமணரிடம் எதிர்பார்த்தல் இயலாது. துப்பறியப் புகும் காவலாளியின் மனநிலையே காணப்படுகிறது! சமணரின் ஆன்மாவும் புத்தரின் ஆலய விஞ்ஞானமும் ஒன்றென நீலகேசி கூறும் (514). இது முற்றிலும் பிழையான கருத்து. யோகாசார பௌத்தத்தின் ஆலய விஞ்ஞானம், ஸ்கந்த விஞ்ஞானம் என்பன முறையே வேதாந்திகள் கூறும் பரமான்மா ஆன்மா போன்றவை எனப் பேராசிரியர்

இராதாகிருட்டினனுர் இயம்பியுள்ளார். விநயம் என்ற சொற்பொருளேயும் நீலகேசி பிழைபட விளக்கியுள்ளது. "வினய நூல் பேரத.:தேல்" (241) என்ற பாடலும் "வினே யாக்குதலின் வினய நூல் என்று பெயர் பெற்றது" என்ற உரையும், விநயம் என்ற பாலிச் சொல்லின் பொருள் புரியாமல் புகலப்பட்டவையாம். இதனே "Folk Etymology" என்பர் மொழி நூலார். 'வி! என்ற உபசர்க்கம் விழுப்பத்தை உணர்த்தும்!' 'நய' என்ற சொல் 'நீ-நய: நடத்து எனப் பொருள் பயந்து நடத்தை என்ற பெயர்ப் பொருள் நல்கும். விநயம் என்ற சொல் பௌத்தர்க்குரிய சிறந்த நடத்தை, சீலங்களேக் குறிக்கும் நூலிற்கு ஆகு பெயராய் அமைந்தது; அன்மொழித் தொகையாகவும் கொள்ளலாம்.

**நீலகேசி சுட்டும் பௌத்தக் குறைபாடுகள்**

சகோதர சமயமாகிய பௌத்தத்தை நீலகேசி வரம் பிகந்து கண்டனம் செய்கிறது. "பாலகர் பாட்டுரை போன்றது நின் நூல் உரை" (635) எனப் புத்தர் பிரானேப் பார்த்து நீலகேசி துடுக்காகப் பேசுதல் காழ்ப்புணர்ச்சி யின் வெளிப்பாடே. அவள் குறிப்பிடும் பௌத்தக் குறை பாடுகளில் பலவும் விதண்டையாய் உள்ளன. எனினும் 1. தன் கையால் கொல்லாமல் வேறு வகையில் கிடைக்கும் புலால் (கப்பியம்) உண்ணலாம் என்ற பௌத்தக் கருத் தைக் கடிதல் நோக்கத்தக்கது. (251, 273, 327-338, 340, 375, 464, 467, 469, 471). புலால் வெறுப்பு புத்தர் பிறந்த கபில புரத்தினேயும் மீன்கோட்பறை கேட்கும் கடற்கரை ஊராகக் கற்பனே செய்யத் தூண்டியது. பௌத்தப் பள்ளிகள் மகரமீன் வடிவில் அமைந்தன எனல் எவ்வளவு தூரம் வாய்மையயோ!. 2. ஆடைக்கு அதிக அக்கறை காட்டித் துவரூட்டிப் போர்த்தலும் பிச்சைப் பாத்திரம் தாங்குதலும் நீலகேசிக்குப் பிடிக்கவில்லே (270, 272-7). இல்லறத்தானே விடக் கூடுதலான தொழில்களேப் பிட்சுக்கள் சுமப்பதாகக் குறைகூறுதல் விந்தையாக உள்ளது (279, 280 ; 527). 3. சீலங்களேத் துறந்து பிட்சுக்கள் புலனின்பத்துள் மூழ்கி யதை நீலகேசி கடிந்துரைக்கிருள்.

பொதுவாகப் பௌத்தமும் சமணமும் அழிந்ததற்கு ஒழுக்கக் குறைபாடும் தொண்டு உணர்ச்சி குன்றியதும்

முக்கியக் காரணமாகும். சைவ வைணவத் தாக்குதல் ஒரு துணைக் காரணமே.

## 4. சித்தாந்தத் தொகை

பௌத்தர்கள் படைத்த தமிழ் நூல்களில் பல நமக்குக் கிடைக்கவில்லை. சில பெயரளவில் அறிகிறோம். சித்தாந்தத்தொகை முழுமையாக நமக்குக் கிடைக்கவில்லை. இந் நூல் பௌத்தத்தின் முடிந்த பொருளைத் தொகுத்துரைப்பதாய் அமைந்திருத்தல்கூடும். இந் நூலின் முழுப் பாடல் ஞானப்பிரகாசர் உரையில் காணப்படும்:

" அருவெறியாற் பாரமிதை ஆறைந்தும் உடனடக்கிப்
பொருள்முழுதும் போதியின்கீழ் முழுதுணர்ந்த முனிவரன்தன்
அருண்மொழியால் நல்வாய்மை அறிந்தவரே பிறப்பறுப்பார்
மருணெறியாம் பிறநூலும் மயக்கறுக்கு மாறுவதோ "

இப்பாடல் சௌத்திராந்திகமதம் பற்றியது எனக் காண்கிறோம் (சிவ. பர. சௌ. உரை). தமிழகத்தில் இப்பிரிவு நெடுங்காலம் நிலை பற்றது. சூத்திரப்பிடகத்தினைப் பின்பற்றுதலின் சௌத்திராந்திகர் எனப் பெயர் பெற்றனர். சூத்திரம் "சுத்தம்" எனப் பாலியில் வழங்கும். சுத்த பிடகத்தின் கருத்துக்களைத் தொகுத்துரைத்தலின் இந்நூல் சுத்தாந்தத் தொகை எனப் பெயர் பெற்றுப்பின் ஏடெழுதுவோரால் சித்தாந்தத் தொகை எனப் பட்டதோ என்று என்ன எண்ண வேண்டி உள்ளது. நீல்கேசி உரையில்,

"மருள்தரு மனம்வாய் மெய்யிற் கொலைமுதல் வினைபத்தாமே"

என்பது சித்தாந்தத் தொகை (நீல. பக். 223) எனச் சமயதிவாகரர் எழுதினர். திரிகரணத்தால் நிகழும் தீவினைகள் பத்து என்பது சுத்த பிடகத்தில் தெளிவாக விளக்கப்பட்டுள்ளது. (Vide, A History of Pali Literature Vol. 1. p. 121.) இப்பத்தும் மணிமேகலையிலும் காணப்படும் (30 : 64—72). ஆதலின், சித்த்ராந்தத் தொகை சுத்தபிடகக் கருத்துக்களைத் தொகுத்துரைக்கும் நூலாதல் வேண்டும்.

## 5. திருப்பதிகம்

இந்நூல் பத்துப் பாடல்கள் கொண்டது எனலாம். ஒவ்வொரு தலத்தின் சிறப்பினைப் பத்துப் பாடல்களால்

பரவும். தேவாரத் திருப்பதிகங்களைப் போலப் போதி சத்துவரின் பத்துப் பாரமிதைகளைப் பாங்குடன் பகரும் இந்நூல் திருப்பதிகம் எனப் பெயர் பெற்றிருத்தல் வேண்டும். பாடல்கள் நான்கடி கொண்ட கலித்தாழிசை உறுப்புக்கள் போல் உள்ளன. இந்நூல் குண்டலகேசியின் காலத்தினை ஒட்டித் தோன்றியிருத்தல் வேண்டும். பௌத்த சமயத்தில் கொள்கை விளக்கமாய் எழுந்த சிறு நூல் வரிசையில் திருப்பதிகத்தினைச் சேர்த்தல் பொருந்தும். இந்நூலின் பாடல்கள் போதி சத்துவர்க்குரிய சிறப்பியல்புகளாகிய தானம், சீலம், பொறை. (க்ஷமா) வீரியம், தியானம், உணர்ச்சி (பிரஞ்ஞா), உபாயம், அருள் (தயா), வலிமை (பலம்), ஞானம் என்ற தச பாரமிதைகளை விளங்குவதாய் உள்ளன. இப்பாடல்களின் அடிகள் அல்லது தொடர்கள் நீலகேசி உரையில் காணப்படும்.

1. தானபாரமிதை—தானம் நிறைப்பது; அது

‘குன்றியின் துணையாகக் கொடுத்திட்டா னல்லனோ’

என்பதனாற் பெறப்படும்.

2. சீலபாரமிதை—சீலம் நிறைப்பது ; அது

“எண்ணிகந்த தானமும் சீலமும் மிகையாக்கி”

என்பதனாற் பெறப்படும்.

3. க்ஷமாபாரமிதை—க்ஷமைபூரித்தல், அது,

‘இன்னார்க்கும் இனியனும்’

என்பதனாற் பெறப்படும்.

4. வீரியபாரமிதை—வீரியம் நிறைத்தல் ; அது

“வினைவாய போதியை யுறுமளவும் வினைமடியான்
தளர்வின்றி ஒடிய தாளினு னல்லனோ”

என்பதனாற் பெறப்படும்.

5. தியானபாரமிதை — தியானம் நிறைத்தல்; சீல சமாதி, பிரக்ஞை அழியாமல் காப்பது. அது,

“நலங்கிளர் ஒழுக்கத்தான் நண்ணிய காலத்துக்
கலங்குதற்குத் தக்கன கண்டன உளவெனினும்

துலங்காது நிற்கும்தன் துணிவுடைமை காணுங்கால்
நிலம்பூணை யாயொழியும் நிறையினன் அல்லனோ"

என்பதனுற் பெறப்படும்.

6. உணர்ச்சி; பிரக்ஞாபாரமிதை — அது மார்க்க ஞானம்". அது,

"எவ்வந்தி ரறிவர செய்தினன் அல்லனோ"

என்பதனுற் பெறப்படும்.

7. உபாயமாவது—மோக்ஷோபமாகிய மார்க்கபூரணை; அது,

"பிறப்புக்கே டெடுத்துரைத்த பெருவழியா னல்லனோ"

என்பதனுற் பெறப்படும்.

8. தயாபாரமிதை - அருள்நிறைத்தல்; அது,

"மறைபோகப் பொழிகின்ற மாண்புசால் அருளினல்"

என்பதனுற் பெறப்படும்.

9. பலபாரமிதை - பலம் நிறைத்தல்; அது,

"பற்ருய வலிநிறைத்த பழியிலான் அல்லனோ"

என்பதனுற் பெறப்படும்.

10. ஞானபாரமிதை - ஞானம் நிறைத்தல்; அதுவும், "அறிவர செய்தினன்" என்பதனுற் பெறப்படும். (நீல. உரை. பக். 144-5).

இப் பாடல்களை நோக்குங்கால், "அல்லனோ" என வியந்து பாராட்டும் வினைக் குறிப்பால் முடிவன என்பது அறியப்படும். சில பாடல்களில் ஈற்றடி அல்லாதன மேற்கோளாக வந்தன. இவற்றில், இரண்டாவது பாடல் ஞானப்பிரகாசர் உரையில் காணப்படும்:

"எண்ணிகந்த காலங்கள் எம்பொருட்டான் மிகவுழன்று
எண்ணிகந்த காலங்கள் இருள்தீர ஒருங்குணர்ந்தும்
எண்ணிகந்த தானமும் சீலமும் மிகையாக்கி
எண்ணிகந்த குணத்தினன் எம்பெருமான் அல்லனோ"

இப் பாடலைச் சௌத்திராந்திக மதம் பற்றிய பகுதியில் எடுத்துரைத்து, "இது திருப்பதிகம் எனக் கொள்" என்று நூலின் பெயரையும் ஞானப்பிரகாசர் சுட்டியுள்ளார். இப் பாடலின் மூன்றும் அடிதான் மேலே நீலகேசி உரையில் காட்டப்பட்டது. இவ் அடிதான் நீலகேசி உரையில் தொடர்ந்து வரும் மற்ற பாடல் அடிகளையும் திருப்பதிக நூலிற்கு உரியவை என்று முடிவு செய்யத் துணை நின்றது. சமய திவாகரர் பெயர் சுட்டாமல் திருப்பதிகத்தின் முதலிரு பாடல்களையும் நீலகேசி கடவுள் வாழ்த்துப் பாவின் உரையில் முழுமையாகத் தந்துள்ளார். அவற்றுள் இரண்டாம் பாடல் ஞானப்பிரகாசர் உரையில் திருப்பதிகச் செய்யுள் என மேலே கூறப்பட்டதுதான். முதற் பாடல் வருமாறு :

"என்றும்தான் உலகுயக்கோன் எண்ணினன் அதுமுதலாச்
சென்றிரந்தார்க் கிந்தனன் பொருளுடம் புறுப்புக்கள்
துன்றினன் பிறக்குநன் உளனுயின் மாமேருக்
குன்றியின் துணையாகக் கொடுத்திட்டான் அல்லனே"

(பிறக்கண்ண ணுயினன் என்ற பாடம் நீலகேசி உரை பக்கம் 144இல் காணப்படும்.)

இப் பாடல் திருப்பதிகத்தின் துவக்கப் பாடல் என்பது மேலே தானபாரமிதையினை விளக்க சமயதிவாகரர் எடுத்துக்காட்டிய இதன் ஈற்றடியாலும் அறியப்படும்.

சைவ, சமண உரைகளால் திருப்பதிகம் பத்துப் பாடல்கள் உடைய பௌத்த நூல் என்பது உய்த்துணரப் படும்.

## 6. வீரசோழியம்

முதலாம் இராசேந்திரனின் மைந்தருள் ஒருவன் வீரராசேந்திரன் (கி. பி. 1063-1070). இவனுக்கு வீரசோழன் என்ற பெயரும் உண்டு. இவன் ஆணைக்கு அடங்கி மிழலைக் கூற்றத்துப் பொன்பற்றியூரில் வாழ்ந்த குறுநில மன்னர் புத்தமித்திரர் ஆவார். இவர் தமிழ்ப்புலமை சான்றவர். வீரசோழன் வேண்ட ஐந்திலக்கணத்தையும் சுருக்கி அவன் பெயரால் வீரசோழியம் என இலக்கண நூல் இயம்புவ தாகப் பாயிரப் பகுதியில் பகர்ந்துள்ளார். இந்நூலில்,

"தேமேவிய தொங்கல் தேர்வீரசோழன்",

"எல்லா உலகும் மேவிய வெண்குடைச்
செம்பியன் வீரராசேந்திரன் தன் நாவியல்
செந்தமிட் சொல்லின் மொழிமுதல் நன்னுதலே"

எனவரும் பாடல்கள் சோழப் பெருவேந்தனை இவர் மதித்த திறம் உணர்த்தும்.

நூலாசிரியர் தம் பெயருக்கேற்ப சிறந்த பௌத்த ராவர். இதனை,

"மிக்கவன் போதியின்மேதக் கிருந்தவன்"

எனவரும் பாயிரப் பாடலால் அறியலாம். புத்தமித்திரர் மகாயான பௌத்தம் அவலோகிதேசுவர போதிசத்துவரைத் தெய்வமாகப் போற்றியது. கி. பி. 270இல் சீனத்தில் மொழிபெயர்க்கப் பெற்ற அவலோகிதேசுவர குண கரண்வியூகம் என்ற மகாயான நூல் இவரின் சிறப்பினை விரித்துரைக்கும்.

இந்நூலில் கலைமகள் அவலோகிதரின் நாவிலிருந்து தோன்றிய செய்தி புனைந்துரைக்கப் பட்டது. வீரசோழியத்தில் அகத்திய முனிவர் அவலோகிதரிடம் தமிழ் பயின்ற செய்தியைக் காண்கிறோம் (பாயிரம் 2). மேலும், 'பன்னூராயிரம் விதத்தில் பொலிவும் புகழ் அவலோகிதன் மெய்த்தமிழே' (வீர. சொல். கிரி. 13), 'வேயார் பொதியத் தகத்தியனுர் சொன்ன மெய்த் தமிழ்க்கே' (வீர. சொல். கிரி. 6) எனவரும் பாடல்களால் இவ்விருவரும் தமிழினைத் தந்தவர் என்ற கருத்து அறியப்படும். கி. பி. 7-ம் நூற்றுண்டில் தென்னுட்டிற்கு வந்த யுவான்சுவாங் பொதிய மலையில் அவலோகிதன் வழிபாடு நிலவியதைக் குறிப்பிட்டுள்ளார். செரின் என்ற பௌத்த நூல் பேரறிஞர் சிவபிரானைக் குறிக்கும் திருஷ்டிக்குரு என்ற சொல்லும் அவலோகிதன் என்ற சொல்லும் பொருளொற்றுமை. உடையது எனக் கூறியுள்ளார் அன்றியும் சிவபிரானுக்குச் சிறப்புரிமை உடைய ஈசுவரன் என்ற சொல்லும் அவலோகிதனைக் குறிக்கிறது. அவலோகிதரின் தேவியாகத் தாரா போற்றப் பெறுகிருள். இவ்விருவரும் சிவன் உமை இருவரின் மறுவடிவங்களே என்பர் சர் சார்லஸ்

இலியட். சிவபிரானிடம் அகத்தியர் தமிழ் பயின்ற செய்தியும் இவண் எண்ணத் தக்கது. அகத்தியரைப் பௌத்தராகக் கருதும் மரபினைச் சரியாபிடகம், சாதகக் கதைகளில் காணலாம்.

### புத்தமித்திரனார்க்கு இளமைப்பெயர் சேந்தன்

வீரசோழிய ஆசிரியரின் இளமைப் பெயர் சேந்தன் என்பது உரையினால் உய்த்துணரப்படும். இவர் வாழ்வின் முற்பகுதியில் சோழரின் படைத் தலைவராய் விளங்கிச் சேரனையும் சிங்கள வேந்தனையும் வென்றிருத்தல் வேண்டும். இவ் வெற்றி இவன் தந்தையின் காலத்திலாதல், தமையனான முதலாம் இராசாதிராசன் காலத்திலால் நிகழ்ந்திருத்தல் வேண்டும். அன்றியும் இவன் காலத்து எழுந்த திருவெண்காட்டுச் சாசனத்தில் காணப்படும் மெய்க்கீர்த்தியின் சிங்கள மன்னன் இவனுக்குத் திரை செலுத்திய செய்தி காணப்படும். வீரசோழிய உரையில்,

> "வெல்படைத் தொண்டைமான் விறற் சேனாபதி
> சிங்களத் தரையன் வெண்குடை யதனொடு
> பொங்குபுகழ் வில்லவன் புறக்குடை கொண்டு
> பொலிதரு சேந்தன் பொன்பற்றி காவலன்
> மலிதரு பார்மிசை மன்னுவோன் எனவே" (பக். 141)

(இதேபாடல் சற்று வடிவம் மாறி இவ் உரையில் வேறோரிடத்திலும் வந்துள்ளது பக். *116*).

> "எழில்தரு ஞாயிற் றெழில் போல் நிறைந்து
> பொழிதருவான் திங்களே போல—முழுவுலகும்
> தன்புகழி னனிறைந்த தார்வேந்தன் சேந்தன் பாட்டு
> என்புகழ்தல் ஆவ தினி" (பக். 230)

எனவரும் பாடல்கள் காண்க.

### வீரசோழியப் புதுமை

பாலி பிடக உரையாசிரியர்கள் பாலியைப் பின்பற்றியது போலப் புத்தமித்திரனார் தமிழிற்கு இலக்கணம் வரையுமிடத்து வடமொழி மரபுகளைப் பின்பற்றியுள்ளார். நூலின் உறுப்புக்களுக்குச் சந்திப் படலம், உபகாரப் படலம், தத்திதப் படலம், தாதுப் படலம், கிரியாப்படலம் எனப் பெயர் சூட்டியுள்ளார். தற்புருடன், பகுவிரீகி

முதலிய வட சொற்களால் தமிழ்த்தொகையினைக் குறித்தல் காணலாம். தண்டியலங்காரப்படி தமிழின் இலக்கணம் கூறுவதாக உரைத்துள்ளார். இவருடைய வடமொழிப் புலமையினைப் பாராட்டுதல் வேண்டும். எனினும் தமிழ் மரபிற்கு முரணாக வடமொழி இலக்கணக் கூறுகளைக் கூறுதல் அறிஞர்களால் புறக்கணிக்கப்படும். ஒருவேளை அவர்காலத்து மணிப்பிரவாள நடை வளர்ந்தது அங்ஙனம் இலக்கணம் கூறுவதற்குக் காரணமாயிற்று எனலாம்.

புணர்ச்சி விதிகளில் இ, ஈ, ஐ முன் ந, வரின் ஞ் ஆகும்; ழ், ளீ, முன் த வரின் ட் ஆகும்; இவற்றின்முன் வல்லினம் வரின் ன், ட் ஆகும் எனக் குறிப்பன நோக்கத் தகும். (வீர. சந்தி. 15, 18). அவரே தமிட்சொல் (வீர. 7) இதட்டாமரை (26) புகட்சி (151) தமிணர்கள் (50) என ஆண்டிருத்தல் காண்க.

"திகடச்சக்கரம்"

என்ற கச்சியப்பரின் பாடற்கும் இவர் விதி இலக்கணமாயிற்று.

**பெருந்தேவனர் வரலாற்றறிஞர்**

இவர் பெயரில் பலர் வாழ்ந்துள்ளனர். எனின், இவர் புத்தமித்திரனரின் மாணவர்; வீரராசேந்திரசோழனல் ஆதரிக்கப்பெற்றவர் என்பதற்கு

"தடமார் தருபொழிற் பொன்பற்றி காவலன் தான்மொழிந்த
படிவீர சோழியக் காரிகை நூறென்ப:.தோ டொன்றின்
திடமார் பொழிப்புரை யைப்பெருந்தேவன் செகம்பழிச்சக்
கடனகவே நவின் ருன்தமிழ் காதலிற் கற்பவர்க்கே"

"எல்லா உலகும் தன்வெண்கொற்றக்குடை நிழற்கீழ் ஆளாநின்ற வீரசோழ மகாராசாவினுடைய நாவினிடமாகச் சொல்லப்பட்ட செந்தமிட் சொல்லுக்கு" (வீர. உரை. பக். 7) என வருவன சான்ருகும். "**ஆளாநின்ற வீரசோழ மகாராசா**" என நிகழ்காலத்தில் கூறுதல் பெருந்தேவனர், புத்தமித்திரனர் வீரராசேந்திரன் இருவர்க்கும் சமகாலத்தவர் என்பதற்குச் சான்ருகும். மேலும், வீரராசேந்திரனைப் பற்றிய பல வெண்பாக்களை இவர்

உரையில் காணலாம். (வீர. பக். 276). இவற்றுள் ஒரு பாடல் வீரசோழன் வேண்டப் புத்தமித்திரனார் நூலினை யாத்தார் என்பதைத் தெளிவுறுத்தும். சோழப் பெரு வேந்தர்களாகிய முதற் பராந்தகன், அவன் பெயரன் இரண்டாம் பராந்தகனாகிய சுந்தரசோழன், அவன் மகன் முதல் இராசராசன், அவன் மகன் முதல் இராசேந்திரன், அவன் மகன் இரண்டாம் இராசேந்திரன், அவன் இளவல் வீரராசேந்திரன் என்பவர்களைப்பற்றிய வரலாற்றுச் சிறப்புடைய பாக்கள் இவர் உரையில் காணப்படும். (வீர. பக். 276; பக். 144, 209; 175, 216; பக். 195, 276). இவற்றுள் பல இவரே எழுதியிருத்தல் கூடும். தம் உரையில் முதல் இராசேந்திரனை, பண்டித சோழன், விக்கிரம சோழன் எனவும் (வீர. பக். 192; 219, 276); வீர ராசேந்திரனைக் கரிகாலன், வீரன், பரநிருபகாலன் எனவும் குறித்தல் காணலாம் (பக். 276). பரநிருப இராக்கதன் என்ற படைத்தலைவன் பெயருண்மையால் வீரராசேந்திரனுக்குப் பரநிருபகாலன் என்பது ஒரு விருதுப் பெயர் என்க. முதல் இராசேந்திரனின் மெய்க்கீர்த்தியினையும் பெருந்தேவனார் எடுத்துரைத்துள்ளார் (பக். 169). வீரராசேந்திரன் காலத்து அரசியல் அதிகாரியான திருவெண்காட்டு நங்கை மகன் சிவலோகநாதன் என்னும் சிறந்த தமிழ்ப்புலவன், அரசன் பிறந்த ஆயில்ய நாளில் திங்கள்தொறும் திருவெண்காட்டுப் பெருமானுக்குச் சிறப்பு வழிபாடு செய்ய நிபந்தங்கள் வழங்கியுள்ளான். பெருந்தேவனார் உரையில் "திருவெண்காட்டைய எனின், தீவினைகள் கெடுமே" எனக் காணப்படுப் பாடல் சிவலோகநாதன் எழுதியிருத்தல்கூடும்.

பெருந்தேவனார் பௌத்தரே

வீரசோழிய உரையில் புத்தரைப்பற்றிய பல பாடல்கள் உள்ளன. இவற்றுள் சில உரையாசிரியரே பாடியிருக்கலாம். ஆனால், அவர் காலத்து வழங்கிய பௌத்த நூல்களில் உள்ள பல பாக்களும் இவர் உரையில் ஆளப்பெற்றன எனவும் கருதலாம். உரைப் பகுதியில்,

"புத்தன் கண்ணனை உய்வித்தான்" (பக். 42)

"புத்தனைத் தெய்வமாக உடையான் பௌத்தன்" (பக். 61)

"சிபி வருக்கத்தான் செம்பியன்" (பக். 61)

என வருவன பெருந்தேவனாரின் சமயச் சார்பினைப் புலப் படுத்தும். புத்தரைப் பரவும் வகையில் சுந்தரசோழனை வாழ்த்தும் பாடல்கள் இவர்க்கு முன்பே வழங்கி வந்தவை யெனலாம் (பக். 143-4, 209). வாகைத் திணையில் மேன்மைத் துறையினைப் பெரும்பகைமை தாங்குதல் என விளக்கி, புனிறுதீராப் புலிப் பசிக்குத் தான் உணவாகிப் புலிக் குழவியைக் காத்த அருட் செயலும்; கொடை என்ற துறைக்கு, இயக்கா இரப்பக் குருதியும் ஊனும் கொடுத்ததும்; இந்திரன் இரப்பப் புருவின் பொருட்டு உடம்பினை நிறுத்தருளிய செயலும் குறிக்கும் பாடல்கள் மேற்கோளாக வந்துள்ளன (வீர. பக். 114, 115). "பாசடைப்போதி" எனத் துவங்கும் பாடல் "உடம்பு நிறுத்துக் கொடுத்ததும் அன்றி" என நிற்பதால், அப்பால் பல அடிகள் இருந்திருத்தல் வேண்டும் எனலாம். துறவினை விளக்கும் உரையாசிரியர் மாரனை வென்ற திறனை மொழி யும் "வாடாப் போதி மரகதப் பாசடை" என்ற பாடலை எடுத்தாண்டார். இப்பாடல் கருத்து அசுவகோஷரின் புத்த சரிதத்தில் காணப்படும். பிடகங்களை "பாடாத போதி நெறி நீழல் மேய வரதன் பயந்த அறநூல்" (பக். 125) என்ற பாடல் உணர்த்தும். புத்தரைக் கடவு ளாகப் போற்றிய திறனை,

"போதிஎம் பிரானடிகள் போற்றில் வீடதாகும்" (பக். 127)

"போதியானை எம்பிரானை நாளும் ஏத்துவார்
பிறப்பிறப்பிலார்களே" (பக். 127)

எனவரும் பாடற் பகுதிகளால் உணரலாம். இவருக்கு முற்பட்ட யாப்பருங்கல விருத்தியுரையில் புத்தரைப் பற்றிய நான்கு பாடல்கள் உள்ளன (யாப். விரு. 15. 52, 53, 61). இவையனைத்தும் பண்டைய பௌத்த நூல்களில் வழங்கியிருக்க வேண்டும். பெருந்தேவனார் மேற்கோள் காட்டும் "வாடாப்போதி" என்ற பாடலை நச்சினார்க்கினிய ரும் புறத்திணையியல் உரையில் எடுத்தாண்டுள்ளார்.

பௌத்தம் தழைத்திருந்த சிங்களத்தினையும் இவர் நன்கு அறிந்தவர் என்பதற்கு,

"சிங்களவன் பேசுவது சிங்களம்" (பக். 61)

"முருங்கா என்னும் சிங்களச் சொல்
முருங்கை என வந்தவாறு காண்க" (பக். 66)

எனவரும் உரைப்பகுதி சான்ருகும். பொன்பற்றி காவலனின் சிங்க வெற்றியைக் குறிக்கும் பாடலை முன் பார்த்தோம்.

**சோழர்களின் பௌத்தப்பணி**

வீரராசேந்திரனின் மெய்க்கீர்த்தியில் அவன் சமயப் பொறையுடையவன் என்ற குறிப்பினைக் காண்கிரும். அறுவகைச் சமயத்தையும் ஆதரித்துள்ளான். அவன் பாட்டன் முதலாம் இராசராசன் கடாரத்தரசன் சங்கிராம விசயோத்துங்க வர்மனின் வேண்டுதலால் நாகையில் எழுப்பிய புத்தவிகாரத்திற்கு இராசராசப்பெரும்பள்ளி எனப் பெயரிட்டுப் பள்ளிச்சந்தங்கள் வழங்கியுள்ளான். அவன் தந்தை முதலாம் இராசேந்திரன் நாகையில் இராசேந்திரப் பெரும்பள்ளியை அமைத்து நிபந்தங்கள் வழங்கினன். இச் செய்தியை லெய்டன் பட்டயம் தெளிவாகப் புலப்படுத்தும். **வீரராசேந்திரனின் தலைநகராகிய கங்கைகொண்ட சோழபுரத்தில் சென்ற ஆண்டு ஐந்தடி உயரத்தில் பதுமாசனத்தில் அமர்ந்திருக்கும் புத்தரின் அழகு தவழும் சிலை கண்டெடுக்கப்பட்டு நெடுஞ்சாலையில் குடதிசை நோக்கி வைக்கப்பட்டுள்ளது.** இவ்வூர் வாசிகள் இன்னும் நான்கைந்து புத்தர் சிலைகள் நிலங்களில் புதைந்துள்ளன எனப் புகல்கின்றனர். இந்நகர்க்கு அண்மையில் முதலாம் இராசராசன் பெயரால் திகழும் செயங்கொண்ட சோழபுரத்திலும் புத்தரின் மாபெரும் வடிவம் வடக்கு நோக்கி வைக்கப்பட்டுள்ளது. ஆதலின் கி. பி. 10, 11ஆம் நூற்ருண்டுகளில் பௌத்தம் சோழ நாட்டில் தழைத்திருந்தது எனக் கருதலாம்.

## BIBLIOGRAPHY

1. Alice Getty ... The Gods of Northern Buddhism, 1928

2. Asvaghosa ... Buddha Charita (SBE Vol. XLIX 1894)

3. Ananda Coomaraswamy ... Buddha and the Gospel of Buddhism, 1916

4. Charles Eliot ... Hinduism and Buddhism Volumes II & III, 1921

5. Das Gupta, S. N. ... A History of Indian Philosophy Vol. I, 1963

6. Estlin Carpenter ... Theism in Medieval India (Hibbert Lectures)

7. Frian Harison ... South East Asia (1956)

8. Geiger William ... The Mahavamsa or the Great Chronology of Ceylon, 1912

9. Giles, H. A. ... The Travels of Fa-Haien (399-414 A. D.)

10. Har Dayal, Dr. ... The Bodhisattva Doctrine, 1932

11. Kandaswamy, S. N., Dr. .... Buddhism as Expounded in Manimekalai 1970

12. Kane, P. V. ... Purvamimamsa system

13. Keith, A. B. ... 1. Buddhist Philosophy, 1923
2. A History of Sanskrit Literature, 1928.

14. Kern, H. ... Mannual of Indian Buddhism.

15. Law, B. C., Dr. ... 1. Buddhaghosa 1923
2. A History of Pali Literature Vols. I & II, 1933

16. Mcgovern, W. M. ... A Manual of Buddhist Philosophy Vol. 1, Cosmology, 1923.

17. Mitra, C. R. ... Decline of Buddhism in India

18. Nariman, G. K. ... Literary History of Sanskrit Buddhism, 1923

19. Radhakrishnan, S. Dr. ... Indian Philosophy, Vols. I & II

20. Rhys Davids ... Buddhist India

21. Stcherbatsky, TH. Dr. ... Buddhist Logic Vols. I & II, 1932

22. Subramanya Iyer, K. V. ... Origin and Decline of Buddhism.. Vide Indian Antiquary Vol. XL. 1911

23. Tucci, G. ... Pre-Dignaga Buddhist Texts on Logic from Chinese Sources, 1929

24. Vidhyabhusana, S. Dr. ... History of Indian Logic (1921)

25. Winternitz, M. ... A History of Sanskrit Literature, Vol. II, 1933

26. மயிலை, சீனி. வேங்கடசாமி ... பௌத்தமும் தமிழும், 1950

27. பேராசிரியர் வையாபுரிப் பிள்ளை ... காவிய காலம், 1957

28. பேராசிரியர் மு. இராகவையங்கார் ... ஆராய்ச்சித் தொகுதி, 1938

# 10

# வைணவ சமய நூல்கள்

டாக்டர் ந. சுப்பு ரெட்டியார்

இடைக்காலப் பகுதியில் எழுந்த வைணவ நூல்கள் யாவை என ஆராயுமிடத்து 'நாலாயிரத் திவ்வியப் பிரபந்தம்' என்ற நூல் தொகுதி நம் கண்ணுக்குப்படுகின்றது. அடுத்து, 'கம்பராமாயணம்' என்ற காவியமும் தோற்றமளிக்கின்றது. இராமனைக் காவியத் தலைவனாகக் கொண்ட இது எல்லாச் சமயத்தாரிடமும் மிகச் செல்வாக்குப் பெற்றிருப்பதால் இதனைப் பயிலுங்கால் 'சமய இலக்கியம்' என்ற வரம்பினைக் கடந்து நிற்கின்றது. எனவே, இந்த ஆய்வுக் கட்டுரையில் 'கம்பராமாயணம்' ஆய்வுக்கு எடுத்துக் கொள்ளப்பெறவில்லை. 'நாலாயிரம்' மட்டிலுமே ஆயப்படும் பொருளாக அமைகின்றது. ஆயினும், இந்த ஆய்விலும் அடியிற்காணும் வரையறைகள் வகுத்துக்கொள்ளப் பெறுகின்றன.

1. விரிவஞ்சி நூலாசிரியர்களின் காலம் விரிவாக ஆராயப்பெறவில்லை; கால எல்லை மட்டிலுமே குறிப்பிடப் பெறுகின்றது.

2. நூல்களும் விரிவான திறனாய்வுக்கு உட்படுத்தப் படவில்லை. குறிப்பாக அவற்றின் சில சிறப்பியல்புகள் மட்டிலுமே எடுத்துக் காட்டப் பெறுகின்றன.

## நாலாயிரத் திவ்யப் பிரபந்தம்

**'நாலாயிரத் திவ்வியப் பிரபந்தம்'** அல்லது **'நாலாயிரம்'** என்பது தென்னாட்டில் வைணவப் பெருமக்களால் பெரிதும் போற்றப்பெறும் சிறந்த பக்தி நூல் என்பதும், அது மயர்வற மதிநலம் அருளப் பெற்ற அவதார புருடர்க

ளாகக் கருதப்பெறும் 'ஆழ்வார்கள்'[1] பன்னிருவரால் அருளிச் செய்யப்பெற்ற பாசுரங்கள் அடங்கியது என்பதும் பக்திப் பாடல்கள் என்ற நூல் வகையில் இதனைப் போன்ற பெருமையுடைய நூல்கள் இலக்கிய உலகில் மிகமிகச் சிலவற்றைத் தான் கருதுதல் கூடும் என்பதும் யாவரும் அறிந்த செய்திகளாகும்.

கால வெள்ளத்தாலும், போற்றுவாரின்மையாலும் எப்படியோ மறைந்து போன இப் பாசுரங்களை நாதமுனிகள் என்ற வைணவப் பெரியார் அரும்பாடுபட்டுத் திரட்டினர்.[2] வேதவியாசர் வேதங்களை நான்காக வகுத்துத் தொகுத்தது போல் நாதமுனிகளும் இப் பாசுரங்களை நான்கு தொகுதிகளாக்கி ஒவ்வொரு தொகுதியிலும் கிட்டதட்ட ஆயிரம் பாடல்கள் அடங்கியிருக்குமாறு அடைவு படுத்தினர். பாசுரங்களை அவர் 'இசைப்பா' 'இயற்பா' எனப் பிரித்து இசைப்பாக்களை மூன்று தொகுதிகளாகவும், இயற்பாக்களை ஒரு தொகுதியாகவும் அடைவுபடுத்தி வெளியிட்டார். அங்ஙனம் அடைவு படுத்திய தொகுதிகள் வருமாறு :

### (அ) இசைப்பாத் தொகுதிகள்

(*1*) **முதலாயிரம் :** இதில் அடங்கிய பிரபந்தங்களும் அவற்றிலடங்கிய பாசுரங்களின் தொகையும்.

| பிரபந்தம் | பாசுரத் தொகை |
|---|---|
| 1. பெரியாழ்வார் திருமொழி | 473 |
| 2. திருப்பாவை | 30 |
| 3. நாச்சியார் திருமொழி | 143 |
| 4. பெருமாள் திருமொழி | 105 |
| 5. திருச்சந்த விருத்தம் | 120 |
| 6. திருமாலை | 45 |
| 7. திருப்பள்ளி எழுச்சி | 10 |
| 8. அமலனுதிபிரான் | 10 |
| 9. கண்ணிநுண் சிறுத்தாம்பு | 11 |
| ஆக, பிரபந்தங்கள் 9-க்குப் பாசுரங்கள் | 947 |

1. எம்பெருமானின் திருக்குணங்களில் ஆழ்ந்து ஈடுபடுவோர் என்பது கருத்து.
2. 'திருமுறைகள்' வகுக்கப் பெற்ற வரலாறு போல் ஒரு வரலாறு இங்கும் உண்டு.

(2) **பெரிய திருமொழி:** இதிலடங்கிய பிரபந்தங்களும் பாசுரங்களின் தொகையும்.

| | **பிரபந்தம்** | **பாசுரத் தொகை** |
|---|---|---|
| 10. | பெரிய திருமொழி | 1084 |
| 11. | திருக்குறுந்தாண்டகம் | 20 |
| 12, | திருநெடுந்தாண்டகம் | 30 |
| | ஆக, பிரபந்தங்கள் 3-க்குப் பாசுரங்கள் | 1134 |

(3) **திருவாய்மொழி:** இதிலடங்கிய பிரபந்தமும் பாசுரத் தொகையும்.

| | **பிரபந்தம்** | **பாசுரத் தொகை** |
|---|---|---|
| 13. | திருவாய்மொழி | 1102 |
| | ஆக, பிரபந்தம் 1-க்குப் பாசுரங்கள் | 1102 |

## (ஆ) இயற்பாத் தொகுதி

(4) **இயற்பா:** இதில் அடங்கிய பிரபந்தங்களும் பாசுரத் தொகையும்.

| | **பிரபந்தம்** | **பாசுரங்களின் தொகை** |
|---|---|---|
| 14. | முதல் திருவந்தாதி | 100 |
| 15. | இரண்டாம் திருவந்தாதி | 100 |
| 16. | மூன்றும் திருவந்தாதி | 100 |
| 17. | நான்முகன் திருவந்தாதி | 96 |
| 18. | திருவிருத்தம் | 100 |
| 19. | திருவாசிரியம் | 7 |
| 20. | பெரிய திருவந்தாதி | 87 |
| 21. | திருவெழுக் கூற்றிருக்கை | 1 |
| 22. | சிறிய திருமடல் | 1 |
| 23. | பெரிய திருமடல் | 1 |
| | ஆக, பிரபந்தங்கள் 10-க்குப் பாசுரங்கள் | 593 |

நாதமுனிகள் தாம் ஏற்படுத்தின 'திருமொழி திருவாய் மொழித்' திருநாளில் (பகல் பத்து - இராப்பத்து) முதலா யிரத்தையும், பெரிய திருமொழியையும், திருவாய் மொழி யையும் தேவகானத்தில் ஏறிட்டுச் சேவித்தார் என்றும் இயற்பாவை இயலாகச் சேவித்தார் என்றும் 'கோயி லொழுகு' என்ற நூலினுல் அறிகின்றோம். இச் செய்தி 'இசைப்பா', 'இயற்பா' என்னும் பாகுபாட்டைத் தெளி வாக உணர்த்துகின்றது. இசைப்பாத் தொகுதிக்குப் பண், தாளங்கள் உள்ளன. 'பண் ஆர்பாடல் இன் கவிகள்'[1] என்று சடகோபரே அருளிச் செய்திருப்பதும், அவரது சீடரான மதுரகவிகளும்,

> 'தேவுமற் றறியேன் ; குருகூர் நம்பி
> பாவின் இன்னிசை பாடித் திரிவனே'[2]

என்று கூறியிருப்பதும் காண்க. பெரிய திருமொழிக்குப் பண் தாளங்கள் மதுரைத் தமிழ்ச் சங்கத்து ஏட்டில் காணப்பெறுகின்றன. 'இன்னிசையால் சொன்ன செஞ் சொல் மாலை'[3] 'பண்ணார்பாடல்'[4] 'பண்ணுள் ஆர்தரப் பாடிய பாடல்'[5] 'பண்கள் அகம் பயின்ற சீர்ப்பாடல்'[6] முதலியனவாக வரும் பெரிய திருமொழிப் பாசுரப் பகுதிகள் இத் தொகுதியும் 'இசைப்பா' எனத் தெரிவிக் கின்றன. இங்ஙனமே, முதலாயிரத்திற்கும் பண், தாள அமைப்புக்கள் முன்பு வழக்கத்தில் இருந்திருத்தல் வேண்டும். பெரியாழ்வார் பாசுரங்கள் பண்ணில் இயன் றவை என்பதை,

> "பட்டநாதன், பண்ணியல்நா லூற்றேழு பத்து மூன்றும்"[7]
> (பட்டநாதன் - பெரியாழ்வார்)

என்ற வேதாந்த தேசிகன் வாக்கினுல் அறியலாம். திரு மழிசைப்பிரான் அருளிய இரண்டு பிரபந்தங்களில் 'திருச்

---

1. திருவாய் மொழி. 10. 7: 5
2. கண்ணிநுண்—2
3. பெரிய திருமொழி 2. 8: 10; 9. 2; 10.
4. பெரிய திருமொழி. 1. 9: 10
5. பெரிய திருமொழி 4. 2: 10
6. பெரிய திருமொழி 6. 9: 10
7. பிரபந்தசாரம்—15 (தே. பி. 381)

சந்த விருத்தம்' முதலாயிரத்திலும், 'நான்முகன் திருவந்தாதி' இயற்பாவிலும் சேர்க்கப்பெற்று முறைப்படுத்தியுள்ளமையை நோக்கினலும் முதலாயிரத் தொகுதியிலுள்ள பிரபந்தங்கள் அனைத்தும் இசைப் பாக்களே எனத் துணிய இயலும். எனவே, இயற்பா ஒழிந்த ஏனைய மூன்று தொகுதிகளும் இசைப்பாத் தொகுதிகள் என்பது தெளிவாகும்.

மேலே கூறப்பெற்ற முதலாயிரம் பெரிய திருமொழி, திருவாய்மொழி, இயற்பா என்ற பாகுபாடும், பிரபந்தங்களின் அமைப்பு முறையும் நாதமுனிகள் காலத்தில் ஏற்பட்டவையாகும். பிரபந்தங்கள் இத்தனை என்று நாதமுனிகள் காலத்தில் வழங்கி வந்ததாகத் தெரியவில்லை. திருவரங்கத்து அமுதனர்[1] இராமாநுசர்மீது அருளியுள்ள 'இராமாநுச நூற்றந்தாதி' (108) இராமாநுசர் காலத்தில் இயற்பாத் தொகுதியுடன் சேர்க்கப்பெற்றது என்பதைக் 'கோயிலொழுகு' என்ற நூலின் வாயிலாக அறிகின்றோம். அக் காலத்திலிருந்து முதலாயிரத்தில், 'கண்ணிநுண் சிறுத்தாம்பை'ப் போல இயற்பாவின் இறுதியில், 'இராமாநுச நூற்றந்தாதி' எங்கனும் பெருவழக்காக ஓதப் பெறுவதாயிற்று. இன்றும் அவ்வழக்கு நடைமுறையில் உள்ளது. திருக்கோயில்களில் இயற்பாவின் இறுதியில் இப் பிரபந்தத்தை அநுசந்தித்து வருகின்றனர். இதனல் இந் நூற்றந்தாதி இயற்பாப் பிரபந்தங்களில் ஒன்ருக அமைந்துவிட்டமை புலனகும்.

'இராமாநுச நூற்றந்தாதி' சேர்ந்த திவ்வியப் பிரபந்தம் இருபத்து நான்கில் இயற்பாப் பிரபந்தங்கள் பதினென்று. இவற்றுள் கட்டளைக் கலித்துறைப் பாக்களில் அமைந்தனவும் இசைக்குச் சேரக்கூடியனவாகவும் உள்ள 'திருவிருத்தம்' 'இராமாநுச நூற்றந்தாதி' ஆகியவை 'இயற்பா' என்றே பெயர் பெறுகின்றன. மற்றும், இயற்பாத் தொகுதியில் ஒரே பாடலாகவுள்ள 'திருவெழுக் கூற்றிருக்கை', 'சிறிய திருமடல்', பெரிய திருமடல்' என்ற மூன்றைத் தவிர ஏனைய எட்டுப் பிரபந்தங்களும்

1. இராமாநுசர் காலத்தில் வாழ்ந்தவர் ; அவரால் ஆட்கொள்ளப் பெற்று அவர் சீடரானவர்.

அந்தாதிப் பிரபந்தங்களாகும். 'இராமாநுச நூற்றந்தாதி' மட்டிலும் கட்டளைக் கலித்துறைப் பாக்களால் அமைந்த அந்தாதிப் பிரபந்தமாக இருப்பினும், அதனை அந்தாதி எனப் பெயரிட்டு வழங்குதல் இல்லை. அந்தாதிப் பிரபந்த வகையை தொடர்நிலைச் செய்யுள் வகையில் 'சொற்றொடர் நிலைச் செய்யுள்' என வழங்குவர். இவை தொல்காப்பியர் கூறும் 'விருந்து' என்ற வகையில் அடங்கும்.[1] மேற் கூறப்பெற்ற எட்டு அந்தாதிப் பிரபந்தங்களில் முதலாழ் வார் மூவர் பாடிய மூன்று அந்தாதிகள், நான்முகன் திருவந் தாதி, பெரிய திருவந்தாதி ஆகிய ஐந்தும் வெண்பா அந்தாதிகள். இராமாநுச நூற்றந்தாதி மட்டிலும் கலித் துறை அந்தாதி, 'திருவாசிரியம்' 'திருவெழுக் கூற்றிருக்கை' ஆகிய இரண்டும் ஆசிரியப் பாவால் அமைந்த பிரபந்தங்க ளாகும். 'திருவாசிரியம்' அந்தாதிப் பிரபந்தமாக அமைந் தும் இயற்பாவிலுள்ள ஏனைய அந்தாதிப் பிரபந்தங்களைப் போல இறுதியும் முதலும் மண்டலித்து அமையவில்லை. திருவிருத்தம், சிறிய திருமடல், பெரிய திருமடல் ஆகிய மூன்றும் அகத்துறைப் பிரபந்தங்களாகும். இம் மூன்றுந் 'திருமடல்கள்' இரண்டும் கலிவெண்பாவாலானவை.

இனி, நாலாயிரத்திலுள்ள பிரபந்தங்களையும் அவற்றை அருளியுள்ள ஆழ்வார்களின் வரலாற்றினையும் நோக்கு வோம். இவை கால வரலாற்றின்படி அமைக்கப்பெற்று ஆராயப்பெறுகின்றன. முதல்முதலாக பிரபந்தங்களுக்கு வித்திட்ட முதலாழ்வார்கள் தொடங்கி நம் ஆய்வினைத் தொடங்குவோம்.

### 1. முதலாழ்வார்கள்

பொய்கையார், பூதத்தார், பேயார் என்ற மூவரும் 'முதலாழ்வார்கள்' என்று வழங்கப் பெறுவர். இவர்கள் மூவரும் அயோநிஜர்களாய் ஓர் ஐப்பசித் திங்களில் அடுத் தடுத்த நாட்களில் அவதரித்தனர் என்பதாகக் குரு பரம் பரையில் காணப்பெறுகிறது. அதாவது, பொய்கை யாழ்வார் கல்லுயர்ந்த நெடுமதில்சூழ் கச்சித் திருவெஃகா வில் பொற்றாமரைப் பொய்கையில் திருவோண நட்சத்

---

1. தொல். பொருள். நூல் 1551 இன் பேராசிரியர் உரை.

திரத்தில் திருமாலின் 'பாஞ்சசன்யம்' என்ற திருச்சங்கின் கூறுகவும், பூதத்தாழ்வார் திருக்கடல் மல்லையில் நறுமணம் வீசித் திவ்வியமாயிருக்கிறதொரு மாதவி மலரில் அவிட்ட நட்சத்திரத்தில் திருமாலின் 'கௌமோதகி' என்னும் கதையின் கூறுகவும், பேயாழ்வார் தேனமர்சோலைமாடமா மயிலை ஆதிகேசவப் பெருமாள் கோயில் திருக்கிணற்றில் உண்டானதொரு செவ்வல்லி மலரில் சதய நட்சத்திரத்தில் திருமாலின் 'நந்தகம்' என்ற வாளின் கூறுகவும் திருவவதரித்தனர். இவர்கள் மூவரும் பார்ப்பனர் என்பதற்குத் தக்க சான்றுகள் இல்லை.

இந்த மூவரும் சுத்தச் சத்து குணத்தினர்; ஒருவரை ஒருவர் அறியாதவர். ஞானபக்தி வைராக்கியங்கள் உடைய இவர்கள் ஓடித் திரியும் ஞானிகளாய் ஒரு நாளிருந்த விடத்தில் ஒரு நாளிராமல் திவ்விய தேச யாத்திரை செய்துகொண்டு வருவாராயினர். எம்பெருமான் இம் மூவரையும் திருக்கோவலூரில்[1] ஓர் இல்லத்தின் இடைக்கழியில் சந்திக்குமாறு திருவுளங்கொண்டது மன்றித் தானும் கூருழி வெண்சங்கேந்தி செந்தமிழ் பாடுவாராகின்ற இவர்களைத் தழுவி நெருக்கி நின்று பின்னர், 'வையந்தகளி'[2] 'அன்பே தகளி'[3] 'திருக்கண்டேன்'[4] என்கின்ற பாசுரங்களைப் பெற்றான் என்ற வரலாறு யாவரும் அறிந்ததே. இந்த வரலாற்றை,

'பாவரும் தமிழால் பேர்பெறு பனுவல்
பாவலர் பாதிநாள் இரவில்
மூவரும் நெருக்கி மொழிவிளக்கு ஏற்றி
முகுந்தனைத் தொழுத நன்னாடு'[5]

(முகுந்தன் – திருமால்)

என்று வரந்தருவாரும்,

---

1. விழுப்புரம்—காட்பாடி புகை வண்டிப் பாதையில் உள்ளது.
2. முதல் திருவந்தாதி. 1.
3. இரண்டாந் திருவந்தாதி. 1.
4. மூன்றாம் திருவந்தாதி. 1.
5. வில்லிபாரதம்—சிறப்புப் பாயிரம். 9.

'பாட்டுக்(கு) உரிய பழையவர்
மூவரைப் பண்(டு) ஒருகால்
மாட்டுக்(கு) அருந்தரும் மாயன்
மலிந்து வருத்துதலால்
நாட்டுக்(கு) இருள்செக நான்மறை
அந்தி நடைவிளங்க
வீட்டுக்(கு) இடைகழிக் கேவெளி
காட்டும்அம் மெய்விளக்கே'[1]

(பழையவர் - முதலாழ்வார்கள் ; மாடு - செல்வமாகிய ஆன்மா ; இருள்செக - அஞ்ஞானம் நீங்க; நான்மறை அந்தி - உபநிடதம்; நடை - வழி; வெளி - உபாயங்கள்.)

என்று வேதாந்த தேசிகரும் போற்றியுள்ளனர். அவரே இந்த வரலாற்றையும் 'தீங்கரும்பு கண்வளரும்'[2] என்ற திருமங்கையாழ்வாரின் திருவாக்கையும் அடிப்படையாகக் கொண்டு மூன்று ஆழ்வார்களைக் கரும்பினைப் பிழியும் மூன்று ஆலை உருளைகளாகவும், அவர்களால் நெருக்குண்ட எம்பெருமானை நெருக்குண்ட இடமாகிய திருக்கோவலூர் அருகில் விளையும் கரும்பாகவும், அந்த எம்பெருமானின் சௌலப்பிய குணத்தைச் சாருகவும் உருவகித்து ஒரு வட மொழிச் சுலோகத்தாலும்[3] பாராட்டியுள்ளார். மேற் குறிப்பிட்ட திருக்கோவலூர் நிகழ்ச்சிக்குப் பின்னர், இம் மூவரும் திருவல்லிக்கேணியில் திருமழிசையாழ்வாரைச் சந்தித்து அளவளாவியதாக வரலாறு கூறும். இவர்கள் சங்க காலத்தினை அடுத்த காலத்தில் வாழ்ந்ததாக வர லாற்று அறிஞர்கள் கருதுவர்.

**இவர்களுடைய அருளிச் செயல்கள்:** ஆழ்வார்கள் மூவரும் எம்பெருமானைக் கண்டதும் பக்திப் பெருக்கில் திளைத்துப் போயினர். பொய்கையாழ்வார் தமது 'வையந்தகளியா' என்ற வெண்பாவைத் தொடர்ந்து நூறு பாடல்கள் பாடி 'முதல் திருவந்தாதி' என்ற தமது திவ்வியப் பிரபந்தத்தை முடித்தார். பூதத்தாழ்வார் 'அன்பேதகளியா' என்ற தமது பாடலைத் தொடர்ந்து நூறு பாசுரங்களை அருளிச்செய்து தமது திவ்வியப் பிர

1. தேசிகப் பிரபந்தம். 89.
2. பெரிய திருமொழி 2. 10: 4
3. தேவார நீசஸ்துதி சுலோகம், 7.

பந்தமாகிய ‘இரண்டாம் திருவந்தாதி’யை நிறைவு செய்தார். பேயாழ்வார் ‘திருக்கண்டேன்’ என்ற தமது வெண்பாவைத் தொடர்ந்து நூறு பாக்களைப் பாடி ‘மூன்றாந் திருவந்தாதி’ என்ற தமது திவ்வியப் பிரபந்தத்தைத் தலைக் கட்டினர். இந்த மூன்று பிரபந்தங்களும் இயற்பாத் தொகுதியில் முதல் மூன்று பிரபந்தங்களாக இடம் பெற்றுள்ளன.

*சிறப்பியல்புகள் :* அடியிற் கண்டவற்றை இந்த ஆழ்வார்கள் அருளிச் செயல்களின் சிறப்பியல்புகளாகக் கூறலாம்.

(*1*) மூன்று திருவந்தாதிகளும் ஓசை அமைதி பெற்ற செம்பாகமான வெண்பாக்களாலான உயர்ந்த பக்திப் பனுவல்கள். சொற்செறிவும் உயர்ந்த கருத்துக்களும் பொருந்தியவை.

(*2*) இந்த மூவரின் கொந்தளிப்பற்ற அமைதியான பக்திப் பெருக்கினை இவர்களது திருப்பாசுரங்களில் காணலாம்.

எடுத்துக்காட்டாக,

‘கரு அரங்கத் துள்கிடந்து கைதொழுதேன் கண்டேன்
திருவரங்கம் மேயான் திசை’[1]

என்ற பொய்கையார் வாக்காலும்,

‘உளங்கோயில் உள்ளம் வைத்து உள்ளினேன் வெள்ளத்து
இளங்கோயில் கைவிடேல் என்று’[2]

என்ற பூதத்தார் வாக்காலும்,

‘எஞ்சா இணையடிக்கே ஏழ்பிறப்பும் ஆளாகி
அஞ்சாது இருக்க அருள்’[3]

என்ற பேயாரின் வாக்காலும் இதனை நன்கு அறியலாம். பிற சமயக் கண்டனம் இவர்கள் பாசுரங்களில் இடம் பெறவில்லை.

---

1. முதல். திருவந். 6
2. இரண். திருவந். 54
3. மூன். திருவந். 18.

(3) ஐந்து இந்திரியங்களையும் பட்டி மேயச் செல்லாத படி அடக்கித், தம்மை யறிந்து தலைவனை அறியும் மெய் யுணர்வினரே அப் பெருமானைக் காணுதல் கூடுதல் எனவும் (47), நன்கு தொடுக்கப்பெற்ற நறுமணமாலையைச் சாத்தியும், அவனைக் குறித்து வேள்விகள் ஆற்றியும் தந்திர மந்திரங்களாலும் அவனை வழிபடுவதும் வழிபாட்டு முறை களாகக் கூறுவர் பொய்கையாழ்வார்.

(4) மேற்கூறியவாறு வழிபடுவதாலும் இறைவன் திருநாமத்தை உச்சரிப்பதாலும் எய்தும் பலனைப் பல பாசுரங்களில் பகன்றுள்ளார். மனமாசு தீரும் என்றும், அருவினைகள் சாரா என்றும் (43), குன்றனைய குற்றம் செய்யினும் குணங்கொள்ளும் பொன்னாழிக்கையான் ஆவான் என்றும் (41), ஆறிய அன்பு இல் அடியார் தம் ஆர்வத்தால் கூறிய குற்றச் சொற்களைப் புகழ்ச் சொற்க ளாக ஏற்பவன் என்றும், எனவே அவனை வழிபடுதலே சிறப்பென்றும் (35) கூறுவர். எம்பெருமானுக்குப் பல வகையிலும் பணிசெய்வதே மக்கட்கு மேலான கடமை என்பதை உணர்த்த பெரிய திருவடி திருமாலுக்குப் பல வகையிலும் புரியும் சேவையை விளக்குவதான,

'சென்றால் குடையாம் இருந்தால்சிங் காதனமாம்
நின்றால் மாவடியாம் நீள்கடலுள்—என்றும்
புணையாம் அணிவிளக்காம் பூம்பட்டாம் புல்கும்
அணையாம் திருமாற்கு அரவு'[1]

(மாஅடி - பாதுகை; புணை - மெத்தை; புல்கும் - தழுவிக் கொள்ளும்.)

என்ற பாசுரம் படித்து மகிழத் தக்கது.

(5) எம்பெருமான் இவருக்கும் ஏனைய இருவருக்கும் காட்சி அளித்ததைக் குறிக்கும்,

'நீயும் திருமகளும் நின்றாயால் குன்றெடுத்துப்
பாயும் பனிமறுத்த பண்பாளா!—வாசல்
கடைகழியா உள்புகா காமர்பூங் கோவல்
இடைகழியே பற்றி இனி'[2]

என்ற இப் பாசுரத்தை அகச் சான்றாகக் கொள்ளலாம்.

1. முதல் திருவந். 53
2. முதல் திருவந். 30.

(6) பூதத்தாழ்வாரின் பல பாசுரங்கள் (5, 6, 7, 11) எம்பெருமானின் திருவடிப் பெருமை ஏத்துபவையாக அமைந்துள்ளன.

(7) பொய்கையார், பக்தர்களின் மனம் இறைவனை எளிதில் நாடும் என்பதனை,

'தாய்நாடு கன்றேபோல் தண்துழா யான் அடிக்கே
போய்நாடிக் கொள்ளும் புரிந்து'[1]

என்று கூறும் முறையைத் தழுவியே பூதத்தாரும்,

'கோல்தேடி ஓடும்
கொழுந்தே போன்றதே
மால் தேடி ஓடும் மனம்'[2]

என்று பாசுரம் அமைப்பர்.

(8) மாதவனின் பெயரைச் சொல்லுவதே வேதங்களின் சாரம் என்று கூறும் பூதத்தார் (39) அதனை ஓதுமாறு தன் நெஞ்சத்தையும் (36, 44) பிறரையும் (53) ஆற்றுப் படுத்துவர்.

(9) பேயார் ஏழு பிறப்பிலும் எம்பெருமானுக்கே அடிமை செய்யும் பேற்றையே தனக்கு அருளுமாறு வேண்டுவர் (19). எம்பெருமான் தன் நெஞ்சத்தில் வலைப் பட்டு மெத்தெனவே நின்று, இருந்து, கிடப்பதைப் பேசுவார் (94).

**இயற்கைக் காட்சிகள்**

(10) இந்த மூன்று ஆழ்வார்களின் பாடல்களிலும் இயற்கை எழில் நன்கு இயம்பப் பெறுகின்றது. அந்தக் காட்சிகள் பெரும்பாலும் திருவேங்கடத்தைச் சுற்றியே அமைகின்றன.

### (1) பொய்கையார் காட்டும் காட்சிகள்

(அ) திருவேங்கடமலையில் வாழும் குறவர்கள் தங்கள் தினைப்புனங்களில் பட்டிமேயும் யானையைத்

---

1. முதல் திருவந். 30
2. இரண். திருவந். 27

துரத்துவான் வேண்டி பரண்களிலிருந்தபடியே தங்கள் கையிலுள்ள பெரிய மாணிக்கக்கட்டியை யானையின்மீது எறிவர். அப்போது அங்குத் திரியும் மலைப்பாம்புகள் யானைமீதுபட்ட இரத்தினத்தைக் கண்டு, யானையை மேக மாகவும் இரத்தினத்தை மின்னலாகவும் எண்ணி மயங்கு கின்றன; மின்னலுடன் இடிதோன்றும் என்று அஞ்சி அப் பாம்புகள் புற்றினுள் புகுகின்றன (*38*).

(ஆ) புனங்களில் பட்டிமேயும் யானையைத் துரத்தும் குறவர்கள் ஒரு கையில் அம்பு தொடுக்கப் பெற்ற வில்லை யும் மற்றொரு கையில் கொளுத்தின தீவட்டியையும் கொண்டு யானையை அதட்டிச் செல்வர். யானை வெருவி யோடுங்கால், விண்ணின்றும் விழுமீன் தானாக அதன் வழியில் பேரொளியுடன் விழுவதைக் கண்டு அதனைக் குறவர்களின் கைத்தீவட்டி என மயங்கி மேல் செல்லாது திகைத்து நிற்கின்றது (*40*).

## (2) பூதத்தார் காட்டும் காட்சி

திருமலையில் மதங்கொண்டு மனம் போனவாறு திரி கின்றது, ஒரு களிறு. வழியில் தன் சிறந்த பிடியைக் காண்கின்றது. அப் பிடி தன்னை மீறி அப்பாற் செல்லா திருக்க அதற்கு இனிய உணவு ஈந்து மனநிறைவு செய் விக்க விரும்புகின்றது அக்களிறு. அதன் முன் நின்று இரண்டே கணுக்களையுடைய மூங்கிற் குருத்தொன்றைப் பிடுங்கி அருகிலிருக்கும் தேனில் தோய்த்துத் தருகின்றது. (*75*.) இக் காட்சியையே திருப்பிரிதிக் காட்சியாகத் திரு மங்கையாழ்வார் காட்டுவர்.[1] கம்பநாடன் சித்திரகூட காட்சியாக மிகப் பேரழகுடன் காட்டுவன்.[2]

## (3) பேயார் காட்டும் காட்சிகள்

(அ) திருவேங்கட மலையில் களிறு ஒன்று தன் பிடி யுடன் கலந்திருக்கும்பொழுது ஊடல் நிகழ்கின்றது. உடனே அது தன் பேடையை விட்டுப் பிரிந்து இங்குமங்கும் திரிகின்றது. தன் சினத்திற்குப் போக்கு வீடாகத் தன்

1. பெரிய திருமொழி. 1. 2: 5
2. கம்பரா. அயோத். சித்திரகூடம்—10

கொம்பினை மணிப்பாறைகளில் குத்துகின்றது. அப்பொழுது அக் கொம்பினின்றும் முத்துக்கள் உதிர்கின்றன (45).

(ஆ) திருமலையின் கொடுமுடி சந்திரமண்டலத்தளவும் ஓங்கி உயர்ந்துள்ளது. அங்கு ஒரு கற்பாறையின் மீது பெண் குரங்கொன்று அமர்ந்து கொண்டு தன் அருகிலிருக்கும் ஆண் குரங்கினை நோக்கி முழுமதியைப் பறித்துத் தருமாறு வேண்டுகின்றது. (58)

(11) இந்த ஆழ்வார்களின் பாசுரங்களில் திருவரங்கம், திருவெஃகா, திருக்கோவலூர், திருவிண்ணகர், திருவேங்கடம், திருக்கோட்டியூர், திருமாலிருஞ்சோலை, திருத்தண்கால், தஞ்சை மாமணிக்கோயில், திருக்குடந்தை, திருவத்தியூர், திருப்பாற்கடல், திருவல்லிக்கேணி, திருவேளுக்கை, திருப்பாடகம், திருவட்டபுயகரம், பரமபதம் (பனி விசும்பு), ஆகிய திவ்விய தேசங்கள் குறிப்பிடப் பெறுகின்றன.

(12) திருமாலின் அவதாரங்கள் பலவற்றினுள்ளும் திரிவிக்கிரமாவதாரச் செயல்கள், ஏனமாகி இருநிலம் கீண்ட செய்தி, கிருஷ்ணவதாரத்தில் நிகழ்ந்த பல்வேறு வீரச்செயல்கள், இராமாவதாரத்தில் ஒன்றிரண்டு நிகழ்ச்சிகள் ஆகியவை இந்த ஆழ்வார்களின் பாசுரங்களில் அதிகமாக இடம் பெற்றுள்ளன.

**இவர்கள் வாழ்ந்த காலம்**

ஆராய்ச்சியாளர்கள் இவர்கள் வாழ்ந்த காலத்தை ஏழாம் நூற்றூண்டின் இறுதிப் பகுதியும் எட்டாம் நூற்றூண்டின் முற்பகுதியுமாக இருக்கும் எனக் கருதுவர்.[1]

### 1. திருமழிசையாழ்வார்

தொண்டை நாட்டிலுள்ள திருமழிசை[2] என்ற தலத்தில் பகவானை வழிபட்டு வந்த பார்க்கவ முனிவருக்கு

---

1. Subbu Reddiar. N.: Religion and Philosophy of Nalayira Divya Prabandham with special reference to Nammalvar (Ph. D Thesis) P. 216.
2. திருவள்ளூர்—சென்னை நெடுஞ்சாலையில் உள்ளது இத்தலம்.

அவர் மனைவியிடம் திருமாலின் 'சுதர்சனம்' என்ற திருவாழியாழ்வாரின் கூறுகப் பிண்ட உருவத்தில் அவதரித்தார் இந்த ஆழ்வார். தாய் தந்தையர் அப் பிண்டத்தை ஒரு பிரப்பந்தூற்றில் கைவிட்டுச் சென்றனர். இப் பிண்டம் சில நாட்களில் உருபெற்ற குழந்தை வடிவமாகி அழுது சோர்ந்து கிடப்பதைக்கண்ட பிரம்பு விற்றுப் பிழைக்கும் திருவாளன் என்பான் ஒருவன், மகப்பேறு இல்லான், இக் குழந்தையை எடுத்து வளர்த்தான். குழந்தையும் நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்து மிக்க இளமையிலேயே பரஞான முதிர்ச்சி பெற்ற யோகியாக விளங்கியது. இவரது குழவிப் பருவத்தில் பால் கொடுத்து வந்த பாகவதர் ஒருவருக்கு இவரருளால் பிறந்த கணிகண்ணன் என்பான் இவருக்கு இணைபிரியாத தொண்டனானன்.

திருமழிசையார் உண்மைத் தத்துவம் இன்னதென அறிய முயன்று சைனம், பௌத்தம், சைவம் முதலிய எல்லாச் சமயங்களையும் ஆய்ந்து இறுதியில் திருமாலே முதற்கடவுள் என்று தெளிந்து, அப் பெருமானை இடைவிடாது தியானித்துக்கொண்டு திருவல்லிக்கேணியில் நெடுங்காலம் யோகத்தில் எழுந்தருளியிருந்தார். அப்பொழுதுதான் முதலாழ்வார்கள் மூவரும் இவரைச் சந்தித்து அளவளாவிப் பிரிந்தனர். பின்னர் இந்த ஆழ்வார், முதலாழ்வார் அவதரித்த திருத்தலங்களைத் தரிசித்துவிட்டுத் திருக்குடந்தைக்குச் செல்லத் திருவுளங் கொண்டு, இடையில் கச்சித் திருவெஃகாவில் எழுந்தருளியிருந்து தமக்கு உரிய பணிபுரிந்துவந்த கிழவியொருத்தியைக் குமரியாக்கினர். இதனை அறிந்த அந்நகரத்து வேந்தன் தன் கிழத்தனத்தையும் நீக்கியருளுமாறு கணிவண்ணன் மூலம் வேண்ட, ஆழ்வார் அதற்கிணங்கவில்லை. இதனால் சினங்கொண்ட அரசன் அவ் விருவரையும் நகரைவிட்டு வெளியேறுமாறு ஆணையிட்டனன். உடனே ஆழ்வார் வெஃகணைக்கிடந்த திருமாலையும் தம்முடன் வெளியேறுமாறு வேண்டி மூவருமாக நகரை விட்டேகினர். இச் செய்தியை அறிந்த மன்னன் ஆழ்வாரின் பெருமையை உணர்ந்து அவரை மீட்டும் நகருக்கு வருமாறு வேண்டியழைத்து அவருக்குத் தொண்டு பூண்டனன். ஆழ்வார் தம்

வாணுளின் இறுதிப்பகுதியில் திருக்குடந்தையில் வாழ்ந்து திருநாட்டை அலங்கரித்தனர்.

### இவரது அருளிச் செயல்கள்

திருச்சந்தவிருத்தம், நான்முகன் திருவந்தாதி என்ற இரண்டுதிவ்வியப் பிரபந்தங்களும் இவரது அருளிச் செயல்களாகும். இவற்றுள் முன்னது சந்த விருத்தத்தாலான 420 பாசுரங்களைக் கொண்டது. ஓதுவார் உள்ளத்தில் உணர்ச்சியைக் கிளர்ந்தெழச் செய்யும் பான்மையது. இது முதலாயிரத்தில் 'பெருமாள் திருமொழியை' அடுத்து இடம் பெற்றுள்ளது. பின்னது, 96 வெண்பாக்களாலானது. முதலாழ்வார் பிரபந்தங்களையடுத்து 'இயற்பா'த் தொகுதியில் இடம் பெற்றுள்ளது.

### சிறப்பியல்புகள்

அடியில் குறிப்பிடப் பெற்றவை இவரது பிரபந்தங்களின் சிறப்பியல்புகளாகக் கருதலாம்.

### நான்முகன் திருவந்தாதி

(1) திருமாலுக்கே இவரது பாசுரங்கள் பரத்துவம் கூறும்; நான்முகன் திருவந்தாதியின் முதற் பாசுரத்தில் இக் கருத்து தெளிவாக உள்ளது. ஒரு பாசுரத்தில் திருமாலை முன்னிலைப் படுத்தி 'நானுன்னை யன்றி இலேன் கண்டாய்; நாராயணனே, நீ என்னை அன்றி இலை' (7) என்று கூறுவர். இன்னொரு பாசுரத்தில் 'வீடு ஆக்கும், மெய்ப்பொருள்தான் வேத முதற்பொருள் தான் விண்ணவர்க்கு, நற்பொருந்தான் நாராயணன்'(13) என்று கூறுவர். தான் கருவில் இருந்த நாள் முதல் திரு இருந்தமார்பனுக்கு அடிமையாயிருப்பதாகக் கூறுவர் (92).

(2) பல பாசுரங்களில் திருமாலையே பரதெய்வமாகச் சிறப்பித்தும் நான்முகன் சிவன் முதலியோரை இழித்தும் பாடுவர் (6, 14). ஞானசம்பந்தரும் அப்பரும் சிவனை உயர்த்திக் கூறும் முறையில் இங்ஙனம் கூறியுள்ளனர். இத்தகைய போக்கு முதலாழ்வார்களின் பாசுரங்களில் அறவே இல்லை.

(3) ஒரு பாசுரத்தில் ஆழ்வாரின் தமிழ்ப்பற்று வெளிப்படுகின்றது. இதனை,

“ —விதையாக
நற்றமிழை வித்திஎன்
உள்ளத்தை நீ விளைத்தாய்
கற்றமொழி யாகிக் கலந்து” (81)

என்ற பாசுரத்தின் பகுதியால் அறியலாம்.

(4) இவர் திருவேங்கடத்தின் மீது பெருவிருப்புக் கொண்டவர் என்பதைப் பல பாசுரங்கள் சான்றுகளாக விளக்குகின்றன. “வெற்பு என்று வேங்கடம் பாடினேன்; வீடு ஆக்கி, நிற்கின்றேன்” (40) என்பதைக் காண்க.

(5) எம்பெருமானுக்குப் ‘பக்தி உழவன்’ என்று திருநாமம் இட்டுப் போற்றும் பாசுரத்தில் (23) “வித்தும் இடல் வேண்டுங் கொல்லோ விருந்தோம்பி மிச்சில் மிசை வான் புலம்” (குறள்-85) என்ற குறள் எடுத்தாளப் பெற்றுள்ளது.

(6) நான்முகன் திருவந்தாதியிலுள்ள வெண்பாக்கள் யாவும் ஓசை அமைதியுடன் கூடிச் செம்பாகமாக அமைந்தவை.

### திருச்சந்த விருத்தம்

திருமாலின் பெருமையும் வைணவ தத்துவமும் இப் பிரபந்தத்தில் பரக்கப் பேசப் பெறுகின்றன. இதனைப் பயில்வோர், நடை அழகிலும் ஓசை அழகிலும் வடசொற்கள் கலந்த தமிழின் குழைவிலும் ஈடுபடாமல் இருத்தல் முடியாது.

‘தன்னுளேதி ரைத்தெழும்
தரங்கவெண்த டங்கடல்
தன்னுளேதி ரைத்தெழுந்
தடங்குகின்ற தன்மைபோல்,
தன்னுளேபி றந்திறந்து
நிற்பவும் திரிபவும்
நின்னுளேய டங்குகின்ற
நீர்மை நின்கண் நின்றதே”[1]

---

1. திருச்சந். 10

என்ற பாசுரத்தை உரிய ஓசையுடன் படித்து அறியலாம்.

(1) திருமாலே ஐம்பூதங்கட்கும் உபாதான காரணம் என்றும், சீவான்மாக்கள் இறைவன் காட்டக் காண்பன என்றும், அவன் கருணையே வடிவானவன் என்றும், உயிர்களனைத்தும் அவனிடமே தோன்றி அவனிடமே ஒடுங்கும் என்றும், மறைகளாலும் அறியப்பெருத மாயன் அவன் என்றும், மக்களிடையே அவன் பலகாற் பிறந்தமை அவன் பத்துடையவர்க்கு எளியன் என்பதை விளக்குமென்றும், அவனே மூவகைக் காரணமும் ஆவான் என்றும் பலபட இறைவன் பெருமை இங்குக் கூறப்பெறுகின்றது.

(2) ஐம்புலன்களை அடக்கி, நல்ல புலத்தின் வழிகளைத் திறந்த ஞானச்சுடரைக் கொளுவி என்பெலாம் நெக்குருக உரோமஞ் சிலிர்ப்ப, உள்ளத்துள்ளே கனிந்தெழுந்ததோர் அன்பினுலேயே இறைவனைக் காணலாம் என்று பாசுரங்கள் பகர்கின்றன.

(3) சில பாசுரங்களில் எண்ணிக்கைகளை அடுத்தடுத்து வைத்துப் பாடிய பண்பினையும் காணலாம்.

"எட்டுமெட்டு மெட்டுமாயோ
 ரேழுமேழு மேழுமாய்
எட்டுமூன்று மொன்றுமாகி
 நின்றவாதி தேவனை,
எட்டினுய பேதமோடி
 றைஞ்சிநின்ற வன்பெயர்
எட்டெழுத்து மோதுவார்கள்
 வல்லர்வான மாளவே"[1]

என்ற விருத்தத்தைக் காண்க. இருபத்து நான்கு தத்துவங்களாகி, ஏழு தீவுகள், ஏழு குலகிரிகள், ஏழு கடல்கள் இவைகளாகி, பன்னிரண்டு ஆதித்தர்களாகி நின்ற ஆதிதேவனை எட்டு அங்கங்களும் தரையிற் படும்படி வணங்கி நின்று எட்டெழுத்துக்களாலாகிய பெயரை ஓதுபவர்கள் வானமாள வல்லவர் என்பது இதன் கருத்து.

---

1. திருச்சந். 77

(4) ஒரு பாசுரத்தில் (90) குலங்களாகிய ஈரிரண்டில் பிறக்கவில்லை என்றும், புலன்களை வெல்லவில்லை யென்றும் தம்மைப் பற்றிய குறிப்புக்களை தருதல் காண லாம்.

(5) இவர் பாசுரங்களில் சில இயற்கை வருணனை களைக் காணலாம். திரு அரங்கத்தைக் கூறும் பாசுரங்களில் இவை சிறந்து விளங்குகின்றன.

"நண்டையுண்டு நாரைபேர
வாளைபாய நீலமே
அண்டைகொண்டு கெண்டைமேயும்
அந்தண்நீர் அரங்கமே"[1]

என்பதை எடுத்துக்காட்டாகக் கொள்ளலாம். உள்ளுறை யையும் கண்டு மகிழலாம்.

(6) இறைவன் திருவடியையே என்றும் நினைக்க வல்ல உணர்வு தரவேண்டும் என்பதே இவர் இறைவனிடம் விடுக்கும் வேண்டுகோள்.

"பரந்தசிந்தை யொன்றிநின்று
நின்னபாத பங்கயம்
நிரந்தரம்நி னைப்பதாக
நீநினைக்க வேண்டுமே"[2]

என்பதைக் காண்க.

(7) வான்மீகி கூறாத, கூனியின் முதுகில் உண்டை கொண்டடித்த நிகழ்ச்சி இவர் பாசுரங்களில் (30, 49) காணப்பெறுகின்றது. இதனைக் கம்பநாடன் தனது காவி யத்தில் (பாலகா. மந்த 41; கிட்கிந். அரசியல் 32) எடுத் தாண்டுள்ளான்.

பொதுவாக இந்த ஆழ்வார் மங்களாசாசனம் செய்த திவ்விய தேசங்களில் முக்கியமானவை திருவல்லிக்கேணி, திருக்குடந்தை, திருவெஃகா, திருவெவ்வுள், திருவரங்கம்,

---

1. திருச்சந். 49
2. திருச்சந். 101

ஊரகம், பாடகம், அன்பில், திருப்பேர் நகர் முதலியவை யாகும். திரிவிக்கிரமாவதாரம், இராமாவதாரம், கிருஷ்ணு வதாரம், நரசிம்மாவதாரம், வராகாவதாரம் முதலிய அவதாரச் செயல்கள் இவர் பாசுரங்களில் இடம் பெற் றுள்ளன.

**இவர் வாழ்ந்த காலம்**

இதனைச் சரியாக அறுதியிடுவதற்கு ஏற்ற சான்றுகள் இல்லை. எட்டாம் நூற்ருண்டுக்கு முன்னரே இவர் வாழ்ந் திருத்தல் கூடும் என்று அறுதியிடுவர் ஆராய்ச்சியாளர்.

### (3) தொண்டரடிப் பொடியாழ்வார்

சோழ வள நாட்டில் கும்பகோணத்திற்கு அருகி லுள்ளது 'புள்ளம் பூங்குடி'[1] இந்தத் திவ்விய தேசத்திற்கு அருகிலுள்ள திருமண்டங்குடி என்னும் ஒரு சிற்றூரில் திருமாலின், 'வைஜயந்தி' என்னும் வனமாலையின் கூருக, ஆடிமாதம் கேட்டை நட்சத்திரத்தில் ஒரு முன்குடுமிப் பார்ப்பனருடைய திருமகனுகப் பிறந்தார் இந்த ஆழ்வார். இவரது பிள்ளைத் திருநாமம் விப்ரநாராயணன் என்பது. இளமையிலேயே நான்மறைகளையும் ஆறு சாத்திரங்களை யும் கசடறக் கற்று ஞான வைராக்கியங்கள் நிறையப் பெற்று வளர்ந்து வந்தார். இவருக்கும் வைகுண்டத்தி னின்றும் சேனை முதலியார் எழுந்தருளி வைணவர்க்குரிய 'சமாச்ரயணம்' முதலிய சடங்குகளைச் செய்து சென்ற தாக வைணவர்கள் நம்புவர். திருமணத்தில் விருப்பமற்று மாணியாக நின்று திவ்விய தேசங்கட்குச் சென்று எம் பெருமானை மங்களாசாசனம் செய்யக் கருதி முதலில் திருவரங்கம் பெரிய கோயிலை அடைந்தார். அழகிய மணவாளனின் வடிவழகினுல் கவரப்பெற்று திருவரங்கத்தி லேயே தங்கிவிட்டார். திருநந்தவனம் அமைத்து திருத் துழாய் மாலைகள் பல்வேறு பூமாலைகள் முதலியவற்றைத் தயாரித்து அரங்கநகர் அப்பனுக்குச் சமர்ப்பிக்கும் கைங் கரியத்தில் ஈடுபட்டு நின்ருர். தமது நிலைக்கேற்ப அந்தணர் திருமாளிகையில் அன்னபிட்சை வாங்கி அமுது செய்து வந்தார்.

---

1. திருமங்கையாழ்வாரால் மங்களாசாசனம் பெற்ற ஒரு திவ்விய தேசம்—பெரியதிருமொழி. 5.1

இவருடைய வாழ்வில் ஏற்பட்ட மாசு 'தேவ தேவி' என்ற விலைமகளின் வலையில் சிக்கியது. 'பொன்வட்டில் களவு' என்ற நிகழ்ச்சியை உண்டாக்கி எம்பெருமான் ஆழ்வாரை அந்த வலையினின்றும் விடுத்தது இவர் வாழ்வில் நேரிட்ட அற்புத நிகழ்ச்சி. பிறகு பெரியோர்களின் யோசனைப்படி தாம் செய்த பிழையைப் போக்கும் கழுவாயாக அடியார்களின் ஸ்ரீபாத தீர்த்தத்தை உட்கொண்டு தூய்மையானார். அடியார்கட்கு அடிமை பூண்டு ஒழுகி அதன் காரணமாகத் 'தொண்டரடிப்பொடி' என்ற திருநாமமும் பெற்றனர். இந்த ஆழ்வார் 105 ஆண்டுகள் வாழ்ந்து அதன் பிறகு நலமந்தமில்லதோர் நாட்டை அடைந்ததாகப் பெரியோர்கள் பணிப்பர்.

### இவரது அருளிச் செயல்கள்

இந்த ஆழ்வார் அருளிச் செய்த திவ்வியப் பிரபந்தங்கள், திருமாலை (45 பாசுரங்கள்), திருப்பள்ளியெழுச்சி (10 பாசுரங்கள்) என்பவையாகும். முன்னது அறுசீர் ஆசிரிய விருத்தத்தாலும் பின்னது எண்சீர் ஆசிரிய விருத்தத்தாலும் அமைந்தவை.

அடியில் குறிப்பிடப்பெறும் செய்திகள் இவரது அருளிச் செயல்களின் சிறப்பியல்புகளாகக் கருதலாம்.

(1) இவரது பாசுரங்கள் இவரது வாழ்க்கை வரலாற்றில் சில செய்திகளை அறியவல்ல அகச்சான்றுகளாக அமைகின்றன.

(1) சிற்றின்பத்தில் மூழ்கிக் கிடந்த தன்னை எம்பெருமான் உய்யக் கொண்டருளிய செய்தி,

'சூதனாய்க் கள்வ னாகித்
தூர்த்தரோ டிசைந்த காலம்
மாதரார் கயற்க ணென்னும்
வலையிற்பட் டழுந்து வேனைப்
போதரே யென்று சொல்லிப்
புந்தியிற் புகுந்து தன்பால்
ஆதரம் பெருக வைத்த
அழகனூ ரங்க மன்றே'[1]

1. திருமாலை. 36

'மெய்யெல்லாம் போக விட்டு
விரிகுழ லாரில் பட்டு
பொய்யெலாம் பொதிந்து கொண்ட
போட்கனேன் வந்து நின்றேன்'[1]

என்பவற்றுல் அறியலாம். மெய்ப்பொருள் நூலார் இவற்றை ஒரு சீவான்மா பரமான்மாவிடம் முறையிடுவதைக் குறிப்பனவாகக் கொள்வர்.

(2) இவர் எம்பெருமானுக்குத் துளவத் தொண்டு புரிந்து வந்த செய்தியை,

'துளவத்தொண் டாய சொல்சீர்த்
தொண்டர டிப்பொடி'[2]

'தொடையொத்த துவளமும் கூடையும் பொலிந்து
தோன்றிய தோள்தோண்டரடிப்பொடி யென்னும் அடியேனை'[3]

என்பவற்றுல் அறியலாம்.

(3) இவர் மறந்தும் புறந்தொழா மாந்தர்; பிற சமயங்களைக் கண்டித்துப் பேசுபவர்.

'புலையற மாகி நின்ற
புத்தொடு சமண மெல்லாம்
கலையறக் கற்ற மாந்தர்
காண்பரோ கேட்பரோ தாம்,
தலையறுப் புண்டும் சாவேன்
சத்தியங் காண்மின் ஐயா,
சிலையினு லிலங்கை செற்ற
தேவனே தேவ னுவான்'[4]

"வெறுப்பொடு சமணர் முண்டர்
விதியில்சாக் கியர்கள், நின்பால்
பொறுப்பரி யனகள் பேசில்
போவதே நோய தாகி,

---

1. திருமாலை. 33
2. திருமாலை. 45
3. திருப்பள்ளி எழுச்சி. 10
4. திருமாலை. 7

குறிப்பெனக் கடையு மாகில்
கூடுமேல் தலையை ஆங்கே,
அறுப்பதே கருமங் கண்டாய்
அரங்கமா நகரு ளானே"[1]

(முண்டர் - சைவர்; சாக்கியர் - பௌத்தர்)

என்றும்,

"மற்றுமோர் தெய்வ முண்டே
மதியிலா மானி டங்காள்,
....................................
அற்றமே லொன்ற றியீர்
அவனலால் தெய்வ மில்லை"[2]

(அற்றம் - மறைபொருள்)

என்றும் கூறுவன கொண்டு தெளியலாம். இவற்றால் திருமால் பால் இவருக்கிருந்த பக்தி ஊற்றம் தெளிவாகும்.

(2) இவர் காலத்தில் அணியரங்கன் திருமுற்றத்தை யோகியர்களான வைணவ அடியார்கள் பலர் அணி செய்து வந்த செய்தி,

"மேம்பொருள் போக விட்டு
மெய்ம்மையை மிகவு ணர்ந்து
ஆம்பரி சறிந்து கொண்டு
ஐம்புல னகத்த டக்கி,
காம்புறத் தலைசி ரைத்துன்
கடைத்தலை யிருந்து, வாழும்
சோம்பரை உகத்தி போலும்
சூழ்புனல் அரங்கத் தானே!"[3]

என்று வஞ்சப் புகழ்ச்சி கொண்டு பாடுதலால் அறியலாம்.

(3) பத்தித் திறமும் ஞானமுமே சாதியைக் காட்டிலும் சிறந்ததென்பது இந்த ஆழ்வாரின் கொள்கையாக இருந்தது. இதனை,

---

1. திருமாலை. 8
2. திருமாலை. 9
3. திருமாலை. 38

"பழுதிலா வொழுக லாற்றுப்
பலசதுப் பேதி மார்கள்
இழிகுலத் தவர்க ளேனும்
எம்மடி யார்க ளாகில்
தொழுமினீர் கொடுமின் கொள்மின்!
என்றுநின் னேடு மொக்க
வழிபட வருளி னய்போன்ம்
மதிள்திரு வரங்கத் தானே"[1]

(பழுது - குற்றம் : சதுப்பேதிமார்கள் - நான்கு மறைகளையும் ஓதி னவர்கள்; தக்க - சமமாக; வழிபட - ஆராதிக்கும்படி)

"அமரவோ ரங்க மாறும்
வேதமோர் நான்கு மோதித்
தமர்களில் தலைவ ராய
சாதியந் தணர்க ளேனும்
நுமர்களைப் பழிப்ப ராகில்
நொடிப்பதோ ரளவில் ஆங்கே
அவர்கள்தாம் புலையர் போலும்
அரங்கமா நகரு ளானே"[2]

(அமர - நெஞ்சில் பதியும்படி; தமர் - பாகவதர்; நுமர் - அடியார்கள்; பழித்தல் - கீழாகப் பேசுதல்; புலையர் - சண்டாளர்)

என வரும் பாசுரங்கள் கொண்டறியலாம். "வஞ்ச முக்குறும்பாம் குழியை"[3]க் கடந்து சாதிச் சிறப்பினும் ஞானச் சிறப்பினை மிகப் பெரிதாக மதித்த உயர் குலத்துத் திருமாலடியாருள் இவ் வாழ்வாரினும் சிறந்தார் வேறு ஒருவரும் இலர்.

*(4)* வடநூற்பயிற்சி மிக்கவர் என்பதைக் 'கத்திரபந்து'வின் கதையினாலும்,[4] நமன் - முட்கலன் உரையாடல்களாலும்[5] பிறவற்றாலும் நன்கறியலாம்.

*(5)* வடநூல்கள் ஒன்றிலும் காணப்பெறாத ஒரு கதை - அணில்கள் சேதுகட்டலில் பங்கு பெற்ற கதை[6] இவர் அருளிச் செயலில் காணப்பெறுகின்றது.

---

1. திருமாலை. 42
2. திருமாலை. 43
3. இராமாநுச நூற்றந்தாதி - 7
4. விஷ்ணுதர்மம்—அத்தியாயம் 97ல் வந்த கதை. திருமாலை—4.
5. ஷை அத்தி. 96 திருமாலை பாசுரம்—12.
6. திருமாலை—27.

(6) இவருடைய பாசுரங்களில் வைணவ சித்தாந்த குறிப்புக்கள் வந்திருப்பதை எடுத்துக்காட்டி விளக்கலாம். விரிவஞ்சி அதில் கவனம் செலுத்தப்பெறவில்லை.

(7) இவரது பாசுரங்களில் 'பச்சைமா மலைபோல் மேனி' (பா - 2) 'வேதநூற் பிராயம் நூறு' (பா - 3), 'வண்டின முரலும் சோலை' (பா - 14) 'குடதிசை முடியை வைத்து' (பா - 19), 'ஊரிலேன் காணி இல்லை' (பா - (29) போன்றவற்றை அன்பர்கள் அநுபவித்துப் பாடுவதுண்டு. வானொலியிலும் இவற்றை அடிக்கடி கேட்கலாம்.

(8) 'திருப்பள்ளி எழுச்சி என்ற பிரபந்தம் நாடோறும் காலையில் ஓதப்பெற்று வருகின்றதை வைணவ பக்தர்கள் நன்கு அறிவர். மணிவாசகப் பெருமான் அருளிய இதே தலைப்பையுடைய பதிகத்தையும்[1] பாரதியார் பாடிய திருப்பள்ளி எழுச்சி என்ற பாசுரங்கள் ஐந்தையும்[2] ஒப்பிட்டு ஓதி மகிழலாம். அடியார்கள் இருவரும் இறைவனை எழுப்பிய செயலை பாரதமாதாவினை எழுப்பியதாகப்பாடி முன்னோர் மொழியையும், பொருளையும் பொன்னே போல் போற்றிப் புதுத்துறையில் புகுத்திய பாரதியாரின் கற்பனை நம் உள்ளத்தைக் கவர்வதாக உள்ளது.

**இவ் ஆழ்வார் காலம்**

திருமங்கை மன்னனும் இவரும் ஒரே காலத்தவர் (ஏழாம் நூற்றாண்டு) எனக் கருதுவர் பேராசிரியர் மு. இராகவையங்கார் அவர்கள்.[3] திருமங்கையாழ்வார் திருவரங்கம் திருமதிலையும் சிகரங்களையும் பெருஞ் செலவிட்டுக் கட்டுவித்தபொழுது தொண்டரடிப்பொடியாழ்வார் திருத்தொண்டு செய்து வந்தார் என்று 'குருபரம்பரைகள்' கூறுவதாலும், திருமங்கையாழ்வார் காலத்தே சமணர் முதலிய புறச்சமயங்கள் வைதிகச் சமயக் கடவுளரை

---

1. திருவாசகத்திலுள்ளது. இது திருப்பெருந்துறையில் பெருமானால் அருளப் பெற்றது.
2. பாரதியார் கவிதைகள்—11 ஆம் பாடல்.
3. ஆழ்வார்கள் காலநிலை—பக்கம் 159.

இகழ்ந்து வந்த செய்தியை இந்த ஆழ்வார் குறிப்பிடுவ தாலும் அங்ஙனம் கருதினர் பேராசிரியர் அய்யங்கார் அவர்கள். ஆயினும், பேராசிரியர் டாக்டர் ந. சுப்பு ரெட்டியார் அவர்கள் வேறு சில சான்றுகளைக் கொண்டு இவரைத் திருமங்கையாழ்வாருக்கு முற்பட்டவராகக் கருதுவர்.[1]

## 4. குலசேகராழ்வார்

இவர் திருமாலின் மார்பிலுள்ள கௌத்துவ மணியின் அவதாரமாகக் கேரள நாட்டுக் கொல்லி மாநகரில் மாசித் திங்கள் புனர்பூச நட்சத்திரத்தில் கேரள இளவரசராகத் தோன்றினர்.[2] க்ஷத்திரிய குலத்தினர். இளமையிலிருந்தே திருமால் பக்தியில் தலைசிறந்து விளங்கினர். இவர் இளமையிலேயே அரசுரிமையை வெறுத்துத் திருவரங்கம் சென்று திருக்கோயில் திருப்பணியில் ஈடுபட்டனர் என்று குருபரம்பரை கூறும். தம் திருமகனுக்குப் பட்டம் கட்டிவிட்டுத் துறவு பூண்டனர் என்று செப்பும் திவ்விய சூரிய சரிதம். தாம் அரசு புரிந்த காலத்தில் அரவணையில் பள்ளி கொண்ட எம்பெருமானையும் அவனடியார்களையும் பெரிதும் ஆதரித்து வந்தார் ஆழ்வார். இதன் காரணத்தால் தான் இவருக்கு உலகப் பற்றின்மை ஏற்பட்டது என்று கருதி அரசர்க்கு அடியார்களின் மீது வெறுப்புண்டாக்க ஒரு திட்டம் வகுத்தனர் அமைச்சர்கள். அரண்மனையில் களவுபோன அரதன மாலையைக் கவர்ந்தவர்கள் அடியார்களே என்று அவர்கள் மீது ஒரு பழியைச் சுமத்தினர். ஆயின், ஆழ்வார் 'பரமனடியார் ஒரு போதும் அது செய்யார்' என்று பாம்புக்குடத்திற் கையிட்டுக் சூளுறவு செய்து அவ்வடியார் பெருமையை நிலைநாட்டியதை,

---

1. Religion and Philosophy of Nalayira Divya Prabandham with special Reference to Nammalvar (Ph. D. Thesis)—P.223
2. இங்ஙனம் கூறும் பின்பழகிய பெருமாள் சீயரின் குருபரம்பரை. கருட வாகன பண்டிதரின் திவ்விய சூரிய சரிதம் 'கோழிக்கூடு' என்று செப்பும். வேதாந்த தேசிகரும் (தேசிகப்பிரபந்தம்—374) மணவாள மாமுனிகளும் (உபதேச ரத்னமாலை—31) வஞ்சிக்களம் என்று உரைப்பர்.

‘ஆரம் கெடப்பரன் அன்பர்கொள்
ளார் என்(று) அவர்களுக்கே
வாரம் கொடுகுடப் பாம்பில்கை
இட்டவன், மாற்றலரை
வீரம் கொடுத்தசெங் கோல்கொல்லி
காவலன் வில்லவர்கோன்,
சேரன் குலசே கரன்முடி
வேந்தர் சிகாமணியே’[1]

(ஆரம் - மாலை; வாரம் - பட்சபாதம்; மாற்றலர் - பகைவர்; சிகா மணி - சிறந்தவர்.)

என்ற பாசுரத்தின் மூலம் அறியலாம்.

இந்த ஆழ்வார் இராமபிரானது திவ்ய வரலாற்றில் மிக்க ஈடுபாடு கொண்டவர். அவன் கதை கேட்பதில் பெருவிருப்பு காட்டுவர். ஒரு சமயம் ஒரு புராணிகர் கரன் வரலாற்றை விளக்கும்போது பல்லாயிர அரக்கர்களுடன் கரதூடனர் என்று மொழிந்த அளவில் ஆழ்வார் அந்த நிகழ்ச்சி அப்பொழுதுதான் நடைபெற்றது என்று கருதி வில்லேந்தி இராகவனுக்குத் துணைபுரிய எழுந்தனர் என்றும், அந்நிலையைக் கண்ட புராணிகர் உடனே, இராம பிரான் தனியனாக இருந்தும் அப்பெருஞ் சேனையுடன் கரனைக் கொன்றனர் என்று கூறிய அளவில், வீராவேசம் அடங்கி ஆழ்வார் அமர்ந்தனர் என்றும் வரலாறு கூறும். இவர் பல திவ்ய தேசங்களைச் சேவித்த பின்னர் காட்டு மன்னார் கோயிலில் முக்தி பெற்றனர் என்பர்.

### இவரது அருளிச் செயல்

இவர் ஒரே ஒரு பிரபந்தம் அருளிச் செய்துள்ளார். அது ‘பெருமாள் திருமொழி’ என்ற பெயரால் வழங்கப் பெறுகின்றது. அதில் 105 பாசுரங்கள் உள்ளன. இவை பத்துத் திருமொழிகளாக முதலாயிரத்தில் நாச்சியார் திரு மொழிக்கு அடுத்து இடம் பெறுகின்றன. திருவரங்கம் பெரிய கோயிலில் அரவணையில் பள்ளி கொண்டுள்ள அழகிய மணவாளன் பேரில் மால்கொண்டு பாடியவை முதல் மூன்று திருமொழிகள். வண்டினங்கள் பண்பாடும் வேங்கடத்து நெடியோன் பேரில் அருளியது, நான்காவது

1. தனியன். மணக்கால் நம்பி அருளியது.

திருமொழி. 'மீன் நோக்கு நீள்வயல் சூழ் வித்துவக் கோட்டம் மான் மீது' திருவாய்மலர்ந்தருளியது ஐந்தாம் திருமொழி. கிருஷ்ணுவதாரத்தில் ஈடுபட்டு ஆய்ச்சியர்கள் கண்ணனுடன் ஊடல் கொண்டு உரைத்த பாவனையில் ஒரு திருமொழியையும், தேவகி புலம்பும் பாவனையில் ஒரு திருமொழியையும் அருளியுள்ளார். அதன் பின் இராமாவ தாரத்தில் காதல் கொண்டு கோசலை இராமனைத் தொட்டிலி லிட்டுத் தாலாட்டும் பாவனையில் ஒரு திருமொழியையும் இராமனது பிரிவிற்காற்ருது தசரதன் கதறி அழும் நிலையில் ஒரு திருமொழியையும், சுருக்கமாக இராமா யணத்தைப் பேசுவதாக ஒரு திருமொழியையும் அருளிச் செய்து தம் பிரபந்தத்தைத் தலைக்கட்டியுள்ளார். இதனைத் தவிர, வடமொழியில் 'முகுந்தமாலை' என்ற ஒரு நூலை யும் அருளியுள்ளார்.

### சிறப்பியல்புகள்

அடியில் கண்டவற்றைப் பெருமாள் திருமொழியின் சிறப்பியல்புகளாகக் கொள்ளலாம்.

(1) ஆழ்வார் அரங்க நகர் அப்பன்மீது ஆராக்காதல் கொண்டனர் என்ற உண்மையை முதற் பதிகம் அரண் செய்கின்றது. ஒவ்வொரு பாசுரத்தின் இறுதியிலும் இவரது ஆர்வத் துடிப்பினைக் காணலாம்.

"கருமணியைக் கோமளத் தைக் கண்டு கொண்டுஎன்
கண் ணிணைகள் என்றுகொல்லோ களிக்கும் நாளே"[1]

என்பதைக் காண்க.

(2) ஒரு பாசுரத்தில் 'வைணவ இலக்கணம்' பற்றிய குறிப்பு வருகின்றது. 'இரு முப்பொழுதேத்தி'[2] என்ற தொடரில் நாடோறும் வைணவர் மேற்கொள்ள வேண்டிய அமிக மநம், உபாதாநம், இஜ்யா, ஸ்வாத்யாயம், யோகம் ஆகிய ஐந்து ஒழுக்கங்களும் குறிப்பிடப்பட்டுள்ளதைக் காண்க.

---

1. பெருமாள் திருமொழி. 1:1
2. பெரு. திரு. 1. 7

(3) அடியார் பத்தியில் பித்தேறிக் கிடக்கும் ஆழ்வார் நிலையைக் காட்டுகின்றது இரண்டாவது பதிகம்.

> "ஆடிப்பாடி அரங்காவோ என்ற
> ழைக்கும்தொண்ட ரடிப்பொடி
> ஆடநாம்பெறில், கங்கை நீர்குடைந்
> தாடும்வேட்கையென் னாவதே"[1]

அடியார் திருவடித் துகள்களில் மூழ்கப்பெற்றால் கங்கையில் நீராட வேண்டும் என்ற விருப்பமும் வீணாம் என்கின்றார்.

(4) தன்னை 'அழகிய மணவாளப்பித்தன்' என்று சொல்லிக்கொள்வதில் பெருமிதம் கொள்கிறார் ஆழ்வார். 'பேயனாய் ஒழிந்தேன் எம்பிரானுக்கே'[2] என்பது காண்க.

(5) வேங்கடத்தின் மீதுள்ள பதிகம் அற்புதமானது. படிப்போரைப் பாடிய வாய் தேனூறச் செய்து பக்திப் பரவசராக்கும் பான்மையது. "எம்பெருமான் திருமலையில் ஏதேனும் ஆவேனே"[3] என்ற வாக்கினைக் காண்க.

(6) வித்துவக்கோட்டம்மான் மீதுள்ள பதிகம் பல்வேறு நிலையில் சீவான்மா பரமான்மா உறவினை உணர்த்துகின்றது. இதில் ஆழ்வார் கையாளும் உவமைகள் நெஞ்சைப் பிணிக்கும் தன்மையுடையவை. இப் பதிகம் போன்ற ஓர் பதிகத்தை நாலாயிரம் எங்கும் தேடிக் காண்டல் அரிது.[4]

(7) ஆழ்வார் தேவகியாகவும், தயரதனாகவும் நின்று பாடிய பாடல்களில் ஆழ்வாரின் 'ஒட்ட உணர்தல்' (Empathetic feeling) என்ற நிலையைக் காணலாம். கண்ணன் செய்த சிறு குறும்பினை நினைக்கிறாள் தேவகி. எங்ஙனம்?

---

1. பெரு. திரு. 2:2
2. பெரு. திரு. 3:8
3. பெரு. திரு. 4:10.
4. சுப்பு ரெட்டியார், ந. மலைநாட்டுத் திருப்பதிகள் (12வது கட்டுரையைப் படித்து மகிழ்க).

"முழுதும் வெண்ணெ யளைந்துதொட் டுண்ணும்
முகிழி ளஞ்சிறுத் தாமரைக் கையும்
எழில்கொள் தாம்புகொண் டிப்பதற் கெள்கும்
நிலையும் வெண்தயிர் தோய்ந்தசெவ் வாயும்
அழுகை யுமஞ்சி நோக்குமந் நோக்கும்
அணிகொள் செஞ்சிறு வாய்நெறிப் பதுவும்
தொழுகை யுமிவை கண்ட யசோதை
தொல்லை யின்பத் திறுதிகண் டாளே"[1]

என்ற பாடல் பாடிப்பாடி மகிழத் தக்கது. அங்ஙனமே தசரதனுக நின்று புலம்புவதாக அமைந்த,

"கொல்லணைவேல் வரிநெடுங்கண் கோசலைதன்
குலமதலாய்! குனிவில் ஏந்தும்
மல்லணைந்த வரைத்தோளா! வல்வினையேன்
மனமுருக்கும் வகையே கற்ருய்,
மெல்லணைமேல் முன்துயின்ருய் இன்றினிப்போய்
வியன்கான மரத்தின் நீழல்
கல்லணைமேல் கண்துயிலக் கற்றனையோ
காகுத்தா! கரிய கோவே"[2]

என்ற பாடல் படிப்போரின் நெஞ்சினை நீர்ப் பாண்ட மாக்கும் தன்மையது.

*(8)* பத்தாம் பதிகத்தில் அமைந்த 'சம்பூர்ண இராமா யணம்' படிப்போரின் நெஞ்சினைக் கவரும் தன்மையது. ஆழ்வாரின் கம்பீரமான 'இராஜ நடை' அமைந்த பாடல்கள் படிப்போரின் மனத்தில் என்றும் ஒலித்து நிற்கும் பான்மை யுடையவை. தமிழின் குழைவும், கவிதையின் கம்பீர நடையும் கற்போரின் கருத்தைக் கவ்வி நிற்கும் நேர்த் தியை இங்குக் காணலாம்.

**இவர் வாழ்ந்த காலம் :** பேராசிரியர் எஸ். வையாபுரிப் பிள்ளை அவர்கள் இவர் வாழ்ந்த காலம் எட்டாம் நூற் ருண்டின் தொடக்கம் என்று கூறுவர்.[3] பேராசிரியர் மு. இராகவையங்கார் இந்த ஆழ்வாரும், திருமங்கையாழ்

1. பெரு. திரு. 7:8
2. பெரு. திரு. 9:3
3. History of Tamil language and Literature—P.110

வார், தொண்டரடிப்பொடிகள் ஆகிய இருவரும் சம காலத்தவர் என்று கருதுவர்.[1]

## 5. திருப்பாணாழ்வார்

இவர், 'கங்கையிற் புனிதமாய காவிரி' நதிக்கரையி லுள்ள திரிசிரபுரம்—உறையூரில் திருமாலின் ஸ்ரீவட்ஸத் தின் (மறு) கூறுகக் கார்த்திகை மாதம் உரோகிணி நட்சத் திரத்தில் ஓர் அந்தணனது, நெற்பயிற் கழனியில் தோன்றினர். பாணர் குலத்துப் பிறந்தான் ஒருவன் தன் நல்லூழின் காரணமாக மருவிய காதல் மனையாளின் மலடு தீர அந்தத் தெய்வீகக் குழவியை எடுத்து வளர்த்து வந்தான். அக் குழந்தையும், நாளொருமேனியும் பொழு தொரு வண்ணமுமாக வளர்ந்து வந்தது. இயற்கையி லேயே இளமை தொட்டு உலகப் பற்றற்று எம்பெருமானது திருவடித் தாமரைகட்கே தம் மனத்தைப் பறிகொடுத்தார், 'பாணர்' என்ற திருநாமத்துடன் விளங்கிய பாண் பெருமாள். நாரதமுனிவர் போன்று ஞானபக்தி வைராக்கி யங்களும் இசைத்திறனும் முதிர்ந்து நின்ற பாணருக்கு சேனை முதலியார் (விஷ்வக்ஸேனர்) எழுந்தருளி ஒருவரும் அறியாவண்ணம் திருவிலச்சினை சாதித்துச் சென்றார் என்பது வைணவர்களின் நம்பிக்கை. காவிரியின் தென் கரையிலிருந்து கொண்டே திருவரங்கப் பெருமான்மீது யாழில் வைத்துப்பாடிச் சேவித்து வந்த இவரை எம்பெரு மான் தன் கனவில் கட்டளையிட்டவாறு உலக சாரங்க முனிவர் பாண்பெருமாளைத் தம் முதுகில் சுமந்து சென்று அரங்கநகர் அப்பன் முன்னர் இறக்கிவிட்டார்.[2] ஆழ்வாரும் அணியரங்கனது திருமேனியைப் பாதாதி கேசமாகச் சேவித்து அதில் ஆழ்ந்து அதன் அழகை அனுபவித்தார். அந்த அநுபவம் பின்புளாருக்கும் தெளிவாகும் பொருட்டுப் பத்துப் பாசுரங்களாக அருளினர். இறுதியாக,

"அண்டர் கோன்அணி யரங்கன்என் அமுதினைக்
கண்ட கண்கள்மற் றொன்றினைக் காணவே"[3]

---

1. ஆழ்வார்கள் கால நிலை. பக்கம் 159.
2. இதனால் இந்த ஆழ்வாருக்கு 'முனிவாகனர்' என்ற மற்றொரு திருநாமமும் ஏற்பட்டது.
3. அமலனாதி—10.

என்று தன் துணிவினை வெளியிட்டு மிகவும் உகப்புடன் நிற்கையில், எம்பெருமான் அவரை அங்கீகரிக்க, அவரும் அனைவருங்காண அப்பிரானது திருவடிகளில் கலந்து மறைந்தார் என்று கூறுவர். இவர் வாழ்ந்திருந்தது ஐம்பது ஆண்டுக்காலம் என்பர்.

**இவரது அருளிச்செயல்:** அரங்கநகர் அப்பன்மீது பாடிய பத்துப் பாசுரங்களடங்கிய, 'அமலனாதிபிரான்' என்ற திவ்வியப் பிரபந்தம் ஒன்றே இவரது அருளிச் செயலாகும். இது நாலாயிரத்தில் முதலாயிரத்தின் இறுதியில் 'கண்ணிநுண் சிறுத்தாம்புக்கு' முன்னர் இடம் பெற்றுள்ளது.

இந்தத் திருமொழியால் இவர் அரங்கநகர் அப்பன்மீது கொண்டுள்ள ஆராக்காதல் தெளிவாகின்றது. இதனை வேதாந்த தேசிகர்,

> "காண்பனவும் உரைப்பனவும் மற்றொன் றின்றிக்
> கண்ணனையே கண்டுரைத்த கடிய காதல்
> பாண்பெருமாள் அருள்செய்த பாடல் பத்தும்
> பழமறையின் பொருளென்று பரவு மின்கள்"[1]

என்று பாராட்டிப் பேசுவர். இந்தத் திவ்வியப் பிரபந்தத்தின் சிறப்பியல்புகளை ஒரு சிறிது நோக்குவோம்.

பாதாதிகேசமாகச் சேவிப்பதாக அமைந்தது இந்தத் திவ்வியப் பிரபந்தம்.

1. முதற் பாசுரத்தில் பெரிய பெருமாளின் திருவடிகளின் அழகு ஆழ்வார் மீது அலைபாய்ந்து அவரைப் பரவசமாக்கிய நிலை கூறப்பெறுகின்றது. "கமலபாதம் வந்தென் கண்ணின் உள்ளன" என்கின்றார். வைணவர்கட்கு எம்பெருமானின் திருவடிப்பேறே அடையத்தக்க குறிக்கோள் பொருள் என்பது ஈண்டு அறியத் தக்கது.

2. இரண்டாவது பாசுரத்தில் "சிவந்த ஆடையின் மேலே சென்றதாம் என் சிந்தனையே" என்கிறார். முதல்

---

1. தேசிகப் பிரபந்தம்— 132. தேசிகரின் 130, 131 பாசுரங்களும் இப்பிரபந்தத்தின் பெருமையையே பேசுகின்றன.

பாசுரத்தில் 'கமலபாதம் வந்து' என்பதும், இப்பாசுரத்தில் 'சென்றதாம் என் சிந்தனை' என்பதும் உற்று நோக்கத்தக்கவை. முதலில் எம்பெருமான் ஆழ்வாரை அடிமை கொள்ள மேல் விழுந்த நிலையும், பிறகு ஆழ்வார் சுவை கண்டு தாம் எம்பெருமான்மேல் விழுகின்ற நிலையும் தோற்றும். ஈன்ற பசு முலைச்சுவை அறியாத தன் கன்றுக்கு முதலில் தன் முலையை அதன்வாயில் கொடுக்கும். பின்பு சுவடறிந்தால் பசு உதைத்துக் கொண்டாலும் கன்றுதானே அதன்மேல் விழும். இந்நிலையை மேற்கூறிய இரு பாசுரங்களிலும் காணலாம்.

3. அடுத்து, முறையே எம்பெருமானின் திருவுந்தி, திருஉதாபந்தனம், 'அகலகில்லேன் இறையும்' என்று அலர்மேல் மங்கை உறையும் திருமார்பு, திருக்கழுத்து, திருவாய், திருக்கண்கள் இவற்றை ஆழ்வார் அநுபவித்த நிலைகள் பேசப் பெறுகின்றன.

4. ஒவ்வொரு திருவுறுப்பின் அழகிலும் (லாவண்யம்) ஈடுபட்டே ஆழ்வார் அவரது முழுத் திருமேனியின் அழகினை (சௌந்தர்யம்) அநுபவித்த நிலை கூறப் பெறுகின்றது.

"நீல மேனி ஐயோ!
நிறைகொண்டதென் நெஞ்சினையே"[1]

என்று பேசி அவரது நெஞ்சு பரவசமாகப் பெற்ற நிலையினை இங்குக் காணலாம்.

5. இறுதியாக 'கொண்டல் வண்ணன், கோவலனாய் வெண்ணெ யுண்ட வாயன்' தன் உள்ளத்தைக் கவர்ந்த நிலை பேசப் பெறுகின்றது. இந்தத் திருமேனியைக் கண்ட தன் கண்கள் பிறிதொன்றினைக் காணா என்று முத்தாய்ப்பு வைத்தது போல் பேசும் ஆழ்வாரின் மனநிறைவு இதில் தொனிக்கிறது.

இங்ஙனம் இவர் பாடிய பாசுரங்கள் பத்தும், இவரது உருக்கமும் உண்மையுமான அடிமைத் திறத்தை விளக்க வல்லன. முனிவாகனராய்ச் சென்று அணியரங்கமுடை

1. அமலனாதி. 9.

யானை அநுபவித்த இப் 'பாண் பெருமாள்' போன்ற பேரடியார்களைத் திருவுளத்திற் கொண்டே தொண்டரடிப் பொடிகள்,

"இழிகுலத் தவர்க ளேனும்
எம்அடி யார்க ளாகில்
..............................
நின் னொடும் ஒக்க
வழிபட அருளி னாய்போன்ம்"[1]

என்றும்,

"நுமர்களைப் பழிப்ப ராகில்
நொடிப்பதோர் அளவில் ஆங்கே
அவர்கள்தாம் புலையர் போலும்"[2]

என்றும் குறிப்பிட்டதாகக் கருதலாம்.[3]

இங்ஙனம், ஞானபக்தி வைராக்கியமுடைய இந்த ஆழ்வார் "குளித்து மூன்றனலை யோம்பும் குறிக்கொளந் தணமைக்"[4]குரிய பெருநிலையை அடைகின்றார் என்பது ஈண்டு உளங்கொளத் தக்கது.

**இவர் வாழ்ந்த காலம்:** இதனைத் தொண்டரப்பொடி யாழ்வார் வாழ்ந்த காலமாகக் கருதுவர் பேராசிரியர் மு. இராகவையங்கார் அவர்கள்.[5]

## 6. திருமங்கையாழ்வார்

இவர் சோழமண்டலத்தில் திருவாலி நாட்டில் திருக் குறையலூரில் கள்வர் குலத்தில் திருமாலின் கார்முக்

1. திருமாலை. 42
2. திருமாலை. 43
3. திருநீலகண்ட யாழ்ப்பாணர் என்ற சிவனடியார் திருவால வாய், திருவாரூர்த் திருக்கோயில்களின் வாயில்களில் நின்று பாட, அவரைச் சிவபிரான் தம் திருமுன்பு அழைத்துக் கொண்ட செய்தி பெரியபுராணத்துக் கூறப்பெறுதல் இப் பாண் பெருமாள் வரலாற்றுடன் ஒப்பிடற்பாலது.
4. திருமாலை. 25
5. ஆழ்வார்கள் கால நிலை—பக்கம். 157

என்னும் வில்லின் கூறுய்த் திருவவதரித்தார். கலியன் என்ற திருநாமத்துடன் வளர்ந்து அறிவு, ஆற்றல்கள் நிரம்பப் பெற்றவராய், தக்க பருவம் எய்தியதும் தம் தந்தை உரிமைகளைப் பெற்றுத் தாமே ஆலிநாட்டின் தலைவராகவும் சோழனுட்டரசன் கீழ்த் தானைத் தலைவருள் ஒருவராகவும் திகழ்ந்தார். திருநாங்கூரில் மருத்துவத் தொழிலை மேற்கொண்டிருந்த அடியாரொருவரால் அருமையாக வளர்க்கப் பெற்று வந்த 'குமுதவல்லி' என்ற பெண்மணியை ஒரு சில நிபந்தனைகளின்படி திருமணம்புரிந்துத் தாமும் பரம பாகவதராகி அவளுடன் திருமாலடியார்களை ஆராதிப்பதில் செல்வங்களையெல்லாம் செலவிட்டார். அரசிறையாகத் தம்மிடமிருந்த பொருளும் இச் செலவில் கரைந்தது. நாளடைவில் இவருடைய இச் செயல் வெளிப்பட அரசன் இவரது சிற்றரசுரிமையையும் பற்றிக்கொண்டதுடன் இவரையும் சிறையிலிட்டனன். பின்னர் திருமாலின் அருளால் கச்சியில் பெரும்பொருள் பெற்று அரசனுக்குரிய கடனைத் தீர்த்துச் சிறையினின்றும் விடுதலை பெற்றனர்.

திருமால் கைங்கரியம் புரிதற்குக் கையிலே வேறு பொருளின்மையால் ஆறலைத்துப் பொருளீட்டி அப் பொருளைக் கொண்டு அடியார்கட்கு அமுது செய்வித்து வரலாயினர். ஒருநாள் தம் பதிக்கு அடுத்த திருமணங்கொல்லை என்ற ஊர்ப்புறத்தில் இளைஞர் ஒருவர் தம் மனைவியுடன் பரிவாரஞ் சூழ வரக்கண்டு தம் கூட்டத்துடன் அவர்கள்மேல் விழுந்து அவர்களிடமிருந்து பொருள்களையெல்லாம் கவர்ந்து மூட்டையாகக் கட்டி எடுத்துச் செல்ல முயன்றபோது மூட்டையைத் தூக்க இயலாமல் 'மந்திரம் பண்ணினை போலும்' என்று அவ் விளைஞரை நெருக்கிக் கேட்க, அவரும் கலியனது செவியில் திருமந்திரத்தை உபதேசித்தார். கலியன் ஞானபக்தி மேலீட்டால் 'வாடினேன் வாடி'[1] என்று தொடங்கிப் பல படியாகப் பாடத் தொடங்கினர். திருமாலும் பெரிய திருவடியின்மீது எழுந்தருளிக் கலியனுக்கு அற்புதக் காட்சியளித்தனர். பின்னர் எம்பெருமானின் பெருங்கருணைத் திறத்தை வியந்து, அவர் கோயில் கொண்ட திருப்பதிகட்கெல்லாம் நேரில் சென்று

---

1. பெரிய திருமொழி 1 : 1 : 1.

மங்களாசாசனம் செய்தும் (86 திருப்பதிகளை மங்களாசாசனம் செய்துள்ளார்), புறச்சமயத்தினர் பள்ளிகளினின்றும் கொள்ளையிட்ட பொருள்களைக் கொண்டு திருவரங்கம் பெருநகரின் சுற்றுமதில் எடுப்பதில் செலவிட்டும் நெடுங்காலம் வாழ்ந்து முடிவில் நெல்லைமாவட்டத்திலுள்ள திருக்குறுங்குடியில் தன்னடிச் சோதிக்கு எழுந்தருளினர்.

இவ் வரலாற்றை சிறிது மாறுபாடு தோன்ற திவ்விய சூரிசரிதம் கூறும். திருவரங்கச் செல்வர், கோதைப் பிராட்டியைத் திருக்குருகூரில் திருமணம் புரிந்து அப்பிராட்டியுடன் தம் திருவரங்கப் பெருநகர் நோக்கி மணக்கோலமாக வந்து கொண்டிருக்கும்பொழுது களவுத் தொழிலில் முனைந்து நின்ற திருமங்கை மன்னன் பதுங்கி நின்ற தம் படைகளுடன் அவர்கள்மேல் விழுந்து வழி மறித்து 'மாயோனை வாள்வலியாள் மந்திரங்கொண்டு' பேரருள் பெற்றனர் என்ற செய்தி மட்டிலும் வேறாகக் காணப்பெறுகின்றது.

**இவரது அருளிச்செயல்கள் :** இவர் அருளிச் செய்த பிரபந்தங்கள். பெரியதிருமொழி, திருக்குறுந் தாண்டகம், திருநெடுந்தாண்டகம், திருவெழுக்கூற்றிருக்கை, சிறிய திருமடல், பெரிய திருமடல் என்ற ஆறும் ஆகும். இவற்றை 'மாறன் பணித்த தமிழ் மறைக்கு மங்கையர் கோனின் ஆறங்கங்கள்' எனக் கருதுவர் வைணவப் பெருமக்கள். ஆனால், இவற்றை அந்தாதித் தொடையாக அருளிச் செய்திலர். ஆயினும், பெரிய திருமொழி 11-ஆம் பத்து மூன்றும் திருமொழி பத்துப்பாடல்களையும் அந்தாதித் தொடையாக அமைத்துள்ளனர். நம்மாழ்வார் வழியை விடவில்லை என்பதற்காக ஒரு திருமொழியை அங்ஙனம் அமைத்தனர் போலும்!

இந்த ஆழ்வாரது பாசுரங்களில் இவரது வாழ்க்கையைப் பற்றிய செய்திகட்கு அகச்சான்றுகள் கிடைக்கின்றன. இவர் ஆலிநாட்டுக்கும்[1] திருமங்கை குறையல் என்ற

---

1. இந்த நாட்டின் தலைமையூர் இக்காலத்துத் திருநகரி என வழங்குகின்றது.

திருப்பதிகட்கும் தலைவர்[1] என்றும், இவருக்குக் கலிகன்றி முதலாகப் பல திருநாமங்கள் உண்டென்றும்[2] பெருஞ் சேனையுடையவர் என்றும்,[3] யானைப்படை குதிரைப் படைகளை யுடையவர் என்றும்.[4] வாட்போரில் பகைவரின் உடல் துணிக்கவல்லவர் என்றும்,[5] தன் சேனைப் பெருமையையும் வீரப் பெருமையையும் சிறப்பித்துப் பேசுகின்றார். இவரது பெருஞ்செல்வ நிலையும்[6] பெரிய வள்ளண்மையும், அதனால் புலவர் போற்றும் புகழும்,[7] பொய்மொழியொன்றில்லாத இவர்தம் மெய்ம்மைத் திறமும்,[8] கைம்மாறு கருதாது மாநிலத்தார்க்கு வழங்கும் மாரிபோன்ற இவரது பேரருளும்[9] இவர்தம் தமிழ்ப் பெரும் புலமை

---

1. "கூர் அணிந்த வேல்வலவன் ஆலிநாடன் கொடிமாட மங்கையர்கோன் குறையல் ஆளி" (பெரி. திரு. 4. 4: 10)
   "மங்கை வேந்தன்" (ஷை 1. 3. 10); 'ஆலிநாடன்' (ஷை 7.3:10); "புலமங்கைக்குலவேந்தன்" (ஷை 6. 6:10) "வயலாலி நன்னாடன், மங்கையர் தலைவன்" (ஷை9.8.10)
2. "அருளமாரியரட்டு அமுக்கி அடையார்சீயம்......ப்ரகாலன் கலியன்" (ஷை3.4.10); "கலிகன்றி" (ஷை 3.2:10)
3. "வாள்திறல் தானை மங்கையர்தலைவன்" (ஷை 10. 9: 10)
4. "அமரில் கடமா களியானை வல்லான்" (ஷை2.4:110)
   "கடமாருங் கருங்களிறு வல்லான் வெல்போர்க்கலிகன்றி" (ஷை 2.5:10)
   "ஆடல்மா வலவன்" (ஷை 5. 8.10) "வாமான்தேர்ப் பரகாலன்" (ஷை 7. 4:10)
   "ஆலுமா வலவன் கலி கன்றி" (ஷை 9.10:10)
5. "மருவலர்தம் உடல்துணிய வாள்வீசும் பரகாலன்" (ஷை 3. 9:10)
6. "வெந்திறல் களிறும் வேலைவாய் அமுதும்
   விண்ணொடு விண்ணவர்க்கு அரசும்
   இந்திரற்கு அருளி எமக்கும் ஈந்தருளும் எந்தை" (ஷை1.4:7)
7. "கற்றார் பரவும் மங்கையர் கோன்
   காரார் புயற்கை கலிகன்றி" (ஷை 5. 1:10)
   "பாரணிந்த தொல் புகழான்" (ஷை 4. 4: 10)
8. "பொய்மொழியொன் றில்லாத மெய்ம்மை யாளன்" (ஷை 6.6:10)
9. "அருள்மாரி" (ஷை 3. 4: 10; 4.2:10. 8. 6. 10)

யும்[1] இவரது கவிபாடும் திறனும்[2] இவரது பாசுரங்க ளால் அறியப்பெறும். மேலும், இவர் மனைவி மக்கள் பலருடையவராகவும்,[3] வேட்டையாடுவதில் விருப்பமிக் கிருந்தவராகவும்,[4] அரசர் முதலிய பிறர்க்குப் பெரிதும் உழைத்துத் தம் வாணுளின் ஒரு பகுதியைக் கழித்தவராக வும்,[5] பரம்பரையே திருமாற் கடியரானவர் குலத்தில் உதித்தவராகவும்,[6] தாய் தந்தையர் காலஞ்சென்ற பின் தாம் அவ்வடிமைத் திறத்தில் முனைந்து நின்றவராகவும்,[7] அதனுல் தெள்ளியராய்த் திருமாலருளைச் சிக்கெனப் பெற்றவராகவும்,[8] தம் குடும்பத்தை முற்றத்துறந்து[9] திருப்பதிகள் தோறும் பாடித் திருமாலடியாரென்று தேச

---

1. " இருந்தமிழ் நூற்புலவன் " (ஷ 1. 7: 10)
2. " பாடேன் தொண்டர் தம்மைக்
   கவிதைப்பனுவல் கொண்டு" (ஷ 7. 2: 2).
3. " காவித்தடங்கண் மடவார்கேள்வன் " (ஷ 6. 10: 10)
   " கொங்குமலர் குழலியர்வேள் " (ஷ 3. 4: 10)
   " பிரிந்தேன் பெற்றமக்கள் " (ஷ 6. 2: 4)
4. " கோடிய மனத்தால் சினத்தொழில் புரிந்து
   திரிந்துநாய் இனத்தொடும் திளைத்திட்டு " (ஷ 1.6:6)
5. " பெரியேன் ஆயினபின் பிறர்க்கே
   உழைத்து ஏழை ஆயினேன் " (ஷ 1. 9:7)
6. "எந்தை தந்தை தம்மா
   னென்றென றெமரே ழேளவும்
   வந்து நின்ற தொண்டர் " (ஷ 4. 9: 9)
   " எந்தாதை தாதையப்பால் எழுவர் பழவடிமை
   வந்தார் " (ஷ 7. 2: 6)
7. " எம்மாளு மெம்மனையும்
   எனைப் பெற் றெழிந்ததற்பின்
   அம்மானுமம்மனையும்
   அடியேனுக் காகி நின்ற
   நன்மான ஒண்சுடரே" (ஷ7.2:3)
8. " கள்வனே னுனேன் படிறுசெய் திருப்பேன்
   கண்டவா திரிதந்தே னேலும்
   தெள்ளிய னுனேன் செல்கதிக் கமைந்தேன்
   சிக்கெனத் திருவருள் பெற்றேன் " (ஷ 1.1:5)
9. " பிரிந்தேன் பெற்ற மக்கள்
   பெண்டி ரென்றிவர் பின்றுதவா தறிந்தேன் " (ஷ 6.2:4)

மறியத் திரிந்தனராகவும்[1] தம் வாழ்க்கை வரலாறுகளைத் தாம் தம்முடைய திருவாக்கினாலேயே புலப்படுத்திக் கொள்வர். இவர் திருமால் அடிமையிற் சிறந்து விளங்கிய அடியாரென்பதையும், மறந்தும் புறந்தொழா மாண்புடை யாளர் என்பதையும்[2] இவரது திருவாக்கினைக் கொண்டே தெளியலாம்.

**சிறப்பியல்புகள் :** அடியிற்கண்டவற்றை இவரது அருளிச் செயல்களின் சிறப்பியல்புகளாகக் கொள்ளலாம்.

*1.* இவரது பாசுரங்களில் திருமாற்கே பரத்துவம் கூறப்பெறுகின்றது. அவரது அவதாரங்களும், அவற்றில் நிகழ்த்திய அரும்பெருஞ் செயல்களும் நயம்படப் பாராட்டப்பெற்றுள்ளன. ஏழு விடைகளை அடர்த்தது, விளங்கனி எறிந்தது, பேய்முலை உண்டது, மருதிடந்தது, குன்றெடுத்தது, அன்ன மாயன்றங் கருமறை பயந்தது, அந்தணளன் பிள்ளையை யந்நாளளித்தது முதலியவற்றைக் குறிப்பிடலாம்.

*2.* இளமை, செல்வம், யாக்கை என்ற மூன்றின் நிலையாமையையும் நன்குணர்ந்து அவற்றைப் பிறர்க்கு வற்புறுத்தியருளிய பாசுரங்கள் நெஞ்சை நீர்ப்பண்டமாக்கும் தன்மை யுடையவை. (திரு விண்ணகர் மீதுள்ள பதிகங்கள்).

---

1. " தேச மறிய உமக்கே யாளாய்த் திரிகின் றேமுக்கு " (ஷை 4.9:4)

2. " நறையூர் நம்பிக்கு என்றும் தொண்டாய்க்கலியன் ஒலிசெய்த " (ஷை 7.1:10);

" பேரருளாளன் பெருமை பேசக் கற்றவன் " (ஷை 9.5:10)

" தேசமறிய வுமக்கேயாளாய்த் திரிகின்றேமுக்கு" (ஷை4.9:4);

" வேம்பின்புழு வெம்பன்றி யுண்ணாது அடியேன், நான்பின்னு முன்சே வடியின்றி நயவேன் " (ஷை 11.8:7); " மற்றோர் தெய்வ மெண்ணேன் உன்னையென் மனத்து வைத்துப் பெற்றேன் பெற்றதும் பிறவாமை " (ஷை 6.3:5);

" கூறேன் நெஞ்சுதன்னால் குணங்கொண்டு மற்றோர்தெய்வம், தேறேன் உன்னையல்லால் திருவிண் ணகரானே " (ஷை 6.3:7)

3. திருவெட்டெழுத்தின் பெருமை இரண்டு பதிகங்களில் மிக அழகுறப் பேசப் பெறுகின்றன. (பெரி. திரு. 1.1; 6.10.)

4. திருமாலைப் பல படியாகப் புகழ்ந்துள்ளார். கற்றவர் உண்ணும் கனி என்றும், அங்கிங்கெனுதபடி எங்கும் பிரகாசமாய் உள்ளவன் என்றும், அடியார் உள்ளத்திலேயே எஞ்ஞான்றும் குடியிருப்பவன் என்றும், ஞான விளக்காய் உள்ளவன் என்றும், தானறியாத தன்மையன் என்றும், நினையார்க்குச் சேய்மையன் என்றும், நேசமுடன் நினைவார்க்கு எளியன் என்றும், அவன் கரும்புபோன்று அடியார்க்கு இனிப்பவன் என்றும், அன்பர் உள்ளத்தைக் கவரும் கள்வன் என்றும், அவன் அன்னையும் அத்தனும் ஆவான் என்றும் நெஞ்சு கனிந்து புகழ்வதைப் பாசுரங்களில் ஆழுங்காற் படுவோர் அறிவர்.

5. அசித்தும் வைணவ தத்துவங்களின் ஒன்று. எனவே, இவருடைய அருளிச்செயல்களில் எழிலார்ந்த இயற்கை வருணனைகள் முக்கிய இடம் பெற்றுள்ளன. திவ்விய தேசங்களை வருணிக்கும்பொழுது, இவர் கூறும் காட்சிகள் இன்றும் நாம் அப் பகுதிகளில் காணக்கூடியவையாக உள்ளன. எடுத்துக்காட்டாக,

“ஆலி மாமுகில் அதிர்தர அருவரை அகடுற முகடேறிப்
பீலி மாமயில் நடஞ்செயும் தடஞ்சுனைப் பிரிதி”[1]

என்பர். இவண் உயர்வு நவிற்சி யாதும் இல்லை. வானம் இடித்து மழைபொழிய மலைச்சிகரங்களில் அமர்ந்து மயில்கள் தோகை விரித்தாடும் இடம் பிரிதி என்னும் திவ்விய தேசமாகும்.

வதரி என்ற திவ்விய தேசத்தைப் புகழும்போது,

“விலங்கலி லுரிஞ்சி மேல்நின்ற விசும்பில்
வெண் துகில் கொடியென விரிந்து
வலந்தரு மணிநீர்க் கங்கையின் கரைமேல்
வதரியாச் சிரமத்துள் ளானே”[2]

என்பர். மலையிலிருந்திழிதரும் கங்கையின் வெண்ணிய

1. பெரி. திரு. 1. 2: 1.  2. பெரி. திரு. 1. 4: 3.

அருவி வெண்துகிற் கொடிபோல் இருக்கின்றதென் கின்றார்.

கடல் மல்லையை வருணிக்கும்பொழுது,

"புலன்கொள்நதிக் குவையொடு
புழைக்கைமா களிற்றினமும்
நலங்கொள்நவ மணிக்குவையும்
சுமந்தெங்கு நான்றொசிந்து
கலங்குகளியங் கும்மல்லை"[1]

என்பர். கடல்மல்லை ஒரு சிறந்த துறைமுகமாக இருந்த தாகலின், அங்கே வந்து இறக்குமதியான பல பண்டங்கள் ஈண்டுக் குறிக்கப்பெற்றன.

திருக்கோவலூர் என்னும் திவ்விய தேச வருணனை இயற்கைப் பொலிவுடன் ஒளிர்தலைக் காணலாம்.

"எழுந்தமலர்க் கருநீலம் இருந்தில் காட்ட
இரும்புன்னை முத்தரும்பிச் செம்பொன் காட்ட
செழுந்தடநீர்க் கமலந்தீ விகைபோல் காட்டும்
திருக்கோவ லூர்"[2]

(கருநீலம் - நெய்தல்; இருந்தில் - கரிபோல; தீவிகை - விளக்கு)

"கருங்கமுகு பசும்பாளை வெண்முத் தீன்று
காயெல்லாம் மரகதமாய்ப் பவளங் காட்ட
செருந்திமிக மொட்டலர்ந்தும் தேன்கொள் சோலைத்
திருக்கோவ லூர்"[3]

(கமுகு - பாக்கு; செருந்தி - சுரபுன்னை).

என்ற இடங்களில் இயற்கை வருணனை எழில் பெற்றிருத் தலைக் காண்க.

காழிச்சீராம விண்ணகரத்தைப் புகழும்போது ஆழ்வார்,

"உழுசே யோடச் சூல்முகமார் வளையளைவாய் உகுத்த முத்தைத்
தொல்குருகு சினையென்னச் சூழ்ந்தி யங்க"[4]

(சே - எருது; சூல்முகம்ஆர் - ஈனும் நிலை; வளை - சங்கு; அளை - பொந்து; உகுத்த - ஈன்ற; குருகு - கொக்கு; சினை - முட்டை).

---

1. பெரி. திரு. 2. 6: 6.
2. பெரி. திரு. 2. 10: 3.
3. பெரி. திரு. 2. 10: 7.
4. பெரி. திரு. 3. 4: 2.

என்று கூறினர். உழுகின்ற எருதுகள், குறுக்கும் நெடுக்கு மாக ஓடின அதிர்ச்சியினுல் சங்குகள் முத்துக்களை ஈன்றன. கொக்குகள் அவற்றைத் தம்முடைய முட்டைகள் என மயங்கி முத்துக்களைச் சூழ்ந்து பறந்து கொண்டிருக் கின்றன. மயக்க அணிகொண்ட இப்பாசுரம் ஆழ்ந்து மகிழத் தக்கது. அதே பதிகத்தில்.

"அவ்வாய வாள்நெடுங்கண் குவளை காட்ட
அரவிந்தம் முகம்காட்ட அருகே ஆம்பல்
செவ்வாயின் திரள்காட்டும் வயல்சூழ் காழிச்
சீராம விண்ணகரம்"[1]

(அவ்வாய - அப்படிப்பட்ட; அரவிந்தம் - தாமரை; ஆம்பல் - அல்லி மலர்; திரள் - கூட்டம்)

என்று அழகு மிளிரக் கூறுவர் ஆழ்வார்.

ஆழ்வார் அவதரித்த திவ்விய தேசமாகிய திருவாலி யைக் கூறுங்கால்,

"சோலைத் தலைக்கண மாமயில் நடமாட
மழைமுகில் போன்றெழுந்து எங்கும்
ஆலைப் புகைகமழும் அணியாலி"[2]

என்பர். கரும்பினை ஆடும் ஆலையினின்று மேல் எழும் புகை நீர் கொண்ட காளமேகம்போல் தோன்றச் சோலைக் கணுள்ள தோகை மயில் ஆடும் எனக் கூறியது உணர்ந்து மகிழத்தக்கது. இத்தலம், இதனைச் சூழ்ந்துள்ள இடங்களி லும், இன்றும் கரும்பு மிகுதியாக விளைவிப்பதைக் காண லாம்.

திருக்கண்ணங்குடி பாசுரத்தில் வரும் வருணனைப் பகுதிகள் கவர்ச்சிகரமானவை.

"அன்னமென் கமலத் தணிமலர்ப் பீடத்
தலைபுனல் இலைக்குடை நீழல்
செந்நெலொன் கவரி யசையவீற் றிருக்கும்
திருக் கண்ணங் குடி"[3]

---

1. பெரி. திரு. 3. 4: 5.
2. பெரி. திரு. 3. 5: 2.
3. பெரி. திரு. 9. 1: 5.

என்ருர். இங்குச் செங்கால் மடவன்னம் தாமரையாகிய தவிசில் இலையாகிய குடைநிழலில், செந்நெற்கதிர்கள் சாமரம்போட அரசு வீற்றிருப்பதாகக் கூறப்பெற்றிருப் பதைக் கண்டு மகிழலாம். இதே காட்சி திருவயிந்தபுரம் பாசுரத்திலும் காட்டப் பெறுகின்றது.

"அன்ன மாமல ரரவிந்தத் தமளியில்
பெடையொடு மினிதர,
செந்நெ லார்கவ ரிக்குலை வீசுதண்
திருவயிந் திரபுரமே"[1]

என்ற பாசுரப்பகுதி படித்து இன்புறத்தக்கது. இங்ஙனம் நூற்றுக்கணக்கான பாசுரங்கள் உள்ளன.

6. அப்பர் சம்பந்தர் முதலியோருடைய தேவாரத் திருப்பாடல்களில் காண்பது போல, இவருடைய பாசுரங் களிலும் புத்தர், சமணர் போன்ற பிற சமயத்தினரைப் பற்றிய குறிப்புக்களைக் காணலாம்.

"பொங்கு போதியும் பிண்டி யுமுடைப்
புத்தர் நோன்பியர் பள்ளி"[2]

"துவரி யாடையர் மட்டை யர்சமண
தொண்டர் கள்மண்டி யுண்டு"[3]

"பிச்சச் சிறுப்பீலிச் சமணகுண்டர் முதலியோர்
விச்சக் கிறையென்று மவ்விறையைப் பணியாதே"[4]

"துவரித்த வுடையார்க்கும்
தூய்மையில்லாச் சமணர்க்கும்"[5]

"வந்திக்கும் மற்றவர்க்கும் மாசுடம்பின்
வல்லமணர் தமக்கு மல்லேன்"[6]

"வெள்ளியார் பிண்டியார் போதியார்
என்றிவர் ஓது கின்ற
கள்ள நூல் தன்னையும் கருமமன்
றென்றுய்யக் கருதி னுயேல்"[7]

---

1. பெரி. திரு. 3. 1: 1.
2. பெரி. திரு. 2. 1: 5.
3. பெரி. திரு. 2. 1: 6.
4. பெரி. திரு. 2. 6: 5.
5. பெரி. திரு. 5. 6: 8.
6. பெரி. திரு. 7. 4: 5.
7. பெரி. திரு. 9. 7: 9.

என்ற பாசுரப் பகுதிகளைக் காண்க. வெள்ளியார் - சுக்கிரன். அவர் இயற்றிய சுக்கிரநீதியும் பௌத்தத் திரிபிடகமும், சமணரது நூல்களும் இவண் குறிப்பிடப் பெற்றன. மேலும், இப்பாசுரப் பகுதியினின்று புத்தர் போதிப் பத்தர் என்றும், சமணர் பிண்டி நோன்பியர் என்றும், துவராடை உடுப்பவர் என்றும், மழித்தலையர் என்றும், மிக்குண்பவர் என்றும், மயிற் பீலிக்கையர் என்றும்,மந்திர வித்தைகளில் வல்லவர் என்றும், மாசேறிய உடலினர் என்றும் அறியலாம்.

7. ஆழ்வாரின் அகத்துறைகள் அமைந்த பாடல்கள் கற்குந்தோறும் பெரிதும் இன்பம் பயக்கும்.

"முளைக்கதிரைக் குறுங்குடியுள் முகிலை மூவா
மூவுலகும் கடந்தப்பால் முதலாய் நின்ற,
அளப்பரிய ஆரமுதை அரங்கம் மேய
அந்தணனை அந்தணர்தம் சிந்தை யானை
விளக்கொளியை மரகதத்தைத் திருத்தண் காவில்
வெஃகாவில் திருமாலைப் பாடக் கேட்டு
வளர்த்ததனால் பயன்பெற்றேன் வருக! என்று
மடக்கிளியைக் கைகூப்பி வணங்கி னாளே" [1]

என்பது பரகால நாயகியின் நிலையைக் கூறும் திருத்தூயார் பாசுரம்.

"பொன்னிவர் மேனி மரக தத்தின்
பொங்கிளஞ் சோதி யகலத்தாரம்
மின்,இவர் வாயில்நல் வேத மோதும்
வேதியர் வானவ ராவர்தோழீ,
என்னையும் நோக்கியென் னல்குலும் நோக்கி
ஏந்திளங் கொங்கையும் நோக்குகின்றார்
அன்னையென் னோக்குமென் றஞ்சு கிறேன்
அச்சோ ஒருவர் அழகியவா"[2]

என்பது தலைவனது உருவெளிப்பாட்டில் நலியும் தலைவி தோழியிடம் கூறுவதாக அமைந்தது. ஆழ்வார், திருநாகை சௌந்தர்யராசனின் அழகில் ஈடுபட்டுப் பராங்குச நாயகி நிலையில் நின்று பேசுவதைக் கண்டு மகிழலாம். 'திருமடல்களில்' ஆழ்வார் நாயகியின் மொழிகள் பேரின்பம்

1. பெரி. திரு. 14. 2. பெரி. திரு. 9. 2: 1.

பயப்பவை. முறுகிய காதலே - தெய்வக் காதலே அவண் கண்டு மகிழலாம்.

8. செந்தமிழ் நாட்டில் வழங்கும் பல பழமொழிகள் இவரது பாசுரங்களில் அமைந்து அவர் கூறும் கருத்துக்கள் தெளிவு பெறத் துணையாகவுள்ளன.

"இருபா டெரிகொள் ளியினுள் எறும்புபோல்
உருகாநிற்கு மென் உள்ளம்"[1]

என்ற வரிகள் "இருதலைக் கொள்ளியின் உள்ளெறும் பொத்து" (நீத்தல் விண் - 9) என்ற திருவாசக வரிகளை நினைவுறுத்தும். இங்கே ஈரிடத்தும் 'உள்ளெறும்பு' என்று காணப்பெறுவது, ஆராயத் தக்கது. கொள்ளி குழாய் வடிவினதென்றும், அதன் இருபுறமும் அரியென்றும், அதன் உள்ளே அகப்பட்ட எறும்பிற்குத் தப்பும் வழி இன்றென்றும் கருதிய நயம் எண்ணி மகிழத் தக்கது.

"வெள்ளத் திடைப்பட்ட நரியினம் போலே
உள்ளம் துளங்கா நிற்பன்"[2]

என்றும்,

"இடையன் எறிந்த மரமேயொத் திராமே,
அடைய அருளாய்"[3]

என்றும்,

"வேம்பின்புழு வெம்பன்றி உண்ணாது"[4]

என்றும் வரும் பழமொழிகளைக் கண்டு மகிழ்க. பல இடங்களில் பல பழமொழிகள் இனிமையுற அமைந்திருப்பதைக் கண்டு மகிழலாம்.

"ஆரெழில்வண்ண 'அங்கையின் வட்டாமிவள்"
"சொல்லியென் னம்பியிவ ளைநீ 'யுங்கள்
தொண்டர் கைத்தண்டு' என்றவாறே"
"பெருவழி நாவற் கனியினும் எளியள்"
"கருங்கடல் வண்ண கவுள்கொண்ட நீராம் இவள்"

---

1. பெரி. திரு. 11. 8: 4.
2. பெரி. திரு. 11. 8: 5.
3. பெரி. திரு. 11. 8: 6.
4. பெரி. திரு. 11. 8: 7.

"ஆரழல் ஓம்பும் அந்தணன் தோட்டம்
ஆகநின் மனத்து"

என்று பழமொழிகளைப் 'பழமொழியால் பணிந்து உரைத்த பாட்டில்"[1] கண்டு களிப்பெய்தலாம்.

9. ஆழ்வார் அமைக்கும் உவமைகள் கற்போர் கருத்தில் ஆழப்பதியும் வண்ணம் கற்பனை நயம் செறிந் திலங்குகின்றன. ஓரிடத்தில் பசு தன் கன்றை நினைவது போன்று தான் இறைவனை மறவாது அழைப்பதாகக் கூறும்,

"கறவா மடநாகுதன் கன்றுள்ளி னாற்போல்,
மறவாதடியேன் உன்னையே அழைக்கின்றேன்"[2]

என்ற பாசுரப் பகுதியைக் காண்மின். இதனையே பிறி தோரிடத்தில்,

"தாய்நி னைந்தகன் றேயொக்க என்னையும்
தன்னை யேநினைக் கச்செய்து, தானெனக்
காய்நி னைந்தருள் செய்யும் அப்பனை"[3]

என்று மேலும் விளக்கிப் பேசுவர்.

"உறியார்ந்த நறுவெண்ணெ யொளியால் சென்றங்
குண்டானைக் கண்டாய்ச்சி யுரலோ டார்க்கத்
தறியார்ந்த கருங்களிறே போல நின்று
தடங்கண்கள் பனிமல்கும் தன்மை யானை"[4]

என்ற பகுதியில் கண்ணனை உவமையால் காட்டும் திறம் மகிழ்வூட்டுகின்றது.

"சிலம்பிடைச் சிறுபரல்போல் பெரிய மேரு
திருக்குளம்பில் கணகணப்பத் திருவா காரம்
குலுங்க, நில மடந்தைதனை யிடந்து புல்கிக்
கோட்டிடைவைத் தருளியவெங் கோமான்"[5]
(திரு ஆகாரம் - பிராட்டி இருக்கும் இருப்பு)

என்றவராக அவதாரக் காட்சியில் அமைந்த உவமையைக் கண்டு மகிழ்க.

1. பெரி. திரு. 10. 9.
2. பெரி. திரு. 7. 1: 1.
3. பெரி. திரு. 7. 3: 2.
4. பெரி. திரு. 2. 10: 6.
5. பெரி. திரு. 4. 4: 8.

10. திருமங்கையாழ்வாரும் பெரியாழ்வாரைப் பின் பற்றிச் சில பிள்ளைத் தமிழ்க் கூறுகளைத் தம் பாடல்களில் கையாண்டுள்ளார்.

"ஓங்கோத வண்ணனே! சப்பாணி;
ஒளிமணி வண்ணனே! சப்பாணி"[1]

என்றது காண்க. மணிவாசகப் பெருமானைப் போலவே மகளிரின் விளையாட்டுக் கூறுகளைத் தம் பாசுரங்களில் அமைத்துள்ளார் இந்த ஆழ்வார். அவற்றுள் 'திருச் சாழல்'[2] ஒன்று. மற்றும் 'பொங்கத் தம்பொங்கோ'[3] 'குழமணிதூரம்'[4] என்ற தலைப்புக்களைக் கொண்ட இனிய புதிய பாடல்களையும் இவரது அருளிச்செயல்களில் காண லாம். பறவைகளை நோக்கி மாயனை அழைக்குமாறு கூறும் பாடல்கள் கற்போர்க்கு இன்பம் ஊட்டுவன.[5]

**பெரும்புலவர் வரிசையில் ஆழ்வார்**

மயர்வற மதிநலம் அருளப்பெற்ற இந்த ஆழ்வார் பெரும்புலவர். எட்டுத்தொகை போன்று சொற்சுருக்க மும் பொருட்பெருக்கமும் இவரது அருளிச் செயல்களில் காண்டற்கில்லை. துதிப்பாடல்களாதலின் அவை பாமரரும் எளிதில் பொருள் தெரிந்து கற்கக் கூடியனவாக அமைந் துள்ளன. சில வைணவ சித்தாந்த நுட்பங்களைக் கூறும் பகுதிகள் பெரியோர் உரை கொண்டு தெளிய வேண்டி யவை. இந்த ஆழ்வாரின் அருளிச் செயல்கள் தேவாரத் திருப்பாடல்கள் போன்றே யாப்பிலக்கண முறைபபடி விருத்தங்களாகவும், கலித்துறைகளாகவும், ஆசிரியத் துறைகளாகவும் வகுக்கப்பெற்றுள்ளன. இப் பாசுரங்கட் குப் பண் அடைவு உண்டு. ஆழ்வாரே தம் பாசுரங்களை இன்னிசையால் பாடுதல் வேண்டும் எனப் பணிப்பது காணலாம். சங்க காலத்தில் பெரிதும் வழங்கிய பாவகைகள் இவர் பாசுரங்களில் அமையவில்லை; பிற்காலப் புலவர் பாடல்களில் உள்ளனபோல் இல் பொருளுவமை களும் உயர்வு நவிற்சிகளும் காணப்பெறவில்லை. இயற்கை

---

1. பெரி. திரு. 10. 5: 1.
2. பெரி. திரு. 11. 5.
3. பெரி. திரு. 10. 2.
4. பெரி. திரு. 10. 3.
5. பெரி. திரு. 10. 10.

வருணனைகள் பல காணப்பெறும். தமது அநுபவங்களை விளங்கக் கூறித் தத்துவங்களை வற்புறுத்தும் பகுதிகள் கற்போர் உள்ளங்களில் ஆழப் பதிவனவாக உள்ளன. சம்பந்தர் அப்பர் முதலிய சைவ சமய குரவர்கள் போன்றே இந்த ஆழ்வாரும் பதிகத்தின் திருக்கடைக் காப்புத்தோறும் தம் பெயரை அமைத்துப் பாடுவர். அவற்றைக் கற்பதால் மக்கள் அடையும் பயன் இன்ன இன்னவென்றும் கூறுவர். தமது பாடலின் இனிய கருத்தையறிய விருப்பமுண்டெனில், திருமாலையும் தம் மிடம் வந்து கற்குமாறு அழைப்பர் ஆழ்வார்.

"கண்ண நின்றனக்கும் குறிப்பாகில்
கற்கலாம் கவியின் பொருள்தானே"[1]

என்ற பாசுர அடிகளில் இதனைக் காணலாம்.

**ஒரு குறிப்பு:** இவரது முறுகிய பக்தி நிலையை உணர்ந்து 'திருநெடுந்தாண்டகமே இவர் இறுதியாகப் பாடியது' என்று கூறுவர் ஒரு சாரார். பிறிதொரு சாரார் 'பெரிய திருமடலே இறுதியாகப் பாடியது' என்று வற் புறுத்துவர். எது எங்ஙனமாயினும் இரண்டும் உயர்ந்த பக்தி நிலைகளைக் காட்டுகின்றன என்பதை நாம் நன்கு அறிகின்றோம்.

அங்ஙனமே நாலாயிரத் திவ்வியப் பிரபந்தத்தில் 4000 பாசுரங்கள் உள்ளன என்பதை நிலைநாட்டுவதற்கு இரு திருமடல்களையும் தத்தமக்கு வேண்டியவாறு சிறுசிறு கூறுகளாக்கி ஒவ்வொரு கூறினையும் ஒரு பாடலாகக் கொண்டு தத்தம் கணக்கினைச் சரிசெய்து காட்டுவர். இது பற்றிய கருத்து இக் கட்டுரையின் இறுதியில் விளக்கப் பெறும்.

**இவர் வாழ்ந்த காலம்:** இந்த ஆழ்வார் வாழ்ந்த காலம் கி. பி. (776-881) என்று கொள்வர் ஆராய்ச்சியாளர்.[2]

---

1. பெரி. திரு. 7. 10. 10.
2. Religion and Philosophy of Nalayira Divya Prabandham with special reference to Nammalvar.

## 7. பெரியாழ்வார்

இவர் பெரிய திருவடியின் அவதாரமாக இராமநாத புரம் மாவட்டம் சிவில்லிபுத்தூரில் வேயர் குலத்தில் பாகவத சம்பிரதாயத்தைத் தழுவியிருந்த குடும்பத்தில் ஆனி மாதத்துச் சுவாதி நட்சத்திரத்தில் தோன்றினுர். வேயர் குலத்தினர் பார்ப்பனர். இவரது தந்தையார் முகுந்தாச்சாரியார்; அன்னையார் பதுமையர். விஷ்ணுச் சித்தர்[1] என்பது இவரது பிள்ளைப் பெயர். ஓர் அழகிய நந்தவனம் அமைத்து நறுமணம் மிக்க மலர்களை விளை வித்து அவைகளை மாலையாகத் தொடுத்துத் திருமாற்குச் சாத்தும் திருப்பணியை மேற்கொண்டிருந்தவர் இந்த ஆழ்வார். ஸ்ரீவல்லபன் என்ற பாண்டிய மன்னன் காலத்தவர் இவர்.[2] திருமாலின் பரத்துவத்தைப் பலரும் மகிழுமாறு வாதம் செய்து நிலைநாட்டியதற்காக மன்ன னிடம் பொற்கிழி பெற்றுப் 'பட்டர்பிரான்' என்ற பட்டம் எய்தினர் என்பதை,

> "பாண்டியன் கொண்டாடப் பட்டர்பிரான் வந்தானென்று
> ஈண்டிய சங்கம் எடுத்தூத—வேண்டிய
> வேதங்கள் ஓதி விரைந்து கிழியறுத்தான்
> பாதங்கள் யாமுடை பற்று"[3]

என்ற பாடலால் அறியலாம். இங்ஙனம் தான் பெற்ற பொருளைத் தம்மூர்த் திருமால் கைங்கரியங்களில் செல விட்டு அப் பெருமானை வழிபட்டு வாழ்ந்தார் என்பது குரு பரம் பரைகளால் அறியப்பெறும் செய்தி. இதனை இவரது திருவாக்குகளும் உறுதி செய்கின்றன.[4] இங்ஙனம் இவரது வரலாற்றோடு இவரது திருவாக்குகள் பெரிதும் ஒத்துள்ளன. இப் பெரியார் காலத்தே இராச புரோகித

---

1. இவர் திருமொழியின் பதிகம்தோறும் வரும் திருக்கடைக் காப்புச் செய்யுளால் இஃது அறியப்பெறும்.
2. பெரியாழ்வார் திருமொழி 4:2:7. இதில் நெடுமாறன் என்று ஆழ்வார் குறிப்பிடுவர். இவன் காலம் பி. பி. 835—862.
3. பாண்டியபட்டர் அருளிச்செய்த தனியன். இவர் பிற்கால ஆசிரியர்களில் ஒருவர்.
4. திருப்பல். 8, 9; பெரியாழ். திருமொழி 5. 1: 3, 5.

ராகவும் பரம பாகவதராகவும் விளங்கியவர் திருக்கோட்டியூர்த் தலைவரான செல்வநம்பி என்னும் சீரியோர்.[1]

**இவரது அருளிச்செயல்கள் :** இவர் இயற்றிய பிரபந்தங்கள் திருப்பல்லாண்டு (*11 பாசுரங்கள்*), பெரியாழ்வார் திருமொழி (*461 பாசுரங்கள்*) ஆகிய இரண்டும் ஆகும். இவை இரண்டும் தம் பெயருடன் பயன் உரைத்துத் தலைக்கட்டும் முத்திரைக் கவிகளைக் கொண்டும் முடியவல்லவை. திருப்பல்லாண்டு தனிப் பிரபந்தம் அன்று. அது பெரியாழ்வார் திருமொழியில் அடங்கியதே என்று நிலைநாட்டுவோரும் உளர்.[2]

**அவர் கூறும் காரணங்கள் :** *1.* திவ்வியப் பிரபந்தத்தில் ' பத்து ' என்ற பிரிவு ' இருக்கு ' வேதத்தில் மண்டலங்களின் உட்பிரிவுகள் வகுக்கப்பெற்றுள்ள மரபினை ஒட்டியது. அங்கு அந்த உட்பிரிவுகள் ' ஸூக்தம் ' என வழங்கப் பெறுகின்றன. அந்த ஸூக்தம் போன்றதே தமிழில் ' திருமொழி ' என்று வழங்கப்பெறுவது.

*2.* திருமொழிகளின் தொகையைக் கொண்டே 'முதல் பத்து' ' இரண்டாம் பத்து ' என்றிப்படி வரையறை ஏற்பட்டது என்பது தெளிவு. இதன்படி ' பெரியாழ்வார் திருமொழி ' முதல் பத்தில், பத்துத் திருமொழிகள் இருத்தல்வேண்டும். ஆனால், ஒன்பது திருமொழிகளே அதில் உள்ளன. ஆகவே, ' திருப்பல்லாண்டு ' அதில் சேரவேண்டியபகுதியாகும்.

*3.* ' பெரியாழ்வார் திருமொழியில் ' இறுதிப் பாசுரமான ' வேயர்தங் குலத்து ' (*5. 4 : 11*) என்பதில் 'கோயில் கொண்ட கோவலனை ' என்று சொற்றொடருக்கு விரிவுரை செய்யுமிடத்தில் திருப்பல்லாண்டு தொடங்கி இவ்வளவும் இவர் மனத்திலிருக்கின்ற கிருஷ்ணன், தான் பிறந்தபடியையும் வளர்ந்தபடியையும் இவரைக்கொண்டு கேட்டான்' என்று பெரியவாச்சான் பிள்ளை கூறியிருப்பதனாலும், இதற்கு முன்னர் ' திருப்பல்லாண்டின் அர்த்தத்தை நியமிக்

---

1. திருப்பல். 8, 9 ; பெரியாழ். திருமொழி, 4. 4: 8.
2. வேதாந்த தேசிகன் பிரபந்தசாரம்—1, 9. பெரியவாச்சான் பிள்ளையும் இக் கொள்கையினர்.

கிறார்' என்று பன்முறை கூறியிருப்பதனாலும், ஒரு பிரபந்த மானால்தான் 'தொடக்கம்' என்பது சேருமாதலாலும் இவர் கருத்துப்படி 'திருப்பல்லாண்டு' தனிப் பிரபந்த மன்று.

4. உபதேச ரத்னமாலையில் பல்லாண்டு பாடிய நம் பட்டர்பிரான் (16), 'ஆதித் திருப்பல்லாண்டானதும்' (19), 'உண்டோ திருப்பல்லாண்டுக்கு ஒப்பதோர் கலை' என்ற தொடர்களில் வரும் 'திருப்பல்லாண்டு' என்ற தொடர்பாலும் திருக்கோயில்களில் ஏதாவது ஒரு பிரபந்தம் ஓத நேரிடும் பொழுதெல்லாம் திருப்பல்லாண்டு முதலில் ஓதப் பெற்று அதன் பின்னரே அக் குறிப்பிட்ட பிரபந்தம் ஓதப் பெறுகின்றது என்ற வழக்கம் இருப்பதனாலும் அது தனிப் பிரபந்தம் என்பது வலியுறுகின்றது. ஏனெனில்; அற்றன்று; மேற்குறிப்பிட்ட உபதேச ரத்னமாலைப் பாசுரங்களில் இரண்டாவது தொடரிலுள்ள 'திருப்பல்லாண்டு' வேதத்திற்கு 'ஓம்' என்ற பிரணவம்போல் திவ்வியப் பிரபந்தத்தின் பொருளுக்கெல்லாம் சுருக்கமாகவும் மங்கள ரூபமாக இருப்பதாகக் கூறுகின்றதேயன்றி தெளிவாக ஒரு பிரபந்தம் எனக் கூறாமையாலும், அங்ஙனமே திருக்கோயில்களிலும் இருந்துவரும் வழக்கும் அது தனிப் பிரபந்தம் என்பதற்குத் தக்க ஆதாரம் இல்லாமையாலும் இரண்டையும் தக்க சான்றுகளாகக் கொள்வதற்கில்லை.[1]

மற்ற ஆழ்வார்கள் எம்பெருமான்மீதுள்ள ஆராக் காதலால் 'பகவானுக்குக் குறையொன்றும் இல்லாமல் இருப்பதே நமக்கும் மங்களம்!' என்று மங்களாசாசனம் செய்திருக்க இவர் எம்பெருமானுடைய வாழ்வையே தமது வாழ்வாக நினைத்து, சர்வ இரட்சகனையும் இரட்சிக்க வழி தேடித் தருவதுபோல் 'திருப்பல்லாண்டு' பாடி மங்களாசாசனம் செய்துள்ளார். இதனை,

"சோராத காதல் பெருஞ்சுழிப்பால் தொல்லை மாலை ஒன்றும்
பாராது, அவனைப் பல்லாண்டு என்று காப்பிடும் பான்மையன்"[2]

---

1. சுப்பு ரெட்டியார், ந. 'நாலாயிரத் திவ்வியப் பிரபந்தம் (கொடைச்செம்மல், டாக்டர் மதுரம் அவர்களின் பாராட்டு மலர்)
2. இராமாநுச நூற்றந்தாதி - 15.

(தொல்லைமாலை - நித்தியனை எம்பெருமானை ; ஒன்றும் பாராது- சிறிதும் மெய்ப்பிக்காமல்).

என்ற அமுதனாரின் திருவாக்கால் அறியலாகும். இதனாலும், தாம் சூடிக்கொடுத்த சுடர்க்கொடியை மாலவனுக்கு மணம் புரிவித்ததனாலும் இவர் மற்றுள்ள ஆழ்வார்களினும் பெரியராதலின் பெரியாழ்வார் என்று பெயர் பெற்றார்.[1]

இவரது அருளிச்செயல்களை ஆழ்ந்து கற்குமிடத்து அடியிற்காணும் செய்திகளை அறியலாம்.

1. திருமாலவதாரங்களில் கண்ணன் அவதாரம் இவருள்ளத்தைக் கொள்ளைகொண்டது. எங்கும் நிறைந்து எல்லாவற்றுக்கும் அப்பாலாக, என்றும் இருக்கும் கடவுள் ஒரு காலத்தவனாய், ஓரிடத்திவனாய்ப் பிறந்து வாழ்ந்த அவதார ரகசியம் இவரது அறிவைக் கிளறியது; அன்பைப் பிணித்தது. கண்ணனின் தோற்றம் முதல் அவன் நிகழ்த்திய சிறு குறும்புகளையும் வீரச்செயல்களையும் வெற்றிச் செயல்களையும் அப் பெருமானை எடுத்து வளர்த்த யசோதையின் பேச்சுக்களாகவும் ஆய்ச்சியரின் பேச்சுக்களாகவும் பாடியுள்ள பாடல்களின் அழகும் குழைவும் சொல்லுந்தரமன்று. இவரது பாசுரங்களே பிற்காலத்தில் எழுந்த 'பிள்ளைத்தமிழ்' என்ற சிற்றிலக்கிய வகைக்கு வழிகாட்டியாக அமைந்தன என்று கூறலாம். கண்ணனைக் குழந்தையாகப் பாவித்து இவர் பாடியுள்ள பாடல்கள் மிகவும் இனிமை வாய்ந்தவை. பாசுரங்களில் குழந்தையைத் தாலாட்டுதல், அம்புலியை அழைத்தல், செங்கீரையாடுதல், சப்பாணி கொட்டுதல், தளர்நடை நடத்தல், அப்பூச்சிக் காட்டுதல், காக்கையை விளித்தல், சிற்றில் சிதைத்தல் முதலிய செயல்கள் கொஞ்சு தமிழில் மிஞ்சு சுவையுடன் கூறப் பெற்றுள்ளதைப் படித்து மகிழலாம்.

2. கண்ணனாகிய குழந்தையின் மழலைச் சொற்களைக் கேட்கவும், விளையாட்டுக்களைப் பார்க்கவும் மட்டிலும் ஆசைப்படாத உள்ளம் அவனுடைய துடுக்கான செயல்களையும் அதிமானுடச் செயல்களையும் காண ஆசைப்பட்டதை அவர் பாடியுள்ள பாசுரங்களில் காணலாம்.

---

1. உபதேச ரத்ன மாலை - 18.

"புள்ளினை வாய்ப்பிளந் திட்டாய்
பொருகரி யின்கொம்பொ டித்தாய்
கள்ள வரக்கியை மூக்கொடு
காவல னைத்தலை கொண்டாய்"[1]

"எருதுக ளோடு பொருதி
யேதுமு லோபாய்காண் நம்பீ!
கருதிய தீமைகள் செய்து
கஞ்சனைக் கால்கொடு பாய்ந்தாய்;
தெருவின்கண் தீமைகள் செய்து
சிக்கென மல்லர்க ளோடு
பொருது வருகின்ற பொன்னே"[2]

என்பன போன்ற பாசுரங்களால் இதனை அறியலாம்.

3. கண்ணனது குழவிப் பருவத்தில் கஞ்சன் முதலியோரால் நேரவிருந்த கொடிய ஆபத்துக்களுக்குப் பெரிதும் அஞ்சிப் பல்லாண்டு பாடி மங்களாசாசனம் செய்தும் அப்பெருமானது சீலகுணம், சௌலப்ய குணம் போன்ற குணங்களைப் பருகிக் களித்தும் மனங்கவிந்து நிற்கும் அற்புத நிலைமையை எழுதிப் புலப்படுத்துவது எளிதன்று.

4. பெரியாழ்வார் யசோதை நிலையிலிருந்து கண்ணனைக் கன்றின்பின் போக்கியதற்கு இரங்குவதாக அமைந்த பாசுரங்களும்.[3] அவன் மீண்டும் வரும் கோலம் கண்டு அவள் மகிழ்வதாக அமைந்த பாசுரங்களும்[4] பாடிய வாய் தேனூறும்படி இன்பம் தருபவை. தவிர, இவர் தாய் நிலையிலிருந்து கொண்டு தன் மகளைக் குறித்துப் பலபடி உன்னி ஏங்குவதாக அமைந்த பாசுரங்கள் மிகமிக அற்புதமானவை.

"ஒருமகள் தன்னை உடையேன்
உலகம் நிறைந்த புகழால்
திருமகள் போல வளர்த்தேன்;
செங்கண்மால் தான்கொண்டு போனான்"[5]

---

1. பெரியாழ்வார் திருமொழி 2.7:5.
2. பெரியாழ்வார் திருமொழி 2.7:6.
3. பெரியாழ்வார் திருமொழி 3.2; 3.7.
4. பெரியாழ்வார் திருமொழி 3.3.
5. பெரியாழ்வார் திருமொழி 3.8:4.

என்ற பாசுரப் பகுதி தன் மனநிலையை ஆழ்வார் தாய் நிலையிலிருந்து கொண்டு பேசுகின்றதாக அமைகின்றது. இங்ஙனம் நற்றாய் இரங்கலாக அமைந்த,

“காறை பூணும் கண்ணாடி
காணும்தன் கையில் வளைகுலுக்கும்,
கூறை யுடுக்கும் அயர்க்கும்தன்
கொவ்வைச் செவ்வாய் திருத்தும்,
தேறித் தேறிநின் றாயிரம்பேர்த்
தேவன் திறம்பி தற்றும்,
மாறில் மாமணி வண்ணன்
மேலிவள் மாலுறு கின்றாளே”[1]

என்ற பாடலும் தன் மனநிலையையே ஆழ்வார் வெளியிடுவ தாகக் கூறலாம்.

5. இவரது பாசுரங்களில் இவர் முழுமனதுடன் வழி பட்டு வந்த திருமாலின் பல்வேறு அவதாரச் செய்திகளும் பிறவும் தெளிவாகக் கூறப்பெற்றுள்ளன. திருமால் திரு வோணத்தில் பிறந்தது, இரணியன் மார்பைப் பிளந்தது, வாணன் தலைகளை அறுத்தது, காளிங்கனை அடக்கியது, பூதகியின் உயிர் குடித்தது, கண்ணன் மருதிடைத் தவழ்ந் தது, சகடுதைத்தது, ஆலிலைமேல் பள்ளி கொண்டது, கோவர்த்தனத்தைக் குடையாக்கியது, ஏழு விடைகளை அடர்த்து நப்பின்னையை மணம் புணர்ந்தது, கன்றால் விள வெறிந்தது, பார்த்தனுக்குத் தேரூர்ந்தது, திருமால் பத்து அவதாரங்கள் எடுத்தது, பாற்கடல் கடைந்தது, இராவண னைக் கொன்றது, மாவலிபால் இரந்தது, பாண்டவர்க்குத் தூது சென்றது, குப்ஜையின் கூனிமிர்த்தது, பாரிசாதம் கொணர்ந்தது, கஞ்சனைக் கொன்றது, யானையைக் காத் தது, புள்ளின்வாய்க்கீண்டது, வீடணற்கரசளித்தது, குடக் கூத்தாடியது முதலிய செய்திகள் இவரது பாசுரங்களில் காணலாம்.

6. நாட்டு மக்களிடையே வழங்கும் பழமொழிகள் இவரது பாடல்களில் இடம் பெற்றுள்ளன. ‘ஓணத்தான் உலகாளும் (1.1.3), ‘காக்கை வாயிலும் கட்டுரை கொள்வர்

1. பெரியாழ்வார் திருமொழி 3.7:8.

*(5.11 : 1)*, நெய்க்குடத்தைப் பற்றி ஏறும் எறும்புகள் போல் *(5,2 : 1)* என்பனவற்றைக் காண்க.

7. சீதாப்பிராட்டிக்கு அநுமன் கூறியனவாகவுள்ள அடையாளங்களைக் குறிக்கும் பாசுரங்களின் கருத்துக் களைக் கம்பநாடன்,

"முன்னோர் மொழி பொருளே
யன்றி அவர் மொழியும்
பொன்னே போற் போற்றுவம்"[1]

என்னும் மரபினையொட்டித் தம் காவியத்தில் அமைத்துக் கொண்ட அருமைப்பாட்டினைக் கம்பராமாயணம் கற்றோர் நன்கு அறிவர்.

8. பக்திச் சுவை நனி சொட்டச் சொட்டக் கூறும் சிறந்த பகுதிகளை இவர் பாசுரங்களில் காணலாம்.

"மார்வம் என்பதோர் கோயில் அமைத்து
மாதவ னென்னும் தெய்வத்தை நாட்டி
ஆர்வம் என்பதோர் பூவிட வல்லார்க்கு
அரவ தண்டத்தில் உய்யிலும் ஆமே"[2]

"மாணிக் குறளுரு வாய
மாயனை எம்மனத் துள்ளே
பேணிக் கொணர்ந்து புகுத
வைத்துக் கொண் டேன்"[3]

"பொன்னைக்கொண் டுரைகல் மீதே
நிறமெழ வுரைத்தாற் போல்
உன்னைக் கொண்டென் நாவகம் பால
மாற்றின்றி உரைத்துக் கொண்டேன்
உன்னைக்கொண் டென்னுள் வைத்தேன்
என்னையும் உன்னி லிட்டேன்"[4]

"பனிக்கடலில் பள்ளிக் கோளைப்
பழகவிட்டு, ஓடி வந்தென்
மனக்கடலில் வாழ வல்ல
மாயமணாள நம்பி"[5]

---

1. நன்னூல் நூற்பா - 9.
2. பெரியாழ்வார் திருமொழி 4.5:3.
3. பெரியாழ்வார் திருமொழி 5.2:5.
4. பெரியாழ்வார் திருமொழி 5:4:5.
5. பெரியாழ்வார் திருமொழி 5.4:9.

“ சுடரொளியாய் நெஞ்சி னுள்ளே
தோன்றுமென் சோதிநம்பீ ?
வடதடமும் வைகுந்தமும்
மதிள்துவ ராபதியும்
இடவகைகள் இகழ்ந்திட்டென்பால்
இடவகை கொண்டனையே ”[1]

என்ற பாசுரப் பகுதிகளில் பக்திச் சுவை சொட்டுவதைக் காணலாம்.

9. கண்ணன் குழலாலும் காட்சிகளைத் சித்திரிக்கும் பாடல்கள் அதி அற்புதமானவை. தமிழின் குழைவும் குழலின் இனிமையும் மானசீகமாகத் தோன்றும் கண்ண னின் காட்சியும் நம் உள்ளத்தைக் கனிவிப்பனவாக அமைந்துள்ளன.

“ சிறுவி ரல்கள் தடவிப்பரி மாறச்
செங்கண் கோடச் செய்யவாய் கொப்பளிப்ப
குறுவெ யர்ப்புரு வம்கூட லிப்ப
கோவிந்தன் குழல்கொ டுதின போது
பறவையின் கணங்கள் கூடு துறந்து
வந்து சூழ்ந்து படுகாடு கிடப்ப
கறவையின் கணங்கள் கால்பரப் பிட்டுக்
கவிழ்ந்திரங் கிச்செவி யாட்டகில் போலவே ”[2]

என்ற பாசுரத்தில் கண்ணன் குழலை இயக்கும் காட்சியும் அந்த இன்னோசையால் பறவை இனங்களும் பசுத்திரள் களும் இசைமயமான அன்புச் சங்கிலியால் ஆப்புண்ட காட்சியும் நம் உள்ளத்தைக் கொள்ளை கொள்ளுகின்றன. அந்த வேய்ங்குழலோசையால்,

“ மருண்டுமான் கணங்கள் மேய்கை மறந்து
மேய்ந்த புல்லும்கடை வாய்வழி சோர
இரண்டு பாடும்துலுங் காப்புடை பெயரா
எழுதுசித் திரங்கள் போலநின் றனவே ”[3]

(இரண்டுபாடு - முன்னும் பின்னும்; துலுங்கா - அசையாமல் ; புடைபெயரா - பக்கத்திலும் இடம் பெயராமல்)

---

1. பெரியாழ்வார் திருமொழி 5.4:10.
2. பெரியாழ்வார் திருமொழி 3.6:8.
3. பெரியாழ்வார் திருமொழி 3.6:9.

கீதவெள்ளம் பெருகியதும் மான்கள் மேய்வதை மறக்கின்றன; மேய்ந்த புல்லும் கடைவாய் வழியே நழுவுகின்றது. இன்னும் வேணுகோபாலனின் இனிய குழலோசையால் இயற்கை மோகினியே சொக்கி விடுகின்றாள். இதோ அந்தக் காட்சி :

“ மரங்கள் நின்றுமது தாரைகள் பாயும்
மலர்கள் வீழும்வளர் கொம்புகள் தாழும்
இரங்கும் கூம்பும் திருமால் நின்றநின்ற
பக்கம் நோக்கி அவை செய்யும்குணமே ”[1]

இதில் ஆய்ச்சியர்களின் காதலன் இயற்கையின் காதலனாகிவிட்ட அற்புதத்தைக் காண்கின்றோம்.

*10.* இவ்வாழ்வார் உலக அறிவும் அநுபவமும் சாலச் சிறந்து விளங்கியவர் என்பதை இவர் அருளிச்செயல்களினின்றே தெளிவாகும். யாக்கை நிலையாமை, உலக நிலையாமை போன்ற உணர்ச்சிகள் மனத்தில் தைக்குமாறு வற்புறுத்துவதைக் காண்க.

*11.* இந்த ஆழ்வாரின் பாசுரங்களில் தமிழ்நாட்டுப் பழக்கவழக்கங்கள் சிலவற்றைக் காணலாம். பிறந்த குழவியை நீராட்டி சிறுமஞ்சளால் நாக்கு வழித்தல், தொட்டிலிலிடுதல், குழவிகட்குத் திருமாலின் ஐம்படைத் தாலிகட்டுதல், அம்புலி காட்டுதல், அரசிலை அணிதல், குடக் கூத்தாடுதல் முதலியன அவற்றுள் சில.[2]

*12.* இவருடைய பாசுரங்கள் பல்வேறு சந்தங்களில் அமைந்து படிப்போருக்கு ஆர்வமூட்டுவனவாய் உள்ளன. பெரும்பாலும் கலிவிருத்தம், கலித்தாழிசை, கலிநிலைத் துறை, அறுசீர், எழுசீர், எண்சீர் ஆசிரிய விருத்தங்கள் என்ற வகையில் இவற்றை அடக்கலாம்.

**இவர் காலம் :** ஆராய்ச்சியாளர் இவர் காலம் சீமாறன் சீவல்லபன் (கி. பி. 835-862) காலத்தவர் என்று

---

1. பெரியாழ்வார் திருமொழி 4.5:4,5,8.
2. பெரியாழ்வார் திருமொழி 1.2;1.3; 1.4.

கருதுவர்.[1] பெரியாழ்வார் எண்பத்தைந்து ஆண்டுகள் வாழ்ந்தவர் என்பது குருபரம்பரைகளால் அறியப் பெறுகின்றது. ஆகவே, இவர் கி. பி. 9-ஆம் நூற்றுண்டின் பிற்பகுதியிலும் வாழ்ந்தவராகக் கொள்ளலாம்.

## 8. ஆண்டாள்

பெரியாழ்வாரின் பெண்கொடி எனத் திகழ்ந்த இவர் ஆடிமாதம் பூர நட்சத்திரத்தில் பூமிப் பிராட்டியாரின் அவதாரமாகத் தோன்றினர். ஆழ்வார் அமைத்த நந்தவனமே இவர் தோற்றத்திற்கு இடனய்ப் பொருந்தியது. அந்த மலர் வனத்தில் ஒருபுறம் பச்சைப் பசேலென்று செழித்து அடர்ந்து வளர்ந்த திருத்துளவமே இவர் வீற்றிருத்தற்கு நிலைக்கலனய் அமைந்தது. பெரியாழ்வார் அக்குழவியைக் கண்டெடுத்து அதனைத் தன் மகளாகவே கருதி 'கோதை' என்ற திருநாமஞ் சூட்டிச் சீராட்டிப் பாராட்டி வளர்த்து வந்தார். இளமையில் கலைகள் முழுதும் தன்னடைவே நிரம்பப்பெற்று வளர்ந்து வந்தாள் கோதையார். ஆழ்வாரைப் போன்றே கோதையாரும் இளமைதொட்டே கண்ணன் பக்தியில் ஈடுபட்டாள். தந்தையாருக்குக் குழந்தையாகக் கருதின கண்ணன் இவளுக்குக் காதலனுக அமைந்து விடுகின்றுன். தந்தைக்குத் தெரியாமல் அவர் வட பத்திரசாயிக்குக் கட்டிவைத்த திருமாலையைச் சூட்டிக் கொண்டுக் காறை பூண்டுக் கூறையுடுத்துக் கைவளை குலுக்கிக் கோவைச் செவ்வாய் திருத்தித் தன் அழகைக் கண்ணுடியில் கண்டு பலநாளும் கோதை மகிழ்ந்து வந்ததை ஒருநாள் ஆழ்வார் கண்டுவிட்டார். தன் மகளுடைய அடாத செயலுக்கு அவளைக் கடிந்து கொண்டார். அன்றிரவு வடபெருங்கோயிலுடையான் ஆழ்வார் கனவில் தோன்றி அவர் மகள் சூடிக் கொடுத்த மாலைதான் தனக்கு விருப்பமாகும் என்று குறிப்பிட்டார். அன்று முதல் தன் திருமகளார் சூடிய திருமாலைகளையே நாளும் சாத்திப் பெருமாளை உவப்பித்து வரலானர். அதுமுதல் அவளுக்குச் 'சூடிக்கொடுத்தாள்' எனத் திருநாமம் வழங்கலாயிற்று. தம் மகளாரின் பெருமையை

1. Gopinatha Rao: History of Sri Vaisnavas p. 23; Sastri, K. A. N., History of South India - p. 415.

மெச்சிய ஆழ்வார் 'என்னை ஆண்டாள் இவளே!' என்று தன் மகளைத் தழுவி உச்சி மோந்தார். அன்றுமுதல் 'ஆண்டாள்' என்ற பெயரும் அவளுக்கு நிலைத்துவிட்டது. மங்கைப் பருவமடைந்ததும் ஆண்டாள் 'மானிடவர்க்கென்று பேச்சுப்படின் வாழகில்லேன்' என்று கூறித் திருவரங்கப் பெருமானையே கணவனாக வரித்தாள். ஆழ்வாரும் தன் கனவில் அப் பெருமான் உரைத்தபடியே தன் மகளை அழகிய மணவாளன் முன் நிறுத்த அவ்வெம் பெருமானும் அவளை வரவேற்றுப் பெருவிருப்புடன் அங்கீகரித்தருளினன். ஆண்டாளும் அப் பெருமானுடன் கலந்து மறைந்தாள். இவ் வரலாறு பின்பழகிய பெருமாள் ஜீயர் குருப் பரம்பரை முதலியவற்றில் கூறப்பெற்றதாகும்.

**இவரது அருளிச் செயல்கள் :** இப் பெருமாட்டி அருளிச் செய்தவை திருப்பாவை (30 பாசுரங்கள்), நாச்சியார் திருமொழி (143 பாசுரங்கள்) என்ற இரண்டு பிரபந்தங்களாகும். இவை பெரியாழ்வார் திருமொழியை அடுத்து 'முதலாயிரத்தில்' அமைக்கப்பெற்றுள்ளன. இவையிரண்டும் முத்திரைக் கவிகளேயாகும். இந்த இரண்டு அருளிச் செயல்களைக்கொண்டு ஆராய்ச்சி செய்யுமிடத்து மிகவும் அழகிய செய்திகள் சில வெளியாகின்றன. இவ்விரண்டு பிரபந்தங்களிலும் பொதுவாக அமையப்பெற்ற 'திரு' என்ற அடைமொழிக்குச் சிறப்புப் பொருள் உண்டு. ஒன்று : எம்பெருமான் அர்ச்சாவதாரமாய் எழுந்தருளியிருக்கும் திருக்கோயில்கட்கும் அவன் பெருமையைப் போற்றியுரைக்கும் நூல்கட்கும் 'திரு' என்ற அடைமொழியை அமைத்தல் வழக்கு. இரண்டு : திரு என்பதற்கு இலக்குமி, அழகு, செல்வம், தெய்வத்தன்மை என்ற பொருள் உண்டு. ஆகவே, 'புருஷகார பூதையான[1] திருமகள் வழிபாடு, பாகவத ஷேத்துவமான ஆன்ம அழகு, இறைவனுக்குத் தொண்டு பூண்டொழுகுதலாகிய கைங்கரியச் செல்வம், சீரிய பயனைத் தருதற்கேற்ற தெய்வத்தன்மை பலவும் இவ்விரு நூல்களுள்ளும் இடங்கொண்டிருத்தலின், 'திரு' என்ற அடைமொழி இந்நூற் பெயர்கட்கு வழங்கப்பெற்றுள்ளது.

---

1. புருஷகார பூதை - தகவுரை கூறுபவள்.

**திருப்பாவை:** முதல் நூல், கருத்தன், அளவு மிகுதி பொருள், செய்வித்தோன், தன்மை என்பவற்றுள் ஏதேனும் ஒன்று ஒரு நூலிற்குப் பெயராய் அமையும் என்ற மரபினை நாம் அறிவோம். அவற்றுள், 'உட்பொருளே' இந் நூற்குப் பெயராய் அமைந்தது. 'நாமும் நம் பாவைக்குச் சாற்றி நீராடினால்' (3), 'பிள்ளைகள் எல்லாரும் பாவைக் களம் புக்கார்' (13), 'எம்பாவாய்' என்பன இதனை வலியுறுத்தும். இங்குப் 'பாவை' என்பது பெண்; கன்னிப் பெண். பாவை என்பதற்குப் பதுமை என்ற பொருளும் உண்டு. அவர்களால் நோற்கப் பெறும் நோன்பு 'பாவை நோன்பு'; மார்கழி நோன்பு. பாவையைக் கொண்டு பாவையர் நோன்பு இயற்றியமைப்பின், இஃது இருமடியாகு பெயராய்ப் பாவையின் பெயர் நோன்பிற்காகி அஃது நோன்பைப்பற்றிக் கூறும் நூலிற்கு ஆகி வந்தது. ஆயினும், ஆன்ம அணியாக சேஷத்துவச்[1] செல்வத்தையும் எம்பெருமான் முன் 'புதுமை' போன்று கிடக்கும் பாரதந்தியப்[2] பெட்பையும் குறிக்கின்றமையின் இந்நூல் 'திருப்பாவை' என்று பெயர்பெற்றதாகக் கொள்ளலாம். இது மிகச் சிறப்பு.

இந்நூல் மூன்று பகுதியாக அமைந்தது. முதற்பகுதி: முதல் ஐந்து பாசுரங்களும் பாயிரமும்; நூலின் உயர்நிலை. இது நூற்பொருளினைத் தெளித்துக் காட்டும் ஆடி போன்றது. இரண்டாம் பகுதி: ஆறு முதல் பதினைந்து முடிய பத்துப் பாசுரங்கள். இதில் அடங்கும். இப் பகுதிப் பாசுரங்கள் ஆழ்வார்கள் பதின்மருக்கும் ஊக்கமூட்டி எழுப்புவதாக உள்ளுறைப் பொருள் அமைந்திருப்பதாகக் கூறுவர்.[3] செல்வம், செயல், குணம் இவற்றில் பத்து வகைப்பட்ட ஆயச் சிறுமிகளை அஞ்ஞானத் துயிலிலிருந்து ஞான விழிப்பிற்குக் கொணர்வது வெளிப்படைப் பொருள்.

---

1. இதன் விளக்கத்தை 'மார்கழி நோன்பாதியதை நீராடல்' என்ற கட்டுரையில் காண்க (இராகவையங்கார். மு, ஆராய்ச்சித் தொகுதி - 13-வது கட்டுரை)
2. சேஷத்துவம் - பிறருக்கு (எம்பெருமானுக்கு) அடிமையாக இருத்தல்.
3. பார தந்திரியம் - பகவானுக்கு வசப்பட்டிருத்தல்.

மூன்றும் பகுதி: ஆயமகளிரை எம்பெருமானின் கைங்கரியத்திற்குத் தகுதியுடையவராகச் செய்வது இப் பகுதி. ஆக இப் பிரபந்தம் அஞ்ஞானத்தில் ஆழ்ந்து கிடக்கும் ஆன்மாக்களுக்கு ஞானம் ஊட்டி இறையுடன் கலந்து இன்பந்துய்க்கச் செய்தலை விளக்குவதாகக் கொள்ளலாம். அன்றியும், 'ஓம்' என்னும் பிரணவம் வைணவ மந்திரங்களைத் தன்னுள் கொண்டுள்ளதைப்போல் 'மார்கழித் திங்கள்' எனத் தொடங்கும் முதற்பாசுரமும் மற்ற முப்பது பாசுரங்களின் பொருளையும் தன்னகத்துக் கொண்டுள்ளது. இவ்வொரு பாசுரத்தைக் கொண்டே எல்லாப் பொருள்களையும் அறியலாம். மேலும், இப்பிரபந்தம் அர்த்த பஞ்சக ஞானத்தையும்[1] தெரிவிப்பதாகவுள்ள உபாய நூல். இப்பிரபந்தத்தில் (1) ஈசுவர சொரூபம் 1 முதல் 5 வரை உள்ள பாசுரங்களாலும், (2) ஆன்ம சொரூபம் 6 முதல் 15 வரை உள்ள பாசுரங்களாலும், (3) பகவத் சொரூபமாகிய இரட்சகத்துவம் 16 முதல் 20 வரை உள்ள பாசுரங்களாலும், (4) ஆன்மாக்கள் கையற்று நிற்கும் நிலையும் உபாயமாகிய பிரபத்தியும் 21 முதல் 25 வரை உள்ள பாசுரங்களாலும், (5) வீடுபேறு அடையும் நிலை 26 முதல் 30 வரை உள்ள பாசுரங்களாலும் உணர்த்தப் பெறுகின்றன. இவற்றை,

"பாதகங்கள் தீர்க்கும்
பரமனடி காட்டும்
வேதம் அனைத்திற்கும்
வித்தாகும் - கோதைதமிழ்
ஐயைந்து ஐந்தும்
அறியாத மானுடரை
வையம் சுமப்பதும்
வம்பு"[2]

---

1. அண்ணங்கராசாரியர் பி. ப., திருப்பாவை திவ்யார்த்த தீபிகை காண்க.

2. அர்த்த பஞ்சகம்: 1. ஆன்மாவின் இயல்பு, 2. ஈசுவரனது இயல்பு 3. ஆன்மா அடையும் பயன். 4. அப்பயனை அடைவதற்கு உபாயம் 5. அப்பயனை அடைவதற்குப் பகையாய் உள்ளவை ஆகியவற்றை விளக்குவது. இவற்றை விளக்கமாகத் தெரிந்து கொள்வதே அர்த்த பஞ்சக ஞானம் என்பது.

(வையம் - மனித உடலாகிய வண்டி: வம்பு - புதுமை)

என்ற வெண்பாவும் விளக்குகின்றது.

இப் பிரபந்தத்தில் காணும் நயங்கள் பலவாகும். அவற்றுள் சில:

*1.* இயற்கை வருணனைகளை இப் பாசுரங்களில் காணலாம்.

(i) ஆழியில் புக்கு முகந்துகொட டார்த்தேறி
ஊழி முதல்வன் உருவம்போல் மெய்கறுத்துப்
பாழியந் தோளுடைப் பற்பநா பன்கையில்
தாழாதே சார்ங்க முதைத்த சரமழைபோல்
வாழ வுலகில் பெய்திடாய் (4)

என்று முகிலை முன்னிலைப்படுத்திக் கார்மேகத்தைக் கார் முகில் வண்ணனாக உருவகித்துப் பாடுதல் அறிந்து மகிழத் தக்கது.

(ii) அதிகாலை நிகழ்ச்சிகள் அழகுபெறப் படம் பிடித்தாற்போல் காட்டப் பெற்றுள்ளன. அவற்றுள் சில: கீசு கீசு என்று ஆனைச்சாத்தன் கலந்து பேச்சரவம் *(7)*, வாச நறுங்குழல் ஆய்ச்சியர் மத்தினால் ஓசைப்படுத்த தயிரரவம் *(7)*, கீழ்வானம் வெள்ளென்று எருமை சிறுவீடு மேய்வான் பரத்தல் *(8)*, தூமணி மாடத்தில் சுற்றும் விளக்கெரிய, தூபம் கமழ, துயிலணைமேல் கண்வளரும் மாமன்மகள் *(9)* புள் சிலம்புதல் *(13)*, புழைக்கடைத் தோட்டத்து வாவியுள் செங்கழுநீர் வாய் நெகிழ்ந்து ஆம்பல்வாய் கூம்புதல் *(14)*, வந்தெங்கும் கோழி யழைத்தல், மாதவி பந்தல்மேல் குயிலினம் கூவுதல் *(18)* முதலியன.

(iii) நாடோறும் நிகழும் நிகழ்ச்சிகள் நயம்படக் காட்டப்பெற்றுள்ளன. செங்கல் பொடிக் கூறை வெண்பல் தவத்தவர் திருக்கோயில் திறக்கைக்காகப் போதல் *(14)*, பிள்ளைகள் பாவைக்களம் புகல் *(13)* போன்றவை இவற்றுள் அடங்கும்.

*2.* இவருடைய பாடல்களில் உவமை உருவகம் முதலிய அணிநயங்களைக் காணலாம். கார்மேனிச் செங்

கண் கதிர்மதியம்போல் முகத்தான் நாராயணன் (1). முகில் ஊழி முதல்வன்போல் மெய்கறுத்தல், ஆழிபோல் மின்னுதல் வலம்புரிபோல் நின்றதிர்தல் (14), குகையில் உறங்கும் சிங்கம் தீவிழித்து வேரி மயிர் பொங்க எப்பாடும் போந்துதறி மூரி நிமிர்ந்து முழங்கிப் புறப்பட்டுப் போதல் போல் கண்ணன் வரவேண்டுமென்று கூறல் (23), கஞ்சன் வயிற்றில் நெருப்பென்ன நின்ற நெடுமால் (25), பாலன்ன வண்ணத்துப் பாஞ்ச சன்னியம் (26) போன்றவை உவமை அணிகள். யசோதை இளஞ்சிங்கம் (1), வெள்ளத்தரவில் துயிலமர்ந்த வித்து (6), அருங்கலமே (10), குன்றமொன் றில்லாத கோவலர்தம் பொற்கொடி, புற்றரவல்குல் புனமயில் (11), கொம்பினுர்க்கெல்லாம் கொழுந்து, குல விளக்கு (17), கந்தம் கமழும் குழலி, பந்தார் விறலி (18) கப்பம் தவிர்க்கும் கலி (20), தோற்றமாய் நின்ற சுடர் (21) போன்றவை உருவகங்கள்.

5. இவர் பாசுரங்களில் கண்ணனைப் பற்றிய செய்திகள் அதிகமாகக் காணப்பெறுகின்றன. ஆயர் குலத்தில் தோன்றியமை (5), சகடாசுரனை யழித்தமை (24), சாணூரன், முஷ்டிகன் என்ற மல்லரைக் கொன்றமை கேசியைப் பிளந்தமை (8), கன்று குணிலாகக் கொண்டு விளவெறிந்தமை, குன்றம் ஏந்தி குளிர்மழை காத்தமை (24), முதலிய செய்திகளைக் காணலாம்.

4. திருமாலைப்பற்றிய செய்திகளையும் காணலாம். பாற்கடலுள் பையத்துயின்றமை (2), உலகளந்த வரலாறு (24), வெள்ளத்தரவில் துயிலமர்ந்த நிலை (6), இராமனாய் வந்து தென்னிலங்கையை அழித்தமை (24) ஆகிய செய்திகள் வந்துள்ளன.

***நாச்சியார் திருமொழி:*** இதில் உள்ள நூற்றுநாற் பத்து மூன்று பாசுரங்களிலும் கண்ணன்மாட்டு இவர் காட்டும் காதற் பெருக்குப் புலனாவதை அறியலாம். இப் பிரபந்தத்தில் திருமாலைத் தவிர வேறொன்றையும் தம் மொழியில் கலவாதிருத்தல், இறைவனின் ஆண்மையிலும் தம் பெண்மையிலும் இடையறாது மனதைச் செலுத்துதல், தன் ஆன்மாவின் பெண்மை நிலைக்குத் தகச்செயல் புரிதல் ஆகிய பண்புகள் யாவும் அமைந்துள்ளன. ஆண்பாலரான

மற்றை ஆழ்வார்கள் தம்மை நாயகியராக ஏறிட்டுக் கொண்டும் திருமாலை நாயகனுகக் கொண்டும் பாடிப் போந்தனராயினும் அவர்கள் கொண்ட பாவம் இயற்கை யானதன்று என்றும், அதனுல் அன்னோர் திருமாலிடம் செலுத்திய அன்பு மேட்டுமடை நீர் போன்றதென்றும் பெரியோர் பணிப்பர். ஆனுல், ஆண்டாள் பெண்பால ராய்ப் பிறந்து ஒன்றையும் ஏறிட்டுக்கொள்ளாமல் அழகிய மணவாளனையே தம் நாயகனுக வரித்துக்கொண்டு அவனிடம் உள்ளுருகிச் செலுத்தும் இவரது இயற்கைக் காதற் பெருக்கு பள்ளமடைநீர் போன்றதென்றும் அன்னுர் கூறுவர். இஃது உபேய நூல் ஆயினும், திருப்பாவையில் உபேயமும் திருமொழியில் உபாயமும் இல்லாமற் போக வில்லை. மிகுதியைக் கொண்டே இங்ஙனம் வரையறுத்துக் கூறப்பெற்றது.

கீழ்க்கண்டவைகளை இத் திருமொழியின் சிறப்பியல்பு களாகக் கருதலாம்.

1. கண்ணனைப் பெற வேண்டிக் காமதேவனை வழிபடு கின்ருள் ஆண்டாள். மறந்தும் புறந்தொழா வேண்டி யிருக்க, தேவதாந்தரத்தின் காலில் விழுகூறு பொருந் துமோ என்னில் முயற்சி உபேயத்தால் அடங்கி விடுமாத லின் பொருந்தும்.

2. சிற்றில் இழைத்தல் (2) கூடல் இழைத்தல் (4) போன்ற மகளிர் விளையாட்டுக்களை அமைத்து அழகிய பாசுரங்கள் உருவாகியுள்ளன.

3. திருமணக் கனவு என்ற பதிகம் (6) அற்புதமாக அமைந்துள்ளது. ஆண்டாள் நாரண நம்பி மீது கொண்ட காதற் பெருக்கினைத் தெளிவாக விளக்குகின்றது. இன்று இதுவைணவரது வதுவைச் சடங்கில் பாடப் பெறுவது. குயில் பத்தும் (5) நாச்சியாரின் காதற் பெருக்கினைக் கவின் பெற உரைக்கின்றது.

4. திருச்சங்காழ்வானை விளித்துத் திருப்பவள அமுதத் தின் தன்மையை வினவுவதாக அமைந்த பகுதி சுவை யானது. இப்பதிகத்தில் பறிகொடுத்த திருக்கண்ண

மங்கையாண்டான் 'கோலச்சுரிசங்கை மாயன் செவ் வாயின் குணம் வினவும் சீலத்தனள்'[1] என்று புகழ்வ தைக் காணலாம்.

*5.* கண்ணன் இருக்கும் இடத்திற்குத் தன்னைக் கொண்டேகுமாறு கூறும் பதிகமும் (*12*), கண்ணன் உகந்த பொருள்களைக் கொண்டு காதல் நோயினைத் தணிக்கு மாறு வேண்டும் பதிகமும் (*13*) காதல் இலக்கியத்தின் கொடுமுடிகள்.

"குற்றம் அற்ற முலைதன்னைக்
குமரன் கோலப் பணைத்தோளோடு
அற்ற குற்றம் அவைதீர
அணைய அமுக்கிக் கட்டீரே"[2]

"கொள்ளும் பயன்ஒன்று இல்லாத
கொங்கை தன்னைக் கிழங்கோடும்
அள்ளிப் பறித்திட்(டு) அவன்மார்பில்
எறிந்துஎன் அழலைத் தீர்வேனே"[3]

"கொம்மை முலைகள் இடர்தீரக்
கோவிந் தற்கோர் குற்றேவல்
இம்மைப் பிறவிச் செய்யாதே
இனிப்போய்ச் செய்யும் தவந்தான்என்"[4]

என்ற பாசுரப்பகுதிகள் பக்தியின் கொடுமுடிகளைக் காட்டுபவை.

*6.* இரண்டு ஆய மகளிர் வினவிடை வடிவில் பேசுவ தாக அமைந்த இறுதிப் பதிகம் தான் இதுகாறும் ஏங்கிப் பட்ட பாடெல்லாம் தீரும்படி கண்ணபிரான் வந்து சேவை தந்தருளினபடியைக் கூறுவது. இங்கு இவள் காதல் வெண்மை எம்பெருமானாகிய உயர் கரையை அடைந்து அமைதி பெறுகின்றது. "என் அவாவறச் சூழ்ந்தாயே" (*திருவாய் 10 : 10 : 10*) என்று திருவாய்மொழியில் நம்மாழ் வார் பெற்ற பேற்றினை இவளும் பெறுகின்றாள்.

---

1. தனியன்.
2. நாச்சி. திருமொழி, 13 : 7.
3. நாச்சி. திருமொழி, 13 : 8.
4. நாச்சி. திருமொழி, 13 : 9.

## இலக்கிய வரிசையில் ஆண்டாள்

ஆண்டாள் தமது பாசுரங்களை 'சங்கத்தமிழ் மாலை' என்றும் (சங்கமாக அல்லது குழுவாக இருந்து சேவிக்கும் பாடல்கள்)[1] 'இன்னிசையால் சொன்னமாலை' என்றும் குறிப்பர்; இவை இசையுடன் ஓதப்பெற்றன என்பதற்கு இவை சான்றுகளாகும். இவர் பாடல்களில் சொக்கசக் கலி, அறுசீர் ஆசிரிய விருத்தம், கலி விருத்தம் ஆகிய யாப்பு வகைகள் பயின்று வந்துள்ளன.

**இவர் வாழ்ந்த காலம்:** பெரியாழ்வார் வாழ்ந்த காலமேயாகும். "வெள்ளியெழுந்து வியாழம் உறங்கிற்று" (திருப்பாவை - 13) என்ற குறிப்பினை எடுத்துக்கொண்டு ஆய்ந்து இக்காலத்தை அறுதியிடுவர் மு. இராகவய்யங் கார் அவர்கள். இதனை கி. பி. 731 என்று அவர் அறுதி யிடுவர். டாக்டர் ந. சுப்பு ரெட்டியார் அவர்கள் இவர் வாழ்ந்த காலம் கி. பி. 850ஐச் சுற்றிய ஆண்டுகளாகக் கொள்வர்.[2]

### 9. நம்மாழ்வார்

இவர் பாண்டிநாட்டில் நெல்லைமாவட்டத்தில் பொருநை நதிக்கரையிலுள்ள ஆழ்வார் திருநகரி எனப்படும் திரு குருகூரில் திருமாலிடம் வழிவழியாக அன்பு பூண்டொழுகும் வேளாளர் குலத்தில் சேனை முதலியாரின் கூறாக வைகாசித் திங்கள் பௌர்ணமியுடன் கூடிய விசாக நட்சத்திரத்தில் அவதரித்தார். தந்தையார் காரியார் என்றும் சொல்வர். தாயார் உடைநங்கையார். தாய் தந்தையர் இவருக்கு இட்ட பெயர் 'மாறன்' என்பது. பிறந்த நாள் தொட்டுக் குழந்தை பாலுண்ணுதல் முதலிய இயல்பு ஒன்றுமின்றி இருந்தது. அது பிறந்த பன்னிரண்டாம் நாள் அவ்வூரில் எழுந்தருளியுள்ள பொலிந்து நின்ற பிரானின் திருமுன்பு அக் குழந்தையை விட்டனர் பெற்றோர். அது அங்குள்ள

---

1. இதனைக் கடைச்சங்கமாகக் கருதுவது பொருந்தாது (வரதராச ஐயர், ஈ. எஸ். தமிழ் இலக்கிய வரலாறு — வைணவமும் தமிழும்,249 (அண்ணாமலைப் பல்கலைக் கழக வெளியீடு, 1957)
2. Religion and philosophy of Nalayiram with special reference to Nammalvar.

புளியமரத்தடியில்[1] சென்று அமர்ந்தது. அங்ஙனம் அமர்ந்த குழந்தை பதினாறு வயது வரை கண்விழித்துப் பார்த்தல், பேசுதல் முதலியன ஒன்றுமின்றி இறைவனை நினைந்து அமர்ந்திருந்தது.

அயோத்தி முதலிய இடங்கட்கு யாத்திரை சென்ற மதுரகவி ஆழ்வார் தென் திசையில் தோன்றிய பேரொளியை வழிகாட்டியாகக்கொண்டு திருநகரிக்கு வந்து சேர்ந்தார். ஆழ்வார் நிலையைக் கண்டு ஒரு சிறு கல்லை எடுத்து அவர்முன் இட்டு ஒலியுண்டாக்கினார்; ஆழ்வார் கண்விழித்துப் பார்த்தார். மதுரகவிகள் அவருடன் பேச நினைத்து 'செத்ததன் வயிற்றில் சிறியது பிறந்தால் எத்தைத் தின்று எங்கே கிடக்கும்?'[2] என வினவினார். அதற்கு நம்மாழ்வார் 'அத்தைத் தின்று அங்கே கிடக்கும்'[3] என்று விடையளித்தார். அவ் விடையைச் செவிமடுத்த மதுரகவிகள் மிக மகிழ்ந்து அவரையே ஆசாரியனாகக் கருதி அவரிடத்தில் இருந்தே தொண்டு புரிந்து வந்தார். ஆழ்வார் மதுரகவிக்குச் சித்து அசித்து ஈசுவரன் என்னும் மூன்று தத்துவங்களையும் உபதேசித்தார். இறைவனை நினைந்த மகிழ்ச்சியினால் அவனைப்பற்றிக் கவிபாடத் தொடங்கினார். அக் கவிகளே அவரது அருளிச் செயல்களாகும்.

ஆழ்வார் அனைவரிலும் சிறந்தவர் நம்மாழ்வார். ஏனைய ஆழ்வார்களை அவயவங்களாகவும் இவரை அவயவியாகவும் கொள்வர் வைணவப் பெருமக்கள். அதாவது, பூதத்தாழ்வாரைத் தலையாகவும், பெரியாழ்வாரைத் திருமுக மண்டலமாகவும், திருமழிசையாழ்வாரைக் கழுத்தாகவும், குலசேகராழ்வாரை மார்பாகவும், மதுரகவிகளை

1. இது உறங்காப்புளி என வழங்கப்பெறும் திருவனந்தாழ்வானே இந்த மரமாக வந்து அவதரித்ததாக ஐதிகம். ஆழ்வார் எழுந்தருளிய மரத்தைப் பின்னுளோர், திருப்புளியாழ்வார் என வழங்கினர்.
2. செத்தது - உடல்; அறிவற்றது. சிறிது - உயிர்; அது அணு வடிவமானது. பிறத்தல் - உயிர் தன் வினைகட்கேற்ப உடம்பை அடைதல். எத்தைத் தின்று - எதனை அநுபவித்து.
3. அத்தை - வினைப்பயனை; அங்கே - அந்த உடம்பையே.

யும் எம்பெருமானுரையும் (இராமாநுசர்) திருவடிகளாகவும் பணிப்பர். இவருக்குத் திருமுடியாகத் திகழ்பவர் நம்பெருமாள். நம்மாழ்வார் முப்பத்தைந்து ஆண்டுகள் இவ் வுலகில் எழுந்தருளியிருந்து தொண்டர்க்கமுதுண்ணச் சொல்ல மாலைகள் சொல்லி அவாவற்ற அந்தமில் பேரின்ப வீடாகிய பரமபதத்தை அடைந்தார்.

***இவரது அருளிச் செயல்கள்:*** திருவிருத்தம், திருவாசிரியம், பெரிய திருவந்தாதி, திருவாய்மொழி என்ற நான்கு பிரபந்தங்களாக இவரது அருளிச் செயல்கள் வழங்கி வருகின்றது. இவை முறையே இருக்கு, யசு, அதர்வணம், சாமம் என்ற நான்கு மறைகளின் சாரமாக அமைந்துள்ளன என்பது அறிஞர் கொள்கை.

***திருவிருத்தம்:*** இது கட்டளைக் கலித்துறையாகிய நூறு பாசுரங்களைக் கொண்டது. அகப்பொருள் இலக்கணம் அமையப்பெற்றது. அந்தாதிப் பிரபந்தம் இது. பிரபந்தத்தின் முதற் பாசுரத்தின் முதற் சீரும் இறுதிப் பாசுரத்தின் இறுதிச் சீரும் மண்டலித்து அமைந்துள்ளது. வெளிப்படைப் பொருள், உள்ளுறைப் பொருள் (அந்நியாப தேசம், ஸ்வாப தேசம்) என்ற இருவகைப் பொருள்களும் அமைந்த அருமையான இலக்கியம். சீவான்மா பரமான்மாவின் தொடர்பினை அருமையாக விளக்கும் அற்புதப் பிரபந்தம். மணிவாசகப் பெருமான் அருளிய திருக்கோவையாருடன் ஒப்பிடத்தக்கது. ஆயின், இப்பிரபந்தத்தில் ஒரு சில அகப்பொருள் துறைகளே உள்ளன. ஒரு துறைக்கே இரண்டு மூன்று பாசுரங்கள் உள்ளன.

இந்தப் பிரபந்தத்திற்கு நம்பிள்ளை, பெரியவாச்சான் பிள்ளை, வாதிகேசரி அழகிய மணவாளசீயர், அப்பிள்ளை, பெரிய பரகால சுவாமிகள் என்பவர்கள் பேருரை வகுத்துள்ளனர். இதற்குக் கோளப்ப அய்யங்காருடைய அரும்பத உரையும் உண்டு.

***திருவாசிரியம்:*** ஏழு ஆசிரியப் பாக்களால் அமைந்தது. இதுவும் அந்தாதிப் பிரபந்தமே. இதில் முதல் பாசுரத்தின் முதற்சீரும் இறுதிப் பாசுரத்தின் இறுதிச் சீரும்

மண்டலித்து அமையவில்லை. சரணுகதி வழியை வற்புறுத்துவது இப்பிரபந்தம்.

**பெரிய திருவந்தாதி :** இது எண்பத்தேழு வெண்பாக்களாலான அந்தாதிப் பிரபந்தம் முதற் பாசுரத்தின் முதற்சீரும் இறுதிப் பாசுரத்தின் இறுதிச் சீரும் மண்டலித்து அமைந்துள்ளது. இதில் பத்தி, பரபத்தி[1] வழிகளை அங்காங்கே காணலாம்.

**திருவாய்மொழி :** நூறு பதிகங்கள் அடங்கிய நூல். இதில் முதற்பாசுரத்தின் தொடக்கச் சீரும் இறுதிப் பாசுரத்தின் இறுதிச்சீரும் மண்லிலத்து அமைந்துள்ளது. ஒவ்வொரு பதிகமும் ஒரு திருவாய்மொழியாகும். ஒவ்வொரு திருவாய்மொழியின் திருக்கடைக்காப்புப் பாசுரத்தில் ஆழ்வாரின் பெயர் முத்திரை அமைந்துள்ளது. இப்பிரபந்தம் இறைவன் தன்மை, இறைவன்பால் சென்றெடுங்கும் உயிர்களின் தன்மை, பக்தி, பிரபக்திகளின் பெருமை இவைப் பற்றிய கருத்துக்களை விரிவாகப் பேசுகிறது.

**திருவாய்மொழியின் பெருமை :** ஆழ்வார்களுள் நம்மாழ்வார் மிகச் சிறந்தவராகப் போற்றப் பெறுகின்றார். அவருடைய நூல்களும் அங்ஙனமே போற்றப் பெறுகின்றன. அவற்றுள் திருவாய்மொழி மிகச் சிறப்பாகப் பாராட்டப்பெறுகிறது. சிலவற்றை இங்குக் காண்போம்.

1. திருவாய்மொழியைப் பாராட்டித் தமிழிலும் பல நூல்கள் தோன்றியுள்ளன. நம்மாழ்வார் காலத்திலேயே வடமொழியிலும் தோன்றிய 'கண்ணிநுண் சிறுத்தாம்பு'' இதற்குச் சிறந்த எடுத்துக்காட்டாகும். கம்பர், திருவாய்மொழியை ' ஆராவமுதகவியாயிரம்[2], என்று சிறப்பித்துள்ளார். " திருவாய்மொழி நூற்றந்தாதி''யால் மணவாள மாமுனிகள் திருவாய்மொழியைப் போற்றியுள்ளார். வேதாந்த தேசிகர் 'திராவிட வேதோபநிஷத்' ' திராவிட வேதாப நிஷத் தாத்பர்யரத் நாவலி' என்ற இரண்டு வட

---

1. பிரபத்தி - சரணுகதித் தத்துவம்.
2. சடகோபரந்தாதி, செ. 45.

மொழி நூல்களால் திருவாய்மொழியின் சிறப்பைப் பாராட்டியுள்ளார்.

2. சிறந்த தமிழ் நூல்களின் உரையாசிரியர்கள் திருவாய்மொழியிலிருந்து இலக்கியக் கருத்துக்களுக்கும் சமயக் கருத்துக்களுக்கும் இலக்கணக் குறிப்புக்கட்கும் மேற்கோள் எடுத்துக் காட்டியுள்ளனர். விரிவஞ்சிக் காட்டுகள் தரவில்லை.

ஆழ்வாரைப் பற்றிய அகச்சான்றுகள்: நம்மாழ்வாரைப்பற்றிய சில குறிப்புகள் அவர் தம் பிரபந்தங்களிருந்தே கிடைக்கின்றன. ஒரு சிலவற்றைக் காண்போம்.

1. நம்மாழ்வாரின் பெற்றோர் மகப்பேறின்றித் திருக்குறுங்குடி நம்பியின் திருவருளால் நம்மாழ்வாரைப் பெற்றெடுத்தனர் என்பது வரலாறு. இது திருவிருத்தத்தில்[1] "தாய் தன் மகனைத் தான் பெற்ற அருமைப்பாட்டைக் கூறு முகத்தால்" நம்மாழ்வாரின் பிறப்பு குறிப்பாக வெளியிடப் பெறுகின்றது.

2. நம்மாழ்வார் ஓதாதுணர்ந்த ஞானச்சிறப்புடையவர் என்பது வரலாறு கூறும் செய்தி.

"அறியாக் காலத்துள்ளே
அடிமைக்கண் அன்புசெய்வித்து
அறியா மாமாயத்து
அடியேனை வைத்தாயால்"[2]

என்ற பாசுரப் பகுதியில் இது தெளிவாகின்றது. தான் இறைவனிடம் அன்பு கொள்ளுமாறு இறைவன் அருள்புரிந்தான் என்று இதில் கூறுவதைக் காண்க.

3. நம்மாழ்வாரின் பெயர்களில் ஒன்றாகிய 'சடகோபன்' என்பது திருவிருத்தத்தின் இறுதிப் பாசுரத்திலும், திருவாய்மொழியின் திருக்கடைக்காப்புப் பாசுரத்திலும் பெரு வழக்காக உள்ளது. மற்றொரு பெயராகிய

1. திருவிருத்தம் - பாசுரம், 37.
2. திருவாய், 2. 3:3.

'மாறன்' என்பது ஆறு இடங்களில் வருகின்றது. தாம் பிறந்த நாடு வழுதிநாடு என்பதனையும் பாசுரங்களில் குறிப்பிடுகின்றார் ஆழ்வார்.

4. நம்மாழ்வாருக்கு மகிழம்பூமாலை சிறப்பு மாலையாக வழங்குதல் மரபு. 'நாட்கமழ் மகிழமாலை மார்பினன் மாறன் சடகோபன்'[1] என்று கூறப்பெற்றதனால் இந்த வழக்கு ஆதாரமுடையதாகின்றது.

### நம்மாழ்வார் பாடல்களின் சிறப்பியல்புகள்

ஒரு சில சிறப்பியல்புகளை ஈண்டுக் காண்போம்.

1. ஆழ்வார் எம்பெருமானை இடைவிடாமல் நினைப்பதனால் உண்டாகும் மகிழ்ச்சியே, இன்பப் பெருக்கே, திருவாய்மொழிப் பாசுரங்களாக வெளிப்பட்டது என்று கொள்ளலாம். ஆழ்வாருக்கு இறைவன் 'அப்பொழுதைக்கப்போது ஆராவமுதமாக' இருப்பான்; 'எண்ணம் புகுந்து தித்திக்கும் அமுதமாக' இருப்பான்.

"தேனும் பாலும் கன்னலும்
அமுதும் ஆகித் தித்திப்ப,
யானு மெம்பி ரானை
ஏத்தி னேன்"[2]

என்று கூறுவர் ஆழ்வார். ஆழ்வாருக்கு 'உண்ணுஞ் சோறு பருகும் நீர் தின்னும் வெற்றிலை எல்லாம் கண்ணனாகவே' இருக்கும். இந்த எம்பெருமானை அநுபவித்த அனுபவமே ஆழ்வாரின் பாசுரங்களாயின.

"கண்டுகொண் டென்கண்
ணிணையாரக் களித்து
தொண்டர்க் கமுதுண்ணச்
சொன்மாலைகள் சொன்னேன்"[3]

என்று அவரே கூறுவதைக் காண்க.

---

1. திருவாய். 4. 10 : 11.
2. திருவாய். 4. 3 : 10.
3. திருவாய். 9. 4 : 9.

2. எம்பெருமானே தன்னுள் இருந்து பாடினன் என்பது ஆழ்வார் திருவுள்ளம். "என்னால் தன்னை இன்றமிழ் பாடிய ஈசன்"[1] என்றும் 'என், நாமுதல் வந்து புகுந்து நல் இன்கவி தூமுதல் பத்தர்க்குத் தான் தன்னைச் சொன்ன என்வாய் முதல் அப்பன்'[2] என்றும் கூறுவது காண்க. மேலும் இதனை,

"என்சொல்லால் யான்சொன்ன
இன்கவி என்பித்து
தன்சொல்லால் தான்தன்னைக்
கீர்த்தித்த மாயன்"

என்று விளக்கமாகப் பேசுவர். ஆதலால் இவருடைய வாக்குகளைத் 'தமிழ் வேதம்' என்று சொல்லத்தட்டில்லை.

3. தான் இங்ஙனம் எம்பெருமானைப் பாடிய பேற்றினைப் பெறற்கரிய பேருகக் கருதுகின்றார் ஆழ்வார்.

"கண்டவாற்றால் தனக்கே
யுலகென நின்றான்தன்னை
வண்டமிழ் நூற்க நோற்றேன்
அடியார்க் கின்பமாரியே"[3]

என்று கூறுவதனால் இதனை அறியலாம்.

4. ஆழ்வார் பாசுரங்கள், தானானதன்மையில் நின்று ஆழ்வாரே பேசுவதாக அமைந்த பாசுரங்கள், பெண் தன்மையை ஏறிட்டுக் கொண்டு பிராட்டியாக நின்று பேசும் பாசுரங்கள் என்று இருவகையாக அமையும். முன்னவற்றைப் புறத்துறைப் பாடல்கள் என்றும், பின்னவற்றை அகத்துறைப் பாடல்கள் என்றும் கருதலாம். ஆழ்வாரின் ஞானநிலை முறுகி நிற்கும்பொழுது முன்னவை பிறந்தன; பிரேம நிலை மீதூர்ந்து நிற்கும்போது பின்னவை தோன்றின. ஆசாரிய ஹிருதயம் என்னும் நூல் இதனை,

---

1. திருவாய். 7. 9:1.
2. திருவாய். 7. 9:3.
3. திருவாய். 4. 5:10.

"ஞானத்தில் தம்பேச்சு
பிரேமத்தில் பெண்பேச்சு"[1]

என்று குறிப்பிடும். திருவாய்மொழியில் இருபத்தேழு பதிகங்கள் அகத்துறைப் பாசுரங்களாக அமைந்துள்ளன. திருவிருத்தம் முழுவதுமே அகத்துறைப் பாடல்கள்.

5. அகத்துறைப் பாசுரங்கள் மூன்று வகையாக நடைபெறும். தாய் சொல்வதுபோல் நடப்பவை 'தாய்ப் பாசுரங்கள்', தோழி கூறுவதுபோல் அமைபவை 'தோழிப் பாசுரங்கள்', தலைவி பேசுவது போல் வடிவங் கொள்பவை 'தலைவிப் பாசுரங்கள்' அல்லது 'மகள் பாசுரங்கள்'. ஆயினும், மூன்று வகையாகப் பேசினாலும் பேசுபவர் ஆழ்வாரேயாவர். இந்த மூன்று நிலைப் பாசுரங்கட்கும் தத்துவம் கூறும் ஆசாரிய ஹிருதயம். மூன்று நிலைகளையும் மூன்றுவித 'பிரஜ்ஞாலங்தைகளாக' (States of consiousness) என்று பேசும் அந்நூல்.

6. ஆழ்வார் பாசுரங்கள் யாவும் இறைவனின் பெருமையை எடுத்தியம்பும்; உயிர்களின் தன்மையை விரிவாகப் பேசும்; பக்தி பிரபத்திகளின் இயல்பினைப் பரக்க விரித்துரைக்கும். பெரும்பாலும் கடவுளின் ஐந்து நிலைகளில் ஒன்றாகிய 'அர்ச்சாவதாரத்தையே' அதிகமாகப் போற்றும். இந்த ஆழ்வார் முப்பத்தைந்து திவ்விய தேசங்களை மங்களாசாசனம் செய்துள்ளார்.

7. ஆழ்வாரின் பாசுரங்கள் முக்கியமாக வற்புறுத்துவது சரணாகதி தத்துவம்.

"'அகலகில்லேன் இறையும்' என்று
அலர்மேல்மங்கை உறைமார்பா!
நகரில் புகழாய்! உலகமூன்
றுடையாய்! என்னை ஆள்வானே,
நிகரில் அமரர் முனிக்கணங்கள்
விரும்பும் திருவேங் கடத்தானே,
புகலொன் றில்லா அடியேனுன்
அடிக்கீழ் அமர்ந்து புகுந்தேன்"[2]

---

1. ஆசாரிய ஹிருதயம், சூத்திரம், 118.
2. திருவாய். 6. 10 : 10.

என்ற பாசுரம் இதனை வற்புறுத்தும் தலைசிறந்த பாசுர மாகும்.

8. ஆழ்வார் எம்பெருமானது எழிலார்ந்த திருமேனி யின் பொலிவில் ஆழங்கால்பட்டுப் புகழ்ந்துள்ள பாசு ரங்கள் எண்ணிறந்தவை. அவை அவரது தியானப் பெரு மையையும் அன்பின் பெருக்கையும் புலப்படுத்தி நிற்கும்.

“ கண்கள் சிவந்து பெரியவாய்
வாயும் சிவந்து கனிந்துள்ளே,
வெண்பல் இலகு சுடர்இலகு
விலகு மகர குண்டலத்தன்
கொண்டல் வண்ணன் சுடர்முடியன்
நான்கு தோளன் குனிசார்ங்கன்
ஒண்சங் கதைவாள் ஆழியான்
ஒருவன் அடியேன் உள்ளானே”[1]

என்ற பாசுரம் காண்க.

9. பக்தி நிறைந்த தமது உள்ளத்தில் இறைவனின் எண்ணற்ற கல்யாண குணங்களையும் அவன் அடியார்க்கு எளியனும் தன்மையினையும் நினைந்து அவனது பேரருளைத் துய்ப்பதாகக் கூறும் பாசுரங்கள் படிப்போர் நெஞ்சினை நீர்ப்பாண்டமாக்கும் தன்மையன.

“ மத்துறு கடைவெண்ணெய் களவினில்
உரவிடை யாப்புண்டு
எத்திறம் உரலினோ டிணைந்திருந்
தேங்கிய எளிவே”[2]

“ எனதாவியுள் கலந்தபெரு
நல்லுதவிக் கைம்மாறு
எனதாவி தந்தொழிந்தேன்
இனிமீள்வ தென்பதுண் டோ”[3]

“ உன்னது என்னது ஆவியும்
என்னது உன்னது ஆவியும்
இன்ன வண்ண மேநின்றாய்
என்று ரைக்க வல்லனே?”[4]

---

1. திருவாய். 8. 8 : 1.
2. திருவாய். 1. 3 : 1.
3. திருவாய். 2. 3 : 4.
4. திருவாய். 4. 3 : 8.

"பெய்யும் பூங்குழல் பேய்முலை யுண்ட
பிள்ளைத் தேற்றமும், பேர்ந்ததோர் சாடிறச்
செய்ய பாதமொன் றால்செய்த நின்சிறுச் சேவகமும்
நெய்யுண் வார்த்தையுள் அன்னை கோல்கொள்ள
நீயுன் தாமரைக் கண்கள் நீர்மல்க,
பையவே நிலையும் வந்தென் னெஞ்சை உருங்குங்களே"[1]

"கறந்தபால்! நெய்யே! நெய்யினுள் சுவையே!
கடலினுள் அமுதமே! அமுதில்
பிறந்தவின் சுவையே! சுவையது பயனே!
பிள்ளைதோள் மணந்தபே ராயா!"[2]

"என்னமர் பெருமான் இமையவர் பெருமான்
இருநிலம் இடந்தவெம் பெருமான்
முன்னைவல் வினைகள் முழுதுடன் மாள
என்னையாள் கின்றஎம் பெருமான்"[3]

என்ற பாசுரப் பகுதிகளால் இத்தன்மையினை அறியலாம்.

*10.* இவர் பாசுரங்களில் கட்டும் கழங்குமிட்டுக் குறி பார்த்தல், வெறியாடுதல், மடலூர்தல் என்பன போன்ற பண்டைத் தமிழ் வழக்காறுகள் சிலவற்றைக் காணலாம்.

*11.* இந்த ஆழ்வார் பாசுரங்களில் தொன்றுதொட்டு வழங்கி வரும் பழமொழிகள் பல விரவி நிற்பதை அறியலாம்.

"திருவுடை மன்னரைக் காணின்
திருமாலைக் கண்டேனே என்னும்"[4]

"உணங்கல் கெடக்கழுதை
யுதடாட்டங் கண்டென் பயன்"[5]

என்பவை காண்க.

*12.* அரிய கருத்துக்களைச் சிறந்த உவமைகளின் மூலம் விளக்கும் பெற்றியினை இவண் காணலாம்.

---

1. திருவாய். 5. 10 : 3.
2. திருவாய். 8. 1 : 7.
3. திருவாய். 8. 4 : 3.
4. திருவாய். 4. 4 : 8.
5. திருவாய். 4. 6 : 7.

"அரக்கும் மெழுகும் ஒக்கும் இவள்"[1]

"கறந்தபால் நெய்யே கடலிலுள் அமுதமே'[2]

"துணையும் சார்வு மாடுவார்போல் சுற்றத்தவர்பிற
அணையவந்த ஆக்கமுண்டேல் அட்டைகள்போல் சுவைப்பர்"[3]

"அழைக்கின்ற அடிநாயேன் நாய்கூழை வாலால்
குழைக்கின்றது போலவென் னுள்ளம் குழையும்"[4]

"நீர விரும்புண்ட நீரது போல்வென் னுருயிரை
ஆரப் பருகஎனக் காரா வமுதா னாயே"[5]

"நீல வரையிரண்டு பிறைகவ்வி
நிமிர்ந்த தொப்பக்
கோல வராகமொன் றாய்நிலங்
கோட்டிடைக் கொண்ட எந்தாய்"[6]

என்பன காண்க. இறுதியில் கூறியது இல்பொருள் உவமையாக இருப்பினும், இறைவன் கொண்ட பேருருவத் திற்கேற்ப அவனது அரியசெயல் இங்கே வருணிக்கப்பட்ட அற்புதத்தைக் கண்டு மகிழலாம்.

*13.* முன்னோர் மொழிபொருளைப் பொன்னே போற் போற்றுதல் புலவர் மரபாகலால், இவர் காலத்திற்கு முன்னரும் இவர் காலத்தும் திகழ்ந்த பல நூல்களின் சொற்றொடர்களும் அரிய கருத்துக்களும் இவரது அருளிச் செயல்களில் காணலாம். பரிபாடல், திருக்குறள், அப்பர் தேவாரம், சிலப்பதிகாரம், சீவகசிந்தாமணி, திருவாசகம் முதலிய நூல்களிலுள்ள கருத்துக்களும் சொற்றொடர்களும் இவர் பாசுரங்களில் மிளிர்வதைக் கண்டு மகிழலாம்.

**இவர் வாழ்ந்த காலம்:** இவர் கி. பி. ஒன்பதாம் நூற் றாண்டின் முற்பகுதியில் இருந்தவர் என்று கொள்வர் ஆராய்ச்சியாளர்.[7]

---

1. திருவாய். 4. 1 : 1.
2. திருவாய். 8. 1 : 7.
3. திருவாய். 9. 1 : 2.
4. திருவாய். 9. 4 : 3.
5. திருவாய். 10. 10 : 5.
6. திருவாய். 10. 10 : 7.
7. History of Sri Vaisnavas, p. 21.

## 10. மதுரகவி ஆழ்வார்

இவர் குமுதருடைய[1] கூருகப் பராங்குச உதயத்திற்கு அருணோதயம்போல் திருநெல்வேலி மாவட்டத்தில் திருக் குருகூர்க்கருகிலுள்ள திருக்கோளூரில் சாமவேதிகளான பூர்வசிகைப் பார்ப்பனர் குலத்தில் சித்திரை மாதம் சித்திரை நட்சத்திரத்தில் தோன்றினர். இளமையிலேயே வேதம் சாத்திரம் முதலியவற்றைப் பயின்று செந்தமிழில் தேர்ச்சி பெற்றுச் செவிக்கினிய செஞ்சொற் கவிகளைப் பாட வல்லவராய்த் திகழ்ந்தார். அதனால் மதுரகவி என்ற திருநாமமும் பெற்ருர். மெய்யுணர்வினால் அவாவுற்றுத் திரு மால் பக்தி விஞ்சி, தீர்த்த யாத்திரையிலும் திவ்விய தேச யாத்திரையிலும் திருவுள்ளங்கொண்டு வடநாட்டுத் திருப் பதிகளைச் சேவித்துக்கொண்டு திருவயோத்தியில் இருந் தார்.

ஒருநாள் திருக்கோளூர் எம்பெருமானைத் திசை நோக்கித் தொழக் கருதித் தெற்குத் திசையில் கண் செலுத் தியபொழுது அப்பக்கத்தில் வானுற ஓங்கி விளங்கும் திவ்வியமான ஒரு பேரொளியைக் கண்டார். இங்ஙனமே அடுத்த இரண்டு மூன்று நாளிலும் கண்டு வியப்புற்று அந்த ஒளியையே குறியாகக் கொண்டு நெடுவழி கடந்து ஆழ்வார் திருநகரியை யடைந்து உறங்காத்திருப்புளியாழ் வாரின் அடியில் யோகத்திலிருந்த நம்மாழ்வாரின் திரு மேனியைச் சேவித்தார். கண்மூடி மௌனியாய் இருக்கும் அவரைச் சோதிக்கும் பொருட்டுச் சில உபாயங்களை மேற் கொண்டார். ஆழ்வாரும் அவர் கேட்ட வினாக்கட்கு விடை யருள மதுரகவியும் அவரது ஞானபக்தி வைராக்கியத்தைக் கண்டு அதிசயித்து ஈடுபட்டு அவரையே ஞானாசாரியராகக் கொண்டு சரணம் புகுந்தார்.

நம்மாழ்வாரும் தாம் அருளிய நான்கு பிரபந்தங்களை யும் மதுரகவிக்கு உபதேசித்தார். அவரும் அப் பிரபந்தங் களைக் கைத்தாளமெடுத்துப் பண்ணிசையோடு ஓதிக் கொண்டு ஆழ்வாரின் தலைமைச் சீடராய்த் திகழ்ந்தார். ஆழ்வார் திருநாட்டை அலங்கரித்த பின்னரும் அவருடைய

---

1. நித்திய சூரிகளில் ஒருவர்.

அர்ச்சை உருவமான திருமேனியை அத்திருநகரில் எழுந்தருளப் பண்ணி நித்திய நைமித்திக உற்சவங்களை நடத்திக் கொண்டும், தம் ஆசாரியரின் பெருமைகளை வெளியிட்டுக் கொண்டும் சிலகாலம் அத்தலத்திலேயே காலங்கழித்துப் பின்பு அத்தலத்திலேயே சிந்தையும் மொழியும் செல்லாமைத்தான அந்தமில் இன்பப் பெருவீட்டை அடைந்தார்.

**இவரது அருளிச்செயல் :** தம்முடைய குருநாதர் மீது 'கண்ணின் நுண் சிறுத்தாம்பு' என்ற பதினொரு பாசுரங்கள் அடங்கிய திவ்வியப் பிரபந்தத்தை அருளிச் செய்தார். இது நாலாயிரத்தில் முதலாயிரத்தின் இறுதிப் பிரபந்தமாக இடம் பெற்றுள்ளது. இது எட்டெழுத்து மந்திரமாகிய பெரிய திருமந்திரத்தில் மிக முக்கியமான நடுப் பதத்தின் பொருளை விளக்குவதாகக் கொண்டுள்ளனர் வைணவப் பெரியார்கள்.

இந்தப் பிரபந்தத்தினுல் இவர் ஆசாரியரின் மீது கொண்டுள்ள ஈடுபாடு நன்கு தெளிவாகின்றது.

1. தன் குருநாதர் ஆழங்கால் பட்ட கண்ணபிரானை விட்டுத் தன் குருநாதரின் பெயரைச் சொன்னுலே தன் நாவுக்கு மிகவும் இனிக்கும் என்கின்ருர்.

"நண்ணித் தென்குரு கூர்நம்பி என்றக்கால்
அண்ணிக் கும்அமு தூறுமென் நாவுக்கே"

என்பதால் (1) இதனை அறிகின்ருேம்.

2. தன் ஆசாரியராகிய ஆழ்வாரின் விஷயத்திலேயே மனம் வாக்கு காயம் என்ற தன் மூன்று கரணங்களும் ஈடுபட்டதைக் கூறுபவர்,

"தேவு மற்றறி யேன்குரு கூர்நம்பி
பாவி னின்னிசை பாடித் திரிவேனே"

என்கின்ருர் (2).

3. பெரிய பிராட்டியாருடன் கூடிய கரிய கோலமுகில் வண்ணனைத் தான் கண்டாலும் அதுதன் குருநாதர் காட்டிய வழியால் அடைந்ததாகும் (3) என்கின்ருர்.

4. ஆழ்வாருடைய அருளினுல் மேலுள்ள காலமெல்லாம் அவருடைய திருக்குணங்களை ஏத்தும் பேறு பெற்றதை நினைந்து இனியராகின்ருர் (6). இந்தப் பேரருளை எண் திசையிலுள்ளவர்களும் அறியும்படி செய்தாகக் கூறுகின்ருர் (7).

5. தன் நெஞ்சில் வேதாந்த விழுப்பொருள்கள் நன்கு பதியும்படி திருவாய் மொழியை அருளிச் செய்ததை,

"மிக்க வேதியர் வேதத்தி னுட்பொருள்
நிற்கப் பாடியென் நெஞ்சுள் நிறுத்தினுன்"

என்று (9) கூறி அதே கணத்தில் தான் அவருக்குக் கைங்கரியம் செய்யும் பேற்றினையே பயனுகக் கொண்டதைக் குறிப்பிடுகின்ருர்.

**இவர் வாழ்ந்த காலம்:** இதனை நம்மாழ்வார் வாழ்ந்த காலமாகக் கொள்வர் ஆராய்ச்சி அறிஞர்கள். பேராசிரியர் டாக்டர் ந. சுப்பு ரெட்டியார் அவர்கள் ஒன்பதாம் நூற்ருண்டின் முற்பகுதியாகக் கொள்வர்.

**நாலாயிரத்தின் பாசுரத்தொகை:** இக்கட்டுரையின் தொடக்கத்தில் நாலாயிரத்தின் பாசுரத்தொகையை அடியிற் கண்டவாறு குறிப்பிட்டோம்.

| | |
|---|---|
| முதலாயிரம் | 947 |
| பெரிய திருமொழி | 1134 |
| திருவாய்மொழி | 1102 |
| இயற்பா | 593 |
| ஆக, மொத்தம் | 3776 |

இதில் 4000-க்கு 224 பாசுரங்கள் குறைவாக உள்ளன. இதில் இராமாநுசர் காலத்தில் திருவரங்கத்தமுதனுரால் பாடப்பெற்ற இராமாநுச நூற்றந்தாதி சேரவில்லை. இராமநுசர் காலத்தில் இராமாநுச நூற்றந்தாதி 24-வது பிரபந்தமாக இயற்பாத் தொகுதியில் இறுதிப் பிரபந்தமாகச் சேர்க்கப் பெற்றது என்பது அறியத் தக்கது. அதன் பாசுரங்களையும் சேர்த்தால் நாலாயிரத்தின் பாசுரங்

களின் தொகை 3776 108 - 3884 ஆகிறது. 4000-க்கு 116 பாசுரங்கள் குறைகின்றன.

இராமாநுச நூற்றந்தாதியின் பாசுரங்களைச் சேர்த்து 4000 ஆகக் கணக்கிடுவர் வேதாந்த தேசிகர். இவர் இயற்பாவின் பாசுரங்களை 709 ஆகக் கணக்கிட்டு அவற்றுடன் இராமாநுச நூற்றந்தாதிப் பாசுரங்கள் 108-ஐயும் சேர்த்து 4000 எனக் கணக்கிட்டுள்ளனர். அதனை நோக்குவோம். பிரபந்தசாரம் என்னும் நூலில்,

"அத்தனுயர் வேங்கடமாற் காயி ரத்தோ
டானவிரு நூற்றேரைம் பத்து மூன்றும்"[1]

என்று திருமங்கையாழ்வாரின் பாசுரங்களையே 1253 என்று கணக்கிடுகின்றார். அதன் விவரம் :

| | |
|---|---|
| பெரிய திருமொழி | 1134 |
| திருவெழுக் கூற்றிருக்கை | 1 |
| | 1135 |

எஞ்சிய (1253 - 1135) 118 செய்யுட்கள் 'இரு திருமடல்களிலும்' இருப்பனவாகக் கொண்டிருத்தல் வேண்டும். இரண்டு மடல்களிலும் உள்ள மொத்த வரிகள் 452. நான்கு வரிகளை ஒரு பாசுரமாகக் கொண்டு பார்த்தால் 113 பாசுரங்களாகின்றன. சிறிய திருமடலின் தலைப்பிலுள்ள தனியன் பாசுரம் ஒன்றும், ஈற்றிலுள்ள வெண்பா ஒன்றும், பெரிய திருமடலின் தனியன் ஒன்றும், ஈற்றிலுள்ள வெண்பாக்கள் இரண்டும் சேர்த்து 118 எனக் கணக்கிட்டனரோ என்று சிலர் கருதுவர். தனியன்களைச் சேர்த்திருந்தால் வேறு ஆழ்வார்களின் பாடல்கட்குரிய தனியன்களையும் சேர்த்திருத்தல் வேண்டும். அங்ஙனம் சேர்க்கவில்லை யாதலின் அது தவறு. பிரபந்தசாரத்தின் இன்னொரு பாசுரத்தில்,

"சிறியமடற் பாட்டுமுப்பத் தெட்டி ரண்டுஞ்
சீர்பெரிய மடல்தனிற்பாட்டு டெழுபத்தெட்டு"[2]

1. பிரபந்த சாரம், 16 (தே. பி. 382).
2. பிரபந்த சாரம், 13 (தே. பி. 379).

என்பதில் சிறிய திருமடலை 40 பாசுரங்களாகவும் பெரிய திருமடலை 78 பாசுரங்களாகவும் கொண்டுள்ளதை அறியலாம். பொருளுக்கேற்பச் சில அடிகளைச் சேர்த்துப் பாசுரங்களாகக் கணக்கிடுதல் முன்னோர்களின் மரபு என்று கருத இடம் உண்டு. இதனைச் சரியெனக் கொண்டால் 118 பாசுரங்கள் கணக்கிற்கு வருகின்றன. எனவே, இரு மடல்கள் நீக்கிய,

| | |
|---|---|
| இயற்பா தொகுதிப் பாசுரங்கள் | 591 |
| சிறிய திருமடல் | 40 |
| பெரிய திருமடல் | 78 |
| இராமாநுச நூற்றந்தாதி | 108 |
| | 817 |

இக்கணக்குப்படி நாலாயிரத்தில் 4000 பாசுரங்கள் அமைந்து விடுகின்றன. ஆயினும், குறையொன்று தோன்றுகின்றது. கலி வெண்பாவாலாகிய இருதிருமடல்களையும் விருப்பப்படிச் சிதைத்துப் பாடற்கூறுகளைப் பாடல்களாகக் கொள்ளல் பொருந்தாது; யாப்பு இலக்கணத்திற்கும் முரணானது. எனவே, தேசிகரின் கணக்கினை ஏற்றுக் கொள்ள இயலாததாகின்றது.

அப்பிள்ளை என்பார் இராமாநுச நூற்றந்தாதியின் பாடல்களைச் சேர்க்காமல் 4000 ஆகக் கணக்கிடுவர். அவரது திருமங்கையாழ்வார் வாழித் திருநாமத்தில்,

“ இலங் கெழுகூற் றிருக்கை
யிருமடலீந்தான் வாழியே!
இம்மூன்றில்பாட் டிருநூற்றிரு
பத்தே ழிசைத்தான் வாழியே”[1]

என்று கூறியுள்ளார். இவர் இரு மடல்களின் கண்ணிகளையும் பாசுரங்களாகக் கணக்கிட்டுள்ளார்.

1. வாழித் திருநாமம், 10.

| | | |
|---|---|---|
| சிறிய திருமடல் | $77\frac{1}{2}$ | கண்ணிகள் |
| பெரிய திருமடல் | $148\frac{1}{2}$ | கண்ணிகள் |
| ஆக, மொத்தம் | 226 | கண்ணிகள் |

எனவே,

| | |
|---|---|
| இரு மடல்கள் நீங்கிய இயற்பாத் தொகுதிப் பாசுரங்கள் | 591 |
| மடல்களின் பாசுரங்கள் | 226 |
| ஆக, மொத்தம் | 817 |

இவர் கணக்குப்படியும் நாலாயிரத்தில் *4000* பாசுரங்கள் அமைந்து விடுகின்றன. இங்கும் ஒரு குறை தோன்று கிறது. கண்ணிகள் பாவின் பகுதிகள். அவற்றைப் பாவாகக் கணக்கிடல், இலக்கண வரம்பினை மீறிய குற்ற மாகின்றது. ஆகவே, இக்கணக்கும் பொருந்தாததாகின் றது. தவிர, இராமாநுச நூற்றந்தாதியைச் சேர்க்காத குற்றமும் செய்ந்நன்றி கொன்ற பாவமும் வந்து சேர்கின் றன. வைணவம் நிலைத்திருக்கும் காலம் வரையிலும் இராமாநுசருடைய பெயரும் நிலைத்திருக்குமாறு காத்தல் வேண்டும்.

'நாலாயிரத்தில்' *4000* பாசுரங்கள் இருந்தேயாக வேண்டும் என்ற கொள்கையை நிலைநாட்டவே இலக்கண வரம்பையும் மீறத் துணிந்தனர்—முன்னோர். இது தேவை யில்லாத கொள்கை. *4000* க்குச் சில பாசுரங்கள் குறை வாக இருப்பினும் தொகை மிகுதி பற்றி 'நாலாயிரம்' என்றே வழங்கப் பெறுகின்றது என்று கொள்ளலே ஏற்புடைத்து. பத்துக்குக் குறைவாகவும் பத்துக்கு மேலாகவும் உள்ள பாசுரங்களைச் சேர்த்து ஒரு பதிகமாகக் கொள்ளும் ஒரு வழக்கு உண்டல்லவா? *947* பாசுரங்களைக் கொண்ட பகுதியை 'முதலாயிரம்' என்று வழங்குகிறோம் அன்றோ? அங்ஙனமே, திருவாய்மொழி *1102* பாசுரங்களா லமைந்திருப்பினும் "நிர நிறை ஆயிரத்து",[1] "சீர்த்தொடை

1. திருவாய். 1. 1:11.

ஆயிரத்து''[1] "அமர்சுவை ஆயிரத்து"[2] 'குருகூர்ச் சட கோபன் சொன்ன ஆயிரம்'[3] என்று ஆழ்வார் தாமே அருளிச் செய்துள்ளமை ஈண்டு அறியத்தக்கது. பெரிய திருமொழி *1084* பாசுரங்களாலமைந்திருந்தும் 'பொங்கு புகழ் மங்கையர் கோனீந்த மறையாயிரம்''[4] என்று எம்பார் அருளிச் செய்துள்ளமையும் *108* பாடல்களைக் கொண்ட அந்தாதியை (எ-டு. இராமாநுச நூற்றந்தாதி) நூற்றந்தாதி என்று வழங்கப் பெறுவதும் ஈண்டுச் சிந்தித் தல் தகும். எனவே, *4000*க்குச் சில பாசுரங்கள் குறைந் துள்ள திவ்வியப் பிரபந்தத்தை 'நாலாயிரத் திவ்வியப் பிரபந்தம்' என்று வழங்குவது எல்லாவற்ருலும் பொருந்து கின்றது.

பொதுவாகக் கூறினல் இப்பிரபந்தங்கள் யாவும் சார்புடையவையாகும். ஆகவே, பாசுரங்கள் பக்தி நிலை களையும், சமயக் கொள்கைகளையும், இறைவன் உயிர்கள் இவர்களின் தன்மைகளை உணர்த்துவனவாகவும் அமைந் துள்ளன. ஆயினும், பாசுரங்கள் யாவும் இலக்கிய நயம் செறிந்தவையாக அமைந்துள்ளனவாதலால் சமயச் சார் பற்றவர்களும் பிற சமயத்தினரும் அவற்றை விரும்பிக் கற்றுப் போற்றுகின்றனர்.

---

1. திருவாய். 1. 2 : 11.
2. திருவாய். 1. 3 : 11.
3. திருவாய். 2. 1 : 11.
4. தனியன்.

முதல் நாள் கருத்தரங்கு 22 - 1 - 1973

# முதல் மூன்று திருமுறைகள்

## திருஞான சம்பந்தர் தேவாரம்

[கட்டுரையாளர் : டாக்டர் ச. வே. சுப்பிரமணியன்]

அவையோர் எழுப்பிய வினுக்களும்—ஆசிரியரின் விடைகளும்

### தமிழ்த்துறை எழுப்பிய வினுக்கள்

1. திருமுறை என்ற சொல்லின் தெளிந்த பொருள் என்ன ?

'திரு' என்பது இன்பதுன்பம் இரண்டையும் ஒப்பக் கருதும் மனச்செம்மை (தொல் : மெய்ப்பாட்டியல் : 25, பேராசிரியம்). 'முறை' என்பது நூல் (திருமந்திரம் 1067 ("ஏடங்கை") — ) "உலக மக்களுக்கு எக்காலத்தும் திருத்தகவிற்ருகிய உள்ள நிலைமையை வழங்குதற்குரிய அருள் நூல்களே திருமுறைகளாம்" என்பர் க. வெள்ளைவாரணனர் அவர்கள். (பக்கம் 1-8 பன்னிரு திருமுறை வரலாறு - முதற் பகுதி - அண்ணுமலைப் பல்கலைக்கழகம், 1962).

2. பன்னிரு திருமுறைகளாகப் பகுக்கப்பட்டது ஏன் ?

உமாபதி சிவாச்சாரியார் இயற்றிய சேக்கிழார் புராணத்தி லிருந்து அவர் காலமாகிய கி. பி. பதினன்காம் நூற்றுண்டுக்கு முன்னரே திருமுறைகள் பன்னிரண்டு என்ற வழக்கு இருந்ததாக அறிகிறேம். அதே உமாபதி சிவாச்சாரியார் இயற்றிய திருமுறை கண்ட புராணம், நம்பியாண்டார் நம்பி தாம் இயற்றிய நூல்களையும் பதினேராந்திருமுறையில் சேர்த்துப் பதினேராந்திருமுறை முடியத் தொகுத்தார் என்று கூறுகிறது, (பக் : 8-12 பன்னிரு திருமுறை வரலாறு முதற்பகுதி). இவை மரபு வழிச் செய்திகள். முற்காலத்தில் எழுந்த சைவ சமய நூல்களை மேலெல்லையாகக் கொண்டும், தொகுத் தவர் தம் காலத்தெழுந்த சைவ சமய நூல்களைக் கீழெல்லையாகக் கொண்டும் இப்பகுப்பு நடந்தது எனலாம். பத்துப்பாட்டு, எட்டுத் தொகை, பதினெண்கீழ்க்கணக்கு, ஐம்பெருங் காப்பியம்போலப் பன்னிரண்டாகத் திருமுறைகளும் தொகுக்கப்பட்டன. எண் வரை

யறையில் எதுவும் சிறப்புக் கருதித் தொகுக்கப்பட்டதற்குச் சான்றில்லை. ஆனல் மாதத்திற்கு ஒரு திருமுறையாக, பன்னிரு மாதம் கொண்ட ஒவ்வோராண்டுதோறும் பன்னிரு திருமுறைகளைத் தாம் ஓதிவருவதாகக் கயப்பாக்கம் சதாசிவ செட்டியார் தாம் உரை எழுதிய அகத்தியர் தேவாரத்திரட்டு முன்னுரையில் (கழகப் பதிப்பு - 1965) குறிப்பிடுவது இங்கு எண்ணத்தக்கது.

3. திருஞானசம்பந்தர் தேவாரத்தை முதல் மூன்று திருமுறைகளாக அமைத்ததன் அமைதிகள் யாவை?

தேவார மூவருள்ளும் முதலிற் பாடியவராதலாலும், முதற்கண் முத்தியடைந்தவராதலாலும், சம்பந்தர் தேவாரம் முதல் மூன்று திருமுறைகளாக அமைக்கப்பட்டது.

4. திருஞானசம்பந்தர் தேவாரம் ஒரே திருமுறையாகக் கொள்ளாமல் மூன்று திருமுறைகளாக வகுக்கப்பட்டதன் பொருத்தம் என்ன?

திருஞானசம்பந்தர் பதினருயிரம் பாடல்கள் (16,000) பாடினர் என்றும், அப்பர் நாற்பத்தொன்பதினயிரம் (49,000) பாடல்கள் பாடினரென்றும், திருமுறை கண்ட புராணம் கூறுகின்றது (பக் 38: பன்னிரு திருமுறை வரலாறு முதற்பகுதி). சிதைவுற்றபின் சம்பந்தரின் 3840 பாடல்களும் அப்பரின் 3100 பாடல்களும் இன்று கிடைக்கின்றன. இன்றுள்ள அளவு நம்பியாண்டார் நம்பியால் தொகுக்கப்பட்டது. இத் தொகுப்பின்படி ஏனைய திருமுறைகளிலும் சம்பந்தர் தேவாரத் தொகை மிகுதி. எனவே நம்பியாண்டார் நம்பி இவற்றை முதல்மூன்று திருமுறைகளாக வகுத்திருக்கலாம். இன்னும் சம்பந்தர் மூன்று வயதில் அம்மை திருமுலைப்பாலுண்டு சிவஞானம் பெற்றுப்பாடியது, அவர் திருமுறை மூன்ருக வகுக்கப்பட்டதோடு பொருந்திக் காணப்படுகிறது. சமகாலத்தவர் இருவருக்கும் சமமாக மும்மூன்று திருமுறைப் பகுப்பு இருக்க வேண்டும் என்ற எண்ணத்தாலும் திருநாவுக்கரையரைப்போலவே சம்பந்தர் தேவாரமும் மூன்று திருமுறைகளாக வகுக்கப்பட்டது எனலாம்.

5. சங்கப் பாடல்களுள் ஒன்றும் சமய இலக்கியமுமான திருமுருகாற்றுப்படையை முதல் திருமுறையாக வைக்காமல் பிற்காலத்தெழுந்த ஞானசம்பந்தர் பாடல்களை ஏன் முதலில் அமைக்க வேண்டும்?

“ஆல்கெழு கடவுட் புதல்வ” (256) என்று சிவபிரான் மைந்தனை முருகப் பெருமானைப் பாடுகிறது திருமுருகாற்றுப்படை. எனவே தந்தையார் பற்றிச் சிறப்பிடம் தந்து பாடும் சம்பந்தர் தேவாரம் முதற்கண் இடம் பெற்றது. அவன் மைந்தராகிய முருகப் பெருமானைப் பாடும் சேந்தனரின் திருவிடைக்கழி திருவிசைப்பா ஒன்பதாம் திரு

முறையிலும் நக்கீரரின் திருமுருகாற்றுப்படை பதினேராந் திருமுறையிலும் இடம் பெறுகின்றன. பதினேராந் திருமுறையில் சிவபிரானின் மூத்த பிள்ளையார் பற்றிய மூத்த நாயனர் திருவிரட்டைமணிமாலை, மூத்தபிள்ளையார் திருமும்மணிக்கோவை, விநாயகர் திருவிரட்டை மணிமாலை என்று மூன்று நூல்களும் இடம்பெறுவதும் எண்ணத்தக்கது. தந்தையை முன்வைத்து, அடுத்து அவனருளால் தோன்றிய மைந்தர்களையும் வணங்கும் நிலையில் திருமுறை அமைகின்றது என்பது முதற்காரணம். காலம் கருதி, முன்னெழுந்த நூல்களை முன்வைத்தும், பின்னெழுந்த நூல்களைப் பின்வைத்தும் முழுக்கமுழுக்கத் திருமுறை அமைப்பு இடம்பெறவில்லை. சுந்தரரின் சம காலத்தவரான சேரமான் பாடல் பதினேராந் திருமுறையில் இடம்பெறுவதும், சம்பந்தருக்கு முன் வாழ்ந்த காரைக்காலம்மையார் பதிகங்கள் பதினேராந்திருமுறையில் இடம் பெறுவதும், காலங்கருதித் திருமுறைப் பகுப்பு நடைபெறவில்லை என்பதைக் காட்டுகிறது. முன் நூலாகிய முருகாற்றுப்படை, பின்னெழுந்த சம்பந்தர் தேவாரத்தின்பின் இடம் பெற்றதற்கும் காலம் கருதித் திருமுறைப் பகுப்பு நடைபெருதது இன்னொரு காரணமாகும்.

7. திருஞானசம்பந்தர் தம் தேவாரத்தில் ஒவ்வொரு பதிகத்திலும் தம் பெயரைக் குறிப்பிட்டுப் பாடுவது ஏன்?

புகுந்த பிற சமய இடையூறுகளுக்கிடையே இன்னலுற்ற சைவ நெறியை நிலைநிறுத்தியவர் திருஞானசம்பந்தர். அதனல் "பரசமய கோளரி" எனக் கூறப்பட்டார். பிற சமயங்களிலுள்ள பொய்ம்மையைக் கண்டித்தலும் தம் சமய உண்மையை நிறுவுதலும் ஆகிய சூழ்நிலை சம்பந்தர் காலத்தில் காணப்பட்டது. தன் பதிகந்தொறும் பத்தாம் பாடலிலே சமணம், புத்தம் ஆகிய பிறசமயங்களைக் கண்டிக்கிருர். "தன்னுடைய ஆற்றல் உணராரிடை தன்னைப் புகழ்தலும்" (நன்னூற்பாயிரம்) சம்பந்தருக்கு வேண்டியிருந்தமையால், திருக்கடைக் காப்புத்தோறும் தன்னைப்பற்றியும் பாடுகிருர். சுந்தரர் தேவார இறுதிப் பாடலிலும், ஆழ்வார் பாடல் இறுதியிலும் இம் மரபு காணப்படுகிறது.

10. ஞானசம்பந்தரை முருகன் அவதாரம் என்கிருர் ஒட்டக்கூத்தர். தங்கள் கருத்து யாது?

சம்பந்தரை முருகன் அவதாரம் என ஒட்டக்கூத்தர் தக்கயாகப் பரணியில் குறிப்பிடுவது உபசார வழக்கேயாகும். சம்பந்தர் தம்மை அப்படி எங்கும் குறிக்கவில்லை. இறைவனைத் தந்தையாகவும் தம்மை மைந்தனுகவும் எண்ணிச் சம்பந்தர் சற்புத்திரமார்க்கத்தில் நின்று வழிபட்டது ஒட்டக்கூத்தரை அவ்வாறு எண்ணும்படி இடமளித்திருக்கலாம். ஆனல் "பெம்மான் முருகன் பிறவான் இறவான்" என்ற அருணகிரியார் வாக்கை நோக்க, யோனிவாய் பட்டுப் பிறந்து அவதாரம்

எடுப்பதை முருகப்பெருமான்மேல் ஏற்றுவது பொருந்தாது என்பது புலனாகும். அவ்வாறு முருகப் பெருமான் அவதாரமாகக் கருதுவது உபசார வழக்கே.

12. சம்பந்தர் பாடல்களில் சங்கப்பாடல்களின் தாக்குதல் ஏதேனும் காணப்படுகிறதா?

சங்க இலக்கிய அகப்பொருட்பாடல்களை அடியொற்றி நாயகன் - நாயகி பாவத்தில் பதிகங்கள் பாடியுள்ளார்.

ஐங்குறுநூற்றுப் பத்துக்கள்போல், பதிகமரபைக் கையாண்டுள்ளார்.

திருமுருகாற்றுப்படை பரிபாடல் ஆகிய கடவுட்பனுவல்கள் இவருக்கு வழிகாட்டியாய் அமைந்திருக்கலாம்.

சங்க இலக்கியங்களில் இயற்கை இன்பம் பாடப்படுவதுபோலவே, இயற்கை வருணனைக்குச் சம்பந்தர் தனியிடம் தருகிறார். இவை சங்க இலக்கியத்தால் ஏற்பட்ட பாதிப்புகள் ஆகலாம்.

13. ஞானசம்பந்தர் பா அமைப்பிற்குத் தந்த தனிக்கொடை யாது?

"நாளும் இன்னிசையால் நற்றமிழ் பரப்பும் திருத்தொண்டினை மேற்கொண்ட ஞானசம்பந்தப் பிள்ளையார், தமிழ்மொழியில் விருந்தாய சொல்மாலைகள் சிலவற்றைத் திருவாய் மலர்ந்துள்ளார். இவ்வாறு பிள்ளையாரால் புதுமுறையில் முதன் முதல் அருளிச் செய்யப் பெற்ற அத் திருப்பதிகங்கள் தமிழில் அத்தகைய பனுவல்களுக்கெல்லாம் மூல இலக்கியங்களாகத் திகழ்கின்றன. அவற்றை மிறைக் கவியென்றும் சித்திரக்கவி யென்றும் வழங்குவர். அவையாவன மொழிமாற்று, மாலைமாற்று, வழிமொழி, மடக்கு, இயமகம், ஏகபாதம், இருக்குக்குறள், எழுகூற்றிருக்கை, ஈரடி-ஈரடிவைப்பு, நாலடிமேல் வைப்பு, முடுகியலாகிய திருவிராகம், சக்கரமாற்று, கோமூத்திரிகம் முதலியனவாகும்" - பக்கம் 499, பன்னிருதிருமுறை வரலாறு, முதற் பகுதி.

யாழ், வீணை முதலிய நரம்புக் கருவிகளில் வைத்து எழுத்தெழுத்தாக வாசிக்க ஒண்ணாததாய்ப் பாடலாளர்கள் வாயினால் மட்டும் பாடுதற்குரிய அருமையுடையது "மூரி" என்னும் இசைப்பா. சம்பந்தர் பாடிய யாழ்மூரிப் பதிகத்தைத் திருநீலகண்டப் பெரும்பாணர் சகோட யாழில் வைத்து வாசிக்க முடியாமல் அந்த யாழை முறிக்க முனைந்த பெரியபுராண வரலாறு இங்கு எண்ணத் தக்கது - பக். 366 - 367 பன்னிரு திருமுறை வரலாறு, முதற்பகுதி.

14. ஆதிசங்கரர் இவரைத் ‘திராவிட சிசு’ என்று அழைப்பதன் பொருளும் பொருத்தமும் யாவை?

ஆதிசங்கரர், சம்பந்தர் கவுணிய குலத்துப் பிராமணர் என்பதை அறியாதவர் அல்லர். இருந்தும், தமிழில் (திராவிடம்) தெய்வப் பனுவல் மூன்று வயது இளமையில் பாடியதுபற்றிச் சம்பந்தரைத் திராவிட சிசு (தமிழ்க் (பாடிய) குழந்தை) என்று போற்றிப் புகழ்ந் தார்.

15. ஞானசம்பந்தர் பாண்டியனைக் கொண்டு சமணரைக் கழு வேற்றினர் என்பதற்கு அகச்சான்றுகள் உண்டா?

“சமணர்கள் கழுவேற்றத்திற்கும் திருஞானசம்பந்த சுவாமிகளுக் கும் எந்தவிதத் தொடர்புமில்லை என்பதைப் பெரியபுராணம் தெளி வாகக் காட்டுகிறது. உண்மையில் சைவ சமயப் போராட்டம் ஒரு சமயப் போராட்டமல்ல. நியாயமில்லாத சமண ஆக்கிரமிப்பை எதிர்த்துச் சைவ உலகம் செய்ததேயாகும். தமிழகச் சமயநெறி - சிவநெறி. தமிழகத்தின் சேய்நெறி வைணவ நெறி. சமணம் பௌத் தம் வடபுலத்தன. வடபுலத்து நாகரிகம் தென்புல நாகரிகத்தை விழுங்கி ஏப்பமிட யார்தாம் இசைவர்? இந்தப் போராட்டத்தில் முதற் கட்டமாகிய தத்துவப் போராட்டத்தில், சமணர்கள் தாம் தோற்ருல் தாமே கழுவேறுவதாகச் சூளுரைத்துக் கொண்டார்கள். தோற்ற பிறகு அவர்களே கழுவேறிக் கொண்டார்கள். அவர்கள் கழுவேறிய தைத் திருஞானசம்பந்தர் ஏன் தடுக்கவில்லை என்ற கேள்வி எழக்கூடும். முதற்காரணம் அவர்கள் தாங்களே எடுத்துக்கொண்ட சூளுரையைத் திருஞானசம்பந்தரின் சொற்கேட்டு மாற்றிக்கொள்வார்கள் என்ப தற்கு ஏது உத்தரவாதம்? போராட்டத்தின் முடிவு மனமாற்றமாக இல்லாமல் பகையிலேயே முடிந்தது. இரண்டாவது காரணம் இந்த நிகழ்ச்சி அரச நீதியோடும் ஆட்சியோடும் தொடர்புடையது. அதில் தலையிடத் திருஞானசம்பந்தருக்கு உரிமை ஏது? அரசனுகவே யோசனை கேட்டிருந்தாலும், சொல்லுவதற்கு வாய்ப்புக் கிடைத்திருக்கும். மேலும், பாண்டிய மன்னன் ஏன் தடைசெய்யாமல் இருந்தான் என்ற கேள்வியும் எழலாம். கொல்லாமை மறைந்தொழுகும் கொடுமனத்த ராகித் திருஞானசம்பந்தரும் அவருடைய அடியார்களும் தங்கியிருந்த திருமடத்திற்குத் தீயிட்ட குற்றத்திற்காக, இந்தத் தண்டனை சாலும் என்று கருதியிருந்திருப்பான் போலும்! மேற்கண்ட காரணங்களால் சமணர்கள் கழுவேற்றத்திற்கும் திருஞானசம்பந்தருக்கும் எந்தவித மான தொடர்பும் இல்லை என்பது வெள்ளிடைமலை” - பக்கம் 16-17 தமிழகம், (திங்களிருமுறை இதழ்) 1-2-66, தவத்திரு. குன்றக்குடி அடிகளார்.

16. ‘இறைவன் உமையொருபாகன்’ என்பதை மட்டும் 380 இடங் களுக்குமேல் சுட்டியுள்ளார் என்று குறிப்பிட்டுள்ளீர்கள்.

இச்சுட்டு அக்காலச் சமுதாய நிலையினை எவ்வாறு காட்டுகிறது ?

திகம்பர சமணர், மகளிர் வீடுபேறு அடைய முடியாது ; மகளிர் ஆண்களாகப் பிறந்து தவமுயன்று வீடுபேறு பெறலாம் என்ற கொள்கையுடையவர். சைவர்களோ உயர்திணை மட்டுமன்று அஃறிணை உயிர்கூட வீடுபேறு பெறக்கூடியது என்பர். மகளிருள் காரைக்காலம்மையார் வீடுபேறு பெற்றது வெளிப்படை. இவ்வாறு ஆண்களோடு பெண்களையும் வீடுபேற்று நிலையில்கூடச் சமமாக வைத்துக் கருதிய சைவ சமுதாயத்தையே, இறைவனது அம்மையப்பன் வடிவமும் காட்டுகிறது. அந்த உமையொருபாகன் வடிவினையே திருஞான சம்பந்தர் 380 இடங்களுக்குமேல் சுட்டுகிறார்.

இன்னும் முதன்முதல் அவருக்குக் காட்சியளித்து அம்மை மூலம் திருமுலைப் பாலூட்டிய தோணியப்பரும் உமையொருபாக நிலையிலேயே இருந்தார் என்பதும் இங்கு எண்ணத்தக்கது.

17. தமிழ் இசை ஆராய்ச்சிக்குத் திருஞானசம்பந்தரின் தேவாரம் பயன்படுமாறு எங்ஙனம் ?

பக்தி இயக்கம் இசையை அடிப்படையாக வைத்தே இயங்கியது. இசையும் நாடகமும் காமத்தை எழுப்பும் என்பது சமணத் துறவியர் கொள்கை. இதனால் சைவசமய மறுமலர்ச்சி எப்போதும்போல் இசையைப் பேணி அதனைக் காக்க எழுந்தது, ''நாளும் இன்னிசையால் தமிழ் பரப்பும் ஞானசம்பந்தர்'' எனச் சுந்தரர் சம்பந்தரைப் பாராட்டினார். பக்தி இயக்கம் வெற்றி பெற்றபோதுகூடவே தமிழிசையும் வெற்றிபெற்றது. தமிழிசையின் மறுமலர்ச்சிக் காலம் அது. மறுமலர்ச்சி புது வளர்ச்சியை இசைக்குக் கொடுத்தது. தமிழிசையை மக்களிடம் கொண்டு போனது பக்தி இயக்கம்தாம். எனவே, மக்கள் இசையில் நடைபெற்ற மாறுபாடுகளை சம்பந்தர் பாடல் காட்டலாம். பழந்தமிழ்ப் பண்கள் பக்தி இயக்கத்தால் காப்பாற்றப்பட்டன. எனவே, பண்ணாராய்ச்சிக்கும் சம்பந்தர் உதவுகிறார். அவர் பாடிய பாடலோடு திருநீலகண்ட யாழ்ப்பாணரின் யாழ்க்கருவி இசையும் கூடவே முழங்குவது குரலிசையையும் கருவி இசையையும் ஆய்வாருக்கு உதவும். இன்னும் அப்பர். சம்பந்தர் இருவர் தேவார இசைகளிலும் ஒருவருக்கொருவர் இருந்த பாதிப்பையும் ஆராயலாம்.

18. திருஞானசம்பந்தர் வாழ்க்கையில் காணப்படும் அற்புதங்களைப் பகுத்தறிவாளர் உலகத்தில் எவ்வாறு நியாயப்படுத்திக் காட்டுவது ?

''பல்வேறு நாடுகளில் பல்வேறு காலங்களில் உலகமெங்கும் இத்தகைய அற்புதங்கள் நடந்திருக்கின்றன. யூதேயாவில் இயேசுநாதரும், அரேபியாவில் நபிகள் நாயகமும் இத்தகைய அற்புதங்களைச் செய்

திருக்கின்றனர். எல்லாம் வல்ல வாலறிவனுகிய இறைவன் அருளால் நிகழ்த்தப்பெறும் அற்புதங்களை எடைபோடும் ஆற்றலும் பக்குவமும் சின்னுட் பல்பிணிச் சிற்றறிவு உடைய நமக்கு இன்னும் வரவில்லை. எனவே, நம் ஆத்ம பலவீனத்தைக்கொண்டு திருஞானசம்பந்தரின் ஆத்ம பலத்தை அளவிட முனைவது தவறு. நம் அறிவு ஐயம், திரிபு, மயக்கம், மறதி ஆகிய குறைபாடுகளையுடையது. இத்தகைய அறிவைக் கொண்டு உலகப் பொருள்களையே நம்மால் சரிவரப் புரிந்துகொள்ள முடிவதில்லை. அவ்வாறிருப்ப, உலகைக் கடந்து நிற்கும் கடவுள், அடியார்கள் வழி நிகழ்த்தும் அற்புதங்களை எங்ஙனம் உணரமுடியும்? நமக்குரிய அறிவு ஒன்றினைக்கொண்டு மட்டும், உலகில் யாவற்றையும் அறியமுடியாது. அறிவுக்கெட்டாத சிலவற்றை நம்பிக்கையால் ஒப்புக் கொள்ளவேண்டும். "இவர் தாயும் தந்தையும்" என்று பிறர் சொல்ல அறிவால் ஆராயாமல், நம்பிக்கையால் நாம் ஒப்புக்கொள்கிறோம். அதைப்போன்று நம்மைவிட அறிவும் அநுபவமும் உள்ள அப்பர், சுந்தரர், சேக்கிழார், வள்ளலார் போன்ற நம்பிக்கைக்குரியவர்கள் போற்றும் திருஞானசம்பந்தர் அற்புதங்களை நாமும் நம்பலாம். மாந்தனுக்கு அப்பாற்பட்ட ஆற்றலால் (Super Human Power) அற்புதங்கள் நிகழ்த்தப்பெறுகின்றன" — பக்கம், 10-11: தமிழகம், (திங்களிருமுறை (இதழ்) 1-4-66.

19. திருஞானசம்பந்தர் வரலாற்றில் அவருக்கு மயிலையில் வாழ்ந்த பூம்பாவையின் தந்தை சிவநேசச் செட்டியார் பெண் கொடுக்க விரும்பியதாகக் குறிப்புண்டு. இதிலிருந்து அக் காலத்திலேயே கலப்புத் திருமணம் ஒப்புக்கொள்ளப்பட்டது என்று கருத இடமுண்டா?

குலம் பேசிக் காரைக்காலம்மையாருக்குத் திருமணம் செய்தனர். திலகவதியாருக்கு அதே வேளாள குலத்தைச் சேர்ந்த கலிப்பகையாரையே மணம் பேசினர். சம்பந்தரே அந்தணர் குலப் பெண்ணைத் தான் இறுதியில் திருமணம் செய்தார். இவ்வாறு மணநிலையில் சாதி அமைப்பு இருந்தது உண்மைதான். எனினும் பக்திக்கு முதன்மை கொடுத்துச் சாதியை மீறிக் கலப்பு மணம் செய்தவர்களும் இருந்தனர். ஆதிசைவராகிய சுந்தரர் உருத்திர கணிகையர் குலப் பரவையாரையும் வேளாள குலச் சங்கிலியாரையும் மணந்திருக்கிறார். எனவே, சிவநேசச் செட்டியார் தன் மகள் பூம்பாவையைச் சம்பந்தருக்கு மணம் செய்துகொடுக்க முன்வந்தது கலப்பு மண நிலையே. இன்னும் வேளாளராகிய கோட்புலியார் தம் பெண்கள் இருவரையும் சுந்தரர்க்கு மணஞ்செய்து கொடுக்க முனைந்ததும் கலப்பு மணநிலையே.

20. திருஞானசம்பந்தர் தேவாரத்திற்கும், திருநாவுக்கரசர் தேவாரத்திற்கும் உள்ள ஒற்றுமை வேற்றுமைகள் யாவை?

(அ) திருஞானசம்பந்தர் தேவாரத்தில்,

8ஆம் பாடல் இராவணனுக்கு மறக்கருணை அருளியது.

9ஆம் பாடல் அரிஅயன் அடிமுடி தேட அழலாய் நின்றது.

10ஆம் பாடல் பிற சமய மறுப்பு.

11ஆம் பாடல் பாடிய தன் பெயரும், பாடுவார் பெறும் பயனும் கூறுவது.

இவ்வாறு ஓர் அமைப்புமுறை காணப்படுகிறது. அப்பர் தேவாரத்தில் இறுதிப் பாடல் மட்டும் இராவணனுக்கு மறக்கருணை காட்டியதைப் பாடுகிறது.

(ஆ) திருஞானசம்பந்தர் பாடல்கள், தாளம் கொட்டிப் பாடத் தக்க (அவரே பொற்றாளம் தட்டிப் பாடினார்) தாளம் பட்ட ஓசையுடையன. அப்பர் தேவாரம் தாளமின்றியும் பாடக் கூடியதாகப் பெரும்பாலும் அமைந்துள்ளது.

(இ) சம்பந்தர் தேவாரத்தில் இயற்கை வருணனை இறை வருணனையோடு சேர்ந்து மிகுதியாக இடம்பெறுகிறது. அப்பர் தேவாரத்தில் கழிவிரக்கமும் உருக்கமும் மிகுதி.

(ஈ) சம்பந்தர் தேவாரத்தில் பிற சமய மறுப்பு பதிகம் தோறும் இடம் பெறுகிறது. (10ஆம் பாடல்). அப்பர் பாடல்களில் அத்தன்மை பதிகந்தோறும் காணப்படவில்லை.

———

இரண்டாம் நாள் கருத்தரங்கு 23 - 1 - 1973

# நான்கு முதல் ஆறு திருமுறைகள்

[கட்டுரையாளர்: டாக்டர் சொ. சிங்காரவேலன்]

## அவையோர் எழுப்பிய வினுக்களும் ஆசிரியரின் விடைகளும்

### தமிழ்த்துறை வினுக்கள்

1. தேவாரம் என்னும் சொற்பொருள் கருத்துகளில் கட்டுரையாளர் எதனைச் சிறப்பாகக் கருதுகின்ருர்?

தே+வாரம் என்று பிரித்து, இறைவனைப்பற்றிய வாரச் செய்யுள் எனப் பொருள் கொள்வதே கட்டுரையாளர்க்கு இசைந்தது. வாரம் என்பது ஒருவகை இசைப்பாடல் என்பது 'வாரம்பாடும் தோரிய மடந்தை' எனவரும் சிலப்பதிகார வரியான் இனிது உணரப்படும். தேவாரப் பாக்கள் அனைத்தும் இறைவனைப் பற்றிய இசை தழுவிய அமைப்புடையன ஆதலின், இப்பொருள் பழந்தமிழ் மரபிற்கும் ஏற்றதாகத் திகழ்கின்றமை தெளிவு.

2. நாவுக்கரசர் தேவாரம் திருமுறை வரிசையில் நான்கு, ஐந்து, ஆறு திருமுறைகளாக வகுக்கப்பெற்றதற்குரிய காரணங்கள் யாவை?

நாவுக்கரசர் திருமுறை நான்கு, ஐந்து ஆறும் திருமுறைகளாக வகுக்கப்பெற்றுள்ளன. இப் பகுப்புமுறை நம்பியாண்டார் நம்பிகளால் முதற்கண் செய்யப்பெற்றதாகத் திருமுறை கண்ட புராணத்தால் தெளிவாகின்றது. "திருச்சிற்றம்பலம் என்னும் தனித் தமிழ் மந்திரம் ஒற்று நீக்கி எண்ணின் ஆறெழுத்தாகும்; இஃது இருமுறை ஓதப்படுதலின் அவ்விரண்டுங்கூட்டி எண்ணில் பன்னிரண்டெழுத்தாகும். இதுவே திருமுறைகள் பன்னிரண்டாக அமைந்தமைக்குப் பொருந்திய திருவருட் குறிப்பு என்ப" என்பர் திரு. ப. இராமநாதப் பிள்ளை அவர்கள். (முன்னுரை - பன்னிரு திருமுறைப் பெருந்திரட்டு (1961) கழக வெளியீடு பக். 12) நம்பிகள் எக்காரணம் பற்றி வைத்தனர் என்பது தெளிவாகப் புலப்படவில்லை.

3. நாவுக்கரசரின் பாடல்களை மட்டுமே 'தேவாரம்' என்ற சொல்லால் குறிப்பிடுகிறது சிவப்பிரகாசப் பெருந்திரட்டு. இதன் பொருளும் பொருத்தமும் யாது?

சிவப்பிரகாசப் பெருந்திரட்டாசிரியர் திருநாவுக்கரசர் தேவாரத்திடத்துக் கொண்ட பெரு விருப்பம் இதற்குக் காரணமாகலாம். அன்றியும், மற்ற அருளாளர் பாட்டுக்களிலும் அப்பரடிகள் பாட்டுக்கள் உருக்கமும் நெகிழ்வுச் சிறப்பும் உடையனவாக இருந்தமை அக்கால மாந்தரால் உணரப்பட்டிருக்கக்கூடும். அதற்கேற்ப இவ்வாறு உரைத்திருக்கலாம்.

4. திருநாவுக்கரசருடைய பதிகங்கள் சில பத்துக்கும் மேற்பட்ட பாடல்கள் கொண்டு விளங்குகின்றன (11, 12, 20) இவ்வகை அமைப்புக்குக் குறிப்பிடத்தக்க காரணங்கள் உளவா?

இவ்வகை அமைப்பிற்குக் குறிப்பாகக் காரணம் ஒன்றும் கூறவியலாது. 11, 12, 20 என்ற அமைப்பில் காணப்பெறும் பதிகங்கள் பல உள்ளன. 20 பாடல் அமைப்பில் உள்ள பதிகம் ஒன்று மட்டுமே. சில பதிப்புக்களில் இஃது இரண்டு பதிகங்களாகக் கொள்ளப்பட்டுக் கணக்கிடப்பட்டுள்ளது. இது சமாசப் பதிப்பில் அடிக்குறிப்பிற் காட்டப்பட்டுள்ளது. அப்பரடிகளார் திருவருள் வயமிருந்து தம்வயமிழந்து பாடிய பாட்டுக்கள் அனைத்தும். ஆதலின், பாடல் தொகை வேறுபாடு அத்துணைக்கு அடிகளாராற் சிந்திக்கப் பெற்றதன்று எனலாம்.

5. தாண்டகவேந்தரின் தாண்டகத்திற்கு இலக்கணம் வகுத்தார் உளரா?

தாண்டக வேந்தரின் தாண்டகத்திற்கு இலக்கணம் வகுத்தார் பிற்காலத்து இலர். ஆயினும், பாட்டியல் நூல் நெடுந்தாண்டகம், குறுந்தாண்டகம் ஆகியவற்றிற்கு இலக்கணம் வகுத்துள்ளது. "மூவிரண்டேனும் இருநான்கேனும், சீர்வகை நாட்டிச் செய்யுளில் ஆடவர், கடவுளர்ப் புகழ்வன தாண்டகம். அவற்றுள், அறுசீர் குறியது நெடிய தெண்சீராம்" (பன்னிரு பாட்டியல் 196) "அறுசீர் எண்சீர் அடிநான் கொத்தங்கு, இறுவது தாண்டகம். இருமுச்சீரடி குறியது நெடிய திருநாற்சீரே" (பல்காயனார்) என்பன இங்குக் கருதத்தக்கன. இவையனைத்தும் வடிமொழித் தாண்டகத்திற்கு இலக்கணம் வகுத்தனவே தவிர, அப்பர் தாண்டகத்திற்கு வகுத்தனவல்ல. தாண்டக வேந்தருடைய ஆறும் திருமுறை முற்றும் திருத்தாண்டகந்தான். இது பெரும்பாலும் எண்சீர்களைக் கொண்ட நான்கடி விருத்தங்களே. (சிற்சில இடங்களில் சிற்சில அசை விட்டுப் போயிருக்கின்றன. அவை ஓசை வகையான் நிரப்பப்பட்டுப் பாடப்பட்டிருக்கக்கூடும்). ஓரடியில் நாலெழுத்து முதலாக இருபத்தாறெழுத்து வரையில் அமைந்த செய்யுள் சந்தம் என்றும், ஓரடியில் இருபத்தோரெழுத்து முதலாக மேற்

கொண்ட எழுத்துக்களை உடைய செய்யுள் தாண்டகம் என்றும் யாப் பருங்கல விருத்தியின் 90-ஆவது நூற்பா உரை கூறுகின்றது. மற்றும் தாண்டகச் செய்யுளில் லகுவும் குருவும் ஒத்துவரும் செய்யுள் அள வியல் தாண்டகம் என்றும், லகுவும் குருவும் ஒத்து வராத செய்யுள் அவைவழித் தாண்டகம் என்றும் அந்த உரை கூறுவதைக் காணலாம். திருமங்கையாழ்வாரது பாடல்களில், அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தங்கள் திருக்குறுந்தாண்டகம் என்ற தலைப்பிலும்; எண்சீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தங்கள் திருநெடுந்தாண்டகம் என்ற பெயரிலும் விளங்கக் காணலாம். இம்முறையே அப்பர் தாண்டகங்கட்கும் பொருந்துகின்றது.

ஆதலால் வடநூல் முறைபற்றித் தாண்டக இலக்கணம் கூறும் பகுதி, அப்பரடிகளார் பாட்டுப் போக்கிற்குப் பொருந்தாது; இப் பொருந்தாமை பேராசிரியர் க. வெள்ளைவாரணனரது பன்னிரு திரு முறை வரலாற்று முதற்பகுதி நூலிலும் இக் கட்டுரையாளரது ஆய்வு நூலாகிய, “A Linguistic and a critical study of Appar Te-va-ram (Hymns) (—Ph.D. Thesis - Annamalai University, 1971.) என்பதனுள், ‘metre’ என்ற அதிகாரத்திலும் விளக்கப்பட்டுள்ளது.

எண்சீர் விருத்தங்கள் இயல்பாக உள்ள பாட்டெல்லையைத் தாண் டிய அகப் பகுதியை உடையனவாக இருத்தலின் தாண்டகம் என்ற பெயருடன் வழங்கப்பட்டிருக்கக்கூடும் என்றும் கருதலாம்.

6. திருமங்கைமன்னன் தாண்டகத்திற்கும் இவருடைய தாண்ட கத்திற்கும் ஒப்புமை உண்டா?

இதற்கு விடை சென்ற வினுவிற்கு அமைந்த பகுதியிற் கூறப் பெற்றது. வடிவ அளவில் இரண்டும் ஒத்தவையே.

7. திருநாவுக்கரசர் தேவாரத்தைத் திருஞானசம்பந்தர் தேவாரத் திற்கு அடுத்த நிலையிலேயே முறைவைப்பு செய்திருப்பதின் காரணங்கள் யாவை?

நம்பியாண்டார் நம்பிகள் சப்த கோடி மந்திரங்கள் என்ற அமைப் பிற்கேற்ப ஏழு திருமுறைகளாகத் தேவாரத்தை வகுத்தருளினர் என்று திருமுறை கண்ட புராணம் தெரிவிக்கின்றது. தமிழில் பன்னீருயிர் போன்ற பன்னிரு திருமுறை என்றும், அவற்றுட் சிறப் பாகிய நெடில் ஏழு போல் திருமுறை ஏழு என்றும் ப. இராமநாத பிள்ளையவர்கள் குறிப்பர். நம்பிகள் திருஞானசம்பந்தருடைய பதி கங்களை அடுத்து முறைவைப்புச் செய்திருக்கும் கருத்துத் தெளிவாகப் புலப்படவில்லை. எனினும், திருஞானசம்பந்தர் சிவபிரான் திருவடி களிற் கலந்த காலத்திற்குப்பின் நீண்ட காலம் அப்பரடிகள் வாழ்ந் திருக்கக்கூடும் என்று கருதுவதால், இறைவன் திருவடிகளை அடைந்த முறையில் இவ் வருளாளர் திருவாக்குகளை முறைப்படுத்தினர் என்று கருதுதலும் பொருந்தும். திருவடியடைவு முறைப்படி முதற்கண்

திருஞானசம்பந்தர், அடுத்து திருநாவுக்கரசர், அடுத்துச் சுந்தரர் திருப்பாட்டுக்கள் ஏழு திருமுறை வரிசையாக்கப்பட்டுள்ளன: இது ஒரு கருத்தே அன்றி முடிவான உண்மை அன்று.

8. சங்க காலத்திற்குப் பின்னர் தமிழில் ஏற்பட்டுள்ள மாற்றங்களுள் 4, 5, 6 திருமுறைகளில் குறிப்பிடத்தக்கன யாவை?

சங்க காலத்திற்குப்பின் தமிழ்மொழியில் ஏற்பட்டுள்ள மாற்றங்களில் பலவற்றைக் கட்டுரையாளர் ஆய்வுக் கட்டுரையில் விரிவாகக் கூறியிருக்கின்றமையின் அவற்றை மீண்டும் இங்கு விளக்குவது கூறியது கூறலின்பாற்படும். ஆதலின், சுருக்கமாகக் கூறினல், இலக்கிய மொழி, பேச்சு மொழி ஆகிய இரண்டிற்கும் ஏற்பட்ட நெருங்கிய பிணைப்பினை அப்பரடிகளின் மூன்று திருமுறைகள் காட்டுகின்றன என்று கூறலாம். எல்லா மக்களும் புரிந்துகொள்ளத்தக்க எளிய பாடற்போக்கு, சொல் அமைப்பு, பேச்சு மொழிச் சொற்கள் ஆட்சி—ஆகியன அடிகளார் பாட்டுக்களிற் காணப்பெறுகின்றன.

9. சமண சமயத்தினின்றும் இவர் சைவ சமயத்துக்கு வந்தமையான் இவர்தம் பாடல்களில் அமைந்துள்ள தனிச்சிறப்பு யாது? அதன் தாக்குதலால் தமிழிலக்கியமும் சைவ சமயமும் பெற்றுள்ள ஆக்கம் யாது?

சமணராக இருந்து சைவசமயத்திற்கு அடிகளார் வந்தவராதலின், இவருடைய பாட்டுக்களில் இறைவனுடைய எளிமை, உமையம்மையோடு கூடி உலகியலை நிகழ்த்தும் போகமுறை முதலியன சிறப்பாக வற்புறுத்தப் பெறுகின்றன. சமணத்தில் உள்ள கடுந்துறவை இவர் எதிர்த்தவராதல்வேண்டும்; உமையொருபாகனைப் பல்வேறு பாட்டுக்களில் ஓதி மக்களுக்கு அச் சமண சமயப் பொருந்தாக் கோட்பாட்டை விளக்கினராதல்வேண்டும். "மங்கையைத் தழுவிய யோகியர்' என்று பாடுவர். அச் சமயத்தாருடைய அன்பு அறநெறி அடிகளார் மனத்தை ஈர்த்தது. கொல்லாமை முதலிய நல்லறங்களை வற்புறுத்திப் பாடியதுடன், 'தயாமூலதன்மம் என்னும் தத்துவத்தின் வழிநின்று, சார்ந்தார்க்கெல்லாம் நலங்கொடுக்கும் நம்பி' என்று பாடுகின்றார். 'தயாமூலதன்மம்' என்பது சைவ சமயத்தின் உயிர்க்கொள்கையாக வேண்டும் என்று அடிகளார் கூறுவது, சமண சமயச் சார்பினல் அவர் பெற்ற தனிச்சிறப்புக் கோட்பாடு எனலாம்.

இனி வடசொற்களை மிகக் குறைந்த அளவிலேயே கையாண்டு, சமணரது பாடற் போக்கால் தமிழிலக்கியம் தாக்கப்பட்டமை போலச் சைவசமயத்தால் தாக்கப்படாதவாறு காத்தார் அடிகளார். அடிகளார் கடன் வாங்கிய சொற்கள் (Loan words) மிகக் குறைவு. பல்வேறு சொற்கள் இவரால் தமிழாக்கம் பெற்றன. இது தமிழ்மொழி இவராற் பெற்ற ஆக்கம். விளக்கம் ஆய்வுக் கட்டுரையில் காணலாம்.

10. சமணராயிருந்து சைவராய் மாறிய நாவுக்கரசர் மீண்டும் சமணரானர் என்று அப்பாண்டைநாதர் தல வரலாறு கூறுகின்றது. இக் கூற்றின் வன்மை மென்மை யாவை?

அப்பாண்டை நாதர் தல வரலாறு மீளவும் அடிகளார் சமண சமயம் சார்ந்தார் என்று கூறுவது பொருந்தாது. அடிகளார் ஒரு முறை மதமாறியபின் சிவநெறியையே இறுதி நாள்வரை கடைப் பிடித்துத் திருக்கயிலைச் செலவு மேற்கொண்டு இறைவன் திருவடிகளைத் திருப்புகலூரில் நண்ணினுர் என்பதே முறையான வரலாறு. அப் பாண்டை நாதர் தல வரலாறு இதற்குச் சரியான சான்றுகள் காட்டித் தெளிவுறுத்தாமையினுல் இது தக்க சான்றின்றிக் கோட்பாடு நிறுவப் புகுந்து வலியிழந்த கூற்ருய் விடுகின்றது.

11. ஒரே காலத்தில் வாழ்ந்த ஞானசம்பந்தர், அப்பர் வாக்கு களில் ஒருமைப்பாடு காணப்படுகின்றதா?

ஒரே காலத்தில் வாழ்ந்த அப்பர், சம்பந்தர் வாக்குகளில் ஒருமைப் பாடு காணப்படுகின்றது. இருவர் பாட்டுக்களும் ‘பக்தி ஒருமைப் பாடு’ என்ற அளவில் ஒன்ருந்தன்மை உடையன. இருவரும் மூன்று முறை சந்தித்துச் சிவதல யாத்திரை மேற்கொண்டமைக்கும், பல பதிகங்களை ஒருவர் முன்னிலையில் மற்றவர் பாடியமைக்கும் அகச் சான்றுகள் உள்ளன; சேக்கிழார் இருவர் புராணங்களிலும் இவற்றை முறையே விரித்தும் பொருத்தியும் பாடியுள்ளனர்.

12; வடமொழிக் கலப்பு இவர் தமிழில் எந்த அளவுக்குக் காணப் படுகின்றது?

வடமொழிச் சொற்களை அடிகளார் பெரிதும் குறைவாகவே கலந்துள்ளார். இவர் கையாண்டவட சொற்கள் சிலவே ஆகும்; இது மொத்தப்பாடல் எண்ணிக்கையில் சிறு விழுக்காடு. ‘வடசொற் கிளவி வடவெழுத்து ஒரீஇ எழுத்தொடு புணர்ந்த சொல்லாகும்மே’, ‘சிதைந் தனவரினும் இயைந்தன வரையார்’ என்ற தொல்காப்பியர் வரம்பிற் குட்பட்டே இவரது வடசொல்லாட்சி இருப்பது தெளிவு. ‘தமிழ் மொழித் தலைவர்’, ‘கோதில் மொழிக் கொற்றவனுர்’ என்று சேக் கிழார், அடிகளாரைப் பாராட்டுவது எவ்வளவிற்கு உண்மை என்பது இதனுல் இனிது விளங்கும்.

13. திருஞானசம்பந்தர் தேவாரத்திற்கும் திருநாவுக்கரசர் தேவாரத்திற்கும் இடையே உள்ள ஒற்றுமை வேற்றுமைகள் யாவை?

ஒற்றுமை - பக்தி அடிப்படையில் விளைந்தது; வேற்றுமை - நடை வேறுபாட்டால் அமைந்தது. சம்பந்தர் பாட்டுக்கள் அரிய இசை

யமைப்பும் பொருளமைப்பும் கொண்டவை ; அப்பரடிகளாருடையன எளிய இசையமைப்பும், பொருளமைப்பும் வாய்ந்தவை. சம்பந்தர் பாட்டுக்களைவிட அடிகளார் பாட்டுக்களில் அக்காலப் பேச்சுத்தமிழ் மணம் மிகுதியும் கமழ்கின்றது.

14. *நால்வருள் திருநாவுக்கரசரின் தனிச்சிறப்புகள் யாவை?*

திருநாவுக்கரசர் தொண்டுநெறி என்ற 'தாசமார்க்கம்' தலைப் பட்டவர் ; வழிபாடு செய்வதுடன் மெய்வருத்திச் செய்யும் தொண்டு நெறியையும் கலந்துசெய்து சிறப்புற்றவர் ; இஃது ஏனைய மூவர்க்கும் இல்லாத சிறப்பியல். 'திருநாவுக்கரசு வளர்திருத்தொண்டின் நெறி' என்று இதனைச் சேக்கிழாரும் சிறப்பித்துப் பாராட்டுவர்.

15. *திருஞானசம்பந்தர் தேவாரத்திற்கும் திருநாவுக்கரசர் தேவாரத்திற்கும் இடையேயுள்ள மொழியியல் வேறு பாடுகள் யாவை?*

இதற்கான விடை கட்டுரையாளர் ஆய்வுக் கட்டுரையிலும், 11, 12 விடைப் பகுதிகளிலும் குறிப்பாகத் தரப்பட்டுள்ளது: ஆண்டுக் காண்க.

16. *திருநாவுக்கரசர் வாழ்வில் கண்ட எளிமை, அவருடைய பாடல்களிலும் புலப்படுகின்றனவா?*

அடிகளாரது வாழ்விற்கண்ட எளிமை அவரது பாட்டுக்களிலும் இனிது புலப்படுகின்றதென்றே கொள்ள வேண்டும். இவருடைய 3066 பாடல்களிலும் அணிகள் பொருந்திவருவன மிகச்சிலவே. பெரும்பான்மையாக வரக்கூடிய உவமைகளைக்கூட இவர் குறைவாகவே கையாண்டுள்ளார். ஆய்வுக்கட்டுரையிற் காட்டப்பட்டுள்ள அட்டவணை இதனைத் தெளிவாக்கும். இயல்பாகப்பாடும் திறம் இவரது. எதுகை, மோனை முதலிய உறுப்புக்களில்கூட அவ்வளவாகக் கவனம் செலுத்த மாட்டார் அடிகளார் ; தாமாக வந்து அவை பொருந்தினால் உண்டு. பொருந்தாது போனால் அதுபற்றிச் சிந்தனை செய்திடமாட்டார் இவர். இவரது எதுகை அமைப்பில் இவ்வாறு வேறுபாடுகள் பல காணப்படு கின்றன.

17. *சூலைநோய் காரணமாகவே திருநாவுக்கரசர் சைவ சமயத் திற்கு மீண்டார் என்றால், ஓர் அச்சுறுத்தலின் வாயிலாகவே அவர் மதம் மாறியதாக இடம் ஏற்படவில்லையா?*

சூலைநோய் காரணமாக அடிகளார் சைவசமய நெறிக்கு மாறினார் என்று கூற இயலாது. 'நம்பர் அருளாமையினால் கொல்லாமை மறைந்துறையும் அமண் சமயம் குறுகுவார்' என்று சேக்கிழார் சமண சமயச் சார்பிற்குக் கூறிய காரணமே சமண சமயப் பிரிவுக்கும்

பொருந்தும்; சூலை ஒரு கருவியாக நின்றது; கருவி வேறு - காரணம் அல்லது நிமித்தம் வேறு. காரணம் செயற்படக் கருவி ஒரு வாய்ப்பாக இருக்கும். சூலை அப்படித்தான். 'இறைவனுக்கு அன்பு செய்யும் போது அஞ்சியோ அன்புகாட்டியோ செய்யலாம்' என்று அடிகளார் பாடுவர் :—"அஞ்சியாகிலும் அன்புபட்டாகிலும், நெஞ்சம் வாழி நினை நின்றியூரைநீ". ஆதலின் சூலை காரணமான அச்சத்தை அவர்தம் முதற்பதிகத்துப் பாடி அத்துன்ப நீக்கத்திற்குக் கருணைபுரிய வேண்டினர் என்பதே நாம் இங்குக்கொள்ள வேண்டிய பொருளாகும்.

18. நால்வரின் தலைமை நற்செய்திகள் யாவை? அவற்றுள் திருநாவுக்கரசரின் நற்செய்தி பெறும் சிறப்பிடம் யாது?

திருஞானசம்பந்தரது நற்செய்தி இறைவனுக்கு மகன்மை நெறி மேற்கொண்டு உயிர்க்குலம் உய்தல் வேண்டும் என்பது; சுந்தரரது செய்தி தோழமை நெறி மேற்கொண்டு உயிர்க்குலம் ஈடேறல் தக்கது என்பது; மாணிக்கவாசகரது செய்தி ஞானநெறியாகிய நன்னெறி மேற்கொண்டு ஞாலம் உய்ந்திட வேண்டும் என்பது; திருநாவுக்கரசரது நற்செய்தி, இறைவனுக்குப் பயன்கருதாது தொண்டுசெய்து உய்ந்திடல் இவ்வுலகினர் கடப்பாடு என்பது ஆகும். "என் கடன் பணி செய்து, கிடப்பதே" என்பது இவரது செய்திச் சுருக்கம் எனலாம். இத்தொடருள் 'கிடப்பது' என்ற சொல், தொண்டு செய்தேன் என்ற உணர்வு தானும் இன்றிப் பயன்கருதா உளப்பாங்கினை எடுத்துணர்த்துவதாக உள்ளது; இதனை 'நிஷ்காம்ய பக்தி' என்பர் வடநூலார்: "கூடும் அன்பினிற் கும்பிடலேயன்றி வீடும் வேண்டா விறலின் விளங்கினர்" என்றும், "கேடும் ஆக்கமும் கெட்ட திருவினர், ஓடும் செம்பொன்னும் ஒக்கவே நோக்குவார்" என்றும், சேக்கிழார் கூறுவன அடிகளாரது அருட்செய்தி விளக்கங்களே ஆம்.

19. திருநாவுக்கரசர் வாழ்க்கையில் நடந்த அற்புதங்கள் அப்படியே நம்பத்தக்கனவோ? அல்லது அவற்றிற்கு ஏதேனும் நீதிப்பொருள் அல்லது தத்துவப்பொருள் உண்டா!

அடிகளார் அற்புதங்களை நிகழ்த்தினர் அல்லர்; அற்புதங்கள் அவர் வாழ்விற் குறுக்கிட்டன என்பதே உண்மை. அடிகளார் காலத்தில் இயற்கை இறந்த நிகழ்வுகள் பல நிகழ்ந்திருக்கக்கூடும்; அவை இக்கால அளவுகோற்குப் புலப்படாதன ஆகலாம். ஆதலால் அவை நிகழ்ந்தனவே என்று கொள்ளுவது பொருந்தாமற் போகாது; ஒன்றுக்கும் பற்றாத சில் வாழ்நாட் சிற்றறிவும் சிறுதொழிலும் உடையார் சிலர் இக்காலத்தில் சித்து வேலைகள் என்று செய்வனவே நம் அறிவிற்குப் புலப்படாதபோது, எல்லாம்வல்ல கடவுளின் திருவருளால் நிகழ்ந்த சில அற்புத நிகழ்ச்சிகளை ஏன் நம்ப மறுத்தல் வேண்டும்?

சிலவற்றை நம்பித்தான் தீரவேண்டும்; பலவற்றை ஆய்ந்துணரமுற்படலாம். அத்தகு நம்பிக்கைக்குரியனவே அடிகளார் வாழ்வின்

தற்செயனிகழ்ச்சிகளாக இறைவன் அருளால் விளைந்த சில செயல்கள்; "ஏதுக்களாலும் எடுத்த மொழியாலும் மிக்குச் சோதிக்க வேண்டா, சுடர் விட்டுளன் எங்கள் சோதி" என்று திருஞானசம்பந்தர் கூறும் திருவாக்கை அடிகளார் அற்புதங்களுக்கும் பொருத்திக் காணலாம்.

## அவையோர் எழுப்பிய வினாக்கள்

**திரு. கொ. நீ. சிங்காரவேலு**

1. நாவுக்கரசர் பாடல்களில் பல இடங்களில் வெளி வேடங்களைக் கண்டிக்கும் போக்கும் சீர்திருத்தக் கருத்துகளும் பார்க்க லாம். எடுத்துக்காட்டாக,

   'கங்கையாடில் என் காவிரியாடில் என்'

   'கோத்திரமும் குலமும் கொண்டு என் செய்வீர்'

   போன்றவை. இதுபோன்ற கருத்துகள் ஞானசம்பந்தர் பாடல் களில்அருகியே உள்ளன என்று நினைக்கிறேன். இது உண்மை யானல் காரணம் உண்டா?

இது உண்மையே. திருநாவுக்கரசர் சீர்திருத்தக் கருத்துகளை வெளியிட்டுள்ள பதிகமே உண்டு. திருஞானசம்பந்தர் திருப்பாட்டுக் களில் கண்டிக்கும் போக்கு இல்லை. இருவரது சிந்தனைப் போக்கே இதற்குக் காரணம் எனலாம்.

ஒரே காலத்தில் வாழ்ந்த இருபெருங் கவிஞர்களாகிய பாரதியும், பாரதிதாசனும் இதற்குச் சரியான எடுத்துக்காட்டுகள். சமுதாய விடுதலை பாரதிதாசன் குறிக்கோளாக, நாட்டு விடுதலையே பாரதியின் குறிக்கோளாக இருந்தது. ஒரே காலத்துப் புலவர் இருவரின் சிந்தனைப் போக்கு மாறுபடும் என்பது இதனுலும் தெளிவாகும்.

**திரு. ஐ. அண்ணுமலை**

1. திருநாவுக்சரசரின் திறனய்வு இயற்கை எழிலில் மிக்கமைந் தது அன்றி, சிவ உருவ வருணனையில் மிக்கமைந்தது என்பதை விளக்குமாறு கேட்டுக்கொள்கிறேன்.

திருநாவுக்கரசர் சிவ உருவ வருணனையில் மிக்கமைந்த பாடல் பாடுந்திறன் பெற்றவர் என்பதற்குத் 'திருப்பூவணம்' என்ற தலத்துத் திருப்பதிகம் தக்க சான்ருக அமையும். இது,

"வடியேறு திரிசூலம் தோன்றும் தோன்றும்
வளர்சடைமேல் இளமதியம் தோன்றும் தோன்றும்

கடியேறு கமழ்கொன்றைக் கண்ணி தோன்றும்
காதில் வெண்குழைதோடு கலந்து தோன்றும்
இடியேறு களிற்றுரிவைப் போர்வை தோன்றும்
எழில்திகழும் திருமுடியும் இலங்கித் தோன்றும்
பொடியேறு திருமேனி பொலிந்து தோன்றும்
பொழில் திகழும் பூவணத்தெம் புனிதனர்க்கே"

எனத் தொடங்கிச் செல்லும் திருப்பதிகம். இதனுள் சிவபிரானின் திருவுருவம் சிறப்பாகத் தோன்றியமை காண்க; அகத்தியர் தேவாரத் திரட்டினுள், "சிவனுருவம்" என்ற தலைப்பில் அமைக்கப்பட்டிருக் கின்றது இத் திருப்பதிகம். இயற்கை எழில் காட்டும் பாட்டுக்கள் மிகச் சிலவே. அவற்றினும் இத்தகு பாட்டுக்களே அடிகளாரால் பெரிதும் பாடப்பட்டுள்ளன.

செல்வன் மு. அருணுசலம்

1. நாவுக்கரசர் பாடிய 4, 5, 6 திருமுறைகள்தான் உண்மையான தேவாரம் என்ற கருத்து தங்களால் அறுதியிட்டுக் கூறப் பெற்றது. அப்படியெனில், நாவுக்கரசர் தேவாரம் ஏன் முதல் மூன்று திருமுறைகளாக வைக்கப்படவில்லை? காரணமும், விளக்கமும் தேவை?

சிறு குழந்தையாகிய சம்பந்தருக்கு முதலிடங் கொடுக்கவே அவர் பாடிய திருக்கடைக் காப்பு முதல் மூன்று திருமுறை களாக வைக்கப்பட்டுள்ளன என்று சிலர் கூறுகின்றனர். இக் கருத்து ஏற்புடைத்ததாகத் தெரியவில்லை. காலத்தை நோக் கினுல் ஞானசம்பந்தரைவிட அப்பரே மூத்தவர். எனவே, இது பற்றித் தங்கள் விளக்கம் என்னவோ?

திருநாவுக்கரசர் பாடியவைதான் உண்மையான தேவாரம் என்று இக் கட்டுரையாளர் கருதவில்லை. அப்பரடிகளாரின் பாட்டுக்கள் ஒரு காலத்தில் தேவாரம் என்ற பொதுக் குறியீட்டால் வழங்கப்பட்டன என்றே கட்டுரையாளர் கருதுகின்றுர்.

தமிழ்த்துறையினரின் 2, 7ஆம் வினுக்களின் விடைப் பகுதிகளை நோக்கினுல் இவ் வினுவின் பொருண்மை இனிது விளங்கும். ஆதலின், கூறியது கூறல் குற்றம் நோக்கி அவற்றை மீண்டும் இங்குக் கூற வேண்டா. இறைவன் அடிஞானம் பற்றிய நெறியில் சிறு குழந்தை, கிழவர் என்ற வேறுபாட்டிற்கே இடம் இல்லை; "சிறிய பெருந்தகை யார்" என்று பாலருவாயராகிய திருஞானசம்பந்தரைச் சேக்கிழார் குறிப்பிடும் தொடரை இங்கு நோக்குக. முன் குறிப்பிட்டதுபோல இறைவன் திருவடி அடைவு முறையே இதற்குப் பொருந்திய காரண மாகலாம்.

2. *நாவுக்கரசருக்கேற்பட்ட இன்னல்களிலிருந்து, மீட்கப்பெற்ற செயல்களும், அவர் ஆற்றிய அற்புதங்களும் இயற்கைக்கு ஏற்புடைய செயல்களா? இயற்கையிறந்த நிகழ்ச்சிகளா? விளக்கம் தேவை?*

இவை இயற்கைக்கு ஏற்புடைய செயல்களாகவே கொள்ளத் தக்கவை என்பதும், எல்லாம் கடவுள் செயல் என்று தம்முடைய 'ஆவியும் உடலும் உடைமை எல்லாமும்' ஒப்புக் கொடுத்தவர்க்கு இவ்வாறு நிகழ்தல் வியப்பன்று என்பதும் முன்னும் மொழியப்பட்டன.

3. *நாவுக்கரசர் தேவாரத்தின் மூலம், சமயத்துக்கு அதிகம் தொண்டுபுரிந்துள்ளனரா? தமிழுக்கு அதிகம் தொண்டு புரிந் துள்ளனரா? தேவாரம் எழுத அவருக்குக் காரணமாயிருந்த அடிப்படை நிலைகளும், தமிழ் நூல்களும் அறநூல்களும் எவை?*

திருநாவுக்கரசர் தேவாரத்தின் வாயிலாகச் சமய உலகம் பெரும் பயன் பெற்றது; தமிழ் உலகமும் அவரால் அடைந்த பயன்கள் பல. சமய நெறியில் சமண பௌத்தச் செல்வாக்கினால் சைவசமயம் சரிந்து போகாதவாறு, அடிகளார் பாடிய இன்னிசைத் தமிழ்ப்பாக்கள் இணை யற்ற பணிபுரிந்தன. தமிழ், பக்திப் பாடல்களைப் பெற்றுச் சங்க இலக்கிய நெறியில் ஒரு புது மலர்ச்சி பெற்றது. தேவாரம் எழுதிய அடிகளார்க்கு அடிநிலை திருவருள் தூண்டுதலாகிய அகத்தெழுச்சியே (Inspiration). அடிகள் பல தமிழ் நூல்களையும் அறநூல்களையும் கற்றுணர்ந்த பேரறிஞர். அவரது அரும்பாடல்களிற் காணப்பெறும் கருத்துக்கள் இவ்வாறு முடிவுக்கு வரத் துணைபுரிகின்றன. தணிகை மணி டாக்டர் வ. சு. செங்கல்வராய பிள்ளை அவர்கள் எழுதிய "தேவார ஒளிநெறி - அப்பர்" முதற்பகுதியில், முன் இணைப்பாகச் சேர்த்துள்ள "ஒப்புமைப்பகுதி" இவ்வகையில் ஓர் அரிய முயற்சி. இக் கட்டுரையாசிரியர் தொகுத்துள்ள ஒப்புமைப்பகுதிகள் இன்னும் வெளிவரவில்லை; அவையும் வெளிவந்தால் எல்லா நூல் விவரங்களும் இனிது புலனாகும்.

**திரு. க. வெங்கடேசன்**

1. *நாவுக்சரசரின் பாடல்கள், எல்லை மீறிய பக்தி உணர்வினால் பாடப்பட்டதா? அன்றி மக்களைச் சைவ சமயநெறிப் படுத்த வேண்டும் என்ற நோக்கிலே பாடப்பட்டதா என்பதை அறிய அவா.*

நாவுக்கரசர் பாட்டுக்கள் எல்லை மீறிய பக்தி உணர்வினால், தாமே பொங்கி வழிந்த சிறந்த கவிதைகள்; அவற்றால் மக்கள் சைவசமய உண்மைகளையும், மேன்மைகளையும் உணர்ந்து தெளிந்தனர் என்பதே உண்மை. பயன் இலக்கிய (applied literature) அடிப்படை அடிகளார்

பாட்டிற்குப் பொருந்தாது; நோக்கமின்றித் தன்னுடைய பேரின்ப அனுபவத்தை எடுத்துக் கூறிக்கொண்டே செல்லும் அருட்கவிஞர் பெருந்தகையாகவே அடிகளார் விளங்கினர்.

2. தற்கால சமூக இழிவுகளுக்கு, அடிகளாரின் அன்றைய சமூக சேவை நன்மருந்தாக அமையுமா?

தற்காலச் சமூக இழிவுகளுக்கு அடிகளார் பயன்படுத்திய சமூக சேவை நன்கு பயன்படும். சாதி வேண்டாமை, குலம் வேண்டாமை, சமயப் பொதுமை, சமயப்பொறை, தொண்டு மனப்பான்மை, அறிவின்றிச் சடங்குகளுக்கு அடிப்பணிந்து கிடவாமை முதலிய பல நிலைகளில் அடிகளார் தெரிவித்த கருத்துக்கள் இன்று எடுத்துரைக்கவும், மக்களைத் திருத்தவும் பயன்படும் என்பதே இக் கட்டுரையாளர் கருத்து. பல தெய்வ வழிபாட்டினுல் சிதறுண்டு போகாமல் ஒரு தெய்வ வழிபாடு மேற்கொண்டு உலகம் உய்ய வேண்டும் என்றே அடிகளார் கருதினர் என்பது அவர் பாடல்களால் அறியக் கிடக்கின்றது.

3. அப்பரின் தேவாரப் பாடல்கள் தோத்திரத்திற்கு மட்டுமே பயன்படுமா? அன்றி, சாத்திரத்தினை அறிதற்கும் துணை புரியுமா?

அப்பரடிகளாரது திருப்பாட்டுக்கள் தோத்திர அமைப்பில் எழுந்தவையே. ஆயினும் அவற்றிற் சாத்திரக் கருத்துக்கள் இல்லாமற் போகவில்லை. ஆகவே நுட்பமாக நோக்கினுற் சாத்திர அமைப்பிற்கும் அவை துணைபுரிதல் உறுதி.

"தோத்திரமும் சாத்திரமும் ஆனூர்தாமே"

என்று பாடுகின்றூர் அடிகளார். இரண்டுமே இறைவனுடைய திருவடிவங்கள் என்பது அவர் கருத்து. தோத்திரம் இலக்கியம் போன்றது; சாத்திரம் இலக்கணம் போன்றது. 'இலக்கியத்தினின்றும் எடுபடும் இலக்கணம்' என்பது அனைவரும் அறிந்த உண்மை. அடிகளார் காலத்தின் பின் சைவசித்தாந்தச் சாத்திர நூல்கள் எழுந்த போது, இங்குள்ள கருத்துக்கள் அங்கும் மேற்கொள்ளப்பட்டுள்ளமை காணலாம்.

4. சிவயோகியரான சிவவாக்கியரின் கடவுட் கொள்கைக்கும், சிவனடியாரான திருஞான சம்பந்தரின் கடவுட் கொள்கைக்கும் கருத்தொற்றுமை உண்டு எனக் கூற இயலுமா?

திருஞானசம்பந்தரின் கடவுட் கொள்கைக்கும் சிவயோகியராகிய சிவவாக்கியரது கடவுட் கொள்கைக்கும் கருத்து வேற்றுமை ஏதும் இராது. மேம்போக்காகப் பார்த்தால் சித்தர், தமிழர் உருவ வழிபாட்டை மறுப்பதுபோலத் தோன்றும்; ஆனுல் மேல்நிலையில் உணர்ந்

தவர்க்கு ஞான வழிபாடு; உலகியலில் நிற்பார்க்கு உருவ வழிபாடு என்பதுதான் தெளிந்து கொள்ள வேண்டிய உண்மை ஆகும். எல்லாம் வல்ல பரம்பொருளையே இருவரும் பாடியுள்ளனர்; ஆதலின் கருத்து வேற்றுமை என்பதற்கு இடமே இல்லை.

இருவரும் கடவுள் நிலையை அணுகும் முறை (approach) வேண்டு மாயின், வேறுபாடு உடையது என்று கூறலாம்.

5. 1300 ஆண்டுகட்கு முன்னர், தமிழ்ச் சங்கம் மறைந்து, களப்பிரர், பல்லவர் முதலிய வேற்றுப் பண்பாளர்களின் ஆதிக்கம் மேலோங்கித் தமிழ் மொழியும், தமிழ் மக்களும் நைந்து நலிந்து இருந்தபோது, தமிழ் உணர்வையும், பற்றையும், உண்டாக்கி முதன் முதலில் தமிழ்மொழியை ஓர் இலக்கியமாக்கியவர் 'ஞானசம்பந்தர்' என்று கூற இயலுமா?

தமிழ் மொழியை ஓர் இயக்கமாக்கியவர் திருஞானசம்பந்தர் என்று கூறவியலாது; ஆராய்ந்து நோக்கினுல் அவரது பிறப்பின் நோக்கமே அஃது அன்று. 'தாவில் சராசரங்கள் எல்லாம் சிவம் பெருக்கும் பிள்ளையார் திருவவதாரம் செய்தார்' என்பர் சேக்கிழார். ஆதலால் சிவநெறியை நிலைநாட்ட வந்த ஞான ஆசிரியராகவே நாம் அவரைக் கருத வேண்டும். அவரது தமிழ்ப் பாட்டுக்கள் மக்களிடத்துத் தமிழ்மீது பற்றையும், அதன் வழியே இறைவனை அடையலாம் என்ற உணர்வையும் உண்டாக்கின என்பதே உண்மை.

6. 'மண்ணில் நல்லவண்ணம் வாழலாம், எண்ணில் நல்ல கதிக்கு யாதுமோர் குறைவிலை' என்று பாடல் மூலம் இல்லற நெறியை ஞானசம்பந்தர் போற்றுவதாகத் தெரிகிறது. ஆயின் துறவு நெறி பற்றிச் சம்பந்தரின் கருத்தென்ன?

இந்த வரிகள் இல்லற நெறியைப் போற்றுவதற்குத் திருஞான சம்பந்தராற் பாடப்பட்டவையல்ல. காழியம்பதியில் தோணியராக அப்பனும் அம்மையும் வீற்றிருக்கும் திருக்காட்சியை நினைந்து பாடியது. இவ்வாறு தாயும் தந்தையும் ஆகப் பெருமானும் பெருமாட்டியும் எல்லோரும் காண வீற்றிருப்பதால் அவனை வழிபட்டு மண்ணில் நல்ல வண்ணம் அனைவரும் வாழலாம் என்று நெறிகாட்டும் வரிகள் அவை. துறவு நெறியையும் திருஞானசம்பந்தர் போற்றியவர். திருவீழி மிழலைத் தேவாரத்தில், அகனமர்ந்த அன்பினராய் அறுபகை செற்ற துறவியர்களின் உள்ளமெனும் தாமரையில் வீற்றிருப்பவரே கடவுள் என்று புலப்படுத்தியுள்ளார். இத்தகைய பிற இடங்களிலும் துறவு நெறியைப் போற்றியுள்ளார்; இருநெறிகளுமே அவரது பெருமதிப்புக் குரிய நெறிகள்.

9, 10, 11 வினக்கள் திருஞானசம்பந்தரைப் பற்றியன. அப்பரடிக ளாரின் சமகால அருளாளர் என்ற முறையில் அவர் பற்றிய வினக் களுக்கும் கட்டுரையாளர் விடையளிக்க நேர்ந்தது.

---

இரண்டாவது பொதுநிலைப் பத்துநாள் கருத்தரங்கு

மூன்றும் நாள்: 24 - 1 - 1974

# ஏழாந் திருமுறை

[கட்டுரையாளர்: திரு. மு. சண்முகம் பிள்ளை]

## தமிழ்த்துறை வினாக்கள்

1. மூவர் தேவாரத்தில் சுந்தரர் தேவாரத்திற்குரிய தனிச் சிறப்புகள் யாவை?

2. சுந்தரர் தேவாரத்தில், திருஞானசம்பந்தர் திருநாவுக்கரசர் செல்வாக்கு எந்த அளவில் உள்ளது?

3. திருஞானசம்பந்தர் தேவாரம் திருநாவுக்கரசர் தேவாரம் ஆகிய இருவர் அருள் வாக்கையும் ஆராய்ந்து அறிந்து கொள்ளச் சுந்தரர் தேவாரம் பெருந்துணை புரிகின்றது என்ற கருத்து எந்த அளவுக்குப் பொருந்தும்?

4. 'மூவர் முதலிகளும்' என்ற தொடரில் 'முதலிகள்' என்ற சொல் குறிக்கும் பொருள் யாது?

5. 'கொடுக்கிலாதானைப் பாரியே என்று கூறினுங் கொடுப்பார் இலை' என்ற சுந்தரர் தொடரால், சுந்தரர் கபிலரின் புறநானூற்றுப் பாடலைப் படித்திருப்பார் என்று கொள்ளலாமா? அன்றிச் செவிவழிக் கேட்ட செய்தி கொண்டு பாடினர் எனலாமா? விளக்கம் வேண்டும்.

6. 'சிறந்தது பயிற்றல்' என்ற தொல்காப்பியத் தொடரால் சிறந்தநெறி துறவறநெறி எனக் கொள்ளலாமா?

7. புத்தூர்த் திருமணம் நின்றுபோகப் பின் திருவாரூரிலும், திருவொற்றியூரிலும் திருமணம் நிகழ்கின்ற காரணம் யாது?

8. சுந்தரர் வாழ்க்கையில் செய்த தவறுகளுக்கு ஊழ்தான் காரணமா? அவ்வாருயின் எல்லாரும் செய்யும் தவறுகளுக்கும் அதே நியாயத்தைக் கூறலாம் அல்லவா?

9. என்ன தவறுகளைச் செய்தாலும் இறைவனிடம் பக்தி செலுத்தினுல் போதுமா?

10. சுந்தரர் காலம் பற்றி டாக்டர் துரையரங்கனர் தெரிவிக்கும் முடிவுகள் தங்களுக்கு உடன்பாடா?

11. டாக்டர் துரையரங்கனர் ஆராய்ச்சிப்படி சுந்தரர் சைவ சித்தாந்தியா? இல்லை எனில் அவர் முடிவுகளை மறுப்பதற்கு ஆதாரங்கள் உண்டா?

12. சுந்தரர் திருத்தொண்டர் தொகையில் மணிவாசகர் பெருமானுக்கு இடமில்லாதது ஏன்?

13. பெரியபுராணத்தில் பாட்டுடைத் தலைவராகக் கருதப்படுபவர் சுந்தரர். தேவாரம் பாடிய மற்றவர்களுக்கு இல்லாத சிறப்பு சேக்கிழார் பெருமானல் இவருக்குக் கொடுக்கப்பட்டதின் இன்றியமையாமை என்ன?

14. சுந்தரர் தேவாரத்தில் காணப்படும் அகப்பொருள் இயல்புகள் யாவை?

15. நாரையும் குருகும் ஒன்ரு?

16. சுந்தரர் காலத்தில் 'தமிழ் அர்ச்சனை' இலக்கியம் - இயக்கம் தோன்றியது எனக் கருத இடமுண்டா?

17. சுந்தரர் - சேரமான் பெருமான் நட்பு எவ்வெவ்வகையில் அவர்தம் வரலாற்றுக்கு ஏற்றம் வழங்குகிறது?

18. விநாயகர் அகவல் பாடிய அவ்வையார் சுந்தரர் காலத்தவர் தானு?

19. மணவாழ்வில் மகிழ்ந்த சுந்தரர் தம் வாழ்க்கையின் இறுதியில் 'வெறுத்தேன் மனை வாழ்க்கை' என்று பாடுவானேன்?

20. திருஞானசம்பந்தரினும் சுந்தரர் குறைவான எண்ணிக்கை உடைய பதிகங்களைப் பாடியிருப்பது ஏன்?

21. 'என் கடன் பணி செய்து கிடப்பதே' என்ற அப்பரடிகள் வாக்குபோல் சுந்தரர் வாக்கில் எதைக் குறிப்பிடலாம்?

22. சுந்தரர் பாடல்களில் காணப்படும் சிறந்த சித்தாந்தக் கருத்துகள் யாவை?

## அவையோர் விடுத்த வினுக்கள்

ப. இராமகிருஷ்ணன்

1. சுந்தரர் இமயத்துத் 'திருப்பருப்பதம்' முதலிய தலங்களையும் இலங்கைத் தலங்களையும் மனக்கண்ணுல் கண்டு பாடியுள்ள

பாடல்களில் வரும் வருணனைகள், அத் தலங்களை நேரில் பார்த்துப் பாடப்பட்டவை போன்று ஒப்புமையுடையனவாக அமைந்துள்ளனவா? அல்லது சம்பந்தமின்றியே உள்ளனவா?

த. கோ. பரமசிவம்

2. சுந்தரர் சில தலங்களுக்குச் செல்லாமலேயே அத் தலங்கள் மீது பதிகம் பாடியுள்ளார் என்பதற்கு அதில் சான்றுகள் உள்ளனவா?

சு. அருணுசலம்

3. திருத்தொண்டத் தொகையில் சுந்தரர் அறுபது அடியார்களை மட்டும் குறிப்பிடுவதேன்?

4. சுந்தரரால் பெரிதும் விரும்பப்பெற்ற அடியவர்கள் எவரேனும் உண்டா? தயைகூர்ந்து தெரிவிக்கவும்?

5. இறைவன் சுந்தரரை ஆட்கொண்ட க்ாரணத்தால், சுந்தரர் மணக்கவிருந்த சடங்கவியின் திருமகளாகிய நங்கை நல்லாள் அடைந்த நிலை என்ன?

6. ஓடும் செம்பொன்னும் ஒக்கவே நோக்கும் பண்பினைப் பெற்றுள்ள நாயன்மார்களுள் சுந்தரர் மட்டும் பொன்னின்மேல் கொண்டுள்ள பற்று, இறைவன்மேல் கொண்டுள்ள காதலினை விட அதிகமாக உள்ளது. ஏனெனில், அவர் இறைவனிடம் அடிக்கடி பொன்னையே கேட்டுப் பெறுகிருர். இதுபற்றித் தங்கள் கருத்தென்ன?

7. அங்கங் குறைந்தழுகு தொழுநோயராய்
ஆவுரித்துத் தின்றுழலும் புலைய ரேனும்
கங்கைவாழ் சடைக்கரந்தார்க் கன்பராகில்
அவர்கண்டீர் யாம் வணங்கும் கடவுளாரே

என்னும் பாடலுக்கு ஏற்பச் சுந்தரரால் இறைவர்போல் வணங்கப்பெற்ற அடியவர்கள் எங்கேனுமுண்டா? அருள் கூர்ந்து அறிவிக்கவும்.

க. வெங்கடேசன்

8. நற்றமிழ் வல்ல ஞானசம்பந்தன்
நாவினுக் கரையன், நாளைப் போவானும்
கற்ற சூதன் நற்சாக்கியன் சிலந்தி
கண்ணப்பன் கணம்புல்லன் என்றவர்கள்
குற்றம் செய்யினும் குணமெனக் கருதும்
கொள்கை கண்டுநின் குரைகழல் அடைந்தேன்
போற்றருள் மணிக் கமலங்கள் மலரும்
பொய்கைசூழ் திருப்புன் கூரு ளானே!

என்ற சுந்தரரின் பதிகப் பாடலில், சுந்தரரின் கண்ணோட்டத்தில் ஞானசம்பந்தரும், நாவுக்கரசரும் திருநாளைப் போவாரும், மூர்க்கநாயனாரும், சாக்கிய நாயனாரும், கண்ணப்பரும் 'குற்றமுடையவர்களா' என்பதை அறிய அவா.

9. சுந்தரர் இறைவனோடு கொண்ட உறவு 'சக மார்க்கம்' என்று கூறப்படுகிறது. சக மார்க்கம் என்பதின் விளக்கம் யாது? சித்தாந்த நூல்களில் இதுபற்றிக் குறிப்பு உண்டா?

10. இறைவனால் தடுத்தாட்கொண்ட பின்னருங்கூட சுந்தரர் தன் பாடல்கள் சிலவற்றில், 'தவநெறி வேண்டும்' என்று வேண்டுவதில் சிறப்புப் பொருள் ஏதேனும் உண்டா?

11. முண்டகம் என்பதற்குத் தாங்கள் 'நீர்முள்ளி' என்று பொருள் உள்ளதாகக் கூறியுள்ளீர்கள். 'நீர்முள்ளி' என்பது ஒரு மூலிகைச் செடி. மூலிகை அகராதியில் நீர்முள்ளிக்கு முண்டகம் என்று பெயரில்லை. முண்டகம் என்பதற்கு வேறு பொருள் ஏதேனும் உண்டா?

பி. சண்முகம்

12. நாவுக்கரசர் 4ஆம் திருமுறை 4 ஆம் பதிகத்தில், 'நரியைக் குதிரை செய்வானும்' என்று கூறியுள்ளார். ஆகவே, மாணிக்கவாசகர் நாவரசருக்கு முந்தியவர் என விளங்குகின்றது. மாணிக்கவாசகர் காலம் 3 அல்லது 8ஆம் நூற்றாண்டு எனக் கூறி வருகின்றார்கள். காலத்தைக் குறித்துக் கட்டுரையாளர் கருத்தை எதிர்பார்க்கிறேன்.

13. சீரார் நாவலர்கோன் ஆரூரன் உரைத்த தமிழ்
பாரோர் ஏத்தவல்லார் பரலோகத்தில் இருப்பாரே

எனக் கூறியுள்ளமையால் தமிழ்ப் பற்று அவர்க்குளதாகத் தெரிகின்றது. கட்டுரையாளர் கருத்து யாது?

14. 7 ஆம் திருமுறை 43ஆவது பதிகத்தில், 'செட்டிநின் காதலியூர்கள்தொறும்' என வருகின்றது. இதில் குறித்துள்ள செட்டி என்பது இனப் பெயரா? தொழிலை உணர்த்தும் பெயரா? விளக்குவீர்களாக.

சி. இராமகிருட்டிணன்

15. சங்க காலத்தில் நிலவிய மக்கள் பக்தி இடைக்காலத்தில் இறைவன் பக்தியாக ஏன் பெருமாற்றம் ஏற்பட்டது?

16. சுந்தரர் செய்த கலப்புத் திருமணம் இறைவன் தலையீட்டின் விளைவா? அல்லது சுந்தரர் விரும்பியதன் விளைவா?

———

நான்காம் நாள் கருத்தரங்கு 25 - 1 - 1973

# எட்டாம் திருமுறை

[கட்டுரையாளர் திரு. செ. வேங்கடராமச் செட்டியார்]

## அவையோர் எழுப்பிய வினக்களும் ஆசிரியரின் விடைகளும்

### தமிழ்த்துறை எழுப்பிய வினக்கள்

1. திருவாசகத்தைத் திறனய்வு செய்யும் வகையில் எழுந்த செய்யுள் நூல் உண்டா?

திருவாசகத்தைத் திறனய்வு செய்யும் வகையில் எழுந்த செய்யுள் நூல் உண்டு. பழைய திருப்பெருந்துறைப் புராணம், திருவருட்பா போன்றவற்றைச் சொல்லலாம்.

2. தேவாரத்திற்கும் திருவாசகத்திற்கும் இடையே உள்ள ஒற்றுமை வேற்றுமைகள் யாவை?

திருவாசகத்திற்கும் தேவாரத்திற்கும் ஒற்றுமை சிவபெருமானேயே பரவுவது. இயற்கை வருணனேகளைப் பாடாமல் பெரும்பாலும் எளிதில் பொருள் விளங்கும் சொற்களால் அமைத்து, கேட்டாரை உருக்கும் சிறப்பினது திருவாசகம். படிப்போர் என்றும் தம் குறைகளே இறைவனிடம் சொல்லிக்கொள்ளும் வகையில் திருவாசகப் பாடல்கள் அமைந்துள்ளமை பெருஞ்சிறப்பாகும்.

3. திருவாசக ஆராய்ச்சியில் தங்களுடைய புதிய கருத்துக் கொடைகள் யாவை?

திருவாசக ஆராய்ச்சியில் யாம் கண்ட சில முடிவுகளே எம் கட்டுரையில் சொல்லியுள்ளேன். அங்குக் காண்க.

5. மணிவாசகர் வாழ்க்கையில் நடந்த அற்புதங்கள் கதைகளா? வரலாற்று நிகழ்ச்சிகளா? தங்கள் விளக்கம் யாது?

மணிவாசகர் வாழ்க்கையில் நடந்த அற்புதங்கள் யாவும் தெய்வீக அற்புதங்கள் ஆகும். இவை இக்காலத்தும் ஒரோ வழி நடக்கக் காண்கின்றேம். ஆகலின், உண்மை வரலாருகவே கொள்ளலாம் என்பது என் கருத்து.

6. திருவாசகத்தில் தேவாரம் இடம் பெறுத காரணங்கள் யாவை ?

மணிவாசகர்க்குத் கருத்தோட்டம் இறைவனை அடையவேண்டும் என்பதில் சென்ற அளவு முந்து நூல்களில் செல்லாமையே திருவாசகத்தில் தேவாரம் இடம் பெருமைக்குக் காரணமாகும். தேவாரம் இடம் பெருவிடினும் ஞானசம்பந்தரின் வரலாற்றுக் குறிப்புத் திருவாசகத்தில் உண்டு என்பர். ‘கழுமலமதனிற் காட்சி தந்தருளியும்’ என்பது சீகாழியில் சிவபிரான் ஞானசம்பந்தருக்குக் காட்சி தந்ததையே குறிக்கும் என்பர். ‘பண் சுமந்த பாடற் பரிசு படைத்தருளும்’ என்பதும் ஞானசம்பந்தர் பாடலுக்கு ஆயிரம் பரிசு கொடுத்ததனை குறிக்கும் என்பர்.

7. மூவர் பாடிய தேவாரத்தைக் காட்டிலும் சைவ உலகில் திருவாசகம் பெற்றுள்ள சிறப்புக்குக் காரணம் என்ன ?

சைவ உலகில் தேவாரத்தினும் திருவாசகம் பெற்றுள்ள சிறப்புக்குக் காரணம் நடை எளிமையும் என்பினையும் உருக்கும் அதன் இனிமையுமே ஆகும்.

8. சிவபெருமான் குறிப்பாக ஆவணி மூலத்தன்று பரிகளைப் பாண்டியனுக்கு அனுப்புவதாகக் கூறியதன் சிறப்பென்ன ? சிவபெருமான் நரிகளைப் பரிகளாக்கியது ; பிட்டுக்கு மண் சுமத்தல்? இவற்றில் அமைந்துள்ள ஆன்மீகத் தத்துவம் என்ன ?

‘நரியைப் பரியாக்குவானும் நரகரைத் தேவு செய்வானும்’ என்ற அப்பர் பாடற் பகுதி மணிவாசகர் வரலாற்றைச் சுட்டுகின்றது எனக் கொள்ளலாமா ?

பாண்டியனுக்குப் பரிகளை அனுப்புவதாகச் சிவபிரான் கூறியது வேறு நாளாக இருந்தாலும் இந்தக் கேள்வி எழுமே? இதனை அசோகவன நியாயம் என்பர்.

நரிகளைப் பரிகளாக்குதல் என்பதில் உள்ள தத்துவம், நரிகளைப் போல் கீழ்மையில் பழகும் உள்ளத்தை உயர்ந்த குதிரைகளைப் போல மேல்நோக்கிச் செல்லச் செய்யும் சிவபிரான் அருள்நோக்கத்தைக் குறிப்பதாகக் கூறுவதுண்டு. பிட்டுக்கு மண் சுமத்தல் என்பதில் உள்ள தத்துவம், முப்பத்தாறு தத்துவங்களையும் கடந்து நிற்கின்ற சிவபிரான், அன்பர் பொருட்டு எளியனாய் இறங்கி, முதல் தத்துவமாகிய மண்ணுக்கும் கீழ்ப்பட்டுக்காட்டும் குறிப்பாகக் கூறுவர்.

13. மணிவாசகர் இலக்கியத்துறையில் செய்த புரட்சிகள் ஏதேனும் உண்டா ?

மணிவாசகர் இலக்கியத்துறையில் செய்த புரட்சி உண்டு. (1) மகளிர் விளையாட்டாகவே அம்மானை, ஊசல், சாழல், தெள்ளேணம் போன்ற புதுவகையான இலக்கியங்களைச் செய்து மக்களிடையே தம் கருத்துக்களைப் பரப்பியது. (2) திருக்கோவையாரில் வரும் தலைவன் தலைவியர் பாசம் நீங்கியவர்களாக - முத்தான்மாக்களாக - அமைத்துக் காட்டியது பெரிய புரட்சியாகும். 'அவன் வாங்கிய என் பாசத்திற் காரென்று' என்பது காணலாம்.

22. திருக்கோவையாரைக் 'காமம் சான்ற ஞானப்பனுவல்' என்கிறுர் குமரகுருபரர். இதன் பொருளும் பொருத்தமும் யாவை?

'காமம் சான்ற ஞானப் பனுவல்' என்று திருக்கோவையார் புகழப்படுவது மேற்கூறிய கருத்தாலேயாம். தாம் அமைதியுற்ற சீவன் முத்த நிலையில் ஏற்படும் ஞான நட்புறவைக் காட்டும் நூல் என்பது பொருள்.

36. திருவாசகத்திற்கும் எட்டாம் சூத்திரத்திற்கும் உரிய இயைபுகள் யாவை?

சிவஞானபோதத்து எட்டாம் சூத்திரம் சிவபிரானே குருவாக வந்து ஞானம் தந்து ஆன்மாவை தன்னுட்சிக்குரியனுக்குவது பற்றிப் பேசுகின்றது. எட்டாம் திருமுறையாகிய திருவாசகம், மாணிக்க வாசகர்க்குச் சிவபிரானே குருவாக வந்து ஞானத்தை ஈந்து ஆட்கொண்ட நிலையைப் பலவிடத்தில் கூறுகின்றது. எனவே, இவ்விரண்டும் இயைபுடையவையாகும்.

## அவையோர் எழுப்பிய வினுக்கள்

11. சேக்கிழாருடைய காலத்திற்குச் சில நூற்ருண்டுகள் முன்னமேயே தோன்றி வாழ்ந்து இறைத்தொண்டு புரிந்தவர் மாணிக்கவாசகர். மாணிக்கவாசகரைப் பற்றிச் சேக்கிழார் பெரியபுராணத்தில் பாடாது சென்றதற்குக் காரணம் என்ன?

சேக்கிழார் சுந்தரமூர்த்தி சுவாமிகளின் திருத்தொண்டத் தொகையையே முதனூலாகக் கொண்டு பெரியபுராணம் பாடினுராதலின், சுந்தரமூர்த்தி நாயனுர் குறிப்பிடாத மாணிக்க வாசகரைச் சேக்கிழார் எப்படிப் பாடுவார்?

---

ஐந்தாம் நாள் கருத்தரங்கு 26 - 1 - 1973

# ஒன்பது, பதினோரும் திருமுறைகள்

[கட்டுரையாளர்: திரு. அ. ச. ஞானசம்பந்தம்]

## தமிழ்த்துறை வினாக்கள்

1. சங்க காலச் சூழல்மாறி, சமயகாலச் சூழல் தமிழகத்தில் ஏற்பட்டதற்குரிய காரணங்கள் யாவை?
2. திருமுறைகள் அனைத்தும் சைவசித்தாந்த கருத்துகளையே அடிப்படையாகக் கொண்டவையா? விதிவிலக்குகள் உண்டா?
3. சைவ சித்தாந்த சாத்திரங்கள், தேவார திருவாசகப் பாக்களின் விளைவா?
4. சைவ சித்தாந்தக் கருத்துகளுக்கு மூலம் யாண்டுள்ளது?
5. பன்னிரு திருமுறைகளுக்கும் சிவஞானபோத சூத்திரங்கட்கும் தொடர்புண்டா?
6. சோழ அரசர்கள் காளாமுகச் சைவத்தைப் போற்றியிருப்பது உண்மையானால், அவர்களால் கட்டப்பட்ட கோவில்கள் எந்தக் கலையின் அடிப்படையில் எழுந்தவை?
7. தேவார, திருவாசகங்கள் தோன்றிய பின்னர், அவை போன்ற பாடல்கள் ஒன்றரை நூற்றாண்டுக் காலம் தோன்றவில்லை? ஏன்?
8. சைவ நூல்களைப் போல வேறு சமய நூல்களில் இசைப் பாக்கள் உண்டா?
9. எவ்வகைப் பிரபந்தங்கள் எல்லாம் 11-ஆம் திருமுறையில் உள்ளன? இப் பிரபந்தங்களுக்கு முன் வழிகாட்டி உண்டா?
10. 9, 10-ஆம் திருமுறைகளில் புலவர்கள் ஆளும் அணிகளுள் தனிச்சிறப்பு உண்டா?
11. காளாமுகச் சைவத்தின் பழமை யாது? எந்தக் காலத்தில் அச்சைவம் உச்சநிலையில் இருந்தது?

12. தேவார திருவாசகங்களைப் போல இத் திருமுறைகளைப் பண்முறையில் பாடும் வழக்கம் உண்டா?

13. நாட்டு வரலாறு, மக்கள் வரலாறு முதலியவற்றிற்கு இத் திருமுறைகள் எத்துணை அளவு துணை செய்கின்றன?

14. தமிழ்நாட்டு அரசர்கள் காளாமுகர் செல்வாக்குக்கு இரையானதேன்?

15. 'இராவளர்' 'பிடாரர்' என்றால் என்ன பொருள்?

16. காளாமுகச் சமயத்தின் தோற்றம், வரலாறு யாது?

17. திருமுறைகண்ட காலம், வரலாறு பற்றிய டாக்டர் இராச மாணிக்கனர் கருத்துகள் யாவை?

18. கட்டுரையில் பக். 7 - பத்தி 2இல் தேவாரங்கள் காளாமுகத் தொடர்புடையோரால் ஏற்கப்படாமல், ஆனால், அதே நோத்தில் யாழ்ப்பாணர் முதலிய தமிழர்களால் மட்டும் போற்றப்பட்டு இசை அமைப்புடன் பாதுகாக்கப்பட்டன என்றும் நினைக்கத் தோன்றுகிறது. இக்கூற்று 'நாளும் இன்னிசையால் தமிழ் பரப்பிய ஞானசம்பந்தர்' என்ற அருள்வாக்கோடு முரண்படவில்லையா?

19. அளிக்கும், அன்புக்கும் இடையே நுண்பொருள் வேறுபாடு இல்லையா?

20. 'காபாலிக' வழிபாட்டிற்கும் 'கோளகி' வழிபாட்டிற்கும் இடையே உள்ள வேறுபாடுகள் யாவை?

21. தேவாரத் திருப்பதிகங்களை மறைத்து வைத்ததாக வழங்கும் கதையின் உட்பொருள் யாது?

---

ஆரும் நாள் கருத்தரங்கு 27 - 1 - 73

# பத்தாந் திருமுறை

## திருமந்திரம்

[கட்டுரையாளர்: ச. தண்டபாணி தேசிகர்]

### தமிழ்த்துறை விஞக்கள்

1. மந்திரம் என்ற சொல் தமிழ்ச் சொல்லா?

2. திருமந்திரத்திலேயே முதல் முதல் சைவ சித்தாந்தம் என்ற ஆட்சி உள்ளதா? அவ்வாருயின் தேவார திருவாசகங்களில் ஏன் சைவ சித்தாந்தம் என்ற குறிப்பு இல்லை?

3. திருமந்திரம் நீதிக்கருத்துகளும் சமரசக் கருத்துகளும் தத்துவக் கருத்துகளும் கலந்த ஒரு சுவையாய் இருப்பது ஏன்? இத்தகைய அமைப்புடைய வேறு நூல்கள் உண்டா?

4. திருமூலர் நெறி தேவார திருவாசக நெறியா, வேரு?

5. சித்தர் மரபு தமிழ் நாட்டில் எப்பொழுது தொடங்கி எவ்வாறு வளர்ந்தது? அம்மரபிற்கும் திருமூலர்க்கும் உரிய தொடர்புகள் யாவை?

6. ஆகம நெறி தென்னகத்திற்கே உரியது என்ற கூற்றின் வன்மை மென்மை யாவை?

7. சன்மாதிகம் என்ற சொல் முதன் முதல் திருமந்திரத்தில்தான் பயன்படுத்தப்பட்டுள்ளதா?

8. திருமந்திரம் தோன்றுவதற்குப் பின்னணியாக இருந்த இலக்கிய, சமண, வரலாற்றுச் சூழல்கள் யாவை?

9. வேதங்கள்தான் சைவ சித்தாந்தத்திற்கும் மூலம் என்ருல், சைவ சித்தாந்தத்தைத் திராவிடச் செல்வம் என்று எவ்வாறு போற்ற இயலும்?

10. ஆகம நூல்கள் தமிழ் மரபை ஒட்டி எழுந்த நூல்களா?

11. திருமந்திர நெறியில் வழி நூல்கள் தோன்றி உள்ளனவா?

12. சித்தர் உலகில் திருமூலர் பெறும் இடம் யாது?

13. திருமூலர் பாடல்களுள் சில எளிமையாகவும் சில மிடுக்கு நடையிலும் இருக்கக் காரணம் யாது?

14. திருமந்திர அமைப்புக்குத் தொல்காப்பிய அமைப்பு முன் மாதிரியாக இருந்திருக்குமா?

15. திருமந்திரத்துள் காணப்படும் கரு உற்பத்தி பற்றிய பகுதி இக்கால மருத்துவ இயலுக்கு ஏற்புடையதா?

16. திருமந்திரம் ஒருவர் இயற்றிய நூலா அல்லது பலர் பல காலத்தில் பாடிய பாடல்களின் தொகுப்பா?

17. திருமந்திரம் என்ற இந் நூலுக்குப் பெயர் வரக் காரணம் யாது?

18. தமிழாகமம் செய்த தமிழ் முனிவர்கள் யார்? யார்?

19. சித்தர் பாடல்களிலும் திருமந்திரத்திலும் பல செய்திகள் 'பூடகமாக'ச் சொல்லப்படுவதேன்?

20. வங்காளத்தில் வெகு வழக்கமாக உள்ள தந்திர நூல்களுக்கும் திருமந்திரக் கருத்துகளுக்கும் நெருங்கிய ஒற்றுமை உள்ளது என்பது ஏற்புடைத்தாகுமா?

21. திருஞானசம்பந்தர் தாம் திருவாவடுதுறையில் பலி பீடத்தின் கீழ் இருந்த திருமந்திரத்தை வெளிப்படுத்தினர் என்பர். எனவே சம்பந்தருக்கும் முற்பட்டவரா திருமூலர்?

22. 'ஐந்து கரத்தனை - யானை முகத்தனை' என்னும் திருமந்திர முதற்பாடல் இடைச் செருகலா?

23. திருமந்திரத்தைத் 'தமிழ் மூவாயிரம்' என்றும் கூறுவர். இந்நூலாசிரியரையே 'மூலன் உரைசெய்த மூவாயிர மந்திரம்' என்கிருர். ஆனுல் இப்போதுள்ள பாடல்கள் மூவாயிரத்துக்கும் மேற்பட்டு இருக்கின்றனவே?

24. மூவாயிரம் ஆண்டுகள் திருமூலர் வாழ்ந்தவர் என்பதன் உட்கோள் யாது?

---

## ஏழாம் நாள் கருத்தரங்கு 28 - 1 - 73

# பன்னிரண்டாந் திருமுறை

[கட்டுரையாளர்: டாக்டர் சுப. அண்ணமலை]

### தமிழ்த்துறை விஞக்கள்

1. சேக்கிழார், கம்பர் இருவருள் எவர் முன்னவர்?

2. ஈழத்தடிகள் எழுதிய பெரிய புராண ஆராய்ச்சியைப் பற்றித் தங்கள் கருத்து யாது?

3. திராவிட மொழிகளுள் பெரிய புராணத்தின் செல்வாக்கு யாது?

4. ஆயிரத்தில் ஒருவரும் பின்பற்றுதற்கரிய விதிவிலக்கு வாழ்க்கையினையே காப்பியப் பொருளாகச் சேக்கிழார் கொண்டதன் நோக்கம் யாது?

5. நாலாயிரத்துக்கு, 'வியாக்யானம்' ஏற்பட்டதுபோல் பன்னிரு திருமுறைகட்கும் ஏற்படாதது ஏன்?

6. பெரிய புராணத்தில் இடம்பெற்றுள்ள இயற்கையிறந்த நிகழ்ச்சிகளை மாணவர் மனங்கொள எவ்வாறு எடுத்துரைப்பது?

7. ஏனைய திருமுறைகளைப் போல இப் பெரிய புராணத்தைப் பன்னிரண்டாந் திருமுறை என்று வழங்குதல் சாலுமா?

8. இந் நூலின்கண் இடைச்செருகல் உள என்பதுபற்றித் தங்கள் கருத்தென்ன?

9. சைவ சித்தாந்த சாத்திரக் கருத்துகள் இத் திருமுறையில் எத்துணை அளவுஇடம் பெற்றுள்ளன?

10. பெரிய புராண காலத்து மகளிர், சமுகத்தில் உயர்ந்த சிறப்பிடம் பெற்றிருந்தார்களா?

11. மங்கையர்க்கரசியார் தன் கணவன் கருத்துவழிச் செல்லாது தம் குருதியில் ஊறிய சைவ சமய நெறி வழிச் சென்றூர் என்பது மகளிர் மாண்பு நெறிக்கு ஒப்புமா?

12. பெரிய புராணம் பின்னாளில் எங்தெந்த வகையில் உருமாறி மக்களிடையே வழங்கியுள்ளது?

13. பெரிய புராணத்துள் தங்கள் உள்ளங் கவர்ந்த அடியார் வரலாறு எது?

14. 'என்கடன் பணிசெய்து கிடப்பதே' என்ற அப்பர் வாக்கு போல் சேக்கிழார் வாக்கில் தங்கட்குப் பிடித்தது எது?

15. பெரிய புராணம்போல் சமய அடியார்கள் வரலாறு சாற்றும் நூல் வேறு எம் மொழியிலேனும் உண்டா?

16. பக்தி நெறியில் சைவம் சிறந்ததா? வைணவம் சிறந்ததா? சைவத்தின் பக்தி நெறியில் வைணவத்தின் செல்வாக்கு யாது? வைணவத்தின் அன்புநெறியின்—பக்தி நெறியின் செல்வாக்கு பெரிய புராணத்தில் உண்டா?

## அவையோர் எழுப்பிய வினுக்கள்

1. துறவால் வரும் தன் மறுப்பைவிட அன்பால் வருந் தன் மறுப்பே சிறந்ததெனப் பகர்ந்தீர். அக்கூற்று பற்றிய நிறை விளக்கத்தினை அருள்கூர்ந்து அறிவிக்கவும்.

2. பெரிய புராணத்தில் வரும் நாயன்மார்களுள், சுந்தரரைத் தவிர்த்து ஏனைய நாயன்மார்களுள் எவர் இறைவனுல் பெரிதும் அன்புடன் போற்றப்பட்டவர்? தயைகூர்ந்து தெரிவிக்கவும்.

3. ஆண்டவனைப் பொறுத்தமட்டில் எல்லா அடியவர்களும் அவருடைய அருள் பார்வையில் ஒன்ருகவே தென்படுகின்றனர். அப்படியிருக்கையில், சில அடியவர்களுக்கு எளிமையில் காட்சி தந்த இறைவன், பல உண்மையடியார்களுக்கு அளப்பருஞ் சொல்லொணுத் துயரங்கள் தந்து, பின்னர் அவர்களை இறுதியில் ஆட்கொள்ளுவதேன்? இதுபற்றி விளக்கங் கூறவும்.

4. பெரிய புராணத்தில் வரும் ஒருசில நிகழ்ச்சிகள் உண்மைக்கு மறுதலையாக உள்ளன. இக் கருத்துபற்றித் தங்கள் நிலை யென்ன?

5. சேக்கிழார் தலைமைக்குத் தம் நூலில் இடந்தரவில்லையெனக் கூறினீர். 'கங்கைவாழ் சடைக்கரந்தார்க்கன்பராகில் அவர் கண்டீர் யாம் வணங்கும் கடவுளாரே' எனச் சிறப்பிக்கப் பெறும் அடியவர்களைப் பற்றிப் பாடும் நூலும் ஒரு வகையில் தலைமைக்கு இடம் கொடுத்த நூல்தானே? விளக்கவும்.

———

எட்டாம் நாள் கருத்தரங்கு 29 - 1 - 1973

# சமண சமயம்

[கட்டுரையாளர் : டாக்டர் வி. பி. தேவதத்தா]

## அவையோர் எழுப்பிய வினுக்களும்—ஆசிரியரின் விடைகளும்

### தமிழ்த்துறை வினுக்கள்

1. சமணர்கள் தமிழுக்குச் செய்த தொண்டுகளுள் தலையாய தாகத் தாங்கள் எதைக் கருதுகிறீர்கள்?

'திருக்குறள்' என்னும் இணையில்லாப் பேரற நூல் அருளிச் செய்த தையே சமணர்கள் தமிழுக்குச் செய்த தொண்டுகளுள் தலையாய தாகக் கருதுகிறேன்.

2. துறவியாகிய திருத்தக்கதேவர் சீவக சிந்தாமணியை ஒரு மண நூலாகச் செய்ததன் தனி நோக்கம் யாது?

சமணர்கள் அறத்திற்கே முதலிடம் அளித்தனர். அதனுல் யாண்டும் அவர்தம் நூல்களில் அறமே பெரிதும் பேசப்பட்டது. அறம் இல்லறம், துறவறம் என இருவகைத் தாம். இல்லற நெறியில் நின்று வையகத் துள் வாழ்வாங்கு வாழ்ந்து, எத்துணை இன்பத்தைத் துய்த்தாலும் இறுதியில் வரம்பில் இன்பமாம் வீடுபேற்றினையடைய துறவற நெறி யில் நின்று இரு வினைகளைப் போக்கவேண்டும் என்பதே அவர்தம் கோட்பாடு. எனவே, பேரின்ப நிலையை அடையத் துறவற நெறியே வேண்டுமென வற்புறுத்தி - வலியுறுத்திக் கூறினர். ஆனல், பிற சம யத்தவரோ சமணர் இல்லறத்தைப் பாடவல்லாரல்லர்; துறவறத் தையே பாடவல்லார் என்று கூற முற்பட்டனர். யாண்டும் பரவி நின்ற இக் கருத்தைப் போக்கவே துறவியாகிய திருத்தக்கதேவர் சீவக சிந்தாமணியை ஒரு மண நூலாகச் செய்தனர். இல்லற நெறியினை இன்பஞ் சொட்டச்சொட்டப் பாடும் திறம்படைத்தவர்களாக இருந்தும் துறவற நெறியின் உயர்வை நன்கு உணர்ந்தவர்களாதலால் அதற்கே முதலிடம் அளித்தனர் என்ற உண்மையை நன்கு உணரலாமன்றே?

3. சமணம் செல்வாக்கிழந்த நிலையில் செல்வாக்குப் பெறுவதற் காகப் புனையப்பட்ட பெருங்காப்பியம் சீவக சிந்தாமணி என்னும் கருத்துத் தங்களுக்கு உடன்பாடா? இல்லையெனில், மறுப்புக்குக் காரணங்கள் யாவை?

சமணம் செல்வாக்கிழந்த நிலையில் செல்வாக்குப் பெறுவதற் காகப் புனையப்பட்ட பெருங்காப்பியம் சீவக சிந்தாமணி என்னும் கருத்து எனக்கு உடன்பாடன்று; பின் வந்த காப்பியங்களுக்கெல்லாம் வழிகாட்டியாய் அமைந்த சிறப்பு மிக்க இச் சீரியதோர் காப்பியம் வளமை வாய்ந்த அமைதியான ஒரு காலச் சூழ்நிலையில்தான் மலர்ந் திருக்கமுடியும். சமயப் பிணக்கும் பூசலும் தோன்றிய பின்னர் அல்லலுற்ற ஒரு சமயத்தைச் சார்ந்த புலவர் இத்தகைய காப்பியத்தை எங்ஙனம் இயற்றியிருக்க முடியும்? வாழ்க்கையினின்று முகிழ்த்து வாழ்க்கைக்கு வழிகாட்டுகின்ற இலக்கியங்கள் மலர அமைதியான சூழ் நிலை வெளிப்படுமென்பதை யாரே மறுக்கவல்லார்?

4. தமிழ் இலக்கியத்தைப் பெண்பாலர் வளர்த்துள்ளனரா?

சங்க காலத்தில் வாழ்ந்த ஔவையார், ஆதிமந்தியார், காக்கைப் பாடினியார் போன்றவர்கள் தமிழ் வளர்ச்சியில் பங்கு பெற்றனர். காரைக்கால் அம்மையார், ஆண்டாள் போன்ருேர் இடைக்காலத் தமிழ் வளர்ச்சியில் மகளிர் பெறும் இடத்தினைக் கூரு நிற்பர். இக் காலத்தில் பெரிதும் வளர்ந்து வருகின்ற நாவல், சிறுகதை ஆகிய துறைகளில் பெண்பாலருக்குப் பெரிதும் பங்குண்டு என்பதை யாவரும் அறிவா ரன்றே?

5. ஆண் கற்பைப் போற்ருததும் தமிழ்நாட்டுக் கதைகள் அல்லா ததும் ஆகிய சீவகன் கதையையும் உதயணன் கதையையும் சமணர்கள் பெருங்காப்பியப் பொருளாகப் போற்றியதன் உட்கோள் யாது?

தமிழகத்தின் இலக்கிய வரலாற்று ஏடுகளை நோக்கும்போது ஒருத்திக்கு ஒருவன் என்ற கொள்கை யாண்டும் நின்று நிலவுவதையும் ஒருவனுக்கு ஒருத்தியென்ற கொள்கை நிலவாமையையும் நன்கு உணரலாம். ஆடவர் பல்வேறு காரணங்களை முன்னிட்டுப் பலமகளிரை மணக்கும் பழக்கம் அக்காலத்தில் இருந்துள்ளது. அரச குடியில் பிறந்தவர்களோ நாட்டிற்காக மக்கள் நலனுக்காகப் பலரைத் திருமணம் செய்து கொண்டனர். எனவே இம்முறை அக்காலச் சூழ் நிலையில் தவருகக் கருதப்படவில்லை.

கம்பரும் வில்லிபுத்தூராரும் வடநாட்டில் நடந்ததாகக் கருதப்படு கின்ற நிகழ்ச்சிகளைத்தானே காப்பியப் பொருளாகப் போற்றி யுள்ளனர். வடநாடு, தென்னுடு என்ற வேற்றுமை காணுது கூற வேண்டிய கருத்துக்களின் பொதுமையையே நோக்கினர் புலவர் பெருமக்கள்.

6. டாக்டர் சாமிநாதையரைப் போல வைதிக நெறி வழிவந்த அந்தணர் முதலியோரும் சமணத் தமிழ் இலக்கியங்களைப் பதிப்பித்தும் பாராட்டியும் போற்றியுள்ளனர். அவ்வாறு

பிற சமய இலக்கியங்களைப் பதிப்பித்தும் பாராட்டியும் போற்றிய சமணத் தமிழ்ப் பெரியார்கள் யார்?

தமிழகத்தில் அச்சகப்பணி தோன்றிய காலத்தில் டாக்டர் சாமி நாதையரைப் போன்ற அறிஞர்கள் தமிழ் மொழியின்பால் கொண்ட ஆர்வத்தால் அம்மொழியின் ஆக்கத்திற்கும் சிறப்பிற்கும் பெருமைக்கும் உரிய நூல்களைத் தேர்ந்தெடுத்து வெளியிட்டனர். அத்தகைய நூல்கள் பெரும்பாலும் ஜைன அறவோர்களின் நூல்களாகவே இருந்தன. அக்கால ஜைன மக்கள் தங்கள் இல்லங்களிலுள்ள ஓலைச் சுவடிகளை அள்ளிக்கொடுத்தனரேயன்றி அச்சிட்டு வெளியிடும் சூழ்நிலையிலில்லை. 1925-ஆம் ஆண்டிற்குப் பின்னரே சமண சமயத்தவர் சிலர் தங்கள் சமய நூல்களை வெளியிட்டனர். பேராசிரியர் அ. சக்கர வர்த்தி நைனர் அவர்கள் மேருமந்திர புராணம், நீலகேசி ஆகிய இரண்டு நூல்களை வெளியிட்டுள்ளார். 1925-ஆம் ஆண்டுக்கு முன்னர் வாழ்ந்த ஜைனப்பெருமக்கள் தங்கள் சமய நூல்களையே வெளியிடும் சூழ்நிலையில் இல்லையென்றால் மற்ற நூல்களை எங்ஙனம் அச்சிட முடியும்?

7. சைவ சித்தாந்த மகாசமாஜம் சமணத் தமிழ்ப் பெருங்காப்பியமாகிய சீவக சிந்தாமணியை அழகுறப் பதிப்பித்துள்ளது. அவ்வாறு பிற சமயத் தமிழ் இலக்கியம் எதையேனும் சமண சமய அமைப்புகள் பதிப்பித்துப் பாராட்டியுள்ளனவா?

சைவ சித்தாந்த மகாசமாஜத்தார் சீவக சிந்தாமணியை அழகுறப் பதிப்பித்துள்ளது பாராட்டுதலுக்குரியதே. ஆனால் அந்நூலின் பதிப்புரையில் சேக்கிழார் சிந்தாமணியைப் பழிப்பதாகக் கூறும் பிற்காலக் கற்பனைக் கதையின் பாடல்களை வெளியிட்டதற்கு வருந்தாமலிக்க இயலவில்லை. எங்கள் சமய நூல்களையே வெளியிட இயலாத நாங்கள் பிற சமய நூல்களை எங்ஙனம் வெளியிட இயலும்?

8. சமணர்கள் தமிழுக்குச் செய்த தொண்டில் இலக்கியத் தொண்டு சிறப்புடையதா? இலக்கணத் தொண்டு சிறப்புடையதா? ஏன்?

சமணர்கள் தமிழுக்குச் செய்த தொண்டில் இலக்கியத் தொண்டு சிறப்புடையதா? இலக்கணத் தொண்டு சிறப்புடையதா என்று வினவுவது இரு கண்களுள் எது சிறந்தது என்று வினவுவதை ஒக்கும். அந்த அளவுக்கு இரண்டிற்கும் தொண்டு புரிந்துள்ளனர்.

இலக்கியம் படைப்பதைக் காட்டிலும் இலக்கணம் படைத்தலே அருமைப்பாடு உடைத்தாம். இலக்கியங்கள் பல பின்னர் தோன்றியுள்ளன. ஆனால் அவர்தம் இலக்கணங்களே இன்றுவரை நின்று நிலவுகின்றன. எனவே அவர்கள் ஆற்றிய இலக்கியத் தொண்டினைக் காட்டிலும் இலக்கணத் தொண்டே சிறப்புற்று விளங்குகிறது எனலாம்.

9. சிலப்பதிகாரக் கலைமக்களாகிய கோவலனும் மாதவியும் சமண சமயத்தவரா? அவ்வாருயின் மாதவியும் மணிமேகலையும் பௌத்த நெறியைத் தழுவுவானேன்?

கோவலன் சமண சமயத்தைச் சார்ந்தவன் என்ற கருத்தை இளங்கோவடிகள் ஆங்காங்கே கூறிச் செல்கிருர். ஆனல் மாதவியின் சமயம்பற்றி யாண்டும் எதுவும் அறிய இயலவில்லை. அக்காலத்தில் வாழ்ந்த மக்கள் அவரவர் விரும்பிய சமயத்தைப் பின்பற்றும் உரிமை பெற்றிருந்தனர். எனவே மாதவியும் மணிமேகலையும் பௌத்த நெறியைத் தழுவியிருக்கலாம். இது அக்காலச் சமய நிலையை நன்கு எடுத்துக் காட்டுகிறது.

10. வைதீக நெறியை எதிர்க்க எழுந்த சமணமும் பௌத்தமும் தங்களுக்குள் போரிட்டுப் பொது எதிரியை வெற்றிபெறச் செய்தன என்னும் கருத்து உடன்பாடா? இல்லையெனில் ஏன்?

வைதீக நெறியை எதிர்க்க எழுந்த சமணமும் பௌத்தமும் தங்களுக்குள் போரிட்டுப் பொது எதிரியை வெற்றி பெறச் செய்தன என்னும் கருத்து ஓரளவு உண்மையாக இருக்கலாம். ஆனல் அது மட்டும் காரணமன்று; அரசின் செல்வாக்கை வைதீக நெறி பெற்றதே அதன் வெற்றிக்குக் காரணமாகும்.

11. சைவ வைணவ நூல்களுள் சமண பௌத்த மதத்தைக் கண்டித்திருக்கும் பகுதிகளைப் போன்று சைவ வைணவ மதங்களைக் கண்டித்துள்ள சமண இலக்கியப் பகுதிகள் யாவை?

சைவ வைணவ நூல்களுள் சமண பௌத்த மதத்தைக் கண்டித் திருக்கும் பகுதிகளைப் போன்று சைவ வைணவ மதங்களை மிகத் தீவிர மாகக் கண்டித்திருக்கும் பகுதிகளே இல்லையெனலாம். அவர்கள் மதங்களை—கொள்கைகளைக் கண்டித்திருக்கும் பகுதிகளுள் சில சீவக சிந்தாமணியில்—

நாமகள் இலம்பகத்தில் நிமித்திகன் என்னும் அமைச்சன் மிகுந்த இன்பத்தால் பழியும் பாவமுமே உண்டாகுமென்று

" கைம்மலர்க் காந்தள் வேலிக் கணமலை யரையன் மங்கை
மைம்மலர்க் கோதை பாகங் கொண்டதே மறுவ தாகக்
கொய்ம்மலர்க் கொன்றை மாலைக் குளிர்மதிக் கண்ணி யாற்குப்
பெய்ம்மலர் அலங்கன் மார்ப பெரும்பழி யாயிற் றன்றே"

" நீனிற வண்ண னன்று நெடுந்துகில் கவர்ந்து தம்முன்
பானிற வண்ண னேக்கிற் பழியுடைத் தென்று கண்டாய்
வேனிறத் தானை வேந்தே விரிபுனற் றெழுனை யாற்றுட்
கோனிற வளையி னர்க்குக் குருந்தவ னெசித்த தென்ருன்"

என்று மன்னன் சச்சந்தனுக்கு அறிவுரை கூறும்போது எடுத்துக்காட்டுகிறான். சித்திரகூடத்திலுள்ள முனிவர்களுக்கு அறவுரை வழங்கும் சிவகன்

வீடு வேண்டிவி ழுச்சடை நீட்டன்மெய்ம்
மூடு கூறையின் மூடுதல் வெண்டலை
ஓடு கோடலு டுத்தலென் றின்னவை
பீடி லாப்பிற விக்குவித் தென்பவே

என்று கூறுவதோடு

'தூங்குறிக் கிடந்து காயும் பழங்களுந் துய்ப்ப நில்லா
பாங்கலா வினைக ளென்றார் பகவன ரெங்கட் கென்னின்
ஓங்குநீண் மரத்திற் றூங்கு மொண்சிறை யொடுங்கல் வாவல்,
பாங்கரிற் பழங்க டுய்ப்பப் பழவினை பரியு மன்றே'

என்றும் கூறும் பகுதிகள் மேற்கூறிய கருத்தை விளக்கா நிற்கும்.

12. சங்ககாலப் புலவர்களுள் சமண சமயத்தவர்கள் யார்?

சங்ககாலப் புலவர்கள் பெயர்ப்பட்டியலைத் தொகுத்து ஆராய்வார்க்கு ஒருண்மை தெற்றெனப் புலனாகும். அப்பெயர்களுள் பெரும்பாலன சமணப் பெயர்களே. சைவப் பெயர்களோ வைணவப் பெயர்களோ மிகுதியாகக் காணப்படவில்லை. எனவே சமணசமயப் புலவரே சங்ககாலப் புலவருள் பெரும்பான்மையர் எனக் கொள்வதே நேர்மையும் நடுவு நிலையுமாம். குறிப்பாக உலோச்சனார், பூங்குன்றனார், அகம்பன், அறிவுடைநம்பி, ஆதிமந்தி, பதுமனார், காப்பியஞ்சேந்தனார் போன்ற பலராவர்.

13. சைவ வைணவ பக்திப் பாடல்கள் — அதாவது பதிகங்கள் போல சமணசமயத்தில் உண்டா? சமணப் பெரியார்கள் அத்துறையில் எத்துணையளவு பணிபுரிந்துள்ளனர்?

தோத்திரத் திரட்டு, திருப்புகழ், திருவெம்பாவை, திருப்பாமாலை, திருநூற்றந்தாதி, திருக்கலம்பகம், அப்பாண்டைநாதர் உலா, ஆதிநாதர் பிள்ளைத்தமிழ், திருமேற்றிசை யந்தாதி முதலியனவாம்.

14. திருவள்ளுவர் சமணரல்லர் என்பார் கூறும் காரணங்கள் வலிவுடையனவா? அவற்றைக் கட்டுரையாளர் ஏற்றுக் கொள்ளுகிறாரா?

திருவள்ளுவர் சமணரல்லர் என்பார் கூறும் காரணங்கள் வலிவுடையனவல்ல; அவற்றை யான் ஏற்றுக் கொள்ளவில்லை.

15. நீதி நூல்களில் சமண சமய உண்மைகள் எத்துணை அளவுக்கு இடம் பெற்றுள?

பெருமளவுக்கு இடம் பெற்றுள. சமயக் காழ்ப்பின்றி நோக்கு வார்க்கு அவையெல்லாம் பொதுவான மனித சமுதாயத்திற்குரிய அறங்களாகவும் விளங்கக் காணலாம்.

16. 'நீதி இலக்கியப் படைப்பாளர் பலர் சமணர்' — இதனுல் வெளிப்படும் உண்மை யாது?

'நிலத்தில் கிடந்தமை கால் காட்டும்'. நீதி இலக்கியப் படைப் பாளர் பலர் சமணர் என்பது அவர்தம் அறவுள்ளத்தையும் ஒழுக்கத் தையும் புலப்படுத்தா நிற்கும்.

17. மரபு உவமைகளையே போற்றுகின்றனரா? அல்லது அவர் களே அமைத்துக்கொண்ட தனிமரபுகள் எவையேனும் உள்ளனவா?

ஒவ்வொரு மதத்திற்கும் தனித்தனி மரபுண்டு; அவ்வம்மதத் தத்து வங்களை வல்லார்வாய்க் கேட்டறிந்தவர்களே தனிமரபை ஆய்ந்துணர வல்லவர்கள். பிறர்க்கு அனைத்து மரபுகளும் பல்வகை மரஞ்செடி கொடிகளும் விலங்குகளும் விரவிய காடாகவே காட்சியளிக்கும்.

ஆங்காங்கே மரபு உவமைகளையும் போற்றுகின்ற தன்மையைக் காணலாம்.

18. 'அங்கம் பயந்தோன்' என்பதில் கவுந்தியடிகள் எடுத்துக் காட்டும் அங்காகமம் என்பதுயாது?

முதல் தீர்த்தங்கரர் பகவான் விருஷபதேவர் அருளிய திருவாய் மொழியை அங்காகமம் என்றும் பூர்வாகமம் என்றும் இருவகையாகப் பிரிப்பர். இந்த அங்காகமத்தையே கவுந்தியடிகள் எடுத்துக்காட்டு கிருர்.

19. சங்கத் தொகை நூல்களுள் சமணப் புலவர்கள் பாடல்கள் மிகமிகக் குறைவாக இடம்பெற நேர்ந்தது எதனுல்?

சங்க காலப் புலவர்களுள் சமணப் புலவர்கள் யார் எனத் திட்ட மாக அறிந்து கொள்ளுவதன் முன் அவர்கள் பாடல்கள் மிகமிகக் குறை வாக இடம்பெற நேர்ந்தது என்று எப்படிக் கூறமுடியும்?

20. சமண சமய இலக்கியங்களில் சைவ வைணவ சமயக் கொள்கைகளின் செல்வாக்கு இடம் பெற்றுள்ளனவா?

சமண சமய இலக்கியங்களில் உவமை வாயிலாகவும் எடுத்துக் காட்டுகள் வாயிலாகவும் சைவ வைணவக் கடவுளர் இடம் பெறு கிருர்கள். ஆனுல் அச்சமயக் கொள்கைளின் செல்வாக்கு இடம்பெற வில்லையென்றே கூறலாம்.

21. சமண சமயத்தின் தோற்றம் தமிழகத்திற்கு வெளியேதான் —அதனால் அது தமிழர் சமயம் அன்று என்ற கருத்துக்குத் தாங்கள் கூறும் அமைதி யாது?

சமண சமயத்தின் தோற்றம் தமிழகத்திற்கு வெளியேதான் என்ற கருத்து முடிந்த முடிபா? திட்டமாக அறிந்து கொண்ட பின்னரே விடை கூறுதல் நன்றாம்.

22. களப்பிரர்கள் யார்? அவர்கள் காலம் இருண்ட காலம் ஆவானேன்?

களப்பிரர்கள் யாரென்பதை வரலாற்றாசிரியர்களே கூற வேண்டும். அவர்களைப் பற்றிய செய்திகளைத் திட்டமாக அறிய இயலவில்லை. கி. பி. மூன்றாம் நூற்றாண்டில் சோழ நாட்டையும் களப்பிரர்கள் ஆண்டார்கள் என்பர். களப்பிரர்கள் பாலிமொழியை ஆதரித்தனர். எனவே தமிழ்மொழியில் பெருமளவிலும் சிறப்பான முறையிலும் நூல்கள் தோன்றுவதற்கு இல்லாமற் போய்விட்டன. எனவே அவர்கள் காலம் இருண்ட காலம் என்பர். ஆனால் அற நூல்கள் பல, அவர்கள் காலத்தே தோன்றின என்பதை நாம் எண்ணிப் பார்த்தல் நன்றாம்.

23. சமண சமயத்தில் பெண்களுக்கு வீடுபேறு இல்லை என்ற கருத்துக்குத் தாங்கள் தரும் விளக்கம் யாது?

சமண சமயக் கொள்கைப்படி பெண்களுக்கு (பெண் பிறவிக்கு) வீடுபேறு இல்லை என்பது உண்மையே. துறவறநெறியில் நின்று எல்லாவற்றையும் அறவே துறந்து இருவினைகளையும் நீக்கினால்தான் வீடுபேற்றையடைய முடியும். இது சமணசமய நம்பிக்கை. இயற்கை யிலேயே மென்மை வாய்ந்த மகளிர்க்கு இந்நிலை அரிதாம். தவிர முற்றிலும் — அறவே துறந்து செல்லவும் அவர்களால் இயலாது. எனவே பெண்பிறவியில் வீடுபேறு மகளிர்க்கு இல்லையென்று பேசப் படுகிறது. நல்வினையாற்றின் தேவர்களுள் உயர்ந்த தேவனாகவும் அவர்களால் தோன்ற முடியும். இறுதியில் ஆண் பிறவியெடுத்து, இருவினைகளைப் போக்கிய பின்னரே வீடு பேற்றையடைய இயலும்.

24. சமணம் தமிழ்நாட்டில் பெருஞ்செல்வாக்கிழந்தமைக்குக் காரணங்கள் யாவை?

சமணம் தமிழ்நாட்டில் பெருஞ் செல்வாக்கிழந்தமைக்குக் காரணங்கள் பலவாயினும் அரசின் ஆதரவை இழந்தமையே தலையாய தும் முதன்மையானதுமாம். எந்தச் சமயமும் அரசின் ஆதரவின்றி வளரவோ வாழவோ இயலாது. அரசின் செல்வாக்கையிழந்த சமணம் எல்லையற்ற தொல்லைகளைப்பட்டது. அதனால் மனம்மாறி மதம் மாறினர் பலர். பக்தி நெறி பரவியதும் ஒரு காரணமாக அமைந்தது.

25. வைதிக சமயத்தார் சித்திரிக்கும் இந்திரனும் சமணசமயத் தார் கூறும் இந்திரனும் ஒருவரா?

இருவரும் ஒருவரல்லர்.

வைதீக சமயத்தார் சித்திரிக்கும் இந்திரனிடத்துப் பல்வேறு குறைகள் காணப்படுவதை அச் சமய நூல்களைப் பயில்வோர் நன்குணர்வர். ஆனல் சமண சமயத்தில் கூறப்படும் இந்திரனே பேரறிவாளனுக - நற்பண்பு நிறைந்தவனுக - நற்பணியாற்றுபவனுகக் காட்டப்படுகிருன். கேவலஞானமெனும் முழுதுணர் ஞானத்தைப் பெற்ற இறைவனை வணங்கிப் போற்றும் பேறு பெற்றவன்.

வினைகளை வென்று விளங்கிய இறைவனின் கேவலஞானப் பேரொளியைக் கண்டு களிக்கும் இந்திரன் மகிழ்ச்சி மேலீட்டால் பகவானைக் காண இருகண்கள் போதாவென வெண்ணுகிருன். எண்ணிய எண்ணியவாறு எய்தும் தனக்குரிய 'வைக்கிரம சரீரத்தின்' (உருவை மாற்றிக் கொள்ளும் ஆற்றல்) ஆற்றலால் இந்திரன் உடலெங்கும் கண்களை உண்டாக்கிக் கொண்டு பகவானைக் கண்டு போற்றி மகிழ்கிருன். இதனுல் ஆயிரங்கண்ணன் என வழங்கப்பட்டான். இப்படிப்பட்ட பெறற்கரிய பேறு பெற்றவனுகக் காட்டுகிறது சமண சமயம்.

26. தங்கள் டாக்டர் பட்ட ஆய்வாகிய சூளாமணி ஆராய்ச்சியில் தாங்கள் கண்ட உண்மைகள் யாவை?

சூளாமணி ஐஞ்சிறு காப்பியப் பிரிவினுள் வைத்து எண்ணப்பட்டாலும் பெருங்காப்பியப் பண்புகளெல்லாம் விரவி வரப்பெற்ற ஒரு நூலாகும். எனவே அதையொரு பெருங்காப்பிய மெனவே கூறலாம்.

காப்பியத் தலைவன் பயாபதியா? திவிட்டனு? என்ற ஐயம் ஒரு சிலருக்கு உண்டாகிறது. ஆசிரியரின் அடியொற்றிச் சென்று உண்மையை ஆய்வோமேயானுல் திவிட்டனே காப்பியத் தலைவன் என்பதை நன்குணரலாம்.

27. சைவர்களினும் சமணர்கள் நீதி நூல்களிலும், இலக்கணத்திலும் நிகண்டுகளிலும் அதிகக் கவனம் செலுத்தியது ஏன்?

வாழ்க்கை முறையாக ஒழுக்கம் நிறைந்ததாக அமைய வேண்டுமெனக் கூற விழைந்த உள்ளங்கள் அறநூல்களை யாத்துத் தந்தன. வாழ்க்கையினின்று மலர்கின்ற இலக்கியங்கள் ஒரு வரன்முறையோடு வளர்தல் நன்றென உணர்ந்த அவர்கள் இலக்கணத்திலும் நிகண்டுகளிலும் அதிகக் கவனம் செலுத்தியிருக்கலாம். சமய வளர்ச்சிக்கு இலக்கியங்கள் பயன்பட மொழிவளர்ச்சிக்கு இலக்கணங்களும் நிகண்டுகளும் பயன்பட்டன.

## அவையோர் எழுப்பிய வினுக்கள்

**செல்வன், சு. அருணுசலம்,**

1. திருவள்ளுவர் சமணர் என்று சில பல அறிஞர்கள் கூறிய தாகக் கூறி, நீங்களும் அக்கருத்தை ஏற்றுக்கொள்வதுபோல மறைமுகமாக உணர்த்தி, பின்னர் காலந்தான் இக் கருத்துக் குப் பதிலளிக்க வேண்டும் என்று செப்பினீர். அப்படித் திரு வள்ளுவர் சமணர் என்ற கருத்து தங்களுக்கு ஏற்புடைய தாயின் அவர் எவ்வழியில் சமணர் என்பதற்குரிய அடிப் படைக் காரணங்களை விளக்கும்படித் தங்களைப் பணிவன் புடன் விழைகிறேன்.

குறளாசிரியர் சமணர் என்பதை அவர்தம் குறட்பாக்களை விருப்பு வெறுப்பின்றி ஆய்வோர் நன்கு உணர்வர்.

'அகர முதல எழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே உலகு'

என்ற குறட்பா ஒன்றே அவர் சமணர் என்பதற்குப் போதும்.

ஆதிபகவன் சமணர்தம் முதல் தீர்த்தங்கரர்; பகவான் விருஷப தேவரைக் குறிப்பதாகும். அதனை மறைக்க எத்தனையெத்தனை புனைந் துரைகள் !

சமணர்தம் அடிப்படை உயிர்க் கொள்கையாம் கொல்லாமையை,

'நல்லாறு எனப்படுவது யாதெனின் யாதொன்றும்
கொல்லாமை சூழும் நெறி' எனவும்,

'ஒன்ருக நல்லது கொல்லாமை' எனவும் பாராட்டிப் பேசுவதை யும்; இல்லறத்தின் சிறப்பை,

'வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையும்
தெய்வத்துள் வைக்கப் படும்' என்றும்,

துறவற நெறியின் தன்மையை,

'யான்எனது என்னும் செருக்கறுப்பான் வானேர்க்கும்
உயர்ந்த உலகம் புகும்'

என்று கூறுவதின் மூலமும் அவர் சமணர் என்பதை நன்கு உணரலா மன்றே ?

2. சமணர்களுடைய அருந்தொண்டு சமண மத வளர்ச்சிக்குப் பெரிதும் பயன்பட்டதா ? அன்றித் தமிழ் வளர்ச்சிக்குப் பெரி தும் பயன்பட்டதா ? விளக்கவும்.

சமணர்களுடைய அருந்தொண்டு சமண மத வளர்ச்சிக்குப் பெரிதும் பயன்பட்டது என்று கூறுவதைக் காட்டிலும் தமிழ் வளர்ச்சிக்குப் பெரிதும் பயன்பட்டது என்று கூறலே மிகப் பொருத்தமாகும். இன்றும் அந் நூல்கள் நின்று நிலவி பின்னேயோர்க்கு வழிகாட்டும் தன்மையனவாய் இலங்குவதையும் அச் சமய மக்கள் அருகிக் காணப்படுவதையும் எண்ணிப் பார்க்கும்போது மேற்கூறிய கருத்தின் உண்மை புலனுகும்.

**திரு. தி. கோவிந்தராசு**

1. சமணர்கள் செந்தமிழை வளர்த்தார்கள் என்பது இன்பம் தரக்கூடிய ஓர் உண்மை. ஆனுல் அவர்கள் இயற்றி அளித்த அந்நூல்கள், சங்க காலத்தில் சிங்க நோக்குடன் நிகழ்ந்த அருங்கலைகளில் ஒரு தேக்கத்தை ஏற்படுத்தியது என்று சிலர் கூறுகிருர்கள். இன்னும் மேலே சிலர் கலைகளை அவர்கள் அழித்தார்கள் என்பர். பாடகம் சாராமை போன்ற பாடல்களை அவர்கள் சான்று கூறுவர். இக்கருத்து பற்றித் தங்கள் கருத்து என்ன என்பதைத் தெரிவிக்க வேண்டுகிறேன்.

சமணர்கள் அருங்கலைகள் பலவற்றின் வளர்ச்சிக்குத் தடையாய் அமைந்தார்கள் என்ற கொள்கையே பரவியுள்ளது. ஆனுல் நடுவு நிலையோடு ஆராய்வோர்க்கு இக் கூற்று உண்மையன்று என்பது வெள்ளிடை மலையென விளங்கும். சமணர்களால் நாடக நூல்களும் இசை நூல்களும் இயற்றப்பட்டன. அந் நூல்களெல்லாம் இன்று கிடைத்திருப்பின் சமணர் இக் குற்றச்சாட்டுக்கு ஆளாகியிருக்க மாட்டார்கள். ஆனுல் அவர்கள் செய்த தவக்குறைவால் அவையெல்லாம் கிடைக்கப் பெற்றிலம்.

சிலப்பதிகாரத்தில் இசையும் நடனமும் பேசப்படுவதுபோல் வேறு எந்நூலில் பேசப்படுகின்றன? அரங்கேற்றுக்காதையொன்றே சாலும். சிந்தாமணியில் ஒளிரும் சீவகனும் காந்தருவதத்தையும் பெருங்கதையில் பேசப்படும் உதயணனும் வாசவதத்தையும் வீணைச் செல்வர்களாக - இசையில் வல்லவர்களாகக் காட்டப்படுகிருர்களே, ஏன்? மற்ற கலைகளை வளர்ப்பதிலும் இவர்கள் எந்தவிதத்திலும் பின் தங்கிவிடவில்லை யென்பதைத் தமிழக வரலாற்றை ஆராய்வோர் நன்கு உணரலாம். அப்படியிருக்க, அருங்கலைகளில் ஒரு தேக்கத்தை ஏற்படுத்தினர் என்றும் கலைகளை அவர்கள் அழித்தார்கள் என்றும் கூறுவது உண்மைக்குப் புறம்பானச் செய்தியாகும். சமயக் காழ்ப்பினுல் கூறப்படும் குற்றச்சாட்டேயாம்.

**திரு. வே. கிருஷ்ணசாமி**

1. தமிழில் மணிப்பிரவாள நடை என்பது குறித்துத் தங்கள் கருத்து யாது?

2. ஸ்ரீ புராணம் ஆசிரியர் மணிப்பிரவாள நடையில் சிறந்தவர் என்று குறிப்பிட்டதிலிருந்து மணிப்பிரவாள நடை தமிழ் வளர்ச்சிக்குப் பெரிதும் உதவியது என்பது தங்கள் கருத்தா ?

3. அப்படியாயின் மணிப்பிரவாள நடையின் மாண்பு குறித்து விளக்குவீர்களா ?

உரை நடை நூல்கள் தமிழில் அருகியிருந்த காலத்தில் மணிப்பிரவாள நடையில் உரைநடை தோன்றியது. தமிழ் வளர்ச்சிக்குப் பெரிதும் உதவியது என்று கூறவியலாவிட்டாலும் உரைநடை வளர்ச்சியில் அதற்குத் தனியிடம் உண்டு என்பதை மறுக்க இயலுமா ?

திரு. மாரிமுத்து

1. தர்மம், அதர்மம் என்பவற்றை புண்ணிய பாவங்களாக மாதவ சிவஞானயோகிகள் கூறும் கருத்துச் சமணப் பார்வையில் பொருந்துமா ?

உலகத்தில் உள்ள பொருள்களெல்லாம் உயிருள்ளவை உயிரில்லாதவை என இருவகைப் பெரும் பிரிவினுள் அடங்கும். உயிர்ப்பொருளுக்கு ஆன்மா என்று பெயர். உயிரில்லாத பொருள்கள் புத்கலம், தருமம், அதருமம், ஆகாசம், காலம் என ஐந்து வகைப்படும். தருமம் என்பது ஜீவபுத்கலங்களின் அசைவுக்குத் துணைக் காரணமாக உள்ள ஒரு தனிப் பொருளாகும். அதருமம் என்பது ஜீவபுத்கலங்கள் அசைவற்று இருப்பதற்குத் துணைக் காரணமாக உள்ள ஒரு தனிப் பொருளாகும்.

திரு. க. வேங்கடேசன்,

1. சமணப் புலவர்கள் 'கடவுள் வாழ்த்து'க் கூறும்போதெல்லாம் அருகதேவனைப் போற்றும்போது அசோக மரத்தினையும் இணைத்தே போற்றுகின்றார்கள். அசோக மரத்திற்குத் தனிச்சிறப்பு ஏதேனும் உண்டா ?

அருகப் பெருமான் அசோக மரத்தின் நிழலில் தவம் புரிந்தமையால் அசோக மரத்தைச் சின்னமாகக் கூறப்பட்டுள்ளது. அத்துடன் அறமுரைப்பதில் சோகமின்றி ஆர்வத்துடன் விளங்குவதால் அசோகன் என்ற சிறப்பையும் காட்டவே அச்சின்னம் புனிதமானதாகக் காட்டப்பட்டுள்ளது.

2. அணுவிரதக் கொள்கையை இன்றைய சமணர்கள் பழமை மாறாது பின்பற்றுகின்றார்களா ? பின்பற்ற முடியுமா ?

அணுவிரதக் கொள்கையை இன்றைய சமணர்கள் அனைவரும் பழமைமாறாது பின்பற்றுகின்றார்கள் என்று கூற இயலாது ; ஆயினும்

ஒரு சிலர் இன்றும் பின்பற்றுகிறார்கள் என்று கூறின் அது பொய் யுரையன்று; பொருளுரையாம். பின்பற்ற முடியுமா என்றால் நிச்சயம் முடியும். முடியாதது எது?

3. சைவர்கள் கூறும் ஆன்மா, வீடுபேறு, பிறவி ஆகியவற்றின் கொள்கைக்கும் ஜைனர்கள் கூறும் ஆன்மா, வீடுபேறு, பிறவி ஆகியவற்றிற்கும் உள்ள வேறுபாடுகள் என்ன?

சைவம் இவ்வுலகமும் உயிர்களும் கடவுளால் படைக்கப்பட்டவை என்ற கொள்கையை உடையது. இவ்வுலகம் எவராலும் படைக்கப் பட்டதில்லையென்பது ஜைனத்தின் கொள்கையாகும்.

ஆன்மா அழிவில்லாதது. ஒவ்வொரு ஆன்மாவும் அதனதன் வினைக்கேற்பப் பிறவி யெடுக்கிறது. ஆன்மா எடுத்துள்ள உடலில் முழுமையும் பரவியிருக்கிறது என்பது ஜைனக் கொள்கை.

சிவபெருமான் அருளைப்பெற்று அவன் திருவடிகளைச் சேருவது என்பதே வீடுபேறு எனச் சைவம் கருதுகிறது. ஜைனம் அவ்வாறின்றி ஒவ்வொரு ஆன்மாவும் கடுந்தவம் புரிந்து வினைகளை வென்று வீடுபே றடைவது என்று கூறும். அவ்வீடு பேற்றை வானோர்க்கும் உயர்ந்த உலகம் என்று கூறுவர் ஜைன சமயத்தார்.

ஒன்பதாம் நாள் கருத்தரங்கு 30-1-1973

# பௌத்த சமயம்

[கட்டுரையாளர்: டாக்டர் சோ. ந. கந்தசாமி]

## அவையோர் எழுப்பிய வினாக்களும் ஆசிரியரின் விடைகளும்

### தமிழ்த்துறை வினாக்கள்

1. பௌத்த சமயம் இந்தியாவிலும் தமிழகத்திலும் வேரூன்றாமல் போனதற்குக் காரணங்கள் யாவை?

புத்தர் போதித்த பொன்மொழிகள் மறக்கப்பட்டு, சடங்குகளும் மூடநம்பிக்கைகளும் பிற்காலப் பௌத்தத்தில் நுழைந்துவிட்டன. இந்து தெய்வங்கள் பலவும் இந்துமதக் கோட்பாடுகளும் பௌத்தத்தில் புகுத்தப்பட்டன: புத்தரைத் திருமாலின் அவதாரமாகக் கருதும் மரபு தோன்றியது. பூர்வமீமாம்ச விற்பன்னர் குமாரிலப் பட்டரும் உத்தரமீமாம்சமாகிய வேதாந்த விற்பன்னர் சங்கரரும் நாடு முழுதும் பயணஞ்செய்து பௌத்தத்தைப் பொருது வாகை சூடினர். நாகார்ச்சுனரின் சூனிய வாதத்தினைத் தழுவியே சங்கரர் மாயாவாதத்தை அமைத்துக்கொண்டனர்.

பீகார், வங்காளம் ஆகிய பௌத்த மாநிலங்களில் கி. பி. 12ஆம் நூற்றாண்டில் குத்புதீன் ஆணையில் சென்ற முகம்மதியப்படை பௌத்த விகாரங்களைச் சூறையாடிக் காசி, சாரநாத் முதலிய பௌத்த கேந்திரங்களில் விளங்கிய நூல் நிலையங்களை அழித்தது. ஒரிசா மாநிலத்திலும் இசுலாமிய ஆக்கிரமிப்பு பௌத்தத்தின் அழிவிற்குக் காரணமாயிற்று. பூரி சகந்நாதர் ஆலயம் புத்தவிகாரமே என்பர் சர். சார்லஸ் இலியட் (Hinduism and Buddhism Vol. II, p. 144). தமிழகத்தில் ஞானசம்பந்தர், திருமங்கைமன்னன், மாணிக்கவாசகர் போன்ற அருளாளர்களின் இயக்கமும் பௌத்தத்தின் மறைவிற்குக் காரணமாகும். தருமராசர் என்ற பெயரில் ஊர்ப்புறங்களில் புத்தரின் வடிவங்கள் மக்களால் வழிப்படப்பெற்றன என்பர் சர். சார்லஸ் இலியட் (Ibid, p. 166). மேலும், பிட்சுகளின் ஒழுக்கக் குறைபாடும் பௌத்தத்தின் அழிவிற்குக் காரணம் என்பதைப் பிரபோதச் சந்திரோதயம் என்ற வடமொழி நூல் விரித்துரைக்கும். பௌத்தக் கோயில்கள் பலவும் இந்துக் கோயில்களாக மாறின என்பர் சர் சார்லஸ் இலியட், டாக்டர்

சி. ஆர். மித்திரா. ஆதலின், பௌத்தம் நலிந்தது எனலாம். எனினும், இன்றைய இந்தியாவில் சுமார் ஆறு இலட்சம் பௌத்தர்கள் உள்ளனர்.

2. பௌத்தத் தமிழ் இலக்கியங்களுள் தங்களுக்குப் பிடித்த இலக்கியம் - இலக்கியப் பகுதி எது?

'பௌத்தத் தமிழிலக்கியங்களுள்'' எனக் கேட்டிருக்கிறீர்கள். முழுமையாகக் கிடைக்கும் ஒரே பௌத்தத் தமிழிலக்கியம் மணிமேகலையே. பிடித்த பகுதி, பிடிக்காத பகுதி என வேறுபடுத்துவது எனக்குப் பிடிக்கவில்லை. கேட்டதற்காக ஒரு பகுதியை இவண் குறிப்பிடுகிறேன் :

'பரிதியஞ் செல்வன் விரிகதிர்த் தானைக்
கிருள்வனைப் புண்ட மருள்படு பூம்பொழிற்
குழலிசை தும்பி கொளுத்திக் காட்ட
மழலை வண்டினம் நல்லியாழ் செய்ய
வெயினுழை பறியாக் குயினுழை பொதும்பர்
மயிலா டரங்கின் மந்திகாண் பனகாண்
மாசறத் தெளிந்த மணிநீ ரிலஞ்சிப்
பாசடைப் பரப்பிற் பன்மல ரிடைநின்
றொருதனி யோங்கிய விரைமலர்த் தாமரை
அரச வன்ன மாங்கினி திருப்பக்
கரைநின் றாலுமொருமயி றனக்குக்
கம்புட் சேவற் கனைகுரன் முழவாக்
கொம்ப ரிருங்குயில் விளிப்பது காணாய்
இயங்குதேர் வீதி யெழுதுகள் சேர்ந்து
வயங்கொளி மழுங்கிய மாதர்நின் முகம்போல்
விரைமலர்த் தாமரை கரைநின் றோங்கிய
கோடுடை தாழைக் கொழுமட லவிழ்ந்த
வால்வெண் சுண்ண மாடிய திதுகாண்
மாதர் நின்கண் போதெனச் சேர்ந்து
தாதுண் வண்டினம் மீதுகடி செங்கையின்
அஞ்சிறை விரிய வலர்ந்த தாமரைச்
செங்கயல் பாய்ந்து பிறழ்வன கண்டாங்
கெறிந்தது பெறுஅ திரையிழந்து வருந்தி
மறிந்து நீங்கு மணிச்சிரல் காணெனப்
பொழிலும் பொய்கையும் சுதமதி காட்ட'' (4 : 1-25)

3. தமிழ் இலக்கியத்தில் பௌத்தரல்லாதார் இயற்றிய நூல்களுள் எந்த அளவுக்குப் பௌத்த மதத்தின் செல்வாக்கு காணப்படுகிறது?

பௌத்தரல்லாதார் இயற்றிய நூல்களில் பௌத்த மதத்தின் செல்வாக்குக் காணப்பட வேண்டும் என்ற கட்டாயம் இல்லை. பௌத்

தத்திற்குச் சிறப்புரிமை உடைய சிலங்கள் எண்வகை நெறிகளைப் புறக் கணித்த தமிழ் நூல்கள் இல்லையெனலாம்.

4. பௌத்த நூல்கள் பற்றிய தங்கள் டாக்டர் பட்ட ஆராய்ச்சி யில் தாங்கள் கண்ட புதிய உண்மைகள் யாவை?

என் டாக்டர் பட்டத்திற்குரிய ஆராய்ச்சியின் தலைப்பு "Buddhism as expounded in Manimekalai" என்பதுதான். என் ஆய்வில் கண்ட உண்மைகள் 33 காண்க.

5. சங்க நூல்களுள் பௌத்த சமயக் குறிப்புகள் ஏதேனும் உண்டா?

இக் கட்டுரையின்கண் "சங்க காலத்தில் பௌத்தம்" என்ற குறுந்தலைப்பினை நோக்கின் விடை கிடைக்கும்.

6. தமிழ்நாட்டில் பௌத்த விகாரங்கள் எங்கெங்கிருந்தனவாக ஆராய்ச்சியால் விளங்குகிறது?

தமிழ்நாட்டில் புகார், காஞ்சி, நாகை முதலிய இடங்களில் புத்த விகாரங்கள் இருந்தன என்பதற்கு ஏற்ற ஆதாரங்கள் கிடைத்துள்ளன. கி. பி. 1965இல் காவிரிப்பூம்பட்டினத்தில் நிகழ்த்திய புதைபொருள் ஆராய்ச்சியால் அங்குப் பௌத்தப் பள்ளி திகழ்ந்த உண்மை வெளிப் பட்டது. புத்தர் சிலையும் கிடைத்துள்ளது. எஸ்ட்லின் கார்பென்டர் என்பார் காஞ்சியில் புத்தர் சிலைகள் கிடைத்துள்ளதைத் தம் நூலில் குறிப்பிட்டுள்ளார் (Vide, Theism in Medieval India, p. 378). காஞ்சி யில் உள்ள அறப்பணஞ்சேரி என்ற வீதி அறவண அடிகள் நினைவாகத் தோன்றியதென்று பேராசிரியர் மு. இராகவையங்கார் அவர்கள் எழுதியுள்ளனர். மதுரை, உறந்தை, வஞ்சி, போதிமங்கை, சீவர மங்கலம் முதலிய பல்வேறு தமிழக நகர்களும் பௌத்தத்தின் முக்கிய இடங்களாகத் திகழ்ந்துள்ளன என்பதற்குத் தமிழ், பாலி நூற்சான்று களும் கல்வெட்டுக்களும் ஆதரவாயுள்ளன.

7. சிலப்பதிகாரத் தலைமக்களாகிய கோவலனும் மாதவியு சமண - சமயத்தினரா? அவ்வாறாயின், மாதவியும் மணி மேகலையும் பௌத்த நெறியைத் தழுவுவானேன்?

கோவலனும் மாதவியும் சமண சமயத்தவர் ஆகார். கோவலன் குடும்பமே பௌத்தச் சார்பினது. அவன் முன்னோனைக் கடல் பயணத் தில் காப்பாற்றிய பௌத்த தேவதையாகிய மணிமேகலா தெய்வத் தின் பெயரினைத் தன் மகளுக்குச் சூட்டி நன்றியைப் புலப்படுத்தி யுள்ளான். நெடுஞ்சேரலாதன் காலத்தில் வாழ்ந்த அவன் முன்னோன் கோவலன் என்பவன் பௌத்த சயித்தம் ஒன்றை அமைத்துள்ளான் (மணி. 28 : 103-132). கோவலன் தந்தை பௌத்தத் துறவியாக

மாறியதைச் சிலம்பும், மேகலையும் உணர்த்தும். மேலும், கண்ணகி கூற்ருக,

"பைங்தொடி தந்தை யுடனே பகவன்
இந்திர விகாரம் ஏழுமேத் துதலின்.........
பிறவி நீத்த பெற்றியம் ஆகுவம்" (26 : 55-59)

எனத் சாத்தனர் கூறுவதாலும், இளங்கோவடிகள்,

"பனையைங் தோங்கிய பாசிலைப் போதி
அணிதிகழ் நீழ லறவோன் றிருமொழி
அந்தர சாரிக ளறைந்தனர் சாற்றும்
இந்திர விகார மேழுடன் போகி" (சிலம்பு : 10:11-14)

என இயம்புதலாலும் கோவலன் கண்ணகி இருவருமே பௌத்தச் சார்பினர் என்பது போதரும். அன்றியும், சிலம்பில்,

"போதியின்கீழ் மாதவர்முன் புண்ணியதா னம்புரிந்த
மாதவி தன்துறவுங் கேட்டாயோ தோழி
மணிமே கலைதுறவுங் கேட்டாயோ தோழி"

என இயம்பப் பெறுதல் காண்க. மேலும், பௌத்த சமயம் பரத்தைப் பெண்டிர் பலர்க்கும் புகலிடம் தந்து பேணிய திறனைப் புத்தகோஷர் தம்ம பாலர் எழுதிய பிடக உரைகளில் வரும் கதைகளால் அறியலாம்.

8. வைதீக நெறியை எதிர்க்க எழுந்த சமணமும் பௌத்தமும் தங்களுக்குள் போரிட்டுப் பொது எதிரியை வெற்றிபெறச் செய்தன என்னும் கருத்துத் தங்களுக்கு உடன்பாடா? இல்லை எனில் ஏன்?

சைவமும் வைணவமும் முரணின என்பதற்குத் திருமுறைகளும் நாலாயிரமுமே சான்ருகும். எனினும் இவ்விரு சமயங்களும் தழைத்து வளர்ந்தன என்பது வரலாறு உணர்த்தும் உண்மை. ஆதலின், சமணமும் பௌத்தமும் தமக்குள் போரிட்டுப் பொது எதிரியை வெற்றிபெறச் செய்தன என்ற கருத்துப் பொருந்தாது. வீழ்ச்சிக்குப் புறக் காரணங்களைத் தேடுவதைவிட அகக்காரணங்களைக் காண்பது அவசியம். மேலும், தமிழகத்தில் வைதீக நெறி தமிழ்ச்சாயல் பெற்று, தமிழ் மொழி, இனம், பண்பாடு, கலைகளைத் தழுவி நின்ற தால் புறச்சமயம் வெற்றிபெற முடியவில்லை.

9. பௌத்தத்தின் வளர்ச்சியில் பாண்டியர்கட்கும் சேரர்கட்கும் பங்கு இல்லையா?

சேரர் பாண்டியர்கட்குப் பௌத்த வளர்ச்சியில் பங்கில்லை என்று கூற இயலாது. நெடுஞ்சேரலாதன் பௌத்தத்தைப் பேணியவன்

என மணிமேகலை உணர்த்துகிறது (28:103-132) பாண்டிய நாட்டில் தான் பௌத்தச் சார்புடைய தமிழ்-பிராமி கல்வெட்டுக்கள் மிகுதியாகக் கிடைத்துள்ளன. நெடுஞ்செழியன் கணிநந்தன் என்ற பிட்சுக்குப் பள்ளி அமைத்த செய்தியைக் கட்டுரையில் குறிப்பிட்டுள்ளேன்.

10. பௌத்தஞ் சார்ந்த கோவலன் என்று குறிப்பிட்டுள்ளீர்கள். அவன் பௌத்தன் என்பதற்குச் சான்றுகள் உண்டா? இது பற்றிச் சிலப்பதிகாரம் சொல்வது என்ன?

கோவலன் பௌத்தன் என்பதற்குரிய சான்றுகளை ஏழாவது வினாவிடையை நோக்கி உணர்க.

11. தமிழ்ப் பௌத்தர்கள் உருவாக்கிய கற்புத் தெய்வம் கண்ணகி எனக் குறித்திருப்பது சரியா?

தமிழ்ப் பௌத்தர்கள் உருவாக்கிய கற்புத் தெய்வம் கண்ணகி என்பதற்கு மணிமேகலை ஆதரவு தருகிறது. வஞ்சி மாநகர்புக்க காதையில் 10—67—ஆம் அடிகளை ஊன்றி நோக்குக. மகாயான பௌத்த நெறிப்படி புத்தன் என்ற முழுமுதற் கடவுள் கீழ் விளங்கும் பல்வேறு புத்த தேவதைகளில் கண்ணகியும் ஒருத்தியாவள். கடவுள் நிலைக்கு உயர்ந்து ஓங்கி ஒளிரும் வளர்ச்சியைத்தான் கண்ணகி வடிவில் சாத்தனார் காட்டியுள்ளார்.

12. பௌத்த சமண சமயங்களின் வீழ்ச்சிக்குத் தாங்கள் ஆய்ந்து குறிப்பிட்டிருக்கும் முதற் காரணத்திற்குரிய சான்றுகளை விளங்கக் கூறவும்.

பௌத்த சமயத்தின் வீழ்ச்சிக்குப் புறக்காரணத்தைவிட அகக்காரணமே முக்கியம் என எண்ணுகிறேன். சிங்கதத்தர், புன்றலை மாகனார், சாக்கியன் முதலிய பல தேரர்களின் ஒழுக்கக் குறைபாடுகளை நீலகேசி விரிவாகக் குறிக்கிறது. இந்நூலில் அருக்கச்சந்திரவாதம் பாடல்கள் 245—250 காண்க. மேலும், டாக்டர் சி. ஆர். மித்திரா எழுதிய "Decline of Buddhism in India" என்ற நூலையும் நோக்குக.

13. சமண சமயக் கருத்தினைச் சொல்லியுள்ளார் திருவள்ளுவர் என்கின்றனர் சிலர்: சமஸ்கிருத பண்டிதரின் நூல்களிலிருந்து கருத்துக்கள் பலவற்றைக் கையாண்டுள்ளார் வள்ளுவர் என்கின்றனர் சிலர். தாங்கள், 'சுத்த பிடகத்தின் ஒரு பகுதியாகிய தம்ம பதத்தினைப் பின்பற்றியே வள்ளுவர் அறக் கருத்துக்களைத் தனித்தனித் தலைப்புக்களில் தொகுத்துள்ளார் எனலாம்' எனக் குறித்திருக்கின்றீர்கள். இதனால் தமிழர்களுக்கு இயல்பான கருத்துச் செல்வங்கள் இல்லை என்பது தங்கள் முடிவா?

ஐயா, என் மீது ஆத்திரப்படாதீர்கள். தமிழ்க் கருத்துக்களைப் பௌத்தக் கருத்துக்களாகக் கூறக்கூடிய குணக்கேடு எனக்கில்லை. வள்ளுவரைச் சாத்தனுர் பௌத்தராகப் பாவிக்கிருர் என்றுதான் கட்டுரையில் சுட்டியிருக்கிறேன். சமண, சமஸ்கிருத பண்டிதர்களின் கருத்துக்கு என்னைப் பொறுப்பேற்கச் செல்லுகிறீர்களா? திருக்குறளில் சுமார் 50 இடங்களில் பல்வேறு நூல்களைப் பற்றிக் குறிப்பிடுகிருர். வள்ளுவர்க்குத் தமிழ், வடமொழி, பாலி, பாகதம் முதலிய பல்வேறு மொழிகளில் நிரம்பிய புலமை இருந்தது என நினைப்பது தவருு? புத்தரின் பொன்மொழிகள் இமயம் முதல் ஈழம் வரை தோன்றிய இந்தியச் சிந்தனையாளர்கள் அனைவரையும் கவர்ந்தன; ஆதலின், திருக்குறளிலும் பௌத்தக் கருத்துக்கள் காணப்படுதலைச் சான்றுடன் காட்டியிருக்கிறேன். இதனுல் தமிழர்க்குரிய இயல்பான கருத்துச் செல்வங்கள் திருக்குறளில் இல்லையெனக் கூறுவதற்கு ஒருஞான்றும் துணியேன்.

14. சைவ வைணவ நூல்களுள் சமண பௌத்த மதங்களைக் கண்டிக்கும் பகுதிகளைப் போன்று சைவ வைணவ மதங்களைக் கண்டித்துள்ள பௌத்த இலக்கியப் பகுதிகள் யாவை?

சைவ வைணவ மதங்களை உள்ளிட்ட பிற சமயங்களையெல்லாம் சாத்தனுர்

"பல்வேறு சமயப் படிற்றுரை யெல்லாம்
அல்லியங் கோதை கேட்குறு மந்நாள்" (10:77-78)

என வெறுத்துரைக்கிருர். மணிமேகலை இச்சமயங்களைக் கேட்ட பின்னர்,

"நன்றல வாயினும் நான் மாறு உரைக்கிலேன்" (27: 278)

எனக் கடிந்து புறக்கணித்தல் காணலாம். பிடகங்களில் பல்வேறு சமய தத்துவங்களும் கண்டனம் செய்யப்படுதல் குறிப்பிடத்தக்கது.

15. சங்க காலப் புலவர்களுள் பௌத்த சமயத்தவர்கள் யார்?

அன்புகூர்ந்து கட்டுரையில், "சங்ககாலத்தில் பௌத்தம்" என்ற பகுதியைப் படித்துப் பார்க்கவும்.

16. இளங்கோ அடிகள் மாதவியை 'மாயப்பொய் பல கூட்டும் மாயத்தாள்' என்பது இழிப்புரையன்றே?

கோவலன் மாதவியை உணர்ச்சி நிலையில் "மாயப்பொய் பல கூட்டும் மாயத்தாள்" என இயம்பினும் தன் பிழையை உணர்ந்து,

" தன்றி திலளெனத் தளர்ச்சி நீங்கி
என்றீ தென்றே யெய்திய துணர்ந்தாங்கு" (சிலம்பு. 13:94-95)

என இயம்புதல் நோக்குக. ஆதலின், மாதவி மாசற்றவன் என்ற எண்ணமே கோவலன் கூற்றினுல் அறியப்படும்.

17. 'சிலம்புக்கு முற்பட்டது மணிமேகலை' என்ற கூற்று பற்றித் தங்கள் கருத்து யாது?

அடியார்க்கு நல்லார் இக்கருத்தினர். எனினும் சிலம்பு முற்பட்டது என்பதற்குரிய காரணத்தை இக்கட்டுரையிலும் குறிப்பிட்டிருக்கிறேன். 1961—இல் வெளியிட்ட 'மணிமேகலையின் காலம்' என்ற என் நூலிலும் விரிவாகக் குறிப்பிட்டுள்ளேன்.

18. மணிமேகலை காலத்தில் 'சைவ சித்தாந்தம்' இருந்தது என்பதற்கு மணிமேகலையில் சான்றுண்டா?

சைவசித்தாந்தத்தின் அடிப்படைக் கொள்கை மணிமேகலையில் காணப்படுகிறது:

" ...............இறைவன் ஈசனென
நின்ற சைவ வாதிநேர் படுதலும்
பரசுநின் றெய்வ மெப்படித் தென்ன
இருசுட ரோடிய மானனைம் பூதமென்
றெட்டு வகையு முயிரும்யாக் கையுமாய்க்
கட்டிநிற் போனுங் கலையுருவி னேனும்
படைத்துவிளை யாடும் பண்பி னேனும்
துடைத்துத் துயர்தீர் தோற்றத் தோனும்
தன்னில் வேறு தானென் றிலோனும்
அன்னே விறைவ னுகுமென் றுரைத்தவன்"

(மணி. 27:87-95).

19. 'திருக்குறளின் உட்கிடை சைவ சித்தாந்தமே' என்ற தலைப்பில் திரு. க. வச்சிரவேல் முதலியார் எழுதிய நூலைத் தாங்கள் படித்துள்ளீர்களா? அது பற்றித் தங்கள் கருத்து யாது?

சைவப்புலவர், திருவாவடுதுறை ஆதீன வித்துவான் திரு. க. வச்சிரவேல் முதலியார் வள்ளுவரைப் பௌத்தர் என எழுதுவார் என்று எதிர்பார்க்கிறீர்கள்! அவர்க்கு முன்பே தென்காசி திருவள்ளுவர் கழகத்தார் வெளியிட்ட வெள்ளிவிழா மலரில் வள்ளுவர் சித்தாந்த சைவர் என்ற கருத்து விளக்கப்பட்டுள்ளது. சேலம் பெரும் புலவர் திரு. நடேச உடையார் வள்ளுவரை வீரசைவர் என விரித்துரைத்தார். எனினும், சைவ நூலாகிய கல்லாடமே,

"சமயக் கணக்கர் மதிவழி கூறது
உலகியல் கூறிப் பொருள்இது என்ற
வள்ளுவன் தனக்கு வளர்கவிப் புலவர்முன்
முதற்கவி பாடிய முக்கட் பெருமான்"

எனக் கழறுதல் காண்க. வள்ளுவர்க்குத் தனிச்சிறப்பே ஒரு சமயத்துக்கும் உரிமை பூணுது, அனைத்துச் சமயமும் "தம் தெய்வம் எம் தெய்வம் என்று எதிர்வழக்கிட நின்றதிது" எனத் தாயுமானுர் கூறியாங்கு வள்ளுவரைக் கொண்டாடுதலின், அனைத்து நெறிகளாம் ஆறுகள் ஒருங்கிணையும் அறிவுக் கடலாகத் திருக்குறள் திகழ்கிறது.

20. இளங்கோ அடிகள் காலம் கி. பி. 3ஆம் நூற்ருண்டு என்று டாக்டர் மு. வ., அவர்கள் கூறியுள்ள கருத்துப் பெறும் இடம் யாது?

இளங்கோவடிகள் காலம் விரிவாக ஆராயத்தக்கது. அடிகள் கி. பி. 3ஆம் நூற்ருண்டினர் என்ற டாக்டர் மு. வ. அவர்கள் கருத்து பொருத்தமுடையதே. பேராசிரியர் வையாபுரிப் பிள்ளை அடிகளின் காலம் கி. பி. 8ஆம் நூற்ருண்டென எழுதினுர். ஆண்டாள், பெரியாழ்வார், சுந்தரமூர்த்தி, சேரமான் பெருமாள் நாயனுர் காலமும் கி. பி. 8ஆம் நூற்ருண்டு. இவர்கள் காலமும் இளங்கோ காலமும் ஒன்ருக இருத்தல் ஒவ்வாது என்பதை இவர்கள் எழுதிய பாடல்களை ஒருமுறை ஒப்பிட்டுப் படிப்பாரும் உணர்வர். சிலப்பதிகாரம் காட்டும் சமுதாய அமைப்பு, அரசியலமைப்பு, கலைவளம், சமயப் பொறுமை முதலியன கி. பி. 8ஆம் நூற்ருண்டிற்குப் பொருந்தி வாரா என்பதையும் எண்ணிப் பார்த்தல் வேண்டும். சிலப்பதிகாரம் குறிப்பிடும் கடல் சூழ் இலங்கைக் காவலன் கயவாகு, ஆந்திரப் பகுதியை ஆண்ட சதகர்ணிகள் (நூற்றுவர் கன்னர்) முதலியோர் கி. பி. 2ஆம் நூற்ருண்டினர் என வரலாறு கூறும் வாய்மையை எளிதில் தூக்கி எறிதல் ஆய்வு நெறிக்கு ஒவ்வாது. ஆதலின், அடிகள் கி. பி. 2ஆம் நூற்ருண்டினை ஒட்டி 3ஆம் நூற்ருண்டின் முற்பகுதியில் வாழ்ந்திருத்தல் கூடும்.

21. கௌதம புத்தர் காஞ்சிக்கு வந்தாரா? சான்றுகள் உண்டா?

யுவான்சுவாங் பயணக் குறிப்பும், பர்மிய நாட்டு வரலாற்று நூலும் கௌதம புத்தர் காஞ்சி, இலங்கை முதலிய இடங்களுக்கு வந்தார் என்பதற்குச் சான்ருகும். இலங்கைக்குப் புத்தர் வந்தாரென மகா வமிசமும் இலங்காவதார சூத்திரமும் கூறும். ஆனல், கௌதம புத்தர் தம் வாழ்நாளில் மத்தியப் பிரதேசத்திற்குத் தெற்கே அடியெடுத்து வைக்கவில்லை என்பதற்குப் பாலி நூல்களில் ஆதாரம் உண்டு. ஆதலின், காஞ்சிக்குக் கௌதம புத்தர் வந்தார் என்பது பௌராணிக முறைப்படி புத்தர்க்குச் செலுத்தும் மரியாதையாகும்.

22. மணிமேகலையில் பசிப்பிணி போக்கல் வற்புறுத்தப்படுவது பழந்தமிழர் பாத்தூண் நெறியா?

தமிழர்தம் பாத்தூண் நெறியின் விளக்கமே மணிமேகலையில் காணப்படும். இதனைக் கட்டுரையின் இறுதிப் பகுதியில் தெளிவுறுத்தியுள்ளேன். பசிபோக்கும் பேரறமே தமிழ்ப் பௌத்தம் வற்புறுத்தும் தலையாய பணியாகும். அடிப்படைத் தேவைகள் நிரப்புதல்தான் பௌத்தத்தின் தலைசிறந்த அறக்கொள்கையாக மணிமேகலையில் இயம்பப் பெற்றுள்ளது.

23. சிலம்புக்கும் மேகலைக்கும் இடையே உள்ள வேற்றுமைகளை விளக்கியுள்ளீர்கள்? ஒற்றுமைகள்?

சிலம்புக்கும் மேகலைக்கும் இடையேயுள்ள ஒற்றுமைகளையும் கட்டுரையில் குறிப்பிட்டிருக்கிறேன். மேலும், பல ஒற்றுமைகளை யாம் எழுதிய 'மணிமேகலையின் காலம்' பக்கம் 92-95இல் காண்க.

24. பார்ப்பன வாகை பௌத்தத்தையும் எதிர்த்தது என்பதற்கு எடுத்துக்காட்டு உண்டா?

"அறுவகைப்பட்ட பார்ப்பனப் பக்கமும்" என்ற புறத்திணையியலின் உரையில் வேள்வியால் பெற்ற வாகைக்கு, "நன்றாய்ந்த நீள் நிமிர் சடை" என்ற புறநானூற்றுப் பாடலை மேற்கோள் காட்டினார். இப் பாடலில், "ஆறுணர்ந்த ஒருமுறை நூல், இகல் கண்டோர் மிகல் சாய்மார்" என்ற பகுதிக்கு, "பழைய நூலாகிய வேதத்திற்கு மாறுபட்ட நூல்களைக் கண்டோராகிய புத்தர் முதலாயின புறச் சமயத்தோரது மிகுதியைச் சாய்க்கவேண்டி" எனப் புறநானூற்றுப் பழைய உரையாசிரியர் விளக்கம் கண்டார். ஆதலின், வேள்வியைக் கண்டித்த பௌத்தர்களுடன் வாதிட்டு வேள்வியை நிலைநாட்டுதல் பார்ப்பன வாகையின் ஒரு கூறாகும் என எண்ணத் தோன்றும். சோழநாட்டுப் பார்ப்பனனாகிய பராசரன் சேரநாட்டில் பெற்ற வெற்றியை "பார்ப்பன வாகை" என இளங்கோ இயம்பினார் (23 : 59-73). பராசரன் "நாவலங் கொண்டு நண்ணார் ஒட்டிய திறனைச் சிலம்பு குறிக்கும். நண்ணார் என்ற சொல் பார்ப்பனருள் கருத்து முரணிய கல்வியாளரைக் குறிக்குமா? அன்றிப் புறச்சமயத்தார்களைக் குறிக்குமா? என்ற செய்தி சிலம்பில் தெளிவாக இல்லை. சோழநாட்டிற்குத் திரும்பும் பராசரன் பாண்டிய நாட்டில் தங்கால் என்ற ஊரின் போதி மன்றத்தில் தங்கிய பொழுது, தன்னினும் சிறப்பாக வேதம் ஓதிய வார்த்திகனின் புதல்வன் ஆலமர் செல்வனுக்குத் தன் பரிசுப் பொருளை வழங்கிய செய்தியையும் கட்டுரைக் காதையில் காணலாம்.

ஆதலின், பார்ப்பனவாகை பௌத்தத்தை எதிர்த்துப்பெறும் வெற்றியைக் குறிப்பதாகத் துணிவதற்குப் போதிய ஆதாரம் இல்லை.

25. பௌத்தர்கள் புலால் உண்பது ஏன்?

வினு என். 27—க்குரிய விடையைக் காண்க.

26. சிங்கள பௌத்தர்கள் முரட்டுத் தனம் மிக்கவர்கள் என்ற கருத்தில் உண்மை உண்டா?

சிங்களவர் முரட்டுத்தனம் மிக்கவர்கள் என எண்ணத் தோன்றும். அதற்கு அவர்களின் மரபு வழி காரணமாகலாம். "புரட்சிக் காப்பியம்" என்ற நூலில் "அயல்நாடுகளில் பௌத்தம்" என்ற கட்டுரையில் பக்கம் 134-138இல் சிங்களவரைப் பற்றியும் அவர் இயல்புகள் பற்றியும் விரிவாக விளக்கியிருக்கிறேன். ஆண்டுக் காண்க.

27. 'தினற் பொருட்டால்' எனத் தொடங்கும் திருக்குறள் புலால் உண்ணும் பௌத்த சமய சமூக வழிக்கு மாறுபட்டதன்றோ?

சைவர்கள் புலால் உண்ணவில்லையா? அதுபோல் பௌத்தர்களில் ஒருபகுதியினர் புலால் உணவு மேற்கொண்டனர். ஆனுல் வேள்வியில் உயிர்க் கொலையைத் தவிர்க்க பிம்பிசாரனுடன் உரையாடி அன்பு நெறியை நிலைநாட்டிய புத்தர் ஒருஞான்றும் புலாலுணவை உடன் பட்டிலர். எனினும், பௌத்தம் சார்ந்த பலர் புத்தரின் பெயரால் புலாலுணவை உண்ணலாம் என விதியமைத்துக் கொண்டனர். பிடகங்களில் புலால் உண்பதற்கும் விலக்குதற்கும் உரிய இருவேறு விதிகளும் காணப்படுகின்றன. தம் கையால் கொல்லாமல் கிடைக்கும் புலால் கல்பயம் என்றும், தானே கொன்று உண்பது அகல்பயம் என்றும் பிற்காலப் பௌத்தர்கள் வரம்பு வைத்துக்கொண்டனர். நரபலியும் சிறுதேவதைகளுக்குப் பலியும் மிக்கிருந்த காலத்தில் தோன்றிய கௌதம புத்தர் கொல்லாமைக்கும் புலால் உண்ணுமைக்கும் இடையே நடுநெறி காண முற்பட்டார். சுத்தபிடகத்திலும் கொல்லாமை அறம் வற்புறுத்தப்பட்டுள்ளது. பௌத்தம் பரவிய திபெத்து, சீனம், இலங்கை, கிழக்கிந்தியத் தீவுகள் முதலிய நாட்டவர்களுக்கு அகிம்சை என்ருல் என்னவென்றே தெரியாத காலத்தில் பௌத்தத்தை அவர்களும் ஏற்றுக் கொள்ளும் வகையில் நடுப்பாதையை (Middle path) வகுத்துக்காட்டும் நிலை பௌத்தத் தேரர்களுக்கு ஏற்பட்டது. இலங்காவதார சூத்திரம் என்ற மகாயான நூல் புலால் உண்பதை புத்தர் ஒத்துக்கொள்ளவில்லை என வன்மையாக எடுத்துக்கூறுதல் காணலாம்:

"Oh! Wisemen,..........In future there will arise in my Sanga Some putting on a garb of a monk...will be bent upon deluding the people to bodily pleasures. They will preach false rules rules of conduct with the object of satisfying their own tastes, they will compile books inventing false argument justifying flesh-eating...But oh wise-

men, I have never ordered flesh eating in any Sutra nor did I include it among the proper and acceptable food". I also treat all creatures as my own children. Then how can I order my disciples to eat the flesh of my own sons and how can I myself eat it".

ஞானசம்பந்தர் தேவாரத்திலும் புலாலை உடன்பட்டவர், மறுத்தவர் என்ற இரு வேறு பௌத்தப் பிரிவுகளைக் காணலாம். காரணம் இன்றிக் காரியம் விளையா எனக் கருதிக் கொல்லாமல் பெற்ற புலாலை உண்ணுதல் பாவமில்லை எனக்கொண்ட ஒருசார் பௌத்தர்களை, "தினற் பொருட்டால் கொல்லாதுலகெனின்" என்ற திருக்குறள் சுட்டுகிறது. புலாலை முழுதும் வெறுத்த பௌத்தர்களை வள்ளுவர் அறியாரெனக் கூறுதல் பொருந்தாது. சமணர்க்கும் இக்கருத்து இயைந்ததே.

## அவையோர் எழுப்பிய வினாக்கள்

**திரு. க. வெங்கடேசன்**

1. புத்தர் பெருமான் இறைவனின் இயல்பு பற்றியோ, உயிரின் இயல்பு பற்றியோ ஏதும் விளக்கம் கூறவில்லை. 'உயிரிரக்கம் ஆகிய சீவகாருண்யம்' என்பதனை மட்டுமே அறிவுறுத்தியுள்ளார். ஆதலின், 'பௌத்தம்' ஒரு நல்லொழுக்க நெறியே யன்றிச் 'சமயம்' ஆகாது என்பார். 'வின்பிரெட் ஸ்டீபன், Buddhism in the purity ignored the existence of god; it denied the existence of a soul. It was not so much a religion as a code of ethics. —Winfred Stephens from the 'Legends of Indian Buddhism book, p. 7.

இக் கருத்துபற்றிக் கட்டுரையாளரின் கருத்தறிய அவா.

தொடக்க நிலையில் பௌத்தம் அன்றாட வாழ்வில் கடைப்பிடித்தற் குரிய அறங்களை வற்புறுத்திய நல்லொழுக்க நெறியாய் இருந்தது. ஆனால், மகாயான பௌத்தம் புத்தரையே முழுமுதற் கடவுளாகக் கொண்டு ஒரு சமயமாக ஓங்கியது. இக் கட்டுரையில் 'புத்த சங்கமும் புதுப் பிரிவுகளும்" "பௌத்தத்தில் இந்து மதக் கொள்கைகள்" என்ற தலைப்புக்களில் எழுதியுள்ள கருத்துக்களை நோக்கவும்.

**திரு. செம்பை சேவியர்**

1. எப்பொருள் எத்தன்மைத் தாயினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு.

எப்பொருள் யார்யார் வாய்கேட்பினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு.

என்றெல்லாம் வள்ளுவர் கூறியிருக்கிருர். மேலும், 'கடவுள் வாழ்த்து' வள்ளுவர் இயற்றவில்லை என்ற கருத்து வேறுபாடு வேறுஉண்டு. வள்ளுவர், தன்னை உறுதியாக யாரென்று எவ் விடத்திலும் காட்டவில்லை. அந்தக் காலத்திலேயே ஒருவன் தன்னை யாரென்று காட்டிக்கொள்ளாமல், வாழ்ந்திருக்கிருன். நூலும் வடித்திருக்கிருனென்ருல் அதைப் பாராட்டாமல் வள்ளுவர் அந்த மதம், இந்த மதம் என்று வீண் ஆராய்ச்சி செய்து, தனிப்பட்ட ஒரு சார்பாளருக்கு உரிமையாக்கிப் பிரிப்பது முற்றிலும் தவறு. மேலும், திருவள்ளுவர் என்பதே அவருடைய இயற்பெயரும் அல்ல?

வள்ளுவர் தன்னை யாரென்று காட்டிக்கொள்ளவில்லையென்ருல், ஒரு கொள்கையும் இல்லாதவர் என்று எண்ண நேரிடும். கடவுள் வாழ்த்தினை வள்ளுவர் பாடவில்லையென்பதற்குத் தாங்கள் சான்று கூறவில்லை. எல்லா நெறிகளிலும் காணப்படும் நற்கூறுகளை வள்ளுவர் ஏற்றுக்கொண்டு தமிழ்ப் பண்பிற்கு ஏற்ப அறமாகத் தொகுத்துள்ளார் எனக் கருதுதல் தக்கது. அவர் மதம் பற்றிய கருத்தினை மேலே கூறிய வினுவிடை (19)ஐ நோக்கி உணரவும்.

2. இரட்டைக் காப்பியங்கள் என்று சொல்வது இரண்டிற்கும் தொடர்புண்டு என்பதற்காகத்தானே ஒழிய, வேறு காலத்தால் அல்ல?

இரட்டைக் காப்பியங்கள் கதைத் தொடர்புடையன எனினும், காலத்தால் வேறுபட்டவை என்பதைக் கட்டுரையில் "சிலம்பும் மேகலையும்" என்ற தலைப்பில் விளக்கியிருக்கிறேன்.

பத்தாம் நாள் கருத்தரங்கு 31 - 1 - 73

# வைணவ இலக்கியம்

[கட்டுரையாளர் : டாக்டர் ந. சுப்புரெட்டியார்]

## அவையோர் எழுப்பிய வினுக்களும் ஆசிரியரின் விடைகளும்

### தமிழ்த்துறை எழுப்பிய வினுக்கள்

1. தொல்காப்பியத்தில் சிவபெருமான் நிலத்தெய்வமாகக் குறிப்பிடப்படாததால் தொல்காப்பியர் காலத்தில் 'சைவம்' இல்லை என்பார் கூற்றுத் தங்கட்கு உடன்பாடா? இல்லையெனின் ஏன்?

கொல்காப்பியர் குறிப்பிடும் நிலத்தெய்வங்கள் வேறு; அவர் கருதும் எங்கும் நிறைந்த பரம்பொருள் வேறு. தமிழர் கருதும் பரம்பொருள் 'கடவுள்' என்பது. அப்பரம்பொருளே 'சிவம்' என்று நினைத்தல் தவறு என்பது என் கருத்து. தமிழ் மொழிக்கும் தமிழ் இலக்கியத்திற்கும் இலக்கணமாக அமைந்த ஒரு நூலில் நாம் விரும்பும் கருத்துக்கள் யாவும் இருக்கும் என்று வலிந்து நம் சிந்தனையைச் செலுத்துவது பொருந்தாது.

2. திருமுறைகட்கும் திவ்விய பிரபந்தத்திற்கும் இடையே உள்ள ஒற்றுமை வேற்றுமைகள் யாவை?

பல ஒற்றுமை வேற்றுமைகள் உள்ளன. ஒன்றிரண்டு மட்டிலும் ஈண்டுக் குறிப்பிடுவேன்.

1. இரண்டும் தொகை நூல்கள். 'திருமுறைகள்' அக்கால அரசின் துணையால் நம்பியாண்டார் நம்பி என்றவரால் வகுக்கப் பெற்றன. 'திவ்வியப் பிரபந்தம்' யாரொருவர் துணையுமின்றி நாதமுனிகள் என்ற வைணவப் பெரியாரால் தொகுக்கப் பெற்றது.

2. திருமுறை வகுக்கப்பெறுவதற்கு திருநரையூர் பொல்லாப் பிள்ளையார் துணை செய்தார். திவ்வியப் பிரபந்தம் வகுக்கப் பெறுவதற்கு ஆழ்வார் திருநகரியில் திருப்புளியாழ்வாரின் கீழ் அர்ச்சையாக எற்ந்தருளியிருக்கும் நம்மாழ்வார் துணை

செய்தார். இரண்டும் அற்புத நிகழ்ச்சிகள்; இருசமயத்தினரும் மனப்பூர்வமாக நம்பும் நிகழ்ச்சிகள்.

3. திருமுறைகட்குப் பண்முறையினைத் தெரிந்து அமைத்தது திருவெருக்கத்தம் புலியூரைச் சார்ந்த திருநீலகண்ட யாழ்ப்பாணர். திவ்வியப் பிரபந்தங்கட்குப் பண்முறையினை அமைத்தது காட்டுமன்னார்குடியினைச் சார்ந்த மேலையகத்தாரும் கீழையகத்தாரும்; இவர்கள் நாதமுனிகளின் உறவினர்.

இந்த இரண்டு தெய்வப் பனுவல்கள் பற்றிய பெரும்பான்மையான செய்திகள் தில்லைக்கருகிலுள்ள திருநரையூர், காட்டுமன்னார் கோயில் ஆகிய இரண்டு ஊர்களிலுமே நிகழ்ந்தனவாக உள்ளன. சமயப் போட்டியே இத்தகைய நிகழ்ச்சிகளைத் தோற்றுவித்திருக்க வேண்டும் என்பது என் பணிவார்ந்த கருத்து.

3. வடகலை, தென்கலை வேறுபாடு ஏற்பட்டது எப்போது? ஏன்?

வடகலை, தென்கலை வேறுபாடு காலப்போக்கில் மொழி வேற்றுமை காரணமாக ஏற்பட்டிருக்கலாம். தெளிவான காலவரையறை அறியக்கூடவில்லை. இருவரும் வடமொழியையும், தென்மொழியையும் போற்றுகின்றனர் என்றாலும் வடகலையார் வடமொழி நூல்களாகிய பிரம்ம சூத்திரம், பகவத் கீதை முதலியவற்றிற்கு முதன்மை தருகின்றனர். தென்கலையார் திவ்வியப் பிரபந்தத்திற்கு முதன்மை தருகின்றனர். இருவரும் தங்கள் ஆசாரிய பரம்பரையை அடியிற்கண்டவாறு குறிப்பிடுகின்றனர்.

நாதமுனிகள் (கி. பி. 823—903)

உய்யக்கொண்டார் (கி. பி. 826—931)

மணக்கால் நம்பி (கி. பி. 988—994)

ஆளவந்தார் (கி. பி. 916—1041)

பெரிய நம்பி (கி. பி. 997—1102)

இராமானுசர் (கி. பி. 1017—1137)

| வடகலை வழி | தென்கலை வழி |
|---|---|
| திருக்குருகைப்பிரான் பிள்ளான் (பிறப்பு கி. பி. 1068) | எம்மார் (பிறப்பு 1025) |
| எங்களாழ்வான் (அல்லது) விஷ்ணுசித்தன் (பிறப்பு 1108) | பிராசபட்டர் (பிறப்பு 1062) |

| வடகலை வழி | தென்கலை வழி |
|---|---|
| நாடாதூர் அம்மாள் (அல்லது) வாத்ஸய வரதாச்சாரியார் (பிறப்பு 1165) | நஞ்சியர் (1113) |
| | நம்பிள்ளை (கி. பி. 1147-1252) |
| கிடாம்பி அப்புள்ளார் (அல்லது) ஆத்ரேய ராமாநுசர் (பிறப்பு 1221) | வடக்குத் திருவீதிப்பிள்ளை (அல்லது) கிருஷ்ணபாதர் (கி. பி. 1167—1265) |
| வேதாந்த தேசிகன் (அல்லது) வேங்கடநாதன் (கி. பி. 1268—1369) | பிள்ளை உலகாசாரியர் (1300) |
| | திருவாய்மொழிப் பிள்ளை (அல்லது) ஸ்ரீசைலேசர் (1380) |
| நயினாராச்சார் (பிறப்பு 1316) | மணவாள மாமுனிகள் (அல்லது) வரவரமுனி (கி. பி. 1371—1443) |

இதற்குமேல் என்னால் செய்திகள் அறிய முடியவில்லை.

4. ‘வடவேங்கடத்தில் பழமையாகக் கோயில் கொண்டவர் முருகனே’ என்பார் பற்றித் தங்கள் கருத்து யாது?

விருப்பு வெறுப்பின்றி முடிவு காணவேண்டிய நிலை இது. நம்து பண்டைய காவியமாகிய சிலப்பதிகாரம் திருமலையில் எழுந்தருளி யிருக்கும் கடவுள் திருமால் என்றே குறிப்பிடுகின்றது. இப்பொழுது சைவர்கள் பழமையாகக் கோயில் கொண்டது முருகனே எனக் கருது கின்றனர். யான் சைவனேயாயினும் எனக்கு இது உடன்பாடன்று. பேராசிரியர் மு. இராவக அய்யங்கார் அவர்கள் எழுதிய கட்டுரைக்கு (ஆராய்ச்சி தொகுதி 20, ‘திருவேங்கடமுடையான்’ என்ற கட்டுரை யைக் காண்க.) தக்க மறுப்புரை இதுகாறும் யாரொருவரும் வெளி யிட்டதாக எனக்குத் தெரியவில்லை. தவிர, இது வீணான ஆராய்ச்சி என்பதே என் கருத்து. சமயக் காழ்ப்பு இல்லாத அக் காலத்தில் முருகனைத் திருமாலாக மாற்றியிருக்கமாட்டார்கள் என்றே கருத வேண்டும்.

5. ‘திருப்பாவை’ திருவெம்பாவை - இவை இரண்டுள் காலத் தால் முந்தியது எது?

'திருப்பாவை'யே திருவெம்பாவையைவிடக் காலத்தால் முந்தியது என்பது என் கருத்து. நம் நாட்டில் கால ஆராய்ச்சி நன்கு மேற்கொள்ளப் பெறவில்லையாதலால் இதுபற்றி முடிந்த முடிபாக ஒன்றையும் கூறுவதற்கில்லை.

6. சைவ சித்தாந்தத்திற்கும் வைணவத்திற்கும் உள்ள அடிப்படைத் தத்துவ வேறுபாடுகள் யாவை?

சைவ சித்தாந்தம் பதி, பசு, பாசம் என்ற தத்துவங்களை அடிப்படையாகக் கொண்டது. வைணவம் சித்து, அசித்து, ஈசுவரன் என்ற தத்துவங்களையுடையது. பதி, பசு என்பவற்றிற்கும் சித்து, ஈசுவரன் என்பவற்றிற்கும் அதிக வேறுபாடுகள் இல்லை. பாசத்திற்கும் அசித்திற்கும் ஒரு சில வேறுபாடுகள் உள்ளன.

7. சைவ சமய தெய்வங்கட்கும் வைணவ சமய தெய்வங்கட்கும் இடையே குடும்ப உறவு கற்பிக்கும் கதைகள் ஏற்பட்டன எப்போது?

சைவ சமய தெய்வங்கட்கும் வைணவ சமய தெய்வங்கட்கும் இடையே குடும்ப உறவு கற்பிக்கும் கதைகள் பிற்காலப் புராணங்கள் எழுந்த காலத்தில் ஏற்பட்டன. சமய வாதிகளிடம் தொடக்கத்தில் எழுந்த காழ்ப்பு மறைந்து நாளடைவில் நல்லுறவு ஏற்பட்டபொழுது இக் கதைகள் எழுந்தன. இதன் விரிவையும் விளக்கத்தையும் திரு. வி. க.வின் 'முருகன் அல்லது அழகு' என்னும் நூலில் காணலாம். அந் நூலினைக் கொண்டு தெளிவு பெறுக.

8. இடைக்காலத்தில் சைவ — வைணவ சண்டைகள் ஏற்பட்ட காரணங்கள் யாவை?

இடைக்காலத்தில் சைவ—வைணவ சண்டைகள் ஏற்படுவதற்குச் 'சமய வெறியே' காரணமாகக் கூறலாம். சமயவாதிகள், ஆட்சிபுரியும் அரசனைத் தம் வசப்படுத்திக் கொண்டு நாட்டில் புரிந்த அட்டுழியங்களை வரலாறு நஷ்கு விளக்கும்.

9. தங்கள் கட்டுரையில் 'திருமுறைகள்' வகுக்கப்பெற்ற வரலாறுபோல் ஒரு வரலாறு இங்கும் உண்டு என்று குறித்துள்ளீர்கள். அவ் வரலாறு யாது?

திருமுறைகள் வகுக்கப்பெற்ற வரலாற்றைத் 'திருமுறை கண்ட புராணம்' விரித்துப் பேசுகின்றது. அத்தகைய ஒரு வரலாற்றை 'அரிசமய தீபம்' என்ற தமிழ் நூலிலும், 'திவ்விய சூரி சரிதை' என்ற வடமொழி நூலிலும் காணலாம். நாத முனிகள் 'திருவாய் மொழி, முழுவதையும் தேடுவதற்கு 'ஆராவமுதே' (திருவாய் 5. 8) என்ற திருவாய்மொழியைச் சேவித்துத் திருக்குடந்தை எம் பெருமானிடம்

இசைவு பெற்று, ஆழ்வார் திருநகரி சென்று அத்திவ்விய தேசத்துப் பொலிந்து நின்ற பிரான் திருக்கோயிலில் உள்ள திருப்புளியாழ்வாரின் கீழ் அர்ச்சாவதார உருவத்துடன் எழுந்தருளியிருக்கும் நம்மாழ்வாரின் 'கண்ணி நுண் சிறுத்தாம்பு' (மதுரகவிகள் அருளிய பிரபந்தம்) என்னும் பிரபந்தத்தை 12,000 தடவை ஓதியதாகவும், அது கண்ட ஆழ்வார் அவரது பக்திக்கு இரங்கி அர்ச்சை நிலையைக் கடந்து திருவாய் மொழியின் தத்துவத்தையும், ஏனைய ஆழ்வார்கள் அருளிய பாசுரங் களின் விரியையும் பற்றிக் கூறியதாகவும் பாசுரங்களின் விவரங்களை அவ்வூரிலுள்ள 'பராங்குசதாசர்' என்பாரிடம் பெறலாம் என்று ஆற்றுப்படுத்தியதாகவும் பிறகு வேதவியாசர் வேதங்களை நான்காக வகுத்ததுபோல் நாதமுனிகள் அப்பாசுரங்களை முதலாயிரம், பெரிய திருமொழி, திருவாய்மொழி, இயற்பா என்ற நான்கு பகுதிகளாக அடைவுபடுத்தியதாகவும் அதன் பிறகு தம் ஒன்றுவிட்ட சகோதரர்க ளாகிய மேலையகத்தார், கீழையகத்தார் ஆகியோரைக் கொண்டு, பாசுரங்கட்குப் பண்களை ஏற்படுத்தியதாகவும் கொண்ட செய்திகள் அடங்கியதே இவ்வரலாறு. பிற்காலத்தில், பெரிய புராணம், 12ஆம் திருமுறையாகச் சேர்ந்ததுபோல், இராமாநுசர் காலத்தில் அவர்மீது திருவரங்கத் தமுதனார் அருளிய 'இராமாநுச நூற்றந்தாதி' என்ற பிரபந்தமும் 24ஆம் பிரபந்தமாகச் சேர்ந்தது.

10. அணில் முதுகில் காணப்படும் மூவரிகள் இராமபிரான் விரல் களின் பதிவுகள் என்னும் கதைக்கு மூலம் யாது?

அணில் முதுகில் காணப்பெறும் மூவரிகள் இராமபிரான் விரல் களின் பதிவுகள் என்னும் கதைக்கு மூலம் தொண்டரடிப் பொடிகளின் திருமாலையிலுள்ள அடியிற்கண்ட பாசுரப் பகுதியே (திருமலை—27) மூலமாகும்.

" குரங்குகள் மலையை நூக்கக்
குளித்துத்தாம் புரண்டிட்டு ஓடித்
தரங்கநீர் அடைக்கல் உற்ற
சலம்இலா அணிலும் போலேன்''.

11. ஆழ்வார் பாடல்களில் காணப்படும் பல்வேறு பக்தி பாடல்கள் யாவை?

வினா தெளிவாக இல்லை. எனினும் யான் புரிந்து கொண்டதற்கு ஏற்ப விடை தருகின்றேன்.

ஆழ்வார் பாடல்கள் இருவகைப்படும். நம்மாழ்வார், திருமங்கை யாழ்வார், பெரியாழ்வார் பிராட்டியின் நிலையை ஏறிட்டுக்கொண்டு பாடும் பாடல்கள் அகத்துறை அமைந்த பாடல்களாகும். இவை தாய்ப்பாசுரம், தோழிப்பாசுரம், மகள்பாசுரம் என்ற முப்பிரிவில் அடங்கும். இம்மூன்று வகைப் பாடல்கட்கும் ஆசாரிய ஹிருதயம்

என்னும் நூல் தத்துவம் கூறும். (சூத்திரம்—133). தானுன தன்மை யிலிருந்து பாடிய பாடல்கள் ஏனைய பாடல்களாகும். இங்ஙனம் இரண்டு நிலைகளிலிருந்து பாடும் பாடல்கட்குக் காரணம்,

"ஞானத்தில் தம்பேச்சு
பிரேமத்தில் பெண்பேச்சு"

என்று குறிப்பிடும் ஆசாரிய ஹிருதயம் (சூத்திரம், 118).

12. சைவம், வைணவம்—இவையிரண்டும் ஒன்றன்மேல் ஒன்று செலுத்திய செல்வாக்குகள் எவ்வாறு விளங்குகின்றன?

வினுவைப் புரிந்துகொள்ள இயலவில்லை. சைவம், வைணவம் இவை இரண்டும் ஒன்றின்மேல் ஒன்று செலுத்திய செல்வாக்குகள் வரலாற்ருல் நன்கு விளங்குகின்றன; புராணங்களில் வரும் கதைகளால் தத்தம் கொள்கைகட்கேற்றவாறு அவரவர் செய்யும் புதுப்புது விளக்கங்களால் தெளிவாகின்றன. எடுத்துக்காட்டாக மார்க்கண்டேயன் கதையக் கூறலாம். மார்க்கண்டேயன் யமனிடமிருந்து சிவபெருமாளுல் காப்பாற்றப் பெற்றதாகக் கூறுவது சைவ புராணக் கதை. திருமால் சிவனிடமிருந்து அந்தர்யாமியாக நின்று அவனைக் காத்ததாகக் கூறும் வைணவ புராணம். சைவம் சிவனைப் பரம்பொருளாகக் கொண்டு நான்முகன் திருமால் இவர்களைச் சிறு தெய்வங்களாகக் கூறும். வைணவம் திருமாலைப் பரம்பொருளாகக் கூறி சிவன் (உருத்திரன்) நான்முகன் இவர்களை அங்ஙனம் கூறும். சைவ, வைணவத் திருக்கோயில்களில் மூர்த்திகள் நிறுவப்பெற்றுள்ள முறைகளினுலும் இந் நிலையை அறியலாம்.

13. ஆழ்வார்கள் படைத்த புதிய இலக்கிய வகைகள் யாவை?

பல இலக்கிய வகைகளைப் படைத்துள்ளனர். 'பிள்ளைத் தமிழ்' என்ற இலக்கிய வகைக்கு வித்திட்டவர் பெரியாழ்வார் என்பதாக இலக்கிய ஆராய்ச்சியாளர் கருதுவர். கண்ணன் பிறப்பு முதலியவற்றைக் கூறும் பெரியாழ்வார் திருமொழியின் முதற்பகுதியில் பிள்ளைத்தமிழ் இலக்கியக் கூறுகள் காணப்பெறுகின்றன. தூது இலக்கிய வகையை ஆண்டாள், நம்மாழ்வார் திருமங்கையாழ்வார் இவர்கள் பாசுரங்களிலும் புலம்பல், தாலாட்டுப் பாடல்களைக் குலசேகராழ்வார் பாசுரங்களிலும் திருப்பள்ளி எழுச்சி, மாலை என்ற இலக்கிய வகைகளைத் தொண்டரடிப் பொடியாழ்வார் பாசுரங்களிலும், 'பொங்கத்தம் பொங்கோ, 'குழமணி தூரம்', பழமொழியால் பணிந்துரைத்த பாட்டு', 'தாண்டகம்', மடல், எழுகூற்றிருக்கை போன்ற இலக்கிய வகைகளைத் திருமங்கையாழ்வார் பாசுரங்களிலும், அந்தாதி இலக்கிய வகையை முதலாழ்வார், நம்மாழ்வார் இவர்கள் பாசுரங்களிலும் காணலாம். நாட்டுப் பாடல்களின் பாணி இவர்கள்

பாசுரங்களில் இடம் பெற்றுள்ளது. (எ-டு) திருமங்கையாழ்வாரின் பெரிய திருமொழியிலுள்ள 'திருச்சாழல்'.

14. வடமொழிச் செல்வாக்கு மிக்க வைணவ மரபிலும் அரிய தனித்தமிழ் வழக்குகள் பல காணப்படுவானேன்?

ஆழ்வார்கள் யாவரும் தமிழர்களே. ஆகவே அவர்கள் பாடல்களில் தனித்தமிழ் வழக்குகள் காணப்பெறுவதில் வியப்பொன்றும் இல்லை. வடமொழி தேவ பாடையாகக் கருதப்பெற்ற அக்காலத்தில் அதனோடொத்த பெருமை திருக்கோயில்களில் தமிழுக்கும் ஏற்படச் செய்த அருமை ஆழ்வார்களின் தனிச் சிறப்பு.

15. வைணவ நூல்கட்கு வியாக்கியானம் பெருகியதுபோல் சைவ நூல்கட்கு ஏன் பெருகவில்லை?

சைவர்கள் சாத்திரங்களைப் பெருக்கும் பணியில் பெரும்பான்மையாக ஈடுபட்டதால் உரைவளப் பெருக்கில் தமது கவனத்தைச் செலுத்தவில்லை என்று கருதுவதற்கு இடம் உண்டு. திருக்கோயில் பிரசாதங்களைச் சுவைத்துச் சுவைத்துத் துய்த்த இன்பங்கண்ட நிலையில் உரைவளமும் பெருகிற்றுப் போலும். சிவன் கோயிலில் பிரசாதத்தைப் பக்தர்கள் அவ்வளவாக ஏற்றுக் கொள்வதில்லை.

16. வைணவத்தைச் சேர நாட்டில் பரப்பியவர் யார்?

வைணவத்தைச் சேர நாட்டில் பரப்பியவர் யார் எனத் தெரியவில்லை. ஒரு காலத்தில் சேரநாடும் தமிழ் நாட்டுடன் இணைந்திருந்ததன்றோ? ஆகவே, வைணவ சமயத்தை அங்குப் பரப்ப வேண்டியதில்லை; இயல்பாகவே அது வளர்ந்து பரவியது என்றே கருதலாம்.

17. சங்க இலக்கியத்தில் வைணவம் பெற்றுள்ள இடம் யாது?

உயர்ந்த இடத்தைப் பெற்றுள்ளது. பல பாடல்களில் 'திருமால்' இடம் பெறுகின்றார். பரிபாடல் என்ற தொகை நூலில் திருமாலுக்கு என்றே ஆறுபாடல்கள் அமைந்துள்ளன. நற்றிணையின் கடவுள் வாழ்த்துப் பாடல் அற்புதமாக அமைந்து வைணவத் தத்துவத்தை அருமையாக விளக்குவதாக உள்ளது. திருமாலைப் பற்றிய பல கதைகள் நேரடியாகவும் உவமை வாயிலாகவும் சங்கப் பாடல்களில் அமைந்துள்ளன.

18. பரிபாடலில் உபநிடதக் கருத்துக்களை உட்கொண்டு புலவர்கள் திருமால் பெருமை பேசியுள்ளனர் எனச் சிலர் சொல்வது பொருந்துமா?

பொருந்தும் என்பது என் கருத்து. அக்காலத்திலேயே வடவர் கொள்கைகள் தமிழகத்தில் நன்கு பரவிவிட்டன.

19. நம்மாழ்வார் பற்றிய தங்கள் ஆராய்ச்சியில் தாங்கள் கண்ட புதிய உண்மைகள் யாவை?

எத்துணையோ உண்மைகள் உள்ளன. பாசுரங்கள்தோறும் விசிட்டாத்வைதக் கருத்துக்கள், உபநிடதக் கருத்துக்கள், ஆகமக் கருத்துக்கள், புராதன இதிகாச கருத்துக்கள் நிரம்ப இடம் பெற்றுள்ளன. ஆழ்வார் கருத்துக்கள் நிரம்ப இடம் பெற்றுள்ளன. ஆழ்வார் ஓரளவு நல்ல தமிழ்ப்பயிற்சியுள்ளவர் என்றே தோன்றுகின்றது. ஓதாதுணர்ந்தவர் என்ற கதை சரியாக இருக்கும் என்று யான் கருதவில்லை.

20. அறிவியலும் சமயவியலும் கற்ற தாங்கள் 'அற்புதங்கள்' பற்றிக் கருதும் கருத்துகள் யாவை?

அறிவியல் பயிற்சி ஒருவித அறிவியல் மனப்பான்மையை நல்கியுள்ளது என்பதே என் அனுபவம். தவிர, அறிவியல் காணுத பல சமய உண்மைகளும் உள்ளன. அறிவியல் கண்கொண்டு அனைத்தையும் அறியவொண்ணுது என்பதுவே என் தாழ்மையான கருத்து. பாமர மக்களையும் சமயத்தில் ஈர்ப்பதற்குக் கட்டிவிட்ட கதைகளே 'அற்புதங்கள்' என்ற பெயரால் வழங்கி வருகின்றன. தவிர, அவற்றை உண்மையென்று நம்புவது சமயத் தலைவர்கட்கு இழுக்கு ஏற்படுத்துவதாகும்.

21. பத்தி நெறிப் பாடல்களில் அகப்பொருள் நெறி இடம் பெறுவானேன்? அது பத்திக்கு இடையூறு ஆகாதோ?

அஃது ஒரு இலக்கிய உத்தி. இந்திரியங்களின் துணையின்றி அறிவின் துணையொன்றே கொண்டு சிற்றின்பத்தைப் பேரின்பமாக மாற்றவல்ல ஒரு பரிணும வித்தை அது; சாதாரணப் பொன்னையும் மாற்றறியாத பசும் பொன்னுக்கவல்ல அற்புதக் கருவியாக உதவுவது. எல்லா சமய அறிஞர்களும் இதனைக் கைவந்த கருவியாக ஆண்டு வந்தாலும், தமிழகக் கவிஞர்கள் இதனைக் கையாண்டிருப்பது ஒரு தனி அலாதி. இத்தகைய உயர்ந்த உக்தி பக்திக்கு இடையூறு ஆகாது. அப்படி இடையூறு ஆகும் என்று கருதுவோரும் அனுபவத்தில் இடையூருக் இருப்பதாக உணர்வோரும் பக்குவப்படாத மனத்தினையுடையவர்கள் என்றே சொல்லவேண்டும்.

இதனை சற்று விரிவாக விளக்குவேன். ஞானச் செல்வர்கள் இறைவன்மீது, கொள்ளும் காமம் 'பகவத் விஷய காமம்.' இங்ஙனம் மாதவன்மீது இவர்கள் கொள்ளும் காமம் நாம் மங்கையர்மீது கொள்ளும் காமத்தினின்றும் வேறுபட்டது. இலக்கிய உத்தியில் சிற்றின்ப அனுபவமாகிய காமத்துக்குக் கூறப்பெறும் அகப்பொருள் துறைகள் யாவும் இந்த பகவத் விஷய காமத்திற்கும் கூறப்பெறும். சிற்றின்ப அனுபவத்திற்குக் கொங்கை முதலியன சாதனமாய் இருப்

பதுபோல, பகவத் விஷயாநுபவத்திற்குப் பரபக்தி, பரஞானம் இவை இன்றியமையாதனவாக இருப்பதால் அவையே கொங்கை முதலான சொற்களால் இந்த ஞானச் செல்வர்களின் அருளிச்செயல் களில் கூறப்பெறுகின்றன என்பதாக ஆன்றோர் கொள்வர். சூபி மதத் தில் சந்தன மலர் முதலிய மணப்பொருள்கட்டும் தத்துவம் கூறப் பெற்றிருப்பது ஈண்டு நினைவுகூரத் தக்கது.

காதல் சுவையின் சம்பந்தம் சிறிதுமின்றியே பக்திச் சுவையின் அடிப்படையாகவே இந்த ஞானச் செல்வர்கள் அருளிச்செய்தல் கூடும். அங்ஙனமிருக்க, காதல் சுவையையும் கலந்து பாசுரங்கள் அருளிச்செய்திருப்பதற்கு ஒரு காரணம் இல்லாமல் இல்லை. உடல் நலத்திற்குக் காரணமாக வேப்பிலையுருண்டையை உட்கொள்ளவேண் டியவர்கட்கு வெல்லத்தை வெளியிற் பூசிக்கொடுத்து உண்பிப்பது போலவும், கொயினு மாத்திரைகட்குச் சர்க்கரைப் பாகு பூசி இனிப்புச் சுவையை உண்டாக்கித் தின்பிப்பதுபோலவும் சிற்றின்பம் கூறும் வகையாற் பேரின்பத்தை நிலைநாட்டுகின்றனர் என்று பெரியோர்கள் பணிப்பர். இது கடையாய காலத்தையுடையவர்க்குக் காட்டப்பெறும் உத்தி முறையாக இறையனுர் களவியலிலும் கூறப்பெற்றுள்ளமை ஈண்டுச் சிந்திக்கத் தக்கது.

22. திருமழிசை ஆழ்வாரே பின் சிவவாக்கியர் ஆயினர் என்பார் கருத்து ஏற்கத் தக்கதா?

வைணவ சமயத்தைத் தழுவதற்கு முன்னர் திருமழிசையாழ்வார் சிவவாக்கியர் என்ற பெயருடன் விளங்கியதாக வைணவர்களிடம் வழங்கும் கதை ஒப்புக்கொள்ளக்கூடியதன்று. சிவவாக்கியர் பெயரில் வெளிவந்திருக்கும் ஒருசில பாடல்கள் ஆழ்வார் பாசுரங்களிலும் காணப்படுவதே இதற்குக் காரணமாகக் கருதலாம். சிவவாக்கியப் பாடல்களிலும் காணப்பெறுவது இடைச்செருகலால் நேர்ந்தது. புரட்சிகரமான சித்தர்களுள் ஒருவரான சிவவாக்கியரை வைதிக் சமயத்தில் ஆழ்வாருடன் சார்த்திக் கூறுவது சிறிதும் பொருந்தாது. இஃது ஆராய்வதற்குரியது.

23. திவ்ய பிரபந்தப் பாசுரங்களுக்குப் பண்முறை வகுத்தவர் யார்? பிரபந்தப் பண்கட்கும் தேவாரப் பண்கட்கும் தொடர்பு எந்த அளவில் உள்ளது.

நாதமுனிகளின் ஒன்றுவிட்ட சகோதரர்களாக மேலையகத்தாரும் கீழையகத்தாரும் திவ்வியப் பிரபந்தப் பாசுரங்கட்குப் பண்முறை வகுத்ததாக அறியக் கிடக்கின்றது. இரண்டின் பண்களும் தமிழிசை யைத் தழுவியவையாகும்.

24. வடநாட்டில் தென்னுட்டு வைணவத்தின் செல்வாக்கு எத்தன்மையது?

இராமநுசருக்குப் பின்னர் வடநாட்டில் வைணவம் பரவியது. அவரது வடமொழி நூல்கள் ஓரளவு துணை செய்திருக்கவேண்டும். அதற்கு முன்னர் வைணவ சமயத்தைப் பற்றிய கருத்துக்கள் நிலவி யிருந்திருக்கலாம். இராமாநுசர் கருத்துக்கள் அவற்றுடன் சேர்ந்து வைணவத்தின் போக்கு மாறியிருக்கலாம். வல்லபாச்சாரியர், சிசைதன்யர் போன்றவர்கள் தாம் வாழ்ந்த பகுதிகளின் மக்கள் நிலைக் கேற்றவாறு வைணவக் கருத்துக்களைப் பரப்பியிருக்கலாம்.

## அவையோர் எழுப்பிய வினுக்கள்

**திரு. க. அருணுசலம்**

1. சூடிக்கொடுத்த சுடர்க்கொடியான ஆண்டாள் திருமாலையே மணந்தார் என்பதற்கு நாச்சியார் திருமொழியைத் தவிர வேறு சான்று நூல்களுண்டா? தயைகூர்ந்து விளக்கம் நல்கவும்.

வேறு சான்றுகள் உள்ளன. பிற்காலத்தில் தோன்றிய 'அரிசமய தீபம்' என்ற தமிழ் நூலிலும் (காவியம்) 'திவ்யசூரி சரிதை' என்ற வடமொழி நூலிலும் ஆண்டாள் திருமாலையே மணந்தார் என்ற விவரம் காணப்பெறுகின்றது.

2. வைணவர்கள் இடைக்காலத்தில் இலக்கணத் தொண்டாற்றி யுள்ளனரா? அதற்கு முன்னமேயும் இலக்கணத் தொண்டு புரிந்துள்ளனரா? அருள்கூர்ந்து விடை பகரவும்?

அங்ஙனம் இலக்கணத் தொண்டாற்றியதாக அறியக்கூடவில்லை.

**திரு. க. வெங்கடேசன்**

1. தமிழ்ச் சமுதாயத்தில் காணப்படும் ஏற்றத்தாழ்விற்குரிய அடிப்படைக் காரணங்களில் சமயமும் ஒன்று எனக் கூறப்படு கிறது. 'வைணவ சமயம்' இந்தக் குற்றச்சாட்டை ஏற்க முடியாமைக்கு உரிய காரணங்கள் யாவை?

வைணவ ஆழ்வார்களே வருணுசிரம தருமத்தைத் தகர்த்தெறிந் தனர் என்று கூறலாம். பெரியாழ்வார் சாதி நெறி கடந்து 'தொண்டர்க் குலத்தையே' (அடியார்க் கூட்டம்) தொழுகுலமாகக் கொண்ட பெரியார். அந்தணக் குலத்துதித்த தொண்டரடிப்பொடிகள் என்ற பெரியார்,

"இழிகுலத் தவர்க ளேனும் எம்அடி யார்க ளாகில்
தொழுமின்நீர், கொடுமின் கொண்மின்'

என்றும் (திருமாலை 42),

"அமர ஓர் அங்கம் ஆறும் வேதமும்ஓர் நான்கும் ஓதித்
தமரர்களின் றலைவ ராய சாதிஅந்தணர்க ளேனும்
நுமர்களைப் பழிப்ப ராகில் நொடிப்பதோர் அளவில் ஆங்கே
அவர்கள்தாம் புலையர் போலும்"

என்று (ஷை-42) கூறியுள்ளார். ஆழ்வார்களின் தலைவராகிய நம்மாழ்வாரும்,

"குலம்தாங்கு சாதிகள் நாலிலும்
கீழ்இழிந்து, எத்தனை
நலம்தான் இலாத சண்டாள
சண்டாளர்கள் ஆகிலும்
வலம்தாங்கு சக்கரத்து அண்ணல்
மணிவண்ணற்கு ஆள்என்றுஉள்
கலந்தார் அடியார்தம் அடியார்
எம் அடிகளே"

என்று (திருவாய் 3, 7, 9) கூறியிருத்தலும் உளங்கொள்ளத்தக்கது. இக் காரணங்களால் வைணவம் இக் குற்றச்சாட்டை ஏற்க முடியாத நிலையில் உள்ளது.

2. 'உண்ணுமை வேண்டும் புலால்' 'அருளாட்சி ஆங்கில்லை ஊன் தின்பவர்க்கு' என்னும் வள்ளுவப் பெருந்தகையின் கருத்து புலால் உண்ணுமை சமய வாழ்வுக்கு இன்றியமையாத ஒரு பணியாக வேண்டப்படுகிறது. ஆயின். இன்றைய 'வைணவர்கள்' எனக்குத் தெரிந்தவரையில் புலால் உண்ணுபவர்களாகவே உள்ளனர். புலால் உண்ணுதல், வைணவத்திற்கு உடன்பாடா? இதுபற்றிய பிற விவரங்களையும் அறிய அவா!

புலால் உண்ணுதல் வைணவத்திற்கு உடன்பாடன்று. அங்ஙனம் உண்பவர்கள் வைணவ தத்துவத்தின் உண்மையை அறிந்தவர்களாகார். ஆகார நியமத்தை அனுஷ்டிக்காதவர்கள். சைவ சமயமும் புலால் உண்ணுதலை ஏற்காவிடினும், சைவ சமயத்தினரும் புலால் உண்ணத்தானே செய்கின்றனர்! 'சைவ உணவு' என்பதற்கே 'புலாலற்ற உணவு' என்ற பொருள் வழங்குதல் காண்க.

5. 'தத்துவம் இதம் புருஷார்த்தம்' என்பதன் விளக்கம் அறிய அவா?

வைணவ தத்துவம் என்பது (1) சித்து, (2) அசித்து, (3) ஈசுவரன் என்ற மூன்று பகுதிகளைக்கொண்டது. 'தத்துவத்திரயம்' என்ற நூலில் இவற்றின் விளக்கங்களைக் காணலாம். இதம் என்பது வீடுபேற்றினை அடையும் வழிகள். அவை (1) பக்தி மூலம் அடைதல்,

(2) பிரபக்தி (சரணுகதி) மூலம் அடைதல் என்று இருவகைப்படும். புருஷார்த்தம்: புருஷன்- ஆன்மா; அர்த்தம் - பொருள்; அஃதாவது ஆன்மா அடையவேண்டிய பொருள். இது, எம்பெருமான், தத்துவத்தை உணர்ந்து, உய்யும் வழிகளை அறிந்து, இறைவனை அடைதலே தத்துவம், இதம் புருஷார்த்தம் என்பவை குறிப்பு.

*திரு. ப. இராமகிருஷ்ணன்*

1. 'வெந்த கரியதனை மீட்டு மகவாக்கியதும் அந்தச் சிலையினைப் பெண்ணுக்கியதும் - செந்தமிழ் நாவலன்பின் போற்றதுவும்' நன்னீர்த் திருவரங்கக் காவலன் கால் வெந்த கரியதனை மீட்டு மகவாக்கிய வரலாறு யாது?

வெந்த கரியதனை மீட்டு மகவாக்கிய வரலாறு: பாரதப் போரில் துரோணருடைய மகன் அசுவத்தாமன் பிரயோகித்த அபாண்ட அத்திரத்தால் அபிமன்யுவின் மனைவி உத்தரையின் கருபத்தில் வெந்து கரியான குழந்தையைக் கண்ணபிரான் பரீட்சித்து என்னும் அழகிய அரசபுத்திரனுக்கியதைக் குறிப்பது இந்த வரலாறு.

2. திருக்கோயில்களில் கும்பாபிஷேகம் போன்ற சந்தர்ப்பங்களில் அமைக்கப்படும் சிற்றுலயமே இளங்கோயில் என்று குறிப்பிடப்பட்டது. அவ்வாருனல் தற்காலிக ஆலயம் என்ற பொருளில் அது பெயர் பெற்றிருக்கவேண்டும். ஆனுல், 'பாலாலயம்' என்பது 'இளங்கோயில்' என்பதன் நேரான வடமொழி மொழிபெயர்ப்பன்றி வேறல்ல. மேலும், அப்பர் சுவாமிகள் கூறும் கோயில் வகைகளுள் இளங்கோயில் ஒன்று. வடமொழியில் 'வராகமிகிரர்' கூறும் கோயில் வகைகளுள், 'பாலாலயம்' ஒன்று என்பதும் அப்பர் சுவாமிகள் ஆனைக்கோயில் என்பதன் திரிபு வழக்கான 'ஆலக் கோயில்' என்றொரு கோயில் வகையைக் குறிப்பிடுவதும் இங்கு கருதத்தக்கது. எனவே, இளங்கோயில் என்பதனை முருகன் கோயில் என்னும் கொள்கை பொருந்துமா? தயவுசெய்து விளக்கவும்.

(ஞாழற் கோயில் ஞாழ மரத்தால் கட்டப்பட்டதென்றும், ஆலக்கோயில் ஆலமரத்தால் கட்டப்பெற்றதென்றும் கொண்டால் ஆலமரம் கட்டிடம் கட்டுதற்குரிய மரமல்ல என்பது நோக்கத்தக்கது).

'பாலாயம்' என்பது 'இளங்கோயில்' என்பதன் வடமொழி பெயர்ப்பு என்பது உண்மையே. வராகமிகிரர் கூறும் பாலாலயமும், அப்பர் அடிகள் கூறும் ஆனைக்கோயிலும் வேறுவேறு. இளங்கோயில் என்பதனை முருகன் கோயில் என்று கருதும் கொள்கை பொருந்தாது.

*திரு. இரா. கி. சச்சிதானந்தம்*

1. 'வைணவம்' என்ற சொல்லிற்குச் சிறந்த பொருள் யாது?

'வைணவம் என்பதற்கு 'விஷ்ணுபற்றிய சமயம்' என்பது பொருள்: அதாவது 'விஷ்ணு மதம்' என்பது.

2. வைணவத்தின் மிக உயர்ந்த தத்துவம் யாது?

இவ்விடத்தில் ஒரு வைணவ ஆச்சாரியர் கூறியது நினைவிற்கு வருகிறது. முன்பின் அறியாத யாரோ ஒருவர் துன்புறுங்கால் அதனைக் கண்ணுறுபவர் 'ஐயோ, பாவம்!' என்று இரக்கம் கொள்பவரே உண்மையான வைணவர் என்றார். அதனையே மிக உயர்ந்த வைணவ தத்துவமாகக் கொள்ளலாம்.

3. வைணவ சமயத்திற்கு ஆட்படுத்துதல் என்றேனும் நிகழ்வுற்றது என்பதற்குச் சான்றுகள் உண்டா?

யானறிந்தவரை சான்றுகள் இருப்பதாகத் தெரியவில்லை.

4. வைணவத்திற்கு மிகமிக ஆக்கமளித்தவர்கள் ஆழ்வார்களா? பின்வந்த ஆசாரியர்களா?

'ஆழ்வார்கள் சமய நிலை கடந்த பெரியார்கள்; எப்பெருமானின் மங்கள குணங்களில் ஆழங்கால்பட்டுத் தம்மையே மறந்தவர்கள். பின்வந்த ஆசாரியர்கள் பாசுரங்கட்குத் தத்துவம் கூறிச் சமய உண்மைகளை எடுத்துக்காட்டியவர்கள். வைணவத்திற்கு வித்திட்டவர்கள் ஆழ்வார்கள் என்றால், அதனைப் பக்திப் பயிராக வளர்த்து வைணவப் பண்ணையாக்கிய பெருமை ஆசாரியர்களையே சாரும்.

5. சைவ, வைணவப் பிணக்கு வைணவ உட்பிரிவுப் பிணக்குகள் ஏற்பட்ட காலம் எது? முக்கிய காரணமாகக் கருதப்பெறுவது யாது?

பக்தி இயக்கம் தோன்றிய காலத்திலேயே சைவ வைணவப் பிணக்குகள் தோன்றின என்று கருதலாம். வைணவப் பண்ணை செழித்து ஓங்கிய காலத்தில் வடமொழி நூல்கட்கும் திவ்வியப் பிரபந்தத்திற்கும் முக்கியத்துவம் தரும் விஷயத்தில் கருத்து மாறுபாடுகள் எழுந்து வடகலை, தென்கலை என்ற உட்பிரிவுகள் வைணவத்தில் ஏற்பட்டன என்று கருதலாம்.

6. 'திருமண்' நெற்றியில் அணிதல், தோளில் சங்கு சக்கரம் பொறித்துக் கொள்ளுதல் ஆகிய ஒழுகலாறுகள் தோன்றிய காலம் எது? திருமண் அணிதலைப்பற்றிய குறிப்புகள் எவையேனும் நாலாயிரத் திவ்வியப் பிரபந்தங்களில் உள்ளனவா?

ஆசாரியர்கள் தோன்றிச் சமயத்திற்கு முக்கியத்துவம் கொடுத்த காலத்தில் இத்தகைய ஒழுகலாறுகள் தோன்றின. 'திருமாண் காப்பு' பற்றிய நேரான குறிப்புக்கள் ஒன்றும் 'நாலாயிரத் திவ்வியப் பிர

பந்தத்தில்' இல்லை. திருவாய்மொழியில் (2, 7) 'பன்னிரு திருநாமப் பாட்டு' என்ற ஒரு திருவாய்மொழி உண்டு. அதில் கேசவன் முதல் தாமோதரன் ஈருகவுள்ள எம்பெருமானின் பன்னிரண்டு திருநாமங்கள் வருகின்றன. அவற்றின் அறிகுறியாகவே வைணவர்கள் தம் திருமேனியில் 12 இடங்களில் திருமண் காப்பிட்டுக் கொள்கின்றனர். இவர்கள் ஆதித்தர்களாக நின்று திருமேனியைக் காப்பதாக ஐதிகம்.

7. மக்களைப் பக்தி வெள்ளத்திலே முழுவதும் திளைக்கச் செய்வதில் முதலாவதாகக் கொள்ளத் தக்கன - வடமொழியில் வரும் பாடல்களா? தென்தமிழில் வரும் நாலாயிரத் திருப் பாடல்களா?

மக்களைப் பக்தி வெள்ளத்தில் முழுவதும் திளைக்கச் செய்வதில் முதலாவதாகக் கொள்ளத் தக்கன. தென் தமிழில் - தேன்தமிழில் - உள்ள நாலாயிரத் திருப்பாடல்களே என்பதற்கு யாதொரு ஐயமும் இல்லை என்பது என் கருத்து.

8. வைணவ சித்தாந்தத்தை முதன் முதலில் விளக்கிய நூல் யாது?

வைணவ சித்தாந்தத்தை முதன்முதலில் விளக்கிய வடமொழி நூல் பிரம சூத்திரத்திற்கு இராமாஜசர் இயற்றிய 'ஸ்ரீபாஷ்யம்' என்ற நூல் என்று கூறலாம்; பிள்ளை உலகாசாரியர் எழுதிய 'தத்துவத் திரயம்' என்னும் தமிழ் நூலும் அதற்கு மணவாளமாமுனிகள் இயற்றிய உரையும் அச்சித்தாந்தத்தை நன்கு விளக்குகின்றன.

9. இனியேனும் சைவ, வைணவ மாறுபாடு சிறிதுமின்றி மக்கள் உள்ளத்தே பக்திப் புனலே ஊற்றெடுக்கக் கட்டுரையாளர் கருதும் வழிவகைகள் யாவை?

முதலில் மக்களிடம் 'சமயப்பொறை' என்னும் பெருங்குணம் வளரும்படி செய்தல்வேண்டும். தத்துவங்களை ஓரளவு மறந்து பக்தி நெறி ஒன்றிலேயே மனத்தைப் பதித்துக்கொண்டால், 'சமயக் காழ்ப்பு' மனத்தில் எழாமல் காக்கலாம். இராமலிங்க அடிகள் காட்டும் 'சமரச சன்மார்க்க வழி' நின்று சமயப் பொறையை வளர்க்கலாம். அடையும் பொருள் ஒன்றே என்றும், அதுவே வேறுவேறு பெயர்களால் வழங்குகின்றன என்றும், அதனை அடையும் வழிகளும் வேறு வேருனவை என்றும், உண்மையைத் திறந்த மனத்துடன் ஏற்க முன் வரும் வழிகளை அமைத்துக்கொண்டு அவற்றின் வழிநடக்க மக்களைத் திருப்பவேண்டும்.

திரு. பெ. கு. உலகநாதன்,

1. கிருட்டின அவதாரமும், இராம அவதாரமும் ஆழ்வார்களால் சிறப்புறப் பாடப்பட்டமைக்குக் காரணம் இவ்விருவரும் சிறு

குழவிகளாயிருந்து வளர்ந்தவர்கள் என்று தாங்கள் கண்ட ஆய்வு பொருத்தமானது. இவ் வடிப்படையில் பாமர மக்களும் இவ்விரு அவதாரங்கள் பற்றி நடிக்கப்பெற்ற நாட கங்களைக் கண்டு களித்ததால்தான் அந் நாடகங்கள் செல் வாக்குப் பெற்றன என்று கூறலாம் அல்லவா?

ஆம்; தாங்கள் கூறுவது முற்றிலும் பொருத்தமானது.

*திரு. வே. கிருட்டிணசாமி*

1. கிருஷ்ணவதாரமும் இராமாவதாரமும் குழந்தைகளாகப் பிறந்து வாலிபர்களாக வளர்ந்து மக்களோடு பழகி, 'இக' வாழ்வு வாழ்ந்ததால் ஆழ்வார்களின் பாசுரங்களில் அதிக மாகக் கொண்டாடப்பட்டுள்ளனர் என்றீர்கள். அப்படி யாயின் கண்ணனின் தமையனாகிய பலராமனும் இராமனோடு மோதிய பரசுராமனும் எங்ஙனம் பிறந்தனர்? எவ்வாறு வளர்ந்தனர்? ஏன் அவர்கள் அதிகமாகப் போற்றப்பட வில்லை? பரசுராமனின் கொலை வெறியும் பலராமனின் வெள்ளிய தன்மையும் காரணம் எனலாமா? விளக்கவும்.

இவ் வினாவின் விடை 'அவதாரரகஸ்யம்' என்னும் தத்துவத்தை அடிப்படையாகக்கொண்டது. அவதாரம் கௌணாவதாரம் (அதாவது ஆவேச அவதாரம்) என்று இருவகைப்படும். கௌணாவதாரம் அகங் காரத்துடன் கூடிய சிவர்களை ஈசுவரன் ஒரு செயலின் நிமித்தம் ஆவேச முகத்தால் அனுஷ்டித்து நிற்பது. பரசுராமன் அவதாரம் அந்த வகை யைச் சேர்ந்தது. பரசுராமன் கடவுளின் அவதாரம் அன்று; ஆதி சேடனே அவனாக வந்து தோன்றியதாக ஐதிகம். பலராமனுக்கு மதிப்பு இருந்தது. ஆவேசாவதாரத்தை முமுட்சுக்கள் (மோட்சத்தில் விருப்பமுள்ளவர்கள்) உபாசித்துப் போற்றுவதில்லை. ஆனால், சம்சாரிகள் (புபுட்சுக்கள்) போற்றுவர். பரசுராமவதாரம் க்ஷத்திரி யர்களின் அகந்தையை அடக்கவே எடுக்கப்பட்டது. சாதிச் செருக் கினை அடக்குவதற்காகவே கண்ணன் பிராமணர், க்ஷத்திரியர் வைசியர் என்ற குலத்தில் தோன்றாமல் இடக்கை வலக்கை இன்ன தென்று அறியாத பசுக்களுடன் பழகி அன்பே வடிவமான கோவலர் குலத்தில் தோன்றியதாக ஐதிகம்.

---



'உண்மைத்திறம் ஊக்கும் உயர்கல்வி'

சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ்த்துறை நடத்தும்

# இரண்டாவது பொதுநிலைப் பத்துநாள் கருத்தரங்கு

(22—1—'73 முதல் 31—1—'73 வரை)

கருத்தரங்கப் பொதுப் பொருள் :

**'இடைக்காலத் தமிழின் இலக்கிய இலக்கண இயல்புகள்'**

(3-முதல் 12-ஆம் நூற்றாண்டு வரை)

தொடக்குநர் :

மாண்புமிகு டாக்டர் நாவலர் இரா. நெடுஞ்செழியன்,

(கல்வி அமைச்சர்—தமிழ்நாடு அரசு)

தலைவர் :

மாண்புமிகு ம. பொ. சிவஞானம்,

(துணைத்தலைவர்—தமிழ்நாட்டுச் சட்ட மேலவை)

நூல் வெளியீட்டாளர் :

தாமரைத்திரு நெ. து. சுந்தரவடிவேலு,

(துணைவேந்தர், சென்னைப் பல்கலைக்கழகம்)

22—1—73 ஆம் நாள் தொடக்க விழாவும்
தொடர்ந்து பத்துநாள் கருத்தரங்குகளும் நடைபெறும்.

**இடம்: அறை எண் எ.:ப் 50 நூற்றாண்டு விழாக்கட்டடம்**
**காலம்: மாலை 5-15**

'காய்தல் உவத்தல் அகற்றி ஒருபொருட்கண்
ஆய்தல் அறிவுடையார் கண்ணதே........'

அனைவரும் வருக ! ஆய்வுப்பயன் பெறுக !

*உற்று நோக்குவோம் 1*

| | நாள் | தலைவர் | கட்டுரையாளர் |
|---|---|---|---|
| 1 | 22—1—75 திங்கள் | மாண்புமிகு ம. பொ. சிவஞானம் | டாக்டர் ச. வே. சுப்பிரமணியன் |
| 2 | 23—1—72 செவ்வாய் | திரு. ஜே. ஆர். ஜெயச் சந்திரன் | திரு. சொ. சிங்காரவேலன் |
| 3 | 24—1—75 புதன் | பேராசிரியர் பூ. ஆலாலசுந்தரனர் | திரு. மு. சண்முகம் பிள்ளை |
| 4 | 25—1—75 வியாழன் | டாக்டர் வ. ஆ. தேவசேனபதி | திரு. செ. வெங்கடராமச் செட்டியார் |
| 5 | 26—1—75 வெள்ளி | திரு. மயிலை சினி வேங்கடசாமி | திரு. அ. ச. ஞான சம்பந்தன் |
| 6 | 27—1—75 சனி | மாண்புமிகு எஸ். மகராசன் | திரு. ச. தண்டபாணி தேசிகர் |
| 7 | 28—1—75 ஞாயிறு | பேராசிரியர் அ.மு.பரமசிவானந்தம் | டாக்டர் சுப. அண்ணமலை |
| 8 | 29—1—75 திங்கள் | திரு. டி. எஸ். ஸ்ரீபால் | டாக்டர் தேவதத்தா |
| 9 | 30—1—75 செவ்வாய் | திரு. நா. மகாலிங்கம் | டாக்டர் சோ. ந. கந்தசாமி |
| 10 | 31—1—75 புதன் | மாண்புமிகு என். கிருஷ்ணசாமி ரெட்டியார் | டாக்டர் ந. சுப்பு ரெட்டியார் |

குறிப்பு : கருத்தரங்குகள் நாளும் மாலை 5-15 முதல் 8-15 வரை:
ஒரு மணிநேரம் ஆய்வுக் கட்டுரை படிக்க:
ஒரு மணிநேரம் ஆய்வு செய்ய:
ஒரு மணிநேரம் முன்னுரை, முடிவுரை, வரவேற்புரை, நன்றியுரை நவில.

ஆய்வு செய்வோம்!

| பொருள் | வரவேற்பாளர் | நன்றியாளர் |
|---|---|---|
| முதல் மூன்று திருமுறைகள் | டாக்டர் ந. சஞ்சீவி | திரு. அ. நாகலிங்கம் |
| நான்கு முதல் ஆறு திருமுறைகள் | திரு. மு. சண்முகம் பிள்ளை | திரு. மா. செல்வராசன் |
| ஏழாந் திருமுறை | டாக்டர் சி. பால சுப்பிரமணியன் | திரு. வீ. ஞானசிகாமணி |
| எட்டாந் திருமுறை | திரு. இ. சுந்தர மூர்த்தி | திரு. மு. சண்முகம் பிள்ளை |
| ஒன்பது, பதினோராந் திருமுறைகள் | திரு. வீ. ஞான சிகாமணி | திரு. இ. சுந்தரமூர்த்தி |
| பத்தாந் திருமுறை | திரு. மா. செல்வ ராசன் | டாக்டர் சி. பாலசுப்பிர மணியன் |
| பன்னிரண்டாந் திருமுறை | திரு. அ. நாகலிங்கம் | டாக்டர் ந. சஞ்சீவி |
| சமண சமய நூல்கள் | டாக்டர் ந. சஞ்சீவி | திரு. அ. நாகலிங்கம் |
| பௌத்த சமய நூல்கள் | திரு. மு. சண்முகம் பிள்ளை | திரு. மா. செல்வராசன் |
| வைணவ சமய நூல்கள் | டாக்டர் சி. பால சுப்பிரமணியன் | திரு. வீ. ஞானசிகாமணி |

கருத்தரங்குகளை ஒட்டிச் சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தாரும், தமிழ்நாட்டுத் தொல்பொருள் துறையாரும் நடத்தும் நூற்காட்சி—கண்காட்சி இடம் பெறும்.

வாழிய செந்தமிழ் !

'இமயவர்கள் மோலி இணைமலர்த்தாள் சூடச்
சமயந் தொறும்நின்ற தையல்—சிமய
மலைமடந்தை வாச மலர்மடந்தை எண்ணெண்
கலைமடந்தை நாவலோர் கண்.'

— தண்டியலங்காரம்
19, உரை மேற்கோள்

வாழ்க நற்றமிழர் !

# இரண்டாம் பொதுநிலைப்—பத்து நாள்

## கருத்தரங்கில்

## சிறப்புக் குறிப்புரை நிகழ்த்தியோர் விவரம்:

| பொருள் | சிறப்புக் குறிப்புரை நிகழ்த்தியோர் |
|---|---|
| | 22—1—73 |
| முதல் மூன்று திருமுறைகள் | .... ... |
| | 23—1—73 |
| நான்கு முதல் ஆறு திருமுறைகள் | 1. திரு. மு. அருணசலம் |
| | 24—1—73 |
| ஏழாந் திருமுறை | 1. திரு. மு. அருணசலம் |
| | 25—1—73 |
| எட்டாந் திருமுறை | 1. திரு. ஆ. இராமசாமிப் பிள்ளை |
| | 2. திரு. மு. அருணசலம் |
| | 26—1—73 |
| ஒன்பது, பதினோராந் திருமுறைகள் | 1. திரு. இரா. நாகசாமி |
| | 2. திரு. மு. அருணசலம் |
| | 27—1—73 |
| பத்தாந் திருமுறை | 1. திரு. இரா. மாணிக்கம் |
| | 2. திரு. மு. அருணசலம் |
| | 28—1—73 |
| பன்னிரண்டாந் திருமுறை | 1. டாக்டர் வெ. தெ. மாணிக்கம் |
| | 2. டாக்டர் கா. மீனட்சிசுந்தரம் |
| | 3. திரு. கலியாணம் பிள்ளை |
| | 4. திரு. மு. அருணசலம் |

| | |
|---|---|
| | **29—1—73** |
| சமண சமய நூல்கள் | 1. டாக்டர் லீலாவதி |
| | 2. திரு. ஸ்ரீபால் |
| | 3. திரு. அ. கி. பரந்தாமனார் |
| | 4. திரு. மு. அருணசலம் |
| | **30—1—73** |
| பெளத்த சமய நூல்கள் | 1. திரு. க. ப. அறவாணன் |
| | 2. திரு. ஒளவை நடராசன் |
| | 3. திரு. வேதம் வேங்கடராய சாஸ்திரி |
| | 4. திரு. மு. அருணசலம் |
| | **31—1—73** |
| வைணவ சமய நூல்கள் | 1. திரு. கே. ஏ. வேங்கடாச்சாரி |
| | 2. திரு. மு. அருணசலம் |
| | 3. திரு. மே.வீ.வேணுகோபாலப்பிள்ளை |

## சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ்த்துறையின் இரண்டாம் பொதுநிலைப் பத்துநாள் கருத்தரங்கு

(22—1—73 முதல் 31—1—75 வரை)

### பொதுப் பொருள்: 'இடைக்காலத் தமிழின் இலக்கிய இலக்கண இயல்புகள்'

(3 முதல் 12ஆம் நூற்றூண்டு வரை)

| நாள் | கருத்தரங்கப் பொருள் | கருத்தரங்கத் தலைவர் | கருத்தரங்கக் கட்டுரையாளர் | வருகை புரிந்தோர் | சிறப்புக் குறிப்புரை நிகழ்த்தியோர் | அவையோர் எழுப்பிய வினாக்கள் | தமிழ்த் துறை வினாக்கள் | மொத்த வினாக்கள் |
|---|---|---|---|---|---|---|---|---|
| முதல் நாள் 22—1—73 திங்கள் | முதல் மூன்று திருமுறைகள் | மாண்புமிகு ம. பொ. சிவஞானம் | டாக்டர் ச. வே. சுப்பிரமணியன் | 164 | ... | ... | 22 | 22 |
| இரண்டாம் நாள் 23—1—73 செவ்வாய் | நான்கு முதல் ஆறு திருமுறைகள் | திரு. ஜே. ஆர். ஜெயச்சந்திரன் | டாக்டர் சொ. சிங்காரவேலன் | 91 | 1 | 11 | 19 | 30 |
| மூன்றும் நாள் 24—1—73 புதன் | ஏழாந் திருமுறை | பேராசிரியர் பூ. ஆலாலசுந்தரனர் | திரு. மு. சண்முகம் பிள்ளை | 99 | 1 | 17 | 22 | 39 |
| நான்காம் நாள் 25—1—73 வியாழன் | எட்டாந் திருமுறை | டாக்டர் வ. ஆ. தேவசேனபதி | திரு. செ. வேங்கடராமச் செட்டியார் | 91 | 2 | 18 | 38 | 56 |
| ஐந்தாம் நாள் 26—1—73 வெள்ளி | ஒன்பது, பதினோராந் திருமுறைகள் | திரு. மயிலை சீனி. வேங்கடசாமி | திரு. அ. ச. ஞானசம்பந்தன் | 142 | 2 | ... | 21 | 21 |

| நாள் | கருத்தரங்கப் பொருள் | கருத்தரங்கத் தலைவர் | கருத்தரங்கக் கட்டுரையாளர | வருகை புரிந்தோர் | சிறப்புக் குறிப்புரை நிகழ்த்தியோர் | அவையோர் எழுப்பிய வினாக்கள் | தமிழ்த் துறை வினாக்கள் | மொத்த வினாக்கள் |
|---|---|---|---|---|---|---|---|---|
| ஆறும் நாள் 27—1—73 சனி | பத்தாந் திருமுறை | மாண்புமிகு எஸ். மகராசன் | திரு. ச. தண்டபாணி தேசிகர் | 111 | 2 | ... | 23 | 23 |
| ஏழாம் நாள் 28—1—73 ஞாயிறு | பன்னிரண்டாந் திருமுறை | பேராசிரியர் அ. மு. பரமசிவானந்தம் | டாக்டர் சுப. அண்ணுமலை | 118 | 4 | ... | 12 | 12 |
| எட்டாம் நாள் 29—1—73 திங்கள் | சமண சமய நூல்கள் | திரு. டி. எஸ். ஸ்ரீபால் | டாக்டர் தேவதத்தா | 138 | 4 | 9 | 28 | 37 |
| ஒன்பதாம் நாள் 30—1—73 செவ்வாய் | பௌத்த சமய நூல்கள் | திரு. நா. மகாலிங்கம் | டாக்டர் சோ. ந. கந்தசாமி | 115 | 4 | 2 | 27 | 29 |
| பத்தாம் நாள் 31—1—73 புதன் | வைணவ சமய நூல்கள் | மாண்புமிகு என். கிருஷ்ணசாமி ரெட்டியார் | டாக்டர் ந. சுப்பு ரெட்டியார் | 150 | 3 | 19 | 24 | 43 |

## எட்டாம் நாள் கருத்தரங்கு 29 - 1 - 1973

# திரு. டி. எஸ். ஸ்ரீபால் அவர்கள் நிகழ்த்திய தலைமையுரை

### பொருள் : சமண சமய நூல்கள்

**முன்னுரை**

தமிழ்த்துறைத் தலைவர் டாக்டர் அவர்களே! அறிஞர் பெருமக்களே! அறிவார்ந்த தாய்மார்களே! வணக்கம். இன்றைய நிகழ்ச்சியில் என்னைத் தலைமை வகிக்குமாறு பணித்த டாக்டர் அவர்களுக்கும் தமிழ்த்துறைப் பேரா சிரியப் பெருமக்களுக்கும் முதற்கண் என் நன்றி கலந்த வணக்கத்தைத் தெரிவித்துக் கொள்கின்றேன்.

டாக்டர் பி. தேவதத்தா அவர்கள் சமண சமய நூற்கள் பற்றிப் பேசும் முன் சமண சமயத்தின் வரலாற் றைச் சிறிது ஆராய்ந்து பேச விரும்புகின்றேன். தமிழ கத்தில் ஜைன சமயம் எக்கால முதல் விளங்கியுள்ளது என்பதை அறுதியிட்டுக் கூறவியலாது. ஒருவாறு அறிய வேண்டும் எனின் இலக்கிய ஆதாரங்கள், கல்வெட்டுச் செய்திகள், வரலாற்று உண்மைகளைக் கொண்டே எனின் இலக்கிய ஆதாரங்கள், கல்வெட்டுச் செய்திகள், வரலாற்று உண்மை களைக் கொண்டே முடிவு செய்யலாம். அவ்வாறின்றிச் சிலர் கி.மு. 3ஆம் நூற்றுண்டில் பத்திர பாகு சுவாமிகள் எண்ணுயிரம் ஜைன முனிவர்களுடன் தென்னுட்டிற்கு விஜயம் செய்த பின்னரே ஜைன சமயம் தமிழகத்தில் தோன்றலாயிற்று எனப் பேசியும் எழுதியும் வருகின்றனர். இது உண்மையல்ல. எண்ணுயிரம் ஜைன முனிவர்களும் தென்னுட்டிற்கு வருவதாயின் இங்கு ஆதர வின்றி வரத் துணிவார்களா? மன்னர்களா தீடீரென்று படை எடுத்து வர? வந்தவர்கள் முற்றும் துறந்த முனிவர்கள் அன்ருே? ஆகவே அவர்கள் தங்கள் வருகைக்கு முன் இந்நாட்டில் ஆதரவு இருப்பதை அறிந்தே புறப்பட்டார்கள் என்பதுதான் சாலப் பொருந்தும். எனவே, ஜைன சமயம் பத்திரபாகு சுவாமிகள் தமிழகத்திற்கு வருவதற்கு முன்னரே இங்கு விளங்கி

இருந்தது என்பது தெளிவாகிறது. இவ்வுண்மையை இலக்கிய ஆதாரத்தின் வாயிலாக ஆராயின் இராமாயண காலத்திற்கு முன்பே ஜைன சமயம் தமிழகத்தில் நிலைத்து இருந்தது என்பது பலப்படுகிறது. இராமபிரான் இலங்கைக்குப் போகையில் தென்னாட்டில் உள்ள ஜைன ஆஸ்ரமங்களில் உள்ள ஜைன முனிவர்களைத் தரிசித்து அளவளாவிச் சென்றார் என வால்மீகி இராமாயணம் கூறுவதால் ஜைன சமயம் தமிழகத்திற்கு மிகப் பழமை வாய்ந்த சமயம் என்பதை அறிகின்றோம். இவ்வரலாற்றை நன்கு அறிந்த கம்பர் பெருந்தகை தம் இராமாயணத்தில் உறுதிப்படுத்திச் செல்லும் அரிய காட்சியையும் காண்போம். சுக்கிரீவன் படை திரட்டி இலங்கைக்கு வழி யனுப்புகையில் அனுமானுக்கும் அங்கதனுக்கும் படை செல்ல வேண்டிய வழிகளையும் ஆங்காங்கு உள்ள சிறப்பிடங்களையும் விளக்கிக் கூறுகின்றான். அவ்வழிகளில் வேங்கடமலையைக் குறித்துச் சுக்கிரீவன் கூறுகையில்,

இருவினையும் இடைவிடா எவ்வினையும்
இயற்றாதே இமையோர் எய்தும்
திருவினையும் இடுபதம்தேர் சிறுமையையும்
முறை ஒப்பத் தெளிந்து நோக்கிக்
கருவினை அது இப்பிறவிக்கு என்றுணர்ந்து அங்கு
அதுகளையும் கடையில் ஞானத்து
அருவினையின் பெரும்பகைஞர் ஆண்டுஉளர்ஈண்டு
இருந்து அடி வணங்கற் பாலார்.

இக்கவியில் இருவினை—திருவினை—இடுபதம் தேர் சிறுமையையும் முறை ஒப்பத் தெளிந்து, கடையில் ஞானம், அருவினையின் பெரும் பகைஞர், ஆகிய பண்புகள் நிறைந்த சொற்றொடர்கள் ஜைன முனிவர்களையே குறிக்கும் என்பதைப் புலவர் பெருமக்கள் நன்கு அறிவர். குறிப்பாகக் கடையில் ஞானம் என்பது ஜைன சமயத்திற்கே உரிய தனிப் பண்பாகும். இதனையே கேவல ஞானம் அல்லது முழுதுணர் ஞானம் எனத் தமிழ் நூல்களில் பரக்கக் காண்கிறோம். இவ்வுண்மையால் வேங்கட மலையில் கடையிலா ஞானத்தோர் தவம் இயற்றினர் என்பதை அறிகின்றோம். எனவே, ஜைன சமயம்

இராமாயண காலத்திற்கு முன்பே தமிழகத்தில் சீரும் சிறப்பும் பெற்று விளங்கிற்து என்பதை மெய்ப்பிக்கிறது. இவ்விலக்கிய வரலாற்றோடு கி. மு. நூற்றாண்டுகளில் பாரத நாட்டின் பல பாகங்களிலும் குறிப்பாகத் தமிழகத் திலும் காணப்படும், பிராமி கல்வெட்டுச் செய்திகளே சான்றாகும். பிராமி எழுத்துக்களின் வரி வடிவங்களையும், செய்திகளையும் படித்தறிந்த வரலாற்று அறிஞர்கள் அவைகள் யாவும் தமிழ் மொழியே என்றும் ஜைன சமய சம்பந்தம் உடையவை என்றும் உறுதிப்படுத்தியுள்ளனர். இத்தகு கல்வெட்டுச் செய்திகளாலும் ஜைன சமயம் தமிழ கத்தில் தொன்று தொட்டு வந்துள்ளது என்பது கலங் கரை விளக்கம் போல் தெளிவாகிறது. இனி, பாரத நாட்டின் வரலாற்றைக் கொண்டு ஆராய்வோம். இப்பாரத நாடு முதன்முதல் திராவிடர்களின் திரு நாடாக விளங் கியது என்பதை நம்நாட்டு வரலாற்று மேதைகளும் மேல் நாட்டு வரலாற்று மேதைகளும் உறுதிப்படுத்தியுள்ளனர்.

அண்மையில் எழுத்து ஆராய்ச்சித் துறையைச் சார்ந்த ரஷ்ய அறிஞர் சி. நெரோன் நெச் எம். எஸ்சி. அவர்கள் பிராமி எழுத்தைப் பற்றி ஆராய்ந்து எழுதிய ஒரு கட்டுரையில் "இந்தியாவின் கலாசார மொழியில் வரலாற்றுக்கு மிகுந்த முக்கியத்துவம் வாய்ந்த முடிவாக ஆதி இந்திய வாசகங்களின் மொழி திராவிட மொழி களோடு ஒத்து இருக்கிறது. இதிலிருந்து வடமேற்கு இந்தியாவில் பண்டைய காலத்தில் வாழ்ந்த மக்கள் திராவிடர்களே என்ற உண்மை நெருக்கமாக உள்ளது" என எழுதியுள்ளனர். ஆரியர்கள் வருகைக்கு முன் இங்கு வாழ்ந்தவர்கள் திராவிடர்களே எனப் பல அறிஞர்கள் தங்கள், தங்கள் நூல்களில் எழுதி விளக்கி யுள்ளார்கள். ஜெர்மானிய வரலாற்றுத் துறைப் பேரா சிரியரான டாக்டர் ஹென்பிச் ஜிம்மர் தாம் எழுதிய Philosophies of India என்ற நூலில் "ஜைனர்கள் தங்கள் மதம் மிக்க தொன்மை வாய்ந்தது எனக் கருதுவதில் உண்மை இருக்கத்தான் செய்கிறது. ஆராய்ச்சியின் வழி யாகக் காணும்போது அந்தத் தொன்மை ஆரியர்களுக்கு முற்பட்ட திராவிடர்கள் என்று சொல்லப் படுவோர் காலத்தது என்று நம்புவதற்கிடம் உண்டாகிறது" (பக். 64)

என எழுதியுள்ளார். மேஜர் ஜெனரல் ஜே. சி. பர்லாஸ் தாம் எழுதிய The Short Study of Comparative Religion என்ற நூலில் "பாரத நாட்டில் ஆதிகாலத்தில் திராவிட நாகரிகம் என்ற சிறப்பு வாய்ந்ததொரு நாகரிகம் வளர்ச்சியுற்று இருந்தது எனக் கூறினேம் அல்லவா? அது வேறொன்று மல்ல ஜைன நாகரிகமே" என எழுதியுள்ளார். இவ் வரலாற்றுச் சிறப்பமைந்த இக்கோட்பாட்டால் நான் முன்னர்க் கூறிய திராவிடர்களின் கொள்கைகளே, பாரத நாட்டின் பழம்பெரும் அறநெறிகள் என்பது மறுக்கவிய லாத உண்மை எனத் தெற்றென விளங்குகிறது. இப்பழம் பெரும் திராவிடக் கொள்கைகள் அஹிம்சையை அடிப் படையாகக் கொண்டதாகும். இந்நல்லறத்தை முதன் முதல் உலகுக்கு அருளியவர் பகவான் விருஷப தேவரேயாவார். எனவே இப்பாரத நாடும் இங்கு விளங்கிய அறநெறிகளும் திராவிடக் கொள்கைகள் என் பதை அறிகிறோம். வரலாற்றை நுண்ணிதின் ஆராயின் ஒருகாலத்தில் பாரத நாடு முழுமையும் திராவிடர்கள் அல்லது ஜைனர்கள் வாழ்ந்த புண்ணிய பூமி எனில் மிகை யாகாது. பிற்காலத்தில் வெவ்வேறு காரணங்களால் திராவிட இனம் அருகித் தென்னுட்டில் வந்து குறுகிவிட்டது. இவ்வுண்மையை வரலாற்று ஆசிரியர்கள் ஒப்புக் கொள் கின்றனர். இந்தத் திராவிடர்களில் பலர் பிற்காலத்தில் தங்கள் பழமை வாய்ந்த கொள்கையினின்றும் விலகி வெவ்வேறு கொள்கைகளை மேற்கொண்டனர். பழம் பெரும் திராவிடக் கொள்கைகளைப் பல இன்னல்களுக் கிடையே நின்ற திராவிட இனமும் இங்கே வாழ்ந்து வருகின்றது. அவ்வழி வந்தோர்கள் தங்கள் பழம் பெரும் திராவிட மொழியாகிய தமிழ்மொழியையும் அறநெறிக் கொள்கைகளையும் கடைப்பிடித்து அத்துறைகளில் பல் வேறு நூல்களை இயற்றி நிலைநிறுத்தியுள்ளார்கள். அவர் களையே இன்று ஜைனர்கள் என்று அழைக்கின்றோம். அச் சான்றோர்கள் உணர்வு பூர்வமாகத் தமிழகத்தில் படைத் துள்ள இலக்கிய இலக்கணங்களையும் மொழி வளர்ச்சிக் குரிய நூல்களையும் அறநெறிக் கொள்கைகளையும் கொண்டே ஜைன சமயம் தமிழகத்தில் தொன்மை வாய்ந்த சமயம் என்பது சொல்லாமலே விளங்கும். இவ்வரலாற்று உண்மையை அறியத் தமிழகத்தில்

விளங்கிய திராவிடச் சங்கமே சான்றாகும். கி. பி. முதல் நூற்றாண்டில் விளங்கிய குந்தகுந்தாச்சாரியார் என்ற அறவோர் (திருப்பாதிரிப்புலியூரில்) பாடலிபுரத்தில் திராவிடர் சங்கம் என்னும் பெயரால் ஒரு சங்கத்தை நிறுவித் தமிழ் நாடெங்கும் அறநெறியைப் (திராவிட நெறியை) பரப்பி வந்தார் என்ற கல்வெட்டுச் செய்தியாலும், கி. பி. மூன்றாம் நூற்றாண்டில் மதுரையில் வஜ்ஜிரநந்தி என்பவரால் அத் திராவிடச் சங்கத்தை மறு மலர்ச்சியுறச் செய்த செய்தியாலும் முன்னே கூறிய நம் கொள்கைகள் உறுதிப்படுகின்றன.

மேலும் இப்பழமை வாய்ந்த ஜைன அறவோர்கள் தமிழ்நாடெங்கும் பரவி மக்கள் வாழ்க்கைப் பண்பிற்கும் அறிவு வளர்ச்சிக்கும் ஆன்மீக முன்னேற்றத்திற்கும் ஆற்றிய தொண்டுகளைச் சிறிது கூற விரும்புகிறேன்.

இல்லறம், துறவறம் என்ற இரண்டு அறநெறிகளைக் கொண்ட ஜைன சமயம் தமிழகமெங்கும் பரவி இருந்தது. ஜைன சமயத் துறவிகள் தமிழகத்தில் உள்ள பல்வேறு மலைக் குகைகளில் பள்ளிகள் அமைத்துத் தவம் புரிந்து வந்தனர். அது மட்டுமல்ல. ஆங்காங்கு உள்ள மக்களுக்கு கல்வி அறிவையும் இசை, நாட்டியம், நாடகம், ஓவியம் ஆகிய பல கலைகளையும் கற்பித்து வந்தனர். இச்செய்திகள் யாவும் பல்வேறு மலைக்குகைக் கல்வெட்டுச் செய்திகள் அறிவிக்கின்றன. கன்னியாகுமரி மாவட்டத்தில் உள்ள திருச்சரணத்து சைனப் பள்ளியில் ஒரு பல்கலைக்கழகமே அமைந்திருந்தது. அங்கே பல்வேறு நாட்டு மாணவர்கள் கல்வி பயின்றதாக அங்குள்ள கல்வெட்டுச் செய்தியில் காணப்படுகிறது.

ஆண்மக்களுக்குக் கல்வி அறிவை வளர்த்தது போன்றே பெண் பள்ளிகளும் இருந்தன. பெண் பள்ளிகளில் தவம் இயற்றிய பெண் தவத்தியர்கள் பெண் கல்வியை வளர்த்து வந்தார்கள். வடாற்காடு மாவட்டத்தில் வெடால் என்னும் ஊருக்கடுத்த மலைப்பதியில் கனகவீர குறத்தியர் சுமார் நானூறு, ஐந்நூறு பெண்களைக் கொண்ட கல்விச்சாலையை அமைத்துப் பெண்கல்வியை வளர்த்த

செய்தியை அங்குள்ள கல்வெட்டு கூறுகின்றது. காட்டுப் பாடியை அடுத்த விளாம்பாக்கம் என்ற பகுதியிலும் பெண்களுக்கெனப் பள்ளி அமைத்து ஜைனத் துறவியர்கள் கல்வி வளர்த்த செய்தி காணப்படுகிறது. திருநெல்வேலி — காஞ்சி — மதுரை — கன்னியாகுமரி — கோவை முதலிய இடங்களிலும் ஜைன அறவோர்கள் ஆற்றிய கலைத் தொண்டுகள் அளவிடற்பாலன.

ஜைன முனிவர்கள், இலக்கியம்,இலக்கணம், கணிதம், ஜோதிடம் போன்ற பல்வேறு துறைகளில் அறிவாற்றல் கொண்டவர்களாய் விளங்கியது போன்றே இசை, நாடகம், நாட்டியம் போன்ற துறைகளிலும் வல்லுனர்களாய் விளங்கினர்கள் என்பதைக் கல்வெட்டுச் செய்திகளால் அறிகின்றோம். இம்மாபெரும் சேவைகளைப் புரிந்து வந்த ஜைன அறவோர்கள் அனைவரும் தமிழகத்திலே பிறந்து-வளர்த்து-வாழ்ந்து, அறிவு பெற்றுத் தவம்புரிந்து விளங்கியவர்களேயாவார். இவ்வுண்மையை மறைத்துச் சிலர் வட நாட்டினின்றும் தமிழகத்திற்கு வந்த ஜைன முனிவர்கள் தமிழைக் கற்றுத் தமிழ் நூல்களை இயற்றினர்கள் எனத் தங்கள் நூல்களில் எழுதியுள்ளது வியப்பிற்குரியது. மற்றொன்றையும் இங்குக் கூற விரும்புகின்றேன். ஜைன சமயத்தின் அடிப்படையான வடமொழி நூல்களில் பெரும் பாலும் தமிழகத்து ஜைன முனிவர்களே இயற்றி அருளியவை என்பதை நீங்கள் அறியின் மகிழ்ச்சி அடைவீர்கள் என்பதில் ஐயமில்லை. இக்காரணங்களால் ஜைன சமயம் பாரத நாட்டின் தொன்மை வாய்ந்த சமயம் போன்றே தமிழகத்திலும் தொன்மை வாய்ந்தது என்பதைத் தெரிவித்துக் கொண்டு ஆதிகாலம் தொட்டுத் தமிழ் மொழியின் தனித் தன்மை குன்றாது அதன் வளர்ச்சிக்கும், சிறப்புக்கும், பெருமைக்கும் உரிய தொண்டுகளைப் புரிந்து வந்ததோடு அதன் அறநெறிகளையும் பேணிப் பாதுகாத்து வந்த ஜைன அறவோர்களின் இணையற்ற சேவைகளைப் பற்றி உரையாற்ற வந்துள்ள அறிவார்ந்த டாக்டர் பி. தேவதத்தா அவர்களைச் சொற்பொழிவாற்ற அழைக்கின்றேன்.

## முடிவுரை

தமிழ்த்துறைத் தலைவர் டாக்டர் அவர்களே! புலவர் பெருமக்களே! வணக்கம்.

அறிவார்ந்த டாக்டர் தேவதத்தா அவர்கள் சமண சமய நூல்களை விளக்கி அரிய விருந்தளித்தார்கள். நாம் கேட்டு மகிழ்ந்தோம். ஆண்டில் இளையராயினும் அறிவில் முதியவர் என்பதை அவர் சொற்பொழிவு காட்டிற்று. யான் அவ் அம்மையாரைப் பாராட்டுகின்றேன்.

இங்கே பல அறிவு சான்ற புலவர் பெருமக்கள் வீற்றிருப்பதால் ஓர் உண்மையை உரைக்க விரும்புகின்றேன். பெரும்பாலும் ஜைன இலக்கியங்களின் காலத்தைப் பற்றி எழுதுவோர் தங்கள் சமய நூல்களின் காலத்திற்கும் பிற்பட்டதாக எழுதுகிறார்கள். காலத்தைப் பற்றி ஆராய்வோர் அக்கால மன்னர்களையோ, கல்வெட்டுச் செய்திகளையோ ஆதாரமாகக் கொண்டு கணிக்க வேண்டும். அவ்வாறின்றி எதையோ குறிக்கோளாகக் கொண்டு காலத்தை வரையறுப்பது வருந்தத் தக்கது.

குறிப்பாகச் சீவக சிந்தாமணியின் காலத்தை ஆராய்வோம். இக்காவியத்தின் காலம் கி. பி. பத்தாம் நூற்றாண்டையது என முதன்முதல் யாரோ எழுதி விருகிறார்கள். இவ் ஆராய்ச்சி ஆதாரமற்றது. தொல்காப்பியம், சங்க நூல்கள், சிலப்பதிகாரம், சீவக சிந்தாமணி, சூளாமணி, பெருங்கதை போன்ற பண்டைய இலக்கியங்களில் சிவபெருமான், திருமால், முருகன், கொற்றவை, பார்வதி போன்ற தெய்வங்கள் காட்சியளிக்கின்றன. ஆனால் அந்நூல்களில் விநாயகரைக் காணோம். ஏன்? அவ் இலக்கிய காலங்களில் தமிழகத்தில் விநாயக வழிபாடு இல்லை. விநாயகர் கி. பி. ஏழாம் நூற்றாண்டில் வந்ததாகத் தெரிகிறது. இவ்வரலாற்றைக் கொண்டு ஆராயின் சீவக சிந்தாமணியின் காலம் கி. பி. ஏழாம் நூற்றாண்டிற்கு முற்பட்டது என்பதைக் கண்ணாடிபோல் காட்டுகிறது. இவ்வுண்மையை நிலைநாட்ட மேலும் எத்தனையோ ஆதாரங்கள் இருக்கின்றன. எனவே, கால

ஆராய்ச்சியாளர்கள் காய்தல் உவத்தலின்றித் தங்கள் சொந்த சிந்தனையையும் துணையாகக் கொண்டு தக்க ஆதாரங்களுடன் ஆய்ந்து எழுதக் கேட்டுக் கொள்கிறேன்.

சமணர் என்பது சிரமண என்ற பிராகிருத மொழியினின்றும் பிறந்தது. அச்சொல் துறவி என்றும் எவ்வுயிரையும், இன்ப துன்பங்களையும் சமநோக்குடன் காண்பவர் என்றும் பொருள் படும். அதனாற்றான் ஜைன அறவோர்கள் தங்கள் வரலாற்றை மறைக்காது பிறர் வழிபடும் தெவங்களைப் படைத்துக் காண்பித்தார்கள். எனவே, ஜைன சமயம் சம நோக்குடையது என்ற கண்ணோட்டத்துடன் மற்றவர்கள் அதனைப் பகை உணர்வோடு பாராமலும் பழிக்காமலுமிருக்குமாறு வேண்டுகிறேன். சரித்திர நாவல் என்ற கற்பனை நூல்களை எழுதும் சில எழுத்தாளர்கள்கூட ஜைனத்தைப் பழிக்காமல் தங்கள் நூல்களை முடிப்பதில்லை. இனியேனும் இந்நிலை மாறிப் பண்டைய திராவிடர் பண்பை மேற்கொண்டு சமரச நோக்குடன் நட்புறவை வளர்க்கப் பணிவன்புடன் வேண்டுகிறேன். இன்று சொற்பொழிவாற்றிய டாக்டர் தேவதத்தா அவர்கள் பல்லாண்டு வாழ்க.

## எட்டாம் நாள் கருத்தரங்கு 29—1—1973

## டாக்டர் தி. லீலாவதி அவர்கள் நிகழ்த்திய சிறப்புக் குறிப்புரை

பொருள்: **சமண சமய நூல்கள்**

சமணர்கள் இனத்தால், மொழியால், பண்பால் வேறுபட்டவர்கள். வடநாட்டினர். பிராகிருத மொழியினர். துறவற நெறியில் மிகுபற்றுடைமை காரணமாய் இல்லறத்தை வெறுப்பவர்கள். சைவநெறி, ஆடவரும் 'சிவகாமியராய்'த் தம்மை இழந்தால் மட்டுமே சிவத்தை அடைய முடியுமென்று வலியுறுத்திப் பெண்மை வழி இறைமை காட்டச் சமணர்களோ, பெண்களுக்கு வீடுபேறு நேரடியாக இல்லை. 'ஏசு பெண்ணொழித்து இந்திரர்களாகத்' தவமியற்றிப் பின் அந்த ஆடவர் நிலையில் அருகபதம் அடைய வழி வகுத்தனர். இத்தகைய முரண்பட்ட பண்பாடுகள் இருக்கத் தம் சமயம் பரப்ப வந்தவர்கள், தமிழ் மொழிக்குத் துறைதோறும், துறைதோறும் தொண்டு செய்தமை என்றும் பாராட்டற்குரியதாம்.

சமணர் தம் தமிழ்த்தொண்டு வடபுலக் காப்பியங்களைத் தமிழிற்கு அறிமுகப்படுத்திற்று. இலக்கணத்தமிழ் வளர இணையில்லாப் பணிபுரிந்தவர் அவராவர். நன்னூல் முதலான இலக்கண நூல்கள், காரிகை, பாட்டியல் நூல்கள் நிகண்டு எனப் பல்துறை இலக்கண வளர்ச்சிக்கு வித்திட்டனர். வளம் மிக்க மொழியின் சொற்செல்வத்தை நிகண்டுகள் என்ற சொல் தொகுதியால் பேணிக்காத்தமை சமணர் தம் தொண்டிற்கு நிலையான சான்றாகும்.

காப்பிய வரலாற்றில் தமக்கெனத் தனியிடம் பெற்றுத் திகழும் திருத்தக்க தேவரின் செந்தமிழ்ச் சிந்தாமணி, அள்ள அள்ளக் குறையா அறிவுக் கருவூலம். திரு. வி. க. அவர்கள் கூறுமாப் போல் சிந்தாமணியின் சமயக் காழ்ப்பற்ற பொதுமை நெறியால், அக்காப்பியத்தில் சிவபெருமான் வீற்றிருக்கின்றார்; திருமால் வீற்றிருக்கின்றார்: இவ்வாறு பல்வேறு தெய்வங்களின் வீற்றிருக்கையை

நோக்க, நோக்கச் சிந்தாமணி பரவும் இடங்களில் அமைதி நிலவுதல் ஒருதலையாம். பீடில் பெண்டிரெனப் பழிக்கும் சமண நூல்களுக்கிடையே, சிந்தாமணியார், கற்புடை மகளிர் நலத்தைத் தமிழ் மண்ணின் மணம் வீசப் பாராட்டு வது சிந்தைக்கினியதாம்.

“ சாமெனிற் சாத ஞேத றன்னவ றணந்த காலைப்
பூமனும் புணைத லின்றிப் பொற்புடன் புலம்ப வைகிக்
காமனை யென்றுஞ் சொல்லார் கணவற்கை தொழுது வாழ்வார்
தேமலர்த் திருவோ டொப்பார் சேர்ந்தவன் செல்ல நீர்ப்பார்.

(சிந்தாமணி 1598)

தமிழ் இலக்கிய வரலாற்றில் புதுமரபுகட்கு வித்திட்டு, வளரும் தமிழின் வாழ்வு நலத்திற்கும் பெருந்தொண்டாற் றிய சமணப் பெருமக்கள் தம்நூல்கள் மிகப் பரவுதல் வேண்டும்.

இணைப்பு—ஐந்து :

(இரண்டாவது கருத்தரங்கம்)

# கட்டுரையாளர் தன் வரலாற்றுக் குறிப்புகள்

## 1

1. பெயர் — டாக்டர் ச. வே. சுப்பிரமணியன்

2. பிறந்த நாள் — 5—6—1927.

3. பிறந்த ஊர் — வீரகேரளன்புதூர்.

4. பெற்றோர் — சண்முக வேலாயுதம் பிள்ளை.
இராசலெட்சுமி அம்மாள்.

5. படித்த கல்வி நிலையங்கள் — தீர்த்தபதி உயர்நிலைப்பள்ளி,
அம்பாசமுத்திரம், இந்துக் கல்லூரி,
திருநெல்வேலி.
அண்ணாமலைப் பல்கலைக் கழகம்.
கேரளப் பல்கலைக் கழகம்.

6. பெற்ற பட்டங்கள் — எம்.ஏ., பிஎச்.டி.

7. வகித்த/வகிக்கும் பதவிகள் — 1. விரிவுரையாளர், துணைப்பேராசிரியர், கேரளப் பல்கலைக் கழகம்.

8. பொதுத் தொண்டு பற்றிய செய்திகள் — 1. தலைவர், பாடப் புத்தகக் குழு.
கேரளப் பல்கலைக் கழகம்.
— 2. உறுப்பினர், அகடமிக் கவுன்சில்,
கேரளப் பல்கலைக் கழகம்.
— 3. இணைச்செயலர், அனைத்திந்திய
பல்கலைத் தமிழாசிரியர் மன்றம்.
— 4. உறுப்பினர், தமிழ்ப்பாடத் திட்டக்
குழு.

| | |
|---|---|
| | — 5. உறுப்பினர், கீழ்த்திசை மொழி ஆராய்ச்சித்துறை. கேரளப் பல்கலைக் கழகம். |
| 9. எழுதிய நூல்கள் | — Descriptive Grammar of Cilappathikaram with Index 1965. |
| | 1. Grammar of Akanaanuru 1967. |
| | 3. Studies in Tamil Language and Literature 1973. |
| | — 4. இலக்கணத் தொகை - எழுத்து 1967. |
| | 5. இலக்கணத் தொகை - சொல் 1970. |
| | 6. இலக்கிய நினைவுகள் 1964, 1969, 1974. |
| | 7. இலக்கியக் கனவுகள் 1972. |
| | 8. காந்தி கண்ட மனிதன் 1969, 1971. |
| | 9. சிலம்பின் சில பரல்கள் 1972. |
| | 10. மாந்தர் சிறப்பு 1974. |
| | 11. மொழிக்கட்டுரைகள் 1974. |
| | 12. ஆங்கிலம், தமிழில் பல. |
| 10. கட்டுரைகள் - | — பதிப்பாசிரியர் - இளவேனில், ஆய்வுத் தொகை - போன்றவை. கேரளப் பல்கலைக் கழகம். |

## 2

| | |
|---|---|
| 1. பெயர் | — சொக்கலிங்க - சிங்காரவேலன் |
| 2. பிறந்த நாள் | — 25—11—1933. |
| 3. பிறந்த ஊர் | — திருச்சிற்றம்பலம் : மாயூரம் வட்டம், தஞ்சை மாவட்டம். |
| 4. பெற்றோர்கள் | — (காலம்சென்ற) மா. சொக்கலிங்க தேசிகர் ; காயாம்பூ அம்மையார். |
| | ஆறு சகோதரர்களில் கடைசிப் புதல்வர். சொக்கலிங்க தேசிகர் - மரபு வழித் தமிழ்ப் புலவர். |
| | தொடக்கப் பள்ளி ஆசிரியர். |

5. படித்த கல்வி நிலையங்கள் — 1. தமிழ்ப்புலவர் - தருமையாதீனப் பல்கலைக் கல்லூரி, தருமபுரம், மாயூரம் (1950—1953).

1953ல் சென்னை மாநில முதல்வராகத் தேறி ஐந்தாம் ஜார்ஜ் நினைவுத் தமிழ்ப் பரிசு ரூ. 1000/ பெற்றது.

2. எம். ஏ., (தனிநிலைப் படிப்பு) 1962.

3. டிப்ளமா - மொழியியல்.
அண்ணாமலைப் பல்கலைக் கழகம் 1964.

4. 'டாக்டர்' பட்டம்.
அண்ணாமலைப் பல்கலைக் கழகம் 1972.

6. பெற்ற பட்டங்கள் — புலவர், எம்.ஏ., டிப்ளமா மொழியியல், பிஎச்.டி., செஞ்சொற்கொண்டல், மதுரையாதீனம்.

7. வகித்த/வகிக்கும் பதவிகள் — 1. துணையாசிரியர், 'ஞானசம்பந்தம்' திங்களிதழ் 1967 வரை.

2. இதழாசிரியர் கூட்ட உறுப்பினர், 'செந்தமிழ்ச் செல்வி'.

8. நூல்கள் — 1. புதுமைக்கு (கட்டுரை).

2. கதிரேச சதகம் (செய்யுள்).

3. எட்டிக்குடி முருகன் அந்தாதி (செய்யுள்).

4. திருஞான சம்பந்தர் வரலாற்று ஆராய்ச்சியும், தேவாரத் திறனாய்வும்.

5. மூவர் தமிழ் (இரண்டு ஆராய்ச்சிகள்)

6. கந்தர் கலித்துறை அந்தாதி (செய்யுள்)

7. வள்ளுவன் என் தோழன் (கவிதைத் தொகுப்பு) முதலிய பல.

# 3

| | | |
|---|---|---|
| 1. | பெயர் | — புலவர் மு. சண்முகம் பிள்ளை |
| 2. | பிறந்த நாள் | — 16—12—1919.<br>வீமநகரி (நாகர்கோவில்) |
| 2. | பெற்றோர் | — அ. முத்துப்பெருமாள் பிள்ளை<br>பிரமு அம்மாள் |
| 3. | கல்வி | — திருவிதாங்கூர் அரசினர் உயர் தமிழ்ப் பள்ளி, நாகர்கோவில்.<br>அரசர் கல்லூரி, திருவையாறு.<br>தமிழ் வித்துவான் தேர்வில் (1941) முதல் வகுப்பில் தேறியமை.<br>திருப்பனந்தாள் காசிமடம் சென்னைப் பல்கலைக் கழகத்தில் நிறுவியுள்ள ஐந்தாம் ஜார்ஜ் நினைவு அறக்கட்டளைப் பரிசு ரூபாய் ஆயிரம் பெற்றமை.<br>சென்னைப் பல்கலைக் கழகம் தமிழ்த் துறையில் பேராசிரியர் எஸ். வையாபுரிப் பிள்ளை அவர்களிடம் ஆராய்ச்சி மாணவனாய்ப் (1941—42) பயிற்சி பெற்றுத் 'தொல்காப்பியரும் தமிழ் மொழி வரலாறும்' எனும் பொருள் பற்றி ஆய்வு செய்தமை. |
| 4. | பணி | — ஆசிரியப் பணி; உயர்நிலைப் பள்ளிகளில் 1944—52.<br>,, அரசினர் கல்லூரிகளில் 1952—60.<br>தமிழக அரசின் தலைமைச் செயலகம், தமிழ் வளர்ச்சித்துறை, தமிழ் |

வளர்ச்சி ஆராய்ச்சி மன்றங்களில் தமிழ் நூல் விவர அட்டவணை தொகுக்கும் பணி 1960—1969.

சென்னைப் பல்கலைக் கழகத் திருக்குறள் ஆராய்ச்சிப் பகுதியில் தமிழ் விரிவுரையாளராக 1969இலிருந்து பணியாற்றி வருகிறார்.

5. வெளியீடு — மாணவர்க்கான பாடநூல்கள் பல எழுதியமை. மர்ரே கம்பெனியின் வெளியீடுகள், பாரதியார் கவிதைகள், கவிமணியின் நூல்கள், தமிழ் நூல் விவர அட்டவணை 1867—1900 வரை 7 தொகுதிகள் பதிப்பித்தமை.

நவநீதப் பாட்டியல் - புத்துரை வெளியீடு. மர்டாக் நூலட்டவணை மறுபதிப்பீட்டமை.

6. ஆய்வு நூல்கள் — 1. திருக்குறள் யாப்பு அமைதியும், பாட வேறுபாடும்.

2. திருக்குறள் அமைப்பும் முறையும் —பல்கலைக் கழக வெளியீடுகள்.

3. கட்டுரைகள் பல.

## 4

பெயர் — தமிழாகரர் வித்துவான், செ. வேங்கடராமச் செட்டியார்.

2. பிறந்த நாள் — 6. 6. 1913.

பிறந்த ஊர் — வில்வாரணி, வடார்க்காடு மாவட்டம்.

4. படித்த கல்வி நிலையங்கள் — தொடக்கப்பள்ளி—வில்வாரணி.

புலவர் புகுமுகத் தேர்வு —
அண்ணுமலைப் பல்கலைக் கழகம்.

வித்துவான் தேர்வு — ,,

ஆராய்ச்சிப் படிப்பு — ,,

5. பெற்ற பட்டங்கள் — வித்துவான்

6. வகித்த/வகிக்கும் பதவிகள் — தமிழாசிரியர்—ஆண்டர்சன் உயர்நிலைப் பள்ளி, காஞ்சிபுரம் (1941-1943).

தமிழ்ப்பேராசிரியர்—ஸ்ரீவெங்கடேசுவரா நாட்டுமொழிக் கல்லூரி (1943-1956).

தமிழாசிரியர் — பல்கலைக்கல்லூரி, தருமபுரம் (1956-1957).

விரிவுரையாளர் - கம்பராமாயண பதிப்புத் துறை, அண்ணுமலைப் பல்கலைக் கழகம் (1957—1973).

7. பொதுத்தொண்டு — 1. வில்வராணியில், ‘வில்வராணித் தமிழ் நூல் நிலையம்’ நிறுவி, அதன் வளர்ச்சிக்குப் பாடுபடல்.

2. ஓய்வு நாட்களில், மாணவர்கட்கு நூல் நிலையத்தில் தமிழ் பயிற்றுவித்தல்.

3. ஏழை மாணவர்கட்கு இலவச உணவளிக்க ஏற்பாடு செய்தல்.

8. எழுதிய நூல்கள்/ கட்டுரைகள்

நூல்கள்

1. புனையா ஓவியம்
2. முல்லையும் பூத்தியோ
3. பெறலரும் பரிசில்.
4. பழந்தமிழ் நூல்களில் உயிர்வகைகள்.

கட்டுரைகள்

1. கம்பரின் சிலப்பதிகார நினைவுகள்.
2. இளங்கோவடிகளின் தொல்காப்பியப் புலமை.
3. காய்மாண்ட தெங்கின்பழம்.
4. கபிலர்—திறனாய்வு.

| | |
|---|---|
| | 5. திருப்பூவணநாதர் உலா, சொக்கநாதர் உலா } ஆராய்ச்சிக் கட்டுரைகள் |
| உரை | 1. திருத்தணிகைப் புராணம் 1-500 செய்யுட்களுக்கு. |
| | 2. கம்பராமாயணம் — பல படலங்கட்கு ஆராய்ச்சி முன்னுரையுடன் உரை. |
| 9. வேறு குறிக்கத்தக்க செய்திகள் | 1. வித்துவான் இறுதித்தேர்வு — முதல் வகுப்பு—முதற் பரிசு. |
| | 2. தவத்திரு குன்றக்குடி அடிகளாரின் திருப்புத்தூர்த் தமிழ்ச்சங்கத்தில், 1973—ல் 'தமிழாகரர்' என்னும் பட்டம் பெற்றார். |

# 5

## பேராசிரியர், அ. ச. ஞானசம்பந்தம், எம்.ஏ.

தமிழ்த்துறைத் தலைவர்,
மதுரைப் பல்கலைக் கழகம்.

இவர் சிறந்த ஆய்வன்மையும் நாவன்மையும் செறிந்திலங்குபவர். சேக்கிழாரின் பெரியபுராணம், கம்பரின் இராமாயணம் ஆகியவற்றைக் கற்றுத் துறைபோய வல்லுநர்.

தமிழ் இலக்கியத் திறனாய்வுத் துறையில் பெருஞ்சிறப்புப் பெற்று விளங்குபவர். இதுகாறும் 20க்கும் மேற்பட்ட நூல்கள் எழுதியுள்ளார். அவற்றுள்,

1. இலக்கியக் கலை
2. தேசிய இலக்கியம்
3. இராவணன் மாட்சியும் வீழ்ச்சியும்

என்பன குறிப்பிடத் தக்கவை.

# 6

| | | |
|---|---|---|
| 1. | பெயர் | — ச. தண்டபாணி தேசிகர் |
| 2. | பிறந்த நாள் | — 15—6—1907. |
| 3. | பிறந்த ஊர் | — சிதம்பரம். |
| 4. | பெற்ரோர்கள்/முன்னோர்கள் பற்றிய சிறப்புச் செய்திகள் | — தந்தை — வானூர் சடையப்ப தேசிகர், தொண்டை மண்டல முதலியார் வகுப்பிற்கு ஞானசிரியராக இருந்தவர். வடமொழி, தென்மொழி, தேவாரப் பண்ணிசை ஆகியவற்றில் நல்ல தேர்ச்சி பெற்றவர். |
| 5. | படித்த கல்வி நிலையங்கள் | — 1. சைவப்பிரகாச வித்தியாசாலை, சிதம்பரம்.<br>2. பச்சையப்பன் உயர்நிலைப் பள்ளி, சிதம்பரம்.<br>3. ஆறுமுக நாவலர் செந்தமிழ்க் கல்லூரி, சிதம்பரம்.<br>4. அரசர் கல்லூரி, திருவையாறு.<br>5. மீனாட்சி தமிழ்க் கல்லூரி, சிதம்பரம். |
| 6. | பெற்ற பட்டங்கள் | — வித்துவான். |
| 7. | வகித்த/வகிக்கும் பணிகள் | — தமிழ் விரிவுரையாளர் - மீனாட்சி தமிழ்க் கல்லூரி, சிதம்பரம் (1928—1931).<br>தமிழ் விரிவுரையாளர் - தேசிய உயர்நிலைப்பள்ளி, நாகப்பட்டினம் (1931—1938).<br>தலைமைத் தமிழாசிரியர்-நாட்டாண்மைக் கழக உயர்நிலைப் பள்ளி, திருவாரூர் (1938—1946).<br>தமிழ்ப்பேராசிரியர் - சாமிநா தசாமிகள் செந்தமிழ்க் கல்லூரி, திருப்பனந்தாள் (1946—1949). |

தமிழ்த்துறைத் தலைவர் - தருமபுரம் ஆதீனப் பல்கலைக் கல்லூரி (1949—1953).

தமிழ் விரிவுரையாளர் - அண்ணமலைப் பல்கலைக் கழகம் (1953—1967).

தமிழ் விரிவுரையாளர் - கனகசபைப் பிள்ளை தமிழ்க் கல்லூரி, நாகப்பட்டினம் (1967—1969).

திருக்குறள் ஆராய்ச்சியாளர் - அண்ணமலைப் பல்கலைக் கழகம் (1970 முதல்)

8. பொதுத்தொண்டு பற்றிய செய்திகள் — 1. 1930இல் நடைபெற்ற கதரியக்கத்தில் பங்கேற்று, 5 நாள் காவலில் இருந்தமை.

2. இந்தி எதிர்ப்புக் கூட்டம் நடத்தியமை.

3. தருமபுரம் ஆதினம் சார்பாக ஞாயிறு தோறும் சேரிகளுக்குச் சென்று சமயம் பரப்பியமை.

9. எழுதிய நூல்கள்/ கட்டுரைகள் நூல்கள் — 1. பதிப்பு

திருக்குறள் உரைவளம், பண்டார சாத்திரங்கள், முத்தி நிச்சயப் பேருரை முதலான 15 நூல்கள்.

— 2, உரை எழுதிப் பதிப்பித்தவை

திருவாசகம் குருவருள் விளக்கம், திருக்கோவையார் உண்மை விளக்கம், திருமந்திரம் பேருரை (முழுதும்), பண்டாரசாத்திரம் பதினுன்கிற்கும் உரை) முதலிய 25 நூல்கள்.

— 3. கல்வெட்டு ஆராய்ச்சி

சிதம்பரம், திருவாரூர், கும்பகோணம், ஆதீனக் கோயில்கள் முதலான 7 நூல்கள்.

— 4. குறிப்புரைகள்

திருவாசகக் குறிப்புரை, சச்சபுட வெண்பா, திருவைந்தெழுத்துத் தேவாரங்கள் முதலிய 9 நூல்கள்.

— 5. கலை நூல்கள்

கணபதி, முருகன், ஆடல்வல்லான்.

— 6. மொழிபெயர்ப்புகள்

பௌஷ்கராகமம் (அச்சில்).

— 7. இலக்கண நூல்கள்

நன்னூல் விருத்தியுரை விளக்கக் குறிப்புடன். முதற்சூத்திர விருத்தி விளக்கக் குறிப்புடன்.

— 8. ஆராய்ச்சி நூல்கள்

திருக்குறள் அமைப்பும் அழகும், திருவாசகப் பேரொளி, திருமந்திரத் தொடர்புரை, ஐங்குறுநூற்றுராய்ச்சி, நற்றிணை ஆராய்ச்சி, காப்பியங்களில் திருக்குறள், வள்ளுவரும் கம்பரும் முதலிய 17 நூல்கள்.

— 9. சொற்களஞ்சியம்

சங்க இலக்கியச் சொற்களஞ்சியம் (முழுவதும்) அச்சானவை 'ஔ' வரை.

10. குறிக்கத்தக்க செய்திகள்: சிறப்புப் பெயர்கள்

— 1. தருமையாதீனப் புலவர் (1932).

— 2. உரைவளம் (கொழும்பு அனுராதபுரம் புத்தர் 2500 ஆண்டு விழா).

— 3. சித்தாந்தப் பேராசிரியர் (திருஞானசம்பந்த சுவாமிகள் ஆதீனம், மதுரை).

— 4. விரிநூற்புலவர் (திரிசிரபுரம் சைவ சபை, திருச்சி).

— 5. மகாவித்துவான் (திருவாவடுதுறை ஆதீனம்).

— 6. முதுபெரும்புலவர் — (பாரி விழா, குன்றக்குடி)

சிறப்பு :
உரைவளத்திற்காக 1952—ல், சென்னை மாகாணத் தமிழாசிரியர் மகாநாடு சிதம்பரத்தில் பொன்னுடை போர்த்திப் பாராட்டியது.

# 7

1. பெயர் — டாக்டர் சுப. அண்ணாமலை

2. பிறந்த நாள் — 10—10—1929.

3. பிறந்த ஊர் — தேவகோட்டை, இராமநாதபுரம் மாவட்டம்.

4. பெற்றோர்கள் — மு. அ. சுப்பிரமணியன் செட்டியார், சீதை ஆச்சி.

5. படித்த கல்வி நிலையங்கள் — நகரத்தார் உயர்நிலைப் பள்ளி, தேவகோட்டை,
அரசினர் கல்லூரி, திருவையாறு.
பச்சையப்பர் கல்லூரி, சென்னை.

6. பெற்ற பட்டங்கள் — B.O.L. (Hons), M. Litt., Ph. D.

7. வகிக்கும் பதவி — தமிழ்த்துறை முதுகலைப் பேராசிரியர் - தலைவர், தியாகராசர் கல்லூரி, மதுரை.

8. பொதுத்தொண்டு பற்றிய செய்திகள் — சென்ற 6 ஆண்டுகளாக மதுரை இராமலிங்க மிஷன் செயலாளர். 1953 முதல் இதுவரை 500 கூட்டங்களில் சொற்பொழிவாற்றியுள்ளார்.

மலேசியாவில் 1 மாதம் சுற்றுப் பயணம் செய்து தமிழர் திருநாளில் பேசியுள்ளார். மதுரையில் புதுக் குடியிருப்பில் கோவில் கட்டும் குழு வில் துணைத் தலைவர். வாரந்தோறும் சமயச் சொற்பொழிவு ஆற்றி வரு கின்றேன்.

9. எழுதிய நூல்கள் — An English Book entitled, "The life and Teachings of Saint Ramalingar."

10. கட்டுரைகள் — இலக்கியம், இலக்கணம், தத்துவம் பற்றி இதுவரை 50 கட்டுரைகள் எழுதியுள்ளேன்.

## 8

1. பெயர் — டாக்டர் வீ. பொ. தேவதத்தா.

2. பிறந்த நாள் — 30—12—1937.

3. பிறந்த ஊர் — பொன்னூர் (வந்தவாசி வட்டம்).

4. பெற்றோர்கள்—முன்னோர்கள் பற்றிய சிறப்புச் செய்திகள் — தந்தை பெயர்—திரு. வீ. நா. பொன்னு சாமிஜைன். சிறப்பு—நாட்டு விடுதலை இயக்கப் போராட்டத்தில் தீவிரமாகப் பங் கேற்றுப் பன்முறை சிறை சென்ற அரசியல் தியாகி.

5. படித்த கல்வி நிலையங்கள் — உயர்நிலைப் பள்ளி, வந்தவாசி. உயர்நிலைப் பள்ளி, காஞ்சி. இராணி மேரிக் கல்லூரி, சென்னை, மாநிலக் கல்லூரி, சென்னை.

6. பெற்ற பட்டங்கள் — எம். ஏ., பிஎச். டி.

7. வகித்த/வகிக்கும் பதவிகள் — தமிழ்த்துறைத் தலைவர், சீதாலாட்சுமி ஆச்சி மகளிர் கல்லூரி.

# 9

| | |
|---|---|
| 1. பெயர் | — சோ. ந. கந்தசாமி. |
| 2. பிறந்த நாள் | — 15—12—1936. |
| 3. பிறந்த ஊர் | — இலையூர், உடையார்பாளையம் வட்டம், செயங்கொண்ட சோழபுரம் (வழி), தஞ்சை மாவட்டம். |
| 4. பெற்றோர்கள் — முன்னோர்கள் பற்றிய சிறப்புச் செய்திகள் | — தாய் - மீனும்பாள், தந்தை - வை. சோ. நடராச முதலியார், தாய் வழிப் பாட்டனார் திரு. பி. சா. சிதம்பர முதலியார் சோதிடப் பெரும்புலவர்; 'உமாமகேசுவர சம்வாதம்' என்ற சோதிடச் செய்யுள் நூலினை இயற்றியுள்ளார். தந்தை சோதிடக் கலையில் வல்லவர். |
| 5. படித்த கல்வி நிலையங்கள் | — 1. கழக உயர்நிலைப்பள்ளி, உடையார் பாளையம்.<br>2. அண்ணாமலைப் பல்கலைக் கழகம், அண்ணாமலை நகர். |
| 6. பெற்ற பட்டங்கள் — | 1. எம்.ஏ., (முதல் வகுப்பு)<br>2. எம்.லிட். Paripadal — A Linguistic Study என்ற ஆய்வுக்காக அளிக்கப் பெற்ற பட்டம்.<br>3. பிஎச்.டி. Buddhism as expounded in Manimekalai என்ற ஆய்வுக்காக வழங்கப்பெற்ற பட்டம்.<br>4. டிப்ளமா மொழியியல் (முதல் வகுப்பு).<br>5. டிப்ளமா வடமொழி (முதல் வகுப்பு). |
| 7. வகித்த/வகிக்கும் பணிகள் | — தமிழ் விரிவுரையாளர் - அண்ணாமலைப் பல்கலைக் கழகம். |

8. எழுதிய நூல்கள்/ கட்டுரைகள் — 1. அழகு முல்லை (கவிதை).

2. மணிமேகலையின் காலம்.

3. இயற்கைச் சோலையிலே.

4. புரட்சிக் காப்பியம்.

5. பரிபாடலின் காலம்.

முதலிய நூல்களும்;

சார்பெழுத்து, எழுத்துப்பேறும் சாரியையும், தொல்காப்பியரின் மாட்டு, சம்பந்தரும் பௌத்தரும், சங்க நூல்களில் மதுரை A Linguistic Study of Manimekalai முதலிய கட்டுரைகளும்.

9. வேறு குறித்தத் தக்க செய்திகள் — அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தின் பரிசுகள் :

1. டாக்டர் ஆர். கே. சண்முகம் செட்டியார் தமிழ் ஆய்வுப் பரிசுகள்

2. டாக்டர் சி. பி. இராமசாமி ஐயர் தமிழ்ப் பரிசு.

3. மகாவித்துவான் இரா. இராகவையங்கார் தமிழ்ப் பரிசு.

4. வெள்ளிவிழாக் கவிதை முதற் பரிசு.

5. வெள்ளி விழா விடுதிப் பேச்சுப் போட்டியில் முதற் பரிசு.

முதலியன.

## 10

1. பெயர் — ந. சுப்பு ரெட்டியார்.

2. பிறந்த நாள் — 7—9—1917.

3. பிறந்த ஊர் — கோட்டாத்தூர், திருச்சி மாவட்டம்.

| | | |
|---|---|---|
| 4. | பெற்றோர்கள் | — 'ஞானி' என்பது குடும்பப் பெயர். பெயரோடு ஒட்டி வரும். |
| 5. | படித்த கல்வி நிலையங்கள் | — முசிறி மாவட்ட உயர்நிலைப்பள்ளி, திருச்சி புனித சூசையப்பர் கல்லூரி, சைதை ஆசிரியர் பயிற்சிக் கல்லூரி. |
| 6. | பெற்ற பட்டங்கள் | — பி. எஸ்சி., பி. டி., வித்துவான், பி. ஏ., எம்.ஏ., பிஎச். டி. |
| 7. | வகித்த பதவிகள் | — தலைமையாசிரியர், துறையூர் சமீந்தார் உயர்நிலைப் பள்ளி; |
| | | தமிழ்ப்பேராசிரியர் — துறைத் தலைவர், காரைக்குடி அழகப்பா ஆசிரியர் பயிற்சிக் கல்லூரி; |
| | | தமிழ்ப்பேராசிரியர் — துறைத்தலைவர். திருப்பதி திருவேங்கடவன் பல்கலைக் கழகம். |
| 8. | பொதுத்தொண்டு பற்றிய செய்திகள் | — தலைவர், துறையூர் ஆசிரியர் ஃபெடரேஷன்; |
| | | செயலர், திருச்சி மாவட்ட உயர்நிலைப் பள்ளித் தலைமையாசிரியர் சங்கம்; |
| | | தலைவர், திருச்சி மாவட்டத் தமிழாசிரியர் கழகம். |
| 9. | எழுதிய நூல்கள் | — தமிழ் பயிற்றும் முறை முதலிய ஆசிரியம், உளவியல் பற்றியவை 4; |
| | | கவிஞன் உள்ளம் முதலிய இலக்கியம் பற்றியவை 14; |
| | | கவிதையனுபவம் முதலிய திறனாய்வு பற்றியவை 3; |
| | | இளைஞர் வானொலி, அம்புலிப் பயணம் முதலிய அறிவியல் பற்றியவை 13; |

Religion and Philosopy of Nalayira Divya prabandham with special reference to Nammalvar முதலிய ஆராய்ச்சி பற்றியவை 2;

ஆக மொத்தம் 36 நூல்கள்.

கட்டுரைகள் — ஆராய்ச்சி நிலையில் (ஆங்கிலத்தில்) 50க்கு மேற்பட்டவை; பொது மக்கள் நிலையில் 300க்கு மேற்பட்டவை.

---

சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ்த்துறை
இரண்டாவது பொதுநிலைப் பத்துநாள்
கருத்தரங்கு

# விழாப் படங்கள்

## கருத்தரங்கத் தலைவர்கள்



இரண்டாவது பொதுநிலைப் பத்துநாள் கருத்தரங்கினைத்
(22—1—73) தொடங்கி வைத்து, தமிழ்நாடு அரசின்
கல்வி அமைச்சர், மாண்புமிகு டாக்டர் நாவலர்
இரா. நெடுஞ்செழியன் அவர்கள்,
உரையாற்றுகின்றார்.



கருத்தரங்கத் தலைவர், தமிழ்நாட்டுச் சட்ட மேலவைத்
துணைத்தலைவர், மாண்புமிகு சிலம்புச் செல்வர்
ம. பொ. சிவஞானம் அவர்கள்,
'முதல் மூன்று திருமுறைகள்' கருத்தரங்கிற்குத்
தலைமை தாங்கி உரையாற்றுகின்றார்.



கருத்தரங்கப் பேரவையினர் பெரும்புலவர்
மே. வீ. வேணுகோபாலப் பிள்ளை, தமிழறிஞர் மு. அருணசலம்,
மாண்புமிகு நடுவர் எஸ். மகராசன், உலகத் தமிழாராய்ச்சி
முதன்மை ஆட்சி அலுவலர் டாக்டர் கா. மீனட்சிசுந்தரம்,
பேராசிரியர் மா. நன்னன் முதலானேர்



கருத்தரங்கப் பேரவையினர்



திரு ஜே. ஆர். ஜெயச்சந்திரன் அவர்கள்,
'நான்கு முதல் ஆறு திருமுறைகள்' என்னும் கருத்தரங்கிற்குத்
தலைமை தாங்குகிறார்.



பேராசிரியர் பூ. ஆலாலசுந்தரனார் அவர்கள்,
'ஏழாந் திருமுறை' கருத்தரங்கில் தலைமையுரை ஆற்றுகின்றார்.



பேராசிரியர் டாக்டர் வ. ஆ. தேவசேனபதி அவர்கள்,
'எட்டாந் திருமுறை' கருத்தரங்கிற்குத் தலைமை தாங்குகிறார்.



தமிழறிஞர் மயிலை சினி. வேங்கடசாமி அவர்கள்,
'ஒன்பது, பதினோராந் திருமுறைகள்' கருத்தரங்கில்
தலைமையுரை ஆற்றுகின்றார்.



சமணப் பெரியார் ஜீவபந்து டி. எஸ். ஸ்ரீபால் அவர்கள்,
'சமண சமய நூல்கள்' என்னும் கருத்தரங்கில்
தலைமையுரை ஆற்றுகின்றார்.



'சமண சமய நூல்கள்' கருத்தரங்கக் கட்டுரையாளர்,
டாக்டர் தேவதத்தா அவர்கள்.



'சமண சமய நூல்கள்' கருத்தரங்கில்
பேராசிரியர் அ. கி. பரந்தாமனார் அவர்கள்,
சிறப்புக் குறிப்புரை ஆற்றுகின்றார்.



'சமண சமய நூல்கள்' கருத்தரங்கில்
காவல்துறை உயர் அலுவலர், திரு. சு. ஸ்ரீபால் அவர்கள்,
சிறப்புக் குறிப்புரை ஆற்றுகின்றார்.



‘பௌத்த சமய நூல்கள்’ கருத்தரங்கிற்கு
அருட்செல்வர், நா. மகாலிங்கம் அவர்கள், தலைமை தாங்குகிறார்.



‘பௌத்த சமய நூல்கள்’ கருத்தரங்கில்
திரு. ஔவை நடராசன் அவர்கள்,
சிறப்புக் குறிப்புரை ஆற்றுகின்றார்.



'வைணவ சமய நூல்கள்' கருத்தரங்கத் தலைவர்,
மாண்புமிகு நடுவர் என். கிருஷ்ணசாமி ரெட்டியார் அவர்கள்,
தலைமையுரை ஆற்றுகின்றார்.



'வைணவ சமய நூல்கள்' கருத்தரங்கில்
தமிழறிஞர் மு. அருணசலம் அவர்கள்,
சிறப்புக் குறிப்புரை ஆற்றுகின்றார்.

# கிருத்தரங்கக் கட்டுரையாளர்கள்



டாக்டர் ச. வே. சுப்பிரமணியன்



திரு. சொ. சிங்காரவேலன்



திரு. மு. சண்முகம் பிள்ளை



திரு. செ. வேங்கடராமச் செட்டியார்



திரு. அ. ச. ஞானசம்பந்தன்



திரு. ச. தண்டபாணி தேசிகர்



டாக்டர் சுப. அண்ணுமலை



டாக்டர் தேவதத்தா

# தமிழ்த்துறை ஆசிரியர்களும் மாணவர்களும்

## ஆசிரியர்



டாக்டர் ந. சஞ்சீவி



டாக்டர் சி. பாலசுப்பிரமணியன்



புலவர் மு. சண்முகம் பிள்ளை



புலவர் இ. சுந்தரமூர்த்தி

மாணவர்



திரு. வீ. ஞானசிகாமணி



திரு. அ. நாகலிங்கம்



திரு. மா. செல்வராசன்